ஸ்ரீ :



# ப்ருஹ்ம வித்யா

## பாகம்-5

ஸ்ரீ பகவத் ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின்

மூன்றாம் அத்யாயம்

(விளக்கமும் - விவரணமும்)

**S. JAGANNARAYANAN**

Deputy. Secy. (Rtd.), Ministry of Finance,
Govt. of India, New Delhi (Now at Madras)

**Price : Rs. 120/-**

First Edition :- 1989 – 1000 Copies.



This book has been printed with the financial assistance given by Thirumalai Tirupathi Devasthanams, Tirupathi (A. P.)

Under their scheme - Aid to Authors for Religious books.

Financial assistance by a token grant has been promised by the Ministry of Education, Govt. of India - New Delhi - after completing all the Volumes of Brahma Vidya.

பணஉதவி செய்தவர் : திருவேங்கடத்தான் திருமன்றம் - சென்னை-1.

வெளியிட்டவர் :

S. ஜகந்நாராயணன்
10 திருவீதி அம்மன் தெரு,
ராமகிருஷ்ண நகர்,
சென்னை-28.

அச்சிட்டவர் :

இளங்கோ அச்சுக்கூடம்
266, ராயப்பேட்டை நெடுஞ்சாலை
சென்னை-4.

பாரதி விஜயம் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்
திருவல்லிக்கேணி,
சென்னை-5.

ஸ்ரீ



ஸ்ரீ மதே ஸ்ரீ லக்ஷ்மி ந்ருஸிம்ஹ பரப்ருஹ்மணே நம:
ஸ்ரீ மதே நிகமாந்த மஹா தேசிகாய நம:
ஸ்ரீ மதே ஸ்ரீ வண்சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்திர
மஹாதேசிகாய நம:

# பகவத் ஸ்ரீ ராமானுஜரின் ஸ்ரீபாஷ்ய சாஸ்திரம்

## 3ம் அத்யாயம்

—— x ——

### (ஸ்ரீபாஷ்ய மங்கள ஸ்லோகங்கள்)

1. नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवींसरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ।।

2. यं ब्रह्मा वरुणेन्द्ररुद्रमरुतः स्तुवन्ति दिव्यैः स्तवैर्वेदैः ।
साङ्गपदक्रमोपनिषदैर्गायन्ति यं सामगाः ।।

3. ध्यानावस्थिततद्गतेन मनसा पश्यन्ति यं योगिनो ।
यस्यान्तं न विदुः सुरासुरगणा देवायतस्मै नमः ।।

4. अखिलभुवन जन्मस्थेम भङ्गादिलीले
विनतविविध भूतव्रात रक्षैकदीक्षे ।
श्रुतिशिरसिविदीप्ते ब्रह्मणि श्रीनिवासे
भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा ।। (ஸ்ரீபாஷ்யம்)

5. रमां रम्यां स्वाङ्के दरदलित पङ्केरुहनिभे
निविष्टामाश्लिष्टो नरहरिरयं यस्यकृपया ।
मदुक्तिं तां पूर्णं प्रपदनविधिं गर्भितवतीं
स्वयंशुश्राव श्री नृहरि यतिराट् सोऽतिजयति ।।
(परमतभङ्गः)

6. संप्राप्ताध्यात्मशास्त्रं नरहरिशठ जिद्रङ्ग भूकारिजाभ्यां
कारुण्याच्छ्रीनृसिंहे नृहरिशठरिपोः आत्मनिक्षेपधन्यम् ।
वेदान्ते वावदूकस्त्वमिति शठजिता रङ्गपूर्वेण सूक्तं
वात्स्यं नारायणार्यं भ्राता कृष्णदासःसह वन्दे पुनः पुनः ।।
(परमतभङ्गः)

அமரர் தொழப்படுவானை அனைத்துலகுக்கும் பிரானை
அமர மனத்தினுள்யோகு புணர்ந்து அவன் தன்னோடொன்றாக
அமரத்துணிய வல்லார்களொழிய அல்லாதவரெல்லாம்
அமர நினைந்தெழுந்தாடி அலற்றுவதே கருமமே.

(நம்மாழ்வார் திருவா. 3-5-9

பூ மன்னு மாது பொருந்திய மார்பன், புகழ் மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந்துய்ந்தவன், பல்கலையோர்
தாம் மன்ன வந்த இராமாநுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ, நெஞ்சே, சொல்லுவோம் அவன் நாமங்களே.

(இராமானுச நூற்றந்தாதி)

# பதிப்பாளரின் பணிவுரை

## ப்ருஹ்மவித்யா 5-ம் பாகம்

ஸ்ரீ பாஷ்யத்தின் முதற்இரண்டு அத்யாயங்கள் ப்ருஹ்ம வித்யா-பாகங்கள் ஒன்றிலிருந்து நான்கு பாகங்களாக எற்கனவே வெளியிடப்பட்டு-அதனைத்தொடர்ந்து இப்போது மூன்றும் அத்யாயம் (நான்கு பாதங்களுடன்) கூடிய இறுதிவரை ஸமர்ப்பிக்கப் படுகிறது. அதாவது முதற்இரண்டு அத்யாயங்களில் யாது ஸ்தாபிதம் செய்யப்பட்டதோ-அதாவது பிரபஞ்சத்தினுள் அந்தர்கதனை பரமாத்மா ஸர்வ வஸ்து நிரூபித ஸர்வவித காரணமாகிறபடியால் (உபாதான - நிமித்த - ஸஹகாரண மாகிறபடியால்) ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை அவனே वेदितव्यः அறியத்தகுந்தவன் - முமுக்ஷோபாஸ்யன்: அவனுடைய திருவடிகளே நமக்குத் தஞ்சம் என்றும்; அவனைப்பெற வைப்பது உபாஸனாத்மக பக்தி பிரபத்தியே என்கிற விஷயங்கள் மீண்டும் இந்த அத்யாயத்தில் வலியுறுத்தப்படுகின்றன. ப்ருஹ்மம் ஸவிசேஷமே-பரமாத்மா குணாத்மகன்-உபயலிங்கத்வ காரணாதிகளாலே, அவனை உபாஸிப்பதே ஜீவனுடைய முக்ய வாழ்க்கை நோக்கமாகும் - அதற்குரிய சிந்தனை - உபாயம்-வித்யோபாஸனை-குணயோகமுள்ள புருஷனை-ஸ்ரீ மஹா லக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீமந் நாராயணனை பக்தி பிரபத்தியுடன் உபாஸிக்க வேண்டியது-எனக் காட்டப்பட்டன இந்த அத்யாயத்தில். அதற்குப் பிறகு வரும் பலாதிகரணமும் பராதிகரணமும் அந்த ஸ்ரீமந்நாராயணனின் பெருமைகளையே விளக்குவதாகும். மூன்றுவது பாதமாகிய குணோபஸம்ஹாரபாதம் ப்ருஹ்மவித்யைகளைப் பற்றி ஆராயும் விஷயமாகும். வித்யைகள் ஒன்று-வேறுபட்டவையா, எந்த எந்த குணங்களை எந்த எந்த வித்யைகளில் சேர்த்துக்கொள்ள வேண்டியது; வித்யைகளுக்கு அங்கமாக வர்ணாஸ்ரம தர்மங்கள் அனுஷ்டிக்கப் படவேண்டுமென்றும்; நான்காம் பாதத்திலே மீண்டும் ப்ருஹ்ம வித்யைக்கு அங்கமாக கர்மாக்கள் முழுவதும் (கைவிடத்தக்கதல்ல) அனுஷ்டிக்கப்படவேண்டும் வாழ்நாட்கள் முழுவதும், என்கிற விஷயங்களும் சொல்லப்படுகின்றன. நாம் ப்ருஹ்ம வித்யா முதற்பாகத்தில் கூறியபடி - ஸ்ரீபாஷ்யத்திலே 3-3 56ல்

नानाशब्दादिभेदात् என்பதில் (மூன்றும் பாதம்) ந்யாஸ வித்யை சூசிக்கப்படுகிறது-ஆதிசப்தத்தினுல்- என்று சுருத பிரகாசிகையின் ஆசிரியர் சொல்கிருர். அதாவது சரணுகதியைச் சொல்லும்; ஏனெனில் சப்த பேதம் என்கிற வார்த்தை உபயோகிக்கப்பட்டிருப்பதால், இந்த சூத்ரத்தின் நோக்கம் - சப்த பேதத்தினுல் பேதம் யேற்படுவதாலே - நியாஸம் - உபாஸனம் என்பது சரணுகதியையும் (பக்தியையும்) குறிப்பதாகும்-இது வேத வியாஸரின் கருத்தாகும். இதனுல் யேற்படுவது - அந்த அந்த வித்யைகளில் குண பேதங்கள் இருப்பதால் உபாஸ்ய பேதம்; இதர வித்யைகளில் சுத்த பிருஹ்ம பிராப்தி பலன். ஆகவே பல பேதம் உண்டு. சரணுகதி மோக்ஷ ஸாதனமாகும். சரணுகதிக்கு மற்ற வித்யைகளைப் போல ஏற்றம் பெருமையுண்டு-ஆனுல் பலனில் தாரதம்யமில்லை-பகவத் பிராப்தியில் ஸமம் என்பதாம்.

இப் புத்தகங்களின் உபோத்காதத்தில் ஸ்ரீபாஷ்ய மத பிரவர்த்தகர்களைப் பற்றிச் சொல்லும்போது, அஹோபில மடத்து அழகியசிங்கர்களின் ஸ்ரீபாஷ்யத்தைப் பற்றிய அருளிச் செயல்களில்-தற்போது ஸ்ரீ அஹோபிலமடம் 44வது பட்டம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்திர மஹாதேசிகன் அவர்களால் அனுக்ரஹிக்கப்பட்ட பிருஹ்ம சூத்ரார்த்த பத்ய மாலிகாவின் மூன்றுவது அத்யாய விஷயங்கள் இதில் சேர்க்கப்பட்டதாகும்.

இப்புத்தகத்தைத் தயாரிப்பபதற்கு நான் பல பேர்களுக்கு கடமைபட்டிருக்கிறேன். முக்யமாக ஸ்ரீ அஹோபில மடம் ஆஸ்தான வித்வான் வித்வன் மணி ஸதர்த்த பிரகாசக ராஜ: ந்யாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உப. வே. வில்லிவலம் கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமிக்கு; இவரை அவரது திருத் தமையனுர்-ஸ்ரீ உ. வே. வேதாந்த வாவதூக வில்லிவலம் ஸ்ரீ நாராயணுசார்ய ஸ்வாமி மூலமாக நன்கு அறிவேன். இவர்களைப் பற்றிய மங்கள சரணஸ்துதி இந்த புத்தகத்தின் பதிப்பாளரின் பணிவுரையில் ஆருவது சுலோகத்தால் இந்த நன்றியைச் செலுத்தியுள்ளேன். வில்லிவலம் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமி அடியேனைப் பூர்ணமாக ஸ்ரீபாஷ்ய அதிகாரியாக ஆக்கினுர்-தமது சிரமத்தைப்

பாராமல் அடியேனை நன்கு சிக்ஷித்தார், அடுத்தபடி கோஷ்டீபுரம் ஸ்வாமி-ஸ்ரீ உ. வே ராமானுஜாச்சாரியார் ஸ்வாமியாகும். இவருடைய திருத் தகப்பனார் கோஷ்டீபுரம் ஸ்ரீ உ. வே. ஸௌம்ய நாராயணாச்சாரியார் ஸ்வாமி ஆவார். பண்டித உலகில் இவர்களைத் தெரியாமல் இருக்க முடியாது. அத்வைத சம்பிரதாயத்தில், ஆத்மவித்யா பூஷணம் ஸ்ரீ V. S. V. குருஸ்வாமி சாஸ்திரி அவர்களுக்கு கடமைப்பட்டிருக்கிறேன். இவர்களை அடியேன் பல தடவைகள் சுக்ருத நமஸ்காரங்கள் செய்து விண்ணப்பிக்கிறேன். இன்னும் பல பேர்களைப் பற்றி முந்தின பாகங்களில் சொல்லியிருக்கிறேன். ஸ்ரீ பாஷ்ய கிரந்தம் உபதேச கிரந்தமாதலால், இதனை குருவினிடமே சாந்தி பாடங்களுடன் நேரடியாகக் கற்க வேண்டும்.

இந்த புத்தகத்தை எனது ஆசார்யரான ஸ்ரீ அழகிய சிங்கருக்கு ஸமர்ப்பணம் செய்கிறேன். எல்லா விதத்திலும் தகுதியில்லாத அடியேனைக் கிருதார்த்தனாக்க வேண்டும். இதை ஆமோதித்து அங்கீகரிக்கவேண்டும், எனப் பல தடவைகள் சுக்ருத நமஸ்காரங்கள் செய்து வேண்டுகிறேன்.

இந்த ஐந்தாம் பாகத்தை பிருஹ்ம வித்யா ஸத் ஸம்பிரதாய வம்ஸ பிருஹ்ம நிஷ்டர்களுக்கும், பிருஹ்ம வித்யா ஸம்பந்நர்களுக்கும், பிருஹ்ம வித்யா ஸதாசார்யர்களுக்கும்-பிருஹ்ம ரிஷிகளுக்கும் நான் அஞ்சலி பந்தத்துடன் இதனை ஸமர்ப்பிக்கிறேன். அவர்களுடைய பூரணமான அனுக்கிரஹமும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீமந் நாராயணனை பரம பக்தியுடன் ஆராதித்தவரும், நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் போன்ற மஹாசார்யர்களிடம் அடங்கா பக்திக் காதல் கொண்ட எம்பெருமானாரைப் பல தடவைகள் சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன். அடியேனது தேக ஆத்ம சுகத்திற்க்காகவும், மன உல்லாஸத்திற்க்காகவும் எழுதப் பெற்ற இந்த கிரந்தம் அவர்களுடைய ஆசீர்வாதங்களால் ஸபலமாகட்டும்-இக்காரியத்தைச் செய்து, முடிக்கச் செய்த எம்பெருமானை அலர்மேல் மங்கை ஸமேத ஸ்ரீ ஸ்ரீநிவாஸனை அடியேன் அடிக்கடி சுக்ருத பிரணமம் செய்கிறேன். ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடிய எம்பெருமான் ஸ்ரீமந்

நாராயணன் எல்லோருக்கும் சகலவிதமான ரோகங்களிலிருந்து யேற்படும் தாபங்களைப் போக்கி ஸகல மங்களகரமான க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டுமென்று அடியேன் அடிக்கடி பிரார்த்திக்கிறேன்.

வாசக தோஷங்கள் க்ஷந்தவ்ய :

ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஸமேத ஸ்ரீமந் நாராயண திருவடிகளே சரணம்

ஸ்ரீ விஷ்ணு சித்த குல நந்தன கல்பவல்லீம்-ஸ்ரீ ரங்கராஜ
மஹிஷீம் ஸ்ரீமத் கோதாயை நித்யமங்களம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம :

ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம :

சுக்ல வருஷம்
ஆடிமீ கிருஷ்ண தசமி
ஜூலை-27உ 1989
வியாழன் ஆடி கிருத்திகை
உத்ஸவத்தன்று
10, திருவீதி அம்மன் தெரு,
ராமகிருஷ்ண நகர்,
மதராஸ் - 28

தாஸன்
S. ஜகந்நாராயணன்
Dy. Secretary (Retd)
Minis. of Finance
Govt. of India New Delhi,

श्रीः

    

ஸ்ரீமதே ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ருஹ்மணே நம:

**ஸ்ரீ அஹோபில மடம் 44 வது பட்டம்**

**ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த தேசிக**

**யதீந்திர மஹா தேசிகன்**

**அவர்களால் பூர்வாசிரமத்தில் அனுக்ரஹிக்கப்பட்ட**

**ஸ்ரீ பாஷ்யத்தின் 3ம் அத்யாயம்-விஷயமாக***

(தொடர்ச்சி)

# ॥ ब्रह्मसूत्रार्थपद्यमालिका ॥

## ॥ अथ तृतीयाध्यायस्य प्रथमः पादः ॥

---

69 तदन्तरप्रतिपत्त्यधिकरणम् ।

**॥ तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् ॥** 1

288 देहाद्देहान्तरप्राप्तौ आत्मा गच्छति सूक्ष्मकैः ।
भूतैरेव परिष्वक्तः प्रश्नप्रत्युक्तिदर्शनात् ॥

**॥ त्र्यात्मकत्वात्तु भूयस्त्वात् ॥** 2

289 त्र्यात्मकत्वात्तु भूतानां त्रिवृत्करणस्तथा ।
आधिक्याद्व्यपदेशः स्यात् नांभसा याति केवलम् ॥

**॥ प्राणगतेश्च ॥** 3

290 इन्द्रियाणां तेन गतेः तदाधारतया तनोः ।
भूतसूक्ष्मशरीरेण गच्छतीति च गम्यते ॥

---

குறிப்பு: - *பிருஹ்ம வித்யா - 2, 3, 4 பாகங்களை முந்தின ஸூத்ரங்களுக்குப் பார்க்கவும்.

**॥ अग्न्यादिगतिश्रुतेरिति चेन्न भाक्तत्वात् ॥** 4

291 अग्न्यादिषु गतिश्रुत्या जीवेन गमनं कथम् ।
तेषामिति न वक्तव्यं अभिमानिपरा हि सा ॥

**॥ प्रथमेऽश्रवणादिति चेन्न ता एव ह्युपपत्तेः ॥** 5

292 प्रथमेऽश्रवणाद्धोमे ह्यपां तन्नेति चेन्न हि ।
ते श्रद्धां जुह्वतीत्यत्र ह्याप एवोपपत्तितः ॥

**॥ अश्रुतत्वादिति चेन्नेष्टादिकारिणां प्रतीतेः ॥** 6

293 अश्रुतत्वाच्च जीवस्य परिष्वङ्गः कथं च तैः ।
इति चेन्नात्र यज्ञादिकारिणां गमनश्रुतेः ॥

**॥ भाक्तं वाऽनात्मवित्त्वात्तथा हि दर्शयति ॥** 7

294 तं देवा (:) भक्षयन्तीति भक्षणं गौणमेव हि ।
अनात्मवित्त्वात्तेषां त पशुतुल्यत्वकीर्तनात् ॥

70 कृतात्ययाधिकरणम्

**॥ कृतात्ययेऽनुशयवान् दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च ॥** 1

295 कृतकर्मात्यये जीवः भुक्ताच्छिष्टेन कर्मणा ।
यथागतं चान्यथा चाप्यवरोहति शब्दतः ॥

**॥ चरणादिति चेन्न तदुपलक्षणार्थेति कार्ष्णाजिनिः ॥** 2

296 आचारवाचिचरणश्रुत्या कर्म न चेति चेत् ।
कर्मोपलक्षणार्थेति कार्ष्णाजिनिरिहाब्रवीत् ॥

**॥ आनर्थक्यमिति चेन्न तदपेक्षत्वात् ॥** 3

297 आचारस्य त्वकर्मत्वे वैयर्थ्यमिति चेन्न हि ।
आचाराणामपेक्ष्यत्वात् कर्मणेति तु मन्यते ॥

॥ सुकृतदुष्कृते एवेति तु बादरिः ॥ 4

298 श्रुतौ चरणशब्देन पुण्यपापे च कर्मणी ।
उच्येते चेति साक्षाद्धि बादरिर्मनुते मुनिः ॥

71 अनिष्टादिकार्यधिकरणम् ।

॥ अनिष्टादिकारिणामपि च श्रुतम् ॥ 1

299 गच्छन्ति ते सर्वं इति श्रुत्याऽनिष्टादिकारिणाम् ।
अपि चन्द्रमसप्राप्तिः भवतीति विशङ्कते ॥

॥ संयमने त्वनुभूयेतरेषां आरोहावरोहौ तद्गतिदर्शनात् ॥ 2

300 चन्द्रारोहावरोहो तु यातनां यमशासने ।
अनुभूयेतरेषां इति तद्गतिदर्शनात् ॥

॥ स्मरन्ति च ॥ 3

301 सर्वे चैव वशं यान्ति यमस्य भगवन्किल ।
इति स्मृत्या च तेषां तु यमवश्यत्वशंसनात् ॥

॥ अपि सप्त ॥ 4

302 सप्त चैषां रौरवादिलोका(:) इति च गम्यते ।
यातनां त्वनुभूयाथो तत्रापि गतिरुच्यते ॥

॥ तत्रापि तद्व्यापारादविरोधः ॥ 5

303 यमस्य शासनादेव पापिनां यातना भवेत् ।
तत्रापि तत्स्मृतेरेवे विरोधो नैव विद्यते ॥

॥ विद्याकर्मणोरिति तु प्रकृतत्वात् ॥ 6

304 अनिष्टादिकृतां नैव पितृयाणपथाद्गतिः ।
विद्यायास्सुकृतस्यापि फलं मार्गद्वय स्मृतम् ॥

॥ तृतीये तथोप लब्धेः ॥ 7

305 तृतीयस्थानवाच्यानां पापिनां नैव विद्यते ।
पञ्चमाहुत्यपेक्षा तु नेति देहाय च श्रुतेः ॥

॥ स्मर्यतेऽपि च लोके ॥ 8

306 पुण्यकर्मवतां चापि केषांचिद् देहसम्भवे ।
पञ्चमाहुत्यपेक्षा न; द्रौपद्यादिषु दृश्यताम् ॥

॥ दर्शनाच्च ॥ 9

307 पञ्चमाहुत्यभावेन जायस्वेत्यादि दर्शनात् ।
उद्भिज्जस्वेदजानां तु देहोत्पत्तिस्तथा भवेत् ॥

॥ तृतीयशब्दावरोधस्संशोकजस्य ॥ 10

308 उद्भिज्जमिति शब्देन स्वेदजस्यापि संग्रहः ।
श्रुत्युक्तेन तृतीयेन ह्यण्डजाज्जीवजात्परम् ॥

72 तत्स्वाभाव्यापत्त्यधिकरणम् ।

॥ तत्स्वाभाव्यापत्तिरुपपत्तेः ॥ 1

309 अवरोहेऽस्य जीवस्य तत्तत्सादृश्यमात्रतः ।
वियद्भावादिवचनं न भोगायेति निश्चयात् ॥

73 नातिचिराधिकरणम् ।

॥ नातिचिरेण विशेषात् ॥ 1

310 व्रीह्यादिभावे जीवस्य चिरनिर्गमनश्रुतेः ।
अन्यत्र त्वचिरेणैव ह्यागच्छति च चेतनः ॥

74 अन्याधिष्ठिताधिकरणम् ।

॥ अन्याधिष्ठिते पूर्ववदभिलापात् ॥ 1

311 अन्याधिष्ठितव्रीह्यादौ सम्बन्धः पूर्ववत्तदा ।
अनुभाव्यान्तराभावात् मध्ये तत्रावरोहितः ॥

॥ अशुद्धमिति चेन्न शब्दात् ॥ 2

312 पश्वादिहिंसया स्वर्गं प्राप्तानां शिष्टकर्म च ।
अशुद्धमिति भोगश्चेत् न तत् , शुद्धमिति श्रुतेः ॥

॥ रेतस्सिग्योगोऽथ ॥ 3

313 रेतस्सिच्चति तद्भूयो भवतीति श्रुतेरिह ।
रेतस्सिचा यथा योगो व्रीह्यादिषु तथा भवेत् ॥

॥ योनेश्शरीरम् ॥ 4

314 योनिप्राप्तेस्तु पश्चाद्धि शरीरं प्राप्यते पुनः ।
कर्मणामुपभोगाय तत्र तत्र च योनिषु ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां तृतीयाध्यायस्य
प्रथमः पादः ॥

---

## ॥ अथ तृतीयाध्यायस्य द्वितीयः पादः ॥

---

75 सन्ध्याधिकरणम् ।

॥ सन्ध्ये सृष्टिराह हि ॥ 1

315 स्वप्नस्थाने जीव एव सृजतीति च चोद्यते ।
सृजते स हि कर्तेति श्रुतिराह हि तत्र च ॥

॥ निर्मातारश्चैके पुत्रादयश्च ॥ 2

316 कामानां स्वप्नकाले तु निर्माता जीव एव हि ।
वदन्त्येके शाखिनश्च पुत्रादीन् कामशब्दतः ॥

॥ मायामात्रं तु कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वात् ॥ 3

317 स्वप्ने यत्सृष्टमाम्नातं तदिदं ब्रह्मणा कृतम् ।
आश्चर्यभूतं जीवे न सत्यसंकल्पता तदा ॥

॥ पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ ॥ 4

318 अनादिकृतपापेन ब्रह्मसङ्कल्पतस्तदा ।
तिरोहितं सत्यतादि (तत्स्वरूपं) बन्धमोक्षौ ततोऽस्य हि ॥

॥ देहयोगाद्वा सोऽपि ॥ 5

319 तिरोभावो गुणानां तु सृष्टौ देहस्य योगतः ।
प्रळये प्रकृतेर्योगमात्रेणैव तथा भवेत् ॥

॥ सूचकश्च हि श्रुतेराचक्षते च तद्विदः ॥ 6

320 शुभादिसूचकस्स्वप्न(:) इति श्रुत्या हि दृश्यते ।
तद्विदां वचनाच्चैव न जीवस्यात्र कर्तृता ॥

76 तदभावाधिकरणम् ।

॥ तदभावो नाडीषु तच्छ्रुतेरात्मनि च ॥ 1

321 स्वप्नाभावस्सुषुप्तिर्हि नाडीषु च पुरीतति ।
ब्रह्मणीति भवेत्तेषां सुषुप्तिस्थानता श्रुतेः ॥

॥ अतः प्रबोधोऽस्मात् ॥ 2

322 पर्यङ्कस्थानभूतेतु सुषुप्तिर्ब्रह्मणीत्यतः ।
तस्मात्प्रबोध इत्यादिश्रुतिश्चाप्युपपद्यते ॥

77 कर्मानुस्मृतिशब्दविध्यधिकरणम्

॥ स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्यः ॥ 1

323 मुक्तिर्न संपत्तिरियं आगच्छति स एव तु ।
कर्मानुस्मृतिशब्देभ्यः मोक्षोपायविधेः (धरेपि) पृथक् ॥

78 मुग्धाधिकरणम् ।

॥ मुग्धेऽर्धसंपत्तिः परिशेषात् ॥ 1

324 मरणायार्धसंपत्तिः मूर्छेति मरणेतरा ।
उत्थानाभावनियमाद्यभावात्परिशेषतः ॥

79 उभयलिङ्गाधिकरणम् ।

॥ न स्थानतोऽपि परस्योभयलिङ्गं सर्वत्र हि ॥ 1

325 परस्य ब्रह्मणो दोषः स्थानतोऽपि न विद्यते ।
यतो निर्दोषकल्याणगुणाद्युभयलिङ्गता ॥

॥ भेदादिति चेन्न प्रत्येकमतद्वचनात् ॥ 2

326 अवस्थाभेदतो दोषः जीवस्येव परस्य चेत् ।
नैवन्तु तत्र तत्रैव ह्यमृतत्वश्रुतेर्बलात् ॥

॥ अपि चैवमेके ॥ 3

327 एकदेहस्थितस्यापि न भोक्तृत्वं परात्मनः ।
द्वा सुपर्णाविति श्रुत्याऽधीयते चैकशाखिनः ॥

॥ अरूपवदेव हि तत्प्रधानत्वात् ॥ 4

328 शरीरस्थमपि ब्रह्म रूपाभाववदेव हि ।
नामरूपादिकरणे प्रधानत्वात्परात्मनः ॥

॥ प्रकाशवच्चावैयर्थ्यात् ॥ 5

329 यथा ज्ञानादिवाक्यस्यावैयर्थ्यात्स्वप्रकाशता ।
तथैव सत्यकामादिवाक्यावैयर्थ्यतो गुणी ॥

॥ आह च तन्मात्रम् ॥ 6

330 प्रकाशरूपतामात्रं सत्यं ज्ञानमिति श्रुतिः ।
वदत्यन्यान्गुणांस्तांस्तु न निषेधति वै यतः ॥

। दर्शयति चाथो अपि स्मर्यते ॥ 7

331 निष्कलं मामनादिं च वेत्तीत्यादिश्रुतिस्मृती ।
ब्रह्म ह्युभयलिङ्गन्तु वदतश्च विशेषतः ॥

। अत एव चोपमा सूर्यकादिवत् । 8

332 सर्वत्रोभयलिङ्गत्वात् जलसूर्योपमा कृता ।
ब्रह्मणश्शास्त्रतश्चेति जलाधारेष्विवांशुमान् ॥

॥ अम्बुवदग्रहणात्तु न तथात्वम् । 9

333 वस्त्वभावेऽप्यम्भसीवा ब्रह्मणोऽग्रहणात् स्थितेः ।
सर्ववस्तुष्वतो ब्रह्म स दोषमिति शङ्कते ॥

॥ वृद्धिह्रासभाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवं दर्शनाच्च । 10

334 स्थानतो ह्रासवृद्ध्यादिभाक्त्वं चात्र निषिध्यते ।
आकाशसूर्यदृष्टान्तद्वयाञ्जस्याच्च लोकतः ॥

। प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः । 11

335 प्रकृतैतावत्त्वमात्रं नेति नेति निषिध्यते ।
ततोऽधिकगुणाढ्यत्ववचनाद्ब्रह्मणस्त्विहै ॥

॥ तदव्यक्तमाह हि ॥ 12

336 ब्रह्मस्वरूपं केनापि प्रमाणेन न गृह्यते ।
एनं न पश्यतीत्यादिश्रुतिराह हि काचन ॥

। अपि संराधने प्रत्यक्षानुमानाभ्याम् ॥ 13

337 एकेन ध्यानयोगेन गृह्यते परमः पुमान् ।
यमेवैष इति श्रुत्या तथा स्मृत्या च गम्यते ॥

॥ प्रकाशादिवच्चावैशेष्यं प्रकाशश्च कर्मण्यभ्यासात् ॥ 14

338 ध्यानकर्मणि चाभ्यासात् दर्शनं चोपजायते ।
ज्ञानानन्दाद्यवैशेष्यात् विभूतीनां च केषुचित् ॥

॥ अतोऽनन्तेन तथा हि लिङ्गम् ॥ 15

339 अतोऽनन्तेन कल्याणगुणजातेन योगतः ।
परस्य स्वप्रकाशस्योभयलिङ्गं, समञ्जसम्

80 अहिकुण्डलाधिकरणम् ।

॥ उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् ॥ 1

340 जगतो ब्रह्मणा साकं द्वैताद्वैतोपदेशतः ।
पृथक्त्वं चास्य चैकत्वं अहिकुण्डलवद्भवेत् ॥

॥ प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात् ॥ 2

341 प्रभायास्तद्वतश्चापि तेजस्त्वेन यथैकता ।
प्रपञ्चब्रह्मणोस्तद्वत् इति केषांचिदाशयः ॥

॥ पूर्ववद्वा ॥ 3

342 एकजात्यादियोगाच्च नानयोरैक्यसम्भवः ।
जीवस्येवाचेतनस्यापृथक्स्थित्यांशता हरेः ॥

॥ प्रतिषेधाच्च ॥ 4

343 आत्माऽजरोऽमृत(:) इति ह्यचिद्धर्मनिषेधतः ।
अपृथक्स्थितियोगेन तयोरंशांशिकल्पना ॥

81 पराधिकरणम् ।

॥ परमतस्सेतून्मानसम्बन्धभेदव्यपदेशेभ्यः ॥ 1

344 सेतून्मानाप्तिसम्बन्धभेदानां व्यपदेशतः ।
ब्रह्मणः परमेव स्यात् प्राप्यं पूर्णं तु कूलवत् ॥

॥ सामान्यात्तु ॥ 2

345 सेतुशब्दस्ततो ह्यन्यत् सूचयेन्नात्र किञ्चन ।
सेतुसाम्याद्विधरणात् शब्दोऽयं ब्रह्मवाचकः ॥

॥ बुद्ध्यर्थः पादवत् ॥ 3

346 चतुष्पादादि चोन्मानं त्वत्र वाक्पादवद्भवेत् ।
उपासार्थमनन्तस्य नातोऽन्यत्परमिष्यते ॥

॥ स्थानविशेषात्प्रकाशादिवत् ॥ 4

347 अवच्छिद्यानुसन्धानं तत्तत्स्थानविशेषतः ।
प्रकाशाकाशयोर्यद्वत् वातायनघटादिषु ॥

॥ उपपत्तेश्च ॥ 5

348 अमृतस्यैष सेतुरित्यत्र ब्रह्मामृतस्य च ।
स्वस्यैव प्राप्तये हेतुरतस्सम्बन्धसङ्गतिः ॥

॥ तथाऽन्यप्रतिषेधात् ॥ 6

349 कश्चिज्ज्यायो नास्ति चेति श्रुत्या च प्रतिषेधतः ।
ततो यदुत्तरं इति ब्रह्मैव चोच्यते ॥

॥ अनेन सर्वगतत्वमायामशब्दादिभ्यः ॥ 7

350 ब्रह्मणाऽनेन सर्वस्य व्याप्यत्वमवगम्यते ।
सर्वव्याप्तेर्वाचिशब्दैः पूर्णमित्यादिकैरिह ॥

82 फलाधिकरणम् ।

॥ फलमत उपपत्तेः ॥ 1

351 पारत्रिकं चैहिकं च फलं सर्वमतो भवेत् ।
परस्मादेव पुरुषात् क्षणध्वंसि हि कर्म तत् ॥

॥ श्रुतत्वाच्च ॥ 2

352 आत्मान्नादो वसुदानो नन्दयातीति वाक्यतः ।
भोगापवर्गमुभयं ब्रह्मैवैतद्ददाति हि ॥

**॥ धर्मं जैमिनिरत एव ॥** 3

353 उपपत्तेः श्रुतत्वाच्च फलदो धर्म एव हि ।
अपूर्वद्वारतश्चेति जैमिनिर्मनुते मुनिः ॥

**॥ पूर्वं तु बादरायणो हेतुव्यपदेशात् ॥** 4

354 पूर्वोक्तं फलदातृत्वं मनुते बादरायणः ।
तत्तच्छरीरकस्यैव ब्रह्मणस्त्विति शब्दतः ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां तृतीयाध्यायस्य
द्वितीयः पादः ॥

---

## ॥ अथ तृतीयाध्यायस्य तृतीयः पादः ॥

---

83 सर्ववेदान्तप्रत्ययाधिकरणम् ।

**॥ सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात् ॥** 1

355 वेदान्तेषु च सर्वेषु प्रतीतं तत्र तत्र च ।
दहरादिध्यानमेकं विद्ध्याख्यानाद्यभेदतः ॥

**॥ भेदान्नेति चेदेकस्यामपि ॥** 2

356 अविशेषपुनःश्रुत्या विद्यैक्यं नेति चेन्न हि ।
एकस्यामपि विद्यायां श्रोतृभेदात्पुनःश्रुतिः ॥

**॥ स्वाध्यायस्य तथात्वे हि समाचारेऽधिकाराच्च
॥ सववच्च तन्नियमः ॥** 3

357 समाचारेऽतिदेशाच्च स्वाध्यायार्थं शिरोव्रतम् ।
सवहोमो यथा तेषां न त्रेतादिषु विद्यते ॥

**॥ दर्शयति च ॥** 4

358 गुणष्टकं तु च्छान्दोग्ये यजुष्यन्तरिति स्मृतम् ।
विद्यैक्यं श्रुतिरेवाह दहृयोरुभयोरपि ॥

**॥ उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च ॥** 5

359 उपासने समाने च ह्युपकाराविशेषतः ।
गुणानामुपसंहारस्त्वेकस्मिन्विधिशेषवत् ॥

84 अन्यथात्वाधिकरणम् ।

**॥ अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात् ॥** 1

360 उद्गातरि च तत्कर्मण्यध्यासस्य विधानतः ।
विद्यैक्यं नेति चेन्नैवं ह्यविशेषादुपक्रमे ॥

**॥ न वा प्रकरणभेदात्परोवरीयस्त्वादिवत् ॥** 2

361 कृत्स्नोद्गीथे तदंशे च विधानस्थलभेदतः ।
परोवरीयस्त्वादिवत् विद्याभेद इहोच्यते ॥

**॥ संज्ञातश्चेत्तदुक्तमस्ति तु तदपि ॥** 3

362 नोद्गीथोपासनमिति नामैक्यादैक्यमित्यपि ।
कुण्डपाय्यग्निहोत्रे च नित्ये चास्त्येकनाम हि ॥

**॥ व्याप्तेश्च समञ्जसम् ॥** 4

363 ओपक्रमात्तु सर्वत्र व्याप्त्या प्रणव एव हि ।
उपास्यत्वेनोच्यत इति च्छान्दग्ये तु समञ्जसम् ॥

85 सर्वभेदाधिकरणम् ।

**॥ सर्वाभेदादन्यत्रेमे ॥** 1

364 कौषीतक्यां प्राणबुद्धावन्यरीत्यविशेषतः ।
अन्यत्रोक्तवसिष्ठत्वादिकमप्यत्र चिन्त्यताम्

## 86 आनन्दाद्यधिकरणम् ।

**॥ आनन्दादयः प्रधानस्य ॥** 1

365 आनन्दादिगुणास्त्वत्र स्वरूपस्य निरूपकाः ।
सर्वविद्यास्वनुगताः प्रधानस्याविभेदतः ॥

**॥ प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे ॥** 2

366 ध्यानेषु प्रियशिरस्त्वाद्यप्राप्तिस्सर्वदा भवेत् ।
शिरःपक्षादिभेदे चोपचयापचयौ ध्रुवम् ॥

**॥ इतरे त्वर्थसामान्यात् ॥** 3

367 आनन्दादिगुणैर्ब्रह्मस्वरूपस्य निरूपणात् ।
ब्रह्मस्वरूपसाम्याच्चाप्यनुवृत्ता(:) इति स्थितम् ॥

**॥ आध्यानाय प्रयोजनाभावात् ॥** 4

368 उपासनार्थमेवेदं रूपणं क्रियते तथा ।
प्रयोजनान्तराभावात् तस्मादब्रह्मगा(:) गुणाः ॥

**॥ आत्मशब्दाच्च ॥** 5

369 आत्मानन्दमयश्चेति श्रौतादेवात्मशब्दतः ।
शिरआदेरभावच्चाप्यात्मनो रूपणं हि तत् ॥

**॥ आत्मगृहीतिरितरवदुत्तरात् ॥** 6

370 आत्मानन्दमय(:) इति ह्यात्मशब्दात्परग्रहः ।
सङ्कल्पादुत्तरादत्र आत्मेत्याद्यात्मशब्दवत् ॥

**॥ अन्वयादिति चेत्स्यादवधारणात् ॥** 7

371 अनात्मन्यप्यात्मशब्दस्यान्वयादिति चेदिह ।
एतस्मादात्मन(:) इति परस्यैवावधारणात् ॥

87 कार्याख्यानाधिकरणम् ।

**॥ कार्याख्यानादपूर्वम् ॥** 1

372 पूर्वाप्राप्तं प्राणवासस्त्वानुध्यानं विधीयते ।
अपां आचमनं नात्र विधेरप्राप्तबोधनात् ।

88 समानाधिकरणम् ।

**॥ समान एवञ्चाभेदात् ॥** 1

373 मनोमयत्वादितौल्ये चैक्यं शाण्डिल्यविद्ययोः ।
सत्यसङ्कल्पतया(:) हि विततिर्वशितादयः ॥

89 सम्बन्धाधिकरणम्

**॥ सम्बन्धादेवमन्यत्रापि ॥** 1

374 आदित्येऽक्षणि संबन्धाद्विद्यैक्यान्नामनी उभे ।
यथेच्छमुपसंहार्ये शाण्डिल्योपासने यथा ॥

**॥ न वा त्रि** 2

375 न विद्यैक्यमिहाप्यस्ति रूपे चास्या(:) विशेषतः ।
तत्तत्स्थानविशिष्टस्य परस्यपासनादिह ॥

**॥ दर्शयति च ॥** 3

376 आदित्येऽक्षणि भिन्नत्वादतिदेशो हि दृश्यते ।
तदेव रूपमित्येवमप्राप्तस्य हि युज्यते ॥

90 सम्भृत्यधिकरणम् ।

**॥ सम्भृतिद्युव्याप्त्यपि चातः ॥** 1

377 द्युव्याप्तिस्सम्भृतिश्चापि स्वल्पस्थानासु नैव हि ।
उपास्ये इति सर्वत्र न विद्यास्वन्वयस्तयोः ॥

91 पुरुषविद्याधिकरणम् ।

**॥ पुरुषविद्यायामपि चेतरेषामनाम्नानात् ॥** 1

378 छान्दोग्यस्था तु पुरुषविद्याऽन्या तैत्तिरीयाद्विभिद्यते ।
इतरेषां गुणानां च ह्यनाम्नानात् फलस्य च ॥

92 वेधाद्यधिकरणम्

**॥ वेधाद्यर्थभेदात् ॥** 1

379 शन्न(:)इत्यादिमन्त्राणां विद्यांगत्वं न विद्यते ।
यथा शुक्रश्रुतौ वेधाद्यर्थभेदादनंगता ॥

93 हान्यधिकरणम् ।

**॥ हानौ तूपायनशब्दशेषत्वात् कुशाच्छन्दस्तुत्युपगानवत्तदुक्तम् ॥**

380 उपायनादिशब्दस्य हान्यादिपदशेषतः ।
सर्वत्रोभयचिन्ता हि कुशाच्छन्दादिवद्भवेत् ॥

94 साम्परायाधिकरणम् ।

**॥ साम्पराये तर्तव्याभावात् तथा ह्यन्ये ॥** 1

381 देहादुत्क्रान्तिकाले तु पुण्यपापविमोचनम् ।
भोगाद्यभावान्मध्ये च तथाह्यन्येप्यधीयते ॥

**॥ छन्दत(ः) उभयाविरोधात् ॥** 2

382 निश्चिते हानिकाले चोभयश्रुत्यविरोधतः ।
धूननादिपदानां तु च्छन्दतोऽन्वय उच्यते ॥

**॥ गतेरर्थवत्त्वमुभयथान्यथा हि विरोधः ॥** 3

383 उभयत्र क्षये चैव सम्भवोऽस्ति गतेः पथि ।
अन्यथा चेद्विरोधस्स्यात देवयानगतिश्रुतेः ॥

॥ उपपन्नस्तल्लक्षणार्थोपलब्धेर्लोकवत् ॥ 4

384 कर्माभावेऽप्युपपन्ना सूक्ष्मेण वपुषा गतिः ।
एकधेत्युपलब्धेश्च सस्यायेत्र सरांसि च ॥

॥ यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् । 5

385 अधिकारे नियुक्तानां यावत्तद्वर्ततेऽत्र हि ।
अवस्थितिस्तावदिति वसिष्टादेर्न मध्यतः ॥

95 अनियमाधिकरणम् ।

॥ अनियमस्सर्वेषामविरोधश्शब्दानुमानाभ्याम् ॥ 1

386 सर्वेषामविशेषेण ह्यर्चिरादिकया गतिः ।
श्रुतिस्मृत्यविरोधाय निश्चिता मुनिसत्तमैः ॥

96 अक्षरध्यधिकरणम् ॥

॥ अक्षरधियां त्ववरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तम् ॥ 1

387 सर्वत्रास्थूलतादेस्तु संग्रहो ब्रह्मणोऽन्वयात् ।
अन्तर्भावाच्चौपसदनीत्या प्रथमकाण्डवत् ॥

॥ इयदामननात् ॥ 2

388 एतावद्गुणजातस्य सर्वविद्यासु संग्रहः ।
येनैव गुणजातेन विना न ग्रहणं विभोः ॥

97 अन्तरत्वाधिकरणम् ।

॥ अन्तरा भूतग्रामवत् स्वात्मनोऽन्यथा भेदानुपपत्तिरिति
चेन्नोपदेशवत् । 1

389 सर्वान्तरस्तु जीवात्मा प्रत्युक्तेश्च विभेदतः ।
मैवं स(:) पर(:) इत्येव सद्विद्यावत्प्रतीयते ॥

॥ व्यतिहारो विशिंषन्ति हीतरवत् ॥ 2

390 सद्विद्यावच्च सर्वत्र परमात्मविशेषणात् ।
परस्परं व्यतीहारस्त्वत्रोषस्तिकहोळयोः ॥

॥ सैव हि सत्यादयः ॥ 3

391 सत्यादीनाँ तु सर्वत्र प्रत्युक्तो संग्रहो यतः ।
सैषा परा देवतैव सद्विद्याप्रतिपादिता ॥

98 कामाद्यधिकरणम् ।

॥ कामादीतरत्र तत्र चायतनादिभ्यः ॥ 1

392 विद्ययोरुभयोस्सत्यकामत्वादिगुणान्वयात् ।
फलस्थानाद्यैक्यतश्च विद्यैका दहराभिधा ॥

॥ आदरादलोपः ॥ 2

393 वशित्वादिगुणानां तु वेदनं श्रुतिभिर्विना ।
न भवेदित्यादराच्च ध्येयत्वं त्याज्यता न हि ॥

॥ उपस्थितेऽतस्तद्वचनात् ॥ 3

394 ब्रह्मप्राप्तेतु जीवेऽतः पितृलोकादिकं फलम् ।
भवतीत्यादिवचनात् न तत्सांसारिकं फलम् ॥

99 तन्निर्धारणानियमाधिकरणम् ।

॥ तन्निर्धारणानियमस्तद्दृष्टेः पृथग्ध्यप्रतिबन्धः फलम् ॥ 1

395 कर्मण्युद्गीथविद्यायाः नियमो नास्ति दर्शनात् ।
प्रतिबन्धनिवृत्तिर्हि तत्फलं पृथगुच्यते ॥

100 प्रदानाधिकरणम् ।

॥ प्रदानवदेव तदुक्तम् ॥ 1

396 आवृत्तिः करणीयैव दहरस्य गुणैस्सह ।
इन्द्रायेति पुरोडाशप्रदाने निश्चितं यथा ॥

101 लिङ्गभूयस्त्वाधिकरणम् ।

। लिङ्गभूयस्त्वात्तद्धि बलीयस्तदपि ॥ 1

397 सहस्रशीर्षमित्यादि सर्वविद्यानुयायि च ।
वाक्यभूम्ना प्रकरणात् तद्बलीयस्तथोक्तितः ।।

102 पूर्वविकल्पाधिकरणम् ।

॥ पूर्वविकल्पः प्रकरणात्स्यात् क्रिया मानसवत् ॥ 1

398 प्रक्रियातो मनश्चित्तु क्रियामयमखान्वयी ।
विकल्पश्चेष्टकचितवह्निना मानसं यथा ।।

॥ अतिदेशाच्च ॥ 2

399 यावानसौ पूर्व(:) इति ह्यतिदेशाद्विकल्पतः ।
मनश्चितश्च तत्तुल्यं क्रियामयमखान्वयः ।।

॥ विद्यैव तु निर्धारणाद्दर्शनाच्च ॥ 3

400 मनश्चिदपि विद्यैव दर्शनादवधारणात् ।
ते विद्याचित एवेति मनसैषु ग्रहा इति ।।

॥ श्रुत्यादिबलीयस्त्वाच्च न बाधः ॥ 4

401 प्रक्रियातो बलीयस्त्वाच्छ्रुतेरस्मिन्प्रघट्टके ।
बाधो विद्यामयमखस्यान्वये न भवेद्ध्रुवम् ।।

॥ अनुबन्धादिभ्यः प्रज्ञान्तरपृथक्त्ववद्दृष्टश्च तदुक्तम् ॥ 5

402 क्रियामयात्पृथगयं पृथक्स्तोत्रादितः श्रुतेः ।
दह्रादिभेदवद्दृष्टोऽनुवादेऽपि विधिर्ननु ।।

॥ न सामान्यादप्युपलब्धेर्मृत्युवन्न हि लोकापत्तिः ॥ 6

403 नातिदेशो नेकदेश्यं सादृश्येनोपपत्तितः ।
न तल्लोकस्थितिस्सूर्ये ह्येष मृत्युरिति श्रुतौ ।।

॥ परेण च शब्दस्य ताद्विध्यं भूयस्त्वात्त्वनुबन्धः ॥ 7

404 उत्तरेण ब्राह्मणेन वाचो विद्यामयार्थता ।
अग्न्यंगानां च भूयस्त्वात्संबन्धोऽग्निरहस्यके ॥

103 शरीरे भावाधिकरणम् ।

॥ एक आत्मनः शरीरे भावात् ॥ 1

405 आत्मनः कर्तृतायुक्तं स्वरूपं ध्येयमब्रुवन् ।
शरीरे वर्तमानस्य तथा भावाद्विनीनरे ॥

॥ व्यतिरेकस्तद्भावाभावित्वान्न तूपलब्धिवत् ॥ 2

406 नैवं वाच्यमसंसारिरूपमेव हि भावयेत्
यथोपास्तिफलावाप्तेर्ब्रह्मध्यानोकनीतितः ॥

104 अंगावबद्धाधिकरणम् ।

॥ अङ्गावबद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् ॥ 1

407 क्रत्वंगमाश्रिताश्चैताः न शाखासु व्यवस्थिताः ।
उद्गीथोपासनास्सर्वशाखास्वपि च संगताः ॥

॥ मन्त्रादिवद्वाऽविरोधः ॥ 2

408 क्रत्वङ्गभूतमन्त्रादेः एकशाखोदितस्य च ।
सर्वशाखासु सम्बन्ध(:) इवात्राप्यविरोधिता ॥

105 भूमज्यायस्त्वाधिकरणम् ।

॥ भूम्नः क्रतुवज्ज्यायस्त्वं तथा हि दर्शयति ॥ 1

409 वैश्वानरे समस्तस्य ज्यायस्त्वं क्रतुवद्भवेत् :
व्यस्तस्य मूर्धा त इति निषेधं श्रुतिराह हि ॥

106 शब्दादिभेदाधिकरणम् ।

॥ नानाशब्दादिभेदात् ॥ 1

410 शब्दान्तराभ्याससंख्यागुणप्रकरणान्तरैः ।
नामधेयेन चाप्यत्र विद्या(:) नानेति निश्चितम् ॥

107 विकल्पाधिकरणम् ।

॥ विकल्पोऽविशिष्टफलत्वात् ॥ 1

411 उपासके बिकल्पस्स्यात् विद्यानां न समुच्चयः ।
विद्यान्तरस्य वैफल्यात्तुल्यानन्तफलत्वतः ॥

॥ काम्यास्तु यथाकामं समुच्चीयेरन्न वा पूर्वहेत्वभावात् ॥ 2

412 तथाऽनन्तफलाभावात फलाधिक्येच्छया क्वचित् ।
काम्यानां तु समुचच्चित्य विकल्पाद्वाप्यनुष्ठितिः ॥

108 यथाश्रयभावाधिकरणम् ।

॥ अङ्गेषु यथाश्रयभावः ॥ 1

413 उद्गीथादिष्वाश्रितानां उपास्तीनां यथाश्रयम् ।
क्रत्वङ्गभावो गोदोह इव तत्र फलाश्रुतेः ॥

॥ शिष्टेश्च ॥ 2

414 तमुद्गीथमुपासीत चेति तत्र विधानतः ।
क्रत्वङ्गत्वप्रतीत्या च तदुपादाननित्यता ॥

॥ समाहारात् । 3

415 अन्येन च समाधानं उद्गीथस्यानुपासने ।
ब्रुवन्ती च श्रुतिर्मानं नियमेन तदन्वये ॥

॥ गुणसाधारण्यश्रुतेश्च ॥ 4

416 ओमित्युद्गायतीत्यादिश्रुत्या तु प्रणवं प्रति ।
गुणभूतोपासनस्य सर्वत्रान्वयदर्शनात् ॥

॥ न वा तत्सहभावाश्रुतेः ॥ 5

417 उपासनस्यानियमः क्रत्वङ्गत्वाश्रुतेरिह ।
यदेव विद्ययेत्यादिफलान्तरविधानतः ॥

॥ दर्शनाच्च ॥ 6

418 उपासनस्यानियमं दर्शयत्येव वेदवाक् ।
एवंविद्धवै ब्रह्मेति ब्रह्मध्यानश्रुतेर्बलात् ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यामलिकायां तृतीयाध्यायस्य
तृतीयः पादः ॥

## ॥ अथ तृतीयाध्यायस्य चतुर्थः पादः ॥

### 109 पुरुषार्थाधिकरणम् ।

॥ पुरुषार्थोऽतश्शब्दादिति बादरायणः ॥ 1

419 पुरुषार्थं तु विद्यातः मन्यते बादरायणः ।
ब्रह्मवित्परमाप्नोतीत्यादिस्पष्टार्थशब्दतः ॥

॥ शेषत्वात्पुरुषार्थवादो यथान्येष्विति जैमिनिः ॥ 2

420 विद्यायाः कर्मशेषत्वात् स्तुतिमात्रं फलश्रुतिः ।
यथा हि द्रव्यसंस्कारकर्मस्विति तु जैमिनिः ॥

॥ आचारदर्शनात् ॥ 3

421 यक्ष्यमाणो ह वै चेति ह्याचारस्यापि दर्शनात् ।
विद्यायाः कर्मशेषत्वं भवतीति च चोद्यते ॥

॥ तच्छ्रुतेः ॥ 4

422 यदेव विद्यया चेति स्पष्टश्रुत्यापि कर्मसु ।
विनियोगाच्च विद्यायाः कर्माङ्गत्वं तु सिद्ध्यति ॥

॥ समन्वारम्भणात् ॥ 5

223 तं विद्याकर्मणी चेति ह्येकस्मिन् कर्मविद्ययोः ।
साहित्यदर्शनाच्चापि विद्यायाः कर्मशेषता ॥

॥ तद्वतो विधानात् ॥ 6

424 गुरोर्वेदमधीत्येति श्रुत्या विद्यावतस्त्विह ।
कर्मानुष्ठानविधितः कर्माङ्गं वेदनं भवेत् ॥

॥ नियमात् ॥ 7

425 कुर्वन्नेवेह कर्माणीत्यात्मवित्पुरुषस्य हि ।
आयुषो नियमात्कर्मण्यतस्स्यात्कर्मशेषता ॥

॥ अधिकोपदेशात्तु बादरायणस्यैवं तद्दर्शनात् ॥ 8

426 विद्यातः पुरुषार्थस्तु बादरायणसंमतः ।
जीवाधिकपरस्यैव वेद्यत्वाच्च तथा श्रुतेः ॥

॥ तुल्यं तु दर्शनम् ॥ 9

427 प्रधानत्वेऽपि विद्यायाः तुल्यमाचारदर्शनम् ।
यक्ष्यमाणो ह वै चेति विद्याङ्गत्वात्सुसङ्गतम् ॥

॥ असार्वत्रिकी ॥ 10

428 न सर्वविद्याविषया यदेवेति श्रुतिर्हि सा ।
उद्गीथविषयैवेति विद्याया(:) नाङ्गता भवेत् ॥

**॥ विभागश्शतवत् ॥** 11

429 पृथक् स्वस्वलायैते पुरुषं ह्यनुगच्छतः ।
क्षेत्रार्थं चापि रत्नार्थं द्विशतोक्तौ यथा भवेत् ॥

**॥ अध्ययनमात्रवतः ॥** 12

430 श्रुतिर्वेदमधीत्येति विद्यावत्पुरुषं न हि ।
केवलाधीतिनं प्राह नातः कर्माङ्गता मता ॥

**॥ नाविशेषात् ॥** 13

431 विद्वत्स्वेवेति नियमः कर्मणो नाविशेषतः ।
अङ्गत्वेन फलार्थं वा चोपपत्तिर्हि दृश्यते ॥

**॥ स्तुतयेऽनुमतिर्वा ॥** 14

432 कुर्वन्नेवेह कर्माणीत्यत्रापि स्तुतये भवेत् ।
कर्मानुमतिरेवेति नाङ्गं विद्या तु कर्मणः ॥

**॥ कामकारेण चैके ॥** 15

433 किं प्रजया करिष्याम(:) इति गार्हस्थ्यकर्मणाम् ।
कामकारेण चैके तु त्यागमिच्छन्ति शाखिनः ॥

**॥ उपमर्दं च ॥** 16

434 क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ।
इत्येवं कर्मणां नाशो विद्ययेति च दर्शनात् ॥

**॥ ऊर्ध्वरेतस्सु च शब्दे हि ॥** 17

435 ऊर्ध्वरेतस्सु विद्याया(:) दर्शनात्तत्र कर्मणाम् ।
अभावाच्चापि नाङ्गत्वं शब्दे तेऽप्याश्रमाः स्थिताः ॥

**॥ परामर्शं जैमिनिरचोदनाच्चापवदति हि ॥** 18

436 धर्मस्कन्धेष्ववैधत्वात्स्तुत्यर्थं तस्य जैमिनिः ।
अनुवादं तु मनुते वीरहेत्यपवादतः ॥

**॥ अनुष्ठेयं बादरायणस्साम्यश्रुतेः ॥** 19

437 गृहस्थाश्रमसाम्याच्चाप्यनुष्ठेयं बुधैरिह ।
अन्याश्रमं श्रुतिश्चाह धर्मस्कन्धास्त्रयस्त्विति ॥

**॥ विधिर्वा धारणवत् ॥** 20

438 धर्मस्कन्धास्त्रय इति विधिरेवोर्ध्वरेतसाम् ।
उपरि हि धारयतीत्यपूर्वविधिवद्भवेत् ॥

110 स्तुतिमात्राधिकरणम् ।

**॥ स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् ।** 1

439 उद्गीथोक्तौरसतम(:) इति तत्स्तुतिरेव हि ।
इति चेन्न ह्यपूर्वत्वात् दृष्टिरेव विधीयते ॥

**॥ भावशब्दाच्च ॥** 2

440 उपासीतोद्गीथमिति तत्रैव विधिशब्दतः ।
स्तुतिमात्रं न चैवात्र दृष्टिरेव विधीयते ॥

111 पारिप्लवार्थाधिकरणम् ।

**॥ पारिप्लवार्था(:) इति चेन्न विशेषितत्वात् ॥** 1

441 प्रतर्दनो ह वै चेति स्युराख्यानानि यानि च ।
तानि पारिप्लवार्थानीति चेन्नान्यनियन्त्रणात् ॥

**॥ तथा चैकवाक्योपबन्धात् ॥** 2

442 विद्याविद्ध्येकवाक्यत्वसंबन्धाच्चापि केवलम् ।
सोऽरोदीदितिवच्चापि विद्याविध्यर्थता मता ॥

112 अग्नीन्धनाद्यधिकरणम्

**॥ अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा ॥** 1

443 विद्यावत्त्वश्रुतेरेव विद्या स्यादूर्ध्वरेतसाम् ।
अग्न्याधानादिरहितेत्यवगन्तुं च शक्यते ॥

113 सर्वापेक्षाधिकरणम् ।

**॥ सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् ॥** 1

444 कर्मवत्सु गृहस्थेषु सर्वापेक्षा हि सा भवेत् ।
यज्ञेनेति श्रुतेरेव गमनायाश्ववद्भवेत् ॥

114 शमदमाद्यधिकरणम् ।

**॥ शमदमाद्युपेतस्स्यात् तथापि तु तद्विधेस्तदङ्गतया तेषामवश्यानुष्ठेयत्वात् ॥** 1

445 कर्मसु व्यापृतोऽपि स्याद्युतश्शान्तिदान्तिभिः ।
विद्याङ्गता विधानाच्चाप्यनुष्ठेयत्वदर्शनात् ॥

115 सर्वान्नानुमत्यधिकरणम् ।

**॥ सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् ॥** 1

446 सर्वान्नानुमतिः प्राणविदः प्राणात्यये भवेत् ।
ब्रह्मविद्यावतां चापि तथैवान्यत्तद्दर्शनात् ॥

**॥ अबाधाच्च ॥** 2

447 आहारशुद्धाविति च शुद्धाहारविधेर्बलात् ।
अबाधाय च तस्यापि तत्प्राणात्यय इष्यते ॥

**॥ अपि स्मर्यते ॥** 3

448 प्राणसंशयमापन्नो योऽन्नमत्ति यतस्ततः ।
इति स्मृत्यापि तेषां वै परमापदि चोच्यते ॥

**॥ शब्दश्चातोऽकामकारे ॥** 4

449 सुरां तु न पिबेच्चेति शब्दश्चापि निषेधति ।
कामकारं सुरापानं ततः प्राणात्यये स्मृतम् ॥

116 विहितत्वाधिकरणम् ।

**॥ विहितत्वाच्चाश्रमकर्मापि ॥** 1

450 यावज्जीवमिति श्रुत्या केवलाश्रमिणामपि ।
अनुष्ठेयानि कर्माणि विहितत्वाद्भवन्ति हि ॥

॥ सहकारित्वेन च ॥ 2

451 विद्योत्पत्त्युपकारेण सहकारितया च तत् ।
अनुष्ठेयं कर्म सर्वं इति श्रुत्यापि दर्शितम् ॥

॥ सर्वथापि त एवोभयलिङ्गात् ॥ 3

452 यज्ञादेरुभयत्रैव विनियोगेऽपि नो भिदा ।
उभयत्र तदेवेति प्रत्यभिज्ञानलिङ्गतः ॥

॥ अनभिभवञ्च दर्शयति ॥ 4

453 धर्मेण पापमित्यादिश्रुतिर्विविधपाप्मभिः ।
विद्यायास्त्वनभिभवं धर्ममूलं ब्रवीति च ॥

117 विधुराधिकरणम् ।

॥ अन्तरा चापि तु तद्दृष्टेः ॥ 1

454 अनाश्रमाणामपि च ब्रह्मविद्या विधीयते ।
रैक्कभीष्मादिकानां तु विद्यानिष्ठत्वदर्शनात् ॥

॥ अपि स्मर्यते ॥ 2

455 जप्येनापि च संसिद्ध्येत् इति स्मृत्या च तेष्वपि ।
विद्यायाश्चापि संसिद्धेः अधिकारो भवेदिति ॥

॥ विशेषानुग्रहश्च ॥ 3

456 आश्रमानुक्तधर्मेण विद्यानुग्रहदर्शनात् ।
तपसा ब्रह्मचर्येण विद्यया चेति च श्रुतेः ॥

॥ अतस्त्वितरज्ज्यायो लिङ्गाच्च ॥ 4

457 अनाश्रमत्वादितरत ज्यायो धर्मेण भूयसा ।
अनाश्रमी न तिष्ठेत्तु दिनमेकमिति स्मृतेः ॥

118 तद्भूताधिकरणम् ।

॥ तद्भूतस्य तु नातद्भावो जैमिनेरपि नियमात् तद्रूपाभावेभ्यः ॥ 1

458 नैष्ठिकस्यनातद्भावो पुनर्नेयादिति श्रुतेः ।
नियन्त्रणाच्च तद्रूपाभावेभ्य(ः) इति जैमिनिः ॥

॥ न चाधिकारिकमपि पतनानुमानात्तदयोगात् ॥ 2

459 अधिकारानुरूपं च प्रायश्चित्तं न विद्यते ।
आरूढो नैष्ठिकमिति स्मृत्या च तदभावतः ॥

॥ उपपूर्वमपीत्येके भावमशनवत्तदुक्तम् ॥ 3

460 उपपातकमाहुस्तत् प्रायश्चित्तं तु विद्यते ।
मधुभोजनतुल्यत्वात् तेषां विद्या तु वर्तते ॥

॥ बहिस्तूभयथापि स्मृतेराचाराच्च ॥ 4

461 पातकित्वेऽप्युभयथा बहिर्भूतास्तु ते सदा ।
आचाराच्चापि दृश्यन्ते शुद्धा(ः) अपि च निष्कृतेः ॥

119 स्वाम्यधिकरणम् ।

॥ स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः ॥ 1

462 उद्गीथोपासनं चात्र यजमानस्य युज्यते ।
कर्तर्येव फलश्रुत्येत्यात्रेयो दहरादिवत् ॥

॥ आर्त्विज्यमित्यौडुलोमिस्तस्मै हि परिक्रियते ॥ 2

463 ऋत्विग्भिः कार्यमित्येव ह्यौडुलोमिमुनेर्मतम् ।
साङ्गानुष्ठितये चैव तेषां वरणमिष्यते ॥

120 सहकार्यन्तरविध्यधिकरणम् ।

॥ सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तद्वतो विध्यादिवत् ॥ 1

464 यज्ञदानादिवन्मौनं विद्यावत्सु विधीयते ।
प्रकृष्टं मननं शब्दाद्बाल्यपण्डित्ययोः परम् ॥

॥ कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः ॥ 2

465 गृहिणा चोपसंहारः स खल्वेवमिति श्रुतौ ।
सर्वेषामपि विद्याया(ः) भावात्तेषां च लक्षकः ॥

**॥ मौनवदितरेषामप्युपदेशात् ॥** 3

466 मुनौ भैक्षादिनिर्देशोऽप्यन्येषामुपलक्षकः ।
यज्ञादोनां च धर्माणाँ उपदेशादिति स्थितम् ॥

121 अनाविष्काराधिकरणम् ।

**॥ अनाविष्कुर्वन्नन्वयात् ॥** 1

467 अनाविष्करणमेव महिम्नो बाल्यमुच्यते ।
विद्यया चान्वयात्तस्य तथान्यस्याप्यनन्वयात् ॥

122 ऐहिकाधिकरणम्

**॥ ऐहिकमप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् ॥** 1

468 अप्रस्तुते प्रतीघाते तदैव ध्यानमैहिकम् ।
अन्यथा त्वन्यदैवेति ध्यानोत्पत्तायनिर्णयः ॥

123 मुक्तिफलाधिकरणम् ।

**॥ एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः ॥** 1

469 एवं मुक्त्यर्थविद्याया(:)उत्पत्तावप्यनिर्णयः ।
ब्रह्मनिष्ठापचारादेरभावे तदवस्थितेः ॥

इति ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां तृतीयाध्यायस्य
चतुर्थः पादः ॥

इति श्रीमद्वेदमार्गेत्यादिबिरुदावळीमेदुराणां श्रीमदहोबिलमठ-
दिव्यास्थाने चतुरधिकचत्वारिंशत्संख्यासंख्यातपट्टाभिषेक-
परिमण्डितानां श्रीवणशठकोप श्रीवेदान्तदेशिकयतीन्द्र-
महादेशिकानां कृतिषु ब्रह्मसूत्रार्थपद्यमालिकायां
तृतीयाध्यायः ॥

# பிருஹ்மவித்யா 5ம் பாகம்

# ஸ்ரீமத் ராமானுஜ பாஷ்யே

## மூன்றாவது அத்யாயம்

## அதிகரண ஸூத்திர எண்ணிக்கை

### முதற் பாதம்-வைராக்ய பாதம்

| | | ஸூத்ரங்கள் |
|---|---|---|
| 1. | ததந்தரப்ரதிபத்யதி கரணம் | 7 |
| 2. | க்ருதாத்யயாதி கரணம் | 4 |
| 3. | அநிஷ்டாதிகார்யாதி கரணம் | 10 |
| 4. | தத்ஸ்வாபாவ்யாபத்யதி கரணம் | 1 |
| 5. | நாதிசிராதி கரணம் | 1 |
| 6. | அந்யாதிஷ்டிதாதி கரணம் | 4 |
| | மொத்தம் | 27 |

### இரண்டாம் பாதம்-உபயலிங்க பாதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸந்த்யாதி கரணம் | 6 |
| 2. | ததபாவாதி கரணம் | 2 |
| 3- | கர்மாநுஸ்மிருதிசப்த வித்யதி கரணம் | 1 |
| 4. | முக்தாதி கரணம் | 1 |
| 5. | உபயலிங்காதி கரணம் | 15 |
| 6. | அஹிகுண்டலாதி கரணம் | 4 |
| 7. | பராதி கரணம் | 7 |
| 8. | பலாதி கரணம் | 4 |
| | மொத்தம் | 40 |

### மூன்றும் பாதம்-குணோப ஸம்ஹார பாதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸர்வவேதாந்த பிரத்யயாதி கரணம் | 5 |
| 2. | அந்யதாத்வாதி கரணம் | 4 |
| 3. | ஸர்வாபேதாதி கரணம் | 1 |
| 4. | ஆநந்தாத்யதி கரணம் | 7 |
| 5. | கார்யாக்யாநாதி கரணம் | 1 |
| 6. | ஸமாநாதி கரணம் | 1 |
| 7. | ஸம்பந்தாதி கரணம் | 3 |
| 8. | ஸம்ப்ருத்யாதி கரணம் | 1 |
| 9. | புருஷவித்யாதி கரணம் | 1 |
| 10. | வேதாத்யதி கரணம் | 1 |

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமானுஜாய நம:  ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:
ஸ்ரீமத் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீவேதாந்த தேசிகயதீந்திர மஹாதேசிகாய நம:

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ।।

# பிருஹ்ம வித்யா

## பிரும்ம வித்யை – ஐந்தாம் பாதம்

*ஸ்ரீ பகவத் ராமானுஜ விரசிதே ஸ்ரீ சாரீரக மீமாம்ஸ பாஷ்யே*
*3ம் அத்யாயம் – முதற்பாதம் (பஞ்சாக்னி வித்யா-சா.2*

### ததந்தரப்ரதி பத்த்யதிகரணம் (3-1-1)

**ஸூத். तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् (3-1-1)**

**ததந்தரப்ரதிபத்தெள ரம்ஹதிஸம்பரிஷ்வக்த:**
**ப்ரஸ்நநிரூபணாப்யாம் (3-1-1)**

ததந்தரப்ரதிபத்தெள - தேஹாந்திரத்தை அடையச் செல்லும்போது, ஸம்பரிஷ் வக்த:-(ஸூக்ஷ்ம சரீரத்தோடு) கூடியவனாகவே; ரம்ஹதி-ஜீவன் செல்கிறான். பிரஸ்ந நிருபணாப்யாம் - கேள்வி பதில்களிலிருந்து இது தெரிய வருகிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் பஞ்சாக்னி வித்யை பிரகரணத்தில் காணலாம்.

நான்கு அத்யாயங்கள் கொண்ட சாரீரக சாஸ்திரத்தில் முதல் இரண்டு அத்யாயங்களில் பிருஹ்ம ஸ்வரூபலக்ஷண விஷயத்தைப் பற்றி விளக்கம் செய்யப்பட்டது. இந்த மூன்றாம் அத்யாயத்தில் - முதற் அத்யாயத்தில் யேற்கனவே

லகு ஸித்தாந்தத்திலும் மற்றமுள்ள வித்யைகளிலும் ஓதப்பட்ட உபாஸநாத்மக பிருஹ்ம ஞானத்திற்கும் பிருஹ்மானுபவமாகிற அனுபவத்திற்கும் விஷயமாக்கி - பிருஹ்மத்தை அடையும் உபாயம் எனப்படும் உபாஸனு பக்தி பிரபத்தியையும் விளக்கி - விசாரிக்கப்படுகிறது. உபாயம் அதுவே தீர்க்க சரணுகதி என்பதாகும்-ஞான விகாஸம் - பரிபூர்ண பிருஹ்மானந்த அனுபவம். அந்த பிருஹ்மம் எப்படி உளது? அதே பிரகாரம் அனுபவிக்கும் உபாஸகன் எத்தகைய மனப்பான்மை, விவேகம் முதிர்ந்த ஞான தசையிலிருப்பவனுக - சொல்லப்படுவதாகும். பிருஹ்மத்தின் ஸ்வரூப நிரூபகதர்மங்களும் நிரூபித ஸ்வரூப தர்மங்களும்-அதே பிரகாரம் உபாஸகனின் அதிகார விசேஷமும் - தன்னைப் பக்குவப் படுத்திக் கொண்டு - முக்த தசையில் அனுபவிக்கப் பெறும் பரி பூர்ண பிருஹ்மானுபவத்திற்கு இங்கு ஸாதனம் - ஸாதந அனுஷ்டானம் பற்றியே விளக்கமாகும். (இதற்குப் பிறகு நான்காம் அத்யாயத்தில் உபேயம்-அவன் அடையும் புருஷார்த்தம் எத்தகையது என்பது விளக்கப்படுகிறது எனக் கொள்ளவும்.)

முன்பு கூறப்பட்ட இரண்டு அத்யாயங்களில்-பரமாத்மா ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணன் நிகில யேக ஜகத்காரணம்-என்றும்; நிரஸ்த நிகிலதோஷ கந்தம்; அபரிமித உதாரகுண ஸாகரம் என்றும்; ஸகலேதர (பத்த முக்த நித்ய ஜீவர்கள் அசேதன பிரதானம் இத்யாதி) விலக்ஷணம்; பரப் பிருஹ்ம புருஷோத்தமன் மஹா லக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணன் எனப்படும் ஐக்ய மிதுனம் ஸதாநியானிக்கப்பட வேண்டியவர்; ஸகல காரண வஸ்து; முமுக்ஷுக்களால் மிக்க சிரமப்பட்டு, சிரத்தையுடன் உபாஸிக்கப்படவேண்டிய பர தேவதை: அவரையே ஸகல வேதாந்தங்களும் பிரதிபாதிக்கின்றன என அர்த்தம்: ஸ்மிருதி, நியாய விரோத பரிஹாரமும் பரபக்ஷ நிரஸனமும், வேதாந்த வாக்யங்களுக்குள்ள ஸமன்வயத்வமும்-பரஸ்பர விரோத பரிஹாரமும் செய்யப்பட்டு; தர்க்க ஹேதுக்களால் ஸர்வம் பிருஹ்ம காரியம் என்பதும் ஸ்தாபிதமாயிற்று, ஆகவே முதல் இரண்டு அத்யாயங்களில் பிருஹ்மத்தின் ஸ்வரூப நிரூபணம் (ஸ்வரூப நிரூபக தர்மங்கள், நிரூபிதஸ்வரூப தர்மங்களும் - பிருஹ்மம் ஸித்த வஸ்துவாதலால் (எப்பொழுதும்

இருப்பதால்) அதைப் பற்றியும் பிரதிபாதனம் செய்யப்பட்ட தாகும். சாரீரக சாஸ்திரத்திலுள்ள பின் பாதியான 3ம், 4ம் அத்யாயங்களில் பிருஹ்ம பிராப்திக்கு உபாயத்தையும் - அத்துடன் கூடிய ப்ராப்தி பிரகாரம் எல்லாம (உபேயம்- புருஷார்த்தம் எல்லாம்) சொல்லப்படுவதாகும். ஆகவே இந்த மூன்றும் அத்யாயத்தில் உபாயபூத உபாஸன விஷயம் சிந்திக்கப்படுகிறது. உபாஸனத்தை ஆரம்பிப்பதற்கு ஹேது- அதுவே உபாயமாகிறது- அது யாது? எப்படி அடைய முடியும்? அதற்கு விஷய வைராக்யம் யேற்பட வேண்டும். (மேல் சொல்லப்பட்ட பூம வித்யையில் உபாஸகனுக்கு ஜகத் ஐஸ்வர்ய (விபூதி) விசிஷ்டமானதும், அநவதிகாதிஸய சுகரூபமான பிருஹ்மானுபவம் யேற்படுவதால், அவன் பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றையும் பார்ப்பதில்லை-வஸ்து இருப்பதாகப் பார்ப்பதில்லை. அவன் சுகத்தைத் தவிர துக்கத்தையும் பார்ப்பதில்லை. (அதாவது தியானிப்பதில்லை என்று அர்த்தம்) அதுபோல ஒருவன் ஆத்மாரதியாக வேண்டும்; அப்போது ஆனந்தமயனுகி விடுகிறுன். அல்லவா? அத்தகைய ஆனந்தத்தை அடைவதற்கு-அவனுக்கு பிருஹ்மத்தைத் தவிர வேறு விஷயங்களில் ஆசை குறைந்து விடவேண்டும்.) ஆகவே உபாஸகனுக்குத் தான் அடையவேண்டிய பிருஹ்ம பிராப்தியில் மிக்கத் தீவிரமான ஆசையும், பிருஹ்ம வ்யதிரிக்த (வேறுன) வஸ்துக்களில் வெறுப்பும் வைராக்யமும் யேற்படவேண்டும் - ॥ [illegible] ॥ அதை அவன் பெறுவதற்கு முதல் அத்யாயம்-முன் இரண்டு பாதங்களில் காட்டப்பட்டது-ஜீவனுக்கு லோகாந்தரங்களில் சஞ்சாரம் செய்வது ஜாக்ரத-ஸ்வப்ன-சுஷீப்தி வேளைகளிலும் மூர்ச்சாவஸ்தையிலும்-இந்த வேளைகளில் ஜீவனுக்கு யேற்படும் தோஷங்களும் அம்மாதிரி தோஷங்கள் பிருஹ்மத்திற்கு இல்லாமலிருப்பதும், அந்த பரபிருஹ்மத்திற்கே உரித்ததான கல்யாண குணுகரத்வம்-எல்லாம் முதல் இரண்டு அத்யாயங்களில் சொல்லப்பட்டதாகும் (ஜாக்ரதையில் ஜீவனுக்குப் பல உலகங்களில் சஞ்சரித்தலும், ஸ்வப்னத்திலும் சஞ்சாரம் யேற்படுவதும் - சுஷீப்தியிலும் உறங்கும் ஜீவனுக்கு ஏற்படும் அனுபவங்களும் சுருதிகளில் சொல்லியபடி யேற்படுவதாகும். அதாவது பாஞ்ச பௌதிகமான சரீரம் இறந்த பிறகு நாசமடைந்து பூதசூக்ஷ்மங்களால் உண்டாக்கப்பட்ட சூக்ஷ்ம சரீரத்தோடு ஜீவன் தேசாந்தரத்திற்குச் சென்று

பிறகு சூக்ஷ்ம சரீரத்துடனே திரும்பி வந்து வேறு சரீரத்தை அடைகிறுன். தானதர்மம் அளித்தவன்-பூர்த்தாதி (கிணறு வெட்டுதல் குளம் வெட்டுதல் போன்ற) புண்ய கர்மாக்களைச் செய்தவன் புண்யலோகங்களுக்கும் ஸ்வர்க்கத்திற்கும் செல்கிறுன். யாகம் யக்ஞம் செய்தவர்கள் செல்லவேண்டிய தேசம்-பிறகு திரும்பிவரும் மார்க்கம்-தேவமார்க்கம்-பித்ரு மார்க்கம் எல்லாம் இங்கு சொல்லப்படுவதாகும்.)

இங்கே இந்த முதற் அதிகரணத்தில் தேகத்தை விட்டு வெளிக் கிளம்புகிற இந்த ஜீவன்-ஒரு தேகத்தை விட்டு இன்னொரு தேகத்தை மீண்டும் அடையும்வரை-பூத சூக்ஷ்மமான தேகத் தோடு சஞ்சரிக்கிறுன்-பூதசூக்ஷ்மங்களால் உண்டாக்கப்பட்ட சரீரத்தைத் தழுவிக் கொண்டவனுக, (संपरिष्वक्त एव) செல் கிறுனு-அல்லது இல்லையா? எங்கு எங்கு ஜீவன் செல்கிறுனே, அங்கு அங்கு பூத சூக்ஷ்மங்கள் அவனுக்கு சுலபமாக அகப்படு கின்றன; இல்லை - ஜீவன் பூத சூக்ஷ்மங்கள் இல்லாதபடி (असंपरिष्वक्तो) செல்லுகிறுனு? (அதாவது ஸ்வர்க்கலோகாதி பலன் களை அனுபவிக்க-பூர்வ தேகத்தில் நின்று கடைந்து எடுக்கப்பட்ட பூத சூக்ஷ்மங்களுடன் (புரியஷ்டகத்துடன்)போகிறுன் என்று சுருதி சொல்வதாலே ஜீவன் பூதசூக்ஷ்ம புலன்களுடன் செல்கிறுன் என்பதாகும். பிற்பாடு சூத்ரக்காரரே சொல்லப் போகிறுர்-பூர்வ பக்ஷியின் பக்ஷத்தையும்-அதை நிரஸனம் செய்யப்பட வேண் டியதையும் சொல்வார்.)

அவ்விதமிருக்க-சூத்ரக்காரரே ஸித்தாந்தமாகச் சொல்கிறுர்- **तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः - इति.** போன 2ம் அத்யாயத்தில் கடைசியான ஸம்ஞா மூர்த்திக்லுப்தி அதிகரணத்தில் மூர்த்தி சப் தத்தால் தேகம் சொல்லப்படுகிறது. அந்த தேகமே இந்த சூத்ரத்தி லுள்ள तत् - என்பதால் சொல்லப்படுகிறது. இந்த தேகத்தின் அதிகாரியான ஜீவன் தேகாந்தரத்தை அடையும்போது ஸம்பரிஷ் வக்த:-பூதசூக்ஷ்மங்களுடன் சேர்ந்தே; ரம்ஹதி-போகிறுன். ஏனெனில் பிரஸ்ன பிரதிவசனங்களாலே பூதசூக்ஷ்மங்களோடு சேர்ந்து போகிறுன் என்று அறியப்படுகிறது. கேள்வி பதில் என்பது பஞ்சாக்னி வித்யையில் ப்ரவாஹண மஹாராஜாவுக்கும்- ஆருணி என்பவருக்கும் நடந்த ஸம்வாதத்திலே என்று அர்த்தம்.

சாரீர மீ. சூத். 2-4-19ல் संज्ञामूर्तिक्लृप्तिः—நாமரூப வ்யாகரணம் செய்வது பரம்பொருளின் காரியமாகும்-சரீரம் என்கிற பெயர் ஏற்படுவது திரிவிருத்கரணம்-அந்த பரம்பொருளே செய்வதாக சுருதி ஓதுகிறது. இங்கே मूर्ति சப்தத்தால் தேகம் காட்டப்படுகிறது அந்த தேகமே तच्छब्देन காட்டப்படுகிறது. तदन्तरप्रतिपत्तौ - தேஹாந்திரங்களில் (ஒரு தேகத்திலிருந்து இன்னொரு தேகம் செல்லும்போது) ஜீவன் சஞ்சரிக்கும்போது பூத சூக்ஷ்மங்களால் தழுவப்பட்டுச் செல்கிறான். रंहति - என்பதற்கு गच्छति என்று அர்த்தம். எப்படி? प्रश्ननिरूपणाभ्याम् - கேள்வி பதில்களிலிருந்து) (பஞ்சாக்னி வித்யையைப் பற்றிய கேள்வி பதில்களிலிருந்து பஞ்சாக்னி வித்யையில் இந்த விதமாக கேள்வி பதில்கள் ஓதப்படுகின்றன. சாந்தோக்ய உபநிஷத்தில் ஐந்தாவது பிரபாடகம்-3ம் கண்டம் முதல் 10 வரை). இதில் ஸ்வேத கேதுவின் பிதா அருணி என்பவர் பாஞ்சால அரசனான பிரவாஹணனை அணுகி, பஞ்சாக்னி வித்யையைச் செய்த உபாஸகன் அடையும் தேசத்தை வினவ; அதற்குப் பதில்களாக-புநராவிருத்தி பிரகாரம் (பூமிக்குத் திரும்பி வருதலைப்பற்றியும்) தேவயான பித்ருயான மார்க்கங்களையும்-இன்னும் சிலர் இந்த லோகங்களை அடையாமலே சம்சாரத்தில் உழலுபவர்களாகவும்; இவைகளை விஷயமாகக் கொண்டு, கேள்வி மஹாராஜா அருணி என்பவரைக் கேட்டான்.

(இப்போது பஞ்சாக்னி வித்யை கீழ் சொல்லப்படும்). அதில் ஐந்தாவது கேள்வியை அரசன் கேட்டான்-பஞ்சம்ய மாஹூதாவாப: புருஷவாஸயோ பவந்தி-அப்பானது (ஜலம்) ஐந்தாவது ஆஹூதியில் புருஷன் என்ற பெயரை எப்படி அடைகிறது? (ஐந்தாவது ஆஹூதியில் மனிதனாகப் பிறப்பது என்பது தெரியுமா?) அரசன் ஸ்வேத கேதுவின் பாட்டனான அருணியைக் கேட்க அவர் ஒன்றும் தெரியாது என்று சொன்னார். அரசனே அவருக்கு பஞ்சாக்னி வித்யையைப் பற்றிய இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லி அந்த வித்யையை உபதேசித்தான் - அது பஞ்சாக்னி வித்யை-இதில் ஐந்து அக்னிகளான-ஸ்வர்க்கம், மேகம், பிருத்வி-புருஷன்-ஸ்திரி என்பவை. இவற்றை அக்னியாகக் கற்பனை செய்து-சிரத்தையோடு புண்யகர்மத்தைச் செய்தவன் மரண

மடைந்ததும், அவனும் (ஜீவனும்) உடலினின்று பிராண இந்திரியங்களுடன் சேர்ந்துள்ள பூத சூக்ஷ்மத்துடன் தழுவப்பட்டவனாக, முதலில் ஸ்வர்க்கம் என்கிற அக்னியில் ஹோமம் செய்யப்படுகிறது (அதாவது இஷ்டா பூர்த்தாதி கர்மாக்களைச் செய்தவன் செல்லும் ஸ்வர்க்கம் கர்ம பலனாகும்) அங்கு ஸ்வர்க்கத்தில் போக சரீரம் எடுத்து-போகம் அனுபவித்து விட்டு பூத சூக்ஷ்மத்துடன் மேகத்தில் பிரவேசிக்கிறான்-பிறகு மழையினால் பூமியில் தள்ளப்பட்டு, பவதானியம் முதலான ஆகாரத்தினுள் புகுந்த; பிறகு புருஷ உடலில் ரஸமாகி; புருஷனின் உடலிலிருந்து ஸ்திரியின் கர்ப்பத்தில் ரேதஸ்ஸை - ஐந்தாவது ஆஹீதியை ஐந்தாவது அக்னியாகிற பெண்ணின் கர்ப்பத்திலே ஹோமம் செய்ய - அந்த ஆஹீதியே புருஷ வடிவம் கொண்டு - பத்து மாதங்கள் கழிந்த பிறகு பிரஜையாகப் பிறக்கிறது. இப்படி ஆத்மாவை உடல் புலன்கள் எல்லாவற்றையும் விட வேறானதாக அறிந்து உபாஸிப்பவர் மற்றும் அரண்யத்தில் (அந்தணராய் கைவல்ய பலனை விட்டு) சிரத்தையுடன் பிருஹ்மத்தை உபாஸிப்பவரும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே பிருஹ்மத்தை பெறுகிறார்கள் இந்த மார்க்கம் தேவயானமார்க்கமாகும். அர்ச்சிராதிகதி இதற்கு சொல்லப்படுகிறது- அக்னி பகல் சுக்லபக்ஷம், வருஷம், சூர்யன், சந்திரன், மின்னற் புருஷன் என்று சொல்லி (அவனை அமானவன் என்று சொல்லி) அந்த அமானவனே ஜீவனை பிருஹ்மத்தினிடம் சேர்க்கிறான்-அடைவிக்கிறான் என்றனன். இஷ்டாபூர்த்தி-ஆலயம் கட்டுவது-தான தர்மங்களைச் செய்தல் ஆகிற புண்யகர்மாக்கள் பித்ருயான மார்க்கமாக ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் செல்கின்றன-இதற்கு பித்ருயான மார்க்கம் எனப் பெயர். இம் மார்க்கத்தில் புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயனம், பித்ருலோகம்-ஆகாசம்-சந்திரன் என்பதாகும்- இதில் சென்று திரும்பி வரும் ஜீவன் இந்த தூமயான புகை மார்க்கத்தின் வழியாகத் திரும்புகிறான்-ஆகாசம் வாயு புகை மேகம் மழை ஒஷதிகள் ஒஷதிகளிலிருந்து சரியான படி புருஷனிடம் போய்ச் சேறுவது வெகுவாகத் தாமதிக்கும். அவனவன் கர்மாக்களின்படி கீழான ஜன்மங்கள் யேற்படுகின்றன.)

(இங்கே ஐந்தாவது ஆஹீதியில் அப்சப்தத்தாலே பூத சூக்ஷ்மங்கள் புருஷ சப்தா-ஆகின்றன-அந்நமானது ரேதஸ்ஸாக மாறி-ஸ்திரியாகிற ஐந்தாவது அக்னியில் இந்திரியங்கள்

ரேதஸ்ஸை ஆஹுதி செய்கின்றன. ரேதோரூபமான ஜலங்கள் (அப்புக்கள்-அதாவது பூத சூக்ஷ்மங்கள்) யோநியின் மூலமாக ஸ்திரியினிடத்தில் பிரவேசித்து பிரஜையாக மாறுகிறது-ஆகவே சூத்ரார்த்தம்-ஜீவன் (மரித்து இன்னொரு தேகத்தை அடையும் போது பூத சூக்ஷ்மங்களால் ஸம்பரிஷ்வக்த:-தழுவப்படுகிறான்-அவைகளுடன் சேர்ந்தே போகிறான்-திரும்பி வரும்போது அவைகளுடன் சேர்ந்தே வருகிறான்-இன்னொரு தேகத்தில் பிரவேசிக்கும் போது அவன் அவைகளுடன் சேர்ந்தே பிரவேசிக்கிறான். தேக ஆரம்பத்திற்கு அப்பைக் காரணமாகச் சொல்லிற்று சுருதி.)

ஸ்ரீ பாஷ்யம்:-

ஆகவே பிரவாஹணன் (அரசன்) அருணியையும் (அவருடைய பேரனை) ஸ்வேதகேதுவையும் கேட்டான் **वेत्थ यथा पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति** அப்பானது (பூதசூக்ஷமங்கள் - ஜலங்கள்) ஐந்தாவது ஆஹூதியில் புருஷன் என்ற பெயரை எவ்விதம் அடைகிறது-என்பதைத்தெரிந்து கொண்டிருக்கிறாயா? இந்த ஐந்தாவது கேள்விக்குப் பதிலாக ப்ரவாஹனன் ஸ்வர்க்கத்தை அக்னியாக கற்பித்து-உருவமாக அதில் ஆஹுதி செய்யப்படுவதாகவும் சொல்லி-சா.உ. 5-4-2ல் **तस्मिन्नेतस्मिन्नग्नौ देवाः श्रद्धांजुह्वति; तस्याआहुतेः सोमो राजा संभवति**—மேல் சொல்லப்பட்ட ஸ்வர்க்கமாகிற (த்யுலோகமாகிற) அக்னியில், தேவர்கள் (இங்கே முக்ய பிராணனும் இந்திரியங்களும்) ஸ்ரத்தையை (பூதஆக்ஷமங்கள் அடங்கிய சூக்ஷ்ம சரீரத்தை) ஆஹூதியாக அளிக்கிறார்கள்; அந்த ஆஹூதியிலிருந்து ஸோமம் என்கிற அரசன் கிளம்புகிறான் அதாவது, ஜீவனின் பிராணன்கள் (இந்திரியங்கள்) தேவர்கள் என்று அழைக்கப்பட்டு, ஸ்ரத்தையாகிற பூதசூக்ஷமங்களுடன் கூடிய ஜீவனை ஸ்வர்க்கமாகிற அக்னியில் ஹோம ஆஹூதி செய்கிறார்கள் சிரத்தையே "ஸோமன்" ராஜாவாகிறான் - அம்ருதமய தேஹ ருபத்துடன் பரிணமிக்கிறான். அதே பிராணன்கள் (இந்திரியங்கள்) அம்ருதமய தேகத்தை மேகத்தில் (பர்ஜன்யத்தில்) ஆஹூதியாக அளித்து-அதை அக்னியாக கற்பித்து ஆஹூதி செய்கிறார்கள்; அந்த மேகங்கள் (பர்ஜன்ய) அதனைப்ருதிவியாகிற அக்னியில் மழைமூலம் கீழே பூமியில் தள்ளுகிறார்கள். அந்த மழை பூமியில் அன்னத்தை உண்டாக்குகிறது. அந்த பிராணன்கள் அன்னத்தை புருஷனிடம்

(ஆண் புருஷனிடம்) தள்ளி ரேதஸ்ஸாக மாறும்படி உதவுகின்றன அந்த ரேதஸ் புருஷனால் ஸ்திரியாகிற பஞ்சம அக்னியில் விடப் பட்டு, அதன் பிறகு பிரஜை சரீரத்துடன் பிறக்கிறது. இந்த மாதிரி திரும்பத்திரும்ப வந்து கொண்டிருக்கிறது-ஜன்மசக்கரம், ஒவ்வொரு இடத்திலும் பூதசூக்ஷ்மங்கள் அவைகளேயே அப்பு எனச்சொல்லுகிறார்கள்- அவை மாறுதல்களை ஆங்காங்கே அடை கின்றன-என்று சொல்லிவிட்டு மீண்டும் சுருதி ஓதுகிறது-சா. உ. 5-9-பிரவாஹணன் சொல்லி முடிப்பதாக—इति तु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति அப்பானது (பூதஆக்ஷ்மங்கள்) ஐந்தாவது ஆஹுதியில் புருஷன் என்கிற பெயரைச் சொல்லக் கூடியதாக ஆகின்றன-என்று ஸமாதானத்தை உபதேசித்தான், ஆகவே பூதசூக்ஷ்மங்களின் சேர்க்கை ஜீவனுக்குச் சொல்லப்படுகிறது- அதனால் முன்பே சூக்ஷ்மமாகயிருந்த ஜலங்கள் (பூதசூக்ஷ்மங்கள்) அங்கங்கே ஆஹுதியாகச்சொல்லப்பட்டவை-அவைகளே ஸ்திரி கர்ப்பத்தில் புருஷசப்த வாச்யமாக ஆகின்றது. ஆகையால் கேள்வி பதில்களிலிருந்து தேஹஹேது பூதமான பூதசூக்ஷ்மங்களுடன் கூட ஜீவன் (ஒவ்வொரு தேகத்திலிருந்து இன்னொரு தேகத்திற்கு) செல்கிறான-அந்த பூதசூக்ஷ்மங்களே தேகம் உண்டாவதற்கு ஹேது பூதமாக விருக்கின்றன.

சரி-இவ்விதம் ஆட்சேபிக்கப்படலாம் - आपः पुरुषवचसः— ஜலங்கள் புருஷசப்த வாச்யமாக ஆகின்றன (சொல்லக்கூடிய தாக ஆகின்றன) ஜலங்களே புருஷாகார பரிணாமமடைவதற்கு உதவுகின்றன, அந்த ஜலங்களுடன் ஜீவனுக்குள்ள சம்பந்தமே ஜீவனுக்கு அவைளால் யேற்படும் பரிஷ்வங்கம் (தழுவதல்) காட்டப்படுகிறது. ஆகையால் கேள்விகேட்கப்படுகிறது - எப்படி எல்லா பூதசூக்ஷ்மங்களின் பரிஷ்வங்கம் (தழுவுதல்) ஜீவனுக்கு ஏற்படுகிறது? - இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார். (பரிணமிக்கிறது-என்பதற்கு சூக்ஷ்ம அவஸ்தையி லிருந்து ஸ்தூல சரீரத்தை உடையதாய் - புருஷ சரீரத்தில் இருக்கிற ஜீவனை புருஷன் என்கிறது - இங்கே அப்புதானே சேர்க்கை கொண்டதாக விருக்கிறது;(கேள்வி எல்லா பூதசூக்ஷ்மங் களோடும் சேர்ந்து போகிறான் என்று எப்படி சொல்லலாம்? ——— அளிக்கப்படுகிறது).

ஸூ. त्र्यात्मकत्वात्तु भूयस्त्वात् (3-1-2)

த்ரயாத்மகத்வாத்து பூயஸ்த்வாத் (do)

த்ரியாத்மகத்வாத் து (திருவிருத் கர்ணப்ரகிரியையாலே, ஒவ்வொரு பூத சூக்ஷ்மமும்) அப்புதீ பூமி ஆகிற மூன்று பூதங்களையும் சொல்லயிருப்பதாலே, பூதசூக்ஷ்மங்கள் அனைத்துமே (வாயு ஆகாசமும்கூட) புருஷதேகமாய் - ஜீவனுடன் கூடச் சொல்கின்றன) பூயஸ்த்வாத் - (அவற்றில் அப்பின் அம்சம் (ஜலம்) தேகத்தில் அதிகமாயிருப்பதால் - அந்த பூதசூக்ஷ்மங்கள் "ஆப:" என்று குறிப்பிடப்படுகின்றன.

'து' சப்தம் மேல் சொல்லப்பட்ட ஆக்ஷேபத்தை நிரஸித்து வேறுகக்காட்டுகிறது. தேஹ ஆரம்பம் கேவலம் அப்பினுல் மாத்திரம் உண்டாக்கப்படவில்லை; அதனுல் தேகத்தை உண்டாக்க முடியாது. திரிவிருத்கரணம் பண்ணப்பட்ட பூதாந்தரங்கள் ஒன்று சேர்ந்துதான் தேகத்தை உண்டாக்கின. தேகாதி ஆரம்பத்திற்கு-சா. உ. 6-3-3ல் तासां त्रिवृतंत्रिवृतमेकैकामकरोत्-என்று திரிவிருத்கரணம் சொல்லப்பட்டது. (தீ, நீர், பூமி என்னும் மூன்று பூதங்களையும் ஒன்ருேடொன்று சேர்ப்பதாகிற திரிவிருத்கரணத்தைச் செய்வதாக ஓதப்படுகிறது. இங்கு நீர்பாகம் அதிகமாகயிருப்பதாலே-அப்பு என அழைக்கப்படுகிறது. ஜலங்களை மாத்திரம் (சரீரத்திற்குக் காரணமாக) சொல்லியிருப்பது-அதிகமாக நீர் இருப்பதால், (மற்ற பூதங்களைவிட); உடம்பிலே ரத்தம் அதிகமாக விருப்பதால் அதற்கு ஜலங்கள் அதிகமாக விருப்பதாலே-சரீரம் உண்டாவதற்குக் காரணமாவதாலே - அதனுல் அப்பு என்றும் பூயஸ்த்வாத் என்றும் செல்லப்பட்டது.

ஸூ. प्राणगतेश्च (3-1-3)

ப்ராணகதேஸ்ச (-do)

பிராணகதே: ச லோகாந்திரங்களில் செல்லும் ஜீவனேடு இந்திரியங்களும் செல்வதால்-இந்திரியங்களுக்கு வாசஸ்தானமாக விருக்கும் பூத சூக்ஷ்மங்களுப கூடச் செல்கின்றன,

சரீரத்திலிருந்து ஜீவன் வெளிக்கிளம்பும் போது முக்ய பிராணனும் ஜீவனுடன் சேர்ந்து போகின்றான், அதனை அனுஸரித்து எல்லா பிராணன்களும் இந்திரியங்களும் போகின்றன. யாவும் உத்க்ராந்தியை அடைகின்றன-இப்படியே ஒரு சரீரத்திலிருந்து வேறொரு சரீரத்திற்குப் போகும் போது இம்மாதிரி பிராணன்களும் இந்திரியங்களும் முக்ய பிராணனை அனுசரித்து ஜீவனுடன் செல்கின்றன - உத்க்ராந்தியை யடைகின்றன-என்று சுருதி சொல்கிறது. சூத்திரத்திலுள்ள பிராணபதம் முக்ய பிராணனைக் குறிக்கும் ஆகவே ஸர்வபூத தமுழுவுதலே ஜீவனுக்கு ஸ்வர்க்காதிலோகங்களுக்கும்-இன்னொரு சரீரம் கிடைக்கும் வரை சொல்லப்பட்டதாகிறது. பிரு. உ. 6-4-2ல் **तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति ; प्राणमनूत्क्रामन्तं सर्वे प्राणा अनूत्क्रामन्ति** - முக்ய பிராணன் சரீரத்திலிருந்து வெளிக்கிளம்பி - ஜீவனுடன் சேருகிறது ; அப்போது எல்லாப் பிராணன்களும் (இந்திரியங்களும்) தேகத்தை விட்டுக் கிளம்புகின்றன. இதேபிரகாரம் ஸ்மிருதியிலும் (கீதை. 15-7-8ல்) **मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति । शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः । गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाऽऽशयात्** — பத்தர்கள் (ஸம்சாரிகள்) தங்கள் உடலில் மனத்தை ஆறாவதாக உடைய இந்திரியங்களைத்தான் அறிவு பெற அங்கும் இங்கும் இழுக்கிறார்கள். ஜீவன் சரீர இந்திரியங்களின் பதி; அவன் தன் சரீரத்தினின்றும் புறப்படும் போது, இந்த இந்திரியங்கள் பூதசூக்ஷ்மங்களோடு (சூக்ஷ்மசரீரத்தோடு) அவனுடன் செல்கின்றன. காற்று சந்தத்தை எப்படி வகிக்கிமோ அதைப்போல ஜீவன் இந்திரியங்களை பூதசூக்ஷ்மங்களுடன் எடுத்துச் செல்கிறான். இது அவனுக்குள்ள சக்தியாகும். ஸ்வர்க்கம்- மீண்டும் பூலோகத்திற்குத் திரும்பும்போதும் அவ்விதமே அவைகளுடன் வருகிறான், எவைகளுக்கு ஆஸ்ரயம் செய்வதற்கு ஒரு வஸ்துவில்லையோ - (அதாவது பக்கபலமில்லையோ)- அதற்கு கதி (சலனம்-உத்க்ராந்தி) ஏற்படாது. அதனால் ஜீவனை ஆஸ்ரயித்த முக்ய பிராணன் பிராணன்களாகிற இந்திரியங்களாகிற பூதசூக்ஷ்மங்கள் ஜீவனை ஆஸ்ரயித்தபடியாலே வெளிக்கிளம்புகின்றன-ஜீவனே அவைகளை அழைத்துக்செல்கிறான். (**न च निराश्रयाणां गतिरुपपद्यत इति तदाश्रयभूतानां भूतसूक्ष्माणामपि गतिरभ्युपगन्तव्या:**) ஆகவே நாம் ஒத்துக்கொள்ளவேண்டியது - பூதசூக்ஷ்மங்கள் இந்திரியங்களுக்கு ஆதாரமாக விருக்கின்றன. அவைகளுக்கு ஜீவனுடன் கதி உண்டு என்பதாகிறது.

ஸூ. अग्न्यादिगति श्रुतेरिति चेन्न भाक्तत्वात् (3 1-4)

அக்ந்யாதிகதிஸ்ருதேரிதி சேந்ந பாக்தத்வாத் (3-1-4)

*அக்நியாதிகதி சுருதே: - அக்னி முதலானவற்றில், பிராணன்களுக்குக் கதியை (லயத்தை)க் கூறும் சுருதியிருப்பதால், பிராணா அபி ஸஹஜீவேந ந கச்சதி - பிராணன்களும் ஜீவனுடன்கூடச் செல்வதில்லை; இதிசேத் - என்று கூறப்படுமாகில் - ந - அது சரியாகாது (ஏனெனில்) பாக்தத்வாத் - அக்னியாதிகளிடத்துச் சொல்லியகதி (அதாவது பிராணன்களின் லயமானது) கௌண மாகவிருப்பதே அதன் காரணமாகும்.*

பிரு.உ. 5-2-13ல் यत्रास्य पुरुषस्य मृतस्याग्निं वागप्येति, वातं प्राणः, चक्षुरादित्यम्-எங்கே மரித்தமனிதனின் வாக்கு அக்னியில் லயத்தை அடைகிறதோ, அவனுடைய முக்ய பிராணன் வாயு பூதத்திலும், அவனுடைய கண் சூரியனிடமும் லயமடைகிறதோ - இதனால் சொல்லப்படுகிறது - மனிதனின் உடல் இறக்கும் சமயத்திலே அவனுடைய பிராணன்கள் (இந்திரியங்கள்) அக்னியில் லயமடைகின்றன; அதனால் இந்திரியங்களுக்கும் ஜீவனுடன் கமனம் செல்லுதல் என்பது ஏற்படுவதில்லை-ஆகவே அவைகளின் கதியைப்பற்றிய சுருதியை வேறுவிதமாக அர்த்தம் செய்யவேண்டியது-என்றால்-ந அவ்விதமில்லை. भाक्तत्वात् கௌணமாக அர்த்தம் கொள்ள வேண்டும். வாக்கு முதலிய பதங்களுக்கு-பிரகரணத்திலே. எப்படி அக்னி முதலியவைகளில் லயமடைதலை சொல்லும் சுருதிக்கு கௌணமாக அர்த்தம் கொள்ள முடியும் - என்கிற ஆட்சேபத்திற்கு நாம் பதில் கூறுவது - ஏனெனில் அவைகளை மயிர் முதலியவற்றினோடுச் சேர்த்துச் சொல்லியிருப்பதாலே-அதாவது சுருதியில் (பிரு.உ. 3-2-13ல்) ओषधीर्लोमानि, वनस्पतीन् केशाः : தேகத்தின் மயிர்கள் ஒஷதிகளிலும், தலைமயிர் வனத்திலுள்ள பெரிய மரங்களிலும் லயமடைகின்றன - இதனால் கண் முதலியவற்றின் சூர்யனிடம் லயத்தைக் கூறும் வாக்யம் லயத்தைச் சொல்லவில்லை, அவைகளை அதிஷ்டித்து நிற்கும் அபிமானி தேவதைகள் விட்டுப் போகின்றன என்பதாகும். ஆகையால் இந்திரியங்களோடு அவைகளுக்கு ஆஸ்ரயமான பூதசூக்ஷ்மங்களோடுதான் ஜீவன் போகிறான்.

(பிரு. உ. 3-2-13ல் ஆர்த்தபாகர் யாக்ஞ்யவல்கியரை கேள்வி கேட்டார் - இறந்தவனுடைய பேச்சு (வாக்கு) அக்னியில் லயமாகிறது - பிராணன் வாயுவிலும், கண் சூரியனிடமும், மனது சந்திரனிடமும், ச்ரோத்தரம் (காதுகள்) ஆகாயத்தின் திசைகளிலும், சரீரம் பூமியிலும், ஆத்மா திறந்த ஆகாய வெளியிலும், மயிர்கள் ஒஷதிகளிலும், தலைமயிர் வனத்திலுள்ள பெரிய மரங்களிலும், ரேதஸ்ரத்தம் தண்ணீரிலும் லயமாகின்றன அப்போது ஜீவனுக்கு ஆதாரம் அளிப்பது எது? எங்கே அவன் தனக்குப் பலத்தைத் தேடுகிறுன்? அதற்குப்பதிலாக-சொல்லப் படுவது-இம்மாதிரி சரீரத்தின் ஒவ்வொரு பாகமும் வெளி உலகில் ஒவ்வொன்றிலும் லயமடைகிறதை - கௌணமாகக் கொள்ள வேண்டும்-அதாவது அபிமானி தேவதைகள் அவைகளை விட்டுப் போகின்றன, அவைகளை வேலை செய்யச்சொல்வதில்லை என்பதாம். எங்கனமெனில்-தலைமயிர் வனத்திலுள்ள மரங்களில் லயமடை வதை நாம் பார்க்க முடிகிறதில்லை. ஆகவே அபிமானி தேவதை கள் அந்தந்த பாகங்களை விட்டுச் செல்கின்றன. அக்னி வாக்கை விட்டுப் போகிறுன். உடம்பிலுள்ள ரோமங்களையும், தலை மயிரை யும் தாங்கும் அபிமானி தேவதைகள் அவைகளை விட்டுச் செல் கின்றுர்கள் என அர்த்தம்.

**ஸி. சூ. प्रथमेऽश्रवणादिति चेन्न ; ता एव ह्युपपत्तेः (3-1-5)**

**ப்ரதமே அஸ்ரவணுதிதிசேந்ந தா ஏவ ஹ்யுபபத்தே; (do)**

பிரதமே - ஐந்து அக்னிகளைச் சொல்லத் தொடக்கத்தில், முதலாவதாகவுள்ள த்யுலோகம் (என்கிற அக்னியில்) அஸ்ர வணுத் - ஜலமானது (அப்பு) ஹோமம் செய்யப்படுவதாக சுருதி சொல்லாதபடியாலே, அப்பாகிற பூதசூக்ஷ்மங்களுடன் கூடியே ஜீவன் லோகாந்திரம் செல்கிறுன் என்பது சரியாகாது; இதி சேத் - என்று சொல்லப்படுமாகில், ந - அது சரியில்லை (ஏனெனில்) தா: ஏவஹி - அந்த ஜலங்களே சிரத்தா என்கிற சப்தத்தினுல் சொல்லப்படுகின்றன. ஏன்? உபபத்தே:- கேள்வி பதில்கள் இருப்பதாலே - அதுவே காரணமாகும்.

த்யுலோகாக்னிவிஷயத்தில் - (பிரதம அக்னி என்பதாகும்) மூதல் ஹோமத்தில் ஜலம் ஹோம்யமாகச் சொல்லப்படவில்லை ;

சிரத்தை தான் முதலில் படிக்கப்படுகிறது. (சிரத்தை என்பது மனோவிருத்தி விசேஷம்) அதனால் ஜீவனுக்கு கதியில்லை என்பதாகும்.

இப்படிச் சொல்வது ந - தவறு. ஏனெனில் ता एव ह्यापः ஏனெனில் கேள்வி பதிலில் - (பஞ்சாக்னிவித்யையில்) சிரத்தை என்பதால் மாத்திரமல்லாமல் அத்துடன் (அதாவது) சிரத்தை ஸோமராஜ-வர்ஷ-அந்த ரேதஸ்-கர்ப்பம் என்கிற ரீதியில் பரிணமித்ததைச் சொல்லியன்றோ ஏவம் ஆப: புருஷவசஸ: என்று பதிலில் முடிக்கப்படுகிறது. (ஆகவே அப்பால் (ஜலத்தால்) தான் ஸோமோராஜா பாவத்தைக் அடையமுடியும்-பரிணமிக்கமுடியும், மனோவிருத்தி விசேஷமான சிரத்தையினால் முடியாது. ஆகவே பூதாந்தரங்களோடு கலந்த அப்போடு சேர்ந்தே ஜீவன் போகிறான் - என்பது சரியாகும்.)

என்ன சொல்லப்பட்டதென்றால் - மேல் சொன்ன சுருதியின் அர்த்தம் - பூதசூக்ஷ்மங்களுடன் சேர்ந்துதான் ஜீவன் செல்கிறான் என்பது பிரஸ்னபிரதி வசனங்களால் தெரியவருகிறது என்று கூறுவது பொருந்தாது. ஏனெனில் த்யுலோகாக்னி விஷயத்திலே முதல் ஹோம ஆஹுதியில் ஜலங்கள் சொல்லப்படவில்லை - சிரத்தைதான் சொல்லப்பட்டிருக்கிறது. சா. 2-5-4-2ல் तस्मिन्नेतस्मिन्नग्नौ देवाः श्रद्धां जुह्वति - என்பதால் சிரத்தையையே ஹோமம் செய்யப்படுவதாக ஓதுகிறது. சிரத்தை என்கிற பெயருக்கு ஜீவனுடைய மனோவிருத்திவிசேஷம் என்பது பிரஸித்தம். ஆகவே அப்புக்கள் ஹோமம் செய்யப்படவில்லை என்றால் - ந அவ்விதமில்லை. यतः ताः ஏனெனில் அப்புக்களே சிரத்தா சப்தத்தாலே அங்கு சொல்லப்படுகின்றன. எப்படி ? பிரஸ்ன (கேள்வி) பதில்களிலிருந்து தெரியவரும். சா. 2-6-3-3ல் वेत्थ, यथा पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति— அப்பானது (ஜலம்) ஐந்தாவது ஆஹுதியில் புருஷன் என்கிற பெயரை எவ்விதம் அடைகிறது?) (இதற்குப்பதில் - சிரத்தை ஸோமராஜன் - விருஷ்டி - அந்நம் - ரேதஸ் - ஆகிற ஆஹுதிகளுக்குள் ரேதஸ் ஐந்தாவது ஆஹுதியில் "அப்" சப்தத்தாலே சொல்லப்படுகிற பூதசூக்ஷமங்களோடு புருஷசப்தா - ஆகின்றன - என்ப

தாகும்) - இந்த கேள்விக்குப்பதிலின் ஆரம்பத்திலே - சிரத்தை த்யுலோகமாகிற அச்னியில் ஹோமம் செய்யப்படுகிறது என்று சொல்லி; அங்கே சிரத்தை சப்தத்தால் ஜலங்களைச் சொல்லா விடில்- அப்போது வேறொரு கேள்விக்கு வேறொரு பதிலாக ஏற்பட்டிருக்குமாதலால் அஸங்கதமாகவிருக்கும். சா. 2. ஏகவாக்யதை (ஒரு பொருளுள்ள தன்மை) இல்லாமற் போய்விடும். (3-9-1ல்) इति तु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसः- ஐந்தாவது ஆஹூதியிலே அப்சப்தத்தாலே சொல்லப்படும் பூதசூக்ஷ்மங்கள் ஹோமம் செய்யப்பட்டு அவை புருஷசப்த வாச்யமாக ஆகின்றன-அதாவது ஆப: ஆகின்றன என்கிற பதிலிலிருந்து-ப்ரதமஹோமத்திலும் சிரத்தை யென்று சொல்லப்பட்டதே ஆப: (ஜலத்தையே) சூசிக்கின்றன. वेत्थ यथा என்று ஆரம்பிக்கும் ஐந்தாவது கேள்வியில் (நீ அறிவாயா?) என்று ஆரம்பித்து; इति तु पञ्चम्याम्-இதி என்று சிரத்தை ஸோமராஜன் - வ்ருஷ்டி அன்னம், ரேதஸ் என்கிற ஆஹூதிகளின் பெயர்களைச் சொல்லி ஐந்தாவதில் அப்பு (ஜலங்கள்) (பூதசூக்ஷ்மங்கள்) என்கிற சப்தத்தாலே சொல்லப்படுவதால் - பூதசூக்ஷ்மங்களே (அப்பே) புருஷசப்தா வாச்யமாகிறது - என்பது பதில் - இந்த பதிலே பரிஹாரமாக அமைகிறது (கடைசியில் ஆப் சப்தத்தாலே சொல்லப்படுவதாலே - மத்யமத்திலும் ஆப்தான் அர்த்தம் செய்து கொள்ள வேண்டும்). சிரத்தை ஸோமராஜ - வர்ஷம் - அந்நம் - ரேதஸ் - கர்ப்பம் எனப்படும் ரூபத்தினுல் आपः (ஜலங்களே - பூத சூக்ஷ்மங்களோ) பரிணமத்தை அடைந்து-கடைசியான ஐந்தாவது ஆஹூதியில் पुरुषवचसः पुरुषवचस - என்று முடிக்கப்படுகிறது. சிரத்தாசப்தத்திற்கு அப்புக்கள் என்று வைதிககர்மாக்களில் பிரயோகம் காணப்படுகிறது. यजु 2-4-33ல் आपः प्रणयति ஜலத்தை சேர்க்கின்றான். श्रद्धा वा आपः தீர்த்தம் அல்லது ஜலம் என்பதாகும். श्रद्धां जुह्वति ; तस्या आहुतेः सोमो राजा संभवति- ஸ்வர்க்கமாகிற அக்னியில் சிரத்தையை ஹோமம் செய்வதால் - அதிலிருந்து கிளம்புகிருன் - சோமன் என்கிற அரசன் - (சா. உ. 5-3-3) இப்படி சிரத்தையே ஸோமாகாரமாக பரிணமிக்கிறது. அதனுல் சிரத்தையையே ஆப: என்று கொள்ளவேண்டும். ஆகவே பூதசூக்ஷ்மங்களோடு ஸம் பரிஷ்வக்தனுக (தழுவப்பட்டவனுக) ஜீவன் சஞ்சரிக்கிருன் என்று சொல்வது உபபந்நம்.

முண் உ. 1-2ல் - एह्येहीति तमाहुतयः सुवर्चसः सूर्यस्य रश्मिभिर्यजमानं वहन्ति, प्रियां वाचमभिवदन्त्योऽर्चयन्त्यः என்கிற வாக்யத்தில் ஆஹுதிகள் ஸ்தூலசரீரத்தை எடுத்துக்கொண்டு யஜமானனை அழைத்துச் சொல்வதாகச் சொல்லப்படுகிறது. சூக்ஷ்மதேகத்தைக் கொண்ட ஜீவனை ஆஹுதிரூப: आप: அழைத்துச் செல்கின்றன என்று காட்டுகிறது. அதுபோல இங்கேயும் சிரத்தாரூபேண आप: என்று கொள்ளவேண்டியது.)

ஸி. சூ. अश्रुतत्वादिति चेन्नेष्टादिकारिणां प्रतीतेः (3-1-6)

**அஸ்ருதத்வாதிதி சேந்நேஷ்டாதி காரிணாம் ப்ரதீதே: (do)**

அஸ்ருதத்வாத் - ஜீவனைப்பற்றியசப்தம் (ஜீவன் அந்த அப்புக்களுடன் கூடினவனாகவேதான் போகிறான்) என்று சுருதியில்லாதிருப்பதாலே பூதசூக்ஷ்மங்களுடன் ஜீவன் செல்கிறான் என்பது பொருந்தாது என்று இதி சேத் - சொல்லப்படுமாகில்; - ந-அது சரியாகாது. இஷ்டாதிகாரிணாம் ப்ரதீதே:-வேறு சுருதியில் யாகம் முதலியவைகளைச் செய்தவர்களுக்கு கதி சொல்லப்பட்டிருப்பதுபோல அதாவது "அந்த இந்த அக்னியில் தேவர் சிரத்தையை ஹோமம் செய்கின்றனர்" எனச் சொல்லியிருப்பதிலிருந்து யாகாதிகளைச் செய்த ஜீவனைப் பற்றிய உபதேசம் இருப்பதாலே - அதுவே காரணமாகும். (அந்த ஆஹுதியினின்றும் "ஸோமராஜாவாகிறான்" என்பதால் ஸோமராஜா என்கிற சப்தம் இஷ்டாதிகாரிகளைப்பற்றிய உபதேசம்தான் - ஜீவன் தன் கர்மபல அனுபவத்திற்குப் போகிறான் என்பதாகும். அதனால் ஆஹுதிமயங்களான அப்புக்களுடன் (பூதசூக்ஷ மங்களுடன்) கூடவே ஜீவன் லோகாந்திரம் செல்கிறான் - என்பதாகும்.

சுருதியிலே ஜீவனை பூத சூக்ஷ்மங்களோடு சேர்ந்திருப்பதாகச் சொல்லப்படாததாகையால், ஜீவனுக்கு சஞ்சாரமில்லை - என்று சொல்லப்படுமானால், அவ்விதமில்லை, ஏனெனில் அவ்விதம் அறியப்படுகிறது - யார்விஷயத்திலே - வைதிக கர்மாக்களையும், மற்ற இஷ்டா பூர்த்தி போன்ற புண்யகர்மாக்களைச் செய்பவர்கள் விஷயத்திலே - அவ்விதம் அறியப்படுவதால்.

ஏற்கனவே சொல்லப்பட்டதிலிருந்து - இந்த சுருதியில் இந்த அர்த்தம் கிடைக்கிறது - அதாவது ஜீவன் பூத சூக்ஷ்மங்களுடன் ஸம்பரிஷ்வக்தனாக (தழுவப்பட்டு) செல்கிறான் என்கிறவாக்யம் சரியாகாது - ஏனெனில் இந்த சுருதி வாக்யத்தில் ஜீவனைப் பற்றியே பிரஸ்தாவமில்லை.

**விளக்கம் :**

இங்கே சொல்லப்படும் பிராவஹண அரசனின் மஹா வாக்யம் - பதில். அந்த பதிலில் ஜீவனைப்பற்றி பிரஸ்தாபமில்லை. இங்கே சிரத்தை என்பதற்கு **ஆப:** (ஜலங்களின்) மாறுதல்களாகவிருக்குமானால், அவைகளையே ஹோம த்ரவியங்களாகச் சொல்லப்படுவதால் - இதனால் தேறுவது ஜீவன் ஹோமம் செய்யப்படவில்லை - கேவலம் பூதசூக்ஷ்மங்களை (आप:) ஹோமம் செய்யப்படுவதாகச் சொல்லிற்று. ஜீவன் பூத சூக்ஷ்மங்களோடு பரிஷ்வக்தனாகச் சொல்லப்படவில்லை. அப்படிச் சொல்லப்படுமானால், நாம் சொல்வது - ஜீவனைப்பற்றி சுருதி இல்லை இஷ்டாதி யாகாதிகளை செய்த ஜீவனைப்பற்றி உபதேசம் காணப்படுவதே அதன் காரணமாகும்.

**ஸ்ரீ பாஷ்யம் :—**

இதற்கு நாம் பதில் கூறுவோம் - "நீ சொல்கிறபடி இல்லை. **इष्टादिकारिणां प्रतीतेः** - (ஏனெனில்) இஷ்டாபூர்த்தி கர்மாக்களை (கிணறு குளம் வெட்டுதல், கோயில் கட்டுதல் போன்ற நற்காரியங்களை (இஷ்டாபூர்த்தி கர்மாக்களை)ச் செய்பவர்கள் விஷயத்திலே, அவ்விதம் (ஜீவனை பரிஷ்வங்கனாகச்) சொல்லப் பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்திலே அதற்கு பின்னால் வரும் அதேபிகரணத்திலே **ब्रह्मज्ञानविधुरैरिष्टादिकारिभिः धूलोकं प्राप्य सोमराजानो (?) भूत्वा पुण्यकर्मावसाने च पुनरागत्य गर्भं प्राप्नुवन्तो दृश्यन्ते** — எவர்களுக்கு பிருஹ்மஞானமில்லையோ - அவர்கள் இஷ்டாபூர்த்தி கர்மாக்களையும் தானதர்ம வைதிக கர்மாக்களைச் செய்பவர்களாயினும், அவர்கள் ஸ்வர்க்கலோகத்தை அடைந்து ஸோம ராஜாவைப்போல ஆகி - புண்யகர்மாக்களின் பலன்களை அனுபவித்து - பிறகு பூலோகம் திரும்பிவந்து மீண்டும் பிறவி

எடுக்கிறார்கள். அவர்கள் பித்ருயானமார்க்கத்தை அடைகிறார்கள்- அதாவது மீண்டும் பிறப்பை உண்டாக்குவதான மார்க்கம் இந்த அபிப்ராயம் சா-உ-5-10-3ல் மீண்டும் சொல்லப்படுகிறது - अथ य इमे ग्रामे इष्टापूर्ते दत्तमित्युपासते-तेधूममभिसंभवन्ति— என்று ஆரம்பித்து (எவர்கள் கிராமங்களில் தங்கி வைதிக - இஷ்டாபூர்த்தி போன்ற நற்கருமாக்களைச் செய்தும் தான தர்மங்களைச் செய்துமிருக்கிறார்களோ - அவர்கள் பித்ருயான மார்க்கத்தை அடைகிறார்கள் - மேலும் சுருதி சொல்கிறது - पितृलोकादाकाशमाकाशाच्चन्द्रमसम्; एष सोमो राजा: तत् देवानामन्नम्; तं देवा भक्षयन्ति। तस्मिन् यावत्संपातमुषित्वाऽथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते அவர்கள் பித்ருலோகத்திலிருந்து ஆகாஸத்தையும் ஆகாஸத்தி லிருந்து சந்திரனையும் அடைகிறார்கள்; (அவர்களின்) அந்த ஆத்மா திவ்யமாக தேகத்தைப்பெற்று - ஸோமோராஜா -(ராஜா-ஜீவன்) அவர்கள் தேவர்களுக்கு ஆகாரமாகிறார்கள் தேவதைகள் அவர்களைப் புசிக்கிறார்கள். அந்த இடத்திலே அவர்கள் தங்களது முதிர்ந்த கர்மங்களின் பலன்கள் முடியும் வரை இருந்துவிட்டு எந்த பித்ருயானம் வழியாகச் சென்றனரோ - அதே வழியாகத் திரும்புகிறார்கள்; "யார் யார் ஆகாரம் சாப்பிட்டார்களோ - யார் யார் ரேதஸ்ஸை சிந்தினார்களோ; அவன் (பூலோகம் திரும்பி வருகிற ஜீவன்) योयो ह्यन्नमत्ति, योरेतः सिञ्चति, तद्भूय एव भवति— அவர்களுடன் சேர்ந்து ஒன்றாகிவிடுகிறான். (சா-உ-5-10-3-6);

இங்கேகூட द्युलोकाग्नौ श्रद्धां जुह्वति तस्या आहुतेः सोमो राजा संभवति—ஸ்வர்க்கம் எனப்படும் அக்னியிலே-என்கிற பதங்களுக்கு ஒரே அர்த்தம் ஸித்திக்கும் பொருட்டு (அதாவது சுருதியில் ஸ்வர்க்கத்தை அக்னியாகக் கற்பித்து அதில் ஆப: (பூதசூக்ஷ்மங் களை ஹோமம் செய்து)-என்கிறதுடன் ஒரே அர்த்தம் ஸம்பவிப் பதற்க்காக இவ்விதம் சுருதி சொல்கிறது) த்யுவாகிற ஸ்வர்க்க லோகத்தில் (இந்திரியங்கள்) சிரத்தையை ஹோமதிர வியமாக ஆஹூதிசெய்கிறார்கள்; அந்த ஹோம ஆஹூதியிலிருந்து கிளம்பு கிறான்-ஸோமஅரசன்-(ஜீவன்); (சா.2.5.3.3) ஆகையால் இந்த வாக்யத்தால் (பஞ்சம ஆஹூதியுடன் ஒப்பிட்டு) ஏகார்த்தம்

சித்திக்கிறது-எங்கனமெனில் அந்த ஜீவன் (அவன்) பூதசூக்ஷ்மங்களடங்கிய தேகத்துடன் சம்பந்தப்பட்டு·அந்த பூதசூக்ஷ்மங்கள் சிரத்தை என்படும் அவஸ்தையுடன் கூடியவனுக (சிரத்தாவஸ்த தேஹ விசிஷ்ட: सोमरूपदेहविशिष्टो भवति - इत्युक्तमिति गम्यते । அந்த அம்ருத மயதேகத்துடன் கூடினவனுக-; ஸோம ரூபதேஹ விசிஷ்டனுக ஜீவன் ஆகிருன். அந்த தேகம் ஜீவனுக்கு (அப்ரதிக் ஸித்த) தர்மமாக விருக்கிறது. தேகம் ஜீவனுக்கு விசேஷணதா - ஸ்வருபதர்மமாகிறது, அதனுல் தேகம் என்கிற தர்மம் ஜீவபரியந்தம் வாசக சப்தமாக- एक स्वरूपस्य वाचकः शब्दो विशेष्ये जीव एव पर्यवस्यति । ஆகிறது.

ஆகையால் ஜீவன் பூதசூக்ஷ்மங்களால் संपरिष्वक्तो (தழுவப்பட்டவனுக) ஒவ்வொரு விடத்திற்கும் செல்கிருன் என்று தேறுகிறது.

(இங்கே ஸோமோராஜா-என்று சொல்லப்படுவதால்·அந்த வார்த்தைகள் ஜீவன் செல்லும் ஒவ்வொரு இடத்திற்கும் உபயோகப்படுத்தப் படுகின்றன. முதலில் ஸோமராஜா என்கிற பதத்திற்கு-ஜீவன்-ஜீவனுடன் சம்பந்தப்பட்ட (பூதசூக்ஷ்மங்கள்) என்று அர்த்தம் கொள்ள வேண்டியது. முதலில் ஆரம்பத்தில் சிரத்தை ஹோமத்தின் ஆஹுதியாகவும்-அது பிற்பாடு ஒவ்வொரு விடத்திலும் (பர்ஜன்யம்-ப்ருத்வி-புருஷன்-ஸ்திரி என்கிற விடங்களிலும்) சிரத்தையுடன் கூடிய பூதசூக்ஷ்மங்கள் என அர்த்தம் செய்து கொள்ள வேண்டியது.

இஷ்ட - பூர்த்தா - இவைகள் வைதிக கர்மாக்களையும் குளம் கிணறு வெட்டுதல், கோயில் கட்டுதல் தாதைர்மங்கள் நந்தவனம் அமைத்தல் போன்ற நற்பணிகளையும் சொல்லும்.)

**ஸ்ரீ பாஷ்யம்:—**

மேலும் இங்கே ஆட்சேபிக்கப்படும் - தேவர்கள் (ஜீவனை) அவனைச் சாப்பிடுகிறர்கள் (तं देवाः भक्षयन्ति) என்கிற வசனத்திஞல்-அந்த ஜீவன் புஜிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது; அதஞல் ஜீவனை ஸோமோராஜா என்கிற பதத்திஞல் குறிக்கப்படவில்லை. (ஆட்சேபம்) सोमो राजा-ஸோமன் என்கிற அரசன்-இதற்கு

அர்த்தம் யாதெனில் ஜீவனைச் சாப்பிடப்படுவதாகச் சொல்லப் படவில்லை- (உபகார பூதனாகிறான் என்று அர்த்தம் கொள்ள வேண்டியது). ஏனெனில் அவனைச் சாப்பிட முடியாது-இங்கு ஜீவனையே ஸோமோராஜா என்று அழைக்கப்படவில்லை. என்பது ஆட்சேபம்; அதற்குப் பதில் (அம்ருதமயனாக ஆகிற படியால்) உபகார பூதனாகிறான் என்று கொள்ள வேண்டும்.

விளக்கம்:-(ஸமானாதிகரணத்தினாலே ஸ்ரத்தா வஸ்த தேஹ விசிஷ்ட (ஜீவன்) ஸோமரூபதேஹ விசிஷ்டோ ஒன்றாக ஆகிறான் என்று (உத்தரவாக்யத்தினால் அர்த்தம்) கொள்ள வேண்டியது ஸோமராஜ சப்தம் பிரத்ய பிக்ஷ-இவனே அவன் என்று கொள்ள வேண்டியது तावत् जीवपर्यन्तपरम् । तदैकार्थ्यात् इहापि सोमराजपद तथा-तदुपादा नवाचिनी आहूति श्रद्धापदे अपि ततो जीवपर्यन्तवाचिनी इत्यर्थः । (உத்த மூர்ஸ்வாமி).

ஜகார்த்தம்-ஜீவசம்பந்தத்தைச்சொல்லாத பூர்வவாக்யத்திற்கும்-உத்தரவாக்யத்தில் ஸ்பஷ்டமாக ஜீவசம்பந்தத்தைச் சொல்லும் வாக்யத்தோடு ஒரே அர்த்தம் சொல்லவேண்டியது. ச்ரத்தாதி தத்ததவஸ்த தேஹாதிவிசிஷ்டன் एष सोमोराजा சந்திரதுல்ய தேஹத்தை (ஸோமருப தேஹாதி விசிஷ்ட) அவன் அடைகிறான். முக்யார்த்தமாகவே கொள்ளலாம். சரீரவாசக சப்தம் ஜீவபர்யந்தம் சொல்லுமாகையால் ஜீவன் ஸம்பரிஷ்வக்தனாகச் செல்கிறான்-என்பது சரியாகும். விளக்கம் முற்றிற்று)

இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் சொல்கிறார்-அடுத்த சூத்ரத்தில்,

**ஸி. சூத். भाक्तं वाऽनात्मवित्त्वात्; तथा हि दर्शयति (3-1-7)**
**பாக்தம் வா அநாத்ம வித்த்வாத்; ததாஹிதர்ஸயதி** (do)

பாக்தம் வா - தேவர்கள் ஸோம ராஜாவை உண்கிறார்கள் எனக்கூறியது கௌண அர்த்தமாகும். (முக்கிய அர்த்தமல்ல); वा என்பதற்கு மேல் சொல்லப்பட்ட சங்கைக்கு இடமில்லை - அதாவது இவர்களை தேவர்களுக்கு அந்நமாகச் சொன்னது.

பாக்தம் - கௌணம். அநாத்மவித்வாத் - ஆத்மஞானமற்றவராக (அதாவதுபரமாத்மாவைப் பற்றிய அறிவு இலாதபடியால்)-தேவர்களுக்கு உபகரணமாகிற அந்நம் ஆகிறபடியால் - அதன்காரணமாகும். ததாஹிதர்ஸ்யதி - வேத சுருதியும் அவ்விதமே ஓதுகிறது.

(இங்கு கூறப்படுவது - தேவர்கள் உணவை உண்பதில்லை - வஸ்துவைக் கண்டே திருப்தி பெறுகிறார்கள். அதுபோல ஸோம ராஜா (ஜீவன்) உபகரணமாகவிருப்பதால் திருப்தி பெறுகிறார்கள். ஆகையால் ஜீவன் பூத சூக்ஷ்மங்களுடன் கூடவே லோகாந்தரம் செல்கிறான் என்பதாகும்.)

சூத்திரத்திலுள்ள वा சப்தமானது மேல்சொல்லப்பட்ட ஆக்ஷேபத்தை நிவர்த்திக்கிறது. இஷ்டாபூர்த்தா (நற்பணிகளைச்) செய்பவர்கள் அப்ருஹ்ம வித்துக்களாகிறபடியால் பரமாத்மாவை பூஜியாமல் அவர்களுக்கு இந்த கர்மாக்கள் ஆராதனை ஸ்வரூபமாகவிருக்கின்றன என்கிற ஞானத்தை உடையவர்களில்லை - அவர்களையே தேவர்கள் போகோபகரணமாக வைத்து ஆள்கிறார்க்ள். அதாவது அவர்கள் தேவர்களுக்கு அடங்கி வாழ்கிறார்கள் ஏ ஷ ா ம ந் ந த் வ ம் அன்னமாகச் சொன்னது கௌணம் பாக்தம். இங்கேயும் - அங்கேயும். இந்த உலகில் தேவர்களை இஷ்டிகர் மாக்களால் பூஜைசெய்து - திருப்தி செய்வதற்கு ஆராதனம் செய்கிறார்கள். அதனால் தேவர்கள் ப்ரீதியடைந்து ஸ்வர்க்காதி லோகங்களை பலனாக அளிக்கிறார்கள். இறந்த பின்பு அவர்கள் அங்கே சென்று தேவர்களுக்குத் துல்யமாக போகங்களை அனுபவிக்கிறார்கள். அப்போது அவர்கள் தேவர்களுக்கு உபகரணமாகிறார்கள் - அடங்கிவாழ்கிறார்கள், பிரு. உ. 3-4-10ல் यथा पशुः एवं सदेवानाम् - பசு எப்படி மனிதனுக்கு அடங்கி உபயோகப் படுத்தப்படுகிறதோ - அதைப் போல அவர்கள் தேவர்களுக்கு உபயோகப்படும்படி உபகரணமாகிறார்கள், அடங்கிவாழ்கிறார்கள். அநாத்ம வித்வாத்-ஆத்ம ஞானம் இல்லாமையே காரணம். இவர்கள் அநாத்ம வித்துக்கள். (பரமாத்மா விற்க்காக கர்மாக்களைச் செய்யாதவர்கள்) இவர்கள் தேவதைகளுக்கு உபகரணமாகிறார்கள் என்று சுருதி ஓதுகிறது. ததாஹிதர்ஸ்யதி சுருதியும் காட்டுகிறது.

ஸ்மிருதிகளும் ஆத்ம வித்துக்களுக்கு பிருஹ்மபிராப்தியைச் சொல்கின்றன; அதேபடி அநாத்மவித்துக்களுக்கு அவர்கள் தேவர்களுக்கு போக்யத்வமாக மாகிறார்கள் எனக் காட்டுகின்றன. கீதை 7-23 **देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्तिमामपि** - எவர்கள் தேவர்களை உபாஸிக்கிறார்களோ அவர்கள் தேவர்களை அடைகிறார்கள். எவர்கள் என்பக்தர்களாக விருக்கிறார்களோ அவர்கள் என்னை வந்தடைகிறார்கள். ஆகையால் தேவர்கள் ஜீவர்களைப்போகோபகரணமாகவைத்து உபயோகப்படுத்தப்படுகிறார்கள்-என்கிற அபிப்ராயம் (அந்நத்வேன ஆகாரமாகச் சாப்பிடப்படுகிறார்கள்) என்பதில்லை- அதற்குப்பதிலாக உபயோகப் படுத்தப்படுகிறார்கள் (உபகரணார்த்தம்) என்று பக்ஷ்யத்வ வசனத்திற்குப் பொருள் கொள்ள வேண்டியது, ஆகையால் தத்ஸமானபோக என்றும் கொள்ளலாம். ஆகவே அந்நத்வ வசனத்தைக் கௌணமாக அர்த்தம் கொள்ள வேண்டியது. (**भाष्यम्**) அவர்களுடைய த்ருப்தியையே லக்ஷ்யார்த்தமாக தேவர்களுக்கு ''பக்ஷணம்'' என்று சொல்லப்படுகிறது. சா. உ. 3-5-1 ல் **न वै देवा अश्नन्ति; न पिबन्ति; एतदेवामृतं दृष्ट्वा तृप्यन्ति**— தேவர்கள் அவர்களைச் சாப்பிடுகிறதில்லை குடிப்பதில்லை அம்ருதத்தைப் பார்ப்பதாலே அவர்கள் திருப்தியடைகிறார்கள்-இதனால் தேவர்களுடைய திருப்தியையே-அவர்களுடைய சாப்பிடுதலுக்குச் சமமாக விருக்கிறது எனலாம், போகோபகரணத்வம் தான் அவர்களுக்குப் போகம்.

ஆகையால் பூதசூக்ஷ்மங்களுடன் கூடவே - தழுவபபட்டவனாகவே ஜீவன் சஞ்சரிக்கிறான்-என்பது ஸித்தம்.

**அனுபந்தம்:** - பூஜ்ய பகவத்பாதாள் சங்கரரை வேத வ்யாஸர் சந்தித்து இந்த அதிகரணத்தின் அர்த்தத்தை வினவியதாகச் சொல்லப்படுகிறது. ஜீவன் சரீரத்தை விடும்போது பூத சூக்ஷ்மங்களுடன் கூடியவனாக வேறு உலகிற்கும் - திருப்பி வருதலுக்கும் செல்கிறான். இந்த விஷயம் தாண்டி உபநிஷத்தில் கௌதமருடையவும் - ஜைவலியினுடையவும் வினாவிடைகளில் கூறப்பட்டுள்ளது. தேகபீஜங்களான பூத சூக்ஷ்மங்களோடு கூடி சரீரத்தினின்றும் வெளியேறுகிறான். த்யு லோகம் - பர்ஜன்யம் (மேகம்) பூமி-புருஷன்-யோஷித் (ஸ்திரி)

இவைகளில் சிரத்தை ஸோம, வ்ருஷ்டி, அன்னம் ரேதஸ் என்கிற ஐந்து ஆஹூதிகளைக் காண்பித்து முடிவில் அப்புக்கள் (புருஷன் தேகம் என்கிற சப்தத்தை அடைந்தவனாக) அப்புக்களுடன் பரி வேஷ்டிதனாக ஜீவன் போகிறான். புல்லின் பூச்சி (புல்லட்டையைப்) போலவரும் தேகத்தைப் பிடித்துக்கொண்டு, இருக்கும் தேகத்தை விடுகிறான்-இங்கு அப்புக்கள் ஜலம் மாத்திரமில்லை மற்ற மூன்றும் கலந்தனவாம் - தேஜஸ் அப்பு பூமி இம்மூன்றின் காரியம் தான் தேகம். இஷ்டாபூர்த்தி செய்தவர்களும் ஆத்ம ஞானமில்லாவிடில் அவர்கள் தேவலோகத்தில் அனுபவிக்கிறார்களே யாகிலும், அவர் களைப் பசுக்களைப்போல தேவர்கள் நடத்துகிறார்கள், இதனால் பஞ்சாக்னி வித்யையினால் ஞானத்தை அடையவேண்டும்-என்ப தாகும்.

## கிருதாத்ய யாதிகரணம் (3-1-2)

ஸி. சூத். कृतात्ययेऽनुशयवान् दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च (3-1-8)
கிருதாத்யயே அநுசய வாந்திருஷ்ட ஸ்மிருதிப்யாம் யதேதம் அநேவம் ச (3-1-8)

கிருதாத்யே - தேவலோகத்தை முடித்த பிறகு திரும்பிவரும் ஜீவர்களின் கர்மங்கள் முடிவுபேற்பட்டதும் - அநுசயவாந் - மீதி யுள்ள கர்மங்களின் வாசனை உள்ளவனாய்-யதேதம்-போனமார்க் கத்தை ஒட்டி-அநேவம்-சில இடங்களில் அதற்கு மாறாகவும் ச- இரண்டும், அவரோஹதி-ஜீவன் பூமியில் இறங்குகிறான்-திருஷ்டஸ் மிருதிப்யாம் - சுருதிஸ்மிருதிகள் அவ்விதம் சொல்வதே அதன் காரணமாகும்.

கேவலம் இஷ்டா பூர்த்தி கர்மாக்களையும்-தான தர்மங்களை யும் செய்பவர்கள் பித்ருயான மார்க்க வழியாகச் சென்று-அந்த கர்ம பலன்களை அனுபவித்து விட்டு - மீண்டும் பூமியில் பிறக் கிறார்கள் என்று சா. உ. ஓதப்படுகிறது - சா. உ. 5 - 10ல் यावत्संपातमुषित्वाऽथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते — इति — மேலுள்ள ஸ்வர்க்க லோகத்தில் இருந்து விட்டு-அவர்களின் முதிர்ந்த கர்மாக் களின் பலன்களை அனுபவித்துவிட்டு, அவர்கள் அதே பித்ருயான மார்க்க வழியாகத் (எந்த வழியினால் மேலே சென்றனரோ-அதே

வழியாக) திரும்பி பூமியில் பிறக்கிறார்கள். இங்கே சம்சயம்-திரும்பி வருகிற ஜீவன் மீதியுள்ள பாபபுண்யங்களுடன் (அனுபவித்தது போக-மீதியுள்ளவை) இறங்கி வருகிறானா-அல்லது இல்லையா? (இது வரை ஜீவனுக்கு பூதசூக்ஷ்மங்களின் சேர்க்கை சொல்லப்பட்டது. இப்போது மீதியுள்ள பாபபுண்ய கர்மாக்களும் சொல்லப்படுகின்றனவா-இதுதான் சந்தேகம். யாது சரியாகும்? கர்மாக்கள் எல்லாமே அனுபவிக்கப்பட்டு-மீதி ஒன்றுமில்லாதபடி ஜீவன் பூமியில் இறங்குகிறான் என்று சொல்வது சரியாகும்-अनुशय மீதமுள்ள கர்மவாஸனையுள்ளவனாய் அனுபவிக்கப்பட்ட கர்மாக்களின் மீதியுள்ளவை-புக்த சிஷ்டம் கர்ம-பூராகர்மாக்களும் அனுபவிக்கப்பட்டுத்தீரவில்லை; அதனால் மீதியுள்ளவை. "यावत्संपातमुषित्वा" (எதுவரை கர்மாக்கள் இருக்கின்றனவோ - அதுவரை இருந்துவிட்டு); (இங்கே பூர்வ பக்ஷி ஸம்பாத என்கிற பதத்திற்கு ஸம்பூர்ண கர்மங்களும் என்று அர்த்தம் செய்து-மீதமில்லாதவை என்கிறான். சரியான அபிப்ராயம் என்ன வென்றால் எந்த கர்மாக்கள் பலன்களைக்கொடுக்க ஆரம்பித்தனவோ-அவைகளே சொல்லப்படுகின்றன. ஸ்வர்க்க பலனை அனுபவித்தபிறகு எதுமிச்சமிருக்கிறதோ அதனுடனும் மற்ற கர்மாக்களுடனும் (பூலோகத்தில் பலன் கொடுக்கத்தயாராக விருக்கும் அந்தக் கர்மாக்களுடன் அவன் கீழே இறங்கிவருகிறான் எனக்கொள்ளவேண்டியது)

संपतत्यनेन எந்த புண்யகர்மங்களின் உதவியினால் அந்த ஜீவன் ஸ்வர்க்க லோகத்திற்குப் பறந்து செல்கிறானோ அதை संपातः என்று கர்மமாகச் சொல்லப்படுகிறது. சுருதியின் முடிவிலேயும் பிரு. உ. 6-4-6 प्राप्यान्तं कर्मणस्तस्य यत्किञ्चेह करोत्ययम्। எந்த சிறிய கர்மாவை அவன் செய்திடினும்-அந்த கர்மாவின் பலனையடைந்த பிறகு, அவன் இந்த உலகத்திற்குத்திரும்பி வருகிறான்; மீண்டும் இங்கே கர்மாக்களைச் செய்வதற்கு. இந்த சுருதியும் முன் கூறிய அர்த்தத்தையே கூறுகிறது. तस्माल्लोकात् पुनरेत्यस्मै लोकाय कर्मणे மீண்டும் கர்மாக்களைச் செய்வதற்கு அவன் அந்த லோகத்திலிருந்து இங்கு வருகிறான்.

(சித்தாந்தம்) இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுகிறோம். अनुशयवान् - மீதமுள்ள கர்மவாஸனையுள்ளவனாய் -

அதனுடன் (மீதியுள்ள கர்மங்களுடன்) அவன் கீழே இறங்குகிருன். எப்படி - **दृष्टस्मृतिभ्याम्** சுருதி ஸ்மிருதிகளாலே காட்டப்பட்ட அர்த்தத்திறைல். ச்ருதியோ—சா.2. 5-10-7 **तत् य इह रमणीयचरणा अभ्याशोह, यत् ते रमणीयां योनिमापद्येरन् ब्राह्मणयोनिं क्षत्रिययोनिं वैश्ययोनिं वा, अथ य इह कपूयचरणा अभ्याशोह, यत् ते कपूयां योनिमापद्येरन् श्वयोनिं वा सूकरयोनिं वा चण्डाल योनिं वा-इति**—எவர்கள் பூமிக்குத்திரும்பி வருகிருர்களோ-மீதியுள்ள நல்ல கர்மாக்களுடன் அவர்கள் நல்ல கர்ப்பங்களில் புகுகிருர்கள் பிராம்பண-க்ஷத்ரிய-வைஸ்ய கர்ப்பங்களில். எவர்கள் மீதியுள்ள கெட்ட கர்மங்களுடன் வருகிருர்களோ அவர்கள் நீசமானகர்ப்பங்களில்-அதாவது நாயோ பன்றியோ-சண்டாள யோனிகளில் பிறக்கிருர்கள். இறங்குபவர்களுக்கு கெட்ட (பாப) கர்மாக்களும். நல்லகர்மாக்களும் ஒதப்படுவதால் - நல்ல கர்மங்களை உடையவர்கள் பிராம்மண ஜாதியில் பிறக்கிருர்கள்; தீய கர்மாக்களையுடையவர்கள்-மட்டமான-நாய் பன்றி-சண்டாள யோனிகளில் வந்து பிறக்கிருர்கள். **कपूयचरणाः- कुत्सितकर्माणः**—வெறுக்கத்தக்க கர்மாக்கள், அவர்கள் வெறுக்கத் தகுந்த யோனிகளையடைந்து பிறக்கிருர்கள் (நாய் - பன்றி - சண்டாளன்).

ஸ்ம்ருதியும் அவ்விதமே காட்டுகிறது - கெளதம் - 2 - 11 **वर्णा आश्रमाश्च स्वकर्मनिष्ठाः प्रेत्य कर्मफलमनुभूयततः शेषेण विशिष्ट देशजातिकुलरूपायुश्श्रुतवृत्त वित्तसुखमेधसो जन्म प्रतिपद्यन्ते, विषवञ्चो विपरीता नश्यन्ति**-பல்வேறு வர்ணங்களில் இருப்பவர்களும், பல்வேறு ஆஸ்ரமங்களிலிருப்பவர்களும் தங்கள் காரியங்களைச் செய்துவிட்டு-அதன் பலன்களை அனுபவிக்கிருர்கள். பிறகு மீதியுள்ள சொற்பமான கர்மாக்களிறைல் மீண்டும் பூலோகத்தில் நல்ல குடும்பங்களில் வந்து பிறக்கிருர்கள். சுகமேதஸ் நிரம்பிய குடும்பங்களில் வந்து பிறக்கிருர்கள். நல்ல ரூபம் கொண்டவர்களாகவும் அழகு-அறிவு-ஆயுஸ் தனம் - சாரித்திரியவாழ்க்கை சந்தோஷம் இருப்பு - ஆரோக்யம் இத்யாதிகளுடன் பிறக்கிருர்கள். அதற்கு மாருக-தீய கர்மாக்களை மீதமுள்ளவர்கள் - விபரீத பலன்களால் நசித்துப் போகிருர்கள் (துக்கமடைகிருர்கள்).

இதே மாதிரி ஆபஸ்தப்ப கிருஹ்ய சூத் 2-1ல் ततः परिवृत्तौ कर्मफलशेषेण जातिं रूपं वर्णं बलम् मेधां प्रज्ञां द्रव्याणि धर्मानुष्ठानमिति प्रतिपद्यन्ते-ஸ்வர்க்கத்தில் நல்ல இன்பங்களை அனுபவித்து விட்டு, பூமிக்குத் திரும்பிவரும் ஜனங்கள் மீதியுள்ள கர்மாக்களுடன்-நல்ல யோனிகளில் பிறந்து, நற்பிறப்பையும், அழகு நிறம், பலம், புத்தி, ஞானம் எல்லாவற்றையும் பெற்றவர்களாகவும், முக்காலங்களை அறிந்தவர்களாகவும் - அதனால் மீண்டும் ஸ்வர்க்கத்தை அடைய வைக்கும் தர்மங்களையும் (வைதிக கர்மாக்களையும்) செய்கிறார்கள்- இவ்விதம் பிறப்பு இறப்பு என்கிற சக்கரத்தில் அகப்பட்டு சுழல் பவர்போல - சுகங்களுடன் இரண்டு உலகங்களிலும் - சம்பந்தப் பட்டுச் சுழல்கிறார்கள். (ஆபஸ். த. சூ. 2-1-2.) यावत्संपातम्- எதுவரை ஸம்பாதம் இருக்கிறதோ சா. 2-5-10-5) என்கிற வாக்யத்தில் ஸம்பாதம் என்கிற பதத்திற்கு அர்த்தம் - எந்த குறிப்பிட்ட கர்மாவோ அதன் பலன் கொடுக்க ஆரம்பித் திருக்கிறதோ - அந்த கர்மாவாகும். (சங்கர பாஷ்யத்தில் - ஸம்பாத முள்ளவரை - என்பதில் ஸம்பாத சப்தத்தால்-இதனால் இவ்வுலகினின்றும் அவ்வுலகைப் பலானுபவத்திற்கு வேண்டிச் செல்கின்றனர் - என்ற வ்யுத்பத்தியால் (விரிவுரையால்) கர்மாக் களின் வாஸனை சொல்லப்படுகிறது. மேலும் அந்த யாகாதிகாரிக ளுடைய அந்தக் குறிப்பிட்ட கர்மமானது எப்போது முடிவடை கின்றதோ, அதுவரை அவர்கள் அனுபவித்து விட்டு பிறகு பூமிக்குத் திரும்பி வருகின்றனர்-என்கிற சுருதியாலும் இதே பொருள் தெரிவிக்கப்படுகிறது).

ஆகவே யாவத் ஸம்பாதம் - என்பது பலத்தைக் கொடுக்கக் கூடிய பிரவிருத்த கர்ம விசேஷ விஷயமாகிறது. यत्किञ्चेह करोत्ययम् - எந்த சிறிய கர்மம் செய்த போதிலும் - இந்த உலகில் (பிரு. 2. 5-4-6) இந்த வாக்யமும் அதே பிரவிருத்த (பலன் கொடுக்க ஆரம்பித்த) கர்மாவைச் சொல்கிறது. மேலும் எந்த கர்மாக்களின் பலன்கள் அனுபவிக்கப்படாமல் அவைகளுக்கு யாதொரு பிராயசித்தமும் செய்யப்படாமல் அப்படியே யிருக்கின் றதோ அனுபவிக்கப்படாமல் நாசமடையாமல் இருக்கின்றனவோ- அந்தக் கர்மாக்கள் நாசமடைகின்றன என்று சொல்வது சரி யாகாது. ஆகவே எவர்கள் ஸ்வர்க்கம் போன்ற உலகங்களுக்குச்

எந்த மார்க்கமாகச் சென்றிருக்கிறார்களோ, அவர்கள் மிஞ்சியுள்ள கர்மாக்களுடன் - அனுபவிக்கப்படாமல் எவை யிருக்கின்றனவோ அவைகளை அனுபவிக்க அவர்கள் பூமிக்கு வேறு மார்க்க மாக (பித்ருயான மார்கம்) திரும்பி வருகிறார்கள் - सानुशया एव यथेतमनेयम् - அதே பித்ருயான மார்க்கமாக - மிஞ்சியுள்ள கர்மாக்களுடன் திரும்பி வருகிறார்கள் - இதற்கு அர்த்தம் ஆரோஹண பிரகாரமாக - பிரகார முடிவிலே - அவரோஹணத்திலும் மீண்டும் திரும்பி வருகிறார்கள். ஆரோ ஹணம் - தூம மார்க்கம் - அதில் புகை - கிருஷ்ணபக்ஷம் - தக்ஷிணாயனம் பித்ருலோகம், ஆகாயம் - சந்திரன் - இதற்குள்ள அபிமான தேவதைகளை அவர்கள் சந்திக்கிறார்கள் - ஆனால் அவ ரோஹணமே (கீழே இறங்குதல்) சந்திரன்-என்கிற ஸ்தானத்திலி ருந்து ஆகாசம் வாயு புகை-எந்த வழி ஆரோஹண வழியாக விருந்ததோ-அதே அவரோஹண வழியாகும். வாயுவை அடைந்து (பித்ருலோகம் செல்வதாகச் சொல்லப்படவில்லை-அதனால் அவ ரோஹணவழி வேறாக விருக்கிறது (ஆரோஹண வழியிலிருந்து) ஆகாசம் அவரோஹணத்தில் சொல்லப்படுகிறது यथेतम्-வாயுவை அடைதல் பித்ருலோகங்களை அடையாமல் அவரோஹித்தல்-இதில் வித்யாஸ மிருக்கிறது இந்த வழி இஷ்டா பூர்த்தி போன்ற நற் கர்மாக்களைச் செய்தவற்கு ஓதப்படுகிறது.

(சங்கர பாஷ்யத்தில் - அநுஸயத்தை. கெட்ட கர்மாக்கள் நல்ல கர்மாக்கள் என்று சுருதி பிரித்திருப்பதாகச் சொல்கிறது என்று சொல்லப்பட்டது. "அவர்களுள் ரமணீய சரணரோ, பின்னர் இங்கு எவர்கபூய (தீய) சரணரோ (கர்ம முள்ளவரோ) என்பதாம். ஆதலால் இறங்கும் ஜீவர்கள் அனுசயமுள்ளவர் களாக இறங்குகின்றனர் என்பது தெளிவாகும்)-

**ஸி. ஸூத். चरणादिति चेन्न तदुपलक्षणार्थेति कार्ष्णाजिनिः (3-1-9)**

**சரணாதிதி சேத் ந ததுபலக்ஷணார்த்யேதி கார்ஷ்ணாஜிநி: (-do)**

சரணாதிதி சேத்-சுருதி சொல்கிறது தத்ய இஹரமணீய சரணா: என்பதில் சரணா: சப்தபிரயோகமிருப்பதால் ஆசாரத் தினாலேயே - (பிராஹ்மணாதி) நற்பிறப்பபை அடைகின்றான்

என்றுல்-ந-அவ்விதமில்லை. (அதாவது அனுபவிக்கப்பட்ட பலனை யுடைய கர்மத்தைக் காட்டிலும் வேறுன கர்மத்தினுலன்று என்று சொல்லப்படுமாகில் - ந - அவ்விதமில்லை என்பதாம்). கார்ஷ்ணுஜிநி இந்த பெயருடைய ஆசார்யர், உபலக்ஷணுர்த்த இதி சரண சுருதியானது அநுஸயத்தை லக்ஷணமுறையாக சூசிக்கிறது, என் கிருர் (நற்ஜாதியில் பிறப்பு எதனுல் உண்டாகிறது அநுஸயத்தி னுலோ சரணத்தினுலேயா (ஆசாரத்தினுலேயா?) சரணம் என்பது ஆசாரம், சீலம், அனுஸயம், மிஞ்சியுள்ள கர்மாக்களை - அனு பவிக்கப்பட்ட பலனையுடைய கர்மத்தைக்காட்டிலும் வேறுன கர்மம் என்று எண்ணப்படுகிறது)

**रमणीयचरणाः; कपूयचरणाः** மிஞ்சியுள்ள நற்கர்மங்கள், மிஞ்சி யுள்ள தீயகர்மங்கள் என்று அர்த்தம் - இதில் சரணு! என்கிற சப்த பிரயோகம் புண்யபாப ரூபமான கர்மாக்களைச் சொல் வதாகும். அதே பிரகாரம் **चरण** சப்தத்திற்கு ஆசாரம் - லோக வேதப்படி ஆசாரம் என்று சொல்வதும் பிரஸித்தியானதே. லௌகிக பாஷையிலோ வென்றுல் - **चरण** (சரண) ஆசாரம் சீலம் விருத்தம் என்று பர்யாயமாகச் நினைக்கிருர்கள். வேதத்திலும் கூட (தை. சிக்ஷ 11ல்) **यान्यनवद्यानि कर्माणि तानि सेवितव्यानि ...यान्यस्माकं सुचरितानि तानि त्वयोपास्यानि** - அந்த கர் மாக்கள் (கார்யங்கள்) பழியினின்று விலகியுள்ளனவோ-அவை களையே நாம் அனுஷ்டிக்கவேண்டும். அவைகள் சுசரிதமாக (நற்ஆசாரமாக) விருக்கின்றனதோ - எவைகளையே உன்னுல் ஒப்புக்கொள்ளப்படவேண்டும் - இதில் சரணம் என்கிற பதமும் (ஆசாரம்) கர்மா என்பதும் வேறுக விருக்கின்றன என்பது மேல் சுருதியில் காட்டப்பட்டது. அதாவது சரண கர்ம பேதம் காட்டப்படுகிறது. ஆகையால் சரணுத் சீலம்-இது யோநி விசேஷ பிராப்தியாதப்; அதனுல் அது மிஞ்சியுள்ள (அனுஸயத்தினுல்) கர்மாவினுல் யேற்படுவதல்ல-அதாவது ஒன்ருெக்கொன்று வேறு பட்டனவாக விருக்கிறது என்று சொல்லப்படுமானுல் அது சரியில்லை, சரண சுருதி: கர்மத்தை உபலக்ஷண அர்த்தத்தால் காட்டுவதாகும். இவ்விதம் கார்ஷ்ணுஜிநி என்கிற ஆசார்யர் நினைக்கிருர் ; அதாவது ரமணீய சரணு: என்கிற சுருதி அனுஸயத்தை லக்ஷண முறையால் குறிக்கிறது என்பதாகும்

கேவலம் நற்-கெட்ட ஆசாரத்தினுல் சுக்துக்கங்கள் யேற்படு கின்றன, சுகதுக்கங்கள் என்பது புண்யபாபங்கள் ரூபகாகிற கர்மபலன்கள் அன்றோ?

ஸூத். आनर्थक्यमिति चेन्न तदपेक्षत्वात् (3-1-10)
ஆநர்த்த க்யமிதி சேத் ந ததபேக்ஷத்வாத் (-do)

அநர்த்தக்யம் - சரணசப்தவாச்ய ஆசாரத்திற்கே (நல்லது கெட்ட யோநி லாபம்) உபயோகமில்லாமை இதிசேத்-சொல்லப் படின்-ந-அவ்வித மில்லை என்போம். ஏனெனில், ததபேக்ஷத்வாத் அதை விரும்ப வதாலே (யாகாதி கர்மாக்கள் சுத்தயான ஆசாரத்தையே அபேக்ஷித்திருப்பதாலே).

இந்த விதமாக ஆசாரத்தினுல் யாதொரு லாபமுமில்லை. அந்த ஆசாரம் ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டதாகும். அதனுல் யாதொரு பிரயோசனமில்லை என்று சொல்லப்படுமாஞல், பயனற்றிருத்தல் (நல்லது-கெட்டதான யோநிலாப காரணத்வம் சொல்லா விடில்) - அந்த மாதிரிஸ் மிருதி விஹித ஆசாரத்திற்கு உபயோகப்படாமலிகுத்தல் சொல்லப்பட்டால் - நாம் அவ்விதம் கூறுவது சரியில்லை என்போம், तदपेक्षत्वात् நல்ள ஆசாரத்தையே புண்யகர்மங்களின் பலஞக ஒதப்படுகிறது. அதே மாதிரி புண்ய கர்மாக்களுக்கும் சுத்தமான ஆசாரம் அவசியமாகும். आचारवत् நல்ல ஆசாரமுள்ளவன் (ஸ்மிருதிகளின்படி நடப்பவன்) அவனே புண்ய கர்மாக்களான யாகயக்ஞங்களைச் செய்வதற்கு நல்ல அதி காரியாவான். இந்த அபிப்ராயம் இந்த சுருதிகளில் காட்டப் படுகிறது-(தக்ஷ. ஸ1-19) सन्ध्या हीनोऽशुचिः नित्यमनर्हः सर्वकर्मसु- சந்தியை செய்யாதவர்கள் சுத்தமில்லாதவர்கள்; அவனுக்கு ஸர்வ கர்மங்களிலும் தகுதியில்லை. மனுஸமி 11-103 - आचारहीनं न पुनन्ति वेदाः வேதங்களை ஆசாரமில் லாதவனை சுத்தமாக்கு வதில்லை. (இன்னும் ஆசாரமற்றவனுக்கு வேதத்திற்கூறிய கர்மாக்கள் பயனைக் கொடுப்பதில்லை) இம்மாதிரி சுருதிகள் ஒது வதாலே-சரண சுருதி: கர்மங்களை உபலக்ஷண முறையாக அர்த்தம் சொல்கிறது என்று ஆசாரியர் கார்ஷிஞஜினீ அபிப்ராயப் படுகிறுர். (சங்கர பாஷ்யத்தில் சீலத்தால் ஏற்படுவதும்-அனுஸய மாக வானதுமான கர்மமே யோநிலாபத்திற்கு காரணமாகிறது

என்று கார்ஷ்ணாஜிநீ அபிப்ராயப்படுவதால்-ஆசாரத்தினால் நல்ல யோநி பிறப்பும் யேற்படுகிறது. என்பதாகும்.

ஸி. ஸூத். सुकृतदुष्कृते एवेति तु बादरिः (3-1-11)
ஸுக்ருத துஷ்கிருதே ஏவேதிது பாதரி: (-do)

பாதிரி என்கிற ஆசார்யர் ஸுக்ருத துஷ்கிருதே ஏவ புண்யம் பாபம் இவைகளே - (சரண சப்தேந ப்ரத்யாய்யேதே) சரண சப்தத்தால் சொல்லப்படுகின்றன என்று அபிப்ராயப் படுகிறார்.

ஆ சரதி (ஆசாரம்) இம் மாதிரி வாக்யங்களில் உபயோகப் படுத்தப்படுகிறது - எவன் புண்யகர்மாக்களைச் (இஷ்டாபூர்த்தி) செய்கிறானோ—அவனுக்கு "சரதி" என்றும்; தீபகர்மாக்களைச் செய்பவனுக்கு "ஆசரதி" என்றும் சொல்லப்படுவதால்—சரித: பிரயோக மிருப்பதாலே, கர்மம் வேறு ஆசாரம் வேறு - தனியாகச் சொல்லப்பட்டதாலே. சுருதியும் அவ்விதம் பிரித்து தனியாகச் சொல்கிறது. முன்பு காட்டப்பட்டது-அது பிரத்யக்ஷ சுருதி ஸித்தம். ஆசார அனுமித சுருதி ஸித்த விஷயத்தைச் சொல்வதால், கோபலீ வர்த்ந் நியாயம் சரியாகும். (அதாவது கர்மத்தை ஆசாரத்திலிருந்து வேறுபடுத்திச் சொல்லியிருப்பதாலே, விஷயங்கள் வேறாகும். ஒரு சமயத்தில் இருந்ததை, நல்ல ஆசாரத்தினால் அடையக்கூடும் ஆகவே அவ்விதம்சொல்வதுமேற்படி சொல்லப்பட்ட கோபலீ நியாயத்தால் சரியாகும். முக்யார்த்தத்திலே ஒரு விஷயம்(பதம்) சொல்லக் கூடுமானால், அதற்கு கௌணமாக (உபலக்ஷண முறையாக அர்த்தம் சொல்வது சரியாகாது. ஆகவே பாதரி ஆசார்யர் அபிப்ராயப்படுகிறார் - சுகிருத (புண்ய) துஷ்கிருத (பாப) கர்மாக்களை சரண சப்தத்தினால் சொல்லப்படுகின்றன. இங்கே பாதிரி மதம் சூத்திரக்காரரின் மதமாகும் (स्वमतम्) சந்த்யாவந்தனாதி கர்மாக்களினால் ஒருவன் சுத்தமாகிறான் என்கிற வாக்யம் சுருதிகளிலும் இருப்பதால் – அதனால் அவனுடைய ஆசாரத்திலிருந்து சந்தியாபலன் அனுமானிக்கப் படுகிறது - அதனால் அவன் யாகயக்ஞாதிகளுக்கு, கர்மாக்களுக்கு பூர்ண அதிகாரியாகிறான். இது அவனுக்குக் கிடைத்த சிறந்த பலனாகும் (சாரித்திர வாழ்க்கை).

(இங்கே பாதரியின் அபிப்ராயம் சொல்லப்படுகிறது. சந்திய வந்தனாதிகளைச் செய்தலால், அதிகாரி புருஷனாகிறான்-ஆகாரத்தினால் மற்ற வைதிக கர்மாக்களைச் செய்ய தகுதி சொல்லப்படுகிறது. எந்த கர்மாக்களைச் செய்வதால்-அவனுக்கு பழி வராதோ-அந்த கர்மாக்களை வேதங்கள் விஹித கர்மாக்கள் என்று சொல்கின்றன. சுசரிதஸ் - அந்த விஹிதகர்மாக்களைச் செய்தலாகும். ஆகவே பாதரியின் அபிப்ராயம் முக்யார்த்தமாகவேகொள்ளலாம்-கௌணமாக அர்த்தம் பண்ண வேண்டியதில்லை. கார்ஷ்ணாஜினி சொல்கிறபடி. இங்கு கர்மாஎன்கிற பதப்பிரயோகம்- அநுசய சரண; என்கிற பதமும் கோபலி நியாயப்படி-கோ (பசுக்கூட்டம்) பலி வர்த்த (எருது) எருது பசுக்கூட்டத்தில் சேர்ந்ததாகும் ஆனால் அதை பசுக்கூட்டத்தினோடு சேர்த்துக் சொல்லியிருப்பது-எருதைத்தவிர மற்றப் பசுக்களைச் சொல்வதாகும். ஆகையால் சரண; என்கிற பதம் கர்மா என்கிற பதத்தோடு சேர்த்துச் சொல்லியிருப்பதால் கர்ம பதத்திற்கு அர்த்தம் எந்தகர்மாக்களை சுருதிகள் விஹித கர்மாக்களாகச் சொல்லியிருக்கின்றதோ - அவைகளை மாத்திரம் குறிப்பிடுவதாகும். கோபலி வர்த்த நியாயப்படி - பசுக்கூட்டத்தில் எருதை மாத்திரம் சொல்லுவது போல. கார்ஷ்ணாஜினி இவ்விதமாக பாதரியினால்-(சூத்ரக்காரரால்) நிராகரிக்கப்பட்டாலும் அவருடைய (அபிப்ராயம்) ஆசாரத்தைப் பற்றிய அபிப்ராயம் அதிகாரியோக்யதையை ஆசாரம் உண்டாக்குகிறது என்பது ஒத்துக் கொள்ள வேண்டியதாகும்).

ஆகையால் ஜீவர்கள் பூலோகத்திற்கு மிஞ்சியுள்ள கர்மாக்களுடன் தான் இறங்கிவருகிறார்கள் என்பது ஸித்தம். अत: सानुशया एवावरोहन्ति ।

அநிஷ்டாதி கார்யதிகரணம் (3-1-3)

ஸூத். अनिष्टादिकारिणामपि (च) श्रुतम (3-1-12)

**அநிஷ்டாதிகாரிணாமபி ச ஸ்ருதம் (3-1-12)**

அநிஷ்டாதி காரிணாமபி வைதிக கர்மாக்களைச் செய்யாத பாபிகளுக்கு-அவர்களுக்கு கமனம் சந்திரலோகத்திற்குச் சொல்லப்படுகிறது (சந்திரலோக ப்ராப்தி யேற்படுவதால் - புநர் ஜன்மம் உண்டாகிறது.) (இங்கே வைதிக கர்மாக்கள் என்பதால்

யாகயக்ஞாதிகள் ஆகும். இஷ்டா பூர்த்தம்-என்பது பொதுப்பணி குளம் வெட்டுதல், கிணறு வெட்டுதல்-நந்தவனம் அமைத்ததல், கோயில் கட்டுதல் இத்யாதி). (சந்திரலோக பிராப்தி இஷ்டா பூர்த்த அதிகாரிகளுக்குச் சொல்லப்படுகிறது. அநிஷ்டாதிகாரிகளுக்கு இல்லை. வேத விஹித கர்மாக்களைச் செய்யாமலும், நிஷித்த கர்மாக்களைச் செய்கிறவர்களைப் பற்றியும் - சொல்வதாகும்-அநிஷ்டாதி காரிணும்-என்பதற்கு.)

மேல் சொல்லப்பட்டது. கேவலம் இஷ்டா பூர்த்த காரியங்களைச் செய்தவர்களும் - யாக யக்ஞங்களைச் செய்தவர்களும் (சுருதியில் சொல்லியபடி), இன்னும் பல பிரபலதான தர்மாதிகளையும் செய்தவர்களும் சந்திரலோகத்தை அடைந்து, நன்கு போகங்களை அனுபவித்து விட்டு - மீதமுள்ள கர்மபாக்கியினால் (सानुशयाः) பூமிகுத் திரும்புகிறார்கள் என்று இங்கே அநிஷ்டாதி காரிணே (அநிஷ்டாதிகாரிகள் அவர்கள்) கூட சந்திரலோகத்தை அடைகிறார்களா-அல்லது இல்லையா என்பது சிந்திக்கப்படுகிறது. அதாவது எவர்கள் அநிஷ்டாதிகாரிகள்? அதற்கு சமாதானம்; எவர்கள் வேதவிஹித கர்மாக்களைச் செய்யாமலும்; வேதநிஷித்த கர்மாக்களைச் செய்பவர்களும் - இந்த இருவகுப்பினர்களும் பாபகர்மங்களைச் செய்தவர்களாவர், அதனால் அநிஷ்டாதிகாரிகளாகும். அவர்கள் விஷயத்தில் எது சரியாகும்? அவர்கள் கூட சந்திரலோகத்தை அடைகிறார்கள், எப்படி? அவர்களும் சந்திர லோகம் செல்வதாக சுருதி ஓதுகிறது. கௌ. 1 - 2 ல் **ये वै के चास्माल्लोकात् प्रयन्ति, चन्द्रमसमेव मे सर्वे गच्छन्ति, इति अविशेषेण सर्वेषामेव गतिश्रवणात्**—சிலர் இந்த உலகத்திலிருந்து செல்பவர்களாக விருக்கிறார்கள். எல்லோரும் சந்திரலோகத்தை அடைகிறார்கள். இதில் சந்திரலோக கமனம் எல்லோருக்கும் வித்யாஸ மின்றி சொல்லப்படுகிறது.

(கௌஷித சுருதி எல்லோரையும் என்று சொல்வதால் எவர்கள் பிருஹ்மத்தை அறிகிறார்களோ அவர்களைச் சொல்வதாகும் மேலும் எவர்கள் விஹித கர்மாக்களைச் செய்பவர்களும்-நிஷித்த கர்மாக்களைச் செய்யாதவர்களும் - இன்னும் பல பிரபலதான

தர்மங்களையும் யாகயக்ஞாதிகளையும் செய்பவர்களும் சந்திர லோக மடைகிறார்கள். ஆனால் இவைகளைச் செய்யாத பாபி களுக்கு சந்திரலோக பிராப்தி இல்லை. அவர்கள் யமலோகத்தை அடைந்து தண்டனையை அனுபவித்து விட்டு பிறகு பூமிக்கு திரும்பி வருகிறார்கள் என்பதாகும். பூர்வபக்ஷி அவர்களுக்கும் சந்திரலோக பிராப்தி உண்டு எனத் தவறாகச் சொல்கிறான்). (யாதொரு வித்யாஸமின்றி எல்லோரும் சந்திர லோகம் செல் கிறார்கள் என்கிறான்).

இவ்விதம் சொல்வதாய் अविशेषेण யாதொருவித்யாஸமின்றி எல்லோரும் சந்திர லோகத்தை அடைகிறார்கள். இப்படிச் சொல் லப்படுமானால் சுக்ருதம்-துஷ்க்ருதம் (நல்ல செய்கைகள் பாபச் செயல்கள்) இவைகளுக்குள்ளே பரஸ்பரம் வித்யாஸமில்லாமல் போவதுடன் - இரண்டுக்கும் துல்யமான கதியேற்படுவதாகும்- என்று (பூர்வபக்ஷி) சொல்லப்படுமாகில்-ந-அவ்விதமில்லை என்று இன்னொரு பூர்வ பக்ஷி சொல்கிறான் பதில்.

**சூத். संयमने त्वनु भूयेतरेषामारोहावरोहौ तद्गतिदर्शनात् (3-1-13)**
**ஸம்யமநேத்வனு பூயே தரேஷாமாரோ ஹாவரோஹௌ ததகதி தர்சநாத் (3-1-13)**

து-முற்கூறியபடி இல்லை.

ஸம்யமநே-யமலோகத்தில் அநிஷ்டாதி காரிகள் அநுபூய தங்கள் பாபகர்மங்களுக்குரிய தண்டனையை அடைந்து கீழ் இறங்கு கின்றனர்; இதரேஷாம் அந்த அநிஷ்டாதி காரிகளுடைய ஆரோஹா வரோஹௌ-ஏறுதல் இறங்குதல் இவைகள் யேற் படுவதால்-; தத்கதிதர்ஸநாத் - அநிஷ்டாதி காரிகளுக்கு யம லோககமனம் ஸ்ருதியில் சொல்லப்படுவதால்-)

"அவர்கள் யாவரும்" சந்திர லோகத்தை அடைகிறார்கள் என சுருதியில் கூறினது புண்ய சாலிகளைப்பற்றியே; பாபம் செய்தவர் களுக்கு யமலோக கமனம் உண்டாதலால் (சுருதிப்படி)-அவர் களுக்கு சந்திரலோக பிராப்தி இல்லை என்பது சித்தாந்தம்)

து சப்தம் மேற் சொல்லப்பட்ட சந்தேகத்தைப் போக்கி அநிஷ்டாதிகாரிகளுக்கு சந்திரலோக பிராப்தி இல்லை என்று சொல்கிறது. इतरेषाम् - அநிஷ்டாதி காரிணும் (வேத விஹித கர்மாக்களைச் செய்யாமலும், நிஷித்த கர்மாக்களைச் செய்வ தாலும் அநிஷ்டாதி காரிகள் ஆவர். चन्द्रारोहावरोहौ संयमने यमशासने तत्प्रयुक्त यातना: अनुभूयैव சந்திர லோகத்திற்கு ஏறு தலும் அதிலிருந்து கீழ் இறங்கிவருதலும் யேற்படுகிறது. இறங்கி வருதல் ஸம்யமன லோகமாகிற யமலோகத்தில் யமனுடைய கட்டளைப்படி துக்கமாகிற தண்டனையை அனுபவித்து விட்டு கீழ் இறங்கு கின்றனர்; வேறு விதமாக இல்லை எப்படி? तद्गतिदर्शनात् அவர்களுக்கு அம்மாதிரி கதி சுருதியில் சொல்லப் பட்டிருக்கிறது - காணப்படுகிறது. பாபகர்மாக்களைச் செய்தவர் கள் யமனிடம் அகப்பட்டுக் கொண்டு - அவனால் ஸம்யமன லோகத்திற்கு இழுத்துக் செல்லப்படுகின்றனர். (யமவச் யதயா தத்கமநம்). கட. 1-2-6 ல் अयं लोकोनास्ति (न) पर इतिमानी पुन: पुन: वशमापद्यते मे — இந்த உலகமும் இல்லை - அந்த உலகமும் இல்லை-அவ்விதம் எண்ணிக்கொண்டு, அஹங்கார முள்ளவன் (மானி) என் வசத்தில் அடிக்கடி அகப்பட்டு, கொள்கிறான்; (யமன் சொல்வதாக இருக்கிறது) ருக். ஆர. वैवस्वतं संगमनं जनानां यमं राजानम्— இதியாதிஷீ (அவனை-அந்த யமராஜன் - விவஸ்வா னுடைய பிள்ளையான யமராஜன் (சூரியனுடைய புத்ரன்) அழைத்துக் செல்கிறான்-அநத யமலோகம் பாபிஷ்டர்கள் சேரும் இடமாகவிருக்கிறது.

(கடவல்லியில் யமன் தன் அஹங்காரம் பிடித்த மனிதர்களைப் பற்றிச் சொல்லும் போது - சொல்கிறான் அவர்கள் இந்த உலகத்தையே பெரிதாக மதித்து பாபம் செய்கிறார்கள்; பரலோகத்தில் நம்பிக்கை அவர்களுக்கில்லை. அடுத்த சூத்ரம் அவசியம் என்று சொல்லப்படுகிறது ஏனெனில் பாபிஷ்டர்கள் யமலோக மடைகிறார்கள் என மேற் சொன்ன சுருதிகள் நேராகச் சொல்லவில்லை என்கிறபடியால்)

ஸூத்: स्मरन्ति च (3-1-14)

ஸ்மரந்திச (-do)

*ஸ்மிருதிகளிலும் எல்லோரும் (அநிஷ்டாதிகாரிகள்) யமனுடைய வசமடைந்து துக்கமடைகிருர்கள் - என பராசர முனிவர் போன்ற பலராலும் சொல்லப்பட்டிருக்கிறது* सर्वे चैते वशमू यान्ति यमस्य भगवन् किल *பகவந், இந்த பாபிகள் (அநிஷ்டாதி காரிகள்) யமனுடைய வசமடைந்து யமலோகத்தை தண்டனைக் காக அடைகிருர்கள்.*

ஸூத். अपि सप्त (3-1-15)

அபிஸப்த (-do)

*அபி - மேலும் ஸப்த - நரகங்களும் பௌராணிகர்களாலும் உபதேசிக்கப்படுகின்றன.*

*பாப கர்மங்களைச் செய்தவர்களுக்கு அடையப்பட வேண்டிய இடம் ரௌரவாதீ ஏழுலோகங்களாகும்; இவை ஏழு; நரகங்களை யும் ஞாபகப்படுத்துகின்றன.*

*இந்த ஆட்சேபத்திறகு-ஸப்தலோக கமனம் பாபிகளுக்கு எப்படி யேற்படுகிறது. இதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர்.*

ஸூத் तत्रापि तद्व्यापारादविरोधः (3-1-16)

தத்ராபி தத்வயா பாராத விரோத: (do)

*தத்ராபி-பூமிக்கு கீழுள்ள ரௌரவாதி நரகங்கள் தத்வ்யா பாராத் - யமனுக்கே யஜமானனுக விருத்தல் அங்கீகரிக்கப்படுத லால் - அவிரோத; - ஸ்மிருதிகள் சொன்னதற்கு விரோதமில்லை.*

*யமனுடைய ஆக்ஞை கீழுள்ள ரௌரவாதி நரகங்களில் சொல்லப்படுவதால் செயல்படுவதால் ஸ்மிருதிகளுக்கு விரோதம் ஒன்றுமில்லை. ஆகவே அநிஷ்டாதிகாரிகளுக்கு தங்கள் கர்மானுப் பிரகாரம் இந்த யமலோக கமனம் அங்கு யமதண்டனையை அனு பவிப்பது; பிறகுஇவர்களுக்கு ஆரோஹணமும் அவரோஹணமும் சந்திரலோக வழியாகயேற்படுகிறது என்று சொல்லப்படுமானல் - நாம் பதில் அளிக்கிருேம்.*

**சித். சூத். विद्याकर्मणोरिति तु प्रकृतत्वात् (3-1-17)**

**வித்யா கர்மணோரிதிது து ப்ரகிருதத்வாத் (do)**

**வித்யா கர்மணோரிதிது** - **வித்யா** (உபாஸனம்) கர்மம் இவைகளே; பிரகிருதத்வாத் - தொடர்ச்சியை அனுசரித்து கொள்ளப் படுவதாலும், அநிஷ்டாதிகாரிகளுக்கு சந்திரலோக பிராப்தி இல்லை. (இங்கு காரணம் சொல்லப்படுகிறது-பித்ருயானம் தேவ யானம் எனப்படும் இரண்டு மார்க்கங்கள் வித்யா உபாஸ கனுக்கும் சிரேஷ்டமான இஷ்டா பூர்த்தி போன்ற கர்மாக்களைச் செய்வதர்களுக்குமே ஓதப்படுகிறது. இவர்களுக்கு சந்திரலோக பிராப்தி இல்லை என்று தெளிவாகிறது).

துசப்தம் பூர்வபக்ஷியின் அபிப்ராயத்தைத் தள்ளுகிறது. அநிஷ்டாதிகாரிகளுக்குக்கூட சந்திரலோக பிராப்தி சொல்லப்பட வில்லை, ஏன்? विद्याकर्मणोरिति வித்யை (உபாஸனம்) இஷ்டா பூர்த்தி போன்ற சிரேஷ்டமான கர்மாக்களின் பலனுக தேவ யானம் பித்ருயான மர்க்கங்களில் கமனம் (செல்லுதல்) யேற்படு கிறது. வித்யையின் பலனை அனுபவிப்பதற்காக தேவயான பித்ருயான மார்க்கங்கள் அமைகின்றன. என்ன சொல்லப்பட்ட தென்ருல் அநிஷ்டாதி காரிசளுக்கு எப்படி வித்யை (உபாஸனம்) இல்லாதவனுக்கு தேவையான கமநம் ஏற்படுகிறதில்லையோ, அது போல இஷ்டா பூர்த்தி-மிகசிரேஷ்டமான தானதர்மங்கள் செய் யாதவர்களுக்கும் பித்ருயான மார்க்க கமனம் ஏற்படுவதில்லையே என்று அர்த்தம். (அதாவது வித்யா உபாஸகன் தேவயான பதத்தினுல் மோக்ஷமடைகிருன்; இஷ்டாபூர்த்தி சிரேஷ்டமான தான தர்மங்கள் செய்து பித்ருயான மார்க்கத்தினுல் ஸ்வர்க்காதி லோகங்களை அனுபவித்து விட்டு - மிஞ்சியுள்ள கர்மாக்களுடன் பூமியில் மீண்டும் நற்பிறவி எடுக்கிருன் என்பதாகும்) தேவயான பித்ருயான மார்க்கங்கள்-வித்யா விஷயமாகவும், இஷ்டா பூர்த்தி போன்ற புண்ய கர்மங்களின் விஷயமாகவும் எப்படி ஏற்படுகிறது எனக் கேள்வி கேட்கப்படுமானுல் - அதற்கு நாம் பதில் கூறுவது प्रकृतत्वात् அந்த பிரகிருதத்திலே இதுதான் விஷயமாகப் பரிசீலிக்கப்படுகிறது. (ஏதயோ: பதோர் ந கத ரேணசன என்று

பிரகரணத்தில் படிக்கப்பட்டிருக்கிறது. எவர்கள் வித்யை என்ற ஸாதனத்தினால் (அடையத்தக்க) தேவயானம் என்ற மார்க்கத்தில் அதிகாரம் பெறவில்லையோ - (அதே பிரகாரம்) கர்மத்தினால் அடையத்தக்க பித்ருயானம் என்ற மார்க்கத்திலும் அதிகாரம் பெறவில்லையோ, அவர்களுக்கு நீசமான கொசு-ஈ புழு முதலான க்ஷுத்ர ஜந்து ரூபமானதும், அடிக்கடி பிறப்பது இறப்பது ஆகிற மூன்றாவது மார்க்கம் ஏற்படுகிறது என்பதாம். இதனால் அநிஷ்டாதி காரிகளுக்கு சந்திரலோக கமனம் இல்லையாகும்.

பிரக்ருதத்திலே, வித்யா உபாஸகனுக்கு தேவயான கமனம், சிரேஷ்ட கர்மாக்களுக்கு: பித்ருயான மார்க்க கமனமும் சொல்லி விட்டு சா. உ. 5-10-1ல் तद्ये इत्थं विदुः ये चेमे, अरण्ये श्रद्धा तप इत्युपासते எவர்கள் ஜீவனின் நிஜஸ்வரூபத்தை அறிகிறார்களோ பஞ்சாக்னிவித்யையில் சொல்லிய பிரகாரம்-அவர்களும் ; எவர்கள் அரண்யங்களில் சஞ்சரித்துக் கொண்டு சிரத்தையுடன் தபஸ் செய்கிறார்களோ - ( மீண்டும் சுருதி தொடர்ந்து சொல்கிறது ) तेऽर्चिषमभि संभवन्त्यर्चिषोऽहः அந்த பஞ்சாக்னிவித்யையின் உபாஸகன் அர்ச்சிஷ் (பிரகாசம்) என்பதற்கு அபிமானி தேவதை - அதிலிருந்து அஹஸ் (பகல்) அபிமானி தேவதையிடம் சென்று (சா. உ. 5-10-1-2) அர்ச்சிஷ்ஷிலிருந்து பகல் தேவதையிடம் ஒப்பிவிக்கப்பட்டு - இதனால் தேவயானம் சொல்லப்படுகிறது अथ ये इमे ग्रामे इष्टापूर्ते दत्तमित्युपासते என்று சொல்லிவிட்டு. (அதாவது பித்ருயான மார்க்கத்திற்கு - இந்த சுருதி ஓதுகிறது. எவர்கள் கிராமங்களில் இருந்து கொண்டு வைதிக கர்மாக்களையும் இஷ்டாபூர்த்தி-தானதர்மங்களாகிற சிரேஷ்டமான கர்மாக்களைச் செய்தவர்கள்; மேலும் சுருதி தொடங்கிச் சொல்கிறது ते धूममभि संभवन्ति அவர்கள் புகை முதலியவற்றின் அபிமானி தேவதையை அடைகிறார்கள். (சா. உ. 5-10-3) இங்கு தூமமார்க்கம் - அல்லது பித்ருயானம் என்கிற மார்க்கம் சொல்லப்படுகிறது. யாகயக்ஞங்களையும் - குளம் வெட்டுவது - ஆலயம் கட்டுவது முதலானவற்றையும்-தானதர்மங்களையும் பலன்களைக் கோரிச் செய்பவர்கள் பித்ருயான மார்க்கம் வாயிலாக ஸ்வர்க்கம் சென்று அங்குள்ளோருக்குப் போக்யமாகச் சந்திரனைப் போன்ற சரீரம் பெறுவர்.

அம்மார்க்கமானது புகை இரவு கிருஷ்ண பக்ஷம் தக்ஷிணாயனம், பித்ரு லோகம், ஆகாசம், சந்திரன் என்ற முறையில் அமைந்ததாம். அங்கிருந்து திரும்பின பிறகு ஜீவன் வரும் மார்க்கமாவது. ஆகாசம், வாயு-புகை-மேகம் மழை, ஒஷதிகள் எனவாம். ஒஷதிகளிடமிருந்து சரியானபடி புருஷனிடம் போய்ச்சேருவது வெகுவாகத்தாமதிக்கும். பிறகு அவனவனது முன் கர்மத்திற்குத் தகுந்தபடிசேர-மேலும் கீழுமான ஜன்மங்கள் யேற்படுகின்றன. (ஐஸ்வர்ய காமன், கிராமவாஸி, ஆத்மோபாஸகன் நகரவாஸி; பிருஹ்ம மோபாஸகன் வநவாஸி.) கீழ்ச்சொன்ன மார்க்கங்களிலே ஸம்பந்தம் பெறுமே, அடிக்கடி பிறப்பதும், மரிப்பதுமாய் கொசு, புழு பூச்சிகளைப் போல பிராணிகளுமுண்டு. மேலுலகத்திற்குச் செல்வதென்பது இவற்றிற்கு இல்லை.

இந்த சுருதிகளால் பித்ருயான வசனமே இஷ்டா பூர்த்தி காரிகளுக்குச் சொல்லப்படுகின்றன. ये वै के चास्माल्लोकात् प्रयन्ति, चन्द्रमसमेव ते सर्वे गच्छन्ति (இன்னும் சிலர் இந்த உலகிலிருந்து வெளிக்கிளம்புகிறார்கள்; எல்லோரும் சந்திர லோகத்தை அடைகிறார்கள் (கௌ- 2. 1-2); இந்த சுருதிவசனத்திற்கு ते सर्वे அவர்கள் எல்லோரும் போகிறார்கள் என்பதற்கு அர்த்தத்தை மாற்றி இவ்விதமாக அர்த்தம் கொள்ள வேண்டியது (परिणेयम्)

மேலும் சொல்லப்படலாம் - சரி - இந்த பாபிகள் சந்திர லோகத்தை அடையாமற் போனால் - அவர்கள் விஷயத்தில் பஞ்சமாஹூதி (ஸ்திரி கர்ப்பத்தில் ரேதஸ்ஸை ஹோமம் செய்வது) ஏற்படமலிருப்பதால், அவர்களுக்கு சரீர ஆரம்பம் சொல்லப் படுவதில்லை पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति — इति பஞ்சம ஆஹூதியினால் ஜலங்கள் புருஷ சப்தவாச்யமாகின்றன - என்று (சா- உ. 5-9-1) சுருதி சொல்வதால், சரீர ஆரம்பம் சொல்லப் படுகிறது. அந்த ஆஹூதி ஜீவனுக்கு சந்திரலோக ப்ராப்திக்கு முன்பு ஓதப்படுகிறது. ஆகையால் சரீர ஆரம்பமாவதற்கு - நாம் ஒத்துக்கொள்ள வேண்டியது அவர்கள் விஷயத்தில், சந்திரனுக்கு ஆரோஹித்துச் செல்வதும், சந்திரனிலிருந்து அவரோஹித்து இறங்குவதும் யேற்படுகிறது. (அதாவது அநிஷ்டாதி காரிகளுக்கு இல்லை பஞ்சம ஆஹூதிக்கு சந்திர லோக அவரோஹிக்கு உண்டு இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் பதில் உரைக்கிறார்.

ஸி. ஸூத். न तृतीये तथोपलब्धे (3-1-18)

ந த்ருதீயே ததோபலப்த்தே: (— do)

*த்ருதியே - மூன்றாவது ஸ்தானத்தில் (அதாவது பாபிகள் விஷயத்தில் ந-ஆஹுதிகளின் பஞ்சம ஆஹுதிகள் அபேக்ஷையில்லை; ஏனெனில் ததோ பலப்தே; அவ்விதம் காணப்படுகிறபடியால். (சுருதி சொல்கிறபடியால்)*

மூன்றாவது ஸ்தானத்தில் (பாபிகள் விஷயத்தில்) சரீர ஆரம்பமாவதற்கு. பஞ்சமாஹுதே அபேக்ஷயில்லை. कुतः-तथोपलब्धे : மூன்றாவது ஸ்தானம் என்பதில் - கேவலம் பாபகர்மங்கள் செய்பவர்களைக் குறித்து இந்த சப்தம் சொல்கிறது. அவர்களுக்கு தேக ஆரம்பத்திற்காக பஞ்ச மாஹுதி (ஸ்திரி கர்ப்பத்தில் ரேதஸ்ஸை விடுதல்) அபேக்ஷயில்லை என்கிற விஷயம் காட்டப்படுகிறது. அதனால் तथोपलब्धे: அதாவது அநபேக்ஷத்வம் சொல்லப்படுவதால், அதற்கு (ஆஹுதி) அவசியமில்லை. என்ன சொல்லப்பட்டது?. சா. 2-5-3-3 वेत्थ यथा केनासौ लोको न संपूर्यते - உனக்குத் தெரியுமா - எதனால்- ஏன் அது (அந்த மேல் உலகம்) நிரம்பப்படவில்லை? - இந்த கேள்விக்கு பிரவாஹணனே பதில் சொல்கிறான்—

अथैतयोः पथोर्न कतरेण चुन तानीमानि क्षुद्राण्यसकृदावर्तीनि भूतानि भवन्ति जायस्व म्रियस्वेति । एतत् तृतीयं स्थानं । तेनासौ लोको न संपूर्यते । *(சா. 2. 5-10-8)*

*(சா. 2-5-10-8)* இப்போது - இந்த நீசமான ஜந்துக்கள் - (புழு பூச்சி கொசு போன்றவை) - இவை அடிக்கடி பூலோகத்தில் பிறப்பை யடைகின்றன, இவர்கள் எந்த மார்க்கத்தாலும் (தேவ யானம் - பித்ருயான வழிகளால்) போகிறதில்லை. அடிக்கடி பிறப்பதும் இறப்பதுமே - இவர்களின் ஸ்தானம் - இதையே மூன்றாவது ஸ்தானம் எனச் சொல்கிறோம். இந்த ஸ்தானத்தி லுள்ளவை பாப ஜன்மங்கள்-அவர்களால் பரலோகம் நிரம்பப் படுவதில்லை—அதாவது அவர்கள் அங்கு செல்வதில்லை. இங்கேயே

பிறந்து இறக்கிறார்கள். இதனால் இந்த மூன்றும் ஸ்தானத்திற்கு செல்பவை-அவைகளுக்கு த்யூலோக ஆரோஹணமோ - அவரோஹணமோ இல்லை; அதனால் அந்த த்யுலோகம் அவர்களால் பூர்த்தி செய்யப்படுகிறதில்லை என்கிற வாக்யம். இந்த த்ருதீய ஸ்தானத்திற்காக - சரீர உற்பத்தி அவசியமில்லை - அதனால் ஐந்தாவது ஆஹூதி அவசியமில்லை. (அநபேக்ஷை).

ஐந்தாவது ஆஹூதியில் (पञ्चम्यामाहुतौ) என்பதால் ஐந்தாவது ஆஹூதியில் ஹோமம் செய்யப்படும் ஜலங்களுக்கும் அக்னிக்குமுள்ள சம்பந்தமே புருஷ சப்தவாச்யனாக ஆகிறது (அப்புக்களாகிற காரணவஸ்துவே புருஷ சப்த வாச்யமாகிறது) - அந்த ஹேது மாத்திரம் தான் சொல்லப்படுகிறது - नान्यत् வேறு ஒன்றுமில்லை. निवारयति - (அதை ஒதுக்கித் தள்ளி எது மிச்சப்படுமோ அதைச் சொல்வதற்குக் ஹேதுவோ வஸ்துவோ இல்லை; अवधारणा श्रवणात् - (இன்னொன்றை இருப்பதாகச் சொல்லவேயில்லை என்பதால்).

(இங்கு சொல்லப்படுவது-சா. 2.5-10-8 பகவத் ராமானுஜர் வேறு விதமாக எண்ணமிடுகிறார். த்ருதீய ஸ்தானம் உள்ளவர்களுக்கு பரலோகமில்லை. அதாவது இந்த உலகிலே அடிக்கடி பிறந்து இறப்பதுமாக விருக்கிறார்கள் (பிறப்பது-இறப்பது). இம் மாதிரி ஆக்ஞை இந்த பிராணிகளுக்கு படைப்பு கடவுளால் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும்). (சங்கர பாஷ்யத்தில் ஹோமாங்கி மனுஷ்ய சரீரத்திற்குக் காரணமாகும்; ஆனால் புழு பூச்சி பறவை முதலியவற்றின் சரீரத்துக்கும் காரணமாய்ச் சொல்லப்படவில்லை. புருஷன் என்ற வார்த்தை மனித ஜாதியைக் குறிப்பதாக விருக்கிறது. அதனால் யேற்படுவது - எவர்களுக்கு ஏறுதல் இறங்குதல் உண்டு-அவர்கள் ஸம்பவிப்பதற்கு ஐந்தாவது ஆஹூதி யேற்பட்ட பிறகு சரீரம் உண்டாகிறது. மற்றவர்களுக்கோவெனில், ஹோமாங்கியை - இல்லாமலே - மற்ற பூத ஸூக்ஷ்மங்களுடன் சேர்ந்த ஜலங்களால் சரீரம் உண்டுபண்ணப்படுகிறது).

## சூத்: स्मर्यतेऽपि च लोके (3-1-19)
## ஸ்மர்யதே அபி ச லோகே (do)

அபிச (மேலும்) - லோகே - உலகத்திலும் (மஹாபாரதாதி நூல்களிலும்) ஸ்மர்யதே - காணப்படுகிறது — த்ரோணர், திருஷ்டத்யும்னன், திரௌபதி இவர்களுக்கு அயோநிஜத்வம் சொல்லப்படுகிறது. இதனால் ஐந்தாவது ஆஹீதி தான் சரீர ஆரம்பத்தைச் செய்கிறது-என்கிற நியமமில்லை. (நியமபங்கம்)

(த்ரோணரின் பிறப்பு-பரத்வாஜருக்கும் - கிருதாசி என்ற தேவப் பெண்ணுக்கும் ஏற்பட்ட மோஹம். அச்சமயம் வீர்யம் வெளிவர - த்ரோணம் என்கிற கமண்டலுவில் போட்டு வைத்ததாகவும் - அதிலிருந்து துரோணாச்சாரியார் உண்டானர் என்றும்; துருபதராஜன் யாகம் செய்யும்போது, யாக குண்டத்தி லிருந்து திருஷ்டத்யும்னனும் திரௌபதியும் வெளிவந்ததாகவும், ஜனகன் யாகம் செய்வதற்காக - பூமியை உழும்போது ஒரு பெட்டியில் சீதை குழந்தை வடிவாக விருந்தனள் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.)

புண்ய கர்மாக்களாலே சில விடங்களில் திரௌபதி-திருஷ்டத்யும்னன் முதலானவர்களின் உற்பத்தியும் - பஞ்சம ஆஹீதி அபேக்ஷையில்லாமலே, தேகம் ஆரம்பமாகிறது - என்று மஹா பாரதம் போன்ற (ஸ்மிருதிகளில்) சொல்லப்படுகிறது. (நியமம் இல்லை),

## சூத். दर्शनाच्च (3-1-20)
## தர்சநாச்ச (-do)

தர்ஸநாத்-ச-நான்கு விதமான பிராணி சமூஹங்களில் (ஸ்வேதஜம்' வியர்வையினின்று உண்டாகுபவை - (தேள் முதலியன) பூமியைப்பிளந்து உண்டாகின்றன (மரம்); உத்பிஜம் இவற்றிற்கு ஸ்திரி புருஷர்களின் சேர்க்கையின்றியே உற்பத்தியேற்படுவதைக் காண்பதாலும், ஐந்தாவது ஆஹீதி அநபேக்ஷை. இப்படியே மற்ற இடத்திலும் ஸம்பவிக்கலாம் என்பதாகும்.

கருதிகளிலும் காணப்படுகிறது - சிலவிடங்களில் பஞ்சம ஆஹூதிக்கு அபேக்ஷயில்லை - தேஹாரம்பத்திற்கு அவசியமில்லை. சா. 2. 6-3 1ல் तेषां खल्वेषां भूतानां त्रीण्येव बीजानि भवन्ति: आण्डजं जीवजमुद्भिज्जम् इति வாஸ்தவத்திலே, மூன்று வித்துக்கள்தான் இருக்கின்றன - தேஜஸ் - அப்பு - பூமி - மேற்சொல்லப்பட்டுள்ள பிராணிகளின் உற்பத்திக்கு (பூத சூக்ஷ்மங்கள்)-அதாவது முட்டை யிலிருந்து வெளிவருவதான பாம்பு - பறவைகளுக்கு (அண்டஜம்); மற்ற உயிருள்ள பிராணிகளாகிற மனிதன் மிருகம் முதலியவை களுக்கும், ஸ்திரியோனி அவசியம்; உத்பிஜம் (பூமியைப் பிளந்து வரும் மரம் முதலானவற்றிற்கும்) இந்த மூன்று பீஜங்களாகிறவற் றுக்கு (பூதசூக்ஷ்மங்கள்) அவசியம்; ஆகவே இந்த விதமாக உத்பிஜம் ஸ்வேதஜங்களுக்கு (வியர்வையிலிருந்து உற்பத்தியாகும் ஜந்துக் கள்-பேன்) பஞ்சம ஆஹூதியின்றியே உற்பத்தி யேற்படுகிறது.

மேலும் ஆட்சேபிக்கப்படலாம் இங்கே ஸ்வேதஜமான பிராணிகளைப் பற்றி ஒன்றும் பிரஸங்கமில்லை - (சொல்லப்பட வில்லை). त्रीण्येव बीजानि - மூன்றே வித்துக்கள் இருக்கின்றன (பூதசூக்ஷ்மங்களான தேஜஸ் அப்பு பூமி) என்கிற வசனத்தினால்- ஸ்வேதஜம் சொல்லப்படவில்லை-இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக் காரரே பதில் அளிக்கிறார்.

**சூத்· तृतीयशब्दावरोधः संशोकजस्य (3-1-21)**
**த்ருதீயசப்தாவரோதః ஸம்ஸோகஜஸ்ய (3-1-21)**

திருதீய - அண்டஜம் - ஜீவஜம் - உத்பிஜ்ஜம் என்றவிடத்தி லுள்ள சப்தம் - அதாவது உத்பிஜ்ஜம் (ஸ்வேதஜம்) என்ற பதத்தால்; ஸம்ஸோக ஜஸ்ய (ஸ்வேத ஜத்திற்கும்) அவரோத: காட்டப்படுகிறது.

(அதாவது உத்பிஜ்ஜம் என்ற பதத்தாலே, ஸ்வேதஜ்ஜமும் சேர்த்து சொல்லப்பட்டதாகும். பூமி, ஜலம் இவற்றைப் பிளந்து வருவது போல, (ஒன்றாக விருப்பது போல) ஸ்வேதஜம் உத்பிஜம் இரண்டிற்கும் பிளந்து வருதல் ஒன்றாகும்.

*(ஜங்கமோத்பத்தி - புழுபூச்சி முதலியவற்றின் உற்பத்தி- ஸ்தாவர உற்பத்தியைக் காட்டிலும் விசேஷமுள்ளதாயிருந்ததலால், மற்ற விடங்களில் வேறுபடுத்திக் கூறல் ஏற்படுவதால் விரோதமில்லை (சங்கரபாஷ்யம்).*

**தத்ஸ்வபாவ்யா பத்தியதிகரணம்** (3-1-4)

**சூத்.** **तत्स्वभाव्यापत्तिरुपपत्तेः** (3-1-22)

**தத்ஸ்வாபாவ்யாவ்யாபத்திருபபத்தே:** (-do)

*சந்திரலோகத்திலிருந்து இறங்கி வருபவர்களுக்கு* **तत्** *(ஜீவர்களுக்கு). ஸ்வாபாவ்யாபத்தி:- ஆகாசாதிகளின் ஸாம்ய பிராப்தியானது - ஸாத்ருஸ்யம் (ஒட்டிக்கொண்டிருப்பது) உபபத்தே:- சொல்லப்படுவதால் சரியாகும் - போதிய யுக்தியிருப்பதால் சரியாகும்.*

*(இந்த அதிகரணத்தில் சந்திர லோகத்திலிருந்து திரும்பி வரும் (இறங்கி வரும்) முறை விசாரிக்கப்படுகிறது)*

*இஷ்டாதி காரிகளுக்கு சந்திரலோக ப்ராப்தி சொல்லப்பட்டது; அவர்கள் பூதசூக்ஷ்மங்களுடன் தழுவப்பட்டவர்களாக- மீதியுள்ள கர்ம சேஷத்துடன்* **(सानुशय)** *சந்திர லோகத்திலிருந்து அவரோஹிக்கிறார்கள் (இறங்குகிறார்கள்) என்று சொல்லப்பட்டது அவர்களின் அவரோஹ முறையும் சா. உ. 5 - 10 - 5ல் ஓதப்படுகிறது* **अथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते यथेतमाकाशम् आकाशाद्वायुं वायुर्भूत्वा धूमो भवति धूमो भूत्वाऽभ्रं भवति, अभ्रं भूत्वामेघो भवति, मेघो भूत्वा प्रवर्षति** *- என்கிற வசனத்தால் (யாகாதி காரியங்களைச் செய்தவர்கள் - இஷ்டாபூர்த்தி செய்தவர்கள் சந்திர மண்டலத்திற்குச் சென்று-அதே மார்க்கமாக, அவர்கள் கர்மபலன் உள்ளவரை அனுபவித்து விட்டு கீழே பூமிக்குத் திரும்புகிறார்கள் - எவ்விதம் மார்க்கம் ஆரோஹணத்திற்குச் சொல்லப்பட்டதோ - அதே மார்க்கம் அவரோஹணத்திற்குமாகும்-அதாவது முதலில் ஆகாசத்தையும் ஆகாசத்தினின்று வாயுவும், வாயுவிலிருந்து தூமத்தையும் (புகையாக) அடைகிறான்.*

தூமமாகி அப்ரமாகவாகிறன் - மழை பொழிவதற்கு முன்னுள்ள நிலை; (மேகம் என்றால் மழை பொழியும் நிலை) - அப்ரமாகவாகி மேகத்தையும், மேகமாகி வர்ஷிக்கிறன். இதில் சந்தேகம் - ஆகாசத்தை அடைந்ததும், திரும்பிவரும் ஜீவன் (அவன்) ஆகாசத்தின் ஸ்வபாவத்தை - தேவமனுஷ்யாதிகளின் பாவத்தை அடைவது போல - ஆகாசாதி பாவத்தை அடைகிறனு? அல்லது ஆகாஸத்திற்குப்போல ஸாத்ருஸ்யத்தை-ஜீவன் ஆகிறனு? तत् सादृश्यापत्ति मात्रे. ஜீவன் ஆகாசமாவதில்லை - சுகதுக்க அனுபவம் நடுவில் இல்லை யாதலால் तत्समानाद्यापत्ति மாத்திரம் - அவர்களுடன் சேர்ந்து ஒன்றாக-வித்யாஸப்படுத்த முடியாதபடி அந்தந்த சரீரம் கொண்டவனுக ஆகிறனு? என்கிற விஷயத்தில் (எது போல வென்றால்) சிரத்தா அவஸ்தையில் ஜீவன் பூதசூக்ஷ்மங்களுடன் சோம ராஜாவைப்போல ஆகிறன் என்று சொன்னேமே அதுபோல வாகிறனு - ஏனெனில் ஸாத்ருஸ்ய்த்வம் (ஒன்றாக விருப்பது) இரண்டு விஷயங்களுக்கும் இருப்பதாலே.

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுவோம்- तत्स्वाभाव्यापत्तिरेवेत्युच्यते - எந்த வஸ்துவுடன் சேர்ந்து போகிறனே - அந்த வஸ்துவைப்போல - ஸ்வபாவத்தை அடைகிறன். तत्सादृश्यापत्तिरित्यर्थः அதனுடன் ஸாத்ருஸ்யமாக - ஒன்றாக விருப்பது சொல்லப்படுவதாலே. (ஆகாசாதிகளின் ஸ்வருபப்ராப்தியை அடைகிறன் என்பதில்லை; (இது பூர்வபக்ஷம்) அதற்கு பதிலாக, சித்தாந்தி சொல்வது. ஆகாசாதிகளின் ஸாம்யத்தை அடைகிறன். (எப்படி-ஜீவனுக்கு அந்த நிலையில் சுகதுக் கானுபவமில்லை. ஜீவன் ஆகாசமாவதில்லை-ஸ்வபாவத்திலே ஆகாசத்தைப் போல ஆகிறன் என்பதாகும்). (இன்னொரு காரணம் ஸ்வரூப பிராப்தி ஏற்பட்டால், வாயு வாதிமுறையாக இறங்கி வருதல் முடியாது) उपपत्ते - யுக்தியிருப்பதாலே பொருந்தும்.

सोमभावमनुष्यभावादौ ஸோமனைப்போல ஆவதிலும் அவ்விதமாவதற்கு, சுகதுக்கானுபவம் இருக்கவேண்டும். ஆனல் ஆகாசத்தை யடைந்ததும் (நடுவிலே) ஜீவனுக்கு சுகதுக்கானுபவமில்லை. அதனல் (சுகதுக்க அனுபவமில்லாத படியாலே) ஆகாச பாவத்தை அடைகிறதாகச் சொல்வது பொருந்தாது. (அதாவது

சரீர ஆத்ம பாவத்தால்- ஜீவன் அவைகளைச் சரீரமாகக் கொள்ளுதல் பொருந்தாது). ஈஃஸ்ஸா் (சரீர ஆத்மபாவமில்லை). அதனால் ஸ்வபாவமடைகிறான் ஜீவன் என்பதின் அர்த்தம்-ஜீவன் ஆகாசாதிகளுடன் ஸாம்யா பத்தி (ஸாத்ருஸ்யத்தை) (ஒன்றாகச் சேர்ந்திருந்தாலும் ஜீவன் வேறு-ஆகாசாதிகள் வேறு) என்பது (சூத்ரக்காரரின்) அபிப்ராயமாகும்.

எதுவரை ஸாத்ருஸ்ய மிருக்கிறதோ அதுவரை அது ஆகாசத்துடன் ஒட்டிக் கொண்டு ஒன்று போல ஆகிறது - ஸ்வருப ஐக்யமில்லை. அப்போது ஜீவனுக்கு ஆகாசாதிகள்தேகமாவதில்லை-அதனால் சுகதுக்கானு பவமில்லை சரீர ஆத்மாவாகவில்லை என்பதாம்.

(சங்கரர் சொல்வது-ஆகாசம் விபுவாகையால் அதன் தன்மை ஏற்படாது. ஆகாசத்துடன் நித்ய ஸம்பந்த முள்ளதாயிருப்பது பற்றி - ஆகாச ஸாம்யாபத்தியை தவிர்த்து - வேறு விதமான சம்பந்தம் பொருத்தமாகாது. ஆகவே ஆகாசாதிகளுக்கு துல்யமாக இருத்தலே தான் இவிடத்தில் ஆகாசாதி பாவம் என உபசார முறையால் கூறப்பட்டது).

(இங்கு சா. உப. 10-5-6ல் திரும்பி வரும் ஜீவனின் முறை சொல்லப்பட்டு - விசாரிக்கப்படுகிறது. சுருதி - போன மார்க்கம் வழியாகவே அவன் திரும்பி வருகிறான் - சந்திரன் சேரும்வரை. பிறகு சந்திரனிலிருந்து - ஆகாசம்; ஆகாசத்திலிருந்து வாயு; இங்கே ஆகாசத்தை அடைந்து அங்கு ஜீவன் ஆகாச ஸ்வரூப பிராப்தியை அடைகிறானென்று - அதாவது ஆகாசமாக ஆகிறான் என்று சொல்லவில்லை. பிற்பாடு வாயுவை அடைந்ததும் - அது போல இங்கு ஆகாசத்தையும் அடைந்து, ஸாத்ருஸ்யமாக ஆகிறான் ஸ்வரூபப்ராப்தி சொல்லப்படவில்லை.

## நாதி சிராதி கரணம் (3-1-5)

நாதிசிரேண-ஆகாசத்தின் ஸாம்யத்தை அடைந்த பின்பு அதிக தாமதமில்லாமலே, இந்த புருஷன் பூலோகம் திரும்பி வருகிறான்.

**ஸி. ஸூத். नातिचिरेण विशेषात् (3-1-23)**
**நாதிசிரேண விசேஷாத் (-do)**

ஜீவன் ஆகாசத்தை அடைந்து அதிக தாமதம் இல்லாமல் நாதிசிரேண - விரைவாகவே பூமிக்கு வர்ஷ தாரைகளுடன் சம்பந்தம் பெற்று வருகிறான். विशेषात् சுருதியில் தனியாக ஜீவனைப் பற்றிச் சொல்லியிருப்பதாலே (அதாவது மழையில் கலந்து பூமியில் விழுந்து-நெல்—வ்ரீஹி முதலிய தான்யங்களில் பிரவேசித்து - தனியாக ஜீவனைச் சொல்லியிருப்பதாலே, தனிப்பட்டு சொல்லப்பட்டதாலே-விசேஷாத் எனவாம்) (காலதாமதம் ஆகாசத்தையடைந்ததும் இல்லை. அதனால் नाति चिरेण - காலவரைக்கு தடங்கல் இல்லை, உடனேயே ஸம்பவிக்கலாம்).

ஆகாசப்ராப்தியானதும் ஜீவனுக்கு - உடனேயே வ்ரீஹி (தான்யத்துடன்) பிராப்தி மழை விருஷ்டியினால் யேற்படுகிறது. இந்த விடங்களில் - காலதாமதம் இல்லை. நியமஹேது அபாவம்; அதனால் அநியம:-என்று சொல்லப்படும். (அதாவது - பதில் சொல்லப்படுகிறது - சித்தாந்தியினால்)-नातिचिरेण - அந்த ஜீவன் வெகுநாள் தங்குவதில்லை-எப்படி? विशेषात् - அங்கிருந்து பூமிக்கு வந்து தான்யத்தை - அடைந்து என்று குறிப்பிட்டுச் சுருதியில் சொல்லப்படுகிறது - இதே பிரகரண கடைசியிலே-ஓதப்படுகிறது. சா.2.5-10-6ல் अतो वै खलुदुर्निष्प्रपततरम् - தான்யத்தை ஜீவன் அடைந்ததும் - அங்கிருந்து அவன் வெளிக் கிளம்ப ரொம்ப நாட்கள் ஆகின்றன-அதனால் அவனுக்கு மிக்க கஷ்டமாக விருக்கிறது. இதிலிருந்து தெரிய வருகிறது - ஆகாசத்தைச் சேரும் போது இந்த பிரகரண ஆரம்பத்திலே - அங்கிருந்து (ஆகாசத்திலிருந்து) அவனுக்குப் பூமி வர - அதிக நேரமாகுவதில்லை. சீக்கிரமாகவே வ்ருஷ்டியுடன் சேர்ந்து வருகிறான். ஆனால் வ்ரீஹியை அடைந்ததும் - வெளிவருதல் அவனுக்கு நெடுநாளாகிறது (दुःखेननिष्प्रपत्यत इति—) வேத ரூபமான சப்தம் ''த'' மறைந்து விட்டிருக்கிறது. அது துர்நிஷ்பிரபததரம் என்றிருக்க வேண்டும். அதனால் அவனுக்கு வெளிக்கிளம்புதல் வெகு நாட்களாகின்றன. (தரப் என்கிற பிரத்யத்தைச் சேர்த்துப் படிப்பதால் துஷ்னி பிரபததரம் என ஆகும்-)

துர் நிஷ் ப்ர பததரம்-துக்க நிஷ்க்ரமண தரமித்யர்த்த:— புறப்படுதல்-தானியத்திலிருந்து வெளிவருதல் தாமதமாகும். (அதாவது வ்ரீஹியை அடைந்ததும்-அந்த நெல் (வ்ரீஹி) ஒருவனால் சாப்பிடப்பட்டிருக்க வேண்டும், அன்னம் வழியாக புருஷனை அடைவதற்கு முந்தி காலதாமதம் யேற்படுகிறது-அதாவது அரிசியானால்-களையும் போது அந்த அரிசி ஒதுக்கப்பட்டால்-ஜீவனும் வெளியே போகிறான்-அது மறுபடியும் உட்கொள்ளப் படும்வரை தாமதம்; புருஷனால் உட்கொள்ளப்பட்டு ஸ்திரி கர்ப்பத்திற்குச் சேர்க்கப்படுகிறது-இதனால் கால விளம்பம் யேற்படலாம். (சங்கரர் - சுகதுக்கானுபவம் இல்லாதபடியாலே - வ்ரீஹியாதி பாவத்தை அடைவதற்கு முன்னர், அற்பமான காலத்திலே ஜீவன் இறங்குகிறான்-என்பதாகும்).

## அந்யாதிஷ்டிதாதி கரணம் (3-1-6)

ஸி. சூத். अन्याधिष्ठिते पूर्ववदभिलापात् (3-1-24)
அந்யாதிஷ்டிதே பூர்வவதபிலாபாத் (3-1-24)

இந்த அதிகரணத்தில் - ஜீவன் பூத சூக்ஷ்மங்களுடன் சந்திர மண்டலத்தினின்று திரும்பி வருகிறான் - பிறகு வ்ரீஹியாதி பாவத்தை உடையதாகச் சொல்லப்பட்டது, வ்ரீஹியாதி பாவம் என்றால் வ்ரீஹியாதி சரீரத்தை அடைகிறானா? வ்ரீஹியாக விருக்கும் (சரீரத்தை உடைய ஜீவனைவிட) தனியாக முற்கூறிய ஜீவன் அவற்றில் இறங்கும் போது - ஸம்பந்த மாத்ரத்தையே அடைகிறான்-அதாவது வ்ரீஹியாதி சரீரத்தையுடைய ஜீவனைவிட வேறாக - அவற்றுடன் இவன் ஸம்பந்தப்படுகிறானே ஒழிய - ஸ்வரூபத்தை அடைவதில்லை என்கிற விஷயம் நான்கு சூத்ரங்களில் விசாரிக்கப்படுகிறது.

அந்யாதிஷ்டிதே - வேறு ஜீவர்களால் அத்யக்ஷிக்கப்பட்ட வ்ரிஹியாதிகளில், பூர்வவத் - முன் கூறியபடி ஆகாசாதிகளுடன் ஸாத்ருஸ்யத்தையே (சம்பந்தத்தையே) ஸம்ஸ்லேஷமாத்ரமேவ அனுஸயிகளான ஜீவர்கள் அடைகிறார்கள்; அபிலாபாத் - (ஏனெனில்) இந்த பிரகரணத்தில் பதங்களின் பிரயோகம் முன் சொல்லப்பட்ட ஆகாசாதிகளைப் போல ஒன்றாக விருப்பதாலே -

ஸாத்ருஸ்யம் அடைவதாலே; வ்ரீஹி பாதி பாவாபத்தி சுருதியில் ஓதப்பட்டிருப்பதால் - சம்பந்தம் மட்டும் தான் இவர்களுக்கு யேற்படுகிறது. (சித்தாந்தம்), ஸம்ஸ்லேஷ மாத்திரமேவ வ்ரீஹி யுடன் சொல்லப்பட்டதாகும்).

கீழே இறங்கி வரும் ஜீவர்கள் வ்ரீஹீ பாவத்தை யடைகிறார்கள் என்று சுருதியில் சொல்லப்படுகிறது - சா. 2. 5-10-5 मेघो भूत्वा प्रवर्षति, त इह व्रीहियवा ओषधिवनस्पतयस्तिलमाषा इतिजायन्ते - इति - மேகமாக ஆனபிறகு, (அவன்) மழை பெய்கிறான்; அவர்கள் வ்ரீஹி (நெல்-பார்லி-யவதானியம்) - ஒஷதிகளாக - வனத்திலுள்ள மரங்களாக - எள்ளு, உளுந்து, பயிறு வகைகளில் ஒன்றாக ஆகிறார்கள். இங்கே சந்தேகம் யாதெனில், இவர்கள் வ்ரீஹியை யடையும்போது-யாருடன் சம்பந்தம் கொள்ளுகிறார்கள்-வ்ரீஹியைச் சரீரமாகவுடைய மற்ற போக்த்ரு ஜீவர்களுடனு (வ்ரீஹியை அதிஷ்டித்து நிற்கும் ஜீவர்களுடனு) அல்லது வ்ரீஹியை அனுபவிப்பதற்காக - வ்ரீஹியைச் சரீரமாக வுடையவர்களாகவே (போக்தார பாவமாக) பிறக்கிறார்களா? (அதாவது பூமியில் விழுந்து ஸ்தாவர வகுப்பைச் சேர்ந்த அநுஸயிகள் தாவரத்தின் சுகதுக்கங்களை யடைந்தவர்களாக ஆகின்றனரா - அல்லது வேறு ஜீவனால் அடையப்பட்ட ஸ்தாவர சரீரங்களில் ஸம்ஸ்லேஷத்தை (ஒட்டுதலை) மட்டும் அடைகின்றனரா? (சுருதி சொல்கிறது जायन्ते - (பிறப்பை) அடைகிறார்கள் என்கிறதற்கு முக்கிய அர்த்தம் ஸம்பவிக்க, ஸ்தாவர பாவத்தை போகஸ்தானமாகச் சொல்லும் பிரஸித்தியிருப்பதால்-அநுஸயிகளின் வ்ரீஹியாதி ஜநநமானது முக்யமானதே யாகும் - ) ஜாயந்தே என்கிற வசனத்தினால் - தேவோ ஜாயதே-மனுஷோ ஜாயதே-என்பதைப்போல, இங்கேயும் வ்ரீஹியாதிகளைச் சரீரமாகக் கொண்டே - சரீராஏவ என்று கொள்ளப்படுமாகில், அதற்கு நாம் பதில் கூறுவோம் अन्याधिष्ठिते इति வேறு ஜீவர்களால் அதிஷ்டிக்கப்பட்ட (அடையப்பட்ட) வ்ரீஹிபாதிகளுடன் அவர்களுடன் ஸம்ஸ்லேஷ மேவ (சம்பந்தம்) மாத்திரமே சொல்லப்படுகிறது. வ்ரீஹிகளைச் சரீரமாகவுடையதும் அதிஷ்டிக்கப்பட்ட மற்ற ஜீவர்களுடன், இறங்கிவரும் ஜீவர்களுக்கு ஸம்ஸ்லேஷ மாத்ரமேவ (சம்பந்தம் மாத்திரம்தான்) சொல்லப்படு

கிறது. இது எப்படி? पूर्वद्रमि लापात् (முன்பு கூறப்பட்ட ஆகாஸாதிகளுடன் ஸம்ஸ்லேஷம் மாத்திரம் தான் - என்கிறதைக் கூறும் பதப்பிரயோகத்தினாலே, அதாவது ஆகாசத்திலிருந்து மேகபர்யந்தம் வரை - கேவலம் அந்த பாவத்தை (ஸாத்ருஸ்யத்தை) அடைந்தனர்களே - அதைப்போல இங்கேயும் கொள்ள வேண்டியது (ஸ்வருபஐக்யமில்லை) (பூர்வவத்-ஆகாசாதி வாக்ய ஏவ; ஜன்மஹேது கர்ம நிர்தேஸம் விநேதியாவத்). ஜாயந்தே ஜன்ம வ்ரீஹியாதி கதமேவ த்யாஸய) - ஜநிக்கின்றனர் என்று முக்யார்த்தத்தில் - வ்ரீஹியாகவே பிறக்கின்றனர் என்றுதான் சொல்லவேண்டும் - பூர்வபக்ஷம். ஆனால் வ்ரீஹீயாதிகளில் சம்பந்தம் மட்டுமே தான் இவர்களுக்கு யேற்படுகிறது - என்பது சித்தாந்தம் (இங்கு சில அநுஸ்ாயிகள் வரீஹி ஜன்மத்தை அடைந்திருக்கலாமே என்று கூறலாம். இது (வரீஹிதன்னமை) வேறு ஜீவர்களால் அடையப் பட்டதாகக்கொண்டு - அதிஷ்டாத்தாக்களான வேறு ஜீவர்கள் எனக்கொண்டு-அவற்றினுடைய சுகதுக்கங்களை இறங்கும் ஜீவர்கள் அடைவதில்லை ஆகவே ஸம்ஸ்லேஷ மாத்திரமேவ - எவ்விதமோ-அது போல; அபிலாபாத்துக்கு - அது போல விருத்தல் என அர்த்தம். ஆகவே சந்திரமண்டலத்திலிருந்து வரும் அநுஸயிகளுக்கு (இறங்கிவரும் ஜீவர்களுக்கு) வேறு ஜீவாதிஷ்டிதங்களான விரீஹியாதிகளில் சம்பந்தமட்டுமே தான் யேற்படுகிறது). (சரீரமில்லை-வ்ரீஹியுடன் ஒட்டிக்கொண் டிருக்கிறான்).

எங்கே போக்த்ருத்வம் என்கிற அபிப்ராயம் எண்ணப்படுகிறதோ, அங்கே கர்மாவின் பலனாக அதை ஸாதனமாகக் கொண்டு- அனுபவித்தல் யேற்படவேண்டும் என்பது இங்கே தெரிய வரும். रमणीयचरणाः (நல்ல கர்மங்களைச் சொல்லி - அவைகளின் மீதி; कपूयचरणाः (தீய கர்மங்களின் மீதி) என்கிற உதாரணங்களால் காட்டப்படும் கர்ம சம்பந்தமிருக்க வேண்டும்-போக்த்ருத்வத்திற்கு. இங்கே அம்மாதிரியில்லை. ஆகாசாதிகளுடன் சேர்க்கை ஸாத்ருஸ்யம்-கர்மாவைப் பற்றி பிரஸ்தாபமேயில்லை. ஏனெனில் எந்த கர்மபலன்களுக்காக ஸ்வர்க்கம் அடையப்படுகிறதோ - அந்த கர்ம பலன்களை அனுபவிப்பதால் முடிவு அடைந்துவிட்டன. (ஸ்வர்க்கம் அதற்காக அனுபவித்தாகி விட்டது). ஆனால் அந்த ஜீவர்களுக்கு பலன்களைக் கொடுக்க

ஆரம்பிக்காமல் - ஆனால் முதிர்ந்த நிலையடைந்திருக்குமே. (அந்த கர்மங்கள் மிச்சமுள்ளதாகக் கருதப்பட வேண்டும் - ஏனெனில் ரமணீய சரணா:-கபூய சரணா: என்று சொல்லியிருப்பதாலே. ஆகவே அநாராப்த கர்மாக்கள் - பலன்களைக் கொடுக்க ஆரம் பிக்காத கர்மாக்களுடன் என்று கொண்டு; வரும் வழியில் மத்தி யில் (இந்த பிரகரண மத்தியில்) வேறு கர்மாக்களைச் சொல்லாம லிருப்பதாலே - कर्मान्तरा भावाच्च) கர்மமும் கர்ம பலன்களும் சொல்லப்படவில்லை என்பதாலேயாகும்.

(இங்கு சொல்லப்படுவது - இறங்கி வரும் ஜீவர்களுக்கு ஆகாசாதிகளுடன் சம்பந்தம் சொல்லப்பட்டதற்கு - அந்த ஜீவர்கள் ஏதாவது கர்ம பலன்களை வரும் வழியில் மிச்சமுள்ளதாக அனுபவிக்கின்றனரா என்கிற சம்சயம் ஏற்பட - அதற்குப் பதில் உரைக்கப் படுகிறது-வரும் வழியில் ஜீவர்களுக்கு சுகதுக்கானு பவம் இல்லை. எதற்காக சந்திரமண்டலத்தை அடைந்தனரோ அந்த கர்மாக்கள் ஸ்வர்க்காதி பலன்களை அனுபவிப்பதால் சமாப் தம் (பூர்த்தி) அடைந்திருக்க வேண்டும். இன்னும் சில கர்மாக் கள் - பலன்களைக் கொடுக்க ஆரம்பிக்காத கர்மாக்கள் ஜீவர்க ளுடன் இருக்கலாம்-अनारब्ध கர்மாக்கள். இவைகளைப் பற்றியும் வழியில் சொல்லப்படவில்லை. ஆகவே எந்த கர்மாக்கள் மிச்சமாக பலன்களைத் கொடுக்கத் தயாராக விருக்கின்றனவோ - அந்தக் கர்மாக்களின் பலனாக பூமியில் அவர்களுக்கு பிறப்பு யேற்பட்டு- சரீரம் உண்டாகிறது. வரும் வழியில் ஒருவித அனுபவமும் இல்லாத படியால் - சரீரம் உண்டாவதில்லை. கேவலம் பூத சூக்ஷ்மங்க ளுடன் ஜீவர்கள் இருக்கிறார்கள், ஸ்தூல சரீரமில்லாமல் எனக் கொள்ள வேண்டியது). பூமியில் தேகம் ஏற்படும் வரை - அவர்க ளுக்குக் கர்ம பல போகம் இல்லை).

ஆகவே ஆகாசாதி பாவத்தை இறங்கும் ஜீவர்கள் அடை கிறார்கள் என்பதைப் போல-இங்கேயும் அவர்கள் வ்ரீஹியாதி பாவத்தை - ஜன்ம வசனத்தை ஔபசாரிகமாக (அமுக்யமாக)க் கொண்டு-அடைகிறார்கள் - என்பதாம். (ஸம்ஸ்லேஷ மாத்ரமேவ)

**ஸி. ஸூத் अशुद्धमिति चेत् - न ; शब्दात्** (3-1-25)

**ஸீ. ஸூ. அசுத்தமிதி சேத் - ந; சப்தாத் ( do )**

இறங்கிவரும் ஜீவர்கள் விஷயத்திலே - அசுத்த மிதிசேத்-யாகம் செய்வதால் பசுஹிம்சை முதலிய தீயகர்மாக்களுடன் சம்பந்த மிருப்பதால் - ஜீவர்களின் கர்மாக்கள் அசுத்தமாகின்றன என்று சொல்லப் பட்டால் - ந - அது சரியில்லை; ஏனெனில் சப்தாத் சுருதி அவ்விதமில்லை என்று ஓதுவதாலே. (சப்தாத்-என்பதால் சுருதி-பாபமில்லை என்று கூறுகிறதாலே).

முந்தின சூத்திரத்துடன் சேர்ந்தது இந்த சூத்ரம். ஆகவே வ்ரீஹிகளை சரீரமாகக்கொண்டு அதிஷ்டிக்கும் வேறு ஜீவர்களுடன் சம்பந்தமாத்திரமே யேற்படுகிறது - என்று முந்தின சூத்ரத்தில் சொல்லப்பட்டது - அது சரியாகாது. ஏனெனில் போக்த்ருத்வம் அதற்கு க்காரண (ஹேது) இல்லாத படியால் - ஜன்ம என்கிற பதத்திற்கு வ்ரீஹியாதி பாவம் மாத்திரம் (கௌணமாக) கொள்ளப்பட வேண்டும்; சுகதுக்கானுபவம் நடுவில் ஜீவர்களுக்கு சொல்லப்படாமையால், அவர்கள் வ்ரீஹிகளைச் சரீரமாகக் கொண்டு பிறப்பதில்லை; ஏனெனில் போக்திருத்வம் இல்லாத படியாலே. இவ்விதம் சொல்வது சரியில்லை என்கிறான் பூர்வ பக்ஷி. (அதாவது அவன் சொல்கிறான், யாகாதி கர்மங்களில் யேற்படும் ஹிம்சை முதலான கர்மாக்கள் அசுத்தமானவை அதற்கு அநிஷ்ட பலன் ஏற்படலாம். ஜாயந்தே - கௌணமாகக் கொள்ளாமல் முக்யார்த்தமாகவே சொல்லப்பட வேண்டியது என்கிறான்) போக்ருத்வஹேது இருக்கிற படியால் - ஸ்வர்க்க பலன்களை அளித்தபோதிலும், அவர்களின் அபிஷ்டம் நிறை வேறினாலும் கூட - அந்த யாகாதி கர்மாக்கள் பசுஹிம்சை முதலிய தீய செயல்களைச் செய்வதால் अशुद्धम् அசுத்தமாகும். पापमिश्रम् பாபத்துடன் சம்பந்தப்பட்டது. அக்னி ஷோமயாதியாகங்களில் பசுஹிம்சை யாகத்தை உதவுகிறதாகச் சொல்லப்படுகிறது. விதியாகச் சொல்லப்படுகிறது சுருதியிலே, हिंसा च-யஜீ 1-5-5 नाहिंस्यात् सर्वा भूतानि-இன்னொரு விதி நிஷேதமிருக்கிறது-எல்லா உயிர்களையும் ஹிம்ஸிக்கலாகாது-ஹிம்சை அதர்மமாக ஓதப்படு கிறது-அதனால் பாபமேவ. (பாபம்தான்). (பூர்வபக்ஷம்)

**பதில்:-** இங்கே அப்படி எடுத்துக் கொள்ளக்கூடாது, மேற் சொன்ன விதி-பொது விதியாகும். இங்கே ஹிம்சையில்லை-அது அங்கமாக-பாத-ஆஹவனீய-யாகங்களில்-அக்நீஷோம தேவதை யைக் குறித்து பசுவை ஆலம்பநம் செய்தல் வேண்டும்-என்பது விசேஷ விதி-அதாவது விலக்கு விதியாகும் பொதுவிதிக்கு. நாம் சொல்வது இரண்டின் விஷயங்கள் பின்னம்-வேறு. இங்கே மேற் சொன்ன யாகங்களை சரிவர நடத்துவதற்கு சிஷ்டர்களால் அனுஷ் டிக்கப்படுவதான அந்த விதி ஹிம்ஸையாகாது. க்ரதுவை உபகாரப் படுத்தும்-அதற்காக போதிக்கப்படுகிறது ஆனல் न हिंस्यात् ஹிம்சை யைப் பிராணிகளுக்குச் செய்யாதே என்பது பொது விதி. அதனுல் பாபம் ஏற்படுகிறது. (இங்கே சித்தாந்தம் யாதெனில் யாகத்திற்கு பசு ஹிம்சை செய்வதால்-பாபமில்லை. ஏனெனில் அது விதிக்கப்பட் டிருப்பதாலே). ஆனுல் பூர்வ பக்ஷியின் அபிப்ராயம்-அது பாபமே.

மேலும் சொல்லப்படலாம் - அக்னிஷோம் இன்னும் மற்ற யாகங்களிலும் விதிக்கப்பட்டிருப்பதாலே, அதற்கு (அந்த விஷயத் திற்கு) நிஷேத விதி பொருத்தமாகாது அதன் எல்லைக்குள் வரலாம் (பூர்வபக்ஷம்) (ஆனுல் விசேஷ விதிக்கு முன்பு-பொது விதி உபயோக மற்றது).

ஆகவே நாம் (சித்தாந்தி) பதில் கூறுவோம் நீ சொல்வது சரியாகாது. (ராகப்ராப்தம் (ஆசைப்பட்டு ஸ்வர்க்கங்களில் இச்சைக்கொண்டு-யாகம் செய்தல்)-விஷயங்களிலும் பொது விதி-விசேஷ் விதி என்கிற பேதமில்லை.) இவ்விதம் கூறுவது சரியில்லை என்போம். இங்கே கூட ராகப்ராப்தம் ஏற்படுவதால், வித்யாஸ மில்லை. வாஸ்தவமாக-வேதத்திலே சொல்லப்பட்ட விதிகள் स्वर्गकामो यजेत ஸ்வர்க்கத்தை விருப்புகிறவன் யாகம் செய்யவேண் டியது - இத்யாதி கர்மாக்களில் இஷ்டப்படும் அதிகாரிகளுக்கு கர்த்தவ்யமாக உபதேசமிருக்கிறது. இப்படிச்செய்தால், இந்த பலன் அடையப்படுகிறது என்று நினைத்து அதிகாரி அதனைச் செய் கிருன். स्वर्गादि साधनत्वमवगम्य फलरागत एव यागादौ प्रवर्तन्ते அதனுல் முயற்சி செய்து யாகாதிகளில் பிரவர்த்திக்கிருர்கள். அக்னிஷோம யாகங்களிலும் - அவைகளின் பலன்களை அடைய

விக்கும் ஸாதன பூதமாக அமைவதால் அதனுல் யாகங்கள் பூர்த்தி யாவதற்கு உபகாரம் செய்வதாலும் சாஸ்திரங்களிலே விதியாகப் போதிக்கப்பட்டிருப்பதாலும் அந்த அதிகாரிகள் யாகங்களை விதிப் படி செய்ய பிரவர்த்திக்கிருர்கள். ஆனுல் பொதுவான விதியிலே ஹிம்சை செய்யாதே என்கிற லௌகிக வாழ்க்கையில் உண்டாகும் ஹிம்ஸைக்கும்; இங்கேயாக விதிப்படி ஹிம்சை செய்து யாகத்தை முடிப்பதற்கும்-(அதாவது ஸ்வர்க்கபலனை அடைய-நன்மையை அடைய ஸாதனத்வமாக அமைந்துள்ள ராகம் (இஷ்டம் - விருப்பம்) இருக்கிறதே-அதுவே யாகங்களைச் செய்யத் தூண்டுகிற படியால்) யாதொருவிசேஷ சம்பந்தமில்லை. இரண்டும் தனித் தனியான விஷயங்களாகும்.

உதாரணமாக-நித்ய கர்மாக்களில் - ஆபஸ். சூ. (2-1-2-2)- सर्वे वर्णानां स्वधर्मानुष्ठाने परम् अपरिमितं सुखम् - எல்லா ஜாதி வர்ணத்தினர்களும் அவரவர்களின் ஸ்வதர்மங்களை அனுஷ்டிப் பதால் அபரிமிதமானதும் மேலான சுகமும் ஏற்படுகிறது. இந்த மாதிரி வசனத்தினுல், பலத்தைக் கொடுக்கக் கூடிய ஸாதனம் விதிக்கப்பட்டு - அதுவே ராகாதேவ ஸ்வர்க்க ஆசையினுல் செய்யப்பட வேண்டியது - ஆகவே இப்பேற்பட்ட கர்மாக்களும் அசுத்தமாகும் (பாபம் யேற்படும்) (அதாவது பூர்வபக்ஷி மீண்டும் சொல்கிருன் - எது - எந்த கர்மம் ஆசை யேற்பட்டதின் காரண மாக செய்யப்படுகிறதோ, அது அசுத்தமானது- பிரபாகரர் சொல்வதற்கு, சாங்கியன் அவனைக் கண்டித்து - அவ னுடைய அபிப்ராயம் இங்கு சொல்லப்படுகிறது - மீண்டும் பூர்வபக்ஷமாக, அதற்கு ராமானுஜர் பதில் கூறி - யாகத்தில் ஹிம்ஸை இல்லை-அது தை. சுருதியில் விதிக்கப்பட்டிருப்பதால்- இங்கு फलस्य पुरुषार्थत्वात् - என்கிற நியாயப்படியாகும் (உத்தமூர் ஸ்வாமி என்று முடிக்கிருர்).

இங்கே உத்ஸர்க அபவாத நியாயத்தைக் கொண்டு-பரி ஹாரம் சொல்லி - பாபமில்லை என்று சாங்கியனுக்கு பதில் கூறு கிருர்கள். பசுஹிம்சை ஹிம்சையில் சேராது-ஆனுல் இந்த யுகத்தில் பிஷ்டமயமான (அரிசி கோதுமை) மாவைக் கொண்டு) வேள்வி செய்யக்கூடாது. பாபம் தான். உத்ஸர்க அபவாத

நியாயத்திஞல் பரிஹாரம் சொல்வது சரியாகும்). (இதை உத்ஸர்ஜ அபவாத நியாயம்-அபவாதம் (விலக்கு - Exception); விசேஷ விதியிஞல் ஹிம்சையிருந்தாலும் பாபமில்லை-உதாரணமாக அசுவமேதத்தில் ஆஹவனீயத்தில் குதிரைக் குளம்பிஞல் ஹோமம் செய்யப்படனும். இதஞல் இந்த அபிப்பிராயம் விஹிதகர்மாவுக்கு பிரயோகப்படாது. சாங்கியன் ராக பிராப்தம் ஹிம்சை என்கிருன். ஆஞல் ஹிம்சை-விதிபரமாகவிருக்கும் ஹிம்சை இரண்டும் வேறு-விரோதமில்லை பரஸ்பரம்.

ஆகவே யாகாதி இஷ்டாபூர்த்தி ஜீவர்கள் விஷயத்திலே, பாப மிஸ்ரம் அசுத்தியுடன் இருப்பதால்-யாகபலனுக்காக ஸ்வர்க்கமும் பாப பலனுக்கு பூமியில் வ்ரீஹியாக பிறப்பு எடுப்பதும் (ஸ்வர்க்கத்தை அனுபவித்துவிட்டு பிறகு ஹிம்ஸையாகிறபாபத்தை அனுபவிப்பதற்கு வ்ரீஹியாகப் பிறக்கிருர்கள்-என்பது சரியாகும் (பாப பலன்களை அனுபவிப்பதத்கு(. ஸ்மிருதிகளும் அவ்விதமே சொல்கின்றன - 'மனுஸ்மி 11-9ல்' शरीरजैः कर्मदोषैर्याति स्थावरतां नरः மனிதன் தன் சரீரத்தின் பாபங்களால் ஸ்தாவரமாக பிறப்பை அடைகிருன்; ஸ்மிருதி இப்படி கூறுவதாலே - அநுஸாயிகள் தங்கள் கர்மாக்களின் மிச்சத்தை அனுபவிப்பதற்காக-பாபங்களை அனுபவிக்க - வ்ரீஹியாதி ஸ்தாவர பாவமாக பிறக்கிருர்கள்.

(இது சாங்கியனின் பூர்வபக்ஷம்). ஸ்தாவர பாவத்தை ஜீவன் அடைவதும் - அவனது பாப பலனும் ஸ்மிருதிகளில் ஓதப்பட்டிருக்கிறது.)

ஆகையால் எவர்கள் மிச்சமுள்ள கர்மாக்களுடன் சம்பந்தப் பட்டிருக்கிருர்களோ - அவர்கள் வ்ரீஹியாதி பாவத்தை - தங்கள் பாபங்களின் பலன்களை அனுபவிப்பதற்கு - அடைகிறதற்கு பிறக்கிருர்கள். अतो व्रीह्यादि भावेन भोगा यानुयिशनो जायन्त - इति என்று சொல்லப்படுமாஞல் -

பதில்:—

ததந - அது அவ்விதமில்லை. எப்படி? शब्दात् - சுருதி சொல்வதாலே. அக்னிஷோமீய யாகங்களில் ஸம்ஞபநம் - பசுவைக் கொல்லுதல்; ஸ்வர்க்கலோகப் பிராப்திக்கு ஹேதுவாக விருக்கிற

படியால் ஹிம்ஸை யேற்படுவது - சுருதியின் ஆதாரத்தினுல் செய்யப்படுகிறது; அதனுல் அது துக்க ஜனக வ்யாபாரமாகாது. न हिंस्यात् - அதனுல் அந்தக் கர்மம் அசுத்தமில்லே. யாகத்தில் பலி யிடப்பட்ட பசுவுக்கு அது நன்மையே; யாகம் - ஸம் ஞபன நிமித் தம் அதற்கு ஸ்வர்க்கலோக பிராப்தி சொல்லப்படுகிறது; இம் மாதிரி வேத வசனங்கள் கூறுகின்றன - हिरण्य शरीर ऊर्ध्व: स्वर्गं लोकमिति - इत्यादिकम् - (ஐத் - பிரா. 7-4) தங்க நிறமான சரீரத்தை யடைந்து, அந்த பசு மேல் சொன்ன ஸ்வர்க்கத்தை அடைகிறது. அல்பமான துக்கத்தை விளைவிப்பதாயும், ஆனுல் அதிசயமான அப்யுதயத்தை (ஸ்வர்க்காதி - போகங்களை) அளிப்ப தற்கு ஸாதன பூதமான வ்யாபாரம் - எந்த செயல் இருக் கிறதோ - அது அல்ப துக்கத்தைக் கொடுப்பதால் ஹிம்ஸை யாகாது. ஆனுல் அது அந்தப் பசுவைக் காப்பாற்றிய செய லாகும் - प्रत्युत रक्षणमेव.

இம்மாதிரியே மந்திர வர்ணத்திலும் ஓதப்படுகிறது தை 3-7-92-(2-6-9) न वा उ एतन्म्रियसे न रिष्यसि देवान् इदेपि पथिभिः सुगेभिः। यत्रयन्ति सुकृतो नापि दुष्कृतः तत्र त्वा देवः सविता दधात् (பசுவைநோக்கிச் சொல்லப்படுகிறது)-வாஸ்தவத்திலே, நீ இறக்க வில்லே. இங்கே கொல்லப்படவில்லே. நீ தேவர்களை சுகமானபாதை களின் வழியாக அடையப்போகிறுய். நீ எந்தவிடத்தில் நற்கருமங் களைச் செய்தவர்கள் அடைகிறுர்களோ-அந்தவிடத்திற்கு போய்ச் சேரு. துஷ்கிருதங்களை (கர்மாக்களைச்) செய்தவர்கள் போகும் உலகுக்கு நீ போக மாட்டாய். (போகாதே) அந்த விடத்திற்கு சவிதா என்கிற தேவதை உன்னை அழைத்துச் செல்லட்டும்.- தேவர்களிடம் உன்னை ஒப்பிக்கட்டும். சிகித்சை செய்யும்போது- வலி-சதை அறுத்தல் போன்ற காலங்களில் ரோகிக்குத் துக்கம் யேற்படினும், சிறிது காலத்திற்கேயானுலும், அந்த வைத்தியனே ரக்ஷகன் என்று போற்றி - அவனே ஜனங்கள் பூஜிக்கிறுர்கள் அல்லவா - மதிக்கிறுர்கள் அல்லவா? அது போல இங்கேயும்.

இங்கேயும் ஜீவர்கள் வ்ரீஹீ முதலிய ஜன்ம வசனம் ஔப சாரிகமாகும் (கௌண அர்த்தமுள்ளதாக விருக்கிறது). ஆகவே நெல் முதலானவற்றோடு-இறங்கி வரும் ஜீவன் ஸம்ஸ்லேஷமே கொள்கிறுன் என்பதாகும்.

ஸி ஸூத். रेतःसिग्योगोऽथ (3-1-26)

ரேதஸிக் யோகோऽத (do)

அத-வ்ரீஹியாதி பாவத்துக்குப் பின்னர், ரேதஸ்ஸிக்யோக:- யதா, ததா இந்திரிய ஸேசனம் செய்யும் ஜீவனுடன் சேர்க்கை சொல்லப்படுகிறது - ஆனது பற்றி வ்ரீஹியாதி ஸம்ஸ்லேஷம் மாத்திரம் சொல்வதால் பொருந்தும்.

வ்ரீஹியாதி பாவத்தை அடைந்த பிறகு - यो यो ह्यन्नमत्ति यो रेतः सिञ्चति तद्भूय एव भवति எவன் எவன் அன்னத்தைச் சாப்பிடுகிறானோ, எவனெவன் ரேதஸ்ஸை ஸேசனம் செய்கிறானோ, அவன் வடிவமாகவே ஆகின்றான்-என்று சுருதியானது வ்ரீஹியாதி பாவத்திற்குப் பிறகு, அனுஸயிகளுக்கு ரேதஸ்ஸேசனம் செய்பவனுடன் சேர்க்கை யேற்படுகிறதோ (ஸம்ஸ்லேஷம் மாத்திரம்) எக்காரணம் பற்றி சொல்லப்படுகிறதோ, (தத்யோக மாத்ரம் பிரதி பாதயதி)-அதைப் போல வ்ரீஹியாதி பாவத்துடன் அனுஸயிகளுக்கு ஸம்ஸ்லேஷம் மாத்திரம் சொல்லப்படுகிறது - என்று அர்த்தம் (வ்ரீஹியுடன் ஐக்யமடைகிறதில்லை).

ஸி. சூத் योनेः शरीरम् (3-1-27)

ஸி. சூ. யோநே: சரீரம் ( do )

யோநே : - யோநியில் சேர்க்கை யேற்பட்டதிலிருந்து (சேர்க்கையின் பலனாக) (அனுஸயிகளுக்கு) சரீரம் - அவனவனுடைய கர்மானுபவத்திற்கு ஏற்ற சரீரம் வருவதாகச் சாஸ்திரம் கூறுகிறது.

யோநியை அடைந்ததும் (விளக்கம்-மழையுடன் வரும் ஜீவன் பூதசூக்ஷ்மங்களுடன் பூமியில் விழுந்து பலதானியம் முதலான ஆஹாரத்தினுட் புகுந்து - அதைப் புருஷன் உண்டதும் - அவனிடமிருந்து ஸ்திரீ எனப்படும் ஐந்தாவது அக்னியில் ஆஹூதியாக (ரேதஸ் யோனியில்) புகுந்ததும்- அனுஸயிகளுக்குச் சரீரம் உண்டாவதாகச் சாஸ்திரம் உபதேசிக்கிறது. புருஷ வடிவம் கொள்கிறது-பத்து அல்லது அதற்கு ஏறக்குறைய சில மாதங்கள்

தங்கிய பிறகு-அது பூமியில் பிறந்து ஆயுள் முடிவு வரை இருந்து மறுபடி மரித்து முன்போல போய்வருகிறது பிறந்து இறந்து மீண்டும் பிறக்கிறது பூமியில்.) (புருஷனிடம் ரேதஸ்ஸாக மாறி - ஸ்திரி கர்ப்பத்தை அடைந்து மாறி - யோனி த்வாரா சரீரத்தை அடைகிறது) அதாவது யோனி ப்ராப்திக்குப் பிறகேதான் அநுஸயிகளுக்கு சரீர பிராப்தி யேற்படுகிறது. இதனால் சரீர பிராப்தியே சுகதுக்க போக ஸ்த்பாவமாக விருக்கிறது. (ஆகையால் அவர்களுள் எவர்கள் ரமணீயசரணர்களோ, அதனின்றும் இறங்கும் கால்-வ்ரீஹீயாதி பாவம் சொல்லும்போது அந்த சரீரம் சுகதுக்க ஸாதனமாகிறதில்லை. வரீஹீயாதிகளுடன் ஸம்ஸ்லேஷம் மட்டுமே அத்தகைய பிறவியாகக் கூறப்படுவதால்,) ஆகாசம் முதலியவற்றுடன் சேர்ந்தடைதல் (பிராப்தி)-ஸம்ஸ்லேஷமேவ - சம்பந்தமே - சேர்க்கை யோகமே மாத்ரமேவ - என்று அர்த்தம். तद्योगमात्रमेवेत्यर्थः—

**பகவத் ஸ்ரீ ராமானுஜ விரசிதே - ஸ்ரீ பாஷ்யே -**

**த்ருதீய அத்யாயம்-முதற்பாதம் ஸமாப்தம்**

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

**சுபமஸ்து**



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த
யதீந்திர மஹாதேசிகாய நம:

**பிருஹ்ம வித்யா — ஐந்தாம் பாகம்**

ஸ்ரீபகவத் ராமானுஜ விரசிதே

# ஸ்ரீசாரீரக மீமாம்ஸ பாஷ்யே—

## 3-ஆம் அத்யாயம்—2-ஆம் பாதம்.

## ஸந்தியாதிகரணம்—(3 - 2 - 1) (பிரு. உ. 6-3)

சூத். सन्ध्ये सृष्टिराह हि *(3-2-1)*

ஸந்த்யே ஸ்ருஷ்டிராஹ ஹி **(3-2-1)**

ஸந்த்யே - (முழித்திருத்தல் - சுஷுப்தி - இவ்விரண்டுக்கும் நடுவில், (அதேமாதிரி - இஹலோக பரலோக ஸ்தானங்களின் நடுவிலே) ஸந்தியம் எனப்படும் மூன்றுவது ஸ்வப்னஸ்தானம்; இந்த ஸ்வப்னஸ்தானத்திலே ஸ்ருஷ்டியானது உண்மையானதாகும். ஆஹஹி-அவ்விதமே சுருதி உபதேசித்திருப்பதால் - (அது காரணமாகும்).

(இங்கே விசாரிக்கப்படுவது - ஸ்வப்னத்தில் யேற்படும் ஸ்ருஷ்டி உண்மையானதா? பொய்யா? ஸ்வப்னப் பொருள்கள் முழித்தபிறகு காணப்படுவதில்லை. சங்கரபாஷ்யத்தில் பூர்வபக்ஷம் ஈஸ்வரனுலே நிர்மாணம் செய்யப்படுவதால் -

அது உண்மையாகும். ஸ்வப்னங்களுக்கு உண்மை நிலை யில்லை - முழித்த பிறகு காணப்படும் த்வைத பதார்த்தங் களுடன் ஸமமாக்கி - ஜீவனை ஸ்ருதி அனுவாதமுறையில் கூறியிருப்பது—இன்னொரு காரணம். (சங்கரரின் ஸித்தாந் தம் - ஸந்தியா (ஸ்வப்ன) ஸ்ருஷ்டி பொய்யாகும். இதற்குக் காரணம் ஆத்மா சரீரத்தின் வெளியே சஞ்சரிக்கிறான் - அதனால் சரீரத்துக்கு வெளியிலுள்ளவன் போல ஆகிறான். ஆகவே சரீரத்தினுள்ளே இருப்பதாகவும், வெளியிலே சஞ்சரிப்பதாகவும் ஏற்படும் அறிவின் மாறுபாடு வெறும் மயக்கம் தான். உண்மை அறிவல்ல - மாயா மாத்ரமேவ. ஈஸ்வரன் எல்லா அவஸ்தைகளிலும் நியந்தாவாகவிருப்ப தால் - அவனுடைய வ்யாபாரம் மறுக்கப்படாததே - ஆயி னும் அவன் தூங்குகிறான் என்பதால் ஜீவனது வியாபாரமும் அங்கனமே சொல்லப்படுகிறது. ஆகவே ஸந்தியையை ஆஸ்ரயித்த இந்த ஸ்ருஷ்டி ஆகாசாதிகளைப் போல உண்மை யான ஸ்ருஷ்டியல்ல-கற்பிதம். அதுபோல பிரபஞ்சமும் ஒவ் வொரு நாளும் பாதிக்கப்பட்டிருக்கிறது. மாயாமாத்திரமே - ஸித்தாந்தம். (சங்கரரின் பக்ஷம்).

நமது சித்தாந்தத்தில் ஈஸ்வரனே ஸ்வப்ன ஸ்ருஷ்டியை ஜீவனுடைய பாபபுண்ய கர்மங்களுக்கு யேற்ப ஸ்ருஷ்டிக் கிறான் என்பதாகும்).

**த்வீதீயபாத ஸங்கதி**—இந்த விதமாக கர்மானுரூபமாக ஜீவனுக்கு மேல் உலகம் செல்லுதலும் (கமனம்) திரும்பி வருதலும் (ஆகமனமும்) - மீண்டும் பாபபுண்யங்களுக்கு யேற்ப - பூமியில் பிறப்பதும் சொல்லப்பட்டது. ஜாக்ரத தசையில் (ஜீவன்) துக்கம் அனுபவிக்கிறான் - அவனுடைய கர்மாக்கள் பிரகாரம். இப்போது ஸ்வப்னதசை எடுத்துக் கொள்ளப்பட்டு-அதில் ஜீவனுடைய அவஸ்தை பரிக்ஷிக்கப் படுகிறது.

ஸ்வப்நத்தை உத்தேசித்து - பிரு. உ. 6-3-10ல் சுருதி ஓதுகிறது.

न तत्र रथा न रथयोगा न पन्थानो भवन्ति; अथ रथान् रथयोगान् पथः सृजते । न तत्राऽऽनन्दा मुदः प्रमुदो भवन्ति; अथाऽऽनन्दान् मुदः प्रमुदः सृजते । न तत्र वेशान्ताः पुष्करिण्यः स्रवन्त्यो भवन्ति । अथ वेशान्ताः पुष्करिण्यः स्रवन्त्यः सृजते । स हि कर्ता ।

ஸ்வப்ன மாகிற மூன்றும் ஸ்தானத்தில் (சந்தியாஸ்தானத்தில்) சுருதி சொல்கிறது-(ஜீவனால் பார்க்கப்படும்) ரதங்கள் அங்கில்லை; குதிரைகள் இல்லை; ரோடுகள் (மார்க்கங்கள்) இல்லை ஆகவே ஜீவன் ரதங்களையும் குதிரைகளையும் மார்க்கங்களையும் ஸ்ருஷ்டிக்கிறான். அவன் அனுபவிக்கும் சுகங்களும் (ஆனந்தம்-முதம்)போகஸ்தானங்கள் இல்லை. (அவன் காண்கும்) குளங்களும் - கிணறுகளும் - நதிகளும் இல்லை. ஆனால் ஜீவன் அவைகளை ஸ்ருஷ்டிக்கிறான். எல்லா ஸ்வப்பன வஸ்துக்களையும் அவன் தான் தன் அனுபவத்துக்காக ஸ்ருஷ்டிக்கிறான். அனுபவிக்கும்போது ஏற்படும் சந்தோஷங்களையும் (அதுமாதிரி துக்கங்களையும்) அவனே உண்டாக்குகிறான். स हि कर्ता (ஜீவனே கர்த்தாவகும்). என்று சுருதி முடிகிறது.

இங்கே சம்சயம் - இந்த ஸ்வப்ன சமயத்திலே ரதம் முதலியவைகளின் ஸ்ருஷ்டி ஜீவனால் உண்டாக்கப்படுகிறதா அல்லது ஈஸ்வரனாலேயே உண்டாக்கப்படுகிறதா ? எது சரியாகும் ? சந்த்யா ஸ்தானத்தில் (ஸ்வப்ன சமயத்தில்) ஜீவன் தான் கர்த்தா - எப்படி ? ஸந்த்யம்-ஸ்வப்ன ஸ்தானம் எனச் சொல்லப்படுகிறது. संध्यंतृतीयं स्वप्नस्थानम् - மூன்றுவது ஸ்தானம் - ஜீவன் தன் சரீரத்தினுள்ளே யிருந்துகொண்டு-வெளியிலே சஞ்சரித்துக்கொண்டும்-இந்த உலகம்-பரலோகம் என்கிற இரண்டையும் பார்க்கிறான். ஸ்வப்ன பதார்த்தங்கள் உண்டு-ஆனால் முழித்த நிலையில் அனுபவ யோக்யதை பெறும்படி அவை ஸ்தூலமாக இல்லை. ஆகவே ஜீவனே கர்த்தாவாகும். சுருதியும் அவ்விதம் சொல்கிறது. सृजते ; स हि

கர்த்தா. ஸ்வப்ன த்ருக் (காண்பவன்) ஜீவன்தான் என்றும் காட்டப்படுகிறது. இது பூர்வபக்ஷம். (இங்கு ஜீவனின் தோஷங்கள் சொல்லப்படுவதாகும்) (பூர்வபக்ஷம்)

சூத். निर्मातारं चैके पुत्रादयश्च (3-2-2)

நிர்மாதாரம்சைகே புத்ராதயஸ்ச (3-2-2)

ஸ்வப்னத்தில் யேற்படும் விரும்பப்பட்ட வஸ்துக்களுக்கு நிர்மாதரம் ச—உண்டாக்குபவன் ஜீவன்தான் என்று சிலர் சொல்கின்றனர். ஏகே - சிலசாகிகள் ஜீவன் என்று ஓதுகின்றனர். (அதாவது இந்திரியங்கள் தூங்கினதும் (தமது வேலையை விட்டு நீங்கினதும்) (ஸ்வப்னத்தில்) - ஜீவன் தனக்கு இஷ்டமான பொருள்களை நிரமாணம் செய்கிறான் - அப்படிப்பட்ட யாதொரு இந்த புருஷன் இருக்கிறானோ - என்று; पुत्रादयश्च - அந்த சுருதியிலுள்ள காமம் - காமம் என்பவை புத்ராதிகளேயாகும். (य एषु सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्ममाण: - என்கிறதில் வரும் காம சப்தம்). (இதுவும் பூர்வபக்ஷ சூத்ரம்). (பரமாத்மா ஜீவன் தூங்கும் போது முழித்திருக்கிறான்).

மேலும் இந்த ஜீவன் ஸ்வப்னத்தில் தன் இஷ்டப்படி कामानां (ஆசைகளை) உண்டாக்குகிறான் - என்று ஏகே (சில சாகிகள்) ஓதுகின்றனர். கட. 2-5-9ல் य एषु सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्मिाण: - இந்த ஆத்மா (பரமாத்மா) ஜாக்ரதையில் (முழித்தவனாக) இருந்து கொண்டு - ஜீவனின் ஸ்வப்னத்தில் தன் சங்கல்பபிரகாரம் வஸ்துக்களை உண்டாக்குகிறான். புத்ராதிகள் அங்கே (ஜீவனால்) விரும்பப்படுகிறதாலே - காமசப்தத்தினால் காட்டப்படுகின்றனர். न - இச்சாமாத்திரம் கேவலம் விருப்பம் மாத்திரமல்ல. இதே பிரகரண ஆரம்பத்தில் கட. 1 - 1 - 25 - सर्वान् कामान् छन्दत: प्रार्थयस्व - உன் காமங்களை (உன் இஷ்டப்படி) விரும்பிப் பெற்றுக் கொள்; கட. 1-1-13 - शतायुष: पुत्रपौत्रान् वृणीष्व - உனக்கு நான் (யமன் நாசிகேதஸ்ஸிடம்) நூறு வயதுள்ள புத்ர பௌத்ராதிகளைத் தருகிறேன். விரும்பி பெற்றுக்கொள். இவை

களில் புத்ராதய - ஏவ - புத்ரர்களே காமம் என்று சொல்லப் படுகின்றன. ஆகவே ரதம் முதலானவற்றை ஜீவனே ஸ்வப்னத்தில் ஸ்ருஷ்டிக்கிறுன். ஜீவனுடைய ஸத்ய ஸங்கல்பத்தாலே-ஸ்ருஷ்டிக்கிருனே—இந்த ஸத்யஸங்கல்ப சாமர்த்தியம் (சா. உ. 8-7-1) பிரஜாபதிவாக்யத்திறல் ஓதப் பட்டது. ஆகையால் உபகரணங்கள் இல்லாமலே—ஜீவனே ஸ்ருஷ்டிக்கிறுன். (பூர்வபக்ஷம்).

இவ்விதம் சொல்லப்படுமாகுல் - நாம்பதில் கூறு கிறேம். (சித்தாந்தம்).

ஸி. சூத். मायामात्रं तु कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वत् - (3-2-3)

மாயாமாத்ரம் து கார்த்ஸ்ந்யேந அநபிவ்யக்தஸ்வரூபத்வாத் (3-2-3)

து - என்பதால் பூர்வபக்ஷம் பொருந்தாது. மாயா மாத்ரம் - ஸந்தியா ஸ்ருஷ்டியானது பரமாத்மாவினுடைய அத்புதமான சக்தியிறல் (மாயாமாத்ரம்) ஏற்பட்டதாகும். கார்த்ஸ்ந்யேந - முற்றிலும் (அதாவது சம்சார தசையிலிருக் கிற ஜீவனுக்கு முழு தர்மங்களுடன் கூட வஸ்துக்களை) அநபி வ்யக்த ஸ்வரூபத்வாத் - ஸ்ருஷ்டிக்க சாமர்த்திய மில்லை - வெளியில் ஸ்வரூபமுள்ளதாக இல்லாதிருப்பதே - அதன் காரணமாகும்.

முற்கூறிய சூத்ரத்தில் ஜீவன் கர்த்தா என்று சொன்ன லும் - பரமாத்மாவையும் பூர்வபக்ஷி ஒருவிதத்தில் கூறு கிறுன் எனவும் கொள்ளலாம். கட. 5-9ல் ஸ்வப்ன ஸ்ருஷ்டி யில் - காமம் - இச்சா விசேஷங்களை) - ஜீவனே உண்டாக்கு கிறுன் என்று சொல்வதாலே - எவன் இந்த ஜீவர்கள் தூங்கும்போதும் - முழித்துக் கொண்டிக்கிறுனே...பரமாத் மாவே. அவனே உண்டாக்குகிறுன் - தன் இச்சானுஸாரம். काम कामं - இச்சாவிசேஷங்கள்) ஆனல் இந்த சூத்ரத்திலே ஜீவனுக்கு ஸத்யஸங்கல்பாதி குணங்கள் சம்சாரதசையில் ஓதப்படுகிறதில்லை. பரமாத்மாவுக்குத்தான் உண்டு, அவனே கர்த்தாவாகும்).

துசப்தம் பூர்வபக்ஷியின் கருத்தை நிராகரிக்கிறது. ஸ்வப்னத்தில் ரதம் - புஷ்கரணி - ஆகிற பொருள்கொண்ட வஸ்துக்கள் அற்புதமானவையே - மாயாசப்தத்திற்கு அற்புதம் - ஆச்சரியம் என்கிற பொருளில் - மாயாமாத்ரமேவ. (சங்கரபக்ஷம் மாயை என்கிறதற்கு பொய் என்கிறது). ஆகவே பரமாத்மாவினுடைய ஸ்ருஷ்டியினுல் யேற்பட்ட அத்புதமான ஸ்ருஷ்டியாகும். மாயாசப்தம்-ஆச்சர்யவாசீ (சப்தமுடையது) ராமா. 1-1-25ல் जनकस्य कुले जाता देवमायेव निर्मिता ஜனகருடைய குலத்தில் உண்டான சீதா - அவள் மாயையாகிற பரமாத்மாவின் விசித்திர - ஆச்சரியகரமான சக்தியினுல் உண்டாக்கப்பட்ட தேவமாயை - சரீரம் எடுத்துக்கொண்டு வந்ததுபோல; என்பதால் மாயாசப்தம் ஆச்சரிய வாசா, இங்கேயும் கூட न तत्र रथा नरथयोगाच पन्थान: ரதமில்லை - குதிரைகளும் மார்க்கங்களுமில்லை. - பிரு. உ. 4-3-10-ஸ்வப்ன புருஷன் ஒருவனுல் மாத்திரம் அனுபவிக்கும்படி - மற்றவர்களுக்கு அனுபவ யோக்யதையைப் பெருமல் அந்த வஸ்துக்கள் இருப்பதாலே. सकलेतर पुरुषानु भाव्यतया न भवन्ति என்று அர்த்தம். अथ रथान् रथयोगान् पथ: सृजते அப்படியே அவன் ரதங்களை குதிரைகளை - மார்க்கங்களை ஸ்ருஷ்டிக்கிருன் - இதனுல் ஸ்வப்னம் காண்பவனே அனுபவிக்கும்படி-அந்த ஸ்வப்னகால மாத்திரத்திலே அப்போது உபயோகப்படும்படி உண்டாக்கப்படுகிறது—என்பதால் ஸ்வப்பனம் ஆச்சரிய ரூபமாக விருக்கிறது.

இந்த விதமான ஆச்சர்ய கரமான ஸ்ருஷ்டி ஸத்யசங்கல்பத்துடன் கூடின பரமாத்மாவினுல் தான் ஏற்படுத்தக் கூடும் - ஜீவனுக்கு ஸாத்யமில்லை என்று அர்த்தம். ஜீவனுக்கு ஸ்வஸ்வரூபத்திலே (முக்ததசையில்) ஸத்யஸங்கல்பாதி சக்திகள் உண்டாயினும் - ஸம்சாரதசையில் முழுவதிலும் அந்த சக்திகள் வெளிப்படாமல்போக - வஸ்துக்களின் முழுதர்மங்களுடன் ஏற்படாமற்போக - அபிவ்யக்த ஸ்வரூபத்வாத் - வெளியான ஸ்வரூபமுள்ளதாக இல்லாதிருப்பதேட (அவித்யாதிகளினுல் மறைக்கப்பட்ட - குறைவுப்பட்ட சக்தி உள்ளபடியாலே) - ஸ்வரூபத்திலே - ஜீவனுக்கு ஸ்வப்ன ஸ்ருஷ்டி இப்பேற்பட்ட ஆச்சரிய

கரமான ஸ்ருஷ்டிக்கு நிர்மாதாவாக - இருப்பதற்கு - சக்தி யில்லை என்பதாகும் कामं कामं पुरुषो निर्ममाणः தன் இச்சைகளை (புத்ராதிகளைப்போல) ஸ்ருஷ்டிசெய்ய - இது கூட பரமாத்மா வுக்கே பொருந்தும் - அவனே நிர்மாதா என்று சுருதி ஸித்தம் य एषु सुप्तेषु जागर्ति - அந்த பரமாத்மாவே ஜீவன் தூங்கும்போது முழித்திருக்கிறான், ஆகவே பரமாத்மாவே நிர்மாதாவாகும். காமாநாம் நிர்மா தாரம் - இச்சைகளை ஸ்ருஷ்டிக்கிற பர மாத்மா. புத்ராதிகளை என்கிறவிடத்தில் - விரும்பப்பட்ட எல்லா இச்சைகளை ஸ்ருஷ்டிக்கிற - என்கிற அர்த்தம் काम சப்தத்தினால் காட்டுகிறது. அதாவது காமம் என்பது விருப்பப்பட்ட கனவுப் பொருள்களை - புத்ராதிகள் இல்லை என்பதாகும். तदेव शुक्रं तद् ब्रह्म तदेवामृतमुच्यते - அவரே பிரகா சத்தை கொடுப்பவர் - அவரே பிருஹ்மம் அவரையே நிரு பாதிகமாக அம்ருதம் என்று சொல்லப்படுகிறவர். तस्मिन् लोकाः श्रिताः सर्वे तदु नात्येति कश्चन - அவரிடமே எல்லா உலகங் களும் அடங்கியிருக்கின்றன. அவரை யாரும் அதிக்ரமிக்க முடியாது - என்று கடவல்லியில் உபக்ரம உபஸம்ஹா ரத்தில் பரமபுருஷனுடைய அஸாதாரண ஸ்வபாவம் சொல்லப்படுகிறது.

अथ वेशान्तान् पुष्करिण्यः स्रवन्त्यः सृजते, स हि कर्ता – இந்த சுருதியும் (அவரே ஸ்வப்னத்தில் குளங்களையும் கிணறு களையும் (புஷ்கரணி - குளங்க்ள்) நதிகளையும் படைக்கிறார்; அவர் இந்த எல்லாவற்றிற்கும் கர்த்தாவாகும். இந்த சுருதிக்கும் மேல் சொல்லப்பட்ட சுருதிகளுக்கும் ஒரே அர்த் தம் ஸித்திப்பதற்கு (ஸர்வ சாகாப்ரத்யயநியாயம்) - பரமாத் மாவே ஸ்வப்ன வஸ்துக்களுக்கு நிர்மாதா - உண்டாக்கு பவன் என்று சொல்லவேண்டியது - परमपुरुषमेव कर्तारमाह ஜீவனுக்கு பத்ததசையில் – அபஹதபாப்மத்வாதி குணங்கள் இயற்கையாகவே உண்டா - (ஸ்வபாவமாகவே இருக்கின் றனவா) என்பதற்கு - சூத்ரக்காரர் அடுத்த சூத்ரத்தில் பதில் அளிக்கிறார்.

(இங்கு கவனிக்க வேண்டியது - முன்பு சுருதியில் அவனே ரதங்களையும் - குதிரைகளையும் - மார்க்கங்களையும்

ஸ்ருஷ்டிக்கிருன் - என்பதால் இந்த ஆச்சர்யகரமான அத்புத ஸ்ருஷ்டி - ஸ்வப்னம் காண்பவன் ஒருவனாலே அனுபவிக்கும் படி - பரமாத்மா அந்த ஸ்வப்னகாலத்திற்கே பொருந்தும் படி ஸ்ருஷ்டிக்கிருன் என்பதாகும். (பிரு. உ. 4-3-15) न भवन्ति - सकलेतर पुरुषानुभाव्यतया न भवन्ति என்று அர்த்தம் (ஸ்ரீ பாஷ்யம்). சங்கரர் வேறு விதமாக அர்த்தம் கொள்கிருர்— ஸ்வப்ன வஸ்துக்கள் மித்யை வெள்ளி சிப்பியில் காணப் படும் பொய்யைப்போல. ஆனுல் ராமானுஜரின் அபிப்ராயம் வேறுவிதம். (1) ஸ்வப்ன வஸ்துக்கள் முந்தியுமில்லை - ஜாக்ரதையில் வேறுபட்டிருக்கின்றன. (2) भवन्ति - (वन्ति)- இல்லை - இதனுல் வஸ்துக்களே இல்லை - மித்யை - ஸ்வப்ன காலத்தில் இல்லை என்று அர்த்தம் கொள்ளக்கூடாது. ஸ்ருஜதே - (ஸ்ருஷ்டிக்கிருன்) என்பதற்கு - பொய்யான வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கிருன் என்று அர்த்தம் கொண்டால்- அது ஸ்ருஷ்டிப்பது ஆகாது. (3) ஸ்வப்ன வஸ்துக்கள் இல்லை - என்பதற்கு என்ன அர்த்தமென்ருல் - பிறர்களால் அனுபவிக்க யோக்யதை பெற்றனவாக இல்லை; அந்த ஸ்வப்ன புருஷனே அந்த ஸ்வப்ன சமயத்தைத் தவிர மற்ற காலங்களில் அனுபவிக்கத் தகுந்த யோக்யதை பெற்றதல்ல என்கிற அர்த்தமாகும். இந்த அபிப்ராயம் சுருதிக்கு ஒரே அர்த்த சாமாத்தியத்தைக் கொடுக்கிறது. ஸ்ருஜதே என்ப தற்கும் தற்கால (ஸ்வப்ன) நிகழ்ச்சியாகச் சொல்லும்படி - சரி ஆகும்படி அவருடைய அபிப்ராயமாகும்).

சூத். पराभिध्यानात्तु तिरोहितम्; ततो ह्यस्य बन्धविपर्ययौ (3-2-4)

பராபித்யாநாத்து திரோஹிதம்; ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ (3-2-4)

பராபித்யாநாத் து - பரமாத்மாவின் சங்கல்பத்திஞல் திரோஹிதம் - ஜீவனுடைய ஈஸ்வர ஸமான அபஹத பாப் மாதி குணங்கள். மறைக்கப்பட்டிருக்கின்றன; அஸ்ய - ஜீவனுக்கு ததோஹி பரமாத்மாவிஞலே, பந்த விபர்யயௌ - பந்தமோக்ஷம் ஏற்படுகின்றன.

து என்கிற பதம் பூர்வபக்ஷியின் கருத்தைத் தள்ளு கிறது. (அந்த சங்கையைப் போக்குகிறது. ஏனெனில் திரோஹிதம் (மறைத்தல்) பகவானுல் யேற்பட்டது.) **पराभिध्यानात्** பரமபுருஷனுடைய சங்கல்பத்தாலே, இந்த ஜீவனுக்கு ஸ்வாபாவிகமான குணங்கள் (அபஹத பாப்மத் வாதி) திரோஹிதம் (மறைக்கப்பட்டிருக்கின்றன). அனுதி கர்ம பரம்பரையினுலே - பாபங்கள் மலிந்து போய் ஜீவன் மஹா அபராதியாகி விடுகிறபடியாலே, அவனுக்கு ஸ்வபாவ மான கல்யாணரூபம் பரமபுருஷனுல் திரோதானம் (மறைக் கப்பட்டு) செய்யப்பட்டு - அவன் தன் நிஜரூபத்தை இழந்து விடுகிறுன். ததः - பரமாத்மாவின் சங்கல்பத்தினுலேயே இந்த ஜீவனுக்கு (अस्य) பந்த மோக்ஷம் ஏற்படுகிறதாக சுருதி ஸித்தமாதலால், (தை. ஆ. 2-7-1) -

**यदा ह्येवैष एतस्मिन् अदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्टां विन्दते, अथ सोऽभयं गतो भवति । यदा ह्येवैष एतस्मिन् उदरमन्तरं कुरुते, अथ तस्य भयं भवति—**

வாஸ்தவமாகவே, எப்போது அவனுக்கு (ஜீவனுக்கு) பயமில்லாதபடி (அபயமான) கதி ஏற்படுகிறதோ, எதனுல் (எந்த ஆதரவினுல் பயமின்மை யேற்படுகிறதோ - அதனுல்) அவன் அதிருஸ்யமாகவும் (காணப்படாதவனுகவும்), தேக மில்லாதபடியும், குறிப்பிட்டுச் சொல்லமுடியாதபடி (அநிருக் தமாக) - இருப்பிடமில்லாதவனுக (अनिलयम्) - ஆகிறுனே - அப்போது தான் அவனுக்கு அபயம் (பயமின்மை) யேற்படு கிறது. எந்தக் காரணத்தினுலோ, அவனுடைய தியான யோகஸமாதியில் (பரமாத்மாவைப்பற்றின தியானயோகத் தில்) ஒரு சிறிய தடங்கல் (இடையீடு) ஏற்படுகிறதோ - அவனுக்கு பயம் யேற்படுகிறது (அதாவது பரமாத்மாவின் தொடர்பு இருந்துக்கொண்டேயிருந்தால், பயமின்மை ஏற் படும்) மேலும் அதில் ஓதப்படுகிறது - **एष ह्येवानन्दयाति**- ஏனெனில் பரமாத்மாவே ஆனந்தத்தை உண்டாக்குகிறுன். மேலும் தை. ஆனு-9-1ல் **भीषाऽस्माद्वातः पवते**-பரமாத்மாவுக்குப்

பயந்து காற்று வீசுகிறது - என்பவைகளில் பரமாத்மா அதீனமாக ஜீவன் வாழ்கிறான் என்பதாகும்.

ஸித். ஸூ. देहयोगाद्वा सोऽपि (3-2-5)

தேஹயோகாத்வா ஸோऽபி (3-2-5)

ஸோ அபி (ஜீவனுக்கு ஞானத்தின் திரோபாவம்) தேஹ யோகத்வா - தேகத்தின் சேர்க்கையாலே யேற்படுகிறது.

ஜீவனுக்கும் - திரோதானபாவம் தேகத்தின் சேர்க்கை பெற்றதாலே ஏற்படுகிறதா - அல்லது பிருஹ்மத்தின் அப்ரதிக் ஸித்தமான தர்மமாகிற ஸூக்ஷ்ம அசித்வஸ்துவுடன் ஜீவனுக்கு யேற்படும் சக்தி யோகத்வாரத்தினலேயா - (சம்பந்தத்தினலேயா) (எப்போது ஏற்படுகிறது?); ஸ்ருஷ்டி காலத்தில் ஏற்பட்ட தேஹத்தினுடன் கூடியவனுக - அசித் வஸ்துவுடன் சம்பந்தப்பட்டவனுக-ஏற்படுகிறதா? (அல்லது பிரளயகாலத்திலே நாமரூப விபாகத்திற்கு அருஹதையற்ற அதி ஸூக்ஷ்மமான அசித் வஸ்துவுடன் சேர்க்கை பெற்றிருக்கிறதே — அந்த சமயம் திரோதானம் ஏற்படுகிறது.

இங்கே ஸூத்ரம் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கிறது. அந்த கேள்வியாவது - ஜீவனுடைய சக்திகள் எப்போது திரோதானம் (மறைக்கப்பட்டு) ஆகிறது ? பதிலாவது - சம்சாரத்தில் ஆகிறது; அப்போது அவனுக்கு பிரகிருதியுடன் சம்பந்தம் கர்மாவின் ஆதிக்கத்தினல் யேற்படுகிறது இது கூட நன்கு ஏற்படுகிறது - பரமாத்மாவின் சங்கல்பத்தினலே ;ஸ்ருஷ்டி சமயத்திலே ஒரு விதமாகவும், பிரளய காலத்திலே வேறொருவிதமாகவும் யேற்படுகிறது.)

ஆகையால் ஸ்வப்னதிசையில் ஜீவனுடைய ஸ்வரூபம் வெளிப்படாமல் (அநபிவ்யக்தமாக) விருப்பதாலே, அவனுக்கு சங்கல்பமாத்திரத்தாலே ரதங்களை ஸ்ருஷ்டிக்க சக்தியில்லை என்பதாகும். तस्मिन लोका: श्रिता: सर्वे तदु नात्येति कश्चन् அந்த பரமாத்மாவினிடமே எல்லா உலகங்களும் ஆஸ்ரயம்

செய்திருக்கின்றன - அவனையாரும் அதிகிரமிக்கமுடிகிற தில்லை (கட. உ. 5-8) என்று ஓதுவதால்; ஸர்வலோகங் களும் தூங்கும் சமயங்களிலும் - முழிப்பு அவஸ்தையிலும் ஸர்வலோக ஆஸ்ரயத்வம் (ஆதாரமளிப்பது) பரமபுருஷனுக் குத்தான் ஸாத்யம்-ஜீவனுக்கு முடியாது. ஆகையால் ஜீவர் களுக்கு அல்ப கர்மானுகுண பலன்களை அனுபவிப்பதற்கு, அந்த ஸ்வப்ன வேளைகளிலே, ஸ்வப்னம் காணும் புருஷன் அவைகளை அனுபவிப்பதற்கு, பரமாத்மாதான் ஸ்வப்ன பொருள்களையும் காட்சிகளையும் படைக்கிறான் என்பது சித்தாந்தமாகும்.

**अतो जीवानामल्पाल्प कर्मानुगुणफलानु भवार्थं तावन्मात्र-कालावसानान् तदेकानुभाव्यान् अर्थान् उत्पादयति—**

சூத். सूचकश्च हि श्रुतेराचक्षते च तद्विद: (3-2-6)

*சூசகஸ்ச ஹி ஸ்ருதேராசக்ஷதே ச தத்வித: (3-2-6)*

ஸ்ருதே: - சுருதியிலிருந்து கிடைக்கிறது - ஸ்வப்ன மானது சூசகஸ்ச - ஹி - இனி சம்பவிக்கப்போகும் விஷயங் களை முன்காட்டி - அறிகுறியாகக் காட்டி சூசகம் செய்வ தால்; தத்வித: - ஸ்வப்ன சாஸ்திர பலன்களை அறிபவர்கள் ஆசக்ஷதே - (அத்தகைய சுருதி சொல்வதையும்) அவ்விதம் சொல்கிறார்கள்.

**(ஸங்கதி)** சிலர் சொல்லக்கூடும் - ஸ்வப்னகாலத்திலே ஜீவனுக்கு ஸங்கல்பத்வம் ஏற்படலாமே என்றால் அதற்குப் பதிலாக இல்லை-இந்தக் காரணத்தினாலேயும் ஸ்வப்னத்தின் வஸ்துக்கள் முன்னால் உண்டாகும் ஜீவர்களுடைய ஸங்கல் பத்தினாலே ஏற்படுவதல்ல; ஏனெனில் சுருதிகளில் சொல்லப் பட்டிருக்கிறது. ஸ்வப்னங்கள் வரப்போகும் அப்யுதயத் தையும் (மனிதனின் சுக அபிவிருத்திகளையும்) (அதேமாதிரி) கெட்ட சம்பவங்களையும் சூசகம் செய்கின்றன - சா. உ. 5-2-9ல்,

**यदा कर्मसु काम्येषु स्त्रियं स्वप्नेषु पश्यति । समृद्धि तत्र जानीयात् तस्मिन् स्वप्ननिदर्शने—**

காம்ய கர்மாக்களைச் செய்யும்போது, ஒருவன் ஸ்வப்னத்தில் சுமங்கலி ஸ்திரியைப் பார்க்கிருனே, அவனுக்கு ஸம்ருத்தி (சௌக்யம்) ஏற்படப்போகிறது என்று சூசகம் இந்த ஸ்வப்ன காட்சியிலிருந்து தெரியவேண்டியது. அதேமாதிரி ஐத். உ. 3 - 2 - 4ல் अथ स्वप्ना: - पुरुषं कृष्णं कृष्णदन्तं पश्यति; स एनं हन्ति - இப்போது இந்த ஸ்வப்னங்களிலே-ஒருவன் கருப்பு மனிதனை-கருப்பு பற்வரிசைகளுடன் காண்கிருனே, அந்த ஸ்வப்னத்தில் காணப்பட்ட கருப்பு புருஷன் ஸ்வப்னம் காணும் புருஷனைக் கொல்கிருன். மரணம் சூசகம்—

ஸ்வப்ன அத்யாயங்களில் சுருதிகளில் சொல்லப்பட்டதை எவர்கள் அறிகிருர்களோ - அவர்களும் சொல்கிருர்கள் - சுப அசுப விஷயங்களை இந்த ஸ்வப்னங்கள் முன் கூட்டியே காண்பிக்கின்றன. சூசகத்வம் என்பதும் (அறிகுறியாக அறிவிப்பதும்) ஸ்வசங்கல்பத்திருல் நிர்மாணிப்பதும் (உண்டாக்குவதும்) - இரண்டும் வேருன விஷயங்கள்; ஒன்று இன்னென்றைச் சேர்ந்ததில்லை அவ்விதம் ஒன்ருகவிருக்குமாயின், அசுபமானது - அநிஷ்டத்வமானது எப்படி விரும்பப் படுகிறதில்லையோ - அதேமாதிரி சுபத்வமானது விரும்பப் படுகிறதல்லவா ? அப்படியாருல் ஒருவன் ஸ்வப்னத்தில் தனக்கு எது சுபமோ - அதையே உண்டாக்கலாமே (ஜீவன் கர்த்தாவாகில் தனக்கு வரப்போகும் நல்ல சம்பவங்களை ஸ்வப்னத்தில் உண்டு பண்ணலாமே - அவன் துஸ்ஸ்வப்னங்களையும் காண்கிருனே. ஆகையால் ஜீவன் கர்த்தாவல்ல - (सूचकमेव सृष्टा पश्येत्). ஆகவே ஸ்வப்னத்தில் ஸ்ருஷ்டி ஈஸ்வரனுலேயே உண்டாக்கப்படுகிறது - இது சித்தாந்தம்.

(ஸ்ருதி - மத்ஸ்ய புராணுதிகளிலும் - ஸ்வப்ன அத்யாயங்கள் இருக்கின்றன. தோஷபரிஹாரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன.) (ராமாயணத்திலும் திரிஜடையின் ஸ்வப்னமும் - பரத ஸ்வப்னமும் மிக பிரஸித்தம்).

## ததபாவாதிகரணம் (3-2-2)

ஸூத். तदभावो नाडीषु तच्छ्रुतेरात्मनिच (3-2-7)

ததபாவோ நாடீஷு தச்சுருதேராத்மநிச (3-2-7)

ததபாவ: - ஸ்வப்ன தர்சனத்தின் அபாவமானது - அதாவது சுஷீப்தியில் - நாடீஷு ஆத்மநிச - நாடிகளிலும் ஆத்மாவிலும் சமுச்சயமாக (ஒன்ருகச் சேர்ந்ததாகவே) ஏற்படுகிறது. தத் சுருதே: - அவ்வித ஸமுச்சயத்தைக் கூறும் சுருதியிருப்பதாலே.

(சுஷீப்தியில் எல்லா இந்திரியங்களும் ஒய்வடைகின்றன. மனத்திலுள்ள வாஸனையிஞல் லயரூபமான சுஷீப்தி ஆராயப்படுகிறது. சுஷீப்தியில் எல்லா நாடிகளும் புரீதமும் பிரும்மமும் சேர்ந்து தேகத்தில் இருக்கின்றனவே-சுஷீப்தியில் ஜீவன் எங்கிருக்கிருன்? எங்கே சுஷீப்தி யேற்படுகிறது-நாடிகளிலா - புரீதத்திலா பிருஹ்மத்தினிடமா?). புரீதம் - ஹ்ருதய மத்தியிலேயிருக்கும் மாம்ஸபிண்டம்.

இங்கே ஸீஷீப்தி ஸ்தானம் ஆராயப்படுகிறது. இவ் விஷயமாக சுருதி சொல்கிறது. சா. உ. 8-6-3ல்

तद्यत्रैतत् सुप्तः समस्तः संप्रसन्नः स्वप्नं न विजानाति, आसु तदा नाडीषु सुप्तो भवति—

அவன் நன்ருகத் தூங்கும்போது, அவனுடைய இந்திரியங்கள் உள்ளடங்கி விடுகின்றன. அவன் ஸம்ப்ர ஸந்நனுக (அமைதியாக) தூங்குவதால் - ஸ்வப்னம் காண்பதில்லை. அப்போது ஜீவன் நாடிகளில் புகுந்து (Veins) விட்டிருக்கிருன். அவ்விதமே பிரு. உ. ஓதுகிறது. பிரு. 4-1-21ல்

अथ यदा सुषुप्तो भवति, यदा न कस्यचन वेद-हिता नाम नाड्यो द्वासप्ततिसहस्राणि हृदयात्

ஸ்வப்னத்திற்குப் பின்பு - (ஜீவன்) சுஷீப்தியை அடையும் போது - அவனுக்கு வெளி உலகில் ஒன்றும் தெரியாது.

அவனுடைய உடலில் "ஹிதா" என்ற பெயருள்ள நாடிகள் Veins 7000 எண்ணிக்கையில் இருக்கின்றன - அவை ஹ்ருதயத்திலிருந்து புரீதத்தில் (Pericardium) பரவி யிருக்கின்றன-) पुरीततमभिप्रतिष्ठन्ते, ताभिः प्रत्यवसृप्य पुरीतति शेत புரீதத்த்திற்கு (நாடிகள் வழியாக) சென்று அங்கு ஜீவன் (சுஷீப்தியில்) லயமாகிருன். (புரீதம் - இது ஹ்ருதயத்தி லுள்ள ஒரு சிறு நாடியாகும். ஒடுங்குகிருன் - எங்கு ?) புரீதம் - ஹ்ருதயமத்தியில் லோஹிதமன மாம்ஸபிண்டம் என சுபோல உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது) ஸம்பந்ந:- ஸதி - ஸ்தித: என்று அர்த்தம்).

அவ்விதமே சா. உ. यत्रैतत् पुरुषः स्वपिति नाम, सता सोम्य तदा संपन्नो भवति இந்த புருஷன் நன்ருகத் தூங்கும்போது - சுஷீப்தியில் - ஸோம்ய, அவன் ஸத்துடன் ஒன்று சேர்ந்து ஸம்பந்நனுக விருக்கிருன். (நாடி - (Veins) புரீதம் (Pericardium); சுருதி பிரகாசிகையில் ஹ்ருதயத்திலிருந்து வெளிக்கிளம்பி - புரீதத்தில்லயமாகிருன் என்று சொல்லப் பட்டிருக்கிறது)

இந்த விதமாக ஜீவன் நாடிகளின் வழியே புகுந்து புரீ தத்தையடைந்து-பிறகு பிருஹ்மமும் ஒரே விதமாக ஸீஷீப்தி ஸ்தானமாக சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது; (நாடி வழி யாகச் சென்று புரீதத்திலும் ஹ்ருதயத்திலுள்ள பிருஹ்மத் தினிடமும் ஐக்யமடைகிருன். ஆகவே நாடிகள் - புரீதம் - பிருஹ்மம் இவை ஸமுச்சயமாக (ஒன்ருகச்சேர்த்து)ஸீஷீப்தி ஸ்தானமாக ஓதப்படுகிறதா-அல்லது இவை விகல்பங்களா? (தனித்தனியாக விருக்கின்றதா) - சங்கை இதுதான் - ஒவ் வொன்றும் தனித்தனியாக விருக்கிருதா - அல்லது ஒன்ருகச் சேர்த்து ஸமுச்சயமாகச் சொல்லக் கூடுமா? இதற் குப் பூர்வபக்ஷமாக-தனித்தனியாக-நிரபேக்ஷத்வம் சொல்லப் படுவதாலே - (அதாவது ஒன்றையொன்றும் எதிர்பாராது வேறுபட்டனவாய் - சுஷீப்தி ஸ்தானங்களாகின்றனவா ?) மேலும் அந்த ஜீவனுக்கு — அணு பரிமாணமுள்ளவனுக விருப்பதாலே-ஒரே சமயத்தில் ஒரிடத்தைவிட்டு - அநேக

இடங்களில் ஜீவனுக்கு இருக்கமுடியாதல்லவா ? அதனால் விகல்ப: (தனித்தனியாக விருக்கிறான்) - என்று பூர்வபக்ஷம் ஏற்படுமாயின் வெவேறானதாக - வேறுபட்டனவாய் ஜீவனுக்கு ஒவ்வொன்றும் சுஷுப்தி ஸ்தானமாகிறது. (நாடியில் புகுகிறான், புரீதத்தில் படுக்கிறான் - ஒரே பயனுள்ளதாக விருக்கவேண்டி - ஒரு சமயத்தில் ஒவ்வொரு ஸ்தானமாக அடைகிறான் என்பதாகும் - விகல்ப: - பூர்வபக்ஷம்.

**பதில்**—இதற்கு நாம் பதில் கூறுவோம். **तदभाव:**- அது இல்லாமையாலே - (ஸ்வப்னங்கள் இல்லாமையாலே - சுஷுப்தியானதாலே - ) ஸுஷுப்தி ஸ்தானம் நாடிகளிலும் புரீதத்திலும் பிருஹ்மத்தினிடமும் ஏற்படுகிறது. இங்கே இந்த ஸ்தானங்கள் ஒன்று சேர்த்து ஸமுச்சயமாகச் சொல்லப்பட்டது என அர்த்தம். (ஆதார ஆதேய நியாயத்தை ஒட்டி - மாடியிலே - கட்டிலிலே மெத்தையிருப்பது போல் ஜீவன் சமுச்சயமாகச் சேர்த்துச் சொல்லப்படுகிறான்). எப்படி ஆகும்? இதுபற்றி (சமுச்சயமாக) சுருதியே சொல்கிறது - **त्रयाणां स्थानत्वश्रुतेः । न च कार्यभेदेन समुच्चये संभवति** சுருதியில் மூன்றையுமே சுஷுப்தி ஸ்தானமாகச் சொல்லப்பட்டது. மேலும் ஒவ்வொன்றிலும் காரியம் வித்யாஸமிருப்பதாலே. காரியபேதேந— அவைகளை ஒன்றாகச் சேர்த்து (ஸமுச்சயமானதாக) சொல்லக்கூடும்; அவ்விதம் சொல்லப்படுமாகில், **पाक्षिक बाधगर्भ विकल्पो न्याय:** - அது நியாயத்திற்கு விரோதமாகும் - சிலவற்றை ஒப்புக்கொண்டு - சிலவற்றைத் தள்ளுவது சரியாகாது.

(அதாவது விகல்பமாக நாடிகளையோ ஆத்மாவையோ அடைகிறான் என்பதில்லை - சுருதி அவ்விதம் சொல்கிறபடியால் - விகல்பம் சொன்னால் இவற்றில் ஒரு சமயம் இருப்பது - ஒரு சமயம் இல்லாமை யேற்படும் - மாடியில் கட்டிலில் படுக்கையில் என்கிற உதாரணத்தில் ஒரே ஏழாம் வேற்றுமை காணப்படுகிறதே - அதுபோல ஜீவன் நாடிகளிலும் புரீதத்திலும் பிருஹ்மத்தினிடமும் தூங்குகிறான் - என ஸமுச்சய பொருள்தேறும்.) (அவை ஒன்றாகவே சுஷுப்தி ஸ்தானமாக சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது).

எவ்விதமெனில் - காரிய பேதம் ஒவ்வொன்றுக்கும் இருக்கிறபடியால் - நாடி புரீதம் - பிருஹ்மம் (எதுபோல வென்றால்) மாடி - கட்டில் - படுக்கை) அது போல; இவை களில் - இங்கு நாடிகளும் புரீதமும் மாடியின் ஸ்தானத் தையும் ; பிருஹ்மம் படுக்கையாகவும், (பிருஹ்மம் பர்யங்க ஸ்தானீயம்)! ஆகையால் ब्रह्मैव साक्षात्सुषुप्तिस्थानम् பிருஹ்மமே ஜீவனுக்கு சுஷீப்தி ஸ்தானமாகவிருக்கிறது.

(பாக்ஷிக பாதகர்ப்ப விகல்ப-நியாயம்; விகல்ப: பாக்ஷிக பாதகர்ப்பத்வாதன் யாத்ய இத்யர்த்த:; எப்போது இரு சுருதிகளின் விதிகள் வெவ்வேறு வகையில் உபயோகப்படு வதற்குத் தகுதி பெற்றவையோ - அப்போது கஷ்டங்கள் உண்டாகும், ஒரு சுருதி வசனத்தைத் தகுதியாக ஏற்றுக் கொண்டால், இன்னொன்றைத் தள்ளிவிட வேண்டியதாகும்; அதனால் அது அந்த விதிபிரயோகத்தில் வராது. அப்போது அபூர்வம் உண்டாகிறது அதனாலே பலன் அடையப்படு கிறது என்பது தள்ளப்படவேண்டியதாகும். ஆகவே பூர்வ மீமாம்ஸத்தில் இம்மாதிரி சுருதிகளின் பதவி பிரமாணம் ஏற் படுவது சரியானதாகாது, அதாவது அதன் விதி உபயோக மில்லாமல் ஆகிறது. ஆகவே ஒப்பப்பட்ட பிராமண்யத்தை பரிதியாகம் செய்தல் என வ்ரீஹி சாஸ்திரத்தில் பலதோஷங் கள் உண்டாவதால் சாஸ்திரத்தின் விஷயத்தில் விகல்பத்தை ஒப்பப்பட்டால் அதாவது (தனித்தனியாக) - இந்த சுஷீப்தி விஷயத்தில் நாடிகளிலோ புரீதத்திலோ - பிருஹ்மத்திலோ என விகல்பத்தை அங்கீகரித்தால், பலதோஷங்கள் ஏற்படும். ஆகவே நாடி வழியாக புரீதத்திலும், புரீதத்திலிருந்து பிருஹ் மத்தினிடம் ஐக்யமடைகிறான் என சமுச்சயத்தை தான் அங்கீகரிக்க வேண்டும். இந்த சமுச்சயத்தில் தோஷம் ஒன்று மில்லை. (சாஸ்திர பிராமாண்யத்தை பரிதியாகம் செய்தல்- அதே சாஸ்திரத்திற்கு அபிராமாண்யம் கற்பித்தல் இத்யாதி தோஷங்கள் யேற்படும் எனக்கொள்ளவும்).

ஸூ. अत: प्रबोधोऽस्मात् (3-2-8)

அத: பிரபோதோ அஸ்மாத் (3-2-8)

அத:- அக்காரணத்தினால் (அதாவது எக்காரணத்தினால் சுஷுப்தியில் பரமாத்மாவே ஸ்தானமாகிறதோ-அதனாலேயே) அஸ்மாத்-இந்த பரமாத்மாவினிடமிருந்து ப்ரபோத:- ஜீவனுக்கு விழித்தெழுதல் சொன்னது பொருத்தமாக விருக்கிறது. (அதாவது பரமாத்மாதான் சுஷுப்திஸ்தானம் என்பது யுக்தியினால் சரியாகும் எனப்படுகிறது).

பிருஹ்மமே சுஷுப்தி ஸ்தானமாக ஸாக்ஷாத்தாகவே ஏற்படுகிறதோ, அத: (அதே காரணத்தினாலே); அஸ்மாத் - இந்த பிருஹ்மத்திலிருந்தே) ப்ரபோத: - இந்த ஜீவர்களுக்கு விழிப்பு ஏற்படுகிறது-என்கிற விஷயம் சுருதியில் சொல்லப்படுவதாக கிடைக்கிறது. சா. உ. 6.10.2 - सत आगम्य न विदु: सत आगच्छामहे (எங்கிருந்து விழித்து எழுகிறான் - என்கிற கேள்விக்குப் பதில் சொல்லும் ஸந்தர்ப்பத்திலே - பதில் கூறப்படுகிறது) - ஸத்தினின்றும் வெளி வந்து ஸத்தினிடமிருந்து வந்தோமென அறிகின்றனரில்லை - என்றபடியால்; (அதாவது வெவ்வேறாகச் சொல்லப்படுமாயின்-சில சமயத்தில் நாடிகளினின்றும், ஒரு சமயம் புரீதத்தினின்றும், ஒரு சமயத்தில் பிருஹ்மத்தினின்றும் விழித்து எழுகிறான் என உபதேசமிருக்கும். அப்படி உபதேசமில்லை. ஆகவே பரமாத்மாதான் ஜீவனின் சுஷுப்தி ஸ்தானமாகும்). (அதாவது நாடிகள், புரீதம், பிருஹ்மம் ஆகிய மூன்றும் ஸமுச்சயமாகச் சேர்ந்தே ஜீவனின் சுஷுப்தி ஸ்தானமாகும்).

கர்மானுஸ்மிருதி சப்தவித்யதிகரணம் (3-2-3)

ஸி. ஸூ. स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्य: (3-2-9)

ஸ ஏவ து கர்மானுஸ்மிருதிசப்த விதிப்ய: (3-2-9)

ய: ஸுஷுப்த: ஸ ஏவது - எவன் தூங்குகிறானோ, அவனேதான் எழுகின்றான் - ஏன்? கர்மானு ஸ்மிருதி ஸப்த

விதிப்ய:- மீதியுள்ள கர்மாக்களை தூங்கி எழுந்ததும் அவன் செய்கிறான் ; அனுஸ்மிருதி எந்த நான் தூங்கினேனோ, அந்த நானே தான் எழுந்தேன் ; என்று அவன் நினைப்பதும்; அவ்விதமே; சப்தே - சுருதியும் சொல்வதும் ; விதிப்ய:- மோக்ஷத்தைப்பற்றிய விதிகளிலிருந்தும் தெரியவரும்.

(இங்கு விஷயம் - எவன் சுஷுப்தியை அடைந்தானோ, அவனைவிட மற்றவனும் எழுந்திருக்கக்கூடும் என்கிற சந்தேகம் எழு - அதைப்போக்க இது உபதேசிக்கப்படுகிறது (அதாவது தூங்கினவனே தான் நியமமாக விழித்து எழுகிறான்-அவ்விதம் சாஸ்திரம் உபதேசிப்பதாலே. தூங்கு கிற ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று-அல்லது வேறாகவுள்ள வர்களா ?)

இங்கே சந்தேகம் – சுஷுப்தியில் தூங்குகிறவனே (ஸுப்த ஏவ) முழித்தெழுகிறான் - பிரபோத சமயத்திலே; அல்லதுஅவன் வேறு ஒருவனா? இதற்குப் பதில் - சுஷுப்தி யிலே எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டவன்-அதனாலே பிருஹ்மத்தை ஸம்பந்நனாக (அடைந்தவனாக) விருக்கிறான், ஆயினும் முக்தனையும்விட விலக்ஷணமாகயில்லாதவனாக (ஒன்றான துபோல)-வேறுபட்டிராமல்-அவனுடைய முந்திய தான சரீர இந்திரியாதி சம்பந்தத்தை அடையாத அன்ய னாகவே விருக்கிறான் - என்று (பூர்வபக்ஷம்) சொல்லப்படு மாகில்-அதாவது துயிலிலிருந்து எழுபவன் வேறு ஜீவனே–

அதற்கு பதில் உரைக்கப்படுகிறது - स एव तु - தூங்கின வனே எழுந்திருக்கிறான் - அந்நியனல்ல. து சப்தம் பூர்வ பக்ஷத்தை நிராகரிக்கிறது - அவனே எழுந்திருக்கிறான். எப்படி ?

कर्मानुस्मृतिशब्दविधिभ्य:- ஏனெனில் அவனுடைய கர்மாக் களிலிருந்து அது தெரியவருகிறது ; முழித்தவுடன் அவன் ஞாபகம் செய்துகொள்கிறானே-அனுஸ்மிருதினாலே (பிரத்ய பிக்ஞை); (தன்னைப்பற்றித்தானே நினைக்கிறான்). கர்ம தாவத் - தூங்குகிறவனுடைய பூர்வ க்ருத புண்ய பாபரூபத்

திஞல் யேற்படும் பலன்களை அவனுக்குத் தத்வஞானம் ஏற்படுமுன் அவஞலேயே அனுபவிக்கப்பட வேண்டுமாகை யாலே, (तेनैव भोक्तव्यम्); அனுஸ்மிருதிகூட இவ்விதம் ஏற்படு கிறது - இந்த நானே - முன்பு நன்ருக தூங்கினேன் - அதே நான் இப்போது சுஷுப்தியிலிருந்து எழுந்தேன் (प्रबुद्धोऽस्मि) शब्दाऽपि சுருதியும் - நல்ல தூக்கத்திலிருந்து எழுந்தவனே அவனே தான் முன்பு தூங்கினவன் - இப்போது விழித் திருக்கிருன் - स एव என்று சா. உ. 6-10-1ல்

**त इह व्याघ्रो वा सिंहो वा वृको वा वराहो वा कीटो वा पतङ्गो वा दंशोवा मशको वा यद्यद् भवन्ति तदाभवन्ति-**

இப்போது அவர்கள் முன்னுள்ள விழிப்புக்காலத்தில் புலி யாகவோ-சிம்மமாகவோ, செந்நாயாகவோ, பன்றியாகவோ, புழுவாகவோ, வெட்டுப்பூச்சியாகவோ, காட்டு ஈயாகவோ, கொசுவாகவோ, என்ன என்ன ஆகாரத்துடன் (ரூபத் துடன்) இருந்தனரோ, அப்போது சுஷுப்தியினின்றும் எழுந்து வருங்கால் - அவ்விதமே ஆகின்றனர் - அதனுலே வேறு ஒருவன் சொல்லப்படவில்லை.

சுருதியின் விதிகள் மோக்ஷார்த்தமாக விருக்கின் றனவே - அவையும் உபயோகமில்லாமல் ஆகிவிடும்— (தூங்குகிறவன் சுஷீப்தியிலே மோக்ஷமடைகிருன் என்று சொல்லப்படுமாஞல்). சுஷுப்தி புருஷன் ஸர்வ உபாதி களிலிருந்து விடுபடவில்லை யாதலால், அதாவது அவனுக்கு மோக்ஷதசையில் அவனுக்கு ஏற்படும் ஸ்வஸ்வரூபம் (கர்ம அவித்யாதி நீங்கி) ஆவிர்பூத ஸ்வரூபமாகவில்லாத படியாலே, அவன் அவித்யாதிகளுடனே இருக்கிருன். என அர்த்தம் கொள்ள வேண்டியது. ஏனெனில் சா. உ. 8. 11. 1 - तद्यत्रैतत्सुप्तः - அப்போது அவன் நன்ருகத் தூங்கும் போது - சுஷுப்தியிலே இருக்கும் போது; என்று சொல்லி ; அப்போது அவனே காட்டப்பட்டு, அப்போது அவனுக்கு இவ்விதமாக தன்னைப் பற்றிய அறிவு இவ்வித மாக ஏற்படுவதில்லை - (அதாவது) நானே அந்த புருஷன் ;

ஆனால் எனக்கு இந்த பிராணிகளைப் பற்றிய அறிவு இல்லை- நான் அவைகளை அறியமாட்டேன். நான் விநாசத்திலே ஈடுபட்டிருக்கிறேன். அதனால் இங்கே போக்ய ஸாமக்ரியை களைப் பார்ப்பதில்லை. नाह खल्वयमेवं संप्रत्यात्मानं जानाति—

"अयमहमस्मि इति; नो एवेमानि भूतानि विनाशमेवापीतो भवति; नाहमात्र भोग्यं पश्यामि ।"

என்கிற சுருதி வசனத்தால். தூக்கநிலையில் ஜீவன் - நான் இன்னானாகவிருக்கிறேன் - என்று தன்னை அறிகிறதில்லை தன்னைத்தவிர மற்ற பொருள்களையுமறிவதில்லை......அழிந் தவன் போல விருக்கிறான் - போகப்பொருள்களைக் காண்ப தில்லை (விழித்தவுடன்) (சா. உ. 8. 12. 2); ஆகவே முக்தனுக்கு ஸர்வக்ஞத்வம் முதலிய குணங்கள் ஓதப்படு கின்றன - (எங்கனமெனில்) சா. உ. 8. 12. 3-ல்

परं ज्योतिरूपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते...स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाण:

அவன் மோக்ஷதசையிலே, மேலான ஜ்யோதியை அடைந்து தன்ஸ்வஸ்வருபத்தினால் பிரகாசிக்கிறான். அங்கே அவன் சஞ்சரிக்கிறான் தன் இஷ்டப்படி - விளையாடிக் கொண்டும் அனுபவித்துக்கொண்டும் திரிகிறான், சா. உ. 7-25-2ல் स स्वराड् भवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति அவனே தனக்கு எஜமானன், எங்கு வேண்டுமானாலும் எல்லா உலகங்களிலும் தன் இஷ்டப்படி சஞ்சரிக்கிறான். சா. உ. 7-26-2ல் सर्वं हि पश्य: पश्यति सर्वं माप्नोति सर्वश:- வாஸ்தவமாகவே - எல்லாவற் றையும் பார்ப்பவனாக, எல்லாவற்றையும் அடைகிறான் - இதனால் ஸர்வக் ஞாதியைச் சொல்கிறது. அதனால் தூக்க நிலை முக்தியாகாது.

(இங்கே விஷயம்யாதெனில் சுஷுப்தியில் உள்ளவனுக் கும்முக்ததசையில் இருப்பவனுக்கும் யாதொருவித்யாஸ

மில்லை என்பது பூர்வபக்ஷம், சுஷுப்தி என்பது சா. உ. 8-6-3ல் விரிவாகச் (மேல்சொல்லியபிரகாரம்) சொல்லப்பட்டிருக்கிறது. முந்தின பாடம் ஓதுவது - அந்த ஜீவன் நாடிகளில் புகுந்து...அப்போது அவனை ஒருவிததோஷமும் (பாபமும்) ஸ்பர்சிக்காது. அது தேஜஸ்ஸுடன் (பிருஹ்மம்) ஒன்ருகிவிடுகிறது. இதனுல் பூர்வபக்ஷிசொல்கிருன் - ஜீவன் சுஷுப்தியில் எல்லா உபாதிகளிலிருந்து விடுபட்டு விநிர்முக்தனுகவிருக்கிருன். ஆனுல் வேதாந்தியின் அபிப்ராயம் வேறு. உபாதிகள் இருக்கின்றன - மறைமுகமாக விருப்பினும், அந்த தாற்காலிக சமயத்தில் அவைவேலை செய்வதில்லை. ஜீவனுக்கு அப்போது உபாதிகளிலிருந்தும் சுகதுக்கங்களாலேற்படும் தடுமாற்றமில்லை; வேலை செய்யவேண்டியது என்கிற நிர்ப்பந்தமில்லை. கர்ம பலன்களை அனுபவிக்கவும் அவசியமுமில்லை. ஆகவே ஜீவன் பிருஹ்மத்தினிடம் ஒய்ந்து போய்லயமாகிருன். அவன் பிருஹ்மத்துடன் ஒன்ருகி - தேகம் இந்திரியங்களை ஆண்டு கொண்டு ; வேறுசெயல் (இதுதவிர) வேறு ஒன்று மில்லாததாக ஏற்படுவதாகும். இம்மாதிரி உணர்வு மோக்ஷத்தைவிட வேருனதாகும்.)

ஆகவே ஸுப்தன் (சுஷுப்தியில்தூங்குபவன்) ஆயாஸத்திருல் களைப்படைந்த ஜீவனுகசம்சாரத்தில் விருக்கிருன். அவனே ஸர்வகரணங்களுக்குப்பதியாக இருப்பினும், களைப்பும் தளர்வும் அடைந்தனுகவும் - விஸ்ராம ஸ்தானத்தை அபேக்ஷிப்பவனுக - அவனுக்கு ஞானம் சுகம் முதலியவைகளில் அசக்தனுக, அவன் பரமாத்மாவை விஸ்ராம (தங்கும்) இடமாக அடைவதற்கு, ஆசைப்பட்டு அடைந்தவனுக விருக்கிருன். அப்போது சுஷுப்தியில் இவைகளைவிட்டு - பரமாத்மாவை தன் இளைப்பிடமாகக் கருதி, தூங்குகிருன் - பிறகு அவன் விழிப்பையடைந்து மீண்டும் போகத்தை அனுபவிப்பதற்கு மீண்டும் எழுந்திருந்து தயாராகிருன். ஆகவே தூங்குகிறவன் முக்தனுக மாட்டான். அவனே தூங்கினவனே மீண்டும் எழுந்து வேலை செய்கிருன் என்பது சித்தாந்தம்.

(சங்கர பாஷ்யத்தில்-ஜலத்தில் கலந்ததுளியைப்போல, நியமனம் செய்ய வியலாதிருப்பது பற்றி, எவனோ ஒருவன் தான் விழித்து எழுகின்றான் என்பது பூர்வபக்ஷம். கர்மம், அதற்குக் காரணமான அவித்யை இவற்றின் மூலம் பரிச் சேதம் இருப்பதுபற்றி - ஜலத்திற் கலந்த ஜலத்துளிக்கு மாறுபட்டவனான அவனே தான் (தூங்கினவனே தான்) விழித்து எழுகிறான். சாஸ்திரமும் அவ்விதமே உபதேசிக் கிறது - அவனது உபாதிக்குத் திரும்பவும் உற்பத்தி ஸம்ப விக்கக்கூடியதாக விருப்பதே அதன் காரணமாகும்-என்பது ஸித்தாந்தம்.)

## முக்தாதிகரணம்-4

ஜாக்ரதை, ஸ்வப்னம் சுஷீப்தி என்ற மூன்று அவஸ்தை களினின்றும் ஆத்மாவை (ஜீவனைப்) பிரித்து உபதேசித்து விட்டு - மூர்ச்சாவஸ்தையினின்று பிரித்து உபதேசிக்கப்பட வேண்டி ஒரே சூத்ரம் கொண்ட இந்த அதிகரணம் துவங்கு கிறது.

சூ मुग्धेऽर्धसम्पत्तिः परिशेषात् (3-2-10)

முக்தேऽஅர்த்த ஸம்பத்தி: பரிசேஷாத் (3-2-10)

முக்தே:- மூர்ச்சையடைந்த ஜீவன் விஷயத்தில் அர்த்த ஸம்பத்தி:- சுஷுப்தியின் பாதி நிலையானது பவதி-யேற்படு கிறது. (பாதி நிலை - இறப்பு-உயிருடன் இருப்பது-இதன் நடுவிலுள்ள பாதி நிலையாகும்; ஏனெனில் பரிசோஷாத்- ஸ்வப்ன ஜாக்ரதனாகவோ-மூர்ச்சை அடைந்தவனை சொல்ல இயலவில்லை; சுஷுப்தனாகவும் சொல்ல இயலாது; ஞானமில்லாதபடியாலே - ஆகவே மிஞ்சியிருக்கிறமுறை யினால் - பாதி சுப்தன் என்று சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது மரணத்தின் பாதி நிலையே.)

இப்போது முக்தன் - மூர்ச்சையடைந்தவனைப் பற்றிய விஷயம் சிந்திக்கப்படுகிறது. இந்த மூர்ச்சை சுஷுப்தியாதி

அவஸ்தைகளில் ஒன்று அல்லது அதைவிட வேறுபட்டதா. அல்லது வேறு ஒரு அவஸ்தாந்தர கல்பனையா? ; அதை அவஸ்தாந்தர பேதகல்பனை என்று சொல்வதற்குப் பிரமாணம் இல்லை; மேலும் முக்தன் - என்பதற்கு (மூர்ச்சை என்பதற்கு சுஷுப்தி போன்ற அவஸ்தைகளில் ஒன்று; அதற்கு பிரமாணம் அது வேறு ஒரு அவஸ்தை என்று சொல்வதற்கு இல்லை - அந்த மூர்ச்சாவஸ்தையை அடைந்த வனை முக்தன் मुग्ध: என்று சொல்லப்படும்)

(அந்த அவஸ்தைகளுள் ஒன்று அல்லது அது வேறு ஒரு அவஸ்தையா - பூர்வபக்ஷம். இது வேறு ஒன்று என்று சொல்வதற்கு பிரமாணமில்லை. அதனுல் அதை ஜாக்ரத முதலிய அவஸ்தைகளில் ஒன்று எனச் சொல்ல வேண்டும் (சங்கரபாஷயம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—இவ்விதம் சொல்லப்படுமானுல் - நாம் பதில் கூறுவோம். मुग्धेऽर्धसम्पत्तिः - மூர்ச்சை அடைந்த புருஷனுக்கு - அதுபாதி சுஷுப்தன் என்று சொல்ல வேண்டும் (இறத்தலுக்கு முன்புள்ள நிலை) (சூத் 3-2-10). முக்த நிலை என்பது - மூர்ச்சை அடைந்தவனுடைய நிலை; அந்த நிலை இறப்பதற்கு முன்பு யேற்படும் நிலையாகும். (முக்தே புருஷே - யாதஸ்யாவஸ்தா - ஸாமரணுயார்த்த ஸம்பதி:) எப்படி ? परिशेषात् - மிச்சமுள்ள நிலையானபடி யால் - ஜாக்ரத - ஸ்வப்ன - சுஷீப்தி - இவைகளில்லாத படி யால்-ஜீவன் களைத்துப்போய் அறிவிழிந்து மூச்சுமாத்திரம் விட்டுக் கொண்டிருக்கும் நிலையாகும். அது ஸ்வப்னமாகவு மில்லை — ஜாக்ரதா (முழிப்பாக) கவுமில்லை; ஏனெனில் மூர்ச்சையில் உணர்ச்சியில்லை. (அறிவிழந்தவனுக விருக்கிருன்). சுஷுப்தியாகவுமில்லை இறத்தலாகவுமில்லை. (ஏனெனில் மரண அறிகுறிகள் காணப்படாமலிருப்ப தாலே). ஞானமும் இல்லை. இந்த நிலைக்கு யேற்பட ஹேது வாக விருக்கும் காரணங்களும் இல்லை - முகத் தோற்றத்

திலே வைரூப்யம் (கோரமான மரண அறிகுறிகள் மாறுதல் கள்) காணப்படுவதில்லை. ஆகவே சுஷுப்தியாகவும் மரண மாகவுமில்லை. மூச்சுவந்து போய்க் கொண்டிருப்பதாலே.

**விளக்கம்**—(சுருதியில் நான்கு அவஸ்தைகள் ஜாக்ரத-ஸ்வப்ன - சுஷுப்தி - மரணம் (முக்தி) தான் சொல்லப் பட்டவை. ஐந்தாவதாக ஒன்று சொல்லப்படவில்லை. (சுருதியிலோ ஸ்மிருதியிலோ பிரஸித்தமாகக் காணப்பட வில்லை) ஆகவே இந்த நான்கு நிலைகளுள் ஒன்ருகக் சொல்ல வேண்டியது - (சங்கரரின் பூர்வபக்ஷம்) - ஆனுல் ஸித்தாந்தம் - முதலில் மூர்ச்சை அடைந்தவன் இந்திரியங் களைக் கொண்டு விஷயங்களை அறிவதில்லை. உயிர், சூடு இருப்பதால் மரித்தவனுக ஆகமாட்டான். மூர்ச்சை, தூக்கம் இந்த இரண்டுக்கும் நிமித்த வேறுபாடு இருப்பதால்-எஞ்சிய முறையில் ஒவ்வொரு நிலையையும் தள்ளிவிட்டு - பாதி சுஷுப்தி என்று எண்ணுவோம். அறிவற்றிருப்பது பற்றி சுப்தன் என்றும், வேறு மாறுபாட்டினுல் சுப்தனல்லன் என்றுமாம். மேலும் சுஷுப்தியில் பிருஹ்மத்தில் லயம் ஜீவனுக்குச் சொல்லப்படுகிறது. மூர்ச்சையில் அவ்வித சம்பந்தம் இல்லை. எதுவரை கர்மபாக்கியிருக்கிறதோ - அதுவரை ஜீவன் உயிருடனிருக்கிருன் சில சமயங்களில் இந்த அவஸ்தை மரணத்துக்குத் த்வாரமாக விருக்கிறது. ஆகவே அர்த்த ஸம்பத்தியை (பாதிசுஷுப்தியை) பிருஹ்ம வித்துக்கள் சொல்கின்றனர் - ஐந்தாவது அவஸ்தை என்று பிரஸித்தமில்லை - இதனுல் யாதொரு தோஷமில்லை (சங்கர பாஷ்யம்).

**ஸ்ரீபாஷ்யம்:** —ஆகவே மூர்ச்சை ஏற்படுவதற்கு யாது காரணங்களாகவிருக்கமுடியும்? பலத்தமான அடி (shock) எதிர்பாராத சம்பவத்தின் கொடுமை - இவைகளாகவிருக் கலாம். पारिशेषात् - மிஞ்சியுள்ள நிலையாகவிருப்பதால் - மரணார்த்த ஸம்பத்தி - மரணத்திற்கு முன்பு யேற்படும் - அர்த்த ஸம்பத்தியை (பாதி சுஷுப்தியை) பிரும்மவித்துக் கள் மூர்ச்சையாகும் (எனச்சொல்கின்றனர்). மரணம் ஏற்படு

மாயின் ஸர்வ பிராணன்களுடன்-தேகத்துடனும் ஜீவனுக்கு சம்பந்தமிராது. ஆனால் சூக்ஷ்ம பிராணதேஹ ஸம்பந்தத்துடன் கூடியது மூர்ச்சாவஸ்தையாகும். ஆகவே அது தனிப்பட்டது என்று சொல்லலாம்.

(இங்கு ராமானுஜரின் அபிப்ராயம் - முக்த அவஸ்தையில் பிராணன்களுடன் பாதி ஸம்பந்தம் விட்டு-பாதி ஸம்பந்தம் கொண்டதாக-அர்த்த (பாதி) ஸம்பத்தியாகும். மரணத்தில் இந்த ஸம்பந்தம் ஜீவனுக்கு முழுதும் அறுந்து போய் விடுகிறது. ஆகவே முக்த நிலை அர்த்த (பாதி) ஸம்பத்தியாகும் - சிலசமயங்களில் மூர்ச்சையிலிருந்தே மரணம் ஸம்பவிக்கலாம். எனெனும் மரணவஸ்தைக்கு முந்தின அவஸ்தையாகும்; ஆயினும் சிலசமயங்களில் மூர்ச்சித்தவன் பிழைத்து விடுகிறான் அல்லவோ? அவனுக்கு கர்மபாக்கி பூமியில் எதுவரை இருக்கிறதோ - அதுவரை அவன் உயிருடனிருக்கிறான் என்று சொல்வது சரியாகும்).

## உபயலிங்காதி கரணம். (3-2-5)

**அவதாரிகை:**—இது நமக்கு முக்கிய அதிகரணமாகும்.

இதுவரை இரண்டு பாதங்களில் ஜீவனுடைய தோஷங்கள் சொல்லப்பட்டன. இப்போது நிர்தோஷமுள்ள பரமாத்மாவைப்பற்றிய (ஹேயப்ரத்யனீகத்வம்)-ஸர்வகுணாகரத்வம் அதை அடையவேண்டிய ஜீவனுடைய திருஷ்ணா ஆசை - எல்லாம் இனி சொல்லப்படும் விஷயங்களாகும். உபயலிங்க பாதம் எனச் சொல்லலாம் - இந்த பாதத்திற்கு. அதாவது ஹேய ப்ரத்யனீகத்வம் - கல்யாண குணாகரத்வம் - இவை தான் உபயலிங்கங்கள். தோஷங்களுக்கு நேர் எதிரானவர் பரமாத்மா; அத்துடனிராமல்-பரம கல்யாண குணங்களை எப்போதும் உடையவர். இந்தஇரண்டுமிருப்பதாலே-பாபாத்மாக்களான ஜீவர்கள் அவனை அண்டி - உபாஸித்து மோக்ஷமடையக்கூடும் அதனால் பரமாத்மா நம்மை உஜ்ஜீவிக்கச் செய்வதால்-அவனுடைய உபயோகமும் ஸ்ருஷ்டியின் பிரயோசனமும் காட்டப்படுகிறது. லீலாமாத்ரம் ஸ்ருஷ்டி என்

பதல்ல; ஜீவர்களின் உஜ்ஜீவமூர்த்தமாகவும் இருக்கிறபடி யால்-பரமாத்மா உபயலிங்கமாக ஆகிருன். 'ஹேயரஹிதன்' என்று கூருமல் "ஹேயப்ரத்யனீகன்" (எதிர்தட்டு) என்று சொல்வதால் - ஸர்வவிலக்ஷணத்வம் - புருஷோத்தமஸ்வ ரூபம் சொல்லப்படுகிறது (சித் (பத்தன் - முக்தன் - நித்யனை விடவேறு) அசித் என்பதற்கும் அனுப்ரவேசத்திஞல் உயிரும் அளித்து ஆதாரமாகவுமிருக்கிருன். உபய விபூதி நாயகன் - ஸகுண பிருஹ்மமாகவும் ஓதப்படுகிருன். ஜீவ னுக்கு ஒவ்வொரு நிலையிலும் உதவுகிருன் - ஸ்வப்னத்தில் விசித்திர ஸ்ருஷ்டியை உண்டு பண்ணி; சுஷுப்தியில் ஜீவன் தங்கும் விஸ்ராம ஸ்தானமாக ஆகி; ஜாக்ரதையில் உலகை தன் உடம்பாகக்கொண்டு ஸர்வாந்தர்யாமியாக மோக்ஷம் கொடுக்கும் வழிகளை ஆசார்யர்கள் மூலம் உபதேசித்து; (தானும் பூலோகத்தில் அவதரித்து-வேதம் முதலியவற்றை உண்டாக்கி) இந்திரியங்களையும் ஞானத்தையும் அளித்து- உஜ்ஜீவிக்கச் செய்கிறபடியால் - அவனது உபயலிங்கமே ஸகல பலப்ரதனுகவிருக்கும்படி செய்கிறது. ராமானுஜ தர்ச னத்தில் இதுவே (இந்த உபயலிங்கமே) உயிர் நாடியாகும் பிருஹ்மம் ஸகுணமாகும். சரீர ஆத்ம பாவத்திஞல் பிருஹ் மம் விசிஷ்ட பிருஹ்மமாக விருக்கிறது என அர்த்தமாகும்.) (பிருஹ்மத்திற்கு ரூபமுண்டு - குணமுண்டு - நிருபாதிக மாகவே ஸர்வசக்திகளை உடையவர் என்பதாகும்).

ஸி. ஸூ. न स्थानतोऽपि परस्योभयलिङ्गं सर्वत्र हि (3-2-11)

ந ஸ்தாநதோऽபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி **(3-2-11)**

பரஸ்ய - மேலான பரமாத்மாவுக்கு - நஸ்தான தோபி - ஸ்தானத்திஞல் பரமாத்மாவுக்கு தோஷதர்சனமில்லை. (நிரு பாதிகமாக தோஷமில்லாதவன்-எதிர்தட்டு); தோஷம் ஏற்பட பிரஸங்கமில்லை. உபயலிங்கம் அதாவது ஹேயப்ரத்யனீ கத்வம் — கல்யாணகுணுகரத்வம் ஆகிய யோகத்துடன் கூடிய ஸகுண பிருஹ்மம் (ரூபாதி விசேஷணங்களுடன் கூடியதான அடையாளங்களாக ஆகிறபடியால் - உபா ஸிக்கப்படவேண்டியவன். ஸர்வத்ரஹி - எல்லா சுருதி -

ஸ்மிருதிகளிலும் இப்படி உபதேசமிருப்பதாலே-(பிருஹ்மம் ஸகுண பிருஹ்மமாகும்). (நிர்விசேஷமில்லை என்பதாகும்).

இதுவரை ஜீவர்களின் தோஷங்களைச்சொல்லி-அதனால் வைராக்யத்தை உண்டாக்குவதற்க்காக ஒவ்வொரு ஜீவ அவஸ்தையிலும் அந்த அந்த தோஷங்கள் (ஜீவனுக்கு) நிருபிக்கப்பட்டன. இங்கே பிருஹ்ம பிராப்திக்கு ஏற்பட வேண்டிய திருஷ்ணை (ஆசை)யாகிற நிலையை உண்டாக்குவதற்கு-அதனாலே பிருஹ்மமே பிராப்யம் (உபாஸனையினால் அடையப்படவேண்டியது)-அந்த பரபிருஹ்மம் நிர்தோஷத்வ (தோஷமில்லாதபடி - அதாவது தோஷங்களுக்கு எதிர்தட்டு (ப்ரத்யனீகன்); அதேபடி கல்யாண குணாத்மகன் - என்கிற விஷயங்கள் பிரதிபாதிக்கப்படுவதற்கு ஆரம்பம் செய்யப்படுகிறது. மேல் சொன்ன ஜீவனுடைய நிலைகளில் - ஜாக்ரதா-ஸ்வப்னசுஷுப்தி-முக்த-உத்க்ராந்தி (மேலே ஜீவன் தேகத்தை விட்டுக்கிளம்பிப் போதல்) அந்த அந்த ஸ்தானங்களில் அங்கே ஜீவனுக்கு எத்தகையதோஷங்கள் ஸம்பவிக்கின்றன. இம்மாதிரியான தோஷங்கள் பரமாத்மாவுக்கும் உண்டா? (ஏனெனில்) பரமாத்மா அந்தர்யாமியாக விருப்பதால், மேலான பரபிருஹ்மத்திற்கும் ஒவ்வொரு அவஸ்தையிலும் அவன் ஜீவனுடன் சேர்ந்து இருப்பதாலும், அந்தர்யாமியாகப் பலவகைப்பட்ட தேகங்களில் இருப்பதால் இந்த தோஷங்கள் பரமாத்மாவுக்கும் ஏற்படுகிறதா? - என்கிற விஷயம் விசாரிக்கப்படுகிறது. எது சரியாகும்? இந்த தோஷங்கள் பரமாத்மாவுக்கும் உண்டு. எப்படி? பரமாத்மா அந்த (ஜீவர்களுடைய) அசேதனவஸ்துக்களடங்கிய தேகங்களில் இருப்பதால்-அந்த ஜீவர்கள் தோஷமுள்ள ஒவ்வொரு அவஸ்தையை அடைவதால், अवस्थ शरीरेऽवस्थानात् - ஜீவனுடன் கூடவிருப்பதாலே - ஏற்படலாம் (பூர்வபக்ஷம்). (இங்கு சங்கரபாஷ்யத்தின் கருத்தே வேறாகவிருக்கிறது. சப்தமற்றது-ரூபமற்றது நாசமற்றது - இம்மாதிரி வாக்யங்களால் பிருஹ்மம் நிர்விசேஷம் எனக் காட்டப்படுகிறது).

**ஸ்ரீபாஷ்யம்:**—மேலும் சொல்லப்படலாம் சா. மீ. சூ. 1-2-8- संभोगप्राप्तिरिति चेन्नवैशेष्यात् பிருஹ்மம் சரீரத்தினுள் இருப்பதாக ஒப்புக் கொண்டால், சுகதுக்க அனுபவம் பரமாத்மாவுக்கும் சொல்லவேண்டிவரும் - இதிசேத் - என்றால்; ந - அவ்விதம் வராது; காரணம் வைசேஷ்யாத் - காரணம் வேறுபடுவதால். (அதாவது ஜீவன் சுகதுக்கம் அனுபவிப்பது கர்மானு குணமாக. ஆனால் புருஷோத்தமன் கர்மவசப்படாதவன். தன் ஸ்வய இச்சையால் அனுப்ரவே சித்து சரீரத்திலிருக்கிறான்: அதனால் பலன்களைக் கொடுப் பவன் அவனே ஆகும்.)

மீண்டும் சா. மீ. 1-3-6. स्थित्यदनाभ्याम् ச - பரமபுருஷ னுக்கு சரீரத்தில் இருப்பது மாத்திரத்தையும் (ஜீவனுக்கு) கர்ம பலபோகத்தையும் கூறப்படுவதால் - த்யுப்வாத்யா யதநம் - பரமபுருஷனே ஆகும். (இங்கேபரமாத்மாவை ஸர்வக்ஞனுகவும் மோக்ஷோபாயமாகவும் கூறப்படுகிறது. கர்ம பலத்திற்கும் அதனுக்கும் ஸம்பந்தமில்லை.) இந்த சூத்ரங்களில் பரமாத்மா அகர்மவசியனுக விருக்கிற படியால், ஜீவனுடைய தோஷங்கள் பரமாத்மாவிடம் ஏற் படாது அஸம்பவம் - அபாவம் என்று சொல்வது சரியாகும்.

இங்கே அகர்மவஸ்யனுன மேலான பரமாத்மாவுக்கு அந்த அந்த ஸ்தான சம்பந்தம் (ஜீவனுக்குள் இருப்பதாலே) யேற்படுவதால் தோஷம் ஏற்படலாம் - அதாவது சரீர சம்பந்தம் ஹேயம் - (இதனால் பரமாத்மாவுக்குகு தோஷம் வரலாம்) என்று இங்கே சொல்லப்படுகிறது.

இப்படி சொல்லப்படுமானுல் நாம் பதில் கூறுவோம் - சரரீ. மீ. சூ. 3-2-5ல் देहयोगाद्वा सोऽपि-என்கிறதில் - ஜீவனுக்கு திரோதானம் ஏற்படுவது ஸ்ருஷ்டி சமயத்திலே சரீரத்துடன் சம்பந்தம் கொண்டதால் ஏற்படலாம்; அல்லது பிரளய காலத்தில் சூக்ஷ்ம அசித் சம்பந்தத்தால் இன்னொரு விதமாகயேற்படலாம் (ஸ்ருஷ்டி காலத்திலே தேஹ

அவஸ்நானத்திலே அசித்வஸ்துவுடன் யேற்படும் ஸம்யோகத்தினுலும் ஏற்படலாம்; பிரளய காலத்தில் நாமரூப அருஹதையற்ற சூக்ஷ்ம அசித்வஸ்துவுடன் ஸம்யோகத்தாலேயேற்படலாம்.) (இங்கு அசித்வஸ்து - தேகத்தைக் குறிக்கும். கர்மாக்களே தேகத்தை உண்டாக்கக்கராணமாவதால் - அபுருஷார்த்தமான எண்ணங்களுக்குக் கர்மாக்கள் காரணமாகலாம்; அதேபடி தீயபலன்களும் கர்மாவினுல் யேற்படுவதால், தேகசம்பந்தமும் அபுருஷார்த்தத்திற்கு ஹேதுவாகலாம். இல்லாதபோனுல் கர்மாக்களே துக்க ஹேதுக்களாக ஆகலாம் - அதனுல் அந்த தேகத்துடன் சம்பந்தத்தால் பரமாத்மாவுக்கு யாது பிரயோசனம் ?)

ஆகையால் தேகசம்பந்தத்தாலே அபுருஷார்த்தங்கள் தான் ஏற்படுகின்றன. ஆனுல் பிருஹ்மவிஷயத்தில் கர்ம வச்யமில்லே - அதனுல் தேக உற்பத்தி இல்லே – ஆயினும் தேகம் என்பதால் பலவிதமான அபுருஷார்த்தங்கள் - அசுத்தங்கள் ஏற்படக் கூடும்; பல விதமான துக்கங்கள் உண்டாகக்கூடும், கர்மாக்களே துக்கங்களே உண்டாக்குவதற்குக் காரணமாகவிருக்கின்றன. नानाविधाशु चिदेहसंबन्धो अपूरूषार्थ एव,). மேலும் தேகத்தை நியமனுர்த்தம் - உள்ளிருந்து அடக்கி ஆளுவதற்கு, தன் ஸ்வதந்திரமான இச்சையால் பரமாத்மா அனுப்ரவேசம் செய்திருப்பது கூட அபுருஷார்த்தஸம்பந்தத்தை உண்டாக்கும் - அடைய வைக்கும், அது அவர் ஜனீயம் - அது விலக்கப்படமுடியாதது. ரத்தம் - சீ இவைகளால் நனேக்கப்படுவதும்-(இது தேகத்தினுல் உண்டாவதல்லவா)-தன் ஸ்வய இச்சையாயிருந்தாலும், தேஹசம்பந்தம் பிருஹ்மத்திற்கு அபுருஷார்த்தமாகும் ஆகையால் பிருஹ்மம் ஜகத் ஏககாரணமானுலிம், ஸர்வக்ஞத்வாதி கல்யாண குணுகரம் என்று பிருஹ்மத்தைச் சொன்னுலும், அவ்விதமாயினும் (பிரு. உ. மாத். 6-5ல்) य: पृथिव्यां तिष्टन् - (எவன் பூமியினுள் நிற்கிருனே). यश्चक्षुषि तिष्टन् - (எவன் கண்ணுக்குள் இருந்து கொண்டு); यो रेतसि

तिष्ठन् (எவன் ரேதஸீக்குள் இருந்து கொண்டு); यः आत्मनि तिष्ठन् (எவன் ஆத்மாவினுள் இருந்து கொண்டு); (மாத் சாகை) என்கிற வசனங்களால் அந்த அந்த விடங்களில் அவஸ்திதமான (உள் இருந்துகொண்டு நியமனம் செய் வதால்-அந்த அந்தஇடங்களின் சம்பந்தத்தாலே அபுருஷார்த் தங்கள் பரமாத்மாவுக்கும் ஏற்படக்கூடும் என்று சொல்வது தவறில்லை - சரியாகும் (பூர்வபக்ஷம்).

(இங்கு பூர்வபக்ஷி பிருஹ்மத்திற்கும் ஜீவனுக்கும் யாதொரு வித்யாஸத்தைக் காண்கிருனில்லை. தோஷமற் றிருப்பதற்கும் கல்யாணகுணங்களை உடையதும் என்கிற விஷயத்தில் பிருஹ்மத்திற்கும் ஜீவனுக்கும் யாதொரு வித்யாஸமில்லை என்கிருன். ஜீவனுக்கு கர்மத்திஞல் திரோதனம் ஸ்வருபத்தில் உண்டாவதால்-அதஞல் அதற்கு சரீர சம்பந்தம் யேற்படுகிறது. பிருஹ்மம் அகர்ம வச்யன்-ஆனுலும் சரீர சம்பந்தம் யேற்படின் - அது ஸ்வய இச்சை யால் யேற்பட்டாலும் கூட, தோஷங்கள் (தேக சம்பந்தத் தால்) ஏற்படக்கூடும். இதற்குப்பதிலாக - சுருதியில் ஓதப் படுகிறது-அந்த பிருஹ்மத்திற்கு சித் அசித் வர்க்கங்களுடன் சரீர ஆத்ம பாவத்திஞல் சம்பந்தம் யேற்படினும், சரீர தோஷங்கள் ஆத்மாவைச் சாராதபடியால் - பிருஹ்மத்திற்கு உபயலிங்கங்களிஞல் யாதொரு பாதிதமில்லை என்பதாகும்.)

**பதில்**—இவ்விதம் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுகிறேம். சூ. 3-2-11—न स्थानतोऽपि - ஸ்தானத்தை அடைவதால் பரமாத்மாவுக்கு யாதொரு தோஷமும் ஏற்பட பிரஸங்கமில்லை. (நிருபாதிகமாகவே தோஷத்திற்கு எதிர் தட்டு). மேற் சொல்லப்பட்ட ப்ருத்வி - சக்ஷுஸ் இத்யாதி ஸ்தானங்களை பரமாத்மா அடைந்த போதிலும் - மேலான பரபிருஹ்மத்திற்கு அபுருஷார்த்த கந்தம் (சம்பந்தம்) ஏற்படு கிறலில்லை - எப்படி ? उभयलिङ्गं सर्वत्र हि - பரமாத்மாவின் உபய லிங்கங்கள் (ஹேயப்ரத்யனீகத்வம் - கல்யாண குணகரத்வ மும்) எல்லா சுருதி ஸ்மிருதிகளாலும் கூறப்படுவதாலே, எல்லாப் பிரமாணங்களிலும் (सर्वत्र) - பரபிருஹ்மத்திற்கு

உபயலிங்கமாகிறபடியாலே, உபய லக்ஷணங்கள் ஓதப்படு வதாலே - எல்லாப்பிரமாணங்களாலும் ஸ்தான பிரயுக்த மாக பரமாத்மாவுக்கு தோஷங்கள் யேற்பட பிரஸங்கமில்லே. உபயலிங்கம் என்பதற்கு உபயலக்ஷணங்கள் சொல்லப்படு கின்றன - அதாவது ஹேயப்ரத்யனீகத்வம், கல்யாண குணகரத்வம் - நிரஸ்த நிகில தோஷத்வம்; கல்யாண குண கரத்வலக்ஷணங்கள் சொல்லப்படுகின்றன என அர்த்தம். (पृथिव्यात्मादिस्थानत - ஸ்தான சப்தஸ்யாதிகரணார்த்த கத்வே அபி நதோஷ:; பஹுவ்ரிஹிஸ்வரஸ முபயலிங்கபதம்ந: பூர் வான்வயார்ஹம்; பரஸ்யேதிஷஷ்டியந்த ஸ்ரவணாத்) (இங்கு கவனிக்கவும்—அத்வைத பக்ஷத்தில் நிஷேத சுருதிகளின் பலத்தாலே - நிர்விசேஷ பிருஹ்மமானபடியால் - அவர் களுக்கு உபயலிங்கம் ஸித்திக்காது) (பிரமாணங்கள்)
சா. உ. 8-1-5

अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसंकल्पः

அவருக்கு இயற்கையாகவே (நிருபாதிகமாகவே) கல்யாண குணங்களாகிற - பாபமின்மை - ஜரையின்மை - மரணம் இல்லாமை – பசியின்மை - தாகமின்மை - ஸத்யகாம (உண் மையை இச்சித்தல்) ஸத்ய ஸங்கல்ப (தான் நினைத்ததை நிறைவேற்றுதல்). வி. பு 6-2-84

समस्तकल्याणगुणात्मकोऽसौस्वशक्तिलेशोद्धृतभूतसर्गः...तेजो-बलैश्वर्यं महावबोधसुवीर्यशक्त्यादि गुणैकराशिः । परः पराणो सकला न यत्र क्लेशादयः सन्ति परावरेशे

அவருக்குப் பல கல்யாண குணங்கள் இயற்கையாகவே உண்டு. தன்சிறிய அம்சமான சக்தி லவலேசத்தினுல், அவர் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சகலபூதராசிகளேயும் உயரத் தூக்கிவிட் டார், (ஆதாரமாகத் தாங்கிக்கொண்டார்) பரவி விட்டார் என்று அர்த்தம் (அவர் தேஜோராஸி - பலம் ஐஸ்வர்யம்,

ஞானம், ஸீவீர்யம் - சக்திகொண்ட குணகராசி: (சேர்க்கை பெற்ற மஹாவிபூதியாகும்). அந்த பரமாத்மாவே எல்லாவற்றிற்கும் (மேலானது - கீழானது) மேலான பிரபு - அவரிடம் க்லேசங்கள் (மேலான கீழான பிராணிகள் அனுபவிக்கும் துக்கங்கள் - அவித்யாதி தோஷங்கள்) காணப்படுவதில்லை. வி. பு. 1-22-53ல் समस्तहेयरहितम् विष्ण्वाख्यं परमं पदम् - எல்லாவற்றிற்கும் மேலான விஷ்ணுவின்பதம் (ஸ்ரீவைகுண்டம்) யாதொரு தோஷமில்லாதது-இம்மாதிரி சுருதிகளால் ஸ்ருதி ஸ்மிருதிகளால் பிருஹ்மத்தின் உபயலக்ஷணங்களைக் கூறப் பெற்றன.

ஸி. சூ. भेदादिति चेन्न प्रत्येकमतद्वचनात् (3-2-12)

பேதாதிதிசேத் ந ப்ரத்யேகமதத்வசநாத் (3-2-12)

பிருஹ்மமானது நிருபாதிகமாகவே (இயற்கையாகவே) தோஷமற்றது. தேகம் போன்ற உபாதி மூலமாகவும் அதற்கு தோஷம் ஏற்படாது ஏன்? பேதாத்-அந்த பிருஹ்மத்தின் சம்பந்தம் கொண்ட சித் அசித் ஆகிய ஸகல வஸ்துக்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களின் பேதங்கள் (வித்யாஸத்தினுல்) பிருஹ்மத்திற்கு தோஷம்; இதிசேத் - ஏற்படக் கூடும் என்று சொன்னுல் - ந - அவ்விதமில்லை. (சம்பந்தப் பொருள்களின் தோஷங்கள் பிருஹ்மத்தை ஸ்பர்சிக்க மாட்டாது). ஏன் प्रत्येकमतद्वचनात् - ஒவ்வொரு சுருதி வசனத்திலும் - பிருஹ்மத்திற்கு ஒவ்வொரு இடத்திலும் - தோஷம் அதன் ஸ்வரூபமான சுத்த ஸ்வரூபத்திற்கு ஸம்பவிக்க மாட்டாது - என்று சொல்லப்பட்டிருப்பதாலே. (இங்கே சங்கரர் வேறு விதமாக சொல்கிருர் - ஒவ்வொரு பிருஹ்ம வித்யையிலும் பிரும்மத்திற்கு பேதம் (விசேஷம், ஆகாரம்) உபதேசிக்கப்படுவதே அதன் காரணமாக நிர்விசேஷமாகும். ஆகவே இயற்கையாகவோ, உபாதி மூலமோ பிருஹ்மத்திற்கு தோஷம் ஏற்படாது. பிரத்யேகம்—ஒவ்வொரு உபாதி தோறும் - பிருஹ்மத்துக்கு அபேதத்தை சாஸ்திரம் கூறுவதே காரணமாகும்).

**ஸ்ரீபாஷ்யம்:**—இவ்விதம் சொல்லக்கூடும் - எப்படி சா. உ. 8-7-1ல் பிரஜாபதிவித்யையில் ஜீவனுக்கு (முக்த தசையில்) அபஹதபாப்மத்வாதி குணங்கள் (பாபமின்மை ஜரையின்மை போன்ற தேக-மன-ஆத்ம) கல்யாண குணங்கள்)-அதேமாதிரி ஹேயகுணங்கள் ரஹிதம் - ஆகிற உபய லிங்கம் ஏற்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்த ஜீவன் தேவாதி (மனுஷ்ய - திர்யக் இத்யாதி) தேகங்களை தேகசம்பந்தத்தால் அடைவதால் அபுருஷார்த்தங்களை அதனால் அடையக்கூடும் அல்லவா? அதனால் அடைவதைத் தவிர்க்கமுடியாது. இது ஜீவனுக்கு ஏற்படுகிறது என்பதைப் போல, பரமாத்மாவுக்கும் இந்த தோஷமுள்ள ஜீவர்களுக்கு ஆத்மாவாகவும் அவர்கள் தேகமாக இருப்பதால் - அந்தர்யாமித்வேந - தோஷங்கள் ஏற்படக்கூடும் — அவைகளையும் தவிர்க்க முடியாது-என்று (பூர்வபக்ஷம்) சொல்லப்படுமாகில்- நாம் பதில் கூறுவது - तत् न - அவ்விதமில்லை. எனெனில் இதற்கு பிரதிவசனம் பிரகரணத்திலே காணப்படுவதாலே எனபோம், प्रत्येकमतद्वचनात् - பிரு. மா. 6-7 यः पृथिव्यां तिष्ठन्...य आत्मनि तिष्ठन् என்பவைகளால் ஒவ்வொரு பரியாயத்திலும் स त आत्माऽन्तर्याम्यामृत : (அந்த பரமாத்மா) பூமியினுள்ளே நின்று (வசித்துக்)கொண்டு ; ஜீவனுள்ளே நின்றுகொண்டு; இப்படி ஒவ்வொரு பரியாயத்திலும் பரமாத்மாவைப்பற்றிய அம்ருதத்வம் ஓதப்படுகிறது स त आत्माऽन्तर्याम्यमृतः அவரே உனக்கு ஆத்மா, அந்தர்யாமி - அம்ருதன் - என்று சொல்வதால் அந்தர்யாமியாவதும்-அமிருதத்வ வசனத்தினால் அந்த அந்த பரியாயஸ்தானங்களிலே ஓதப்படுவதாலே, அந்த பரமாத்மா ஸ்வய இச்சையினால் அனுப்ரவேசம்செய்து தமது சங்கல்பத்தினால் மேலான நியமனம் செய்பவராக இருப்பதால், பரமாத்மாவுக்கு ஜீவனைப்போல அபுருஷார்த்தங்கள் யேற்பட வழியில்லை. அதாவது தேவ மனுஷ்யாதி சம்பந்த பிரயுக்தத்தால் யேற்படும் தேகங்களின் தோஷங்கள் ஸ்பர்சிப்பதில்லை (இது நிஷேதிக்கப்பட்டதால் - பரமாத்மா எப்போதும் சுத்தமானவன் - தோஷமற்றவன்) ஜீவனுக்கு அவித்யாதிகளால் யேற்படும் திரோதானம் (மறைத்தல்) அவனது நிஜஸ்வரூபம் மறைத்தல்-சூத்ரம் 3-2-4ல் पराभि ध्यानात्तु तिरोहितम् பரமாத்

மாவின் சங்கல்பத்தால் ஏற்படுகிறது - என்றும் சொல்லப் பட்டது - அது இங்கே சரியாகும்.

மேலும் ஆட்சேபிக்கப்படலாம் - பரமாத்மா தன் ஸ்வய இச்சையினால் நியமனம் செய்வதாக விருப்பினும் அந்த அந்த வஸ்துக்களின் சம்பந்தத்தையடைவதால், அந்த அந்த வஸ்துக்களின் ஸ்வபாவமாகவேயிருக்கும் அபுருஷார்த்தங் களை பரமாத்மா அடையக் கூடும் - அதை விலக்கமுடியாது என்று சொல்வது - தவறாகும். (உதாரணமாக கைதியிருக் கிறான் - கைதியிருக்கும் ஜயிலாதிகாரியும் இருக்கிறான் - கைதியின் தோஷம் ஜெயில் அதிகாரிக்கு வருமா ?). அசித் வஸ்துக்களும் இருக்கின்றன அவைகளுக்கு அபுருஷார்த்தம் யேற்படுவதற்கே பிரஸங்கமில்லை ; அதாவது அசேதன வஸ்துக்கள் ஸ்வரூபத்திலே அபுருஷார்த்தமில்லை ; ஏனெ னில் கர்மத்தினால் அல்லவோ புருஷார்த்தம் - அபுருஷார்த் தம் உண்டாகிறது). கர்மவச்யர்களான ஜீவர்களுக்கு அவரவர்களின் கர்மஸ்வபாவ அனுகுணத்தினால், அதே வஸ்துக்கள் பரமபுருஷனுடைய சங்கல்பத்தினாலே, ஜீவர் களுக்குச் சில சமயங்களில் சுகங்களையும். சில சமயங் களில் துக்கங்களையும் வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு ஜீவர்களுக்கு உண்டு பண்ணுவதாக விருக்கின்றன. இந்த சுக துக்கம் கொடுக்கும் சாமர்த்தியம் ஸ்வரூப பிரயுக்தமாக அந்த வஸ்துக்களுக்கே இயற்கையாக விருக்குமானால், எல்லா வஸ்துக்களுமே எல்லாக் காலங்களிலும் சுகத்தையோ துக்கத்தையோ அளிப்பதாக விருக்குமே - ஆனால் உலகத் தில் அப்படி காணப்படுவதில்லையே. (அதாவது எல்லா வஸ்துக்களும் அனுகூலமே. பிரதி கூலத்வம் கர்மாவினால் யேற்படுகிறது. ஜீவர்களுடைய புண்யபாப அனுகுண மாக - பரமாத்மாவின் சங்கல்பத்தாலே. இது ஏற்படுவ தாகும்).

இதேமாதிரி - சில ஸ்மிருதிகளும் ஓதுகின்றன. விஷ். பு. (2-6-46-48)—

नरकस्वर्गसंज्ञे वै पापपुण्ये द्विजोत्तम ।
वस्त्वेकमेव दुःखाय सुखायेर्ष्यागमाय च ।
कोपाय च यतः तस्माद्वस्तु वस्त्वात्मकं कुतः ।
तदेव प्रीतये भूत्वा पुनर्दुःखाय जायते ।
तदेव कोपाय यतः प्रसादाय च जायते ।
तस्मात् दुःखात्मकं नास्ति न च किंचित् सुखात्मकम् ।।

த்விஜோத்தம - பாப புண்யங்களே - நரகம் ஸ்வர்க்கம் என்கிற அடையாளங்களாலே (பெயர்களாலே) சொல்லப் படுகின்றன. ஏனெனில் ஒரேவஸ்து சுகத்தையும் துக்கத்தை யும் உண்டாக்குகிறது; கோபத்தையும் பொறுமையையும் உண்டாக்குகிறது; அதனுல் வஸ்து சுகத்தையோ துக்கத்தையோ உண்டுபண்ணுகிறது - वस्त्वात्मकं என்று எப்படிச் சொல்லமுடியும்; ஆகவே அப்படிப்பட்ட ஒரு வஸ்துவும் ஸ்வதந்திரமாகவே சுக துக்காதிகளை உண்டு பண்ணுகிறது என்று காணப்படுவதில்லை. (கர்மத்தின் பலனுக - பரமாத்மாவின் சங்கல்பத்தினுல் ஜீவனுக்கு அசேதன வஸ்துக்கள் போக்ய பூதமாக விருக்கின்றன என அர்த்தம்.) ஆதலால் வஸ்து துக்காத்மகம் - சுகாத் மகம் என்று இல்லை. ஆகையால் ஜீவர்கள் கர்மவச்யர் களானபடியாலே, அவரவர்களின் கர்மானுகுணத்தினுல், அந்த அந்த வஸ்து சம்பந்தமே - புருஷார்த்தத்தைக் கொடுக் குமானுல்; அப்போது-பரஸ்ய பிருஹ்மத்திற்கு, தனது ஸ்வாதீனத்தாலே ஏற்படும் சரீர சம்பந்தம் - அந்த அந்த விசித்திர நியமனரூப லீலாரஸமே தான்-உண்டாக்குகிறது. (சுக துக்கமில்லை - ஆனுல் பரமாத்மாவின் லீலா ரஸத்திற்கு உடந்தையாக - அமைவதாக விருக்கிறது. அவனுக்கு அலகிலா விளையாட்டுடையான் என்பதற்கு உதவுகிறது என்று அர்த்தம்.

(இங்கே கவனிக்கவேண்டியது - இரண்டு காரணங்கள் சொல்லப்படுகின்றன. முதல் காரணம் - சுருதி ஆதாரத்

திஞல் பரமாத்மாவின் உபயலிங்கம் கோஷிக்கப்பட்டு - அதேமாதிரி ஜீவனுக்கு நிருபாதிகமாக இல்லை - முக்த தசையில் ஏற்படுகிறது - அதஞலே இந்த சுருதிகளுக்கு விரோதம் ஒன்றும் இல்லை என்று காட்டப்படுகிறது. ஜீவனுக்கு கல்யாண குணங்கள் சில சுருதிகளில் தான் ஓதப்படுகின்றன. அது பரமாத்மா சங்கல்ப ஆதீனம்; கர்ம நிபந்தனம் - இத்யாதி. இதஞல் பரமாத்மாவுக்கு உபயலிங்கம் நிருபாதிகமாகவே விலக்ஷணத்வம் கொண்டது. 2) ஒரு வஸ்துவும் ஸ்வயமாகவே சுகத்தையோ துக்கத்தையோ உண்டாக்குவதில்லை - சுருதி பிரகாசிகையில் உதாரணம் காட்டப்படுகிறது - நெருப்பு குளிர்காலத்தில் அவசியமாகிறது; கோடைக்காலத்தில் விரும்பப்படுவதில்லை. அதேமாதிரி உணவு தான்யகிடங்கு ஒருவனுக்கே சொந்தமாஞல் சுகத்தையும் ; இன்னொருத்தனுக்கு சொந்தமாஞல் அம்மாதிரி சுகத்தைத் தருவதில்லை. ஆகவே கர்ம சம்பந்தத்திஞல் தான் சுகமோ துக்கமோ உண்டாகிறது. அது பரமாத்மாவின் சங்கல்பமாகும்).

சூத்ரம் अपि चैवमेके (3-2-13)

அபி சைவமேகே (3-2-13)

அபிச - ஏவமேகே - சில சாகைக்காரர்கள் இவ்விதமே சொல்கின்றனர். (சங்கரபாஷ்யத்திலே - மேலும் சில சாகைக்காரர்கள் (ஏவம்) பேததர்சனத்தை நிந்தித்து - அபேத தர்சனத்தைக் கூறுகிருர்கள்).

(இந்த சூத்ரத்திலே - பகவாஞுக்கு அந்தர்யாமித்வத்திஞல் பரமாத்மாவுக்கு தோஷம் ஸம்பவிக்கலாம் என்கிற விஷயம் யோசிக்கப்படுகிறது.

(अमृत इति पदेनान्तर्यामि ब्राह्मणे सूचितमर्थं सुस्पष्टयितुम् अपि चेति सूत्रं)

சில சாகைக்காரர்கள் ஓதுகிறுர்கள் - ஒரே ஒருதேக சம்பந்தத்திஞல் (ஏகஸ்மிந்நேவ தேகஸம்யோகே) ஜீவனுக்கு அபுருஷார்த்தங்கள் ஏற்படக்கூடும் ; ஆனுல் பரமாத்மாவுக்கோ அந்த மாதிரி அபுருஷார்த்தங்கள் கிடையாது - அவன் அவாப்த ஸமஸ்தகாமன் ஆனபடி யாலே ; மேலும் அந்தர்யாமித்வம் நியமன ரூபமாக உள்ள பரமாத்மாவின் ஐஸ்வர்ய ஆயத்த தீப்தியோகம் ; அதனுலே அவன் உஜ்ஜவலமடைகிருனே ஒழிய-ஒருக்காலும் தாழ்வை அடைகிறதில்லே. இதற்கு ஆதாரமாக இந்த சுருதிகள் கூறுகின்றன. முண். உ. 3-1-1—

द्वासुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते । तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति अनश्नन्नन्यो अभिचाक शीतिः -

சரீரமாகிற மரத்தை இரண்டு பக்ஷிகள் ஒரே ஸ்வபாவத் துடன் - பிரிக்கமுடியாதபடி சகாக்கள் என்று சொல்லும் படி - (பரமாத்மா - ஜீவாத்மா) அண்டி வசிக்கின்றன - அவைகளுள் ஒன்று பிப்பல பழத்தை (கர்ம பலத்தை - ஜீவன்) புஜிக்கிறது. (சுக துக்கம் அனுபவிக்கிறது) ; இன்ஞென்று (பரமாத்மா) ஒன்றும் சாப்பிடாமலே - பிரகாசிக்கிறது (துக்க சுக அனுபவமில்லே).

மேலும் சொல்லப்படலாம் – சா. உ. 6-3-2ல்

अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरणमिति-ब्रह्मणोऽपि तदात्मभूतस्य देवमनुष्यादिरूपत्वं तन्नामभाक्त्वं चास्ति -

(பரமாத்வாகிய) நான் ஆத்மாவாகிற இந்த ஜீவனுக்குள் நுழைந்து - நானே தான் என்று சொல்லும்படி நான் நாம ரூபங்களே (விபாகங்களே) உண்டாக்குவேன்; இதில் நாம விபாகம் ஏற்படுவதற்கு முன்பாகவே பிருஹ்மத்தின் ஜீவ னுக்குள் அநுப்ரவேசத்வம் ஓதப்படுகிறது. (பிருஹ்மாத்மக

ஜீவாநு ப்ரவேஸ பூர்வகம் - நாமரூப வ்யாகரணம் இதி) ; இதனால் பிருஹ்மம் ஜீவனைச் சரீரமாகக்கொண்டு - தான் ஆத்மாவாக விருப்பதாலே, அதே பிருஹ்மமே தேவ-மனுஷ்யாதி ரூபங்களை அடைந்து, அதனால் யேற்படும் நாமரூபங்களையும் கொண்டதாக ஆகிறது - ஆகையால், ब्राह्मणो यजेत इத்யாதி (பிராம்மணன் யாகம் செய்யக்கடவன்) என்கிற விதி நிஷேதங்களுக்கும் - சாஸ்திர கோசரத்தினால் உட்படுகிறான் (ஜீவனைப்போல). அதாவது கர்ம வஸ்யத்வம் பிருஹ்மத்திற்கும் அவர் ஜனீயம் - விலக்கப்பட முடியாதது என்பதாகும்.

இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் பதில் அளிக்கிறார்.

ஸித். சூ. अरूपवदेव हि तत् प्रधानत्वात् (3-2-14)
அருபவதேவ ஹி தத் பிரதானத்வாத் (3.2-14)

பிருஹ்ம-பிருஹ்மம் அருபவத் ஏவ ஹி-(ரூபம் கொண்டதாகவில்லை); என் ? தத் பிரதானத்வாத் - (நிர்வாஹத்வேந) பிரதானமாக (மிக முக்கியமாக) விருப்பதாலே. (நாமரூப வ்யாகரணம் அவரே செய்வதாலே - அவர் முக்யமாகவிருக்கிறார்) (சங்கரர்-உபநிஷத் வாக்யங்கள் நிர்குண பிருஹ்மாத்ம தத்வத்தை உபதேசிப்பதில் பிரதானமாகக் கொண்டிருப்பதாலே-அதன் காரணமாகும் - ரூபமில்லாததற்கு (ரூபாதி ஆகாரம் அற்றிருப்பதற்கு) காரணமாகும் என்றார் - நமக்கு வேறு விதமானபடியால் - பிருஹ்மம் ஸகுணமே. பல கல்யாணகுணங்கள் கொண்டதாலே என்று அர்த்தம். இது பிற்பாட்டுள்ள **15-16-17** சூத்ரங்களில் விவரிக்கப்படும்). अरूपवत् - न विद्यते रूपं यस्य तदरूपम् - अरूपेण துல்யரூபவதிதி - வதி ப்ரத்யயம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—பரமாத்மா தேவாதி மனுஷ்ய சரீரங்களை அனுப்ரவேசம் செய்வதாலே அந்த அந்த ரூபங்களிலே சம்பந்தப்பட்டவராக விருப்பதாலே, (ஸர்வம் பிருஹ்மாத்மகம் என்று சொல்லப்படுமாப்போல), அந்த பிருஹ்மத்திற்குக் குறிப்பிட்டபடி ஒரு ரூபம் (ஆகாரம்) இல்லை-அதாவது

அருபவதேவ - ரூபமில்லாதவராகவே - தத் (பிருஹ்மம்) ரூப ரஹித துல்யமேவ - என்று சொல்லும்படி விளங்கு கிறுர். இதற்கு அர்த்தம் - ஜீவனைப்போல ஒரு சரீரத்தில் நிபந்தனம் (கட்டப்பட்டவாரக) கர்ம வஸ்யத்தை அடைந்த ஜீவனைப்போல இவரும் ஆகிருர் - என்று அர்த்தமில்லை. कर्मवश्यत्वमस्य न विद्यते - इत्यर्थः)

எப்படி ? निर्वाहत्वेन-प्रधानत्वात् ஏனெனில் அவரே ஸர்வாதி காரியானபடியாலே - அவருடைய நிர்வாஹத்வம்-பிரதானத் வாத் - அவரே நாமரூபங்களை வ்யாகரணம் செய்கிறபடி யாலே, சா. உ. 8-14-1ல் आकाशो वै नाम नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म - வாஸ்தவத்திலே ஆகாச சரீர பரமாத்மாவே (आकाश - பரமாத்மா) நாமரூபங்களுடைய நிர்வஹிதா ; அந்த பரமாத்மாவே இந்த நாமரூபங்களின் உள்ளில் எவர் இருக்கிருரோ — அவரே ஆகும் - (நாமரூப வ்யாகரணம் பிருஹ்மம் அந்தர்யாமியாக விருப்பதாலும் அனுப்ரவேசத் திஞல் யேற்படுவதாகிறது). ஸர்வானுப்ரவேசத்திஞல் யேற்பட்ட நாமரூப வ்யாகரணம் உண்டாவதால், பிருஹ்மம் நிர்போத்ருத்வம் - காரியங்களின் அசுத்தம் சுத்தமான காரண பிருஹ்மத்தை ஸ்பர்சிப்பதில்லை - அதாவது பிருஹ் மத்தின் தேகமாகிற சித் அசித் ஸ்வரூப ஸ்வபாவங்கள் அப்படியே அவர்களிடமேயிருக்கும் தேக சம்பந்தத்தால் ; பிருஹ்மம் அவைகளால் விகாரமடைவதில்லை என்று காட்டப்படுகிறது — சரீர தோஷங்கள் ஆத்மாவைச் சேராது என்பதாலே.

(இங்கு சொல்லப்படுவதை கவனிக்கவும். ஜீவனைப் போல பிருஹ்மம் கர்ம வஸ்யமில்லை-அதஞல் சுக துக்கானு பவமில்லை. ஏனெனில் பிருஹ்மம் ஜீவன் இவர்களின் விஷயம் தனிப்பட்டதே ; ஒருவனுக்கு லீலை (ஸ்ருஷ்டி) ; இன்ஞெருவஞகிற ஜீவனுக்கு கர்ம பலன்களை அனுபவித் தல். பிருஹ்மம் நாமரூப வ்யாகரணம் செய்கிறது. ஆஞல் அந்த பிருஹ்மம் நாமரூப வ்யாகரணத்திஞல் யேற்பட்ட கார்யங்களாகிற சித் அசித் வஸ்துக்களின் அனுபவங்களை

அனுபவிப்பதில்லை. மேலும் சொல்லப்படலாம்-ஒவ்வொரு வஸ்துவும் பிருஹ்மத்தின் அனுப்ரவேசத்தினுல் பிருஹ்ம சப்தவாச்யம் ; ஆயினும் ஸம்சார தசையில் ஒரு பத்தனைக் குறிக்கும்போது நிஷ்கர்ஷ சப்தமாகிறது - அதனுல் பிருஹ்மத்தைக் குறிக்காது, அதனுலே பிருஹ்மத்திற்கு சம்சாரித்வம் ஏற்படுகிறது என்று சொல்லமுடியாது - கர்மத்தின் சம்சாரித்வம் ஜீவனுக்குத்தான் சொந்தம், அந்த ஜீவன் சரீர ஆத்ம பாவத்தாலே பிருஹ்மத்தின் அம்சமாகும். அதனுல் பிருஹ்மத்திற்கு சம்சாரித்வம் யேற்படுவதாகவில்லை).

மேலும் இந்த சித் அசித் வஸ்துக்கள் பிருஹ்மத்திற்கு சரீரமாதலால், பிருஹ்மம் அவைகளில் அந்தர்யாமியாக விருப்பதாலே, கேள்வி கேட்கப்படும் - பிருஹ்மத்திற்கு ரூபமில்லை, பிருஹ்மமே அந்த அந்த வஸ்துவின் ரூபமாகவே விருப்பதாலே அரூபம் (अरूपवत् - ரூபமில்லாதது) என்று எப்படி சொல்ல முடியும் ? அதற்குப் பதில் நாம் உரைப்பது எப்படி ஜீவன் ஒவ்வொரு குறிப்பிட்ட வஸ்துவினுல் உண்டாக்கப்பட்ட சுகதுக்காதிகளை அனுபவிக்கிற காரணத்தினுல், அந்த வஸ்துவின் ரூபத்துடன் சம்பந்தப் பட்டுள்ளதோ, (தத்தத் ரூப ஸம்பந்த:) அதேபோல, பிருஹ்மத்திற்கு சுகதுக்கானுபவங்கள் இல்லாதபடியாலே ரூப மில்லாததாகவிருக்கிறது (तथा तदभावात् परस्यारूपवत्त्वम्). சாஸ்திரத்திலே விதி நிஷேதங்கள் விருக்கின்றனவே, அவை எல்லாம் பத்த ஜீவனுக்கே ஏற்பட்டதாம் கர்மவஸ்யனுபடியாலே. (कर्मवश्यमेवाभिकुर्वन्ति) ஆகையால் பரப்பிருஹ்மம் அரூபதுல்யமேவ - அதற்கு ரூபமில்லை என்று சொல்வதற்குச் சமமாகும். ஆகையால் பிருஹ்மம் அந்தர்யாமியாக ஒவ்வொரு வஸ்துவிலும் அவஸ்திதமாகவிருப்பினும் (உள்ளிருந்து நியமிக்கிறவனுக விருப்பினும்). பிருஹ்மம் நிரஸ்த நிகில தோஷத்வம்; கல்யாண குணுகரத்வம் ஆகிற உபய லிங்கமாகிற ரூபமாக விருக்கிறது. (லக்ஷணங்களுடன் கூடியதாக விருக்கிறது) என்பது சரியாகும்.

**तेन रूपभावत्वेऽपि रूपकार्याभावादरूपतुल्यत्वमुच्यते । ननु जीवमिव स्वात्मानमपि रूपभाजं कुर्वन् परः रूपकार्यमपि लिप्सत एव; अन्यथा वैयर्थ्यादिति शंकते नन्विति ।**

ஆகவே ஸ்தாபிதம் - பிருஹ்மணோ நிர்தோஷத்வம். (ஹேய ரஹிதம்) ஆயினும் கல்யாண குணங்களும் உண்டு என்ப தற்கு மேலும் சொல்லப்படுகிறது).

(அத்வைதிகளால்) இவ்விதம் சொல்லப்படுகின்றன - தை. அ-1-1 सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म - (ப்ருஹ்மம் ஸத்யம் ஞானம் அனந்தம் ஸ்வரூபமாகவே இருக்கிறது) இதனால் வ்யா வர்த்த பரமாக, பிருஹ்மத்திற்கு நிர்விசேஷ பிரகாசைக ஸ்வரூபம் - குணமாகக் கொண்டதில்லை (பிரகாசத்தை). (ஞானமே - ஆனந்தம் என்கிறது போல) ஸ்வரூபமாக பிருஹ்மத்திற்கு யேற்படுவதால், பிருஹ்மம் நிர்விசேஷம் என்பதாகும். பிருஹ்மத்துக்கு அன்யமான குணங்கள் இருக்கின்றனவே - அதாவது ஸர்வக்ஞத்வ, ஸத்ய ஸங்கல் பத்வம், ஜகத் காரணத்வம், ஸர்வாந்தராத்மத்வம், ஸத்ய காமத்வாதிகம் - ஆகிற குணங்கள் சுருதிகளில் ஓதப்படு கின்றனவே யென்றால் - அவை எல்லாம் (அபச்சேத நியா யத்தினால்) नेति नेति - இல்லை - இல்லை என்று நிஷேதிக்கப் பட்டிருப்பதாலே, அவை மித்யாபூதம் (நிஜமல்ல-) என்று கொள்ளவேண்டியது; (அத்வைத பக்ஷமிது); அப்படி யிருக்க, எப்படி பிருஹ்மத்திற்கு உபயலிங்கமாகிற கல்யாணகுணகரத்வம், நிரஸ்தநிகில தோஷத்வ ரூபம் - ஸித்திக்கும்? (ब्रह्मण इति) - அதற்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதிலளிக்கிறார்.

ஸி. சூ. प्रकाशवच्चावैयर्थ्यात् (3-2-15)

ஸி. பிரகாசவச்சா வையர்த்யாத் (3-2-15)

ப்ரகாசவத்ச - எப்படி பிரகாசம் (அதே போல ஸர்வக் ஞத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம் இத்யாதி பிருஹ்ம குணங்

கள் என்பவை போல) ஆகும் - ஏனெனில், அவையர்த்யம் - பயனுள்ளதாக ஆகின்றன. ஆகவே பிருஹ்மம் உபய லிங்கமாகும்.

எவ்விதம் (தை. அ. 1-1)ல் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म - பிரும்மம் ஸத்யம் ஞானம் அனந்தமாக விருக்கிறதோ — (ஸ்வரூபமாகவும் — குணங்களைக் கொண்டதாக விருக் கிறதோ) அதே மாதிரி மற்ற குணங்களைப் போதிக்கும் வாக்யங்கள் பயனுள்ளதாக ஆகின்றன - (அவையர்த்யம்) யேற்படுகிறது. பிரகாச ஸ்வரூபத்வம் போல மற்ற குணங்களும் பிருஹ்மத்திற்கு உண்டு என்று (அந்த சுருதி வசனங்கள்) சொல்வதாக ஆகின்றன, அதனுல் ஸத்ய ஸங்கல்பத்வ, ஸர்வக்ஞத்வம், ஜகத்காரணத்வம், ஸர்வாத் மகத்வம், நிரஸ்த நிகில அவித்யாதி தோஷத்வம் - இவை களைக் காட்டும் சுருதி வாக்யங்கள் (பிருஹ்மத்திற்குச் சொல்லப்படுவதால்) அவையர்த்த யாத் - பயனுள்ளதாக ஆகின்றன. அதனுலே பிருஹ்மம் உபயலிங்கமேவ.

**அனுபந்தம்**—சங்கரர் இந்த உபயலிங்க அதிகரணத் தால் பிருஹ்மம் நிர்குணமானது என்கிஞர். ஒரே வஸ்து வுக்கு ரூபமுள்ளதாகவிருப்பது - ரூபாதி விசேஷங்களற்றது என்று நிர்தாரணம் செய்ய முடியாதல்லவோ? முரண்பாடு வருவதே காரணம். ஸ்படிகம் இயற்கையாகவே வெள்ளை; செம்பருத்தி பூவின் சம்பந்தம் பெற்ருல் உபாதியினுல் - வெண்மையற்று - சிகப்பாக ஆகிறது. ப்ரமமயக்கத்தால் (உபாதியினுல்) உண்டாவதாகும். பிருஹ்ம ஸ்வரூபத் தைக் வ்யாவர்த்தமாக அர்த்தம் கூறும்போது - சப்த மற்றது ஸ்பர்சமற்றது - ரூபமற்றது - நாசமற்றது - இம் மாதிரி விசேஷம் இல்லாதபடியாகவே உபதேசிக்கப்பட்டிருக் கிறது. அவ்விதமானுல் ஸவிசேஷத்தைப் போதிக்கும் சுருதிகள் விஷயமற்றதாகி விடுமோ - எனின் - இல்லை என்று சொல்வோம்; பிரத்யேகம் (ஒவ்வொரு உபாதி தோறும்) அதத் வசனம் (அபேதம் சொல்லும் வசனம்) இருப்பதே காரணம் - அதாவது சாஸ்திரம் ஒவ்வொரு

உபாதிதோறும் பிருஹ்மத்திற்கு அபேதத்தைச் சொல்கிறது. பின்னுகாரத்துடன் சேர்க்கை சாஸ்திர சம்மதம் என்று சொல்லமுடியாது. உதாரணமாக இந்த பூமியில் தேஜோமயனும் அம்ருதமயனுமான யாதொரு இந்த புருஷன் உண்டோ, சரீரத்தில் தேஜோமயனும் அம்ருதமயனுமான யாதொரு சாரீரனுன புருஷன் உண்டோ-(ஜீவன் உண்டோ)-இந்த ஆத்மா எவனே அவனேதான் இவன். (அந்த பிருஹ்மமே இந்த ஜீவன்) - அபேதம் ஓதப்படுவதாலே - பின்னுகாரம் இல்லை.

சுருதிகளும்-ருபாதி ஆகாரமற்றதாகவே பிருஹ்மத்தை அறிந்து கொள்ளவேண்டியது - அபூர்வம், அநபரம் அநந்தரம், அபாஹ்யம், ஸர்வாநுபூ: (எல்லாவற்றையும் அனுபவிக்கிற) அயமாத்மா - (இந்த ஜீவன்) பிருஹ்மம். இவை பிருஹ்மாத்ம தத்வத்தைப் பிரதானமாகக் கூறக்கூடியனவே ஒழிய - வேறு பொருளை முக்கியமாகக் கூறவில்லை. இந்த விஷயம் தத்து ஸமந்வயாத் என்கிற அதிகரணத்தில் காட்டப்பட்டதாகும். ஆகவே பிருஹ்மமானது ஆகாரமற்றது (ருபமற்றது).

சரி வேதவாக்யங்களுக்குள் - ஒருவகை சுருதி (அபேத வாக்யங்கள்) பயனுள்ளவை; மற்றது (பேதசுருதி) பயனற்ற தன்மையை அடையாதோ - என்கிற ஆக்ஷேபம் பயனற்றது - (அபச்சேத நியாயத்தால் பாதிதம் - எல்லா வாக்யங்களுக்கும் பிரமாணத்தன்மை பொதுவாகவிருப்பதே அதன் காரணமாகும்). சுருதியைப்போல ஸ்மிருதியும் பிருஹ்மத்தை சைதன்யமாத்திரமாக உபதேசிக்கிறது. உப்புக்கட்டி உதாரணத்தினுல் யாக்ஞயவல்கியர் மைத்ரேயிக்கு விளக்கி - இந்த பரமாத்மா உள்ளேயும் வெளியேயும் உப்பைத்தவிர வேறு ஒன்று அற்றதாக - அதாவது பிருஹ்மம் பிரக்ஞானகனமாக (அறிவையே ஸ்வரூபமாகப்) பெற்றிருக்கிறது என்ருர்.

சுருதியும் அப்படியே சொல்கிறது-இந்த ஆத்மாவானது சப்தாதி சகல விசேஷங்களற்றது-உபசாந்தமானது. பிருஹ்

மம் ஆதியுள்ளது மன்று, ஸத்தாகவும் இல்லை - அஸத்தாக சொல்லப்படாதது. ஆகவே மோக்ஷ சாஸ்திரம் பிருஹ்மம் நிர்விசேஷம் தான் ஸுர்யகாதிவத் - (ஜலத்திற்காணும் சூரிய பிரதி பிம்பம்போல - உபமானம் (உபமா) சொல்லப் படுகிறது. சூர்யன் ஒருவனே, பல பல ஜலங்களில் பற்பல வாறு எவ்விதம் காணப்படுகிருனோ, இவ்விதமே பிறவியற்ற வனும் ஸ்வபிரகாசனுமான இந்த ஆத்மா ஒவ்வொரு க்ஷேத்ரத்திலும் உபாதியினுல் வேறுபட்ட ரூபத்துடன் காணப்படுகிருன்).

மேலும் சொல்லப்படலாம் - ஆத்மா மூர்த்தனல்லன் (உருவமற்றவன்); இந்த சூரிய திருஷ்டாந்தம் சரியில்லை, என்ருல் - இந்த திருஷ்டாந்தம் சரியானதே. ஜலத்தின் தோஷங்கள் சூரியனைச் சேராது. பிருஹ்மம் ஒரே ரூபமாயி னும் - தேகாதிகளாகிற உபாதியின் சம்பந்தத்தால்-குட்டை நெட்டை, விருத்திஹ்ரஸ்வ தோஷங்களை அடைவதுபோல - உபாதியினுல் அந்த தர்மங்களை அடைவதாலே-உதாரணம் ஸமஞ்ஜஸமே (பொருத்தமே). சுருதிகளிலும் பிருஹ் மத்துகே தேஹாதியாகிற உபாதிகளில் அனுப்ரவேசத்தை சாஸ்திரம் உபதேசிக்கிறபடியால் - இந்த சூர்ய உபமா சரியாகும்.

சுருதிகளில் ஸகுணபர பிருஹ்ம சுருதிகளைவிட்டு - அபேத சுருதிகளால் நிர்குண பரபிருஹ்மமாக நிர்வஹிக்க அவசியமாகிறது. ஸகுண பிருஹ்மம் - அதுபற்றிய உபா ஸன விதிகள் - அதுபற்றிய வித்யைகளில் - சில பாப நிவிருத்தியையும் - சில ஐஸ்வர்யபிராப்தியையும், சில கிரம முக்தியையும் உபதேசிக்கின்றன. ஆகவே உபாஸன வாக் யங்களுக்கும், நிர்குண பிருஹ்ம பரவாக்யங்களுக்கும் வெவ் வேருன பொருள்கூறுவதுதான் சரி. இதில் ஏகவாக்யத் வம் (ஒரே பொருள் உள்ள தன்மை) சொல்வது சரியல்ல. ஏனெனில் ஸித்த பரமான பிருஹ்ம வாக்யங்களில் விதி இல்லாதிருப்பதே அதன் காரணம்-அதாவது இந்த வாக்யங் கள் பிருஹ்மத்தை உபதேசிப்பதில் நோக்கம் கொண்டபடி

யால்-முடிவடைகின்றன. விதியைச் சொல்லவில்லை. இதற்கு காரணம் - பிருஹ்மம் ஒன்றே ஸத்யம். அதில் அவித்யை யினுல் அத்யஸ்தமான இந்த பிரபஞ்சம் மித்யை. ஏகமே வாத்விதீயம் பிருஹ்ம தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வம ஸி. "திரஷ்டவ்ய:" என்பவைகளில், விதி சொல்லப்படவில்லை - ஞானம் கிரியையாகாது - மனப்பற்று தான் சொல்லப்படு கிறது. ஞானம் புருஷதந்திரமாக (முயற்சியினுல் புருஷனை எதிர்பார்த்து உண்டாவதாக) இல்லை-அது வஸ்து தந்திரமே பொருள் எப்படியிருக்கிறதோ - யாதாத்மியம் - அதற்கு ஏற்றபடி உண்டாவதாக இருக்கிறது - ஆகவே ஞானத்தில் விதிசம்பந்தமில்லை.

ஆகவே அத்வைத சிந்தாந்தம் - பிருஹ்மம் நிர்குணம் - பாரூபத்வம் போன்ற குணங்கள் பொருந்தாது. ஜகத் மித்யையானபடியால் இந்த குணங்கள் உபகாரியன்று. மேலும் ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதும் காரண மாகும். ஒரே தர்மியான வஸ்துவினிடம் முழுபிரபஞ்ச ப்ரவிலாபநமும் (தோன்ருமல் செய்தல்) பிரபஞ்சத்தினது ஏகதேசமிருத்தலும் - இவை பொருந்தாது - பிரயாஜதர்ச பூரணமாஸ வாக்யங்களில் - அதிகாரம் சத்தாலே அபேதம் தோன்றுவதால், ஏகவாக்யத்வம் சரியாகலாம் ஆனுல் ஸகுண - நிர்குணபர வாக்யங்களில் ஏகவாக்யத்வ மாகிற (அதிகாராம்ஸம்) ஒன்று இருப்பதாகத் தெரிய வில்லை) ஆகவே ஆகாரமுள்ளதும் ஆகாரமற்றதாகவு முள்ள உபதேசங்களுக்கு - இவ்விதம் நிர்குண பரமாக அர்த்தம் சொல்வது சரியாகும்.

(இந்த மேலே காட்டப்பட்ட விஷயங்கள் இந்த அதி கரணத்திலுள்ள சூத்ரங்களின் சாராம்சமாகும். நாம் ஏற்கனவே இவைகளுக்கு பலவிடங்களில் பதில் உரைத் திருக்கிறோம். ஜிக்ஞாஸாதி கரணம் இத்யாதி அந்த அந்த விடங்களைப் பார்க்கவும்).

(அத்வைத பக்ஷம் - முக்யமாக இரண்டு சுருதிப் பிரமாணங்களால் சொல்லப்படுகிறது. தை. 2. (2-1-1)

பிருஹ்மம் ஸத்யம் ஞானம் அனந்தம்; இதனுல் பிரும்மம் ஸத்ய ஞான அனந்தமே. இரண்டாவதாக - நிஷேத வாக்யத்திலுல் नेति नेति - என்று பிரு. உ. 2-3-6ல் சொல்லப் படுகிறது. (மூர்த்தா மூர்த்த பிரபஞ்சத்தைக் காட்டிலும் முக்காலத்திலும் அழிவில்லாத பிருஹ்மம் ஒன்றே எஞ்சி நிற்கிறது नेति नेति என்கிற இதில்லை - இதில்லை என்கிற ஆதேசம் நிஷேதத்தாலே உபதேசிக்கப்படுகிறது. இதன் அர்த்தம் யாதெனில் - இதுதான் அது - என்பதைவிட வேறு ஒன்று இல்லை. இதி - நிஷேதிக்கப்படும் பொருள் - ஏவம் - என்கிறபடி. முன் உள்ள பிரகரணத்தையொட்டி அதன் விரிவுடன் கூடிய மூர்த்தா மூர்த்த ரூபங்களும் - இவை எதனுடையதோ - அந்த பிருஹ்மம் - முன்னமே கூறப்பட்டதாகும் (ஸங்நிஹிதம்). இந்த நிஷேதம் பிரபஞ்சம் பிருஹ்மம் - இரண்டையும் நிஷேதிக்கிறதா - அல்லது ஒன்றைமாத்திரமா? அதாவது பிருஹ்மத்தை இல்லையென்று நிஷேதித்து, இரண்டாவதான பிரபஞ்சத்தை (ரூபங்களை) மிச்சப்படுத்துகிறதா? அல்லது ரூபங்களை நிஷேதித்து - பிரும்மத்தை மிச்சப்படுத்துகிறதா? नेति नेति என இருதடவைகள் சொல்லப்பட்டதாலே ஒன்றினுல் அதைப்பற்றின விசேஷத்துடன் கூடின பிருஹ்மத்தின் ரூபமும், மற்றொன்றினுல் ரூபமுள்ள பிருஹ்மமும் மறுக்கப் படுகிறது - என்கிற எண்ணம் உண்டாகிறது - அல்லது ரூபமுள்ள பிருஹ்மமே மறுக்கப்படுகிறது. சித்தாந்தம் - ரூபம் ரூபமுள்ள பிருஹ்மம் ஆகிய இரண்டையும் நிஷே திப்பது சரியில்லை. ஆகவே பிரபஞ்சம் நிஷேதிக்கப்படு கிறது. பிரபஞ்சத்தை மித்யை என்று நிஷேதம் செய்தல் ரூபமான உபதேசத்தைவிட - மேலான உபதேச முறை பிருஹ்மத்துக்கு இல்லை என்பதாம். ஸத்யத்துக்கு ஸத்யம் - என்கிற சுருதியில் பிராணன்களே ஸத்யமாகும்; அந்த பிராணன்களுக்கு இது (பிரும்மம்) ஸத்யமாகும் என் றல்லவா உபதேசம் காணப்படுகிறது. ஆகவே பிரும்மம் ஸத்யம் - ஜகத்மித்யை பிருஹ்மம் நிர்குணம் - ஸகுண மில்லையாகும்).

ஆகவே नेति नेति என்பதால், பிருஹ்மம் ஞானமே ஸ்வ ரூபமாதலால் - அது ஞானத்திற்கு அதிஷ்டானமாகவோ - ஞானத்தை குணமாகவோ உடையதில்லை. இது பிருஹ தாரண்யக உபநிஷத்தில் சொல்லப்படுகிறது. இதற்கு பதில் - இந்த நிஷேத வாக்யங்கள் - மற்ற குணபரவாக்யங் களுடன் தாதாத்மியம் (ஒற்றுமை) சொல்லப்படவேண்டும். மேலும் ஞானம் என்பதை குணமாக உடையது பிருஹ்மம் என்று சொல்லும் போது தர்மபூத ஞானம் சொல்லப்படு கிறது. இந்த தர்மபூத ஞானமே அதிஷ்டானமாக முடியாது. ஆனால் ஞானஸ்வருபனான ஆத்மாவுக்கு தர்ம பூத ஞானம் அதிஷ்டானம் செய்யலாம் அல்லவா? அதிஷ் டாதா ஆத்மா - அவனுக்கு தர்மபூதஞானம் என்கிற குணம் யேற்படலாம்) இந்த விஷயம் சூத்ரம் 21ல் விளக்கப்படு கிறது). விளக்கம் (அனுபந்தம்) முற்றிற்று.

## ஸ்ரீபாஷ்யம்

ஸி. சூத்ரம். आह च तन्मात्रं (3-2-16)

ஸி. ஆஹ ச தந்மாத்ரம் (3-2-16)

பரா஽ஸ்ய சக்தி: (ஸ்வே. 6-8) போன்ற ஸத்யம் ஞானம் அனந்தம் பிருஹ்மம் - என்கிற சுருதி பிருஹ்மத்தை, ஆஹ ச - உபதேசிக்கிறது; தந்மாத்திரம் - (இவ்வளவு என்று (அதாவது, அதன் ஸ்வரூபம் பிரகாசத்வம் - ஆனால் அதற்கு (மற்ற சுருதிகளில் ஓதப்பட்ட) மற்ற குணங்களும் உண்டு என்பதை நிஷேதிக்கவில்லை.) ज्ञानगुणकत्वं न व्यवच्छिनत्ति).

மேலும் சொல்லப்படலாம்-தை. ஆ. 1-1ல் सत्यं ज्ञानमनन्तं- இத்யாதி வாக்யம் பிருஹ்மத்திற்கு பிரகாச ஸ்வரூபத்தை மாத்திரம் தான் சொல்கிறது. ஆனால் அன்ய சுருதிகளில் பரமாத்மாவிஷயத்தில் கூறப்பட்ட ஸத்ய ஸங்கல்பத்வாதி குணங்களை நிஷேதிக்கவில்லை. இந்த விஷயம் பிரு. உ. 4-

3-6-ல் சொல்லப்படும் नेति नेति - इति न - சொன்ன அளவு இல்லை-இதைவிட இன்னும் அதிகம். (விஷயம் நிஷேதத்தால் அறிவுறுத்தப்படுகிறது). 21ம் சூத்ரத்தில் விளக்கப்படும்.

ஸி. சூ. दर्शयति चाथो अपिस्मर्यते (3-2-17)

தர்சயதி சாதோ அபிஸ்மர்யதே (3-2-17)

அதோ தர்சயதி ச - எல்லா வேதாந்த சுருதிகளும் காட்டுகின்றன - பிருஹ்மத்திற்கு உபயலிங்கத்தை - அதே படி - அபிஸ்மர்யதே - ஸ்மிருதிகளும் ஓதுகின்றன.

வேதாந்த சுருதிகணங்கள் ஒரு மிக்க பிருஹ்மம் கல்யாணகுணாகரத்வம் - நிரஸ்த நிகில தோஷத்வம் ச என்று காட்டுகின்றன. दर्शयति च - உபய லிங்கங்களைக் காட்டு கின்றன. ஸ்மிருதிகளும் உபயலிங்கங்களை காட்டுகின்றன. இப்போது சுருதி வசனங்கள் முதலில் சொல்லப்படுகின்றன. ஸ்வே. 6-7-9

तमीश्वराणं परमं महेश्वरं तं दैवतानां परमं च दैवतम् । स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः । न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते । पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ।

(நாம் அறியலாமா? அந்தப் பிரபு மஹேஸ்வரரைப் பற்றி - அவர் ஈஸ்வரர் - மேலானவர் - மஹேஸ்வரர் - அவரே எல்லாத் தேவதைகளுக்கும் மேலானவர் — பரமாத்மா. அவரே ஜகத் காரணம்; அவரே ஜீவனுகிற கரணாதிபதிக்கு மேலானவர். அவரை எவரும் உண்டாக்கவில்லை. அவருக்குச் சமமோ மேலானவரோ யாரும் இல்லை. அவருக்குச் சரீரம் (கார்யம்) இல்லை; அவருக்கு இந்திரியங்கள் இல்லை.

அவருக்கு மேலானவரோ ஸமமானவரோ இல்லை. அவருடைய மேலான சக்தி பலவகைப்பட்டதாகவும், இயற்கையாகவே (நிருபாதிகமாவே) உள்ளதாகவும், ஸ்வாபாவிகமாக ஞானபலம் கிரியா ஐஸ்வர்யாதி கொண்டவராகவும் அவர் இருக்கிறார். முண். 1.1-9ல் य: सर्वज्ञ: सर्ववित् यस्य ज्ञानमयं तप: - எவர் ஸர்வக்ஞரோ - எவருக்கு எல்லாம் பொதுவாகவும் விசேஷமாகவும் (முந்தியே அறியப்பட்டதாயும் இப்போதும் நன்கு அறிகிறவராகவும்), விருக்கிறதோ எவருடைய தபஸ் ஆலோசனை ரூபமாகவுள்ள ஞானமாக விருக்கிறதோ; தை. அ. 8. 4 - भीषाऽस्मात् वात: पवतेभीषोदेतिसूर्य:- அவரிடமுள்ள பயத்தினாலே, காற்று வீசுகிறது. அவருக்குப் பயந்து சூரியன் உதிக்கிறான், स एको ब्रह्मण आनन्द: இது பிருஹ்மானந்தத்தின் ஒரு சிறிய பாகம்; தை. ஆ. 9 - 2.

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ।
आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चनेति ।।

அவரிடமிருந்து - அவரை அடையமுடியாமல், வாக்குமனத்துடன் திரும்பி விடுகிறது, எவன் - எந்த வித்வான் பிருஹ்மானந்தத்தை இவ்விதம் (அளவிட முடியாதபடி மகிமை பெற்றது என) அறிகிறானோ, அவன் எதற்கும் பயப்பட வேண்டியதில்லை. ஸ்வே. 9-19 निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् - அவர் அங்கமில்லாதவர் (நிரவயவம்) கிரியைகள் இல்லாதவர், ஷட்ஊர்மிகள் இல்லாதவர் - (சாந்தம்) தோஷமில்லாதவர், அக்ஞானத்தினால் பற்றப்படாதவர் (நிரஞ்ஜனம்).

ஸ்மிருதிகளும் இவ்விதமே சொல்கின்றன - கீதை 10-3 यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् எவன் என்னை பிறப்பில்லாதவர், அநாதி, லோக மஹேஸ்வரர் என்று அறிகிறானோ; கீதை 10-42ல் विष्टभ्याहमिदं कृत्स्नं एकांशेन स्थितो जगत् சேதநாசேதநம் என்கிற பொருள்கள் ஆகிற ஜகத்யாவற்றினுடையவும் (அதாவது காரியதசை காரணதசை) ஸ்தூலமாயும் சூக்ஷ்மமாயும் இருக்கிற தசையுடையதாக விருந்தாலும் அதனத்தினுடையவும் ஸ்வரூபஸ்திதி பிரவிருத்திகள் யாவும்

என்னுடைய ஸங்கல்பங்களே-அதாவது என் பிரபாவத்தினுடைய கோடியில் ஒரு அம்சத்திஞல் யாவற்றையும் என்வசம் ஆக்கிக் கொண்டு வைத்திருக்கிறேன். எல்லாம் என் அதீனமே. இதம் இந்த ஜகத்திற்கு விஷ்டப்யாஹம் - அதிஷ்டானமாக விருக்கிறேன் (சங்கல்பத்தாலே தாங்குகிறேன்) கீதை 9-10ல்

मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौन्तेय जगद्धि परिवर्तते ॥

பிரத்யக்ஷமாகப் பார்க்கக் கூடியவஞகவும். ஸத்ய ஸங்கல்பஞகவிருக்கும் **நான்** ஜீவாத்மாக்களின் பாபபுண்யங்களுக்கு ஏற்ப, பிரகிருதியானது பலவாருகப் பரிணமிக்க வேண்டும் என்று ஸங்கல்பித்து அதைக் கடாக்ஷிக்கிறேன். அதஞல் பிரகிருதி என்ஞல் அத்யக்ஷிக்கப்பட்டு, ஸகல சராசரங்களை படைக்கிறது - பலவாருகப் பரிணமிக்கிறது (இதஞல் நான் எஜமானன், பிரகிருதி என் ஆதிக்கத்திஞல் செயல்படுகிறது. ஜீவர்கள் - அவரவர் காமானுகுணமாக ஸ்ருஷ்டிக்கப்படுவதால் - நான் பக்ஷபாதி - இரக்கமற்றவன் என்கிற தோஷங்கள் அற்றவன்) கீதை 15-17

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्यबिभर्त्यव्यय ईश्वरः ॥

புருஷோத்தமஞன புருஷன் - கீழ் கூறப்பட்ட க்ஷர அக்ஷர சப்தங்களால் சொல்லப்பட்ட பத்த முக்த ஜீவர்களைவிட வேறுபட்டவன். சுருதிகள் அவனை பரமாத்மா என்று கூறுகின்றன - ஆகையால் அவனே புருஷோத்தமன் - பரமாத்மா. லோகதிரயத்தையும் உட்புகுந்து தரிப்பதஞல் பரமாத்மாவாகிருன். (அசேதன சேதன ஜீவன் - முக்தன் ஆகிய மூன்றையும் அதிக்ரமித்து இந்த மூன்றினுள்ளும் ஆத்மாவாக அனுப்பிரவேசித்து - தரிக்கிருன் - நியமிக்கிருன். தான் இதஞல் விகாரமற்றவஞக விருக்கிறபடியால் உத்தமபுருஷன் பரமாத்மாவே ஆகும் - அவர்களைக் காட்டிலும விலக்ஷணமானவன். (எல்லாவற்றையும் தரித்து நிய

மிக்கிருன்). லோகத்ரயம் - சேதன (பத்தன் முக்தன்) அசேதனம் இவைகள் சொல்லப்பட்டதாகும். விஷ். பு. 5-47-49

सर्वज्ञः सर्वकृत् सर्वशक्तिज्ञानबलर्द्धिमान् । अन्यूनश्चाप्यवृद्धिश्च स्वाधीनो नादिमान् वशी । क्लमतन्द्री भयक्रोधकामादिभिरसंयुतः । निरवद्यः परः प्राप्तेर्निरधिष्ठोऽक्षरः क्रमः ।

(நிரதிஷ்ட:-ஆதாரநிரபேக்ஷ:). அந்த பரமாத்மா ஸர்வக்ஞர் எல்லாவற்றையும் செய்பவர் - சர்வ சக்திமான் ஞானபல விபூதிகள் கொண்டவர். அவருக்கு தேய்வு வளர்ச்சியில்லை, ஸ்வாதீனர், அநாதி, எல்லோரையும் அடக்கி தன்வசப் படுத்திக் கொள்பவர். (வசீ) அவருக்கு கோபம் க்ரோதம் களைப்பு தாபம் இல்லை. சோம்பல் இல்லாதவர், விடா முயற்சியுடையவர், பயக்ரோத காமாதி தோஷங்கள் அற்ற வர். தோஷரஹிதர்: அவரை அடைவது மிகக்கடினம், நிரதிஷ்ட: - தனக்கு யாதொரு ஆதாரத்தை வேண்டாதவர்; அக்ஷர: (அழிவில்லாதவர்); (அளவிடமுடியாதபடி, தடங் கல் ஒன்றும் செய்யமுடியாதபடி மஹாவீர்ய முள்ளவர்.)

ஆகையால் பிருஹ்மம் எல்லா அவஸ்தைகளையடைந்த போதிலும் ஸ்வபாவமாகவே நிருபாதிகமாகவே உபய லிங்க காரணமாக - விருப்பதால் அந்த அந்த ஸ்தான பிரயுக்தமான தோஷங்கள் பரபிருஹ்மத்தை ஸ்பர்சிப்ப தில்லை - அமலன் - நின்மலன் - விமலன் என்பதாகும்.

சூ. अत एव चोपमा सूर्यकादिवत् (3-2-18)

அத ஏவ சோபமா ஸூர்ய காதிவத் (3-2-18)

அதயேவச இந்தக் காரணத்தினுல் - சூர்யகாதிவத் - ஜலத்திற்காணப்படும் சூரியனின் பிரதி பிம்பமாகிற உபமா- உபமானம் பரமாத்மா விஷயத்திலும் சொல்லப்படுகிறது. (சூரியன் உதாரணமாகக் கொடுக்கப்பட்டதால் - கண்ணுடி யையும் சொல்லலாம். இவைகளின் தோஷங்கள் (சூரிய

னுக்கோ, நமது முகத்திற்கோ) எப்படி வராதோ-அதுபோல அந்த வஸ்துக்களின் தோஷங்கள் பிருஹ்மத்தை ஸ்பர்சிக்காது).

எப்படி பரமாத்மா பல வகைப்பட்ட ஸ்தானங்களை அடைந்தபோதிலும், அந்த ஸ்தானதோஷங்கள் பரமாத்மாவைச் சாராதோ, மேலான பர பிருஹ்மத்தை அந்த தோஷங்கள் லவலேசமும் ஸ்பர்சியாதோ - இது எப்படி யெனில், சூரியன் தனது பிரதிபிம்பத்தை ஜலத்திலும் கண்ணாடியிலும் தோற்றுவித்தாலும், அந்த பிரதிபிம்பங்களின் ஸ்தானங்களிலுள்ள தோஷங்கள் சூரியனை ஸ்பர்சிப்பதில்லை பரமாத்மா சூரியனின் பிரதிபிம்பத்தைப் போல - பல ஸ்தானங்களில் (தேகங்களில் ஆத்மாவாக விருப்பதாலும்) விருந்தாலும் தோஷரஹிதர். (சூர்யனுடைய உபமா ச தோஷா பாவாதேவ - ஔபாதிகாகாரா பாவ வத்வமூலிகை வேத்யர்த்த:) ஜலத்திலுள்ள தோஷங்கள் - கண்ணாடியின் அழுக்கு - பரமாத்மாவைச் சேராது. (பிரதிபிம்ப ஸ்தான தோஷங்கள் மூலமான பரமாத்மாவைச் - சேராது). சாஸ்திரங்களிலும் உபமானம் சொல்லப்படுகிறது—யாக்ஞ. ஸ்மிருதி. 3-144-

आकाशमेकं हि यथा घटादिषु पृथग्भवेत् ।
तथात्मैको ह्यनेकस्थो(स्तु)जलाधारेष्विवांशुमान् ॥

ஆகாசம் ஒன்றுதான். ஆனல் அது பானையிலும், மற்றவிடங்களிலும தனியாக விருப்பதாக - வேற்றுமையாகக் கடாகாசம் - படாகாசம்) எனக் காணப்படுகிறதோ ; அது போல ஆத்மா ஒன்றுதான் - அது பலவிடங்களில் இருப்பினும் - (எது போல) சூரியன் ஒன்ருயினும் அதன் பிரதிபிம்பங்கள் பல ஜலதேக்கங்களில் வேருகக் காணப்படுவது போல, (பிருஹ்மபிந்து உப. 12ல்)

एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः ।
एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् ॥

ஆத்மா ஒன்றுதான் பரமாத்மா ஒவ்வொரு பிராணியிலும் இருக்கிறார். அவர் ஜலத்தில் தோன்றும்படி ஒன்றாகவும், பலகணக்கான சந்திரர்களைப் போல பலவாகவும் காணப்படுகிறார்.

இந்த சூரியனின் உதாரணம் சரியில்லை என ஆக்ஷேபம் எழுகிறது —அடுத்த சூத்ரத்தில்.

ஸ்ரீ. சூத்ரம். अम्बुवदग्रहणात्तु न तथात्वम् (3. 2. 19)
அம்புவதக்ரஹணாத்து ந ததாத்வம் (3. 2. 19)

து - ஆக்ஷேபத்தைக் குறிக்கிறது. அம்புவத் - ஜலத்தினுள் என்பது போல, சப்தமி அந்தத்தினால்; வத் - ஜலத்தைப் போல; அக்ரஹணாத் - வேறாகக் கிரஹிக்கப்படாதிருப்பதே அதன் காரணமாகும். ஆகவே ததாத்வம் (ஆத்மாவுக்கு ஜல சூர்யாதிகளைப் போல விருத்தல். ந - யேற்படாது (ஸம்பவிக்கமாட்டாது).

து சப்தம் ஆக்ஷேபத்தைக் குறிக்கிறது. अम्बुवदिति ஏழாம் வேற்றுமையாக அந்தந்தில் விருப்பதால், (வத் என்கிற பிரத்யயம் சொல்லப்படுவதாலே); சூரியன் முகம் இத்யாதி ஜலத்திலோ கண்ணாடியிலோ பார்க்கப்படுவது போல - அதேமாதிரி பரமாத்மா பிருத்வி போன்ற ஸ்தானங்களில் (பிரதிபிம்பமாக) காணப்படுவதில்லை. (ஆகவே சூரிய உதாரணம் சரியில்லை என்று காட்டப்படுகிறது). சூரியன் (முகம்) பிரதிபிம்பமாக - பிராந்தியினால் அங்கு இருப்பதாக கிரஹிக்கப்படுகிறது; அது வாஸ்தவமாகவே அந்த விடங்களில் இருப்பதில்லை; பரமார்த்தமாக அங்கு இல்லை (மெய்யாகவில்லை). இங்கே - பிரு. உப. மாத். 6-8ல் य: पृथिव्यां तिष्ठन्...योऽप्सुतिष्ठन्...य: आत्मनि तिष्ठन् - பரமாத்மா (எவர்) பிருத்வியினுள் இருந்துகொண்டு-அப்பினுள் இருந்துகொண்டு - ஆத்மாவினுள்ளே விருந்து கொண்டு - இந்த சுருதிகளில் பரமாத்மா ப்ருதிவி முதலியவிடங்களில் உள் இருப்பதாக அறியப்படுகிறார் - அவர் இருப்பது பாரமார்த்திகமே (மெய்யே). ஆகையால் சூர்யன், முதலியவற்றிற்கு

ஜலம் கண்ணாடி முதலான வஸ்துக்களின் பிரயுக்தமான தோஷங்கள் இல்லாமலிருப்பது (ஸ்பர்சிக்கப்படாமலிருப்பது) எதனால் என்றால், அந்த சூரியன் முதலியவை அந்த குறிப் பிட்ட ஜலம் கண்ணாடி போன்ற வஸ்துக்களில் வாஸ்தவ மாகவே உள் இல்லை என்பதாகும். ஆனால் பரமாத்மா ஒவ்வொரு வஸ்துவிலும் உள் இருக்கிறான் ஆத்மாவாக; ஒவ்வொரு வஸ்துவும் அவனுக்கு சரீரமாகவிருக்கிறது. பரமாத்மா அந்த ஸ்தானங்களில் (தேகங்களில்) இருப் பதானால் அது எப்படி தோஷங்கள் இல்லாமல் போகும்? ஆகையால் न तथात्वम् - ஆத்மாவுக்கு சூரியாதிகளைப் போல வில்லை - அதுமாதிரி ஸமான விஷயமாகவில்லை. திருஷ்டாந் தத்திற்கும் தார்ஷ்டாந்திகத்திற்கும் (உதாரணமாகக் காட் டப்படுவது எதோ - எதற்கு உதாரணமாகச் சொல்லப்படு வதோ) - இரண்டும் துல்யமாக சமமாகவில்லை - அதனாலே இந்த திருஷ்டாந்தம் பொறுத்தமற்றது. (சங்கரபாஷ்யத் தில் சொல்லப்படுகிறது - ஆத்மா மூர்த்தனல்லன். உபாதி களோ அவனைக் காட்டிலும் வேறுபட்டனவாகவோ - வேறு தேசத்திலோ இருப்பதாகவில்லை. ஆத்மா விபுவாதலால் எங்கும் நிறைந்து - வேறு படாததாகவிருப்பது அதன் காரணமாகும். அதனால் உபமானம் பொருத்தமில்லை எனச் சொல்லப்பட்டது).

(நாம் சொல்வது — சூரியனுக்கோ - முகத்திற்கோ - ஜலத்தின் - கண்ணாடியின் தோஷங்கள் ஸம்பவிப்பதில்லை; அவைகளுடன் சம்பந்தமில்லாதபடியால் இல்லை. ஆனால் பரமாத்மா விஷயத்தில் அவ்விதமில்லை. அவர் பிரதி வஸ்து வாகிற சரீரத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறார்—அந்தர்யாமி பிராஹ்மணம் - அந்த தோஷங்கள் எப்படி இல்லாமல் போகும்? ஆகவே இந்த ஆட்சேபத்தை சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் தள்ளுகிறார்). परिहरति.

## ௨௰. ஸூத்ரம். वृद्धिह्रास भाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवं दर्शनाच्च (3. 2. 20)

## விருத்திஹ்ராஸ பாத்தவமந்தர்பாவாது பயஸாமஞ்ஜஸ்யா தேவம் தர்சநாச்ச (3. 2. 20)

அந்தர்பாவாத் - ஒவ்வொரு வஸ்துவிலும் பிருஹ்மம் ஆத்மாவாகவிருப்பதால் விருத்தி - ஹ்ராஸபாக்த்வம் - பிருஹ்மம், சரீரம் சம்பந்தத்தால் அவைகளுடன் கூட விருப்பதால் - அதனுல் விருத்தி (விருத்தியையும்) ஹ்ராஸ (குறைவையும்) அடையும் தன்மை பிருஹ்மத்திற்கு ஏற் படாது ; ஏனெனில் உபய - திருஷ்டாந்தமாகக் காட்டப் பட்ட பொருளுக்கும் - தார்ஷ்டாந்திகம் (உபமானம் எந்த வஸ்துவுக்குச் சொல்லப்படுகிறதோ அந்த வஸ்துவும் (அதாவது வஸ்துவும் உபமானமும்) ஏவம் - இவ்விதமாக வளர்ச்சி, குறைவு பிருஹ்மத்திற்கு உண்டாவதில்லை - என் பதால் ஸாமஞ்ஜஸ்யாத் - திருஷ்டாந்ததார்ஷ்டாந்திகத் தன்மை பொருந்துவதற்க்காக — தோஷமில்லை; தர்சநாத்ச - இதற்குப் பொருத்தமான உதாரணங்கள் லோகத்தில் காணப்படுகின்றன. (ந - முற்கூறிய பூர்வபக்ஷம் சரி யில்லை.)

பிருஹ்மம் பிருத்வி முதலான ஸ்தானங்களில் அந்தர் யாமியாக விருப்பதால், அவைகளின் தோஷங்கள் பிருஹ் மத்திற்கு ஸம்பவிக்கமாட்டாது. பிருஹ்மத்தின் ஸ்வரூபத் திற்கோ - குணங்களுக்கோ வளர்ச்சியையோ குறை வையோ ஸம்பவிக்க மாட்டாது. ஆகவே உதாரணமாகக் காட்டப்பட்ட ஸூரியன் போன்ற உதாரணங்களில் எது மறுக்கப்படுகிறதோ - அது போல பிருஹ்மத்திற்கும் அம் மாதிரி வளர்ச்சியையோ குறைவையோ யேற்படுத்துகிறது- அதனுல்பிருஹ்மத்தின் ஸ்வரூப ஸ்வபாவங்கள் மாறுபாடு கின்றன என்பதில்லை. இந்த தீர்மானம் எவ்விதம் அடையப் படுகிறது ? उभयसामञ्जस्यादेवं - இரண்டு திருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டனவே அவை பொருத்தமானவை (ஸாமஞ்ஜஸ் யாதேவ) இதி நிஸ்சீயதே (இவ்விதம் தீர்மானிக்கப்படு

கிறது). அதாவது சுருதிகளில் காட்டப்பட்ட இரண்டு உதாரணங்களும் பொருத்தமானவையேயாகும். சுருதி சொல்கிறது—आकाशमेकं हि यथा घटादिषु पृथग्भवेत् - பிரஸித்த பூத ஆகாசம் ஒன்ருகத்தான் இருக்கிறது. ஆனுல் அது கடாகாஸம் - படாகாஸம் என்று அந்த அந்த வஸ்துக்களை அடைவதால் - வெவ்வெருகக் (உபாதியினுல்) காட்டப்படு கிறது. (யாக். ஸ்மி. 3. 144) जलाधारेष्विवांशुमान् - பல ஜலத் தேக்கங்களில் சூரியன் எப்படி தோன்றுகின்றனவோ - (பெரியதாகவும், சிறியதாகவும்) அதுபோல சூரியனும் காணப்படுகிருன்.

**விளக்கம்:—**

(இங்கு ஆகாசம் - சூரியன் உதாரணங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன - ஆகாசம் வஸ்துவின் பரிமாணத்திற்கு யேற்ப பெரியதாகவும் சிறியதாகவுமிருக்கிறது. சூரியன் பிரதிபிம்பமாக ஜலத்தேக்கங்களில் அதற்கேற்ப காணப்படு கிருன். ஜலம் குறைவாகவோ-அழுக்காகவோ விருப்பினும்- அந்த தோஷங்கள் பிரதி பிம்பத்திற்கோ - மூலப்பொருளான சூரியனுக்கோ ஸம்பவிப்பதில்லை. ஏனெனில் ஜலத்திலிருந்து சூரியன் வேறு தேசத்தில், வெகு தூரத்திற்கு அப்பால் இருக்கிருன். ஆகவே ஜலத்தில் தோஷங்கள் சூரியனை ஸ்பர்சிப்பதில்லை. இந்த உதாரணங்கள் பிருஹ்ம விஷயத் திலே சரியாகும் - ஆகாச உதாரணத்தில் வஸ்துவினுள்ளே ஆகாசம் இருக்கிறது; ஜலத்தின் வெளியே சூர்யன் இருக் கிருன். இம்மாதிரி வஸ்துதோ அவஸ்திதஸ்ய - வஸ்துதோ அநவஸ்திதோ - இம்மாதிரி இரண்டு உதாரணங்கள் சரி யாகும் - ஏனெனில் பரமாத்மா ப்ருத்வி முதலியவைகளில் உள் இருந்தும் அவைகளின் தோஷங்கள் அவனை ஸ்பர்சிப் தில்லை.

எப்படி பூத ஆகாசம் பானை - ஜலம் வைக்கிற ஜாடி போன்றவை - தட்டுக்கள் - அதுபோல மற்ற வஸ்துக் களுடன் நேரடியாக சம்பந்தப்பட்டிருப்பினும், அது பெரிய தாகவோ சிறியதாகவோ அளவில் ஆகாமல் அந்த அந்த

சம்பந்தப்பட்ட வஸ்துவுடன் சம்பந்தப்பட்டிருப்பதால் அளவில் ஸமத்வம் அடைந்தபோதிலும், அந்த வஸ்துவின் தோஷங்கள் ஆகாசத்தை ஸ்பர்சிப்பதில்லையோ; (கடாகாசம்-பானை உடைந்ததும் உபாதி நீங்கினதும் - பரமாகாசமாக ஒன்ருகி விடுகிறதல்லவா? அதுபோலவும்); எப்படி சூரியன், மடக்கிலும் பெரிய நீர்த்தேக்கங்கங்களிலும் காணப்படும் போது ஜலத்தின் அளவுக்கு யேற்ப காணப்படுகிருன்; சிறிய அளவிலுள்ள மடக்கிலும் சிறியதாகவும் - பெரிய நீர்த்தேக்கத்திலும் சரி தன் அளவுடன் தானே காணப்படுகிருன். நீர் அளவுக்கு யேற்ப - சூரியன் விருத்தியாகிறதில்லை. ஜலத்தில் அழுக்கு இருக்கலாம். அந்த ஜலத்தின் அழுக்கு சூரியனை ஸ்பர்சிப்பதில்லை. ஆகவே இந்த உதாரணங்களிலும் சூரியனுக்கோ, ஆகாசத்திற்கோ தோஷங்கள் உண்டாவதில்லை. அதுபோல பரமாத்மா விஷயத்திலும் ப்ருத்வி முதலிய அசேதன வஸ்துக்களில் இருப்பதால் அந்த அசேதன வஸ்துக்களுக்கு பல வித்யாஸப்பட்ட உருவங்கள் இருப்பினும்; அவைகளால் பரமாத்மாவுக்கு யாதொரு விகாரங்கள் உண்டாவதில்லை. அதேமாதிரி பரமாத்மா சேதனர்களாகிற ஜீவர்களிலும் அந்தர்யாமியாக (ஆத்மாவாக இருப்பினும், சேதனர்களுடைய சுக துக்கானுபவங்கள் - தேகமாறுதல்களால் யேற்படும் துக்கங்கள் பரமாத்மாவை ஸ்பர்சிப்பதில்லை - சரீர ஆத்மபாவத்தினுல்.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

பரமாத்மா ஒரே ஒருவர்தான்; அவரால் அடையப்பட்ட வஸ்துக்களின் விருத்தி (வளர்ச்சி) ஹ்ராஸாதி (குறைவு) பரமாத்மாவை ஸ்பர்சிப்பதில்லை (பரமாத்மா நிர்விகாரம்). எப்படி ஜலத் தேக்கங்களில் வித்யாஸப்பட்டதாகக் காணப்படுவதுமான சூர்யனின் தோற்றம் - அந்த அந்த வஸ்துக்களுக்கு யேற்படும் விருத்தி ஹ்ராஸாதி தோஷங்களால் மாறுவதில்லை. (ஒரே மாதிரியாக சூர்யன் எல்லாவிடங்களிலும் பிரகாசிக்கிருன்). அதே பிரகாரம் ஜீவர்களின் தோஷங்களும் பரமாத்மாவைத் தொடுவதில்லை. ஆகவே பரமாத்மா ஒருவர்தான் - எல்லாவிடங்களிலும் இருப்பினும் **अपि एक एव**

அவருக்கு யாதொரு ஸ்வரூபஸ்வபாவ விகாரங்கள் உண்டாவதில்லை (अस्पृष्टदोषगन्धः कल्याणगुणाकर एव ।

என்ன சொல்லப்பட்டது என்றால், எப்படி ஜலத் தேக்கங்களில் வஸ்துவுடன் சம்பந்தப்படாமல் சூரியன் வேறிடத்திலிருந்தாலும் - அங்கே ஹேது இல்லாமலே - சூரியனுக்கும் ஜலத்தின் தோஷங்களுக்கும் சம்பந்தமில்லையோ; (ஜலத்தின் வ்ருத்தி ஹ்ரஸ்வம் சூரியனை அடையாது. மண் சட்டியில் இருக்கும் ஜலத்தில் இந்த தர்மங்களை காணலாம்.) (தோஷங்களால் சூரியன் எப்படி நனைக்கப்படாமலிருக்கிறானோ); அதே பிரகாரம் ப்ருத்வி போன்ற அசேதன வஸ்துக்களில் பரமாத்மா அவஸ்திதஸ்யாபி - உள்ளிருந்து நியமனம் செய்வதாலும், பரமாத்மாவுக்கு அசேதன தோஷங்கள் ஸ்பர்சிப்பதில்லை - காரணம் என்னவென்றால் - பரமாத்மா நிருபாதிகமாகவே தோஷப்ரத்யனீகன் (தோஷத்திற்கு எதிர்தட்டு) அதனுடைய ஆகாரதயா (அதன் உருவத்தாலே - லக்ஷணத்தாலே) - தோஷ ஹேது இல்லாமல் - அதனால் தோஷசம்பந்தம் இல்லாமலும் இருக்கிறான். (दोषहेत्वभावान्न दोषसंबन्धः - इति); दोष प्रत्यनीकाकारतया)

दर्शनाच्च - உலகத்திலும் - இம்மாதிரி உதாரணங்கள் காணப்படுகின்றன. உலகத்திலேயும் காணப்படுகிறது - ஸர்வாத்மநா (எல்லாவிதங்களிலும்) இரண்டு வஸ்துக்களுக்கு ஸாதர்ம்யம் (முழுவதான ஒற்றுமை) இல்லாத போதிலும், (ஏனெனில்) ஒற்றுமை உதாரணமான வஸ்துவின் ஒரு அம்சத்தினோடு ஸாதர்ம்யம் (ஒற்றுமை) சொல்லக் கூடுமாதலாலே (विवक्षितांशसाधर्म्यात् दृष्टान्तोपादानम्.) அது எப்படி காட்டுகிறார் என்றால் - सिंह इव माणवकः-என்கிற உதாரணத்தில் மாணவனே சிம்மம் ஆகிறதில்லை. சிம்மத்தைப் போலவிருக்கிறான் என்பதில் முழு ஒற்றுமை (ஸாதர்ம்யம்) ஓதப்படாவிடினும், ஏதோ ஓரிரண்டு அம்சங்களில் ஒற்றுமை காணப்படுகிறதல்லவா ?

**விளக்கம்:—**

(இங்கு சொல்லப்படுவது கவனிக்கவும். ஆகாச உதாரணம் சரியாகாது - எப்போது பிருஹ்மத்தின் ஸ்திதி பொய்யாகவிருக்குமானல். பிருஹ்மம் நிஜமாகவே (ஸத்ய மாகவே) வஸ்துவுக்குள் இருந்தால் (அவர் அந்தர்யாமி யாதலால் எல்லா வஸ்துக்களிலும் இருக்கிறார்) - பிரதி பிம்பமாகக் காணப்படும் சூரியனின் உதாரணம் சரியாகாது. இரண்டிலும் சூரியனுக்கு யாதொரு தோஷமும் (வஸ்து வினுள் இருந்தாலும் சரி-இல்லாவிட்டாலும் சரி) ஸம்பவிக்க மாட்டாது. இந்த அனர்த்தம் போக்கப்படலாம்-எப்போது?- சூரியன் (ஜலத்திலிருந்து) தள்ளி தூரத்தில் இருக்கிறானே; காலபேதத்தினலும் ஏற்படலாம். அதேமாதிரி ஆகாசத்தின் உதாரணத்திலும் அறியப்படவேண்டும். சூரியனின் ஸ்வபாவமோ ஆகாசத்தின் ஸ்வபாவமோ மாறுதல் அடைய வில்லை. அதேமாதிரி பிருஹ்மவிஷயத்திலும் யாதொரு விகாரமில்லாதபடியால் வஸ்துவின் உள்ளிருந்தாலும் - வஸ்துதோ அவஸ்திதஸ்யாபி - பிருஹ்மத்திற்கு ஒட்டாது. மேல் காட்டப்பட்ட இரண்டு உதாரணங்களாகிற சூரியன் - ஆகாசம் - அவைகளை வஸ்துக்களின் தோஷங்கள் தொடுவ தில்லை - (தேசகால ஸ்வரூப ஸ்வபாவ பேதமிருப்பினும்), இதனல் ஜகத்மித்யையாகாது என்பதாகும் - சுருத பிர காசிகை). இதற்கு விளக்கம் கீழ்பார்க்கவும்.

(அதாவது சங்கரபாஷ்யத்தில், தர்சநாத்ச என்கிற சூத்ரத்தில் - பரபிருஹ்மத்திற்கு தேஹாதியாகிற உபாதி களில் அநுப்ரவேசத்தை சாஸ்திரம் உபதேசிப்பதால் - அத ஏவ சோபமா ஸீர்யகாதிவத் - என்பது பொருத்தமானதே - ஆனது பற்றி - நிர்விகல்பமான ஒரே லிங்கமுள்ளதாக பிருஹ்மம் ஆகுமே ஒழிய - உபயலிங்கமுள்ளதாகவோ - விபரீத லிங்கமுள்ளதாகவோ ஆவதற்கிடமில்லை. ஆகவே பல சுருதிகளுக்குள்ளே (நாம்சொல்வதுபோல) ஏகவாக்யத் வம் (ஒரே பொருள் உள்ளதன்மை) சொல்லது நியாயமுள்ள தாக ஆகாது; அதனல் உபாஸனவாக்யாங்களுக்கும், பிருஹ்மவாக்யங்களுக்கும் வெவ்வேருன பொருள் உள்ள

தான தன்மை சொல்வதுதான் சரியாகும் - நியாயமாகும் - அதனுல் பிருஹ்மம் (வாக்ய ஜன்ய ஞானத்திருல்) அறி விக்கப்பட்டதும் (ஏகமேவாத்விதீயம் பிருஹ்மம் தத்ஸத்யம் ஸ ஆத்மாதத்வமஸி -) வித்யை (ஞானம்) தானுகவே உண்டாகிறது (வாக்ய ஜன்ய ஞானம் விளைவிக்கிறது அதற்கு ஏற்ப சூழ்நிலையிருப்பதால்) அதனுல் அவித்யை யினுல் ஆரோபிக்கப்பட்ட நாமரூப பிரபஞ்சம் - ஸ்வப்ன பிரபஞ்சத்தைப்போல - நாசமடைகிறது. ஞானம் புருஷ தந்திரமில்லை - வஸ்து தந்திரமே. ஆனதுபற்றி முயற்சி யால் (ஞானத்திற்கு) அடையப்படுவது இல்லை (விதி ஸம் பவிப்பதற்கு இடமில்லை) ஆகவே ஸகுண பரஸ்ருதிகள் நிர்குண பரசுருதிகளாலே பாதிதம், என்று சொல்லப்பட் டிருக்கிறது) ஆகவே பிருஹ்மம் ஆகாரமற்றது–நிராகாரம்- லிங்கம் இல்லாதபடியாலே ஸர்வத்ரஹி - பிருஹ்மம் நிர் குணமாம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—மாணவன் சிம்மத்தைப் போல விருக் கிருன் - என்பதால் சில அம்சங்களில் மாணவனுக்கும் சிம்மத்திற்கும் தாதாத்மியம் (ஒற்றுமை) ஏற்படலாம் என அர்த்தம். ஆகையால் பிருஹ்மம் ஸ்வபாவ ஸ்வரூபத்திலே, நிரஸ்த நிகில அக்ஞானுதி தோஷகந்த: - ஸமஸ்த கல்யாண குணுகரன்-ஆகையால் அந்த பிருஹ்மத்திற்கு ஸ்தானத்தை அடைவதால் யேற்படும் – அதாவதுபிருதிவியாதி ஸ்தானங் களை அடைந்திருப்பினும்-தோஷம் ஏற்படுவதற்கு பிரஸங்க மில்லை என்பதாகும்.

மீண்டும் (அத்வைத பக்ஷம் ''நிர்விசேஷ பிருஹ்மம்'' இப்போது சொல்லப்பட்டு, கண்டிக்கப்படுகிறது) (அத்வைதி களால் இவ்விதம் சொல்லப்படுகிறது-பிரு. உ. 4-3-1ல் **दे वाव ब्रह्मणो रुपे मूर्तं चैवाऽमूर्तं च** - பிருஹ்மத்திற்கு மூர்த்தம் (ஸ்தூலம்)

அமூர்த்தம் (சூக்ஷ்ம) ரூபங்கள் இருக்கின்றன (பிரு. உ. மூர்த்தா மூர்த்த பிராஹ்மணத்திலே - नेति नेति - அந்த ஸ்தூல சூக்ஷ்ம ரூபங்களே ஜகத்-அந்த ஜகத்தை பிருஹ்மத்தின் ரூப மாகக் காட்டப்படுகிறது என்கிற நிஷேதத்தாலே - முந்திச் சொன்ன ரூபவத்தான ஆகாரம் நிஷேதம்; அதனுல் பிருஹ் மம் நிஷ்பிரபஞ்சம் என்று அறியவேண்டியது,) - ஜகத் திற்கு இரண்டு ரூபங்கள் உண்டு - ஸ்தூல - சூக்ஷ்ம (மூர்த்தம் - அமூர்த்தம்) - அந்த ஜகத்தாகிற இரு ரூபங்கள் பிருஹ்மத்தின் ரூபங்களாகும்.

## அனுபந்தம்

(சங்கர பாஷ்யத்தின் அர்த்தம் யாதெனில் - नेति नेति என்கிற பிருஹ்ம உபதேசத்திஞல் - இவ்வளவு என்று வகுத்துக் காட்டப்பட்ட மூர்த்த அமூர்த்த என்கிற பிருஹ் மத்தினது ரூபம் யாது உண்டோ அதையே மறுத்துக் கூறுகிறது. அதற்குப்பிறகு திரும்பவும் மூர்த்தா அமூர்த்தா பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேருக ஒன்று இருக்கிறது अन्य: परं अस्ति என்கிற உபதேசமுமிருக்கிறது. இதனுல் नेति नेति-என்பதால் பிரும்மமும் ஜகத்தும் ஆகிய இரண்டும் நிஷே திக்கப்படுகின்றனவா? (பூர்வபக்ஷம்) - இதற்கு சித்தாந்தம் ஸத் - த்யத் என்று சொல்லப்படும் மூர்த்தாமூர்த்த பிரபஞ் சத்தைக் காட்டிலும் முக்காலத்திலும் அழிவில்லாத பிருஹ் மம் நித்யமாகவிருக்கிறது. மூர்த்தாமூர்த்தங்கள் இரண்டுமே பிருஹ்மத்தின் ரூபங்களாகும் - என்று காட்டுகிறது.

ஐந்து மஹாபூதங்களில் ப்ருதிவி அக்னி அப்பு மூன்றும் மூர்த்தமாகும்; ஆகாசம் வாயு அமூர்த்தம். பிருஹ்மத் தினிடம் பிரபஞ்சம் ஆரோபிதம் செய்யப்பட்டிருப்பதால் नेतिनेति - இதில்லை இதில்லை ஆதேசமாகவிருக்கிறது. இதி- நிஷேதிக்கப்படும் பொருள் (நஞ் - இதி — नेति). இங்கு கேள்வி - இந்த நிஷேதம் பிரபஞ்சம் பிருஹ்மம் இரண்டை யும் நிஷேதிக்கிறதா-ஒன்றைமாத்திரமா? அல்லது ஒன்றை

நிஷேதித்து இரண்டாவதை மிச்சப்படுத்துகிறதா? नेति नेति - இரண்டு தடவைகள் சொல்லப்படுவதாலே-ரூபம்-ரூபமுள்ள பிருஹ்மம் இரண்டையும் நிஷேதிப்பது சரியில்லை. சூன்ய வாதம் யேற்படலாம்.

ஆகவே உண்மையான நிலையை பற்றிக் கொண்டு உண்மையில்லாத மற்றொன்றை நிஷேதிக்கிறது. பழுதை பாம்பு என்பதைப் போல் - ஒன்றை இல்லை என்று நிஷேதிப்பதால் - மற்றொன்று இருக்கிறது என அர்த்தம். பிருஹ்மமே ஸத்யம் - நித்ய சுத்த முக்த ஸ்வபாவமுள்ளது. இதனால் (நாம) ரூப பிரபஞ்சத்தை நிஷேதித்து - பிருஹ்மத்தை மிச்சப்படுத்தி - இவ்வளவு என்று கூறப்படும் மூர்த்தா மூர்த்தரூபமான பிரும்மத்தினது ரூபமுண்டோ - அதை - नेति नेति - என்கிற சப்தம் இரு தடவைகளாக மறுக்கிறது. வாசாரம் பணம் மூலம் உண்மையற்றது நேதி சப்தத்தால் மறுக்கிறது. இரண்டு தடவை नेति नेति - கூறப்பட்டது வீப்ஸையாகும் - இரண்டு தடவை படித்தலாகும்.

**விளக்கம்:**—(இங்கு சொல்லப்படுவது - ஸத்மூர்த்தம் - ஆனால் த்யத் என்பது அமூர்த்தம். இவை விகாரங்களை அடைந்துக்கொண்டு உண்டாயும் அழிந்தும்போகின்றன - ஆகவே "பானை இருக்கிறது" (सन् घट:) என்பதால் ஸத் பாவம் அழிகிறதில்லை. ஆனால் காரியமாகிற பானைதான் அழிகிறது. ஆகவே பாரமார்த்திகதன்மை ஒரு வஸ்துவுக்கு திரவியத்தில் எப்போதும் இருப்பது - ஆனால் அதன் ஆகாரங்கள் (உருவங்கள்) விகாரங்களையடைவதால் மித்யையாகும். ஆகவே வஸ்துக்கள் நாமரூபங்களைக் கொண்டதாகவிருக்கின்றன. களிமண் மாத்திரம் பாரமார்த்திக ஸத்யம் அதற்கு நாமரூபம் என்கிறது உண்டு - இதனால் சொல்லப்படுவது ப்ராதி பாஸிக ஸத்யம் - வஸ்து இந்திரியங்களால் அறியும்படி பிரகடனமாகிறபடியால் (தோற்றம்). இதனால் வ்யவஹாரிகையும் ஸத்யம். ஆனால் பாரமார்த்திக தசையில் பிருஹ்மம் ஒன்றே ஸத்யம்-அதைத் தவிர மற்றவையாவும் கல்பிதம். ஆக இம்மூன்றும் ஸத்தின்

விஷயமாகும். பின்னால் சொல்லப்பட்ட (நாமமும் ரூபமும்) அபரமார்த்தம் - கேவலம் வாசாரம் பணம - அதாவது அநித்யமான இருப்பைச் சொல்வதாகும். (விகாராஸ்பதங்களான வேறு வஸ்துக்கள் - நாமரூபங்கள் கேவலம் நாம ரூபமாத்திரமே - இதனால் பிருஹ்மத்தை அறிகிறவனுக்கு ஒவ்வொரு வஸ்துவிலும் பிருஹ்மாத்மகமாகப் பார்ப்பதால், அவனுக்கு மற்ற வஸ்துக்கள் அநாவசியம் - அழிந்து போகும் தன்மையுள்ளது) - என்பதாகும்.

பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட பொருள் இல்லை என்ற காரணத்தால் - இது இல்லை என்று உபதேசிக்கப் பட்டதே யொழிய-பிருஹ்மமே இல்லை என்பது பொருளல்ல. (பிரபஞ்சம் நிஷேதிக்கப்பட்டு-பிருஹ்மம் எஞ்சியிருக்கிறது. இதுதான் மேலான உபதேசமாகும்-சுருதியில் ஸத்யத்துக்கு ஸத்யம் - என்பது பிரும்மத்தின் நாமதேயம் என்று தொடங்கி, பிராணன்களே ஸத்யமாகும் - அந்த பிராணன் களுக்கு இது ஸத்யம் - என உபதேசம் இருக்கிறது. ஆகவே நாமதேய ரூபமுள்ள பிரபஞ்சத்தை நிஷேதிக்கிறது. (சூத்ரம் ततोऽब्रवीति च भूयः - ) பிருஹ்மத்தை ஸத்யம் என்று சொல்லிமிச்சப்படுத்துகிறது).

(அனுபந்தம் முற்றும்)

**ஸ்ரீபாஷ்யம்:—**

மேலும் இந்த சுருதியில் - ஸமஸ்த ஸ்தூல சூக்ஷ்ம ரூபம் பிரபஞ்சம் பிருஹ்மத்தின் ரூபமாக விருக்கிறது என்று அடையாளம் प्रकारमिति शब्देन (பராம்ருஸ்ய) காட்டி; பிரு. உ. 4-3-6ல் तस्य हैतस्य पुरुषस्य रूपम्, यथा माहाराजनं वासः-வாஸ்தவமாகவே-இந்த புருஷனுடைய ரூபம்-அதாவதுமேல் சொல்லப்பட்ட புருஷனுடைய ரூபம் - சிவப்பு பட்டு பீதாம்பரம் போல விருக்கிறது - (மாஹாராஜநம் - மஞ்சள் பட்டு பீதாம்பரம்); என்பதால் - பிருஹ்மத்தின் ஆகார விசேஷத்தைச் சொல்லி - பிரு. உ. 2. 4. 3. 6ல் अथात आदेशो नेति नेति, - न ह्येतस्मादितिनेत्यनेत्यन्यत् परमस्ति - இந்த (மித்யையாகவிருப்ப

தான) ஆகார விசேஷம் மீண்டும் இந்த சுருதியினுல் சொல் லப்படுகிறது - नेति नेति என்கிற ஆதேசத்திணுல் - இரண்டு தடவை நிஷேதம் சொல்லியிருப்பதாலே - இதைக் காட்டிலும் பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறு ஒன்றும் இல்லை-அதாவது எந்த பிருஹ்மத்திற்கு மூர்த்தம் அமூர்த்தம் எனப்படும் ஆகார விசேஷங்கள் சொல்லப்பட்டனவோ-அந்த பிருஹ்மமே மூர்த்தா மூர்த்த பிரபஞ்சத்தைக் காட்டிலும் ஸத்யமாக எஞ்சி நிற்கிறது. (अन्यत् परमस्ति) नेति नेति-இரண்டு தடவைகள் நிஷேதம் வீப்ஸையாகும் (இரண்டு தடவை படித்தலாகும்).

**விளக்கம்: —**

(சங்கரபாஷ்யம் - மூர்த்தம் அமூர்த்தம் என இரண்டுமே பிருஹ்மத்தின் ரூபங்கள் என்றும்; புருஷசப்தத்தாற் சொல் லப்பட்ட - அமூர்த்தத்தின் ஸாரத்துக்கு மாஹாராஜனம் (மஞ்சள் நிறப்பட்டாடை) முதலிய ரூபங்களைக் காண்பித்து- பிறகு சுருதி சொல்கிறது - அத: - நிஷேதத்திற்கு வேண்டியே பிருஹ்மத்தினிடத்தில் பிரபஞ்சம் ஆரோபம் செய்யப்பட்டிருப்பதால், नेति नेति இதில்லை இதில்லை - என ஆதேசம் நிஷேத்திணுல் உபதேசிக்கப்படுகிறது. இதில்லை இதில்லை - என ஆதேசத்தை (உபதேசத்தை) விட வேருன உபதேச முறை இல்லை - என்பதாகும். இங்கே நிஷேதம் எதைக் குறிக்கிறது என்பது சங்கரருக்கும் ராமானுஜருக்கும் விஷயம். இதி - சப்தத்திலுல் நிஷேதிக்கப்படும் பொருள் ஒன்று காட்டப்படுகிறது. சங்கரரின் அபிப்ராயப்படி - முன்பு சொல்லப்பட்ட இரண்டு ரூபங்களை நிஷேதித்து (கற்பிதம் என்று சொல்லி நிஷேதித்து) பிருஹ்மத்தை மிச்சப்படுத்துகிறது. அந்த ரூபமுள்ள பிருஹ்மமே மறுக் கப்படுகிறது - அதாவது ரூபமுள்ள பிருஹ்மம் வாக்குமனம் களுக்கு அப்பாற் இருப்பதால் - பிருஹ்மம் நிஷேதிக்கபட மாட்டாது. ஆகவே கற்பிதமான பிரபஞ்சத்தை மறுத்து சுத்த பிருஹ்மத்தை மிச்சப்படுத்துகிறது. அதாவது பிருஹ் மத்தின் ரூப பிரபஞ்சத்தை மறுத்து - சுத்த பிருஹ்மத்தை அத்யாத்மத்திலும், அதிதைவதத்திலும் இருப்பதும் - வாஸஞருபமானதும்-அமூர்த்தத்தின் ரஸ (ஸார) மானதும்

புருஷசப்தத்தால் சொல்லப்பட்டதும் சூக்ஷ்ம சரீரத்தை ஆஸ்ரயித்ததான வேறு ரூபமானது மாஹாராஜனம் (மஞ்சள் பட்டாடையினுல் உவமை சொல்லப்பட்டதான) சுத்தமான பிருஹ்மத்தினிடம் மூர்த்தா மூர்த்தங்கள் இரண்டு ரூபங்களையுமே கற்பிதம் என மறுக்கின்றன - ரூபபிரபஞ்சத்தை மறுத்து - சுத்த பிருஹ்மத்தை மிச்சமாக்கு கிறது. नेति नेति - அவை பிருஹ்மத்தினிடம் இல்லை - கற்பிக் கப்பட்ட பிரபஞ்சத்தையே மறுத்து नेति अन्यत् परं अस्ति என்பதால் பிருஹ்மத்தை மிச்சப்படுத்துகிறது. அதனுல் சுருதி சொல்கிறது - மூர்த்தா மூர்த்தங்களைக் காட்டிலும் வேறுபட்ட பரமான பொருள் இருக்கின்றது - அதாவது பிருஹ்மமேயாகும். இதில்லை இதில்லை என்பதால் பிருஹ்மம் இல்லை என்று ஆகாது. ஆரோபிதமான (கற்பிதமான) பிர பஞ்சம் இல்லை என்பதாகும். அதனுல் மீண்டும் சுருதி சொல் கிறது - "ஸத்யத்துக்கு ஸத்யம் என்பது பிருஹ்மத்தின் நாம தேயம் - என்று தொடங்கி - பிராணன்களே ஸத்யமாகும், அந்த பிராணன்களுக்கு இது (பிருஹ்மம்) ஸத்யமாகும் - இதனுல் நிஷ்பிரபஞ்சம் - பிருஹ்மம் ஸத்யம் ஆகும், (ஆனுல் ராமானுஜருக்கு அவ்வித அபிப்பிரயமில்லை.)

**ஸ்ரீபாஷ்யம்:**—இந்த மூர்த்தா மூர்த்தங்களைக் காட்டி லும் மேலானது ஒன்றுமில்லை - என்பதால் இந்த மூர்த்தா மூர்த்தங்கள் ஸர்வம் ஸத்யம் ஆகும் - नेति नेति அளவைக் குறிக்குமேயல்லாது - இவ்வளவுதான் என்கிற அளவைக் குறிக்கும் என்பது நிஷேதம்) (இதுதான் ராமானுஜரின் அபிப்பிராயம்).

மீண்டும் அத்வைதி சொல்கிருன்-சுத்த பிருஹ்மத்தைத் தவிர மற்ற எல்லா ரூபங்களை நிஷேதித்து - सर्वविशेषाधिष्टानं सन्मात्रमेव ब्रह्म - சுத்த பிருஹ்மமே (ஸந்மாத்ரமேவ) எல்லாப் பொருள்களுக்கும் அதிஷ்டானமாக விருக்கிறது - இந்த மூர்த்தா மூர்த்தங்களாகிற விசேஷங்கள் பிருஹ்மத்தினுல் (அவித்யையினுல்) கற்பிக்கப்பட்டதாகும் (தன் நிஜ ஸ்வரூபத்தை மறந்து கற்பிக்கப்பட்டதாகும்). என்பதனுல்

विशेषास्त्वेवंविधं स्वरूपमजानता பிருஹ்மணு கல்பிதா:- என்பதைக் காட்டுகிறது. ஆகவே கேள்வி (ஆக்ஷேபம்) (அத்வைதி யிஞல்) எழுப்பப்படுகிறது - பிருஹ்மத்திற்கு உபயலிங்க த்வம் எப்படி ஸித்திக்கும்-அதாவது (விளக்கமாக) - கற்பித மான அவற்றிற்கு அதிஷ்டானமான பிருஹ்மத்தைத் தவிர வேறு எதுவுமில்லை - என்பது "இதி" சப்தத்தலெ் காட்டப் படுகிறது - முன் சொல்லிய பிருஹ்ம ரூபங்களைக் குறித்து, ந - இல்லை என்று அவற்றைத் தள்ளி - கல்பிதமான அவற் றுக்கு அதிஷ்டானமான சிந்மாத்ர பிருஹ்மமே ஸத்யம் - கல்பிதமான ஜகத்மித்யை - ஆகவே உபயலிங்கம் பொருந் தாதே-என்பது ஆட்சேபம், இதற்குப் பதிலாக அமைகிறது. அடுத்த சூத்ரம்.

(ஐந்து பூதங்களில் பிருத்வி அக்னி அப்பு-இம்மூன்றும் (ஸ்தூலம்) மூர்த்தம்; ஆகாசம் வாயு-அமூர்த்தம்) (சூக்ஷ்மம்) இப்படி இரண்டாகப்பிரித்து - புருஷசப்தத்தால் சொல்லப் பட்ட அமூர்த்தத்தின் ஸாரம் (மஞ்சள் நிறமுள்ள பட்டாடை) என்று கூறி - பிரபஞ்ச உபதேசத்திற்குப் பிறகு நிஷேதித்திற்கு வேண்டிய பிரபஞ்சம் ஆரோபிதம் - கற்பிக் கப்பட்டது - அதை நிஷேதிக்கிறது-இரண்டு ரூபங்களையும் மறுத்து முதல் नेति யிஞல் பூதக்கூட்டங்களை நிஷேதித்து - இரண்டாவது नेतियிஞல் - வாஸஞராசியைமறுத்து - பிருஹ்மத்தைக்காட்டிலும் வேறுபட்டபொருள் (மேலானது) ஒன்றுமில்லை - இதஞல் பிருஹ்மமே இல்லை என்பதல்ல எவை மூர்த்தா அமூர்ததரூபங்களோ - எவை பிருஹ்மத் தினிடம் ஆரோபிதமோ - எவை கற்பிதமோ - அவைதான் இரண்டு தடவைகளால் நிஷேதம் செய்யப்பட்டது. அதாவது பிருஹ்மத்தைத்தவிர மற்ற எல்லா வஸ்துக்களும் வாசாரம் பணமேவ-நாமதேயத்தை விஷயமாகக்கொண்டது. அந்த நாமதேய பிரபஞ்சத்தை நிஷேதித்து - ஸத்யத்துக்கு- ஸத்யம் என எந்த பிருஹ்மம் சொல்லப்படுமோ - அந்த பிருஹ்மம் தான் ஸத்யம், ஆரோபிக்கப்பட்ட பிரபஞ்சம் மித்யையாகும்).

ஸூ. प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः (3-2-21)

பிரகிருதைதாவத்தவம் ஹி பிரதிஷேததி
ததோ ப்ரவீதி ச பூய: (3-2-21)

பிரகிருதை தாவத்தவம் ஹி பிரதிஷேததி - இந்த பிரகிருதத்திலே - பிருஹ்ம விஷயத்தில் - இந்த அளவுடன் இருக்கிறது என்று யாது சொல்லப்படுகிறதோ - அந்த பிரகரணம் அதை நிஷேதிக்கிறது. (மறுக்கிறது). பிற்பாடு ततो ப்ரவீதி ச பூய: அந்த வாக்ய பிரகரணம் மீண்டும் பரமாத்மாவின் குணங்களைப் பரக்கப் பேசுகின்றன.

(இங்கு பிருஹ்மம் நிர்விசேஷமல்ல - ஸகுணமே என்று காட்டப்படுகிறது-மூர்த்தா மூர்த்த பிராஹ்மணம் பிருஹ்த. உபநிஷத் எடுத்துக்கொள்ளப்பட்டு - அதில் नेति नेति என்கிற ஆதேச வாக்யம் - முந்திச் சொல்லப்பட்ட ரூபங்களுடன் (ஜகத்) (மூர்த்தம்) (ஸ்துல)-அமூர்த்தம்-(ஸூக்ஷ்மம்) இருக்கிறதோ - அவை நிஷேதிக்கப்பட்டு - நிஷ்பிரபஞ்சம் பிருஹ்மேதி அறியவேண்டியது என்கிற சங்கை பரிஹரிக்கப்படுகிறது - அத்வைதியின் பக்ஷம் கண்டிக்கப்படுகிறது.)

மேல் சொல்லப்பட்ட ஆக்ஷேபம் சரியாகாது-(அதாவது எப்படி உபயலிங்கத்வம் பிருஹ்மத்திற்கு ஸித்திக்கும் - அத்வைதபக்ஷம் நிர்குண பரவாதம்) ; இந்த பிரகிருதத்திலே नेति नेति அப்படியில்லை என்கிற ஆதேசத்தால் - பிருஹ்மத்திற்கு குணங்கள் இல்லை ; பிருஹ்மம் ஸந்மாத்ரமேவ - பிருஹ்மத்துக்கு எவன் குணம் இல்லை. என்று சொல்கிறோ - அது பிராந்தம் - ஜல்பம் இவைகளால் ஏற்பட்ட தோஷங்களால் சொல்வதாகும். பைத்தியக்காரனைத் தவிர வேறு எவனும் சொல்லமாட்டான், பிருஹ்மத்திற்கு குணங்கள் உண்டு - விசேஷணதயா பிருஹ்மம் பிரமாணமுள்ளதாகிறது. இந்த விஷயம் சாஸ்திரம் ஒன்றாலே அறியத்தக்கதாகும் - மற்ற பிரமாணங்களால் அவை தர்மங்களாக அறியப்படமாட்டாது - அவை பிருஹ்மத்தின் தர்மங்கள் என்று (அதாவது ஸ்வரூப விசேஷங்கள் அப்ரதிக் ஸித்த

தர்மங்கள் - ஸ்வரூப நிருபண தர்மங்கள் நிருபித ஸ்வரூப தர்மங்கள்) சுருதியை விட்டு மற்ற பிரமாணங்களால் அறியப்படமாட்டாது, என்று சொல்லி - பிறகு - நிஷே தித்தல் (அத்வைதி சொல்கிருப் போல नेति नेति - என்பதில் உள்ள நிஷேதம்) சரியாகாது. (முதலில் குணங்களை உபதேசித்து விட்டு - பிற்பாடு அபச்சேத நியாயத்திஞல் அதை விலக்கி - நிர்குண பரசுருதிகளையே பிரமாணமாக ஒத்துக்கொள்வது என்பது சரியாகாது. அப்படி பிருஹ்மம் நிர்குணம் என்ருல் அந்த சுருதிகளுக்குப் பிற்பாடு குணத் தைச் சொல்லும் வாக்யங்கள் வருவதால் - அவைகளோடு (ரூபாந்தரோக்தி வசனங்களோடு) விரோதம் யேற்படும்.

வாஸ்தவமாக - எந்த சில வஸ்துக்கள் பொதுவாகக் குறிப்பிடப்பட்டு - அவைகளில் சில மற்ற பிரமாணங்களா லும் அறியப்படுகின்றன ; ஆனுல் இன்னும் மற்ற விஷயங் களில் - நாம்சொல்வது அந்த வஸ்துக்கள் பிருஹ்மத்திற்கு சரீர (ரூபங்களாக) ஸ்வரூபத்திலே - இருக்கின்றன-என்கிற விஷயம் அறியப்படாமலிருக்கிறது. அந்த வஸ்துக்களே பிருஹ்மத்திற்கு சரீரமாக-சரீரத்தைப்போல பிரகார பிரகாரி பாவத்துடன் விருக்கின்றன (என்பது அறியப்படவில்லை) ஆகையால் அந்த விஷயங்களை (குணங்களை) பூர்வமாகவே சுருதிகளிலே உபதேசிக்கப்பட்டு - பிற்பாடு அதே விஷயங் களுக்கு நிஷேதத்தால் சுருதி அனுவாதம் செய்யாது. மேலும் மற்ற பிரமாணங்களால் ஸாதிக்கப்பட்டதை சுருதி அனுவாதம் செய்யாது என்று அர்த்தம்.

ஆகவே (நாம்சொல்வது) இந்த விஷயங்கள் இங்கு சொல்லப்படுகின்றன-அவைகளை நிஷேதிப்பது (नेति என்கிற நிஷேதம்) சரியாகாது - அவ்விதமாக இருப்பதால், இந்த வாக்ய பிரகரணத்திலே, மறுப்பு பிருஹ்ம விஷயத்தில், नेति என்பதால் இவ்வளவு தான் இல்லை இதுமட்டுமில்லை- இன்னும் அதிகம் உண்டு என்று சொல்வதாக விருப்பதால்- சூத்ரம்-அளவை நிஷேதிப்பதால் तस्मात् प्रकृतं तावत्त्वं - பிருஹ் மண: பரதிஷேத தீதம் - வாக்யம். (சூத்ரம் 3-2-21) -

அதாவது எந்த தர்மங்கள் (குணங்கள்) பிருஹ்மத்திற்கு இந்த வாக்யபிரகரண ஆரம்பத்திலே ஓதப்படுகின்றனவோ- அதனுல் பிருஹ்மம் இவ்வளவு தான் என்று யாது காட்டப் படுகிறதோ, அவைதான் நிஷேதிக்கப்படுகின்றன. नेतिनेति इति न इति न-இவ்வளவுதானில்லை - இவ்வளவுமட்டும் தான் இல்லை என்று அளவு நிஷேதிக்கப்பட்டு, இன்னும் அளவு அதிகம் என்று சூசிப்பிக்கிறது) नेति नेति என்பதால் नैवं नैवम् இந்த மாதிரி இல்லை - இந்த மாதிரி இல்லை-அதாவது பிருஹ்மம் ஏற்கனவே கூறப்பட்ட தர்மங்களுடன் (ரூபங்களுடன்) கூடியது என்பது மாத்திரமல்ல-(இன்னும் அதிகமாகவிருக் கிறதுஎன அர்த்தம்) (Not so much-Not so much) இந்த பிரகரணத்திலே, இதுவும் சொல்லப்படுகிறது.

பிருஹ்மம் (பூர்வமாக சொல்லப்பட்ட उक्तप्रकार विशिष्टतया या ब्रह्मण इयत्ताप्रकृता, सात्र इति - சப்தத்தினுல் பராமர்சனம் (அடையாளம்) செய்யப்படுகிறது என்று அர்த்தம். ஏற்கனவே சொல்லப்பட்ட ரூபங்களால் பிருஹ்மம் இவ் வளவுதான் என்று யாது உண்டோ - அதுதான் நிஷேத் திற்கு அர்த்தம். (இவ்வளவுதான் என்கிற அளவே நிஷேத மாகும்). इति சப்தத்தினுல் इति न इति न இதுமட்டுமில்லை-இவ் வளவுதானில்லை என்று சொல்லுகிறது. (முன்பு கூறப்பட்ட ரூபங்கள் குணங்கள் மாத்திரம் இல்லை - இன்னும் அதிகம் உண்டு). மேலும் இப்படி நிஷேதம் செய்யப்பட்ட பிறகு உடனேயே அந்த பிரகரணத்தில் भूयो - மறுபடியும் பிருஹ்மம் கல்யாண குணங்களுடன் கூடியது. (गुणजातं ब्रवीति-) என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரகிருத விசேஷண யோகித்வ (சேர்க்கை பெற்ற) மாத்திரமுள்ள பிருஹ்மம் - இன்னும் சில குணங்களுடன் கூடியதாக ஓதப் படுவதால், ஆகையினுல் பிருஹ்மம் பிரகரண ஆரம்பத்திலே சில குணங்களுடன் சேர்ந்து இருப்பதாகவும் - பிற்பாடு குணமே இல்லாதபடியைக் கூறும் என்பது (நிஷேதம்) மறுக்கப்படுகிறது.

பிருஹ்மத்திற்கு பிரகரண ஆரம்பத்திலே கூறப்பட்ட தர்மங்களுடன் சம்பந்தம் மாத்திரம் உண்டு என்பது மறுக்கப்படுவது மாத்திரமல்லை. இன்னும் சில கல்யாண குண விசேஷங்களோடு பிருஹ்மம் கூடியது என்கிற அர்த்தம் வாக்ய பிரகரண முடிவிலே ஓதப்பட்ட குணங்களால் ஏற்படுவதாகும்). (அதாவது இவ்வளவுதான் என்கிற அளவைக் காட்டுவதுதான் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. எது நேதி நேதி என்று விவரிக்கப்பட்டதோ - அதைவிட பெரியது ஒன்றுமில்லை. नह्येतस्मादितिनेत्यन्यत् परमस्ति । अथ नामधेयं सत्यस्य सत्यमिति - प्राणावै सत्यं तेषामेव सत्यम् - என்பதாலே பிருஹ்மத்தின் ரூபங்கள் இவ்வளவுதான் என்பதை நிஷேதித்து மேலும் சுருதி பிருஹ்மத்தின் பெருமைகளை விளக்குகிறது. (பிருஹ். உப. 4-3-6)

அதனால் ஸத்யம் तेषामेव सत्यं (ஸத்யமான அவைகளுள் ஸத்யம்) இதனால் இன்னும் சில குணங்கள் பிருஹ்மத்திற்கு உண்டு – பிற்பாடு வரும் பிரகரண வாக்யங்களாலே - இதனால் பிருஹ்மத்தின் குறிப்பிட்டபடி இருக்கும் அளவு என்பதுதான் நிஷேதமில்லை. மேலும் சொல்லப்படும்-குணங்களும் உண்டு என்பதாகும். அதாவது ஸ்வரூபத்திலேயும், குணங்களாலும், பிருஹ்மம் மிக மேலானது - அந்த பிருஹ்மத்தை விட மேலானது ஒன்றும் இல்லையோ (அதனால் பிருஹ்மம் நிர்விசேஷமில்லை – ஸவிசேஷமே). ब्रह्मणी रूपतया अप्रज्ञातं सर्वं रूपतया उपदिश्य पुनस्तदेव निषेद्धमयुक्तम्. (வேதார்த்த ஸங்கிரஹம் - ஸ்ரீபாஷ்யத்திலும் இது காணப்படலாம்) ஆதேச வார்த்தை नेति नेति - சுருதியிலே ஆதேசம் என்பதற்கு அடக்குகிறவன் என்று அர்த்தம். (இந்த விஷயங்கள் பிருஹ்ம வித்யா பாகம்–2 பக்கங்கள் – 208–209 - பார்க்கவும்). நாம் சொல்வது – நிஷேதம் சொல்லப்படும்போது - குணமோ தர்மமோ - ஓரிடத்தில் காணப்படுவது இன்னொரு இடத்தில் இல்லை என்கிறபடி. சுருதி நிஷேதத்துடன் திருப்தியடையாமல் - மீண்டும் அக்ஷர பிருஹ்மத்திற்கு நித்யத்வம் (எங்கும் காணப்படுதல்) ஸர்வ வ்யாப்தி அதி ஸூக்ஷ்மத்வம் - இத்யாதி சொல்லி ஜகத் காரணத்தையும்

காட்டுகிறது. அதனுல் அக்ஷரம் பிரஸித்தமாகவிருக்கிறது. (முண்டகம் अथपरा यथा तदक्षरम् (1-1-5); அத்வீதீயம் பிரும்மம். என்பதற்கு பிருஹ்மத்தைப் போல இன்னொரு உபாதான காரணமில்லே. அதற்கு ஸ்ருஷ்டிபாலனலயாதிகளுக்கு அசாதாரண ஸங்கல்பாதி அதாவது அது இச்சித்தது - நான் பலவாக ஆவேன் - அதன் பிரகாரம் நான் உண்டாக்கு வேன், அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது-இதனுல் உபாதான காரணம், குணங்களும் உண்டு என்பதாம்.

அந்த குணங்களை அத்வைதி சொல்கிறபடி இல்லே யென்று நிஷேதித்தால், அத்வைதபக்ஷம் பிரும்மம் ஸ்வத: பிரமாணம், நித்யம், அத்வீதீயம் இவைஎல்லாமே இல்லாமல் ஆகிவிடும். ஸர்வசாகா பிரத்யய நியாயமும் அத்வைதிக்கு விரோதமே. எல்லா ஸ்ருஷ்டி வாக்யங்களுக்கும் ஒரே அர்த்தம் (ஓரிடத்தில் குணபரமாகச் சொல்லப்பட்டவை - ஸர்வக்ஞத்வம், ஸர்வ வ்யாப்தித்வம், இத்யாதி) மற்ற ஸ்ருஷ்டி வாக்யங்களுக்கு பிரயோகிக்கப்பட வேண்டியபடி யால், பிரும்மம் ஸவிசேஷமே—நிர்விசேஷமில்லே. நிர்குணம், (குணங்களில்லே பிருஹ்மத்துக்கு); நிரஞ்சனம் (களங்க மில்லே) நிஷகளம் நிஷ்க்ரியம் शान्तम्-பிருஹ்மத்துக்கு அவய வங்கள் இல்லே - கிரியைகள் இல்லே - சாந்தம் இதுபோன்ற மற்றவாக்யங்கள் பிரகிருதி ஸ்வபாவத்துக்கு ஏற்ப குணங் களாகும். அவை (பிராகிருதமான - நீச (ஹேய) குணங் கள் பிருஹ்ம விஷயத்தில் நிராகரிக்கப்பட வேண்டியதாகும். ஆதலால் இத்தகைய பிராகிருத குணங்கள் (ஹேய - நீச குணங்கள்) பிருஹ்மத்திற்கு இல்லே என்பதாகும். य: सर्वज्ञ: सर्ववित्-; तदैक्षत; एष अपहतपाप्मा...सत्यकाम: सत्यसंकल्प:-இத்தகைய குணங்களால் பரமார்சிக்கப்பட்ட பிருஹ்மம் கேவலம் ஞான மாத்திர ஸ்வரூபமல்ல. அறிகிறவனுகவும் விருக்கிறது ஞானத்திற்கு (குணத்திற்கு) ஆஸ்ரயமாகவுமிருக்கிறது - ஸவிசேஷமே). பிரு. வித்யா 2ம்பாகம் - 214 பக்கம் பார்க் கவும்).

முன்பு காட்டியபடி பிராகிருதகுணங்கள் (நீச-ஹேய) குணங்கள் பிருஹ்மத்துக்கு இல்லே - என்று சொல்லிவிட்டு

அபஹதபாப்மத்வாதி......ஸத்ய சங்கல்பம் - என்று ஆரம் பித்து - अपिपास தாகமில்லாதது......முடிக்கிறபோது ஸத்ய சங்கல்பம்—என்கிற கல்யாண குணங்களைச் சுருதி சொல்கிற படியால் சுருதியே பேதப்படுத்துகிறது - ஸகுணபரம் - நிர்குணபரம் (ஹேயரஹிதம்) என்று வாக்யங்களைப் பிரித் துக் காட்டுகின்றன. ஆதலால் அத்வைதிகளின் நிர்வாஹம் சரியில்லை. ஸகுணபர நிர்குணபர வாக்யங்களுக்குள் யாதொரு விரோதமுமில்லை. ஆகவே ஒன்று மற்றொன்றை நம்பியிருக்கிறது என்பதற்கு லவலேசமும் சந்தேகத்திற்கு இடமில்லை. விபரங்களுக்கு (பிரு. வித்யா 2ம்பாகம் - 217-218 பக்கம் பார்க்கவும்). (கடைசியாக அத்வைதி சொல் வது "பிருஹ்மம் ஆனந்தம்" (பிரு. 6-1) - நிர்விசேஷ ஸ்வ ரூபமாக பிரும்மத்திற்கு ஓதப்படுகிறது. இதனால் ஆனந்தம் என்கிற குணம் (தர்மம்) நிஷேதம். ஆனந்தம் என்பது ஞானத்தின் ஒரு நிலை - அது அனுகூலமாகவிருக்கிற போது, (நாம் சொல்கிறபடி) - அறிகிறவன் (ஸ்வத ஸித்த மான) ஞானமாக விருப்பதால், அதேபடி பிருஹ்மமும் ஆனந் தம் என்கிற குணத்தையுடைய பிருஹ்மமும் - ஆனந்தியாக (ஆனந்தத்தை உபாஸகனுக்கு அளிப்பதாக விருக்கிறது. ஆகவே பிருஹ்மம் ஆனந்தமாத்திரமல்ல - ஆனந்தியாகவு மிருக்கிறது என்று நாம் சொல்கிறோம். பிரும்மாவின் ஆனந்தம் ஒருபாகம் - (தை. ஆ. 8-4) எவன் பிரும்மாவின் ஆனந்தத்தைத் தியானிக்கிறானோ, இத்யாதி சுருதி வசனங் களாலே, ஆனந்தம் (ஞானத்தைப் போல) இங்கே - இந்த பிரகரணத்திலே - பிரும்மாவிற்கும் தர்மமாகவிருக்கிறது - என அர்த்தம். ஞாத்ருத்வமேவ ஹி (ஆனந்தித்வம்). ஆகவே நமது சித்தாந்தம் - நிஷேத சுருதிகள் ஏற்கனவே போதிக்கப் பட்டதை உறுதிப்படுத்துபவை. இப்படி உறுதிப்படுத்திச் சொல்லும் சுருதிகளுக்கு நிஷேத சுருதிகள் அடங்கியவை.) இது நமது பதில் - அத்வைதிக்கு.

**ஸ்ரீபாஷ்யம்:—**

**न ह्येतस्मादिति नेत्यन्यत् परमस्ति । अथ नामधेयं सत्यस्य सत्यमिति; प्राणा वै सत्यम् । तेषामेष सत्यम् (பிரு.உ.2-3-6)**

இந்த வாக்யம் பல கல்யாண குணராசிகளை பிருஹ்மத்திற்கு ஓதுகிறது - அப்படிச் சொல்லும்போது - "மேலே எது விவரிக்கப்பட்டதோ நேதி நேதி - இவ்வளவுதான் இல்லை (இது மட்டுமில்லை - இன்னும் உண்டு இதி ந இதி ந) - அதைவிட பெரியது வேறு ஒன்றுமில்லை. இப்போது (அதன்) நாமம் ஸத்யத்துக்குள் ஸத்யம் (எவை மாருததாக விருக்கின்றனவோ - அவைகளுள் மாருதது) - எப்படி பிராணன்கள் (அல்லது ஜீவர்கள்) நித்யமோ (ஸத்யமோ) (அதுபோல); तेषामेष सत्यम् - (அந்த ஸத்யமானவைகளுள்) அதுவே ஸத்யமாகும் (விகாரத்தை அடையாதது) (பிரு. உ. 2-3-6) இதற்கு அர்த்தம் யாதெனில் -

इति नेति यद ब्रह्म प्रतिपादितम्, तस्मादेतस्मादन्यद्वस्तु परं न ह्यस्ति = ब्रह्मणोऽन्यत् स्वरूपतो गुणतश्चोत्कृष्टम् नास्तीत्यर्थः ।

எந்த பிரும்மம் நேதி நேதி என்ற பதங்களால் விவரிக்கப்பட்டதோ, அந்த பிருஹ்மத்தைவிடப் பெரியது ஒன்றுமில்லை. இதனால் சொல்லப்படுவது பிருஹ்மத்திற்கு மேலானதோ (உத்கிருஷ்டம்) ஒன்றுமில்லை - ஸ்வரூபத்திலும் சரி-குணங்களிலும் சரி.

तस्य च ब्रह्मणः सत्यस्य सत्यमिति नामधेयम् । तस्य च निर्वचनम् - प्राणा वै सत्यम् तेषामेष सत्यम् - इति ।

அந்த பிருஹ்மத்திற்கு நாமதேயம் - மாருதவைகளுள் (விகாரத்தை அடையாதவற்றுள்) மாருதவை (ஸத்யம்) ; இதற்கு அர்த்தம் இப்படி வ்யாக்யானமாகச் சொல்லப்படுகிறது - பிராணன்கள் (இங்கே ஜீவர்கள்) மாருதவர்கள் (ஸத்யம்) ; அது (பிருஹ்மம்) மாருதவைகளுள் மாருதவையாகும் (ஸத்யம்). இங்கே பிராணபதத்திற்கு ஜீவர்கள் சொல்லப்படுகிறார்கள். ஏனெனனில் அவர்களுக்குத்தான் பிராணன்களோடு (முக்ய பிராணன்களோடு) பிரிக்கமுடியாதபடி

சேர்க்கை சம்பந்தமிருப்பதால். அவர்கள் அப்படியானல் ஸத்யம் (விகாரமற்றவர்கள்) ஏனெனில் முக்ய பிராணன் கள் ஆகாசத்தைப்போல ஸ்வரூபத்திலே அன்யதாவாக (வேருக) பாவரூபபரிணமம் இல்லாதபடியாலே ; மேலும் சுருதியில் तेषामेष सत्यम् அந்த விகாரமற்றவைகளுள்-அவரே ஸத்யம் (விகாரமடையாதவர்) तेभ्योऽप्येष परमपुरुषः सत्यम् - பரமாத்மா விகாரமடையாதவர்களைவிட விகாரமடையாத வர். (நிருபாதிகமாகவே - இயற்கையாகவே - விகாரமில் லாத நிர்விகாரன்). ஆனல் ஜீவர்கள் விஷயத்திலே — அவர்கள் கர்மவச்யர்களான படியாலே, கர்மானுகுணத் தாலே, அவர்களுடைய ஞானத்திற்கு ஸங்கோச விகாஸம் யேற்படுகிறது. ஆனல் பரமாத்மா விஷயத்திலே, அபஹத பாப்மத்வாதி குணங்கள் நிருபாதிகமாகவே ஓதப்படு கின்றன - அதாவது ஜீவனுக்கு முக்த தசையில் பரமாத்மா வின் கிருபையால் கிடைப்பது - அந்த எட்டு குணங்கள் - பாபமின்மை - ஜரை - மரணமில்லாமை...சத்யகாமத்வம், சத்ய ஸங்கல்பத்வம் இத்யாதி கல்யாண குணங்கள், இவை பரமாத்மாவுக்கு இயற்கையாகவே நிருபாதிகமாகவே இருக்கின்றன.

ஆகவேअतस्तेभ्योऽप्येष सत्यम् - பரமாத்மாவுக்கு இம்மாதிரி अपहतपाप्मत्वादि - குணங்கள் எப்போதும்கூட இருக்கின்றதாக வாக்ய சேஷத்திலே காணப்படுவதாக-वाक्यशेषोदितगुणजातयोगात् नेति नेति-इति - ; இந்த नेति नेति சப்தங்களால் இவ்வளவுதான் இல்லை - (இதுமட்டுமில்லை-இன்னும் அதிகம் என அர்த்தம்) குணங்களையோ தர்மங்களையோ நிஷேதம் செய்யவில்லை - ஏற்கனவே முன்பு சொல்லப்பட்ட குணயோகத்திற்கு பிருஹ்மத்தினிடம். (பிருஹ்மத்துக்குப் பிரகரணத்தின் ஆரம்பத்திலே - नेति சுருதிக்கு முந்தி) ; சொல்லப்பட்ட குணங்களை நிஷேதம் செய்யவில்லை - அவைகளை பிற்பாடு வரும் சுருதி வாக்யங்கள் உறுதிபடுத்துகின்றன என அர்த்தம்.

**ஸ்ரீபாஷ்யம்:—**

ஆகவே பிருஹ்மம் (ब्रह्मण:) सविशेषत्वं न प्रतिषिध्यते - பிருஹ்மம் ஸவிசேஷமே - (அதாவது நிர்குண பர வாக்யங் களுக்கும் ஸகுண பர வாக்யங்களுக்கும்-இரண்டுக்கும் விஷயம் - அபஹதபாப்மத்வாதி என்று ஆரம்பித்து - अपिपास - என்று சொல்லிமுடிக்கிறபோது ஸத்ய சங்கல்பம் எனச் சொல்வதால், சுருதியே பேதப்படுத்துகிறது - இது ஸகுண பர வாக்யங்கள், இது நிர்குண (ஹேயரஹித) பரவாக்யங்கள் என்று பாகுபடுத்துவதால்-இரண்டுவகை வாக்யங்களுக்குள் யாதொரு விரோதமில்லை-அவைகளுள் ஒன்று மற்றொன்றை நம்பியிருக்கிறது என்பதற்கு லவலேசமும் சந்தேகத்திற்கு இடமில்லை - அவை அத்வைதி சொல்வதுபோல மித்யை விஷயத்தைப்பற்றிச் சொல்வதாகவில்லை என்பதாகும்).

अपितु पूर्वप्रकृतेयत्तामात्रम् । अत उभयलिङ्गमेव परं ब्रह्म (பூர்வமாகச் சொல்லப்பட்ட கல்யாண குணங்களை மற்ற பிராகிருத ரஹித (அபிராகிருத) குணங்களோடு சேர்த்து-உறுதிபடுத்துகின்றன. ஆகையால் மேலான பரபிருஹ்மத்திற்கு உபயலிங்கம் என்பது ஸித்தம். அத்வைத கண்டனம்).

(இங்கு சொல்லப்படுவது மீண்டும் விளக்கப்படுகிறது. அத்வைதிகள் சொல்வது. மூர்த்தம் (ரூபமுள்ளவை - அப்பு தேஜஸ் ப்ருத்வி) ; அமூர்த்தம் (ஆகாசம் வாயு) ; இவை பிருஹ்மத்தின் சூக்ஷ்ம ஸ்தூல ரூபங்கள் ஆகும். नेति नेति - என்று நிஷேதம் இந்த பிரும்மத்தின் ரூபங்களுக்கு சொல்லப்பட்டு, அதனுல் பிரும்மம் சுத்த ஸத்சித் - யாதொரு தர்மமும் (குணமுமில்லாதபடி) ஸ்வரூபமாகவே இருக்கிறது. அந்த பிருஹ்மம், மீண்டும் - சொல்லப்படுகிறது ஸத்யத்துக்குள் ஸத்யம், என்று சொல்லப்படுவதால் (வ்யவஹாரிக ஸத்யமான) ஜகத்திற்கு எதிராக - பாரமார்த்திகமாக ஜகத் மித்யை - பிருஹ்மம் ஒன்றே ஸத்யம்-பாரமார்த்த தசையில்-ஸத்யமாக (யாதொரு விகாரமற்றதாகச் சொல்லப்படுகிறது). இது சங்கரரின் கருத்தாகும்.

ஆனுல் ஸ்ரீராமானுஜருக்கு இந்த மூர்த்த அமூர்த்தம் ஸத்யம்தான் அவை ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபங்கள் ஜகத்திற்குச் சொல்லப்பட்டு அந்த ஜகத்தே பிருஹ்மத்தின் ஆகாரம் விசேஷம். அதுவே அதற்கு மாஹாரஜநம் (பட்டுப்பீதாம் பரம்) திவ்யமங்கள விக்ரஹமாக) விருக்கிறது என்று சொல் கிருர்). பிற்பாடு-நேதி நேதி என்கிற நிஷேதத்தால் முன் சொல் லப்பட்ட குணங்களின் அளவை - இவ்வளவுதான்-என்பதை நிஷேதித்து-பிருஹ்மத்தை அதையே ஸத்தியத்துக்கு ஸத்ய மென்று சொல்லிற்று (அத்வைதி சொல்வது-அதாவது நாம ரூப பிரபஞ்சத்தை நிஷேதித்து - ஸத்யமான பிருஹ்மத்தை சுத்த ஸந்மாத்ர மேவ எனக் காட்டியது) - பிருஹ்மம் யாதொரு மாறுதல்களும் ரஹிதம்; ஸத்யம் (நிர்விகாரம்); ஆனுல் ஜீவர்களோ ஞான ஸங்கோச விகாஸத்தையடை கிருர்கள். ஆகவே நேதி நேதி - என்கிற ஆதேசத்தால் - என்ன சொல்லப்படுகிறது என்ருல் - வாக்ய பிரகரண ஆரம்பத் திலே என்ன குணங்கள் பிருஹ்மத்திற்கு ஓதப்படுகின்ற னவோ - அவை கல்பிதம் - பிருஹ்மத்தினிடம் ஆரோபிதம், அவைகளை நிஷேதம் செய்யப்பட்டதால் (பிரபஞ்சம் மித்யை என நிஷேதிப்பதால்) மிச்சப்படுத்தப்பட்ட பிருஹ்மமே ஸத் யம் ஆகும். ஆனுல் ராமானுஜரின் பக்ஷத்தில் நேதி நேதி - ஒரு குறிப்பிட்ட அளவுவரை, இல்லையென்று நிஷேதித்தபடியால் இன்னும் உண்டு என்று ஸூசிப்பதால், வாக்யசேஷம் மற்ற கல்யாண குணங்களை ஓதுவதால், பிருஹ்மம் உபயலிங்க மேவ என்று தலைக் காட்டினுர் ஸ்ரீராமானுஜர். பிருஹ்மம் ஸவிசேஷமே ஆகும்).

**ஸ்ரீபாஷ்யம்:**—பிருஹ்மம் சாஸ்திரம் ஒன்றினுலே அறியப்படுவதால் - மற்ற பிரமாணங்களுக்கு விஷய மாகாது. மற்ற எந்த பிரமாணங்களால் எது சாதிக்கப் பட்டதோ - அதையும் சாஸ்திரம் சொல்லாது. சாஸ்திரம் சொல்வதை சாஸ்திரத்தினுல் தான் பிரமாணமாக அறியப் படவேண்டும். அதனுல் பிருஹ்மம் சாஸ்திரேண ஏவ ஸித்தம். ஆகவே பிருஹ்மத்திற்கு மூர்த்தா மூர்த்தங்க ளாகிற ரூபங்களை முந்தின சுருதிகளுக்கு அநுவாத

ருபத்திஞல் முந்திச் சொல்லப்பட்ட ருபங்களைத் திரும்பச் சொல்வதாகக் கொள்ளக் கூடாது. அதனுல் அவை களை நிஷேதிப்பதால் - அவைகளின் அளவை நிஷேதம் செய்வதால், மற்ற குணங்களுக்கு அஸம்பவம் (ஏற்படாது) என்றும் சொல்லக் கூடாது. (ருபங்களை நிஷேதம் செய்ய வில்லை என்று சொல்வதால் - இந்த நிஷேதத்திற்கு என்ன அர்த்தமென்றுல் - இவ்வளவு (குறிப்பிட்ட) அளவு என்று ஆரம்பத்திலே உள்ள முந்திய வாக்கியங்களில் (பிரகரணத் திலே) அந்த அளவே நிஷேதிக்கப்பட்டதாலும்; பிற்பாடு சுருதி மற்ற கல்யாண குணங்களை ஓதுவதாலும், அந்த பூர்வ குணங்களை உறுதிப்படுத்துவதாக பிற்பாடு சொல்லப் படும் வாக்யங்களாதலால் - நிஷேதம் முந்திய அளவுக்குக் கூறப்படுவதால் - तदेव प्रमाणान्तरागोचरत्वं द्रढयति - அந்த குணங் களையே உறுதிப்படுத்துவதாக - சூத்ரக்காரரே சொல்கிருர் - இந்த (பிருஹ்மத்தின்) லக்ஷணம் சாஸ்திரத்தைத் தவிர வேறு பிரமாண உதவியிஞல் அறிய முடியாததாகும் - என்பதால் உறுதிபடுத்துகிருர்.

ஸி. சூத்ரம். तदव्यक्तमाह हि (3. 2. 23)

ததவ்யக்தமாஹ ஹி (3. 2. 23)

தத் - பிருஹ்மம்; அவ்யக்தம் - பிரகாசப்படுத்தப்பட வில்லை. ஆஹி ஹி (சாஸ்திரம்) - சாஸ்திரம் அவ்விதம் சொல்கிறபடியாலே. (சாஸ்திரம்தான் அதனை பிரகாசப் படுத்துகிறது).

சாஸ்திர பிரமாணத்தைத் தவிர வேறு எந்த பிரமாணத் திஞலும் तत् - அந்த பிருஹ்மம் அறியப்படமாட்டாது பிர காசப்படுத்தப்படமாட்டாது. ஆஹி ஹி சாஸ்திரம் - அவ் விதம் சுருதி சொல்கிறதாலே. தை. ௩ா. 10 - न संदृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनम्-அவருடைய ருபம் கண்ணுக்கு முன்பு நிற்பதில்லை; யாரும் அவரை தம் கண்களால் பார்க்கிருரில்லை. முண். 3-1-8 न चक्षुषा गृह्यते नापि वाचा - அவர்

கண்களால் அறியப்படுகிறரில்லை - வாக்கினுலும் கூட அறியப்படுகிறரில்லை. சுருத பிரகாசிகையில் - प्रधानपरत्व-व्यावृत्तयर्थमव्यक्त शब्दं व्याचष्टे तदिति. (तदव्यक्तमाह हि).

ஸூ. சூத்ரம். अपि संराधने प्रत्यक्षानुमानाभ्याम् (3. 2. 23)

அபிஸம்ராதநே ப்ரத்யக்ஷானுமாறைப்யாம் (3. 2. 23)

அபி ஸம்ராதநே - பக்திபூர்வமாக அவர் (பகவான்) அறியப்படுகிறுர் ; ஏனெனில் வேதங்களும் சுருதிகளும் அவ்விதம் சொல்கின்றன - பிரத்யக்ஷ அநுமாறைப்யாம் (ஆகவே அனுமானம் - சுருதி - ஸ்மிருதி மூன்றினுலும் அறியப்படுகிறுர். பக்திரூப சாக்ஷாத்காரமிருந்தால் - பிருஹ்மம் அடையப்படுவதாக விருக்கிறது); ஸம்ராதனே - பக்தி - ப்ரீதி பூர்வகமாக.

அபிச ஸம்ராதநே - எந்தக் காரணத்திறைல் ஸ்வபாவமாகவே பிரகாசப் படுத்தப்படவில்லையோ - अतएव அதே காரணத்திறைல் ஸம்ராதனத்தை (ப்ரீதியை - அதாவது பக்தியை) அபேக்ஷிக்கிறுர் - அதறைல் अपि संराधन इति அவரைப் பக்தி பூர்வமாக திருப்தி செய்தால் संयक् प्रणीने பக்திரூபாபன்னமாக - தொடர்ந்து இடைவெளியிராமல் - அவிச்சின்ன பக்தி யோகத்திறைல் நிதித்யாஸம் செய்து - அதறைல் யேற்படுவது மானஸ ஸாக்ஷாத்காரம் அப்போது அவர் அறியப்படுகிறுர் - नान्यत्रेति - வேறு வழிகளால் அடையப்படுபவரல்லர். இந்த விஷயம் சுருதி ஸ்மிருதி களிறைல் அறியப்படுகிறது. சாஸ்திர யேவ ஸித்தம்

(இங்கு திருதராஷ்டிரனுக்கு சஞ்சயன் உபதேசமளித்ததை நினைக்கவும் - கிருஷ்ணதூது வரும் சமயம் - "நான் வஞ்சனை செய்வதில்லை - ஈஸ்வரார்ப்பணம் செய்யாமல் தர்மத்தைச் செய்வதில்லை. பக்தியிறைல் சுத்தத் தன்மையை அடைந்து சாஸ்திரத்திறுலே ஜனுர்த்தனரை அறிகிறேன். பொன்னும் பொருளும் அவருக்கு சரக்காக இருக்காது.

ஒரு குடம் ஜலம் ப்ரீதியினுல் அளிக்கப்பட்டால் அதுவே போதும். அதுவுமில்லாவிடில் சுத்தமனத்துடன் அவரைக் குசலப்பிரஸ்னம் செய்தாலே போதும். அவர் வசீகாரம் செய்யப்படுவார். மனத்தை ஜயிக்காதவன் மனத்தை ஜயித்தவரான ஜனர்த்தனரை ஒருக்காலும் அறியமாட்டான். இந்திரியங்களே ஜயித்தவன் சாஸ்திர லாபத்தாலும் யோகத் தாலும் தத்வ விஷயத்தில் தெளிவை அடைகிறுன் - எனக் கொள்ளவும்.)

முண். உ. 3-1-3ல்

**नायमात्मा प्रवचनेन लभ्यो नमेधया न बहुना श्रुतेन । यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् ।**

சுருதியும் பிரத்யக்ஷ ஸமான சாக்ஷாத்காரத்தை அபவர்க்க ஸாதனமாகக் கூறுகிறது. ஒருவன் ஆத்மாவை (பரமாத் மாவை) (சுலபமாக) அடையமுடியாது. பிரவசனத்திஞல் (பிரமாண சம்சயம் - ஸதாதியாணிப்பதால்) அடையமுடி யாது. மனனத்திஞல் (பிரமேயசம்சயம்) அடையமுடியாது. நிதித்தியாஸத்திஞலும் (சாக்ஷாத்காரம் வரும்வரை) இல்லே (அடையமுடியாது) ஸ்ரவணத்திஞலும் (கேட்பதாலும்) தெரிந்து கொள்ள முடியாது. எவனே அந்த பரமாத்மாவே பொறுக்கி எடுக்கிருஞே அவஞல தான் (பிரியதமஞல்) பரமாத்மா அடையப்படுகிருன். பகவாஞல் வரணீயத்வம் என்கிற யோக்யதை அவனுக்கு ஏற்படவேண்டும் - அதஞல் அந்த பக்தன் பகவானுக்குப் பிரியதமஞகிருன். மிக்கப் பிரியத்துக்குப் பாத்திரமானவன் தான் பகவாஞல் வரிக்கப் படுகிருன். அதஞல் அவன் பிரியதமம்; பகவானே தேடி வரிக்கும்படி வரணீயோ பவதி - மேன்மைகள் கொண்டிருக்க வேண்டும்).

முண். 3-1-8 - ज्ञानप्रसादेन विशुद्धसत्त्वस्ततस्तु तं पश्यति निष्कलं ध्यायमानः - ஞான பிரஸாதத்திஞல்-பரமாத்மாவை நிஷ்கலம் (நிரவயவம் - அவயவமில்லாதவர்) என்று தியானித்து.

(நாம் சொல்வது இதுபோன்ற வாக்யங்களுக்கு பிரகிருதி ஸ்வபாவத்துக்கு யேற்ப — பிருஹ்மத்திற்கு ஹேய குணங் களில்லை - பிராகிருத ஹேயகுணங்கள் இல்லை என்பதாகும்)- அந்த உபாஸகன் தன்மனத்தை பகவத் பிரஸாதத்தினல் சுத்தப்படுத்துகிருன் - பிறகு அவரை அவன் சாக்ஷாத்தா கவே (மானஸஸாக்ஷாத்காரமடைந்து) பார்க்கிருன். (முதல் அதிகரணத்தில் - ஜிக்ஞாஸாதிகரணத்தில் லகுசித்தாந்தம் பார்க்கவும்).

ஸ்மிருதிகளும் அவ்விதமே கோஷிக்கினறன - கீதை. 11-53-

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
भक्त्या त्वनन्यया शाक्यः अहमेवंविधोऽर्जुन ।।
ज्ञातुं द्रष्टुं च तत्वेन प्रवेष्टुं च परंतप ।

பக்தியில்லாதவனுக, வேதாத்யானத்தைச் செய்வது, பிற ருக்கு சொல்லிவைப்பது - ஜபிப்பது, வேதத்தின் அர்த் தத்தை தெரிந்து கொள்வது - முதலானவைகளாலும், தபஸ் யாகம் தானம் ஹோமம் இவைகளாலும்-என்னை (பகவானை) உள்ளபடி காணத்தக்கவனல்லன்-வேறுபற்றின்றி என்பக்தி ஒன்றினுலேயே அநந்யயா பக்த்யா-உள்ளபடியே சாஸ்திரங் களைக்கொண்டு அறியவும், உள்ளபடியே பார்க்கவும் - உள்ளபடியே பிரவேசிக்கவும் தகுந்தவன். (இந்த ஆத்மா மனனம் பண்ணுவதாலே - தியானம் செய்வதாலோ - சிர வணம் பண்ணுவதாலோ அடையத்தக்கவனல்லன். பக வான் எவனை வரிக்கிருனே - அவனுக்கு தன் ரூபத்தை விசதமாகக்காட்டுகிருன். வரிக்கத்தக்க குணவிசேஷம் உபாஸகனுக்கு இருக்கவேண்டும்; அது குணவிசேஷமான பக்திதான் - ) அனன்ய பக்தி ஸாக்ஷாத் உபாயமாகச் சொல்லப்படுகிறது.)

இப்பேற்பட்ட பக்ருபாங்கமேவ - பக்தியின் முதிர்ந்த நிலையான பக்தியே - உபாஸனம் ஆகும் - அதுதான்

ஸம்ராதனம். பகவானிடம் ப்ரீதி பூர்வமாக உபாஸித்து அவனை சந்தோஷப்படுத்துதல் வேண்டும் - அந்த ஞானம் ஸம்பாதிக்கப்பட வேண்டியது என்று முன்னமே (ஜிக்ஞா ஸாதி கரணம் - லகு கித்தாந்தம்) கூறப்பட்டதாகும். ஆகவே நிதிதியாஸம் செய்வதற்க்காகவே பிருஹ்ம ஸ்வருபத்தை உபதேசிக்கிறபடியாலே - द्वे वाव ब्रह्मण: - பிருஹ்மத்திற்கு மூர்த்தம் அமூர்த்தம் என்கிற இரண்டு ரூபங்கள் உண்டு (பிரு. உ. 2-3-1) என்கிற விஷயங்களை சுருதி சொல்கிறபடியாலே - பிருஹ்மத்திற்கு மூர்த்தம் அமூர்த்தம் ஆகிற ரூபங்கள் கொண்ட இரண்டு உருவங் களுடன் கூடின, ஸ்தூல சூக்ஷ்ம ரூபங்களுடன் கூடிய ரூபங்கள் - அந்த பிருஹ்மம் சுருதியைத் தவிர வேறு மற்ற பிரமாணங்களால் அறியப்படமாட்டாது. அந்த சுருதி ஏற்கனவே மற்றைய பிரமாண ஸாதனங்களால் அறியப் பட்டதை அனுவாதத்தினுலோ - (திரும்பப்படிப்பதாலோ) அல்லது விளக்கப்படுவதாலோ - சொல்லாது - அதாவது சுருதியின் விஷயம், வேறு மற்ற பிரமாணங்களால் ஏற்கனவே ஸாதிக்க முடியாமலிருக்கின்றதோ - அதாவது பிருஹ்மத்துக்கு மூர்த்தம் அமூர்த்தம் என்கிற இரண்டு ரூபங்கள் உண்டு என்பதாகும்) அதைச் சொல்வதாகும் அதுவே இங்கு விஷயமாகும். (அதனுல் அத்வைதி சொல்வது போல நிர்விசேஷ பிருஹ்மம் ஆகாது. பிருஹ் மத்திற்கு உபயலிங்கம் ஸித்தமேவ.)

संराधनपदेन परजीवयो: उच्चनीचभावादि स्पष्टीकरणात् अभेदभ्रमनिरास: । एवं व्यक्तत्वे सत्यप्यव्यक्तत्ववचनं दर्शन-करणभूतप्रमाणागोचरत्वादिति (உத்தமூர் ஸ்வாமி)

(ஆகவே பிருஹ்மமும் ஸத்யம் அதன் காரியமாகிற ஜகத்தும் ஸத்யமாகும் - அத்வைத பக்ஷம் நிரஸிக்கப்பட்ட தாலே) மேற்சொல்லப்பட்ட नाहं वेदै - என்கிற கீதை சுலோ கத்தின் கீதார்த்தம் - பரஞானம் பரம பக்தியை விளக்கு வதாகும். விசுத்த சேதனர்கள் தங்கள் சாமர்த்தியத்தினுலே- தியானம் செய்து - ஞான ரூபமாகிற அனன்ய பக்தியை

அடைந்து - அதன் உதவியினால் பரமபக்தியை சம்பாதித்து பகவத் பிரஸாதத்தினால் பகவானை சாக்ஷாத்கரிக்கிறார்கள். தர்சன ஸமானுகாரத்யானு நந்தரபாவி பகவத் || பிரஸாதாயத்த பரஞான விஷயதயாது வ்யக்தத்வம் பவேத் - இந்த ஞான பிரஸாதத்தினால் சாக்ஷாத்காரம் உண்டாவது என்பதாகும்).

ஸூ. प्रकाशादिवच्चावैशेष्यं प्रकाशश्च कर्मण्यभ्यासात् (3-2-24)

பிரகாசாதி வச்சா வைசேஷ்யம் பிரகாசஸ்ச
கர்மண்யப்யாஸாத் (3-2-24)

கர்மணி - உபாஸநம் — பிருஹ்மத்தை நேரடியாகப் பார்ப்பது. (ஸா க்ஷா த் க ரி ப் ப து) - அப்யாஸாத் அப்யாஸத்தினாலும் தி யா ன த் தி லு ம் யேற்படுகிறது. அப்பேற்பட்ட ஸாக்ஷாத்காரத்தில் பிருஹ்மத்திற்கு ஸ்தூல சூக்ஷ்மரூபங்களான மூர்த்தா மூர்த்தம் இவைகளுடன் சம்பந்த பிரகாசஸ்ச - (பிரகாசமாகிற) ஞானத்துடன் சம்பந்தம் போல ஸ்வரூபமாகவும் விபூதியாகவும் விருக்கிறது ; அந்த சம்பந்தம் அதிலிருந்து தனிப்பட்டதல்ல வேறானதல்ல. ஸ்வரூப நிரூபக தர்மங்கள் ஆகும். [பிராகாசாதி வத்ச - தத்வஞானம் ஸவிசேஷ விஷயகத்வமாதாலால், அத்வைத மதத்தை நிரஸிப்பதற்கு இங்கு பிரகாசாதிவத்ச என்று சொல்லப்பட்டதாகும்.] பிரகாசாதிவத்ச - ஞானம் ஆனந்தம் எனப்படும் ஸ்வரூபநிரூபக தர்மங்களைப் போல.

அவைசேஷ்யம் - வித்யாஸப்படாமல் இருப்பது என்று அர்த்தம். (பிரகாசம் (ஞான ஆனந்த) ஸ்வரூபமே. மூர்த்தா அமூர்த்தமும் பிருஹ்மத்திற்கு அப்ரதிக் ஸித்த தர்மங்களாகாது - விசேஷமாக ஆகமாட்டா என்பதுஅத்வைத பக்ஷம். அது கற்பிதமாகும் - அதனால் பிருஹ்மம்ஸத்யம் - ஜகத்மித்யை என்கிறார்கள்). பிரகாசஸ்ச - தத்வ ஞானத்தினால் யேற்படும் ஸர்வ பிரகாசபரம் ஆகும். கர்மண்யப்யாஸாத் - பக்தியோகம் அப்யாஸத்தினாலும் தியானத்தினாலும்; தத்வஞானம், பரஞானம் பரமபக்தி அடையப்படும் - என்பது மொத்த அர்த்தமாகும் ஸூத்ரத்திற்கு.]

இங்கே - முன்பு சொல்லபப்பட்டபடி சுருதி பிருஹ்மத்திற்கு குறிப்பிட்ட அளவுடன் கூடியது - என்பது பிரகரண வாக்ய ஆரம்பத்திலே எதுசொல்லப்பட்டதோ - இந்த அளவுடனிருப்பது அது நிஷேதம் செய்யப்பட்டது (அதாவது அளவை நிஷேதிப்பது என்பதால்) அந்த நிஷேதம் பரமாத்மாவுக்கு மூர்த்தா மூர்த்தம் ரூபங்கள் இல்லை அவைகளைச் சரீரமாகக்கொள்ளவில்லை - என்று சொல்லவில்லை - (அதாவது பரமாத்மாவுக்கு திவ்யமங்கள விக்ரஹமுண்டு இவைகள் அவனுக்கு சரீரமாகும் என்பதாகும்). (அதனுல் தத்வஞானம் நிர் விசேஷ விஷயகமேவ என்கிறது அத்வைத பக்ஷம் நிரஸிக்கப்பட்டதாகும்' பிரகாசம் - ஞான ஆனந்தம் என்பது ஸ்வரூபமே என்பது மட்டுமல்லாமல், மூர்த்தா மூர்த்தங்களாகிற ஜகத்தின் ரூபங்கள் பிருஹ்மத்திற்கு அப்ரதிச்ஸித்தத தர்மங்களாகும் - சரீரத்வாரா விபூதி ஐஸ்வர்யமாகும், ஸத் சித் ஆனந்த பதங்களுக்கு அத்யந்த பர்யாயத்வம் இல்லாதபடியாலே-ஸ்வரூப நிருபக தர்மங்கள் பிருஹ்மத்திற்கு உண்டு - அவை பிருஹ்மத்தை ஆஸ்ரயிக்கின்றன—எப்படி பிரபை என்கிற தர்மம் பிரகாசத்தின் ஸ்வரூபத்திற்கும் ஆஸ்ரயமோ, அதே பிரகாரம் மூர்த்தா மூர்த்தம் - பிருஹ்மத்திற்கு அப்ரதிக்ஸித்த தர்மங்களாகின்றன - எப்படி தத்வ ஞானத்திற்கு பிரகாசம் ஸ்வரூபமாயினும், ஞானம் ஆனந்தாதி ஸ்வரூபநிருபக தர்மங்களை அங்கீகாரம் செய்யவேண்டியதாகும் - அ தா வ து தர்மியை ஒப்புக்கொண்டால் - தர்மங்களையும் ஒப்புக்கொள்ளுவதாகும். ஆனந்தம் என்பது அனுகூலத்வம். ஆனந்தமய பிருஹ்மம் ஆனந்தமய சேதன அசேதனங்களை ஸ்ருஷ்டித்து அவற்றினுள் புகுந்து அவையாகவே நின்றது - அதனுல் அழியாததாயிற்று - இப்படி உட்புகுந்ததைக் கொண்டே தன்னையே தான் ஸ்ருஷ்டிக்கப் பெற்ற இதுவே ஆனந்தரூபம்-ஆனந்த குணம் - ஆனந்தி, ஜீவன் அந்தகைய ஆனந்த பிருஹ்மத்தை உபாஸித்து - அவனும் ஆனந்த ரஸம் பெறுவதால் பிருஹ்ம ஞானத்தினுல் எல்லையில்லாத ஆனந்தமடைகிறுன் என்று காட்டப்படுகிறது).

ஆகவே, பிருஹ்மம் ஜகத்தாகிற மூர்த்தா மூர்த்தம் சரீரத்வாரா விசிஷ்டத்வம் (சேர்க்கையை கொண்டது) என்பதை சுருதி நிஷேதம் செய்யவில்லை (பிரு-உப.). இந்தக் காரணத்தினுல் அப்யாஸத்தினுல் மானஸ ஸாக்ஷாத்கார த்தை அடைந்த வாமதேவ பிருஹ்ம ரிஷி (அதேபோல நம்மாழ்வாரும்) பரபிருஹ்ம ரூபத்தை சாக்ஷாத்கரித்து-அந்த ஆனந்தப் பெருக்கினுல் தம்மையும் ஆனந்தமய பிருஹ்மத்தையும் ஸாம்யமாகப் பவித்து. பிருஹ்மஸ்வரூபத்தை (ஆனந்த மயனுக) ஒதினுர்கள் ஆகவே நித்யத்வம் (ஸத்யத்வ) முள்ள மூர்த்தா மூர்த்தம் பிருஹ்மத்திற்கு அப்ரதிக் ஸித்ததர்மங்களாக - விபூதிகளாக விருக்கின்றன எனக் காட்டினுர்கள் (दर्शने); प्रकाशादिवत् - எப்படி பிருஹ்மஸ்வரூபம் ஞானமும் ஆனந்தமும் சேர்ந்து ஒன்ருக விருக்குமோ - அதுபோல பிருஹ்மத்திற்கு ஸ்தூல சூக்ஷ்மரூபங்களாகிற மூர்த்தா மூர்த்தாதி பிரபஞ்சம் விபூதிகளாக-ஸ்வரூபமாகவும் விளங்குகின்றன. (அதனுல் விசிஷ்டதயா - பிருஹ்ம குணத்வாவை சேஷ்யம் - ப்ரதீயதே.

प्रकाशानन्दादिस्वरूपस्येव मूर्तामूर्तादेरपि ब्रह्मधर्मत्वे विशेषे नास्ति...तावदविशिष्टत्वेऽपि अद्वैतं धर्म्यैक्यमात्रेणैव निर्वाह्यम् । तद्वत् मूर्ताऽमूर्तादेरपि तद्धर्मत्वात् सर्वविशिष्टवस्त्वद्वैतं सर्वसत्यत्वञ्चाक्षतम् । एवं तत्वज्ञाने प्रकाशोऽपि ज्ञानानन्दादिस्वरूपनिरूपकधर्माणाङ्गीकार्यः ......... प्रत्युतभक्तिर्यावदंश विषयिणी, ततोऽधिकं परिपूर्णं तत्प्रसादात् परज्ञाने प्रकाशते इत्येव प्रामाणिकमिति सूत्राशयः । सूत्रे द्वितीयं प्रकाश पदं तत्वज्ञानकृत सर्वप्रकाशपरं । सूत्रे कर्मशब्दप्रयोगः भक्तेरपि ध्यानस्य मानसकर्मत्वात् कर्मत्यागेदम्परैरातत्वज्ञानं भक्त्यनुवर्तनकथनं कथं युज्यत इति तन्मतदोषख्यापनाय ।

(உத்தமூர்ஸ்வாமி). இந்த விஷயம் விபரமாக ஜிக்ஞால ஸாகிகாணர் சுருதி கட்டம் - பிரு. விக் பாகம்-2 பக்கம் 205 பார்க்கவும்).

ஞான ஆனந்தாதி ஸ்வரூபத்தைத்தான் மூர்த்தா மூர்தாதி பிரபஞ்ச விசிஷ்டதயா அபி - ஐஸ்வர்யமாக பிருஹ்மத்துடன் சேர்ந்துள்ளவை என்று சொல்லப்பட்ட பட்டதாகும். ஆகவே இந்த இரண்டு ரூபங்களும் பிருஹ்ம குணத்வத்துடன் அவை சேஷ்யம் - வித்யாஸமில்லாமலிருப் பது - என்பதாகும். (அதாவது அப்ரதிகஸித்த - ஸ்வரூப நிரூபித தர்மங்களாகும்). ஆகவே மூர்த்தா மூர்த்தம் சரீர மாக (விபூதியாக) பிருஹ்மத்திற்கு ஓதப்படுவதால் - பிருஹ் மம் நிர்விசேஷமல்ல - ஸகுணமாகும். இதையே பிரு. உ. 3-4-10 காட்டுகிறது - तद्वैतत् पश्यन्नृषि र्वामदेवः प्रतिपेदे अहंमनुरभवं- सूर्यश्च – इत्यादि - வாஸ்தவமாகவே - இந்த பிருஹ்மத்தை சாக்ஷாத்காரம் அடைந்ததால், வாமதேவ பிருஹ்ம ரிஷி ஆனந்தப் பெருக்கினால் தன்னோடு பிருஹ்மத்தையும் - பிருஹ்மத்தினால் உண்டாக்கப்பட்ட காரியமாகிற ஜகத்தை யும் ஒன்றாக்கி - தன்னை பிருஹ்மத்துடன் ஸாம்யமாக ஓதினார் - "வாமதேவர் அனுபவித்துச்சொன்னார் - நானே மனு ; நானே சூர்யன் ஆனேன். இதற்கு அர்த்தம் யாதெனில் - பிருஹ்ம ஸ்வரூபமாகிற ஞான (பிரகாச) ஆனந்தாதிகளை - பக்திபெருக்கினால் அடைந்து) - அப்யா ஸத்தினால் - உபாஸனாரூபமான கிரியையினால் - வாம தேவாதி ரிஷிகளும் அடைந்து-தங்களை எவ்விதம் சொல்லிக் கொண்டார்கள் "நானே மனு-நானே கக்ஷிவான்"-அதாவது நானும் கக்ஷிவானும் பரமாத்மாவுக்குச் சரீரம்-அவைசேஷம்- வித்யா ஸமில்லாமலிருக்கும் ஸாம்யத்தை ஓதினார்கள். இது பக்தி பெருக்கினால் ஏற்படும் மானஸ ஸாக்ஷாத்காரம்-संराधना- त्मक (உபாஸனாரூபம் கொண்டதாக) ; कर्मण्य - உபாஸனா கிரியையினால்) - அப்யாஸத்தினால் - தினந்தோறும் அப்ய ஸித்து (மனனம் - நிதித்தியாஸம்செய்து) மானஸஸாக்ஷாத் காரத்தை அடையப்பெற்றனர் என்பதாகும். (ஆகவே பகவத் ராமானுஜர் முடிக்கிறார் -) तद्वच्चचाभ्यस्त संराधनानां - உபாஸனமாகிற பக்தியோகத்தினால் பிருஹ்மத்தை மூர்த்தா மூர்த்தமாகிற இருரூபங்களுடன் விசிஷ்ட (சேர்க்கைபெற்ற) அவிசேஷணம் – வித்யாஸமில்லாதபடி - பிருஹ்மம் என்று காட்டப்படுகிறது - அதாவது வாமதேவாதிகள் கண்டனர்

(மானஸஸாக்ஷாத் காரத்தில் பார்த்தனர்) (நம்மாழ்வாரின் கடல் ஞாலம் நானே என்னும் - என்கிற பதிகத்தின் பொருளும் இங்கு நினைக்கத்தக்கது) - என்கிற அர்த்தம் தேறும்.

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்படுவது - பிருஹ்மத்தின் ஸ்வரூபம் ஞானம் ஆனந்தம்-இது முதிர்ந்த பக்தி யோகத்தில் அனுப விக்கப்படுகிறது - பரமாத்மாவுக்கு சரீரமாகிற மூர்த்தம் அமூர்த்தம் என்கிற ரூபங்களை சாக்ஷாத் காரத்தினால் அடையப் பெற்றதாகத் தேறும் இதனால் பிருஹ்மமும் ஜகத்தும் ஸத்யம். மூர்த்தமும் அமூர்த்தம் வ்யவஹாரிக ஸத்யம்-பரமார்த்தத்தில் மித்யை என்கிற அத்வைத பக்ஷம் நிராகரிக்கப்பட்டதாகும்.

ஆகவே சூத்ரக்காரர் உபயலிங்கத்வ அதிகரணத்தை இவ்விதம் சொல்லிமுடிக்கிறார் (உபஸம்ஹரதி).

சூத்ரம் अतोऽनन्तेन तथाहि लिङ्गम् (3-2-25)

அதோऽநந்தேந ததாஹிலிங்கம் (3-2-25)

अतः ஆகையால் - (இப்படிச் சொல்வதற்கு ஹேதுக்கள் இருக்கிறபடியால்) - பிருஹ்மண: - பிருஹ்மத்திற்கு அனந்த கல்யாண குணங்கள் இருப்பதால் - அதாவது கல்யாண குணகணேந விசிஷ்டத்வம் என்பது ஸித்தம். (பிருஹ்மம் கல்யாண குணங்களுக்கு நிதி - ஹேயகுணங்களுக்கு எதிர் தட்டு - ஆக -) तथा हि - सत्युभयलिङ्ग - உபயலிங்கங்கள் (அடையாளங்கள்) சொல்லப்பட்டதாகும் (பிருஹ்மத்துக்கு). இதனால் நாம் ஸ்தாபித்துச் சொன்னது உபபந்நம் - பொருத்தமாகும். (இதனால் பிரும்மாண்டங்கள் பலவும் எவைவ்யஷ்டி ரூபமாக ஸர்வ பிரபஞ்சங்களும் இருக் கின்றனவோ அவை எல்லாம் ஸத்யமாகும் - மித்யையல்ல. இதனால் பிருஹ்மத்திற்கும் விசேஷணமும் சொல்லப்படு

கிறது - அநந்த பிரபஞ்ச ஸஹிதமேவ பிருஹ்மம் அதே பிரகாரம் பிருஹ்மமும் உபயலிங்கமாகிறது, இது தான் சூத்ரத்தின் திரண்ட பொருளாகும்.

(இங்கே நோக்க வேண்டியது - பல இதர விஷயங்களைச் சொல்லிய பின்பு-சூத்ரக்காரர் முக்ய விஷயமான அதிகரண விஷயத்தைச் சொல்லி - அதாவது பிருஹ்மத்தின் லக்ஷணம் உபலிங்கமேவ - என்று கூறிமுடிக்கிறார். ஆகவே உபய லிங்கம் பிருஹ்மத்திற்கு இல்லை - நிர் விசேஷமே பிருஹ்மம் என்று சொல்லும் அத்வைத பக்ஷத்திற்கு - இந்த சூத்ரம் ஹானியாகும்.)

## விளக்கம் (அனுபந்தம்)

## மூர்த்தா மூர்த்த பிராஹ்மணம் :—(பிரு. உப)

**சுருக்கம் :—** பிருஹ்மத்திற்கு இருவகை ரூபங்களுள் - கண்ணுக்குக் புலப்படுவதும் பலவகை உருக்கள் கொண்டு அங்கங்கே தங்கியிருப்பனவான மண் நீர் நெருப்பு என்பவை ஒரு ரூபம் (மூர்த்த ரூபம்)—(ஸ்தூலரூபம்). அவ்விதமின்றி வாயுவும் ஆகாசமும் இன்னொரு ரூபம் (அமூர்த்தம் சூக்ஷ்ம ரூபம்) பிருஹ்மம் சூரியமண்டலத்திலும் கண்ணிலும் புருஷ உருக்கொண்டிருக்கிறது. சூர்யமண்டலமும் கண்ணும் கண்ணுக்கு இலக்கான முன் சொன்ன மூர்த்த ரூபத்தின் ஸாரமாகும். அந்த புருஷனின் உருவத்தின் நிறமானது மஞ்சள் பட்டாடை-வெண்கம்பளி-இந்திரகோபபூச்சி அக்னி ஜ்வாலை - செந்தாமரை - மின்னல் எல்லாவற்றின் நிறத்தை ஒத்ததாம். இந்த பிருஹ்மத்தை அறியும் வகை - இவ்வள வாகவே அறியலாகாது. ஸத்யத்திற்கெல்லாம் ஸத்யம் என்று ஆராயும்போது இதன் பெருமை விளங்கும். ஸத்யங் கள் என்பது ஜீவாத்மாக்கள் (பிராணன்கள்); அவற்றிற்கும் மேலாக ஸத்யம் இது. ஆக பஞ்சபூதங்களாக மாறும் அசேதனத்திற்கு மேலாய் ஸ்வரூப விகாரமற்றதாய்; ஸ்வ ரூப விகாரமற்ற ஜீவர்களுக்கு மேலாய் - ஸ்வபாவ விகார மற்றதாம் பிருஹ்மம். ஸ்வபாவ விகாரத்தை பிரமன் முதல்

பூண்டு வரையில் ஜீவர்களில் பார்க்கவும்; பிருஹ்மம் ஸர்வ விலக்ஷணத்வமாகையால் ஸ்வரூபஸ்வபாவ விகாரங்களற்றது - என்பதாகும். ஸத்யஸ்ச ஸத்யம் - இதுதான் மூர்த்தா மூர்த்த பிராப்மணம்).

## அஹிகுண்டலாதிகரணம் (6)

சூத்ரம். उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् (3-2-26)

உபயவ்யபதேசாத்வஹிகுண்டலவத் (3-2-26)

உபய வ்யபதேசாத் - பிருஹ்ம விஷயத்தில் — பேதா பேதவுபதேசம் (சுருதியில் சொல்லப்படுவதால்) (ஏகத்வம் - பஹீத்வம் வ்யபதேசம் சுருதியில் காணப்படுவதால்) - பர மாத்மாவே அசேதந உலகமாக விருக்கிறுன் - (அசித் சப்த வாசி ஜகத்தாக விருக்கிறுன்). இந்த தத்வமானது பாம்பும் அதன் குண்டலம் போல வளைந்து காணப்படுதல் - வக்கிர மாகவிருத்தல்-இவற்ருல் அபேதமும் பேதமும் எவ்விதமோ- அவ்விதமே இங்கு (பிருஹ்மவிஷயத்தில்) இருக்கலாம்.

(இங்கு மூர்த்தா மூர்த்த பிராம்மணம் சங்கதி விஷய மாகும்) மூர்த்தா மூர்த்த ரூபங்கள் கொண்டது பிருஹ்மம்- (ஸ்தூல சூக்ஷ்ம ரூபங்களுடன் சேர்ந்த விசிஷ்ட பிருஹ்மம்)- என்கிற விஷயம் சுருதியில் ஓதப்படுகிறது—பிரு. உ. 4-3-1ல் द्वे वाव ब्रह्मणो रूपे - என்பதாகும். இதில் அசித்தாகிற பிரபஞ் சத்தைப் பிருஹ்மத்திற்கு ரூபம் என்று சொல்லப்பட்டது.

பிரு. உ. 4-3ல் अथात आदेशो नेति नेति - இந்த ஆதேச உப தேசத்தில் नेति नेति இது இல்லை - இது இல்லை (இவ்வளவு இல்லை - இவ்வளவு இல்லை) என்று சொல்லப்படுவதால் - பிருஹ்மத்தின் அளவை நிஷேதிப்பதால், மூர்த்தா மூர்த்த அசித்வஸ்து ரூபமாக பிருஹ்மம் சரீரமாகக் கொண்டது. (இங்கு சொல்லப்படுவது - சுருதியில் - பிருஹ்மத்திற்கு உபயலிங்கம் ஸித்தம் என்பது முன் அதிகரணத்தில் ஸ்தா பிதம். அந்த பிருஹ்மத்திற்கு சேதன வர்க்கங்களும்

அசேதன வர்க்கங்களும் சரீரமாகவிருக்கின்றன. இங்கு ஆராயப்படுகிற விஷயம் - பிருஹ்மம் தோஷங்களுக்கு உபய லிங்கத்தால் ஸித்தமாதலால் - அசேதன வஸ்துக்களைத் தன் சரீரமாகக் கொண்டதால் - அசேதன வஸ்துக்களின் தோஷங்கள் பிருஹ்மத்தை ஸ்பர்சிப்பதில்லை (தொடாது). இங்கே மூர்த்தா மூர்த்தம் என்கிற அசித் பிரபஞ்சம் - பிருஹ்மத்தின் இருரூபங்களாக—ஸ்தூல சூக்ஷ்மரூபங்களாக சொல்லப்படுவதால், அது பிருஹ்மத்திற்கு ஒருவிதத்திலே சரீரமாகிறது. உபநிஷத் மூர்த்தம் என்பதில் ப்ருத்வி - அப்பு - தேஜஸ்ஸைச் சொல்லி; அமூர்த்தத்தில் வாயு ஆகாசத்தை ஓதுகிறது. (தேகத்திலுள்ள முக்ய பிராணன் ஹ்ருதயத்திலுள்ள ஆகாசம் - அமூர்த்தம் எனவும் சொல்லலாம்). இங்கே மூர்த்தா மூர்த்த ரூபங்கள் ஜீவர்களையும் சேர்த்துச் சொல்லலாம். அதனால் ஸித்தம் யாதெனில் - அசேதன உலகம் ஒருபாகம் - சேதன வர்க்கங்கள் இன்னொரு பாகம் இதனால் சரீர ஆத்ம பாவம் ஓதப்படுவதால் - சேதனனுக்கு அடங்கியுள்ளது அதன் சரீரம். பரமாத்மா ஆத்மாவாதலால் - எல்லா சேதன அசேதன வர்க்கங்கள் பரமாத்மாதீனமாகும் - அவனால் நியமிக்கப்படுகிறது). नेति नेति - என்கிற ஆதேசத்தால் - இவ்வளவு என்கிற அளவை நிஷேதிப்பதால் அந்த பிருஹ்மத்திற்கு அசித்ரூப மூர்த்தா மூர்த்தம் சரீரமாக விருக்கிறது).

சுருதி மீண்டும் சொல்கிறது. नहयेतस्मादिति नेत्यन्यत् परमस्ति நேதி - நேதி - என்பதால் காட்டப்பட்ட எதுவோ அதைக் காட்டிலும் வேறுபட்ட பரமான பொருள் இல்லை. (இதில் பிருஹ்மத்தைவிட அன்ய உத்கிருஷ்டமான பொருள் இல்லை என்பது பிரதிபாதிதம். அதை நிரூபித்துச் சொல்வதற்காக, சுருதி ஓதுகிறது - अथ नामधेयं सत्यस्य सत्यमिति प्राणावै सत्यम् तेषामेष सत्यम् அதனுடைய நாமதேயம் (பெயர்) மாறுதலைகளுள் (ஸத்யஸ்ய) ஸத்யம் (ஸத்யம் - நிர்விகாரம்) - ஏனெனில் प्राणावै - (ஜீவர்களும்) ஸத்யம்; அதுவே (அந்த பிருஹ்மமே) तेषामेष அவைகளுள் ஸத்யம் (நிர்விகாரம்) - பிரு. உ. 2-3-6. அதாவது இந்த சுருதிக்கு அர்த்தம் - பிராண சப்தநிர்திஷ்ட

மான ஜீவர்களைக் காட்டிலும் - பரமாத்மா ஸத்யம் என்ப தாகும் चेतनेभ्योऽप्येषसत्यमिति ); ஏனெனில் எப்பொழுதாகிலும் பரமாத்மாவுக்கு ஞானுதி (ஞானம் ஆனந்தம் ஆகியவை களில்) ஸங்கோசத்வம் (சுருக்கம்) இல்லை என்பதால் - நிரு பாதிகமாகவே ஞான ஆனந்த ஸ்வரூபம் என்பதாகும். அவ் விதமே சுருதி ஓதுகிறது. ஸ்வே. 6-16 प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेश: பரமாத்மா பிரதானத்திற்கும், க்ஷேத்ரக்ஞனுகிற ஜீவனுக்கும் பதி; அவர் குணேசர் (குணங்களையும் ஒழுங்குபடுத்துபவர்). தை. நா. 3ல் पतिं विश्वस्याऽऽत्मेश्वरम् - பரமாத்மா ஜகத்தாகிற விஸ்வத்திற்கும், ஜீவர்களாகிற ஆத்மாக்களுக்கும் பதி-ஈஸ் வரர் ஸ்வே. 6-13ல் नित्योनित्यानां चेतनश्चेतनानाम् - பரமாத்மாவே நித்யமானவைகளுள் நித்யர்; சேதனர்களுள் சேதனர் - என்கிற சுருதிகளால் பரமாத்மாவே உத்கிருஷ்டம் எனப் பிரதிபாதிதம்.

இப்போது அப்பேற்பட்ட மேலான பரமாத்மாவுக்கு அசித் வஸ்து எந்த விதமாக பிருஹ்மத்தின் ரூபமாகிறது; அதனுல் பிருஹ்மத்திற்கு நிர்தோஷத்வம் (அசித் வஸ்து சரீரமாக விருப்பதால் - அதன் தோஷங்கள் பரமாத்மாவை ஸ்பர்சிக்கமாட்டாதபடி) ஸித்திக்கிறது - என்பது ஆராயப் படுகிறது. இங்கே கேள்வி கேட்கப்படுகிறது - எப்படி பிருஹ்மத்திற்கு தோஷம் ஏற்படுவதில்லை - 1. இந்த அசேதன வஸ்து பிருஹ்மத்திற்கு ரூபமாகிறது எப்படி பாம்பும் அதன் குண்டலமும் (வளைத்திருப்பதும்) வஸ்து ஒன்றுதானே என்கிற நியாயத்திலா? அல்லது. பிரபா பிரபை இரண்டும் ஒரே ஜாதியாக விருந்து (தர்மத்துடன்) கூடச் சேர்ந்திருப்பதாலே - பிரபாபிரபைக்கு ஆஸ்ரயம் அளிப்பதால் வெளிச்சத்தை உடையது (தர்மி); வெளிச்சம் (கிரணங்களால் ஏற்படும் வெளிச்சம்) (தர்மம்) தர்மி தர்மம் நியாயத்தாலேயா; அல்லது ஜீவன் பரமாத்மாவுக்கு அம்ச மாகிற படியால் - விசேஷண விசேஷ்யதயா - அம்ஸாம்ஸி பாவத்திலா - இம்மூன்றில் எவ்வகை அசித் வஸ்து பிருஹ்மத்திற்குச் சரீரமாகிறது?

நாம் விசேஷண விசேஷ்ய பாவத்தை (அம்ஸாம்ஸிபாவத்தை) அங்கீகரித்து - சரீர. மீ. சூ. 1-4-23ல் प्रकृतिश्च प्रतिज्ञा दृष्टान्तानुपरोधात् - பிருஹ்மம் உபாதான காரணமாகவும் ஆகிறது; இப்படிக் கொண்டால்தான் (ஆத்மாவை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும் - என்கிற) பிரதிக்ஞையும் திருஷ்டாந்தமும் விரோதிக்காமலிருக்கும்; சா. மீ. சூத்ரம். 2-1-15ல் तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः - காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் கார்யமான உலகம் - வேறுபடாமலேயுள்ளது. ஆரம்பணுதி சப்தாதிப்ய:-வாசாரம்பணம் முதலான வேதவாக்யங்களிலிருந்து இது தெரியவருகிறது (விளங்குகிறது; இவைகளால் சூக்ஷ்ம சித் அசித் வஸ்து விசிஷ்ட பிருஹ்மத்திலிருந்து ஸ்தூல சித் அசித் வஸ்து விசிஷ்ட பிருஹ்மம் பரிணுமமடைகிறது - உற்பத்தியாகிறது. இரண்டும் ஒன்றேதான் - வேருகவில்லை காரிய காரண ஐக்யம் ஓதப்படுகிறது அவஸ்தா விசேஷம் - (பிரகிருதி அதிகரணம்- ஆரம்பணுதிகரணங்களின் விஷயங்களாகும்) என்பதாகும்.

எது சரியாகும்? (அதாவது பிரபஞ்சம் பிருஹ்மத்தை விடவேருகவிருக்குமாளுல்; அல்லது பிருஹ்மம் ஒன்றுதான் சரீர ஆத்மபாவத்திஞல் - என்பதாஞல், தோஷம் ஏற்பட பிரஸங்கமில்லை. (இவஞல் ஏகத்வமும் - (அபேதமும்) வேருனதுமான - பிருஹ்மம் வேறு பிரபஞ்சம் வேறு - பேதமும் சொல்லப்படுவதாகும் - இரண்டும் சுருதியிலே ஓதப்பட்டிருக்கின்றன; - अहिकुण्डलवदिति - ஏனெனில் சர்ப்பமும் - அதன் குண்டலமும் என்பதைப்போல பிருஹ்மம் ஒன்றுதான் - (ஏகத்வமேவ) என்பது இந்த சுருதிகளால் காட்டப்படுகிறது. பிரு. உ. 4. 5. 2 ब्रह्मैवेदं सर्वं - பிருஹ்மம் மாத்திரமே இதாக (பிரபஞ்சமாக) விருக்கிறது. சா. உ. 7. 25. 2ல் आत्मैवेदंसर्वं ஆத்மாவே (மாத்திரமே) இதாக (ஜகத்தாக) விருக்கிறது. இந்த அபேதி சுருதிகளால் பிருஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் தாதாத்மியம் (ஒற்றுமை) பேசப்படுகிறது. இதே பிரகாரம் பேதமும் ஓதப்படுகிறது. சா. உ. 6. 3. 1-ல் हन्ताहमिमास्तिस्रो देवताः अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य - வாஸ்தவத்திலே - நானே இந்த தேவதைகளில் (தேஜஸ் அப்பு பிருத்வி) உள் நுழைந்து - நானே ஆத்மாவாக - அதஞல் இந்த ஜீவன்

நானே தான் என்று சொல்லும்படி — திருவிருத்கரணம் பண்ணி - நாம ரூபங்களை விபாகம் செய்வேன் - உண்டாக்கு வேன். இதனால் பேதம் (பிருஹ்மத்திற்கும் பிரபஞ்சத்திற் கும் சொல்லப்படுகிறது. இதனால் अहे कुण्डलभाव இதி. எப்படி பாம்பும் - அதன் வளைதலாகிற குண்டலமாக உள்ள ரூபமும் அதேமாதிரி பாம்பும் அதன் ஸ்வபாவம் மாறுதபடி இருக் கும் போது - (வளைவு இல்லாமல்) நேராக நீளமாக விருக்கும் தன்மையான ரூபமும் இரண்டும்போல; அதுபோல அசேதன வஸ்துக்களும் |பிருஹ்மத்திற்கு ஸம்ஸ்தான விசேஷங்களே யாகும்-அவஸ்தாபேதமேயாகும் ஒரே வஸ்துவுக்கு. அதாவது பாம்பின் நீளம் (வளைதல் இல்லாதபடியிருக்கும் நீளமாக விருப்பது ஒரு அவஸ்தை - காரண தசை ; குண்டலியாக விருத்தல் ஸ்ருஷ்டியாகிற காரிய தசையாகும். காரண தசை பிரளயத்திலும் காரியதசை ஸ்ருஷ்டியினால் யேற்படுவ தாகும்).

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்படுவது - சர்ப்பமும் குண்டலியும் ஒரே வஸ்துவுக்கு இரண்டு நிலைகளைச் சொல்வதாகும். பிரபா பிரபை விஷயத்தில் - ஒரே ஜாதியில் இரண்டு வஸ்துக்கள் (தர்மி தர்மமாகச்) சொல்லப்படுகின்றன-இங்கே வஸ்துவும் அதன் தர்மங்களும் சொல்லக்கூடுமானால் அதுவும் மூன்று வது அபிப்ராயத்தைப்போல விசேஷண விசேஷ்யபாவத் தைப் போல (அம்ஸாம்ஸியாக) ஒப்புக்கொள்ளும்படியாகும். ஜீவனை பிருஹ்மத்திற்கு அம்சமாகச் சொல்லப்படுவதால், ஆனால் அந்த அம்சம் அம்சியாகிற பிருஹ்மத்தை விட்டுத் தனியாக (ஸ்வதந்தரமாக) இருக்கமுடியாது (அப்ரதிக்ஸித்த தர்மமாதலால்). இந்த விஷயம் சா. மீ. **2-3-7** அம்சாதி கரணம் சூத்ரங்களில் (**4-2-5-2**) சொல்லப்பட்டதாகும்) ஆகவே இங்கே அசித் வஸ்துக்களும் ஜீவனைப்போல பிருஹ் மத்தின் அம்சமாகும் என்று சொல்லப்படுகிறது.

(இங்கே பிருஹ்மமே பரிணமித்தால் - பிரும்மத்திற்கு ஜடத்வம் யேற்படலாம் - ஆனால் பிருஹ்மத்திற்கு அவ்வித

மில்லையே. அது இஷ்டப்பட்டால் பரவாயில்லை) அதற்கு அனுகூலத்வமேயாகும்). (பூர்வபக்ஷம் - அம்ச அம்ஸி பாவத்தைச் சொல்கிறுன்)

பூ. சூ. प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात् (3-2-27)

பிரகாசாஸ்ரயவத்வா தேஜஸ்த்வாத் (3-2-27)

வா சப்தம் பூர்வக்ஷத்தை நிராகரிக்கிறது. (அம்ச அம்ஸி பாவம்-அதே அஹிகுண்டலிவத்.) இல்லாதபோனுல்-பிரகாசாஸ்ரயவத்-வெளிச்சத்தின் கிரணங்களுக்கும் - அவை களுக்கு உற்பத்திஸ்தானமாகிற வெளிச்சத்திற்கும் - உள்ள சம்பந்தம் - தர்மிதர்மம் சம்பந்தம் கொண்டதாக விருக்கலாம் (பிரபஞ்சமும் பிருஹ்மமும்) ; ஏனெனில் தேஜஸ்த்வாத் - இரண்டுமே தேஜஸ் என்கிற ஒரே ஜாதியைச் சேர்ந்தாகும் ஒரே திரவியமாயிருப்பதால்.

பிருஹ்ம ஸ்வரூபமே அசித்வஸ்துக்களின் ரூபத்திலே இருக்குமானுல், பேத சுருதிகளை உபதேசிக்கும் வாக்யங் களுக்கும் (அதாவது பிருஹ்மம் வேறு - பிரபஞ்சம் வேறு என்று ஓதுகின்றவையும்);பிருஹ்மம் யாதொரு விகாரத்தை அடையாது (ஸ்வரூபத்திலோ ஸ்வபாவத்திலோ) என்று ஓதும் வாக்யங்களுக்கும் விரோதம் யேற்படும் - பாதிதம் யேற்படும் (பிருஹ்மத்திற்கு அபரிணுமித்வம் சொல்வ தாலும் கூட - பாதிதம் உண்டாகும். சரீரத்வார பிருஹ்மம் பரிணுமமடைகிறது. தானே ஸ்வரூபமாகவே பிருஹ்மம் பரிணும மடைவதில்லை.) ஆகையால் எப்படி தேஜஸ் விஷயத்திலே ஏகத்வம் (பிரபா - பிரபைக்கு ஆஸ்ர யம் அளித்தல் - இத்யாதிகளால் தர்மிதர்மம்) - பின்னமாக இரண்டுக்கும் வஸ்துவினுல் ஒற்றுமை (தாதாத்மியம்) ஏற்படு வது போல, அதேமாதிரி இங்கே கூட அசித் வஸ்துக் களடங்கிய பிரபஞ்சம் பிருஹ்மத்தின் ரூபமேயாகும் என்று அர்த்தம். ஏனெனில் இரண்டும் ஒரே ஜாதியில் உள்ளவை. (இங்கு சொல்லப்படுவது - பிரபாபிரபை உதாரணத்தில் சுருதியுடன் ஒற்றுமை பேசப்படுகிறது. வஸ்து ஒன்று - ஒரே ஜாதி - அதனுல் பிருஹ்மத்திற்கும் பிரபஞ்சத்திற்கு

முள்ள பேதத்தைக் காட்டுகிறது. மேலும் தேஜஸ் எவ் விதம் ஒளிக்கு மூலமாக - மாறுதலை அடையாதோ - அதே போல பிருஹ்மமும் நிர்விகாரம்; பிரபஞ்சம் பிரபையைப் (சூரியக்ரணங்களைப்) போல மாறுதல்களை அடையக்கூடும். இது சுருதிக்கு ஸம்மதம்.) (இதுவும் பூர்வபக்ஷம்).

ஸூ. சூத்ரம் पूर्ववद्वा (3-2-28)

பூர்வவத்வா (3-2-28)

वा என்கிற சப்தம் இரண்டு பூர்வபக்ஷக் கருத்துக்களை தள்ளுகிறது. ஒரே ஒரு திரவியமாகிற வஸ்துவுக்கு இரண்டு அவஸ்தா விசேஷங்களுடன் சம்பந்தம் உண்டு என்றாலும், (அதனால் இவ்விதம் அபிப்ராயம் கொள்ளப்படு மாகில்) பிருஹ்ம ஸ்வரூபமே அசேதன திரவிய ரூபத்தை அடைகிறது (பரிணமிக்கிறது) என்றால் - மேலே சொல்லப் பட்ட தோஷங்களிலிருந்து (விகாரம் முதலிய தோஷங்களி லிருந்து) விடுதலையில்லை - அதே கஷ்டங்கள் தொடரும். சரி - பிரபா பிரபை (பிரபைக்கு ஆஸ்ரயம் அளிக்கும் பிரபா தர்மிதர்மம்) சம்பந்தம் சொல்லப்பட்டால் - அசித் வஸ்துக் களுக்கு பிருஹ்மம் ஆஸ்ரயம் அளிக்கிறது - பொதுவாக (ஸாமாந்யமாக) ஒரே ஜாதியாக விருக்கும் தன்மையினால் (அசித் பிருஹ்மணோ பிருஹ்மத்வ ஜாதி யோகமாத்ரம் - கேவலம் சம்பந்தமாத்ரமேவ என்று சொல்லப்படுமானால், அவ்விதமானால் அஸ்வத்வம் (குதிரை) கோத்வம் (பசு) இரண்டும் ஒரே விலங்கு ஜாதிதானே - என்றால்-அதேமாதிரி பரமாத்மாவுக்கும்-சேதன (ஜீவர்களுக்கும்) அசேதனங்களுக் கும் பிருஹ்மணத்வம் என்கிற ஜாதி தர்மம் பொதுவாக (ஸாமாந் யேந) ஒரே மாதிரியாக விருக்கும்; கூறப்படலாம்; அப்படியானால் எல்லா சுருதி ஸ்மிருதி விஷயங்களுக்கு விரோதமாகும். (இங்கு சொல்லப்படுவது பிருஹ்மத்வ ஜாதி- அசித்திற்கும் பிருஹ்மத்திற்கும் சேர்க்கை சம்பந்தத்தினால் பிருஹ்மத்வ ஜாதி எனச் சொல்லப்படுவதாகும். சுருத பிரகாசிகை - பிருஹ்ம ஜாதி என்று சொல்கிறது. பிருஹ் மத்வம் அசித் வஸ்துவிற்கு பொதுவான ஜாதி தர்மமாக

விருக்கலாம்; ஜீவன் - ஈஸ்வரன் - பிருஹ்மம்; இந்த அபிப் ராயத்தில், பரமாத்மாவை பிரபஞ்சத்துடன் ஒன்ருகவிருக் கிருர் (தாதாத்மியம்) சொல்ல முடியாது; இன்ெனுரு அபிப் ராயம் - ஜீவன் - அசித் - ஈஸ்வரன் இம்மூன்றும் ஒரே ஜாதியாக - பிருஹ்மம் ஜாதியாக விருக்கலாம். இப்படிச் சொன்ருல், ஈஸ்வரன் ஜகத்திற்குக் காரணமாக முடியாது.) (குதிரை-கோத்வம் போல).

**पूर्ववदेव** – நாம் ஏற்கனவே ஜீவனைப் பற்றிச் சொல்லிய படியே-அது இருக்கிறது. அதாவது சாரீ. மீ. உ. 2. 3. 4-ல் **"अंशो नानाव्यपदेशात्"** ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமாயிருப்ப வனே ; சில சுருதிகளில் ஜீவன் பிருஹ்மத்தைக் காட்டி லும் வேறுபட்டவன் என்று உபதேசிக்கையாலும்; இன்னும் சில சுருதிகளில் வேறுவிதமாகவும் - அதாவது ஜீவன் பிருஹ்மத்தோடு ஒன்று பட்டவனுகவும் (**तत्वमसि**) உபதேசிக் கையாலே ; சா. மீ. சூ. உ. 3. 45 - **प्रकाशादिवत्तु नैवं परः** -ஜீவன் (ஒளி முதலானவை - மணி போன்றவற்றுக்கும் - போல - பரமாத்மாவுக்கு அம்ஸம் எனப்படுகிருன் - பரமாத்மா ஜீவனைப் போன்றவனல்ல (ஸ்வரூபஸ்வபாவங்களில்). இந்த விடங்களில் ஜீவனை பரமாத்மாவிற்கு விட்டுப் பிரிக்க முடியாத சரீர ரூபமான விசேஷணமாயிருப்பவனுகையால் - அப்ரதிக் ஸித்த தர்மமாக) - அவனை பிருஹ்மத்தின் அம்சம் விசேஷண விசேஷ்யாம் ஸமாக விருப்பினும், விசேஷ்யங் களின் ஸ்வரூப ஸ்வபாவங்கள் விசேஷண ஸ்வரூப ஸ்வபிர வங்களைக் காட்டிலும் வேறுப்பட்டிருப்பது போலே - அம்ஸ மான ஜீவனின் ஸ்வரூப ஸ்வபாவங்களைக் காட்டிலும் அம்ஸியான பரமாத்மாவின் ஸ்வரூப ஸ்வபாவங்களும் வேறுபட்டிருக்கலாம். ஆகவே ஜீவனின் தோஷங்கள்-சரீர தோஷங்கள் ஆத்மாவைப் பற்ருதோ - அதுபோல பரமாத் மாவைச் சேராது. ஜீவன் ஜீவன் தான். பரமாத்மா ஸர்வ க்ஞனுய் - ஸத்ய ஸங்கல்பனுய் - தோஷங்களால் பற்றப் படாதவனுகவுமிருக்கிருன். ஆகவே அசேதன வஸ்து, ஜீவனைப் போலவே, பிருஹ்மத்தின் அம்ஸமாகும், அது தனியாக (ஸ்வதந்திரமாக) பரமாத்மாவை விட்டு இருக்க

முடியாது - விசேஷண விசேஷ்ய பாவத்தாலே; பிருஹ்மத்திற்கு விசேஷணமாக விருப்பதாலே, அசித் வஸ்து பிருஹ்ம அம்ஸமாகும். எப்போது விசிஷ்ட வஸ்துவுக்கு அபேதம் ஏகதேசமாக வ்யவஹரிக்கப்படுகிறதோ அப்போது அபேதம் முக்யார்த்தமாக நிர்வஹிக்கப்படுகிறது - ஏனெனில் விசேஷண விசேஷ்யங்களின் ஸ்வரூப ஸ்வபாவ பேதங்களாகிற பேத வ்யவஹாரம் முக்ய அர்த்தத்தில் சொல்லப்படும். இப்படி முக்யார்த்தம் சொல்வதால், பிருஹ்மத்திற்கு நிர் தோஷத்வம் (தோஷமின்மை - பற்றப்படாமலிருப்பது) ரக்ஷிக்கப்பட்டதாகும்.

இதே பிரகாரம், பிரகாசமுள்ள வஸ்துக்கள் (சூரியன்—மணி - அதனுடைய குணமாகிற பிரபை (பிரகாசம்) ஜாதி — ஜாதியின் தர்மங்கள் - சரீரம் அதன் தர்மங்கள் விசேஷண விசேஷ்ய பாவ சம்பந்தம் கொண்டிருப்பதால் - பிரகாசம், ஜாதி, குணம், சரீரம் - இவை மணி (ரத்னம்) வ்யக்தி, குணீ (குணத்தை உடையவன்) ஜீவன் (ஆத்மா:) ஆகியவைகளுக்கு தர்மங்களாக விருக்கிறபடியால் (விசேஷண விசேஷ்ய பாவத்தாலே) அம்ஸமாகும்; அதாவது அப்ரதிக் ஸித்த லக்ஷண விசேஷணமாகவிருப்பதாலே - இங்கேயும் ஜிவனும், அசித் வஸ்துவும் பிருஹ்மத்தின் அம்சங்களாகும். குண குணீ சம்பந்தத்தால் அப்ரதிக் ஸித்த பாவமடைகிறது என்பதாகும். (அதனால் தாதாத்மியம் சொல்லப்படும் போது - பிருஹ்மமே பிரகிருதியாகலாம் - அந்த தோஷம் தள்ளப்படுகிறது அடுத்த சூத்ரத்தில்.

சூத்ரம். प्रतिषेधाच्च (3. 2. 29)

ப்ரதிஷேதாச்ச (3. 2. 29)

ஆகவே அது அவ்விதமே-ஏனெனில் (அப்படிச் சொல்லப்படுமானல்-அசித் வஸ்துக்களின் தோஷங்கள்) பிருஹ்ம விஷயத்தில் நிஷேதம் செய்யப்படுகின்றன-(சுருதியிலுலே).

பிரு. உ. 6-4-25ல் स वा एष महान् अज आत्माऽजरोऽमरः - மேல் சொல்லப்பட்ட புருஷன் - மஹாந் ஆத்மா மிகப்பெரியவன்); பிறப்பில்லாதவன் ஜரையற்றவன்; சா. உ. 8-1-5ல் नास्य जरयैतज्जीर्यति — அவன் தன் சரீரவயோதிகத்திஞல் வயோதிகமாக ஆவதில்லை - இந்த சுருதிகளில் பிருஹ்மத்திற்கு அசித் வஸ்துக்களின் குணங்கள் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன· விசேஷண விசேஷ்யசம்பந்தத்தாலே - அம்ச அம்ஸிபாவசம்பந்தமாக, அசித் வஸ்துவும் பிருஹ்மத்துடன் இருக்கிறது - என்கிற அர்த்தமாகும். ஆகையால் சூக்ஷ்ம சித் அசித் வஸ்து விசிஷ்ட காரணபூத பிருஹ்மமே, ஸ்தூல சித் அசித் விசிஷ்ட காரிய பூதபிருஹ்மம் தான் ஆகும். அதாவது காரணத்திஞல் காரியத்தின் ஒற்றுமை (அநந்யத்வம்) காரிய காரண ஐக்யம் பேசப்படுகிறது. இதஞல் பிரதிக்ஞையும் நிறை வேறுகிறது-எங்கனமெனில் காரண பூத பிருஹ்ம விக்ஞானத்திஞல், காரியங்களும் அறியப்படுகின்றன - ஆகவே நாம் சொல்லிய அனைத்தும் (ஸர்வம் உபபந்நம் (பொருத்தமாகும் - நிரூபிக்கப்பட்டது) பிருஹ்மத்திற்கு நிர்தோஷத்வம் ரக்ஷிதம் (காப்பாற்றப்பட்டது). இவ்விதமாக பிருஹ்மம் நிர்தோஷமாக விருப்பதாலே (யாதொரு தோஷங்கள் ரஹிதமான படியாலே) அதே பிரகாரம் பல கல்யாண குணங்களையும் கொண்டிருப்பதால், பிருஹ்மத்திற்கு உபயலிங்கத்வமும் ஸ்தாபிதமாகும்.

## பராதி அதிகரணம் (3. 2. 7)

ஸூ. சூத்ரம். परमतः सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्यः (3-2-30)

பரமத: ஸேதூன்மானஸம்பந்தபேதவ்யபதேசேப்ய: (3-2-30)

பரமத:—(அத: பரம்) அதஞல் பரமாத்மாவைவிட மேலானவன் ஒருவன் இருக்கிருன்-ஏனெனில் ஸேது - உன்மாந - ஸம்பந்தம் - (ஓதப்படுவதால்) - அதாவது பரமாத்மா விஷயத்தில் ஸேதுவாக (அணை - ஆதாரம்) விருக்கிறது; அதற்கு ஒரு அளவு குறிக்கப்பட்டிருக்கிறது, அது பாலமாக விருப்பதால் - அது இன்ஞெரு மேலான வஸ்துவினிடம்

அழைத்துச் செல்லும் ஸாதனமாக விருக்கிறது, மேலும் பேதங்கள், அடையும் பொருள் (ப்ராபகம்-பிராப்யம்) அடையப்படுவது என்பதற்கு வ்யபதேசேப்ய: - ஓதப்படுவதாலே (சுருதிகளிலே).

இங்கே ஆபாஸமான காரணங்களின் உதவிகொண்டு ஒரு சங்கை எழுப்பப்படுகிறது - இந்த பரமாத்மாவைவிட மேலான தத்வம் ஒன்று இருக்கிறதா ? எப்படிப்பட்ட பரமாத்மா)-ஸர்வத்துக்கும் மேலானவர்; ஜகத்தின் நிமித்த உபாதான காரணமாவர்; அத்தகையபரம காரணத்திலுலே அந்த சந்தேகம் தூரத்தள்ளப்படுகிறது - (எதற்க்காக?) அதன் நோக்கம் - உபாஸிக்கப்படும் பொருளின் விஷயத்திலே நிர்தோஷத்வம் - அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணுகரத்வம் - இரண்டையும் காப்பாற்ற வேண்டியதாலே - (அந்த சந்தேகம் போக்கடிக்கப்பட்டு - அதனுல் பரமாத்மாவே மேலானவன் என்பது ஸ்தாபிதம்).

சங்கை இப்படி எழுகிறது - இந்த பரபிருஹ்மம் உபய லிங்கம் எனச் சொல்லப்படுமானுல் - இதனைவிட நிகில ஜகத் காரணத்திருலே, இன்னொரு தத்வம் ஒன்று இருக்கிறது - எப்படி ? (அதற்கு சமாதானமாக சா. உ. 8.4.1-ல் अथ य आत्मा स सेतुर्विधृति: - இப்போது, எவன் ஆத்மாவாக விருக்கிருனே அவன் ஒரு பாலமாக-ஆதாரமாகவிருக்கிருன். என்கிறபடியால், இதனுல் மேலான பரமபுருஷன்-ஸேதுத்வம் பாலமாக அமைகிருன் என்று ஓதப்படுகிறது. ஸேது சப்தத்திற்கு லோகத்திலே வழங்கப்படும் அர்த்தம் - அது ஒருவனை அக்கரை சேர்ப்பதற்கு பாலமாகவிருக்கிறது. அதனுல் அந்த பிருஹ்மமாகிற ஸேதுவை (பாலத்தை) விட இன்னொரு மேலான தத்வம் அடையப்பட வேண்டியது. (பிராப்தவ்யம ஸ்தீதி) - என்பதாக மேலான ஒன்று இருக்கிறது எனத் தோன்றும். அப்படியே சுருதியும் ஓதுகிறது. சா. உ. 9. 4. 1—ல் एतं सेतुं तीर्त्वाऽन्धस्सन् अनन्धो भवति - இந்த பாலத்தை கடந்த பிறகு, குருடனுகவிருக்கும் ஒருவன் குருடன் இல்லாமல ஆகிவிடுகிருன்; இதனுல் சொல்லப்படு

கிறது - இந்த (ஸேதுவாகிற) பிருஹ்மம் கடக்கப்படவேண்டியது - அதனால் அடையப்படவேண்டிய வஸ்து வேறு ஒன்று இருக்கிறது. अतस्चान्यत् प्राप्यमस्ति. (இது பூர்வபக்ஷம்-உத்தீர்ண பிருஹ்மவாதிகள் சொல்வதாகும்).

उन्मानव्यपदेशात् - அளவுக்கு உட்படுத்திச் சொல்வது - அது பிருஹ்ம விஷயத்தில் சொல்லப்படுகிறது - उन्मितं - परिमितं - பரமாத்மா அளக்கப்பட்டு அவன் ஒரு குறிப்பிட்ட அளவில் இருக்கிறான் - इदंपरं ब्रह्म - என்று சுருதி சொல்வதால். சா. உ. 4. 5. 8-ல் ஒரு அளவு உபதேசிக்கப்படுகிறது - चतुष्पाद ब्रह्म षोडशकलम् என்கிற உன்மான (அளவுடன் கூடிய) வ்யபதேசமிருக்கிறது. அந்த பிருஹ்மத்திற்கு ஷோடச கலைகள் உண்டு (பதினாறு கலைகள்) நான்கு பாதங்கள்.

**விளக்கம்:—**

ஷோடச கல பிருஹ்மவித்யை - சா. உ.; சத்யகாமன் தன் அன்னையிடம் தனது கோத்ரத்தைவினவ - அவள் "நான் அறியேன்-பல நாட்கள் பெரியோர்களுக்கு பரிசர்யை செய்து - உழைத்த வண்ணமேயிருந்து - யௌவனத்தில் உன்னைப் பெற்றேன் உன்தகப்பன் இளம் வயதில் இறந்து விட்டபடியால் - நான் அவருடைய கோத்ரத்தை வினவவில்லை" என்றனள். அவன் கௌதம ஹாரித்ருமரிடம் சென்று - இதைச்சொல்லி-வித்யாப்யாஸம் சொல்லிவைக்கும்படி சொன்னான் - அவரும் அவனை உண்மையைச் சொன்னதற்க்காகப் புகழ்ந்து - அவனிடம் நானூறு பசுக்களை ஒப்பிவித்து-ஆயிரம் பசுக்கள் ஆகும்வரை வளர்த்துவா என்றனர் (ஆசார்யர்.)

பல வருஷங்கள் சென்றன - அவைகள் ஆயிரம் ஆக, அதில் ஒரு காளை அவனைப் பார்த்து - நீ எங்களை ஆசார்யனிடத்தில் சேர்த்துவிடு, உனக்கு இங்கே பிருஹ்மத்தின் பாதம் ஒன்றைச் சொல்கிறேன் - என்று சொல்லி "பிரகாசவான்" என்ற ஒருபாதத்தை உபதேசித்தது-அதற்கு-நான்கு

அவயவங்களைக் கூறி-"இனி அக்னி ஒருபாதம் உனக்குச் சொல்லும்" என்றது. மறுநாள் அக்னி "அநந்தவான்" என்னும் ஒரு பாதத்தையும் அதன் நான்கு பாகங்களையும் உபதேசித்தது. இன்னொரு நாள் அன்னத்திடம் "ஜ்யோத்ஷ் மாந்" என்கிற பாதத்தை அதன் நாலு அவயவங்களோடு அறிந்தான். அதற்கு மறுநாள் ஒரு நீர் பறவையிடமிருந்து "ஆயதநவாந்" என்ற பாதத்தை அவயவங்களோடு கற்றான். ஆசார்யர் அவனுடைய முகத்தின் ஒளியைக் கண்டு-'உனக்கு யார் உபதேசம் செய்தனர்?' என்று கேட்க-அவன் உண்மையை உரைத்தான். ஆசார்யர் திருப்தி யடைந்து - அந்த வித்யை முழுமையையும் உபதேசித்தார்.) (இங்கே ஷோடக் கலைகள்-நான்கு பாதங்கள் பிருஹ்மத்தைக் குறிக்கும். நான்குதிக்குக்கள் நான்கு பாதங்களாகும். இந்த வ்யபதேசம் அளவைக் காட்டியது மட்டுமன்றி - அந்த ஸேதுவினால் (பாலத்தினால்) அடையப்படவேண்டியது - அளவிடமுடியாதபடி ஒரு தத்வம் அடையப்படவேண்டிய தாக ஓதப்படுகிறது. அதுபோல ஸேதுவிற்கும் அந்த ஸேதுவை உடையவருக்கும் ஒரு சம்பந்தம் ஓதப்படுகிறது ; அதில் प्रापक प्राप्यत्व लक्षणं காணப்படுகிறது (அடைகிறவன் - அடையப்படும் வஸ்துவின் லக்ஷணம் (சம்பந்தம்) ஓதப்படு கிறது). ஸ்வே. உ. 6-19ல் अमृतस्य परं सेतुं दग्धेन्धनमिवानलम्- அவரே அம்ருதத்வத்திற்கு மேலான ஸேதுவாக (பாலமாக) விருக்கிறார் ; அவர் விறகை அக்னி நன்கு எரித்தவிட்ட பின்பு எப்படி ஜ்வலிக்குமோ - அதுபோல விருக்கிறார்" - என்றது. முண். 2-2-5ல் अमृतस्यैषसेतुः (அவரே மோக்ஷத்திற்கு பாலமாக விருக்கிறார்). ஆகவே - மேலான - வஸ்துவுக்கு மேலான இன்னொரு வஸ்துவிருக்கிறது. (परात् परमस्ति)

இந்த மேலானவஸ்து-பராத்மேலான பரமாகவிருப்பது-அது வேறாகவும் இந்த சுருதிகளிலே காட்டப்படுகிறது. (भेदेन च परात्परं व्यपदिश्यते-) முண். 3-2-8ல் परात्परं पुरुषमुपैति (அவன் - அறிவாளி) - மேலான புருஷனை அடைகிறான் - அந்த மேலான புருஷன் எல்லாவற்றிலும் மேலானவனை [illegible] ([illegible]) விருக்கிறான் - (இதனால்

பரம் வேறானவனாகக் காட்டுகிறது. தை நா. 1-9ல் **परात्परं यन्महतो महान्तम्**-பரமாத்மா-அவன் மேலானவர்களுள் மேலானவன்; பெரியோர்களுள் மிகப்பெரியோன்; மீண்டும் ஸ்வே. உ. 3-9ல் **तेनेदं पूर्णं पुरुषेन सर्वं । ततो यदुत्तरतरं तदरूपमनामयम्** - இந்த ஸம்பூர்ண உலகம் அந்த புருஷனால் முழுதும் நிரம்பப்பட்டிருக்கிறது-அந்த புருஷனைவிட எது மிகப்பெரியதாக விருக்குமோ, அதற்கு ரூபமில்லை - நாமமும் இல்லை. அநாமயம் - பாபபுண்ய கர்மாக்களால் பற்றப்படாதவர். ஆகையால் இந்த ஹேதுக்களால் பரஸ்மாத் பிருஹ்மத்தைவிட பரம் (மேலானது) ஒன்று இருக்கிறது எனத் தெரியவருகிறது. (பூர்வபக்ஷம்).

இப்படிச் சொல்லப்படுமானால், நாம்பதில் கூறுகிறோம்.

சூத்ரம். **सामान्यात्तु** (3. 2. 31)

ஸாமாந்யாத்து (3. 2. 31)

ஸாமாந்யாத்-து—(அணைக்கு) ஸேதுவுக்கு ஸாத்ருஸ்யமாக விருப்பதைக் கொண்டு - இவ்விதம் உபதேசிக்கப்பட்டது. து - பரமாத்மாவை விட மேலான தத்வம் வேறு ஒன்றுமில்லை.

து சப்தம் பூர்வபக்ஷியின் கருத்தைத் தள்ளுகிறது. பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறு ஒன்று இருப்பதாகச் சொல்வது பொருந்தாது. வ்யாவர்த்தயதி. மேலே சொல்லப்பட்டது - அதாவது மேலானதற்கும் மேலாக இன்னொரு தத்வம் இருக்கிறது என்பது சரியாகாது. ஏனெனில் ஸேது வ்யபதேசமிருப்பதாலே. (ஸேது சப்தம் சிம்ம சப்தத்தைப் போல கௌணம்). இங்கே அடையவேண்டியது ஒன்று இருக்கிறது என்பதற்க்காக பிருஹ்மத்தை ஸேது என்று அழைக்கப்படவில்லை. **एषां लोकानामसंभेदाय** - சா. உ. 8. 4. 1 இந்த லோகங்கள் ஒன்றாகாமலிருப்பதற்க்காக - அதாவது அதனால் உண்டாகும் ஸங்கிரமம் - கலக்கத்தைத் தவிர்ப்பதற்க்காக எனச் சுருதி சொல்வதால், ஸேது (அணை) (வெள்ளத்தை) தடுப்பதுபோல ஸர்வலோக சங்கரம் (ஒன்றாகிவிடு

தலைத்) தடுக்கிறதாக - வ்யவஸ்தாபனம் செய்வதாகவிருக் கிறது. இதனால் ஸாத்ருஸ்யம் பிருஹ்மத்துக்கும் அணைக்கும் இருக்கிறது. ஸேது என்கிறபதம் ''ஸிஞோதி'' என்கிற தாது விலிருந்து வருகிறது ; இதற்கு அர்த்தம் கட்டுப்படுத்தி (बध्नोति) ஒன்றுக்குகிறது - பிருஹ்மம் தன்னிடம் சித் அசித் வஸ்துக்கள் ஒன்று சேருவதால் உண்டாகும் ஸங்கீர்ணம் (கலக்கம் - தடுமாற்றம்) வராமல் பிருஹ்மத்தை வ்யவஸ் தாபனம் செய்கிறது, அதனால் - பிருஹ்மத்தை ஸேது என்று சொல்லலாம் என ஆகிறது. ஸேதுவுக்கு (அணைக்கு) ஒத் திருப்பதால் - பிருஹ்மத்திற்குப் பிரயோகம் பொருத்தமாக லாம். एतं सेतुं तीर्त्वा - இந்தவிதமாக ஸேதுவை (அணையைத்) தாண்டி ; இதனால் கடக்கிறான் (तरतिश्च) என்கிற அர்த்தம் (எதுபோல வென்றால்) यथा वेदान्तं तरति (வேதாந்தசாஸ்திரத் தைப் படித்துக் கடக்கிறான் (தாண்டுகிறான் - அக்கரையை அடைகிறான்) என்பதைப்போல கௌணமாகும்-பிராப்தியைக் குறிக்கிற வசனமாகும். (பிரகரணத்தை ஒட்டி பிரஸித்த அர்த்தத்தை மாற்றி - அர்த்தம் கொள்ள வேண்டியது என்பதாகும் – (ஸேது – பாலம் இதுதான் பிரஸித்த அர்த்தம்).

சூத்ரம். बुद्ध्यर्थः पादवत् (3. 2. 32)

புத்யர்த்த: பாதவத் (3. 2. 32)

பிருஹ்மத்துக்கு (ஷோடசகலாவித்யையில்) சொல்லப் பட்ட அளவு (உந்மாந வ்யபதேசம்) - புத்யர்த்த: - உபா ஸனைக்கு வேண்டியே சொல்லப்பட்டதாகும். பாதவத் - அத்யாத்மத்தில் மனத்தையும் அதிதைவதத்தில் ஆகாசத்தை யும் பிருஹ்மத்தினது ப்ரதீகங்களாகச் சொல்லி, வாக் மனஸ் சக்ஷுஸ் ச்ரோத்ரம் இந்த நான்கும் மனத்தின் பாதங்கள் என்றும், அக்னிவாயு சூர்யன் திக்கு இவைகள் ஆகாசத்தின் பாதங்கள் என்று கற்பிக்கப்படுவது எவ்விதமோ-அதுபோல இங்கேயும் - (உந்மானம்- அளவு).

உந்மாநம் சொல்லியிருப்பதிலிருந்து பிருஹ்மத்துக்கு வேறுபட்டது மேலானதாக ஒன்று எது சொல்லப்பட்டதோ,

அது இங்கு விஷயமாகிறது. உந்மாநம் சொல்வதால் பிருஹ்மத்தைவிட வேறு பொருள் மேலானது அல்ல; ஆனால் நமது புத்திக்கு வேண்டியே - உபாஸனைக்காக சொல்லப்பட்டது.

எந்த உந்மாநம் (பிருஹ்ம விஷயத்தில் சொல்லப்பட்டதோ) - चतुष्पाद ब्रह्म - षोडशकलम् - பிருஹ்மத்திற்கு நான்கு பாதங்கள் இருக்கின்றன - பதினாறு கலைகள். (வாக் மனம் பிராணன் சக்ஷுஸ்-சுரோத்ரம் முதலியவை மனத்தின் சதுஷ்பாதம் என்பது சுருதி ஸித்தம்; அதுபோல அக்னி வாயு சூரியன் திக்கு இவை ஆகாசத்தின் பாதங்கள்). (அதாவது எளிதாக புத்தியில் ஸ்தாபிப்பதற்க்காக, மனத்தை சம்பந்தித்த நான்கு பாதங்களாகவும், அக்னி முதலியவை ஆகாசத்தை சம்பந்தித்த நான்கு பாதங்களாகவும்-தியானத்திற்காக கற்பிக்கப்பட்டது).

புரு. ஆ. पादोऽस्य विश्वाभूतानि - அந்த பரமாத்மாவின் ஒரு பாதம் எல்லா பிராணிகளாகவிருக்கிறது - இங்கே உந்மான வ்யபதேசம் - அளவு சொல்லப்பட்டது - உபாஸனைக்காக. தை. ஆ. 1 - सत्यं ज्ञानं अनन्तम् ब्रह्म - பிருஹ்மம் ஸத்யம் - ஞான ஆனந்தமாக (ஸ்வரூபமாக - குணமாகவிருக்கிறது-இதனால் ஜகத் காரணமாக ஓதப்படும் பிருஹ்மத்திற்கு அளவிட முடியாத தன்மை (அபரிச்சின்ன த்வம் சொல்லப்படுகிற தாலே - குறிப்பிட்ட அளவுடன் பிருஹ்மம் இருப்பது அஸம்பவம். பரமாத்மாவுக்கே சுருதிகள் ஜகத் காரணத்வத்தை உபதேசிக்கின்றன. தை. ஆன. 1 - तस्माद्वा एतस्मा - दात्मन आकाशः संभूतः - இந்த பரமாத்மாவிடமிருந்தே (ஆத்மா) ஆகாசம் உண்டாயிற்று. தை. ஆ. 6 - सोऽकामयत बहुस्यां प्रजायेयेति - அது இச்சித்தது - நான் பலவாக ஆவேன்-பலவாகப் பிறப்பேன். அதேபோல இந்த சுருதிகளிலும் சா. உ. 3. 8. 2 - वाक्पादः प्राणः पादः चक्षुः पादः श्रोत्रं पादः வாக்கு, பிர்ராணன் (மனம்) சக்ஷுஸ் – சுரோத்ரம் - ஒவ்வொன்றும் ஒவ்வொருபாதம் இதில் பிருஹ்மத்திற்கு (பிருஹ்மனோ - மனஸோ) வாக்கு முதலியவை பாதமாக விருக்கிறது

என்கிற வ்யபதேசம் உபாஸனார்த்தமாகும். இந்த வ்யப தேசம் இங்கே கூட அதேமாதிரி விளங்குகிறது.

(புருஷ சூக்தத்தில் எல்லாப்பிராணிகளும் புருஷனாகிற பரமாத்மாவுக்கு ஒரு பாதமாக ஆகிறது - என்பதால் பரமாத்மாவின் பெருமை பேசப்படுகிறது-இங்கு தியான அங்கமாக யாதுமில்லை 2) சுரோத்ரம் ஒரு பாதம், மனஸ் ஒரு பாதம் என்று சொல்லப்படுகிறது) இவ்விதமாக பரமாத் மாவுக்கு - அதாவது அளவிடப்படமுடியாதபடி மகிமைகள் பெற்றவன் - அத்தகைய பரமாத்மாவுக்கு உபாஸனார்த்தம் எப்படி அளவுடன் கூடிய ரூபம் (உங்மாற) இருக்கும்-அஸம் பவமாச்சுதே. என்கிற ஆட்சேபம் எழ—

இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் பதிலளிக்கிறார்

சூ. स्थानविशेषात् प्रकाशादिवत् (3-2-33)

*ஸ்தானவிசேஷாத் ப்ரகாஸாதிவத் (3-2-33)*

பிரகா ஸாதி வத் - பிரகாஸாதிகளுக்குப்போல ஸ்தான விசேஷாத் - வாக்கு மனம் இத்யாதிகளால் அறிவிக்கப் படும் ஸ்தான விசேஷத்தை ஒட்டி-பிருஹ்மத்தின் உபாஸன மும் செய்யப்படுகிறது.

ஏற்கனவே சொல்லப்பட்ட வாக்கு - மனம் - சக்ஷுஸ் ச்ரோத்ரம் இத்யாதி ஸ்தானங்களில் பிருஹ்மம் விசேஷ ரூபமான உபாதி பேதத்தினாலே - அதாவது உபாதியாகிற ஸ்தான விசேஷத்தை ஒட்டி - செய்யப்படும் பிருஹ்ம உபா ஸனம் சரியாகும்.

அந்த அந்தஸ்தானங்களோடு சம்பந்தம் கொண்டதால் உபாஸனம் ஒரு குறிப்பிடும்படி அளவுடன் கூடியதாக - ஸம்பந்தம் வ்யபதேசமிருப்பதால்-பிருஹ்மமும் அதே அளவு டன் தியானிக்கப்படுவதாகவும் இருக்கிறது ; எப்படி-பிரகா சாதிவத் - ஆகாஸாதிவத் சந்திர சூர்யனுடையதாகவோ -

ஆகாசம் முதலியவற்றிற்கு - உபாதியின் சேர்க்கையினுலேயே, இந்த சம்பந்தத்தாலே, ஜன்னல்கள் - பானைகள் முதலியவிடங்களினுல் அறியப்படும் பேதஸ்தானங்கள் மனத்திற்கு அளவுபட்டதாக (பரிச்சின்னமாக) அனுஸந்தானத்திற்க்காக ஏற்படுவதாக (உதவுகிறதாக) இருக்கின்றனவோ - அது போல - இது தான் அர்த்தம். (அதாவது ஸ்வரூபத்திலே பரமாத்மா அளவுபட்டவனல்ல. உபாஸனு நிமித்தம் அந்த அந்த ஸ்தானங்களின் சம்பந்தத்திலுல் பரமாத்மா அளவுபட்டவனுகிறுன் என்பது உபாஸனு நிமித்தம் யேற்படுவது - உபாஸகனுக்கு உதவிபண்ணுவதற்காக; உபாஸகனை அனுக்ரஹிக்கும் பொருட்டு உபாதியாகிற ஸ்தானத்தை ஒட்டி பரமாத்மா அளவுபட்டவனுகிறுன் என்கிற அர்த்தம்).

சூ. उपपत्तेश्च (3-2-34)

உபபத்தேஸ்ச (3-2-34)

உபபத்தேஸ்ச - போதிய யுக்தியிருப்பதாலும் அடையப் படவேண்டிய வஸ்துவே அடைவதற்கு தானே உபாய ஸாதனமாக அமைகிறது.

மேலே சொல்லப்பட்டது-முண். உ. 2-2-5 अमृतस्यैष सेतुः பகவானே அம்ருதத்வத்திற்கு ஸேதுவாக (பாலமாக) விருக்கிறுர் - இதனுல் ப்ராப்ய ப்ராபக ஸம்பந்த வ்யபதேச மிருக்கிறதால் - அடைவிக்கும் ஸாதனத்தைவிட, அடையப் படும் பொருள் பெரிதாக விருக்கிறது - என்று சொல்லப்படுமாகில் நாம் அதில்லை - சரியில்லை என்போம். அடையப்படுபவனுகிற பரமபுருஷன் - அவனேதான் அதை அடையவிக்கும் உபாயமாக (ஸாதனமாக) விருக்கிறுன் - (அதாவது உபாயமும் பலனும் அவனே யாகிறுன்). (स्वप्राप्तौ स्वस्यैवोपायत्वोपपत्तेः) முண். உ. 3-1-3ல்

नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुनाश्रुतेन ।
यमैवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम् ॥

பரமாத்மா பிரவசனத்திஞலோ - மனனத்திஞலோ மேதையிஞலோ சிரவணத்திஞலோ - (பஹூநா ஸ்ருதேந) - அவனைப் பற்றி அடிக்கடி கேட்பதாலே - அடையப்படுகிற தில்லை; எவனை அந்த பரமாத்மாவே பொறுக்கி எடுக்கிருனே, அவனுலேதான் பரமாத்மா அடையப்படுகிருன்—(ப்ரியதமோ வரணீயோ பவதி - எவனுக்குப் பகவானிடம் அசாதாரண பக்தியிருக்கிறதோ - அவன்தான் பரமாத்மாவை அடை கிருன்) இதனுல் சுருதி அநன்ய உபாயத்வத்தை - அவனை அடைவதத்கு அவனைத்தவிர வேறு உபாயமில்லை - என்று ஓதுகிறது.

(இங்கு பகவானே உபாயம் உபேயமாகிருன். இதனுல் அவன் கிருபையினுலே மோக்ஷம் ஏற்படுகிறது. பிரபத்தி யோகமும் சரணுகதியும் இதையே சொல்கிறதாகும்).

तथाऽन्यप्रतिषेधात् (3-2-35)

ததாऽந்யப்ரதிஷேதாத் (3-2-35)

ததா - அவ்விதமே, அந்ய பிரதிஷேதாத் - பிருஹ்மத்தைக் காட்டிலும் அந்யமான (வேறு ஒரு பொருளை) (சாஸ்திரம்) ப்ரதிஷேதாத் - மறுத்திருப்பதாலே - பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறு ஒன்று இல்லை (பெரியது இல்லை) என்பதாகும்.

எது இதுவரை சொல்லப்பட்டதோ - அதை மீண்டும் சொல்கிறோம் - சுருதி இப்படி ஓதுகிறது - (ஸ்வே 3-10) ततो यदुत्तरतरम् - அந்த பரமபுருஷன் மேலானவற்றிலும் மேலானவனே ; परात्परं पुरुषम् - (முண். உ. 3-2-8) மேலானதற்கும் மேலானவன், பரமபுருஷன் அவனே; अक्षरात्परतः परः- முண். உ. 2-1-2 அக்ஷரத்தைக்காட்டிலும் பெரியதானதிற்கும் மேல் பெரியவன் அவனே (அசேதனத்தைக் காட்டிலும் மேலான சேதனனைக் காட்டிலும் மேலான பரமாத்மா) இந்த வாக்யங்களால் பேதம் சொல்லப்படுவதாலே - பராத்பரம் -

மேலான பிருஹ்மத்தை விடமேலானது ஒரு தத்வம் இருக்கிறது - என்று சொல்வது சரியாகாது. (அவ்விதமில்லை என்போம்). ஏனெனில் அந்த ஸ்வே. உபநிஷத் வாக்யங்களிலே பேதம் சொல்லப்படுவதால், भेदव्यप देशात् - பிருஹ்மத்தைவிட மேலானது ஒன்று இருக்கிறது என்பது இந்த விதமாக நிஷேதிக்கப்பட்டிருக்கிறது - (अन्यस्य परस्य प्रतिक्षेदात्)- ஸ்வே. உ. 3-9ல் यस्मात्परं नापरमस्ति किं चिचद्स्माम्नाणीयो न ज्यायोऽस्ति कश्चित् - பரமாத்மாவைவிடப் பெரியவன் வேறு ஒருவனும் இல்லை. அவனைவிட சூக்ஷ்மமாகவோ - பெரியவனாகவோ - ஒருவனுமில்லை. அந்த பரமாத்வைவிட மேலான உத்கிருஷ்டமான தத்வம் (புருஷன்) இருக்கிறதாக இல்லை ; (यस्मादपरं परं नास्ति किंचित्) இதற்கு அர்த்தம் யாதெனில் எந்த விதத்திலும் சரி. அவனை (பிருஹ்மத்தை) விடவேறு ஒன்றும் பெரியதாகவில்லை. नकेनापि प्रकारेण परमस्तीत्यर्थः। வேறு உயர்ந்த வஸ்து இல்லை. तथाअन्यत्रापिपरं नास्ति) एतस्मात् मूर्तामूर्तरूपविशिष्टाद् ब्रह्मणः - ; (இங்கே சொல்லப்படுவதைக் கவனிக்கவும் - பிருஹ்மத்தை அதிரிக்தோ உத்கிருஷ்டோ வஸ்து இருப்பதை நிஷேதிப்பதால் பிருஹ்மாதிரிக்தோத்க்ருஷ்டநிஷேதாத் - பிருஹ்மமே பரத்வம் எனஸித்தி:). அதாவது பரம் - அபரம் என்பதால் (ஸ்வே. உ. 3-9) பரமாத்மாவுக்கு ஸமமானவனோ - மேலானவனோ இல்லை என்பதாகும்) - இவ்விஷயத்தில் தரித்திரன் அவன்.

அவ்விதமே மற்ற சுருதிகளிலும் ஓதப்படுகிறது. तथेति - தைத்ரியத்திலும்கூட இம்மாதிரி ஓதப்பட்டிருக்கிறது பிரு. உ. 4-3-6ல் न ह्येतस्मादितिनेत्यन्यत् परमस्ति - எது அவ்விதமில்லை (नेति) என்று விவரிக்கப்பட்டதோ - அதைவிடப் பெரியது வேறு ஒன்றுமில்லை - இதற்கு அர்த்தம் - பிருஹ்மத்தைவிட மேலானது ஒன்றுமில்லை - எந்த பிருஹ்மம் முந்தி नेति (அவ்விதமில்லை) என்று ஓதப்பட்டதோ-அதைவிட பெரியது இல்லை - வேறு உயந்த வஸ்து இல்லை - नेति निर्दिष्टादेतस्माद् ब्रह्मणोऽन्यत् परं न ह्यस्तीत्यर्थः। இதேமாதிரியாக - இந்த சுருதியும் (தை. நா. 1-8-10)ல் न तस्येशे कश्चन तस्य नाम महद्यशः इति. அவனை ஆள்பவன் ஒருவனுமில்லை. அவ

னுடைய புகழ் மிகப்பெரியதாகும் - மஹத். அப்பேற்பட்ட பிருஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணம் என்கிற விஷயம் உடனேயே பின்வரும் வாக்யங்களில் ஓதப்படுகிறது - தை. நா. 1-8 सर्वेनिमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि...स आपः प्रदुघे उभे इमे - எல்லா நிமிஷங்களும் அந்த புருஷனிலிருந்து உண்டாயின. அவருடைய தேஜஸ் மின்னலை ஒத்தது (பிரகாசத்தை உடையது) அவரே ஜலங்களையும் (மற்ற பூதங்களையும்) ஸ்ருஷ்டித்தார் மேலான - கீழுள்ளலோகங்களையும் உண்டாக்கிறார். தை. நா. 1-12ல் अद्भ्यस्संभूतो हिरण्यगर्भ इत्यष्टौ - (இந்த உலகம் ஜலங்களிலிருந்து உண்டாயிற்று இந்த சுருதியையும், இன்னும் எட்டுருக்குகளும் - மஹா. நா. உ. 1-12 எது ஹிரண்ய கர்ப்பர் (हिरण्य गर्भः सम वर्तताग्रे போன்றவை) என்று ஆரம்பிக்கிறதோ - அது முதல் எட்டுருக்குகளும் அதுவும் இரண்டையும் ஒன்ருகச் சேர்த்து இங்கே வாசிக்கவேண்டியது; அதாவது பரமபுருஷனையே ஜகத் காரணமாக மேல் சொன்னதை பிரத்யபிஞை செய்கிறது - இந்த புருஷனே ஜகத் காரணம் என்று. पुरुषमेनं प्रत्यभिज्ञापयति) (வேறு உயர்ந்த வஸ்து பரமாத்மாவைத்தவிர்த்து - இல்லை) अन्यत्र परं नास्ति என்பதாகும்). ஸத் - பிருஹ்ம- ஆத்மந் என்பதுபோல புருஷசூக்த பிரதிபாத்ய புருஷன் - நாராயணனே ஆகும். அவனே ஜகத்யேக காரணம் என்றும் அர்த்தம். (सः - வித்யுத்வர்ண புருஷன் (தை. 2.) विद्युतः पुरुषादधि - புருஷ - வித்யுத்வர்ணத்வாத் - லக்ஷ்மி பதித்வ ஸ்ரவணாத் अद्भ्य संभूतः என்பதிலும் ஸ்ரீமந்நாராயணனே சொல்லப்பட்டார்.

மேலும் கேள்வி கேட்கப்படும் - ततो यदुत्तरतरम्-பரமாத்மாவைவிட எது மேலானதாகவிருக்கிறதா (ஸ்வே. உ. 3-10) என் இம்மாதிரி வாக்யமிருக்கிறது என்பதற்கு - இதற்கு நாம் பதில் அளிக்கிறோம். மேலே சொல்லப்பட்டதில்

**(पूर्वत्र) - वेदाहमेतं पुरुषं महान्तमादित्यवर्णं तमसः परस्तात्, तमेव विदित्वाऽति मृत्युमेति, नान्यः पन्था विद्यतेऽयनाय -**

என்பதால் "நான் இந்த பரமபுருஷனை நன்கு அறிவேன் - சூரியனைப்போல காந்தியுள்ளவனும் - தமஸ்ஸுக்கு (பிரகிருதிக்கு) அப்பால் இருப்பவனும், அவனை நான் அறிவேன்; அவனை இப்படி அறிவதால் மாத்திரம் ஒருவன் மிருத்யுவைத் தாண்டுகிறான்; இவனை அறிவதைவிட வேறு ஒரு பாதையும் (மோக்ஷத்தை அடைவதற்கு) இல்லை" என்று கூறுகின்றன. இதனால் பரமாத்மாவைப்பற்றிய ஞானமே அம்ருதத்வத்தை அடைய ஸாதனமாக விருக்கிறது - வேறு வழிஇது தவிர அவனை அறிவதைவிட, ஒன்றுமில்லை. இந்த அர்த்தத்தை இந்த சுருதியும் காட்டுகிறது. परस्य ब्रह्मणो महापुरुषस्य वेदनमेवामृतत्व साधनम्, नान्योऽमृतत्वस्य पन्था: - என்று உபதேசிப்பதால் (அதாவது - பரமாத்மாவைவிட மேலான ஒருவனுமில்லை, அவரைவிட சூக்ஷ்மமாகவோ - பெரியவராகவோ ஒருவருமில்லை; அவரேமஹா புருஷர் அவரைப்பற்றிய உபாஸனை அம்ருதத்வத்திற்கு ஸாதனம் – (மோக்ஷத்திற்கு) வேறு வழியில்லை; (இங்கே சுருதப் பிரகாசிகையில் பரம் - அபரம் என்று வார்த்தைகளினால் வித்யாஸம் காட்டி, பரமாத்மாவுக்கு சமமாகவோ - மேலானவரோ இல்லை என்றது. यस्मादपरं यद्भिन्नं परं सर्वोत्कृष्टंनेत्यर्थ: प्रथम भाष्योक्त: अपरम् अन्यत यस्मात् परं उत्कृष्टं नेति - द्विती योऽत्रषार्यते தை. அ. (மஹா. நா. 1-12) நாராயணரைச் சொல்லியது).

இதை மீண்டும் விளக்கி - திருடப்படுத்துவதற்க்காக சுருதி -

यस्मात्परं नापरमस्ति किञ्चित् यस्मान्नाणीयो न ज्यायोऽस्ति कश्चित्। वृक्ष इव स्तब्धोदिवि तिष्टत्येकस्तेनेदं पूर्णं पुरुषेण सर्वं

அவருக்கு மேலானவருமில்லை - சூக்ஷ்மமாகவோ - பெரியவராகவோ ஒருவருமில்லை. அவர் ஒரு மரத்தைப்போல அசையாமல் த்யுலோகத்தில் நன்கு ஸ்தாபிதமாக விளங்குகிறார். அந்த பரமாத்மாவினாலேயே - ஸம்பூர்ண விஸ்வம் முழுதும் நிரம்பப்பட்டிருக்கிறது. (ஸ். வே. உ. 3-9) இதனால் பரம புருஷனுடைய பரத்வம் சொல்லப்பட்டு - அவருக்கு

வ்யதிரிக்த (வேறான) பொருளுக்கு பரத்வம் அஸம்பவம் (ஏற்படாது) என்று சுருதி பிரதிபாதிதம் செய்துவிட்டு, மீண்டும் சுருதி சொல்கிறது - ततो यदुत्तरतरं तदरूपमनामयम् - ஆகவே அந்த பரம் பொருள் - மற்ற எல்லாவற்றையும் விட மிகப்பெரியவர் அவருக்கு ரூபமில்லை - (அதாவது கர்மா விஞல் யேற்படும் சரீரமில்லை. அநாமயம் - கர்ம தோஷங் களால் பற்றப்படாதவர் - नीरोगं - निर्दोषमिति) - அளவிடப் படாத மகிமைகள் உள்ளவர்; அப்படிப்பட்ட மகிமைகள் உள்ளவரை எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் அம்ருதத் வத்தை அடைகிறார்கள்; அதனை அறியாதவர்கள் துக்கங் களை அடைகிறார்கள் - य एतद्विदुरमृतास्ते भवन्त्य थेतरे दुःखमेवापि- यन्ति - என்று முன் கூறப்பட்ட அர்த்தத்தையே - தக்க ஹேதுக்களுடன் உறுதிப்படுத்தி கூறிமுடிக்கிறது (ஸ்வே. உ. 3-10). ஆகவே यत् उत्तरतरं पुरूषतत्वम् - பிற்பாடுள்ள சுருதி யில் கூறப்பட்ட புருஷ தத்வம் எந்த புருஷனை - தத்வத்தை மற்றவைகளைவிட மேலானதாகச் சொல்லப்பட்டதோ அதற்கே - அரூபம் (ரூபமில்லாமை) அநாமயம் (மிக்க மேன்மைகள் பெற்றவர்) (யாதொரு தோஷங்கள் இல்லா தவர்) உண்டு तदेवा रूपमनामयं यतः, ततो य एतत् पुरुष तत्वं विदुः இப்படி இதை அறிந்தவர்களுக்கே (पुरूषतत्वं विदुः) - அவர் களுக்கு அம்ருதத்வம் பேசப்படுகிறது. அவர்களே அம்ரு தத்வத்தை யடைகிறார்கள் - அதை அறியாதவர்கள் துக்கத்தையடைகிறார்கள் - என்று तएवामृता भवन्ति; अथेतरे दुःख मेवापियन्ति इति; இப்படி இந்த அர்த்தம் இல்லாமல் வேறாகவிருக்குமாஞல் உபக்ரம வாக்யங்களுக்கும் மஹா புருஷ: வேதனம் - உபக்ரமம் (அம்ருதத்தவத்திற்கு வேறு வழியில்லை) - இத்துடன் விரோதம் யேற்படும்; பின்பு வரும் சுருதி வாக்யத்துடனும் (இந்த பிருஹ்மத்தைவிட உத்க்ருஷ் டம் வேறு ஒன்றுமில்லை) - யஸ்மாத்பரம் நாபரமஸ்தி - ததோயதுத்தரதரம் - என்பதுடன் விரோதம் வரும்.

(இங்கு கூறப்படுவது - பரமாத்மாவைவிட உத் கிருஷ்டமான புருஷன் இல்லாதபடியால் - நாம் சொல்வது அவரே மேலானவர். பூர்வபக்ஷியின் அபிப்ராயம் - அந்த

உத்தர (பரம புருஷனைக் காட்டிலும்) ஸர்வோத்கிருஷ்ட புருஷன் உண்டு என்கிருன். அது தவறு என்று காட்டப் படுகிறது - முன் பின் வாக்யங்களுக்குள்ள முரண்பாட்டி ஞல் (உத்தமூர் ஸ்வாமி -

ततो यदुत्तरतरमित्यत्र तत इत्यस्योत्तरतरमित्यत्र नान्वयः । अतस्तदपेक्षयेत्यर्थो न भवति । किं तु अमृता भवन्तीत्यत्रा-न्वयात् ततः तस्माद्धेतोरित्यर्थः ।

இதற்கு முந்தின சுருதி வாக்யத்தில் परात्परं पूरुषमुपैति दिव्यम् - (மு. உ. 3-2-8) அவன் (ஞானி) பரம புருஷனை அடைகிருன் - எல்லாவற்றிலும் மேலானவனைவிட மேலான வனை (ஸர்வோத் கிருஷ்டமான புருஷனை) அடைகிருன் என்று இருக்கிறது. இந்த கீழுள்ள சுருதியும் வாக்ய பிரகரணத்திலே காணப்படுகிறது. अक्षरात्परतः परः - அக்ஷரமாகிற (மூலபிரகிருதியைக் காட்டிலும்) மேலான ஜீவனைக்காட்டிலும் மேலானவனுக பரமாத்மாவிருக்கிருன் - அதாவது அக்ஷரமாகிற அவ்யாகிருதம் (மூலபிரகிருதி); அதைவிடப் பெரியவன் ஸமஷ்டி புருஷன்; அந்த ஸம்ஷ்டி புருஷனைவிட மேலானவன் பரமாத்மாவே அவனுக்குத் தான் அத்ருஸ்யத்வாதி குணங்கள்ஸர்வக்ஞத்வம் - எல்லாம் ஓதப்படுகின்றன. அந்த பரமபுருஷ ஏவ परात्परः ஸமஷ்டி புருஷனைவிட மேலானவன் ஆகும் - இந்த வாக்யத்திஞல் எல்லா மேலானவற்றிலும் மேலாகவிருக்கிருன் என்கிற வாக்யத்தில் - ஸமஷ்டி புருஷாத் பரத்வேந உச்யதே.

(பூர்வபக்ஷி ततो என்கிற ஸ்வே. உ. 3-10) பதத்திற்கு "அவனைவிட" என்று அர்த்தம் செய்கிருன். ராமானுஜருக்கு ततः - ஆகையால் என்கிற அர்த்தமாகும் (तस्माद्); முண். உ. 2-1-2 வாக்யம் அக்ஷராதிகரணத்தில் மீண்டும் விசாரிக் கப்படுகிறது. வேதார்த்த ஸங்கிரஹத்தில்-ततः—என்பதற்கு ஸர்வஸ்மாத் பரத்வம் என்பது சொல்லப்படுகிறது. அம்ருதா பவந்தீ என்பதோடு இங்கே அந்வயம் - ஒன்ருக சேர்த்துப் படிப்பது.

ஸூ. अनेन सर्वगतत्वमायामशब्दादिभ्यः (3-2-36)

அநேந ஸர்வகதத்வமாயாமசப்தாதிப்ய: (3-2-36)

அநேந ஸர்வகதத்வம் பிருஹ்மத்திற்கு ஸர்வவ்யாப்தி ஓதப்படுவதாலே; ஆயாம சப்தாதிப்ய:-ஸர்வவ்யாப்தி வாசி சப்தங்கள் (சுருதிகளில்) இருப்பதாலே, பரமாத்மாவைவிட பரம் (மேலான புருஷன்) இல்லை என்பதாகும்.

अनेन - ब्रह्मणा - ஸர்வகதம் - ஸர்வ ஜகத்திலும் வ்யாப்தி பேசப்படுகிறது. அதாவது ஸம்பூர்ண ஜகத் அவரால் நிரம்பப்படுகிறது - இதை आयाम - व्याप्तिप्रतिपादकश्रुतयः ஸர்வ வ்யாப்தியைச் சொல்லும் சுருதிகள் ஓதுவதாலே; பரமாத் மாவைவிட (अस्मात्परं) नास्ती - இல்லை - என்பது தெரியவரு கிறது. आयामशब्दः - ஸ்வே. உ. 3-9ல் तेनेदंपूर्णं पुरुषेण सर्वं - அந்த மஹாபுருஷனுல் இந்த ஸம்பூர்ண உலகம் முழுதும் நிறம்பப்பட்டிருக்கிறது. தை. நாரா. அநு. 13ல்

**यच्चकिञ्चिज्जगत्यस्मिन् दृश्यते श्रूयतेऽपिवा । अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः ।**

எந்த எந்த வஸ்து இந்த உலகில் இருக்கிறதோ - கேட்கப் பட்டோ அல்லது காணப்பட்டோவிருக்கிறதோ - அந்த வஸ்து ஒவ்வொன்றிலும் - உள்ளும் புறமும் பகவான் நாராயணரே பரவியிருக்கிறுர் - எப்போதும் இருக்கிறுர். முண். உ. 1-1-6 - नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं यद् भूतयोनिं परिपश्यन्ति धीराः - எதை அறிஞர்கள் எல்லாவஸ்துக்களுக்கும் மூலமாக (யோனியாக) விருக்கின்றதாகப் பார்க்கிறுர்களோ - அந்த வஸ்து - நித்யம் - விபும் (ஐஸ்வர்யம் நிரம்பியதாகவும்) நியமனம் செய்பவராயும் - பிரபுவாயும் ஸர்வகதம் (எங்கு பரவியுள்ளதாகவும்) - மிக்க சூக்ஷ்மமாக விருக்கின்றதோ - அழியாததாகவும் இருக்கிறதோ - आदि சப்தத்திஞல் - ஜகத் தாகிற இதம் ஸர்வம் பிருஹ்மமே; பிரு. உ. 4-5-1 ब्रह्मेदं सर्वं - இந்த ஜகத் எல்லாம் பிருஹ்மமேயாகும் என்பதால் ஜகத் ஸாமாநாதி கரணத்திஞல் ஒற்றுமை பிருஹ்மத்துடன்.

காட்டப்பட்டு - பிருஹ்மமே ஜகத்திற்கு உபாதான காரண மாகிறது - (உபாதானத்வபோதக சப்தமாகும்)

சா. உ. 7-2-9-आत्मैवेदं सर्वम् இந்த ஆத்மாவே இந்த எல்லாமாக (ஜகத்தாக) விருத்கிறது. (இங்கு சொல்லப்படு வதை கவனிக்கவும். முந்தின சூத்ரம் சுருதிவாக்யங்களால் பூர்வ பக்ஷக்ஷியின் கருத்தை பிருஹ்மத்தைவிட மேலான ஒரு தத்வம் இருக்கிறது என்பதைக் கண்டிக்கிறது. இங்கே சொல்லப் படுவது சூத்ரக்காரரின் அபிப்ராயத்தை ஆமோ தித்து ஒத்துக் கொள்வதாக விருக்கிறது. இங்கே இந்த சூத்ரத்தில் सर्वगतत्वं - எங்கும் பரவியிருத்தல் என்பதற்கு நியமனம் செய்வது என்பதைக் காட்டுகிறது. இதே மாதிரியான சுருதிகள் பிருஹ்மத்தைதவிர வேறு மேலான தத்வங்களை நிஷேதிக்கிறதாக விருக்கின்றன. அதனுல் உள்ளிருந்து நியமனம் செய்வதாகவும் - எங்கும் பரவியிருப் பதாகவும், சொல்வதாகவும் அவனையும் (பரமாத்மாவை யும்) ஜகத்தையும் ஸாமாநாதி கரணத்தில் ஒற்றுமையைக் காட்டுவதாகும். (जगच्च स:); இவற்றை எல்லாம் ஒப்புக் கொள்ளலாம் - எப்போது பிருஹ்மம் ஆத்மாவாகவும் உலகம் சரிரமாகும் போது இது எல்லாம் ஸமஞ்ஜஸமாகும்.)

ஆகவே इदं परं ब्रह्मैव सर्वस्मात् परम इந்த பரமாத்மா வாகிற பிருஹ்மமே அதாவது மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத் (எல்லா வஸ்துக்களை விடவும் சித் - அசித் எல்லாவற்றையும்விட பெரியவர் - புருஷோத்தமன் - என்பதாகும்.

(பராதிகரணம் முடிவு பெற்றது)

ஸித். சூ. फलाधिकरणम् (3-2-8)

ஸி. சூ. फलमत उपपत्ते : (3-2-37)

பலமத உபபத்தே : (3-2-37)

பலம் - கர்ம பலன் - அத: - பரமாத்மாவினிடமிருந்தே உண்டாகிறது. (பல மத:-பகவான் தான் எல்லாக் கர்மாக்

களுக்கும் (போக மோக்ஷ கர்மாக்களுக்கும்) பலனை அளிப் பவர் என்பதாகும் - உபபத்தே: - யுக்திகளாலும் சுருதி களாலும் இது சரியாகும்.

(வைணவசித்தாந்தத்திற்கு இது முக்கியமான சூத்ர மாகும். இது சித்தாந்த சூத்ரம் இதேமாதிரி புருஷார்த்தம் நான்காம் பாதத்திலும் சொல்லப்படுகிறது. மேலே காட்டப் பட்டது-பிருஹ்மம் உபயலிங்கம், எல்லாத் தெய்வங்களிலும் அந்தர்யாமியாக விருப்பதால் பகவானே எல்லாக்காரியங் களையும் தாமே அங்கீகரிப்பவராக இதரதேவதைகளைத் துணையாகக்கொண்டு - தானே நேரிலேயும்-சில பலன்களை அந்த அந்த தேவதைகளைக்கொண்டும் அளிக்கிறார். இம்மை மறுமை (ஆமுஷ்மிக - ஐஹிக) பலன்களை அளிப்பவர் அவரேயாகும்.) என்பது இதில் முக்கிய கருத்துக்களாகும். ஸ்ரீமந்நாராயணன் ஸர்வ பலப்ரதன - அகிலலா பத்திற்கும் அவரே உபாஸிக்கப்பட வேண்டியவன் - 'அவரே' என்கிற பதம் முக்யமானது.

மேலே சொல்லப்பட்ட விஷயம் - பிருஹ்மத்தின் உபாஸனையில் ஆசையை (இச்சையை) அதிகாரியிடம் உண்டாக்க, ஜீவனுக்கு எல்லா அவஸ்தைகளிலும் தோஷம் ஏற்பட்டதாகிறது (ஸதோஷத்வம்) ஆனால் அடையப்பட வேண்டிய பரம புருஷார்த்தமாகிற பகவானே - நிர்தோஷத்வம் - கல்யாண குணாகரத்வம் ஸர்வஸ்மாத்பரன். இதற்குப் பிறகு, சூத்ரக்காரரே அபிப்ராயப்படுகிறார் - विवक्षन् இந்த மூன்றும் பாதத்திலே, உபாஸனம் செய்பவர்களுக்கு, உபாஸனத்தின் பலன் - மோக்ஷம் எனப்படும் அபவர்க்கம் - அதுவும் பகவா னாலேயே அளிக்கப்படுகிறது; ஏனெனில் பரமபுருஷனே எல்லோருக்கும் மேம்பட்டவனாக, அவன் உபாஸனத்தினால் திருப்தியடைந்தவனாக, அவனே எல்லாப் பலன்களையும் உபாஸகனுக்கு அளிக்கிறான் என்பதாகும். துல்ய நியாயத் தாலே (சரியான - சமமான நியாயத்தாலே) யாகயாகஞாதி களுக்கு சாஸ்திரங்களில் சொல்லியபடி பலன்கள் - இம்மை

யிலும் மறுமையிலும் கிடைக்கப்பெறும் எல்லா சுபப் பலன்கள் - அநிஷ்ட நிவிருத்தியும் கூட, ஐஹிக ஆமுஷ்மிக பலனுகிற ஸ்வர்க்காதி) எல்லாமே ஸர்வமும் பரம புருஷனுல் தான் அளிக்கப்படுகிறது. अत एव - இந்தக் காரணத்தினுல் தான் - பரமபுருஷனிடமிருந்துதான் இம்மை மறுமை பலன்கள் உண்டாகின்றன - ஆயினும் ஸாமாந் யேன - பொதுவாக கூறப்பட்ட "பலமத:"- பலன்கள் பரமாத்மாவிடமிருந்தே உண்டாகின்றன - என்கிற பத பிரயோகத்தினுல் கூறப்பட்டிருக்கிறது. (இதன் அபிப்ரா யம் - கர்மாவே பலனை அளிக்கிறது - அபூர்வத்வாரா - என்கிற பக்ஷம் நிரஸனம் செய்யப்படுகிறது. அதாவது பரமாத்மாவின் அனுக்ரஹம் இல்லாவிடில், ஒரு பலனும் உண்டாகாது. மேலும் பலன் கொடுப்பதற்குள்ள ஸாமர்த் தியமும் பரமாத்மாவிற்கு இருக்கிறது - அதாவது ஸர்வ சக்தி, ஸர்வகாரணத்வ—ஸர்வக்ஞத்வம் - கொண்டபடியால், இதரதேவதைகள் பலன்களை அளிக்கிருர்கள் என்பதும் தவருகும் - பரமாத்மாவின் அனுக்ரஹத்தால்-அவன் அவை களை அங்கீகரிப்பதால், இதர தேவதைகள் மூலம் அவரே பலனை அளிக்கிருர். பகவான் அந்த தேவதைகளுக்கும் அந்தர்யாமியாதலால் பகவானே அந்த அந்த கர்மாக்களால் திருப்தி அடைந்தவராக - பலன்களை அவர்கள் மூலமோ தானே ஸ்வயமாகவோ அளிக்கிருர் என்பதாகும்).

இந்த விஷயம் ஏன் இப்படியிருக்கிறது - உபபத்தே:- சுருதிகளாலேயும் யுக்திகளாலேயும் பொருந்தும் அந்த பர மாத்மாவே ஸர்வக்ஞன்; ஸர்வசக்தி; மஹத் உதாரன் (பெரிய ஹிருதயமுள்ளவன்-தயையுள்ளவன் - குற்றங்களை மன்னிப் பவன்); யாகதான ஹோமாதிகள் - இன்னும்உபாஸனைகள்- இவற்ருல் ஆராதிக்கப்பட்டு - திருப்திபெற்றவனுன பர மாத்மா ஐஹிக ஆமுஷ்மிக (ஐஹிக - ஸ்திரமான மோக்ஷ பலன்; ஆமுஷ்மிக - அற்ப பலன்களாகிற ஸ்வர்க்காதி லோகங்கள் இம்மை சுக போகங்கள்) - பலன்களை அளிப்ப வனுக பரமாத்மா ஆகிருன். அபவர்க்கம் எனப்படும் மோக்ஷம் - அதையே ஸ்வஸ்வரூப அவாப்திரூபமாகிற

அபவர்க்கம் (சிலர் ஜகத்மித்யை என்கிற நிவர்த்தக தத்வ ஞானத்திறைல் மோக்ஷஸித்தி என்கிறுர்கள் - மோக்ஷம் உண்டாக்கப்பட்ட காரியமாகாது. அந்த ஜீவனுடைய பழைய ஸ்வரூப பிராப்தியே - ஆவிர்பாவமே மோக்ஷம் என்கிறுர்கள். இன்னும் சிலர் வைகுண்டலோக பிராப்தியை மோக்ஷம் என்கிறுர்கள் - இந்த பலன்களாகும்). இன்னும் சிலர் (ஜைமினிபக்ஷத்தினர்களான பூர்வமீமாம் ஸகர்கள்) சொல்வது-கர்மாக்களே (அதாவது யாகயக்ஞ கர்மாக்களே) பலன்களை அளிக்கின்றன என்பதாகும். அசேதனமான இந்த கர்மாக்கள், க்ஷணத்திலே அழிந்துபோவது - அத்தகைய கர்மாக்கள் - காலாந்தரமாக பிற்பாடு அவை களின் பலன்களைக்கொடுப்பதற்கு ஸாதனமாக ஏற்டக் கூடும் - அபூர்வத்வாரா ; என்கிறுர்கள்.

(இந்த சூத்ரத்தில் - பலன்கள் என்று பொதுவாக ஸாமாந்ய சப்தத்தால் கூறப்படுகின்றன. மோக்ஷம் இதில் அடங்கவில்லை என்கிற கருத்து தேறும். இதனுல் எல்லா யாகயக்ஞாதி வைதிக கர்மாக்கள் பரமாத்மாவின் ஆராதனு ஸ்வரூபமாகும்; அவனே அவைகளுக்கு பலன் அளிக்கிறுன்- மோக்ஷத்தை விரும்புகிறவனும் அவனையே நினைத்து உபா ஸிக்கவேண்டும். பூர்வ மீமாம்ஸகனின் கருத்துப்படி (ஜைமிநிபக்ஷம்) பலன்கள் வேறு ஒன்றிறைல் (அபூர்வம் என்பதால்) பிற்பாடு அளிக்கப்படுகின்றன - அந்த விஷயம் இங்கு பிருஹ்மம் எனக்காட்டப்படுகிறது). (அபூர்வம் அசேதனமாதலால் - அதற்குப் பலன்கொடுக்க சக்தி இராது பரமாத்மாவே பலனை அளிக்கிறுன் என்பதாகும்).

சித். சூ. श्रुतत्वाच्च (3-2-38)

ஸ்ருதத்வாச்ச (3-2-38)

ஸ்ருதத்வாத்ச - சுருதியில் சொல்லியிருப்பதாலே - பர மாத்மாவே பலனை கொடுப்பவராவார். பிரு. உ. स वा एष महानज आत्मा ऽन्नादो वसुदानः - ஈஸ்வரனே பலனை அளிக்கிறுன்- மஹானும் அஜனும் ஆன இந்த ஆத்மாவே (பகவானே)

அன்னத்தை நாலாபக்கத்திலும் தருபவராகவும் – வசுவை (தனத்தை) தருபவருமாக விருக்கிறார் - இதேபடி தைத். ஆன. 7-1ல் एष ह्येवानन्दयाति - இந்த அதே பிறப்பில்லாத ஆத்மாவே அன்னத்தையும் தனத்தையும் கொடுப்பவனாக விருக்கிறான் - ஆனந்தத்தையும் அளிக்கிறான் - என்று ஓதுவதால் போக - அபவர்க்கம் (மோக்ஷம்) பலனை - பரமாத்மாவே தருகிறான் - என்பதாகும் சுருதியிலிருந்து அறியப்படுகிறது. अन्नदः - அன்னத்தைக் கொடுப்பவன்).

இப்போது சூத்ரக்காரர் முக்யமான பூர்வபக்ஷியின் கருத்துக்குப் பதில் அளிக்கிறார் - இவ்விதமாக.

பூ. சூ. धर्मं जैमिनिरत एव (3-2-39)

தர்மம் ஜைமினிரத ஏவ (3-2-39)

அத ஏவ - சுருதியும் யுக்தியுமிருப்பதாலே, ஜைமினி - ஜைமினி - தர்மம் - தர்மத்தையே பலன் கொடுப்பதாக எண்ணுகிறார். (பூர்வபக்ஷ சூத்ரம்) (கர்மாதான் பலனைக் கொடுக்கிறது - என்கிறார் ஜைமினி).

अत एव - இந்தக் காரணத்தாலே (அதாவது சுருதியும் ஓதி - யுக்தியினாலும் ஸாதிக்கப்படுவதால்) - உபபத்தே: - எல்லாம் சரியாகும். சுருதியிலே சொல்லப்பட்டது - யாகதான ஹோம உபாஸனரூப தர்மமேல (அதாவது கர்மாக்களே) பலதாதாவாக எண்ணுகிறார் ஜைமினி ஆசார்யர். லோகத்திலே நாம் காண்கிறோம் வைதிக கர்மாக்களே - உதாரணமாக யாகயக்ஞங்கள், தானங்கள், ஆஹூதி (ஹோமம்) பக்தியுடன் தியானம் - பூஜை செய்தல் ஆகிய கர்மாக்கள் பலன்களை தருகின்றன - இக லோகத்திலே அவை அனுபவிக்கப்படுகின்றன. உதாரணமாகவே நிலம் உழுகிறவன் விஷயத்திலேயும், உடம்பிலே வலியிருப்பதனால், பிடித்துவிடும்படி செய்யச் சொல்லும் செய்கைக்கும்-இந்தக் கர்மாக்கள் ஸாக்ஷாத்தாகவே உடனேயே பலனை அளிக்கின்றன; இல்லாத போனால் பரம்பரையான காரணத்தைக் கொண்டோ, அல்லது கர்மாக்களே ஸ்வயமாகவே பலன்

களை அளிக்கின்றனவா? இவைகள் பல விதமாகக் காணப் படுகின்றன. அதேபடி வேதத்திலும் யாகம் செய்தல், தானம் ஹோமம் முதலியவை ஸாக்ஷாத்தாகவே பலனை அளிக்க ஸாதனத்வமாக இல்லாத போனாலும் (உடனேயே பலன் களைத் தராமற்போனாலும்)-பரம்பரையாக அபூர்வம் என்பது மூலம் பலஸாதனமாக விருக்கின்றன. அதனாலேதான் இம்மாதிரி சுருதி வசனங்கள் ஓதுகின்றன - யஜு. 2-5-5 यजेत स्वर्गकामः - ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன். அவனால் யாகம் - செய்யப்படவேண்டும் - இத்யாதிகளால் லிங்கின் ஆதேசமான த என்பதில் பிரேரண ரூபமான அர்த்தத்திற்கு யாகம் விஷயமாகிறது. அதனால் ஸாதனமாகும். (கர்த்த வ்யமாகும்). அதே சமயத்தில் யாகம் ஸ்வர்க்கத்திற்கு உத்பாதகம் என்று ஆகிறது - அதாவது கர்மம் முடிந்ததும் அபூர்வம் என்பதின் மூலம் - அந்த யாகத்தின் பலன் பிற் காலத்தில் அதிகாரிக்கு ஸம்பவிக்கிறது. இது விஷயத்தில் அசேதனமாக அபூர்வத்வாரா வேறுவிதமான பிரமாணத்தி னால் - அர்த்தாபத்தியினால் - பல ஸ்ாதனத்வம் யேற்படுவதா கிறது.

(அர்த்தாபத்தி ஒருவகை பிரமாணமாகும். இரவில் போஜனம் செய்கிறான் (என்பதற்கு) பகலில் பட்டினிகிடக் கும் ஒருமனிதனின் உடல் வாட்டமடையாமல் அதேபோல விருக்குமானால் - பகல் போஜனமில்லா விடினும், இரவில் அவன் புஜிக்கிறான் என்பதாகும்). அதுபோல இங்கேயும் கொள்ளவேண்டியது).

இங்கே ஜைமினியின் அபிப்ராயம் அடுத்த சூத்திரத்தில் கண்டிக்கப்படுகிறது. இங்கே சொல்லப்படுவது அபூர்வம் என்பது அவசியமாகும். சுருதியில் காணப்படவில்லை - ஆயினும் சுருதிக்கு விரோதமில்லை - அதுகர்மாவுக்கும் அதிகாரிக்குமுள்ள சம்பந்தத்தை உண்டாக்கி - பலனை காலாந்தரத்தில் (தக்கசமயத்தில்) அளிக்கிறது என்பதாகும்.

சித். ஸூ. पूर्वं तु बादरायणो हेतु व्यपदेशात् (3-2-40)

பூர்வம் து பாதராயணோ ஹேது வ்யபதேசாத் (3-2-40)

து சப்தம் பூர்வபக்ஷியின் அபிப்ராயத்தைத் தள்ளுகிறது. பாதராயண: - பாதராயணர், பூர்வம் முன்பு சொல்லப்பட்ட ஈஸ்வரனையே பலஹேதுவாக (பலனைத்தருபவராக) எண்ணுகிறார். ஹேது வ்யபதேசாத் - சுருதியில் ஈஸ்வரனே கர்மங்களைச் செய்யத் தூண்டுபவராகவும் - அவற்றின் பலனைத் தருபவராகவும் சொல்லப்பட்டிருப்பதே, அதன் காரணமாகும். (வாயு முதலான தேவதைகளுக்கு அந்தர்யாமியான பகவானே யாகயக்ஞாதிகளால் ஆராதிக்கப்பட்டு-அதனால் திருப்தியடைந்து - அந்த அந்த தேவதைகளின் மூலமாகவும் - பரம புருஷனே தானே போகமோக்ஷ பலன்களுக்கு ஹேதுவாகச் சொல்லப்படுகிறார்).

து சப்தம் பூர்வபக்ஷியின் கருத்தை நிராகரிக்கிறது. ஈஸ்வரன் தான் பலப்ரதன் - அபூர்வமில்லை என்பதாகும். பூர்வமாகச் சொல்லப்பட்டது, பரபிருஹ்மம் தான் கர்ம பலன்களை அளிக்கிறார் என்று பலப்ரதத்வம்—

பகவான் பாதராயணர் என்கிற ஆசார்யர் எண்ணுகிறார். எப்படி ? ஹேது வ்யபதேசாத் - சுருதிகளில் ஈ ஸ் வ ர னை யே சொல்லியிருப்பதால். यजदेव पूजायाम् - ஏனெனில் சுருதியில் சொல்லப்பட்டது - ஹேதுவுடன் - அவரே பலன்களைத்தருபவர். அதனால் அவரைப் பூஜிக்க வேண்டும். இங்கே "யாகம்" என்கிறபதம் யஜ என்கிற தாது விலிருந்து யேற்படுகிறது. யாகம்செய் - என்கிற அர்த்தம். தேவதா ஆராதனம்செய்; அதனால் தேவதைகள் திருப்தியடைந்து, பலன்களைத் தருகிறார்கள் அதனால் தேவதா ஆராதன பூத யாகத்வாரா - அக்னி - வாயு, ஆகிற தேவதைகள் திருப்தியடைந்து பலன்களை அளிக்கிறார்கள். **இந்த விஷயம் இம்மாதிரி வாக்யங்களில் சொல்லப்படுகிறது**

தை. 2-1-1-ல் वायव्यं श्वेतमालभेतभूतिकामः । वायुर्वैक्षेपिष्टादेवता । वायुमेव स्वेन भागधेयेनोपधावति । स एवैनं भूतिं गमयति ।

எவனுக்கு வெகு சீக்கிரம் தனம் அடையவிருப்பமோ-அவன் வாயுதேவதையைப் ப்ரீதிசெய்வதற்கு வெள்ளை ஆட்டைக் கொண்டு யாகம் செய்யவேண்டும். வாயுபகவான் வெகு வேகமாகச் சஞ்சரிக்கிறார். அதனால் யாக அதிகாரி அவரைத் திருப்தி செய்விக்கிறார். அவனுக்கு வெகு சீக்கிரத்தில பலன்கிடைக்கிறது. இஷ்டப்படும் அதிகாரி தனக்கு ஐஸ்வர்யம் முதலான பலன்களை யடைவதற்கு, எந்த யாகங்கள் பல ஸாதனமாக விருக்கின்றனவோ, அவைகளை அடைய, அந்த அந்த யாகங்களின் விதிவாக்யங்களை (சங்கைகொள்ளாமல்) அனுஸரித்து, உடன்படிநடந்து கர்மாக்களைச் செய்வதால், கர்மாவுக்கும் விதிக்குமுள்ள சம்பந்தத்தை மறுக்காமல், செய்யப்படவேண்டும். அதனால் பலன்களை நிச்சயமாக யடைகிறார்கள்.

இதில் சங்கை (சந்தேகம்) உண்டாக ப்ரஸங்கமில்லை. என்ன கர்மாக்கள் விதியினால் அபேக்ஷிதமோ, அந்த கர்மாக்களைப் பற்றி சுருதிகளில் ஓதப்பட்டு, அந்த கர்ம ஸாதனங்கள் பலன்களைத் தக்க சமயத்தில் அளிக்கின்றன. இப்படி சுருதி ஓதுகிறது என்றால், அதனால் தேவதைகளே பலன்களைத் தருகின்றனர் என்கிற கருத்து பரித்யாகம் செய்யப்படமாட்டாது. சுருதியில் ஓதப்படாத அபூர்வத்தை பலன்தருவதாக கொள்ளக்கூடாது. இந்த அபூர்வம் கற்பிக்கப்பட்ட விஷயமாகும். சுருதியில் சொல்லப்படவில்லை - அதனால் அது பிரமாணமாகாது. லிங்கங்கள் (அடையாளங்கள்) கூட தேவதா ஆராதன கர்மாக்களில் கட்டளைகளைச் சொல்லும் விதிநிஷேதங்கள் மூலம் கர்த்ரு (agent) வ்யாபார ஸாத்யதாம் - ஸாதனங்களாகிற யாகங்களால் இச்சிக்கப்பட்ட பலன்களை அடையவைக்கும் ஸாதனங்களாக வ்யுத் பத்தி செய்து - சப்தத்தின் அனு

சாஸனத்திலுலே (கட்டளைகள்) பதங்களின் முக்யாத்ர் தங்கள் காட்டப்படுகின்றன. அதனுல் அபூர்வம் போன்ற அலௌகிகமான ஸாதனத்திலுல் (அபூர்வம் अलौकिकम्) பலன் அடையப்படுகிறது என்பது இல்லை. இந்த பதங்கள் அபூர்வத்தைக் காட்டவில்லை. இந்த விஷயம் விஸ்தாரமாக ஜிக்ஞாஸாதி கரணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

(அதாவது அபூர்வம் அசேதனம். அதற்குப் பலனைக் கொடுப்பதற்கு சக்தி இராது. பூர்வமீமாம்ஸகன் சொல்வது - மந்திர பாகங்களும் அர்த்த வாதமும் (புகழ்ச் சொற்கள்) பிரமாணமாகாது. விதி நிஷேதங்களால்தான் காரியங்களுக்கு முக்ய பதவி அடையப்படுகிறது. இந்தக் கருத்து இங்கே கண்டிக்கப்படுகிறது. யஜ என்கிற தாதுவுக்கு கேவலம் விதிமாத்திரமல்ல, விதியுடன் கூடிய அபூர்வம் போன்றதுமில்லை; ஆனுல் யாகதேவதையைத் திருப்தி செய்துவைத்து, ஒரு குறிப்பிட்ட தேவதையோ - தேவதைகளோ திருப்தி செய்யப்பட்டு அதனுல் சாக்ஷாத்தாக திருப்தியடைந்த தேவதை பலனை அளிக்கிறது. அதனுல் தான் वायुर्वैक्षेपिष्टा देवता - வாயுபகவானே வெகுவேகமாக சஞ்சரிக்கிறுர். அதனுல் பலனும் அவரிடமிருந்து வெகு சீக்கிரமாக அடையப்பெறும். ப்ரஹ்மமும் பரம்பரையாகவும் கவனமாகிறது - அவரே பலன் தருபவராகும்.

ஆயினும் வாயுபோன்ற தேவதைகளுக்கும் பகவான் அந்தர்யாமியாக விருப்பதால், அவரே ஆராதிக்கப்பட்டவர் ஆவர். பரமபுருஷனே அந்த வாயு தேவதை மூலம் சந்தோஷப்படுத்தப்பட்டு, பலனை அளிக்கிறுன் என்கிற கருத்தாகும். இந்த விஷயம் சுருதியில்

ஓதப்பட்டிருக்கிறது. தை. நா. 1-6-ல் इष्टापूर्तं बहुदाजातं जायमानं विश्वं विभर्तिभुवनस्य नाभिः। तदेवाग्निः तद्वायुः तत् सूर्यः तद् चन्द्रमाः । इति ।

பரமாத்மாவே இந்த புவனத்தைத் தாங்குகிற ஆதாரமாக விருக்கிறுர். அவரே எல்லாத் தேவதைகளுக்கும் அந்தர்

யாமியாக விருப்பதால், எல்லா யாகயக் ஞங்களை ஸாக்ஷாத் தாகவே அங்கீகரிக்கிறார். வேதங்களில் ஓதப்பட்ட இஷ்டா பூர்த்தம் - இன்னும் அநேக யாக கர்மாக்கள், அதே மாதிரி தான தர்மங்கள்செய்யப்பட்டவை - இனி செய்யப் படுபவை - இவையாவற்றையும் அவரே அங்கீகரிக்கிறார். ஆகவே பரமாத்மாவே அக்னியாகும். (அதாவது அக்னி சரீர பரமாத்மாவாகும்). அதே பிரகாரம் அவரே வாயு சரீர பரமாத்மா, வாயுவாகும். அதேபடி அவரே சூரியன் சந்திரன் ஆகும். (அதாவது சூரியன், சந்திரன்சரீரபரமாத்மா, ஸாமா நதி கரணத்தினுல் தாதாத்மியம் சொல்லப்பட்டது.) இதனுல் ஸாக்ஷாத் ஸாதனத்வமும் பரம்பரா ஸாதனத்வம் (அக்னி - சந்திரன், வாயு சூரியன் சரீர த்வாரா மூலம்) இரண்டும் பேசப்படுவதாகும். विभत्तिफलवत् करोति என்று அர்த்தம். தேவதாந்திர ஆராதன கர்மமாகிற முகாந்தரேண, பகவத் ஆராதனத்வம் சொல்லப்படுகிறது. பூர்வமீமாம்ஸகன் சொல்லும் அபூர்வம் என்பது பலனைத்தராது. அது அசேதனம். அதற்கு சக்தியில்லை. சுருதியில் சொல்லப் படவில்லை.) மீண்டும் இந்த விஷயம் அந்தர்யாமி பிராம் மணத்தில் ஓதப்படுகிறது -

பிரு. உ. 3-7-ல் यो वायौ तिष्टन् यस्य वायुः शरीरं, योऽग्नौ तिष्टन्, यो आदित्ये तिष्टन्, इत्यादि श्रूयते ।

எவர் வாயுவிலும் அக்னியிலும் ஆதித்யனிலும், சந்திரனி லும் உள் இருந்து கொண்டு, நிற்பவராகவும், உள்ளிலிருந்து நியமிப்பவராயும் ஆத்மாவாகவும் எவருக்கு இவர்கள் சரீரமாக விருக்கின்றனரோ, எவரை வாயு அக்னி ஆதித்யன் சந்திரன் அறியமாட்டார்களோ அவர் பரமாத்மாவாகும்.

ஸ்மிருதிகளிலும் இந்த விஷயம் பேசப்படுகிறது. கீதை 21, 22, 23-ல் योयो यांयां तनुं भक्तः श्रद्धयार्चितु मिच्छति । तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् । स

**तया श्रद्धया युक्तः तस्याराधनमीहते । लभते च ततः कामान् मयैव विहितान् हि तान्—**

என் மீது அளவற்ற ப்ரீதி கொண்டு, எவன் மிக்க விஸ்வாசம் (சிரத்தையுடன்) வைத்து என்னை ஆராதிக்கிறானோ, என் உருவத்தில் எந்த தேவதையானாலும் சரி, நான் அவனிடம் திருப்தி கொண்டவனாகிறேன். அவனுக்கு சிரத்தை, உபாஸனையில் இச்சை, இவைகளைக் கொடுத்து, அந்த உபாஸகனும் தன் இஷ்டங்களை அந்த அந்த தேவதைகள் மூலம் என்னால் கட்டளையிடப்பட்டு அடைகிறான். (எந்த எந்த பக்தன் எந்த எந்த உருவத்தில் என்னை ஆராதிக்க விரும்புகிறானோ, அவனுக்கு அந்த சிரத்தை, விஸ்வாஸம் நம்பிக்கை எல்லாவற்றையும் அளித்து, அந்த ஆராதனமூலமாக என்னாலே அளிக்கப்பட்ட பலன்களை அடைகிறான்; இதனால் தேவதாந்திர ஆராதனை கூடாது. ஸாக்ஷாத்தாகவே, எம்பெருமானை உபாஸித்து, பலனை அடையலாம் என்கிற கருத்து தேறும். சாந்திராயனம் போன்ற கர்மாக்களும் இதர தேவதா பூஜைகளும் பகவானுடைய ஆராதனையாகும். பகவத் ஆக்ஞையினால் தான் எல்லாம் நடக்கும்)

கீதையில் - 9-24-25ல் - **अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च । न तु मां अभिजानन्ति तत्वेन अतः च्यवन्ति ते** - நான் தான் எல்லாக் கர்மாக்களுக்கும் ஆராத்யனும், ப்ரீதியை அடைகிறவனும் பலனை அளிப்பவனும் ஆகிறேன் - என்னை இவ்விதம் உள்ளபடி அறிகிறார்களல்லர். அவர்கள் அதனால் அற்ப பலன்களைப் பெற்று (புண்ணியம் கழிந்தவாறே) அதை இழந்து விடுகிறார்கள் - இங்கே **प्रभुरिति** என்கிற பதத்திற்கு **फलप्रदायीत्यर्थः देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्तिमामपि ।** கீதை. 7-23 - எவர்கள் தேவதாந்திரங்களைப் பூஜிக்கிறார்களோ அவர்கள் அவர்களிடம் போய் சேருகிறார்கள். ஆனால் என் பக்தர்கள் என்னை வந்தடைகிறார்கள் - **यान्ति मद्याजिनोऽपि माम्** - என்னைக் குறித்து யாகம் செய்கிறவர்கள் (பக்தி செய்கிறவர்கள்) என் கல்யாண குணங்களையும் ஸ்வரூபத்தையும் அறிபவர்

களாக என்னையே அடைந்து - மீண்டும் சம்சாரத்திற்கு திரும்பி வருகிறதில்லை.

லோகத்தில் நாம் காண்கிறோம் விவசாயம் முதலான தொழில்களில், உழவர்கள் விசித்திர வகையாக (ரூபத்திலே) திரவிய விசேஷங்களைச் சம்பாதிக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய அரசனை நேரடியாகவோ, அல்லது ராஜசேவகர்கள் மூலமாகவோ அந்த நிலங்களில் விளைந்த வஸ்துக்களைக் கொண்டே அரசனுக்கு மரியாதைசெய்கிறார்கள். அந்த அரசனும் அந்த அந்த அதிகாரிக்கு அனுகுணமாக (தகுந்தபடி) பலனை அளித்து சந்தோஷமடையச் செய்கிறான் - (இதனால் சொல்லப்படுவது - அரசனுக்குச் சமமாக பிருஹ்மம் இங்கு காட்டப்படுகிறது. ராஜசேவகர்கள் மாதிரி சூரியன் அக்னி வாயு சந்திரன் இருக்கிறார்கள். இவர்களை உத்தேசித்து யாகம் செய்வதாலும், பிருஹ்மத்தையும் ஆராதனை செய்வதாகும்). சாக்ஷாத்தாகவே அரசனை பூஜிப்பது - ப்ரஹ்மத்தையே ஸாக்ஷாத்தாகவே பூஜிப்பதற்குச் சமம் எனத்தேறும்.

வேதாந்த வாக்யங்கள் முதலில் பரமாத்மாவைச் சொல்கின்றன - (எப்படி) இந்த பரமாத்மா சுருதியைத்தவிர மற்ற பிரமாணங்களுக்கு இலக்காகமாட்டான் - **अतिपतितसकलेतर प्रमाणसंभावना भूमि** - இதர பிரமாணங்களுக்கு அதீதன்); நிரஸ்த ஸமஸ்த அவித்யாதோஷகந்தம் (அவித்யாதி தோஷங்களால் பற்றப்படாதவன்); ஸ்வபாவமாகவே அநவதி காதிஸய, அபரிமித உதாரகுணஸாகரம் (கல்யாண குணங்களுக்கு நிதி-இதனால் உபயலிங்கம் பேசப்படுகிறது) அத்தகைய புருஷோத்தமன் - ஸ்ரீமந்நாராயணன் அவனை அடையாளங்களால் பிரதிபாதிதம்செய்த பிறகு அந்த சுருதிகள் சொல்கின்றன - அந்த பரமாத்மாவின் ஆராதனரூபமாகிற யாகம், தானம் ஹோமம் இவைகளை ஆத்மாவாக (உயிராகக்கொண்ட) உபாஸனையும்; இன்னும் பக்திரூப ஆராதனைகளும் - அதாவது ஸ்துதி (வந்தனம்), நமஸ்காரம், கீர்த்தனம், அர்ச்சாவாதாரங்களின் அர்ச்சனம் செய்வது - தியானம் ஆகியவற்றையும் சொல்லி; இப்படி

பலவகைப்பட்ட ஆராதனு ஸ்வரூபங்களைச் சொல்கின்றன- (சுருதிகள் - ஸ்மிருதிகள்). இதற்குப்பிறகு சுருதிகள் ஒது கின்றன. இத்தகைய பரமாத்மாவை (கர்மாக்களாலே) ஆராதனம் செய்வதால் அந்த பரஸ்மாத் புருஷனிடமிருந்து போகம் அபவர்க்கமாகிற மோக்ஷம், ஆகிற இகபரலோக பலன்கள், (அநிஷ்ட நிவிருத்தி உள்பட); திருப்தியடைந்த பரமாத்மாவினுலே அனுக்ரஹிக்கப்பட்டு உபாஸகன் சுப பலன்களை பரமாத்மாவிடமிருந்தே பெறுகிருன், ஆகவே பரமாத்மாவே ஸகல கர்மாக்களுக்குப் பல ப்ரதன் மற்ற பிரமாணங்களுக்குப் ஸாதனமாகாதவன். சாஸ்திரம் தான் அவனை அறிய ஸாதனம், அந்த சாஸ்திரம் பகவானையே ஸர்வபல ப்ரதன் என்று கூறுகிறது - அதாவது அபூர்வம் இல்லை. மற்ற தேவதைகளும் ஆகமாட்டார்கள். ஆகவே தேவதாந்திர பஜனையை விட்டு, பரமாத்மாவையே ஸாக்ஷாத் தாகவே ஆராதிக்கவேண்டும் - இகபரலோக பாக்யத் திற்க்காக.

இவ்விதம் சுருதிகள் சொல்கிறபடி, நாம் சொல்வது - வேதக்கருத்துக்களின் படி ஸர்வம் ஸமஞ்ஜஸம் - எல்லாம் பொருத்தமாகும். இதனுல் ப்ருஹ்மத்திற்கு உபயலிங்கம் ஸித்தம் - ப்ருஹ்மமே உத்க்ருஷ்டமானது - எல்லாப் பலன் களையும் ப்ருஹ்மமே அளிக்கிறது என்பது தேறும்(உத்தமூர் ஸ்வாமி).

ஸ்ரீ பகவத் ராமானுஜவிரசிதே ஸ்ரீ பாஷ்யே—
மூன்ரும் அத்யாயம்—2ம் பாதம் ஸமாப்தம்.

ஸ்ரீ மதே பகவத் ராமானுஜாய நம:

(சுபமஸ்து)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாயநம: ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த தேசிகயதீந்திர
மஹாதேஸிகாய நம:

## பிருஹ்ம வித்யா - ஐந்தாம் பாகம்

### ஸ்ரீ பகவத் ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே மூன்ரும் அத்யாயம் – மூன்ரும் பாதம்

குணோப ஸம்ஹாரபாத:

# ஸர்வவேதாந்த ப்ரத்யயாதிகரணம்

ஸூ. सर्ववेदान्त प्रत्ययं चोदनाद्यविशेषात् (3-3-1)
ஸர்வ வேதாந்த ப்ரத்யயம் சோதநாத்ய விசேஷாத் (3-3-1)

**அவதாரிகை:** உபாஸனத்துக்கு உரிய பிருஹ்மத்தை எல்லாக் குணங்களுடன் கூடினதாக பிருஹ்மத்தை உபாஸிப்பதால், சாஸ்தி ரோக்த பலனை அடையமுடியும் - உபாஸனத்துக்கு உரிய குணங்களும் வெவ்வேறு சாகைகளில் உபநிடதங்களில ஓரிடத்தில் சில குணங்களும் மற்றும் சில சாகைகளில சில குணங்களும் விதிக்கப்பட்டிருப்பதால் - இவற்றை சேர்த்துக் கொண்டு - அந்த அந்த உபாஸனைக் குரிய எல்லாக் குணங்களுடனும் கூடியதாக பிருஹ்மத்தை உபாஸித்தல்-அதாவது ஒரு சாகையில் அதே வித்யைக்கு சொல்லிய குணங்களை வேறு சாகையிற் சொல்லிய குணங்களுடன் சேர்த்துப் பிருஹ்மத்தை ஆராதிப்பதால் - குணோப ஸம்ஹாரம் ஏற்படுகிறது. அதனுல் இந்த மூன்ரும் பாதம் குணோபஸம்ஹாரபாதம் எனப்பெயர். வித்யை ஒன்று; ஆராதனை செய்யப்படும் பொருளும் ஒன்று. அதற்கு சில

சாகைகளில் சில குணங்களுடனும், இன்னும் சிலவற்றில் சில குணங்களும் உபதேசிக்கப்பட்டிருப்பதால் - அதே வித்யைக்கு உபாஸன விஷயமான எல்லாக் குணங்களையும் ஒன்று சேர்த்துக் கொண்டே, வித்யா மூலமாக உபாஸனத்தைச் செய்யவேண்டும்—அதற்கான நியாயங்கள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன.

**சூத்ரார்த்தம்:**— ஸர்வவேதாந்த ப்ரத்யயம் - எல்லா வேதாந்தங்களையும் பிரமாணமாகக் கொண்ட ஞானம் (பிரத்யயம்) ஏகமித்யேவ விஜாநியாத் - ஒன்றுதான் என அறிய வேண்டும், ஏன்? சோதனுத் - விதி சப்தம் அதை (வித்யா ஸ்வரூபம், குணங்கள், தேவதை, பலசம்பந்தம் எல்லாவற்றையும்) விளக்குவதாகும். அவிசேஷாத் - இந்த குணங்கள் பொதுவாக இருப்பதுதான் அதன் காரணமாகும். (அதாவது வித்யையின் விதி - ஆராதிக்கப்படும் தேவதையின் ஸ்வரூபம், வித்யையினுல் யேற்படும் பலன் - இவை எல்லாம் ஒன்ருகவிருப்பதால் வித்யையின் ஐக்யம்-குணுேப ஸம்ஹாரம் ஏற்படுவதாகிறது. இவைகளில் பேதமிருந்தால் - வித்யையும் பேதப்படுகிறது — அதனுல் குணுேப ஸம்ஹாரம் யேற்படுவதில்லை. இங்கு ப்ரத்யயம் என்கிற பதத்திற்கு - பிருஹ்மத்தின் உபாஸனையில் ஆசையை உண்டாக்குவதற்கும், பகவானுக்கு ஸர்வ பல ப்ரத ஸாமர்த்தியமிருப்பதாலும், ஆராத்யமான பகவானுக்குத்தான் இந்த பெருமை உண்டு-வித்யைகளினுல் உபாஸிக்கப்படும் அவனது தனிப்பெருமையாகும். இன்னொரு விஷயம் கர்மாக்கள் வெவ்வேறு விதமாயினும், வித்யா (உபாஸனம்) ஒன்ருகும். குணுேப ஸம்ஹாரத்திற்கு-பல சாகைகளிலுள்ள ஓரே வித்யையின் குணங்களை ஒன்று சேர்த்து உபாஸித்தலுக்கு குணுேப ஸம்ஹாரம் என்றும்; அப்படி குணச் சேர்க்கையில்லாத போது - விகல்பம் எனச் சொல்லக்கூடும். வித்யா ஏகம் - உபாஸனுவிதி முத்யம் இவைகளைப் பற்றிச் சொல்லும் விஷயமாகும்).

ஸ்ரீபாஷ்யம்:— இதுவரை சொல்லப்பட்ட விஷயம் - பிருஹ்ம உபாஸனையில் இச்சையை (ஆசையை) உண்டாக்குவதற்கு - பிருஹ்மமே எல்லாப் பலன்களையும் கொடுக்க சாமர்த்தியம் பெற்றது; அந்த சக்தி தனிப்பட்ட பெருமையைப் பெற்றது பிருஹ்மம். (முதற்பாதம் வைராக்யபாதம், இரண்டாம்பாதம் உபயலிங்க விசேஷத்தைச் சொல்வதாகும்.) இங்கு மூன்றும் பாதத்தில், பிருஹ்ம உபாஸனைக்கு வேண்டிய குணோபஸம்ஹாரம் - ஸித்தோபாயத்வம் காட்டப்படுகிறது. குணச்சேர்க்கை பெறுதபோது - வித்யா விகல்பம் ஆகிறது; ஆக இந்த இரண்டையும் நிர்ணயம் செய்வதற்கு வித்யாஐக்யம் — வித்யாபேதம் - இந்த விஷயங்கள் ஆராயப்படுகின்றன. (வேற்றுமை ஒன்றாக விருக்குமானால் வித்யாஐக்யம் என்பது ஒரு புறம் இருக்கட்டும். ஆனால் உபாஸிக்கப்பட்ட தேவதை - வித்யையின் ஸ்வரூபம் - குணங்கள் ஒன்றாகவிருப்பது, உபாயம் - பலன் எல்லாம் ஒன்றாகவிருந்தால் வித்யாஐக்யம் யேற்படலாம். வ்யக்தி வேறுபட்டால், தேவதை மாறிவிட்டால், ஸ்வரூபமும் மாறிவிடுகிறது. அதனால் வித்யாபேதம் விகல்பமாகும் - பலனும் வேறாகும்).

முதலில் வித்யாஐக்யம் - வித்யாபேதம் என்பதை நிருபிப்பதற்கு - வித்யாரூபபேதமிருக்கிறதா, ஏகரூபமாக விருக்கிறதா - என்கிற விஷயம் பேசப்படுகிறது. வித்யாரூபம் - ஒன்றாகவிருத்தல் பலசாகைகளில் ஓதப்பட்ட வைஸ்வாநர வித்யையில் சொல்லப்படுகிறது. இங்கே வித்யையின் பெயர் - பலன்கள் - இவை ஒன்றாக விருக்கிறது. அநேக சாகைகளிருப்பனும் ஒரே வித்யாரூபம், ஒரே தேவதை, ஒரே பலன் - அதனால் பலசாகைகளிலுள்ள குணங்களை ஸமுச்சயப்படுத்தி - அந்த குணங்களை பிருஹ்மத்திற்கு ஸ்வரூப நிருபக தர்மங்களாகிற ஸத்யம், ஞானம், அனந்தம், அமலத்வம் இத்யாதிகளுடன் சேர்த்து ஒரே தேவதையை உபாஸிக்கப் படுதல் வேண்டும். இங்கே வித்யா ஏகமா - பேதமா? எது சரியாகும்? (अविशेषात् சோதனு சப்தம் - பல சம்பந்தம் உபாஸ்யமானரூபம், பெயர் முதலியன அவிசே

ஷாத் - பொதுவாகவிருப்பது.) अविशेष - கர்மா வேறு. புந: ஸ்ரவணம்-பேதமின்றி அதையே திருப்பித் திருப்பி சொல்லுதல் - பிரகரண வித்யாஸங்களிருப்பினும் — அந்த வித்யையைப்பற்றி பிரஸ்தாவம்; இவைகளால் வித்யாபேதம் ஒவ்வொரு சாகையிலும் காட்டக்கூடியதாக விருக்கின்றன. ஏனெனில் வெவ்வேறு சாகைகளில் இந்த புந: ஸ்ரவணம், பிரகரணாந்தர பேதங்கள் - இந்தக் காரணங்களை தவிர்க்க முடியாத படியால் - வித்யாபேதம் - தான் பிராப்தம் என்று சொல்லக்கூடும் (பூர்வபக்ஷம்). (இங்கே பேதத்திற்கு சொல்லப்படும் காரணம் - சுருதி ஒரே விஷயத்தை திருப்பிச் சொல்லாது. திருப்பிச் சொல்லுதல் உண்டானால், அதே பிரகரணத்தில் புந: சிரவணம் இருக்குமானால், வேறிடத்திலேயும் விருக்குமானால், அது வித்யாபேதமாகும்). பல தடவை கூறுவது பயனற்றதாகும். அதனால் வித்யா பேதம்.

இந்தக்காரணத்தினால் முண். உ. 3 - 2 - 10ல் तेषामेवैतां ब्रह्मविद्यां वदेत शिरोव्रतं विधिवत् यैस्तु चीर्णम् - ஒருவன் பிருஹ்ம வித்யோபதேசம் சிரோவிரதம் உள்ளவனுக்குச் சொல்ல வேண்டும் (எவன் அக்னியை தன் தலையில் தரித்துக் கொள்கிறானோ - அவனுக்கு) அந்த வைதிக சடங்கு (ஸம்ஸ்காரம்) செய்யப்பட்டவனுக்குத்தான் பிருஹ்மோபதேசம் செய்யப்படவேண்டும் — என்று அதர்வ சாகைகளைப் பின்பற்றுபவர்களுக்கு ஓதியிருப்பதைக் காணலாம். இதனால் வித்யாபேதம் ஏற்படக்கூடுமல்லவா ? இங்கே சிரோவிரதம் அனுஷ்டிக்கும் ஆதர்வணிகர்களுக்கே வித்யா உபதேசம் சொல்லப்பட்டுள்ளது. வித்யைஐக்யம் இங்கே சொல்லப்பட வேண்டுமானால், இந்த ஆதர்வணிகர்களால் அனுஷ்டிக்கப்படும் சிரோவிரதம் மற்ற சாகைகளை ஓதுபவர்களுக்கும் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாகும். ஆகவே இந்த நியமம் அநாவசியமாக நேரிடும். ஆகவே வித்யாபேதமே - என்பது பூர்வபக்ஷம்.

இந்த அபிப்ராயத்திற்கு நாம் மறுமொழி கூறுவோம். सर्ववेदान्तप्रत्ययमेकमुपासनमिति-எல்லாச் சாகைகளிலும் ஓதப்படும்-உபாஸனம் ஒன்றே ஒன்றுகும் - அதாவது ஒரே வித்யை யைப் பற்றியதாகும். ஏன்? चोदनाद्य विशेषात् - விதிகளிலே - (சோதனு சப்தங்களிலே) பேதமில்லை; - அவிசேஷாத் - பொதுவாகக் கூறியிருப்பது - அதுவே காரணம். விதி என்கிற கட்டளை - இங்கே சிரோவிரதம் ஸம்ஸ்காரம் உள்ள வர்களுக்குத்தான் பிருஹ்மோபதேசம் என்பதாகும். அந்த விதி, சோதனு - என்கிற பதங்களுக்கு குறிப்பிட்ட அர்த்தம் தான் அதன் தாதுவினுல் ஏற்படும்; அது எதுபோலவென்றுல் - பிரு. உ. 3-4-5ல் சொல்லப்பட்ட उपासीत (உபாஸிக்கப்படவேண்டும்); विद्यात् (உபாஸிக்கவேண்டும்) - என்கிற கட்டளையிடும் ஏக சப்த ஜாதியைச் சொல்வதாகும், அதன் அர்த்த விசேஷவிதி. ஆதி சப்தேந - (சூத்ரத்திலுள்ள ஆதி) சம்பந்தம் – வித்யையின் பலன், ரூபம், நாமம் (பெயர்) - இவை பூர்வ மீமாம்ஸத்தில் இவ்விதம் காட்டப்படுகிறது. பூர்வ. மீமா' 2-4-9ல் एकं वा संयोगरूपचोदनाख्याऽविशेषात् - எல்லா வேத சாகைகளிலும், அக்னிஹோத்ரம் என்கிற வைதிக கர்மா (சடங்கு) சொல்லப்பட்டிருக்கிறது. அது ஒன்றே தான், ஏனெனில் பலனிலோ, ரூபத்திலோ, (அதாவது நைவேத்யப் பொருள்கள், உபகரணங்கள் இவைகளில் வித்யாஸமில்லாதபடியாலே) - தேவதை (உபாஸிக்கப்படும் வ்யக்தி) ஒன்றுதான் - விதியும் - வித்யையின் பெயரும் – எல்லாமே ஒன்றுதான். (வேருகச் சொல்லப்படவில்லை - வித்யாஸமாகவில்லை).

இந்த விதிகள் கர்மகாண்ட சாகாந்தராதிகரண சூத்ரங்களிலே - ஸம்யோக (பலசம்பந்தம்) ஆக்யா - (ரூபம் - நாமம் இத்யாதி) எல்லாம் ஒன்ருகக் கிரஹிக்கப்படுகின்றன. இந்த மாதிரி சோதனு விதிகள் வேருகவில்லாதபடியால், அதே வித்யைதான் மற்ற சாகைகளிலும் ஞாபகப்படுத்தப் படுகிறது - இதனுல் வித்யாஐக்யம் சொல்லப்படுவதாகும். (இங்கு கூறப்படுகிறது - பூர்வ மீமாம்ஸ நியாயம் - அக்னி ஹோத்திரம் வெவ்வேறு சாகைகளிலும் ஓதப்பட்டாலும் -

அது ஒன்றேதான்—அதை (அந்த ஏகத்வத்தை) நிர்ணயிக்க, லக்ஷணங்கள் ஓதப்படுகின்றன. ஸம்யோகம் - ஆக்யா - இத்யாதிகளாகும். இதைத்தவிர - அதர்வாங்கிரஸ் ஓது பவர்கள் சிரோவிரதம் முதலில் அனுஷ்டிக்கவேண்டும் என்கிற நியமம். இந்த நியமம் பிருஹ்ம வித்யைக்கு அங்க மில்லை; வேத படனத்திற்கு அங்கமாகும். ஆகவே சிரோ விரதம் உபாஸனத்திற்கு அங்கமில்லை. அத்யயனத்திற்கு அங்கமாகும். ஆகவே பூர்வபக்ஷயின் கருத்து குணோப ஸம்ஹாரம் இல்லை - வித்யாபேதம் என்கிற வாதம் தவறாகும் வித்யைக்கு அங்கமில்லாதபடியால், குணோப ஸம்ஹாரம் - யேற்படலாம் எனக் கருத்து).

அவ்விதமே சாந்தோக்யத்திலும் வாஜஸேநாயினர் களின் சாகைகளிலும் (பிரு. உப); வைஸ்வாநர வித்யையை (ஏகரூபா) ஒன்றாக (வித்யாஐக்யமாக) - ஏக வித்யையாக) சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே அறியப்படவேண்டிய நிரூபணம் - ஆராதிக்கப்படும் தேவதை வைஸ்வாநரனாகும்; அந்த ஒரே ஒரு தேவதையின் ஸ்வரூபம், பெயர், பலன்கள் அடையப்படுவது, விதிபர்யாயங்களாலே — உபாஸ்ய தேவதை வைஸ்வாநரனாகிறபடியாலே, அந்த ரூபத்துடன் கூடியது - இவைகளில் வித்யாஸம் (சாகைகளுக்குள்ளே இல்லை); ரூபத்திலோ — ஸம்யோகத்திலோ, ஆக்யாவிலோ (பெயரிலோ) வித்யாஸமில்லாதபடியால் - வித்யா ஒன்று தான் - இந்தக் காரணங்களாலே फलसंयोगोऽप्युभयत्रापि ब्रह्मप्राप्ति-रूपोऽविशिष्टः — பல ஸம்பந்தம், ரூபம், சோதனை (விதி) ஆக்யை (பெயர்) - இவை பொதுவாகவிருப்பதால், ஜூஹா யாத் என்பதால் விதிக்கப்படுகிறதோ - இவ்விதமே இரண்டு சாகைகளிலும், பிருஹ்மபிராப்தி பலனாக ஓதப்படுகிறதால் - இவைகளை பிரத்யபிஞை செய்வதால் - சாகைகள் வேறாயி னும் - வித்யை (வைஸ்வாநரவித்யை) ஒன்றுதான்-ஐக்யம் - वैश्वानरमुपास्ते इति ।

மேல்சொல்லப்பட்ட இன்னொரு ஆக்ஷேபம் (பூர்வ பக்ஷியினால்) पुनश्चर्णं - திருப்பிச் சொல்லுதல் வித்யா

பேதத்திற்கு காரணம் என்பதற்கு; திருப்பிச் சொல்லுதல் வித்யாஸமின்றி பல சாகைகளிலும், வெவ்வேறு பிரகரண சந்தர்ப்பங்களிலே அது வருவதாலும், வித்யாபேதம் இருக்கிறது - என்கிற பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம் அடுத்த ஸூத்ரத்தில் பரிஹரிக்கப்பட்டு - வித்யாஐக்யம் எனக்காட்டப் படுகிறது.

ஸூ. भेदान्नेतिचेदेकस्यामपि (3-3-2)

பேதாந்நேதி சேத் ஏகஸ்யாமபி (3-3-2)

பேதாந்நேதி சேத் - உபாஸனையில் पुनःश्रवणं - திரும்பப் படித்தல் ஏற்படுவதாகின், (உண்டாகுமானால்) (கர்மபேதம் ஏற்படுவதுபோல உபாஸனமும் வேறாகவிருக்க வேண்டும்) (ஐக்யமில்லை) என்று சொல்லப்படுமாகில்; ந - அவ்வித மில்லை. (ஏனெனில்) ஏகஸ்யாமபி - ஒரேவித்யை (உபாஸனை) யிலும் கூட இம்மாதிரி புந: ஸ்ரவணம் - திரும்பப் படித்தல் இருக்கலாம். (அதனால் வித்யாபேதமில்லை - ஐக்யமே ஆகும்) - ஏனெனில் அந்த வித்யையைப் பயிலும் வ்யக்திகளில் வித்யாஸம் இருப்பதாலே) (நாமம் இத்யாதிகளின் வித்யாஸம்).

அவிசேஷ புந: ஶ்ருத்யா - பொதுவாகக் கூறியும், மீண்டும் திரும்பப்படித்தலும் - பிரகரண வெவ்வேறு சந்தர்ப்பங்களிலே - கூறுவதாலும் அடையப்படுவது வித்யாபேதமே - வித்யை ஐக்யமில்லை என்று கூறப்படுமாயின்-ந-அவ்விதம் சொல்வது சரியாகாது. ஒரே வித்யையிலும் - அதன் ரூபம் புந: ஸ்ரவணம் (திரும்பப் படித்தல்) - பல பிரகரணங்களில் காணப்படுவது - ஏற்படலாம் - காணப்படுகிற படியால் அதனால் வித்யாஐக்யமே (பேதமில்லை). எப்போது வித்யாபேதம் ஏற்படுமென்றால், ஒரே வித்யார்த்திக்கு திரும்பப்படித்தலும் பல பிரகரணங்களில் ஓதப்படுவதும் ஏற்படுமாயின் சரியாகும். ஆனால் வ்யக்தி வேறாக விருக்க, (பயிலும் மாணுக்கன் வேறாக விருக்க) - புந: ஸ்ரவணம் தோஷ

மாகாது. விதி சம்பந்தப்பட்டவரை - அது வேருகவும் வேருன விஷயத்தைச் சொல்வதாகாது - அத்தகையவர்களின் சம்பந்தத்திலே. न विधेयान्तरसंभव:).

இன்ஞெரு ஆட்சேபமிருக்கிறதே - சிரோவிரதம் உள்ளவர்களுக்கே பிருஹ்மோபதேசம் செய்யவேண்டும் (ஆதர்வணிகர்களிடம்) - என்கிற நியமம் சொல்லப்படுகிறதே - அதனுல் (விதியிஞல்) வித்யாபேதம் ஸித்திக்கும் (காட்டப்படுகிறது) என்கிற ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் அடுத்த சூத்ரத்தில் பதில் சொல்கிருர்.

சூ. स्वाध्यायस्य तथात्वे हि समाचारेऽधिकाराच्च सववच्चतन्नियम: (3-3-3)

ஸ்வாத்யாயஸ்ய ததாத்வேஹி ஸமாசாரோ அதிகாராச்ச-ஸவவச்சதந்நியம: (3-3-3)

ஸ்வாத்யாயஸ்ய - சிரோவிரதம் அதர்வவேத அத்யயனத்திற்குச் சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும்; ஸமாசாரே - வேத அத்யயனத்திற்கு வேண்டிய ஸம்ஸ்காரத்தை உபதேசிக்கும் கிரந்தத்தில் - ததாத்வேஹி - அத்யயன ஸம்ஸ்காரம் என்று ஆதர்வணிகர்கள் சொல்கின்றனர்; அதிகாராத்ச - சுருதியில்; (முண்டகத்தில் ஏதத் - அதீதே என்று அத்யயனத்திற்குச் சொல்லப்பட்டதால்); ஸவவத்ச - ஸௌர்யம் என்று ஹோமம் தொடங்கி ஸதௌதநம் வரை. யுள்ள 7 ஹோமங்கள் அதர்வவேத படனீயர்களுக்கே சொல்லப்படுவது எவ்விதமோ - அதுபோல (தந்நியம: - முண்டக உபநிஷத் அத்யயனம் செய்பவர்க்கே சிரோவிரதம் (தலையில் அக்னியைத் தரிப்பது) நியமமாகும். (அதாவது சிரோவிரதம் அதர்வவேத படனீயத்தின் சம்பந்தமே; அது வித்யையினுடையதாக ஆகாது) ஸமாசாரத்தில் - வேத விரதத்தை உபதேசிக்கும் கிரந்தத்தில் இந்த சிரோவிரதம் அனுஷ்டிக்காதவன் முண்டக உபநிஷத்தை அத்யயனம் செய்யகூடாது - என்கிற இடத்தில் தொடர்ந்து ஏதத் - அதீதே (அத்யயனத்தைச் சொல்லும் சப்தமிருப்பதால்) அந்த முண்டக உபநிஷத்காரர்களுக்கு அத்யயன நியமமாகும்.

அதனால் இந்த சிரோவிரதம் எல்லா பிருஹ்மவித்யையிலும் வரத்தான் வரும் என்கிற ஆட்சேபத்திற்கு - பதில் - அவ் விதமில்லை என்பதாகும். சிரோவிரத உபதேச நியம தர்சனம் வித்யாபேதத்திற்கு சொல்வதாகும் என்று (நீ (பூர்வபக்ஷியை) சொல்வாயாகில் - நாம் சொல்வது - அவ் விதமில்லை - வேத அத்யயநத்திற்கு இந்த சிரோவிரதம் அங்கம் - வித்யைக்கு அங்கமாகாது.

स्वाध्यायस्य तथात्वे हि तन्नियमः - ஸ்வாத்யாயத்திற்கு இந்த சிரோவிரதம் அங்கமாகும். ஸ்வாத்யாயம் - அந்த வேதத்தை அத்யயனம் செய்து, வேதம் ஸித்திப்பதற்கு - அந்த வேதசாகைகளை ஓதுபவர்களுக்கு ஸம்ஸ்காரம் நியமமாக ஓதப்பட்டிருப்பதால், அந்த நியமம் ஓதப்பட்டது. ஆனால் இங்கே வித்யைக்கு அந்த ஸம்ஸ்காரம் அங்க மாகாது. முண். உ. 3 - 1 - 11ல் नैतदचीर्णव्रतोऽधीते - எவன் ஒருவன் இந்த நியமத்தை (சிரோவிரதத்தை) செய்யாத வனோ - அவன் முண்டகம் கற்றுக் கொள்ளக்கூடாது. இதனால் விரதத்திற்கும் ஸம்ஸ்கார நியமத்திற்கும் சம்பந்தம் பேசப்பட்டதாகும். இதேமாதிரி ப்ரயோகம் ஸமாசாரம் என்கிற கிரந்தத்தில் இருப்பதாகவிருக்கிறது. (ஸமாசாரம்- வேதவிதிகளைச் சொல்லும் கிரந்தம்) समाचारेऽधिकाराच्च - கிரந்தத்தின் அதிகாரத்தினால் (ஆதாரத்தினால்) - ஸமா சாராக்யாயாகிற (ஆக்யா - பெயருள்ள) கிரந்தத்தில் - இப்படி ஓதப்பட்டிருக்கிறது. इदमपि वेदव्रतेन व्याख्यातम् - இதுவும் கூட - (அதாவது சிரோவிரதத்துடன் இதுவும்) வேத விரதம் எனச் சொல்லப்பட்டிருப்பதால் - (வித்யா விரதமில்லை என்பதாகும். முண். உ. 3-1-10ல் तेषामेवैतां ब्रह्मविद्यां वदेत — (முண்டகர்களுக்கு) அக்னியைத் தலையில் தரிப்பவர்களுக்குத் தான் உபதேசம் செய்ய வேண்டியது - பிரும்மோபதேசம் சொல்லப்பட்டிருப்பதால் - இங்கே வேத வித்யைச் சொல்லப்படுகிறது.

அந்த நியமம் सववच्च तन्नियमः - "ஸவ" என்கிற ஹோமத்தில் ஆஹுதிகள் என்கிற விஷயத்தைப் போல

எப்படி ஸவ ஹோமங்கள் ஏழு சூர்யர்கள் முதல் (அதாவது ஸௌர்யம் முதல் ஸதௌதனம் முடிவிலுள்ள ஏழு ஸவங் கள் (ஹோமங்கள்), வேறு வேதங்களில் ஓதப்பட்ட த்ரே தாக்னி (கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணாக்னி)களின் சம்பந்தம் காணப்படாததாலும், அதர்வ வேதத்தில் சொல்லப்பட்ட ஏகாக்னி சம்பந்தம் காணப்படுவதாலும், அதர்வணிகர்களுக்குமட்டுமே என இந்த சிரோ விரதம் நியமமாகச் சொல்லப்பட்டதாலும் - அதுபோலவே (சிரோ விரதமாகிற முண்டக அத்யயன விஷயத்திலே) நியமமாகக் கொள்ளப்படுவது-அதனால் அதற்கு மட்டுமே சொல்லப்படுவ தாலும் (ஏகாக்னி விஷயமாக விருப்பதாலும் - திரேதாக்னி களின் ஸம்பந்தம் காணப்படாததாலும் - வித்யைக்கு நியம மாகாது. சிரோவிரததாரணம் என்கிற ஆட்சேபணை சரி யாகாது. ஆகவே வித்யாஐக்யம் என்பது சரியாகும். (பேதமில்லை).

(இங்கே வேத்யம் - எல்லா வேத சாகைகளிலும் (அதா வது ஸகுண நிர்குணபரவாக்யங்களிலும்) வித்யாஐக்யம் ஸித்திக்கிறது. ஏழு சூர்யர்கள் - அதர்வ ஸம்ஹிதை யிலும் — சொல்லப்பட்டவர்கள் - ஆரோக, ப்ரஜ, பதர, பதங்கஸ்வர்நர, ஜ்யோதிஷ்மந், விபாஸம். ஸவ - ஹோமம்- ஸதௌதனம் வரை ஏழு ஹோமங்களாகும்).

சூத்ரம் दर्शयति च (3-3-4)

தர்சயதி ச (3-3-4)

சுருதிகளிலும் தர்சயதி ச எல்லா வித்யைகளும் ஒன்று தான் எனக்காட்டப்படுகிறது.

தர்சயதி ச - சுருதி காட்டுகிறது. ஸர்வவேதாந்த பிரத்யயத்வம் (ஞானத்தினால் - ஒரே வித்யைதான் அறியப் படவேண்டியது. சுருதிரூப உபாஸநம் - எல்லா வேதாந்த ஞானத்தினால் அறியப்பட வேண்டியதாகும். அவ்விதமே சா. உ., 8-1-1ல் दहरम् यदन्तरस्तदन्वेष्टव्यम् - என்று சொல்லி

விட்டு (அந்த ஸூக்ஷ்மமான ஆகாசத்தின் உள்ளே எது இருக்கிறதோ, எது அந்த உள்ளுக்குள்ளேயும் இருக்கிறதோ—) அதைத்தேடி அடையப்பட வேண்டும் (அதாவது தஹராகாசம் அந்த ஆகாசத்திற்குள்ளிருக்கும் அபஹதபாப்மத்வாதி அஷ்டகுண விசிஷ்ட பரமாத்மா—) அது இவ்விதம் சாங். சுருதி தொடர்ந்து சொல்லிக் காட்டுகிறது - किं तदत्र विद्यते, यदन्वेष्टव्यम् - இந்த பதிலுக்கு முன் சொல்லப்பட்டது கேள்வி- எது அதன் உள்ளேயிருக்கிறது ? (சா. உ. 8-1-2) - இந்த பதில் கூறுகிறது - தஹராகாசமும் - அதனுள் இருக்கும் அஷ்டகுணவிசிஷ்டன் பரமாத்மாவேயாகும் - அதுவே உபாஸிக்கப்பட வேண்டியதாகும் (தஹராகாசமும் எட்டு குணங்களும்) என்று சொல்லப்பட்டது. தைத்ரீயத்திலேயும் - சாந்தோக்ய உபாஸனையைப் பற்றி இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது - தை. நா, 10-23 तत्रापि दह्रगगनं विशोकस्तस्मिन यदन्तस्तदुपासितव्यम्—அந்த தஹரத்திலே (ஹ்ருதயாகாசத்திலே), எது ஸூக்ஷ்மமோ, ஆகாசத்தைப்போல அளவிட முடியாதபடி விருக்கிறதோ - எது துக்கம் முதலிய தோஷங்கள் இல்லாதபடியாக விருக்கின்றதோ - அதாவது பிருஹ்மமும் - அதனுள்யிருக்கும் எட்டு குணங்களும் அதைத்தான் உபாஸிக்க வேண்டியது. இதனுல் தஹராகாசமாக விருக்கும் பிருஹ்மம் குணஷ்டக விசிஷ்ட பரமாத்மா - அவனே அந்த குணங்களுடன் உபாஸிக்கப்பட வேண்டியது - என்று சொல்லப்பட்டதாகும். இங்கே இரு சாகைகளிலும் வித்யை - தஹர வித்யை ஒன்றுதான் ஆனபடியால் - ஒரு சாகையில் ஓதப்பட்ட குணங்களே இன்னொரு சாகையுடன் ஸமுச்சயமாக மாற்றி ஒன்ருகச் சேர்ப்பதால் குணோப ஸம்ஹாரம் ஏற்படுகிறது என்பதாகும்).

இந்த விதமாக பூர்வமீமாஸ நியாயப்பிரகாரம் சாகாந்தர அதிகரணத்தில் ஸர்வசாகா பிரத்யய நியாயத்திலிருந்து ஏற்படுத்தப்படும் வித்யைக்யம் ஸ்தாபித்த பிறகு, ஸூத்ரக்காரர் அந்த பிரயோகத்தின் பிரயோசனத்தை அடுத்த ஸூத்ரத்தில் இவ்விதம் சொல்கிருர்.

## ஸி. சூத்ரம். उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च (3-3-5)

## உபஸம்ஹாரோ அர்த்தா பேதாத் விதிசேஷவத் ஸமானே ச (3-3-5)

(எல்லா வேதசாகைகளிலுமுள்ள வித்யையானது ஒன்றேயாகும் என விசாரிப்பதன் பலனைச் சொல்கிறார். சங்கரர் இந்த ஒரு சூத்ரத்துக்குத் தனி அதிகரணமிடுகிறார்.) வேறிடத்திற் சொல்லப்பட்ட குணங்களுக்கு — ஸமானே - அதுபோல வேறிடத்தில் சொல்லப்பட்ட ஒரே மாதிரியான உபாஸனத்திற்கு (வித்யைக்கு) - உபஸம்ஹார: - சேர்த்துக் கொள்ளுதல் (உபஸம்ஹாரம்) அவசியமாகும், ஏனெனில் அர்த்தாபேதாத் - பலன் ஒன்றாக விருப்பதே காரணமாகும்; விதிசேஷவத் - விதிசேஷங்களைப் போல.

இந்தவிதமாக எல்லா வேதாந்தங்களில் உபாஸனத்தின் (வித்யையின்) ரூபம் ஸமானமாக - ஒரே மாதிரியாக விருப்பதால், அந்த வித்யையின் குணங்கள் - ஒரே சாகையில் ஓதப்பட்டவை வேதத்தின் இன்னொரு சாகையினோடு உபஸம்ஹாரம்செய்யவேண்டியது. (மாற்றிச் சேர்த்துக்கொண்டு - குணோபஸம்ஹாரம் செய்வது) கர்த்தவ்யமாகும். எப்படி? विधिशेषवत् अर्थाभेदात् - ஒரே விதமான பலன் இத்யாதிகளில் சமத்வம் இருப்பதனால் - (எதுபோல) விதியின் சேஷங்களைப்போல. (ஸர்வசாகாப்ரத்யய வித்யைக்யே - குணோப ஸம்ஹாராயோகோऽபிதத் ஸாதக:). எப்படி ஒரே வித்யையில் வேதாந்த சுருதிகளில் - விதிசேஷங்கள் (auxiliaries of an injunction) வைஸ்வாநர, தஹராதி வித்யைகளில் இன்னும் இதர வித்யைகளிலும் இருக்கிறதாகச் சொல்லப்பட்டிருப்பது போல, குணம், (பலன்) இத்யாதிகளினால் அந்த அந்த வித்யைகளுடன் சம்பந்தம் கொண்டிருப்பதால், அந்த குணங்களை உபகாரரூப (மாற்றி வித்யையுடன் இதர சாகைகளின் குணங்களோடு சேர்த்துக் கொள்ளுதல்) பிரயோஜனத்தை அடைகின்றன (குணோப ஸம்ஹாரத்தினால்) - வித்யைக்கு உதவி - அதன் பலன்களை அப்யஸிப்பவனுக்கு அடையச் செய்கிறது - எவ்விதமென

அதுபோல இன்னொரு வேதாந்த பிரகரணத்தில் ஓதப்பட்ட குணங்கள் இந்த (குறிப்பிட்ட) வித்யையுடன் சம்பந்தம் கொண்டிருப்பதால் (ஸமானமாக விருப்பதால்) - (ரூபம் - பலன் - ஆக்யா இத்யாதிகளில் இருப்பதால்,) அந்த குணங் களை மாற்றி மற்ற சாகைகளின் குணங்களோடு ஒன்று சேர்த்து - அவிசேஷாத் - இரண்டிலும் குணங்கள் பொது வாகவும் வித்யாஸம் ஏதும் இல்லாமலுமிருப்பதால் - உப ஸம்ஹாரம் செய்ய அவசியமாகிறது - என்று அர்த்தமாகும். ச என்கிற வார்த்தை (சூத்திரத்திலுள்ளது) அவதாரண சப்தமாகும் (உறுதிபடுத்துவதாகும்).

(ஒவ்வொரு வித்யையின் குணங்கள் வித்யைக்கு மிக்க உபயோகமாக - அதன் பலனை அடையவிப்பதில் உதவு கின்றன. இங்கு இரண்டு வித்யைகள் - ஒரே பெயர் - ஒரே பலன் - ஒரே நோக்கம் இருப்பின் - அந்த வித்யைகள் ஸமானமாக - ஒன்றேயாகும். அவ்விதமிருக்கும்போது - அந்த ஒரு சாகையின் குணங்களை மற்றொரு சாகைக்கு மாற்றி - இரண்டையும் ஸமுச்சயமாக ஒன்றாகச் சேர்த்து உபாஸிக்க வேண்டியது - இது குணோபஸம்ஹாரத்தின் பலனாகும்.)

அதிகரணம் - 2 - அந்யதாத்வாதிகரணம் (3-3-2)

ஸூ. சூ. अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात् (3-3-6)

அன்யதாத்வம் சப்தாதிதி சேந்நாவிசேஷாத் (3-3-6)

சாந்தோக்யம், பிருஹதாரண்யகம் - இந்த இரண்டிலும் சொல்லப்படும் உத்கீத வித்யைக்கு, அந்யதாத்வம்-வேறொன் றாக (பேதமாக) அறியத்தக்கது, - ஸப்தாத் - சாந். பிருஹ தாரண்யகத்தில் - இதிசேத் – சொல்லப்படுமாகில், ந அது வில்லை–(பொருந்தாது). ஏனெனில் அவிசேஷாத் - இரண்டு இடத்திலும் ஒரே வித்யைதான் பேசப்படுகிறது. பிரகரண ஆரம்ப வாக்யங்களிலே இந்த உத்கித விதியையைச் சொல் லும் இரண்டு உபநிஷத்துக்களிலும் (சாந்; பிருஹ. உ),

யர்தொரு வித்யாஸம் இல்லாமலிருப்பதாலே. இந்தக் காரணங்களால் இரண்டு இடத்திலும் ஒரே வித்யை தான் பேசப்படுகிறது.

மேலே சொல்லப்பட்டது - வித்யை ஐக்யத்வம் ஏற்படுவதாகிறது - எப்போது விதிவிஷயங்களிலே (சோத நாத்ய விசேஷாத்) - வித்யாஸமில்லாத போனால் - அதனால் வித்யை ஐக்யம் யேற்பட்டு - ஒரு சாகையில் ஓதப்படும் குணங்களை இன்னொரு சாகையின் குணங்களுடன் சேர்த்து - குணோப ஸம்ஹாரம் செய்ய வேண்டியது என்பதாகும். (एकत्वे च गुणोपसंहार: कर्तव्यम्). இதற்குப் பிறகு - இன்னும் சில வித்யைகளில்-நன்ருக விசாரித்த பிறகு, விதி; அதுபோல இன்னும் (பிரத்ய பிஞாஹேறதுபூத விசேஷோऽस्ति -) சில விசேஷங்கள் எதனுல் இந்த வித்யைகளுக்குள் பரஸ்பரம் ஒற்றுமை - ஸாத்ருஸ்யம் ஏற்படுமோ - அந்த விசேஷங்கள் (அந்த வித்யைகளில்) இருக்கின்றனவா - இல்லையா என்பது இங்கே நிர்ணயிக்கப்படுகிறது.

இந்த உத்கீத வித்யை சம்பந்தமட்டில் - இரண்டும் வாஜஸேநயர்களும் சாந்தோகர்களும்-சொல்வதால் இரண்டு உபநிஷத்துக்களின் விஷயமாகிறது. அதில் வாஜஸேனர்கள் சொல்வதில் இப்படி சுருதி ஆரம்பிக்கிறது - பிரு. உ. 3 - 3 - 1 - द्वयाह प्राजापत्या: देवाश्चासुराश्च - என்று ஆரம்பித்து (பிரஜாபதியின் புத்ரர்கள் இருவிதம் - தேவர்கள் அசுரர்கள், பிறகு சுருதி தொடர்ந்து ஓதுகிறது - ते ह देवा ऊचु: हन्तासुरान् यज्ञे उद्गीथेनात्ययाम - வாஸ்தவமாகவே தேவர்கள் சொன்னார்கள் - நாம் இந்த அசுரர்களை யாகத்திலுள்ள உத்கீதத்தினுல் (பலத்தினுல்) ஜயித்து விடுவோம் - என்று ஹர்ஷத்துடன் சொல்வதாக உத்கீதவித்யையின் பலனுக அசுரர்களின் நாசத்தைச் சொல்லிவிட்டு, இந்த உத்கீதத்தை திருஷ்டிவிதியாக - வாக்கு, முதலியவைகளுடன் ஆரம்பித்து மனம் பர்யந்தம் உபாஸிக்கப்படும் பொருள்களாக ஆகுமானுல் - அப்போது அசுரர்களின் கையில் அபஜயம் நிச்சயம் யேற்படுவதாகிறது (அதாவது தோல்வி தேவர்களுக்கு என்று கூறிவிட்டு;

பிறகு இந்த சுருதிவாக்ய ஆரம்பமாக - அது ஓதுகிறது - भवत्यात्मना; पराऽस्य द्विषन् पाप्मा भ्रातृव्यो भवति, य एवं वेद - அவர்கள் (தேவர்கள்) முக்யபிராணனுடன் பேசினார்கள் - (பிரு. உ. 1 - 3 - 7) - அதில் சொல்லப்பட்டது - உத்கீதத்தை பிராண திருஷ்டியாக உபாஸிப்பதால், அசுரர்களின் அபஜயம் (தேவர்களால்) உண்டாக்கப்படுகிறது.

(சத்ரு பராஜயம் - இரண்டாவதான பிராண திருஷ்டியினால் உபாஸனத்தினால் உண்டாக்கப் பட்டதாகும். இதே பிரகாரம் சாந்தோகயத்தினர்களாலும் வாக்ய பிரகரணம் இப்படி ஆரம்பமாகிறது. சா. உ. 1-2-ல் देवासुरा ह वै यत्र संयेतिरे - (எங்கே தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து போரிட்டார்களோ) - சுருதி தொடர்ந்து ஓதுகிறது - तद्ध देवा उद्गीथमाजह्रुः अनेनैनान् अभिहनिष्याम: - அவர்கள் உத்கீதத்தை நினைத்தார்கள் - அதைக் கொணர்ந்து - சொன்னார்கள் - 'நாம் இதன் உதவியினால் அசுரர்களைக் கொன்றுவிடுவோம்.' இங்கே உத்கீதத்தினால் அசுரர்களின் பராபவத்தை(தோல்வி) நினைவுபடுத்திவிட்டு - ; வாஜஸேநர்கள் சொல்லிய பிரகாரம், உத்கீதத்தை வாக்கு முதலியவற்றில், ஆரம்பித்து மனம் பர்யந்தம் திருஷ்டி விதியாக உபாஸித்தால் தோஷங்கள் (ஹானிகள்) ஏற்படும் ; பிறகு சா. உ. சொல்லத் தொடங்குகிறது - अथ ह य एवायं मुख्यः प्राणस्तमुद्गीथमुपासाञ्चक्रिरे- இப்போது - எவர் இந்த முக்யபிராணனாகவிருக்கிறாரோ, அந்த உத்கீதத்தை பிராண திருஷ்டியினால் உபாஸிப்பதால் அசுரர்களின் அபஜயம் யேற்படும் எனவும் கூறப்பட்டது. (பிராண திருஷ்டிதிருஷ்ட்யா அசுரபராபவம்) ; பிறகு சா. சுருதி சொல்கிறது - यथाऽश्मानमाखणमृत्वा विध्वंसेत, एवं हैव स विध्वंसते, य एवं विदि पापं कामयते-எவ்விதம் ஒருபிடி களிமண் கல்லின் மேல் பட்டு சிதறிவிடுமோ, அதுபோல, எவன் பிறர் ஒருவனுக்கு ஹிம்ஸையை நினைக்கிறானோ - அந்த ஒருவன் இந்த விதமாக அறிகிறானோ - பாபத்தைச் செய்ய இச்சிக்கிறானோ - அவன் அழிந்து போகிறான்-இதனால் உத்கீதத்தை பிராண திருஷ்டியாக உபாஸிப்பதால் சத்ருவின் அபஜயம்

ஏற்படுவதாகிறது. उद्गीथे प्राणदृष्टि विहिता - சத்ருவின் பரா பவம் சொல்லப்படுகிறது.

வேதன (உபாஸன) விஷயத்தில் விதி பிரத்யயம் (அதாவது பிரத்யயத்தினால் விதி சூசகம்); இல்லாதபோதிலும், உத்கீத சம்பந்தமட்டில் பல ஸாதனமாகப் பேசப்படுவதால், அதனாலே வேதன விஷயத்திலும் நாம் விதியைக் கல்பனம் செய்யவேண்டும். உத்கீத வித்யை யாகங்களின் நன்மைக்காக உபயோகப்படுகிறது, அதனாலே யாகம் பூர்த்தியாகிறது - மேலான பலன் கிடைக்கப் பெறுகிறது. ஆயினும் இன்னொரு பலன் சத்ருவின் பராபவம் - இது அர்த்தவாதத்தில் விவரிக்கப்படுகிறது, அதனால் முதலில் சொல்லப்பட்ட பலத்திற்கு (யாகத்தின் பலனை அளிக்கிறது) - விரோதமில்லாதபடியால் - அதை ஒப்புக்கொள்ள வேண்டியதாகும். இந்த விஷயம் தேவதாதிகரணத்தில் பிரதி பாதிக்கப்பட்டிருக்கிறது. அர்த்த வாதத்தின் பிராமாண்யம் இத்யாதி).

இங்கே ஒரு சம்சயம் யேற்படுகிறது - இங்கே வித்யா ஐக்யமா? - அல்லது பேதமா? எது சரியாகும்? வித்யா ஐக்யம் என்று சொல்வது சரியாகும். எப்படி? ஏனெனில் இரண்டு பிரகரணங்களிலும் உத்கீதமே பிராணபாவத்தை அடைந்து - அது உபாஸ்யப் பொருளாகச் சொல்லப்படுவதாலே, அதனால் चोदनाद्यविशेषात् - விதி சம்பந்தப்பட்டவரை, அவைகளுக்குள் யாதொரு வித்யாஸமில்லை. (விதி பொதுவாக விருப்பது ஒரு காரணம்); பல ஸம்யோகத்திலேயும், சத்ருவை பரிபவம் (அவமதிப்பது) செய்வது என்பதாலே, வித்யாஸம் இரண்டுக்கும் ஒன்று மில்லை - வேறுகவில்லை. மேலும் உபாஸ்யப் பொருளாகிற உத்கீதம் எது பிராண ரூபத்தை அடைந்திருக்கிறதோ - அதனால் ரூபமும், வித்யாஸமில்லை - இதனால் உத்கீதமாகிற உபாஸ்யப் பொருள் ஒன்றுக விருக்கிறது. (ரூப ஐக்யம் - உபாஸ்ய ஐக்யம் - விதி கூட - வித் என்கிற தாதுவுடன் (அறிவதற்கு) - சம்பந்தப்பட்டது - இரண்டிலும் ஒரே மாதிரியாகவிருக்கிறது. இரண்டிலேயும் நாமம் (பெயர்) - கூட உத்கீத வித்யை -

அதுவும் வேருகவில்லை. (ஒன்ருகவிருக்கிறது). (ஆக்யா என்பது பெயர்) - (கதை).

இங்கே சூத்ரக்காரர் சித்தாந்த சாயையாக பல ஆட்சே பங்களை எழுப்பி – அதற்கு பரிஹாரம் செய்கிருர் - இவ்வித மாக - பரிஹரிக்கிருர் - சூ. 3-3-6) अन्यथात्वं शब्दादिति चेन्नावि-शेषात् – சாந்தோக்யம் - பிருஹதாரண்யகத்தில் - ஓதப்பட்ட உத்கீதவித்யை வேருக விருக்கிறது என்று சொல்லப்படு மாகில் - ஏனெனில் சுருதி ஓதுவதால் - அதற்கு நாம் பதில் கூறுவது அவ்விதமில்லை. ஏனெனில் அவைகளின் ஆரம்ப பிரகரணத்திலே (இரண்டிலேயும்) வித்யாஸமில்லை - இந்த வேதா. சூ. 3-3-6ல் சொல்லப்படுவது வித்யா ஐக்யமேவ; என்பது சரியாகாது. ஏனெனில் ரூபத்திலே பேதமிருப்ப தாலே. இந்த ரூபத்திலே வேருகவிருப்பது சப்தத்திஞலே (சுருதியிலிருந்து) தெரியவருகிறது. (शब्दादेव प्रतीयते);

ஏனெனில் வாஜஸநேயர்கள் ஓதும் சுருதியில் अथ हेममासन्यं प्राणमूचुः, त्वं न उद्गायेति । तथेति तेभ्य एष प्राण उदगायत् அவர் கள் முக்ய பிராணனைக் கேட்டார்கள் - நீ எங்களுக்காகப் பாடுவாயா ? பிராணன் "நான் பாடுகிறேன்" என்று ஒப்புக்கொண்டு - இந்த பிராணன் அவர்களுக்காகப் பாடிற்று - என்று உத்கீதத்தை பிரரணன் பாடியதால், பிராணனைத் திருஷ்டியாகவும் - கர்த்ரி (பாட்டைப் பாடு பவஞகவும்) உபாஸிப்பதால், அசுரபராபவம் (தோல்வி) பலஞகச் சொல்லிவிட்டு ; यएवं वेद - எவன் இந்த விதமாக அறிகிருஞே - இவ்விதம் என்பதற்கு कर्तृत्वेन (பாடுபவஞக - (प्राणदृष्टिरेवं) பிராண திருஷ்டி உபாஸனம் எனக் காட்டப்படு கிறது - அதன் அர்த்தமாக एवं சப்தத்திஞல் (இவ்விதம்) அறியப்படுகிறது. (अवगम्यते)

சாந்தோக்யத்தில் - अथ ह य एवायं मुख्यः प्राणस्तमुद्गीथमुपासांचक्रिरे – இப்போது எவன் முக்ய பிராணஞே-அவனை (முக்ய பிராணனை) அவர்கள் 'உத்கீதா' என்று உபாஸித்தார்கள். (சா. உ. 1-2-7) ; இங்கே பலஞக அசுரர்களின் அபஜயம்

சொல்லப்படுகிறது - உத்கீதத்தை பிராணனாக - கானம் செய்பவனாக - உபாஸிப்பதால் - திருஷ்டிவிதியினால் யேற்படும் பலனாகிற அசுர அபஜயமும் சொல்லிவிட்டு; சுருதி சொல்கிறது - य एवं विद पाप्मं कामयते - எவன் ஹானியை (தீங்கை) சம்பவிக்கும்படி (விரும்புகிறானோ) - இவ்விதமாக அறிகின்ற ஒருவனுக்கு - விரும்புகிறானோ - இதில் एवं (இவ்விதம்) சப்தத்தினால் உத்கீதத்தை பாடுதலுக்கு விஷயமாகிற உத்கீதத்தை பிராணதிருஷ்டியினால் விதிக்கப்பட்ட கர்மண்யேவ - உபாஸனமே விதிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாக இரண்டு உபநிஷத்துக்களின் வித்யையின் ரூபத்திலே பேதம் (வித்யாஸம்) காட்டப்படுகிறது.

வாஜஸேநயத்திலே கர்த்திரி (பாடுபவன்) பிராண திருஷ்டி சபதாத் (என்பதாலும்); சாந்தோக்யத்தில் கர்மணி பிராணதிருஷ்டி சபதத்தாலும - இதனால் ரூபம் வேறுப்பட்டிருப்பது (अन्यत्वं) ஸ்பஷ்டமாகவிருககிறது. (முழு உத்கீதம் வாஜஸேநத்தில பிராணதிருஷ்டியினால கர்த்ரியும் (ageut) சாந்தோக்யத்தில் கர்மணி (உபாஸனா கர்மம்) பிராண திருஷ்டி சப்தத்தால் சொல்லப்படுவதால - ரூபம்மாறுகிறது- அதனால் விகல்பம்-குணோப ஸம்ஹாரமில்லை - வித்யை ஐக்யமில்லை) ரூபபேதம் இருக்குமானால், உபாஸ்ய பொருளும் வேறாகிவிடும். இதனால் விதியிலே (சோதனாதிகளில்) விசேஷங்கள (ஒற்றுமை) இருப்பினும், அவை முக்யமல்ல, ஆகவே இரண்டு வித்யைகளிலும் பேதம் (வித்யாஸம்) இருக்கிறது. வித்யா ஐக்யமில்லை-என்று நீ சொல்வாயாகில்-நாம் பதில் கூறுவது - அது சரியில்லை. अविशेषात् - ஏனெனில் பேதமிலலாதபடியால் - ஒரே வித்யைதான் இரண்டு பிரகரணங்களிலும் பேசப்படுகிறது. अविशेषेण - வித்யாஸமில்லாதபடியால - இரண்டு உபநிடதங்களிலும் உத்கீத உபாஸனையின் பலனாக அசுரர்களின் அபஜயம் ஏற்படுவதாகச் சொல்லப்படுவதால் - இரண்டும் ஒரே வித்யையைப் பற்றியதாகும். வாஜஸேநேயகர்களில் ते ह देवा ऊचुर्हन्तासुरान् यज्ञ उद्गीथे नात्ययाम என்று உபக்ரமத்தில் சொல்லப்பட்டிருககிறது (அந்த தேவதைகள் சொல்லிக் கொண்ட

னர் - நாம் அசுரர்களை இந்த பிராணனைக் கொண்டு கொல்லு விப்போம் (யாகத்திலே); அதேமாதிரி சாந்தோக்யத்தில் - तद्ध देवा उद्गीथमाजह्रुरनेनैनानभिहनिष्याम: - என்று ஓதுவதால் - அப்போது அந்த தேவர்கள் உத்கீதத்தைக் கொணர்ந்து - பிறகு சொன்னார்கள் - "இதனால் நாம் நமது எதிரிகளை வெல்வோம்."

ஆகவே இரண்டு உபக்ரமங்களில் விரோதமில்லாதபடியால், அதைக் காட்டவே - तेभ्य एष प्राण उदगायत - இந்த பிராணன் அவர்களுக்காக கானம் (உத்கீதம்) செய்தது (பாடியது) என்று (பிரு. உ. 1-3-7) சொல்லப்பட்டதால்; பிராண பாவத்தை அடைந்த உத்கீதம் - அதுவே யாடப்படும் (உத்கீதம் செய்யப்படும்) பொருளாகவும் (உத்கான கர்ம பூத ஏவ - அதுவே பாடும் வ்யக்தியாக - கர்த்தாவாக (உத்காத்ரியாக) சொல்லப்படுகிறது - எதுபோலவென்றால் சமைப்பதில்-அரிசியைக் கொதிக்க வைத்து வேகவைத்தலை-அரிசிக்கு கர்த்தாவாக (சமைக்கும் வ்யக்தியாக) சொல்லப்படுகிறது - அதுபோல இங்கேயும் சௌகர்யத்துக்காகக் கர்த்ருத்வம் சொல்லப்படுகிறது (கர்த்தாவாக). இப்படி இல்லாத போனால் "உத்கீத" என்கிற பதம் - எது உபக்ரமத்திலே உத்கீத சப்தமாக வருவதோ-அது கர்தரி (உத்கீதத்தைப் பாடுபவனாக — லாக்ஷிணிகமாக அந்தர்கத அர்த்தத்துடன் சொல்லியாகவேண்டும். ஆகவே இரண்டு பிரகரண ஆரம்பத்தில் வித்யாஸமில்லாதபடியால் - வித்யா ஐக்யமே ஆகும் - अतो विद्यैक्यम् - (இங்கு சொல்லப்படுவது - இரண்டு உபக்ரமங்களில் உத்கீதத்தைச் சொல்லி, பிறகு உத்கீதம் பாடுபவனுக்கு ஒரு உபநிஷத்திலே அமுக்ய (லாக்ஷிணையாக) அர்த்தம் கொள்ளவேண்டியது). (பூர்வபக்ஷம்)

இவ்விதம் வித்யா ஐக்யம் - எனச் சொல்லப்படுமாகில் - நாம் அதற்கு பதில் கூறுவோம்,

ஸூத்ரம். न वा प्रकरणभेदात्, परोवरीयस्त्वादिवत् (3. 3. 7)

ந வா ப்ரகரண பேதாத் பரோவரீயஸ்த்வாதிவாத் (3. 3. 7)

வித்யை ஐக்யம் (ஏகத்வம்) என்பது न இல்லை. வா - (வாஸ்தவமாக) பொருத்தமாகாது. பிரகரண பேதாத் - தொடக்கம் வேறுபட்டிருப்பதே அதன் காரணமாகும். பரோவரீயஸ்த்வாதிவத் - (ப்ரணவத்தில்) பரோவரீயஸ்தவம் முதலிய குணங்களுடன் கூடிய உத்கீத உபாஸனம் அதே இடத்திற் சொல்லப்படும் வேறு உத்கீதோபாஸ்தியை விட வேறுபட்டதாக எவ்விதம் கொள்ளப்படுகிறதோ-அதுபோல இங்குமாகும்.

(இங்கு வித்யை ஒன்று என்பதாகாது - பிரகரண பேதத்தால் அதாவது தொடக்கத்தில் பேதம் இருக்கிறது - இரண்டு இடங்களிலும். (எதுபோல) பிரணவத்தை பிரும்ம மாகவும் சில குணங்களுடன் கூடியதாகவும் (ஸ்ரேஷ்டனாக வும், எல்லாமேம்பட்ட பொருள்களுக்கு மேலானதாகும்) சொல்லப்படுவது - இது இன்னொரு உத்கீத உபாஸனையை விட வேகருவிருக்கிறது. இதில் பிரணவத்தைப் பிருஹ்ம மாகச் சொல்லி - வேறு சில குணங்களுடன் கூடியதாகச் சொல்லப்படுவதால் - இரண்டு வித்யைகளும் வேறு - ஏகத்வமில்லை.)

न वा - என்பதால் பூர்வ பக்ஷத்தைத் தள்ளுகிறது. வித்யா ஏகத்வம் (ஒன்றுதான் என்பது) இல்லை. ஏன்? பிரகரண பேதமிருப்பதாலே (ஐக்யம்) ओमित्येतदक्षरमुद्गीथ-मुपासीत- சா. உ. 1-1-1-ல் ஒருவன் ஓம் என்கிற பிரணவத்தை உத்கீதமாக உபாஸிக்கவேண்டும் - இங்கே பிரகிருதத்தில் முதலாவதான விஷயமாக சொல்லப்பட்டு, அதனால் உத்கீத அவயவமாக பிரணவத்தைச் சொல்லி; சா. உ. 1-1-10-ல் एतस्यैवाक्षरस्योपव्याख्यानं भवति...देवासुरा ह वै यत्र संयेतिरे - இவை எல்லாம் அந்த அக்ஷரத்திற்கு விரிவாகவுள்ள வியாக்யானம். ...எங்கே தேவர்களும் அசுரர்களும் போரிட்டுக் கொண்டனரோ - (1-2-1) - என்று ஓதி - தொடங்குகிறது - अथ ह य एवायं मुख्यः प्राणस्तमुद्गीथमुपासाञ्चक्रिरे - இப்போது இதில் எவன்

முக்ய-பிராணனே - அதையே உத்கீதமாக அவர்கள் உபா ஸித்தார்கள் - (சா. உ. 1-2-7).

இங்கே சாந்தோக்யத்திலே உத்கீத அவயவமாக பிரணவ விஷயம் உபாஸனமாக விருக்கிறது - ஓதப்படு கிறது). வாஜஸேனர்களிடம், இம்மாதிரி பிராசீன பிரகரண மில்லாதபடியால் அது ஓதுகிறது - हन्तासुरान् यज्ञ उद्गीथेनात्य-याम - ஹா-நாம் இந்த யாகத்திலுள்ள உத்கீதத்தினுல் அசுரர் களை ஜயிப்போம். இவ்விதம் உத்கீதம் முழுவதையும் பிரஸ்தா பித்து மீண்டும் சொல்கிறது - अथ हेममासन्यं प्राणमूचु: त्वं न उद्गाय - அவர்கள் முக்ய பிராணனைக் கேட்டனர். "நீ எங்க ளுக்காகப் பாடுவாயாக?" (1-3-7) - (உத்கீதம் முழுவதற் கும் விஷயமாகச் சொல்லப்பட்டதாக விருக்கிறது). ஆகை யால் பிரகரணபேதம் இரண்டு உபநிடதங்களில் இருப்பதால் विधेयभेद: (அடையப்படும் பொருளில் பேதம்) ; विधेयभेदे च रूपभेद इति - ரூபபேதம் அடையப்படும் பொருளில் வித்யாஸம் இருப்பதால் ஏற்படுகிறது. ஆகவே ரூபபேதத்தால் வித்யை ஐக்யம் (ஒன்றுதான்) என்பது இல்லை. न विद्यैक्यम्.

**விளக்கம்:**—(இங்கு சொல்லப்படுகிறது - ஸாமத்தின் ஐந்து பாகங்களில் உத்கீதம் இரண்டாவது பாகமாகும். அது ஓம் என்கிற பிரணவ மந்திரத்தினுல் பாடம் ஆரம்பமாகிறது. இவ்விதமாக 'ஓம்' உத்கீதத்தின் அவயவமாகும். (அங்க மாகும்) சா. உ. உத்கீத உபாஸனை ஓம் என்பதைப் பற்றி யது - அங்கத்தைப் பற்றியது - உத்கீதம் முழுவதையும் சொல்லவில்லை. ஆனுல் பிருஹதாரண்யத்தில் உத்கீதம் முழுவதும் (ஓம் என்கிற அங்க மாத்திரம் இல்லாதபடி - க்ருத்ஸ்ந உத்கீதத்தை விஷயமாகக் கொண்டது. இவ் விதம் பிரகரணபேதம் ஏற்படுவதால் இரண்டு சுருதிகளும் வேருகவுள்ளவை - ஒற்றுமை மேலாகக் காணப்பட்டாலும்- இரண்டும் வேறுதான்; ஆகவே வித்யா ஐக்யம் இல்லை.

மேலும் சா. உ. 1.2-7ல் अथह य एवायं मुख्य: प्राणस्तमुद् गीथ-मुपासाञ्चक्रिरे - இப்போது - யார் முக்யபிராணுக விருக்

கிறுன் - அவனை அவர்கள் உத்கீதம் என்று உபாஸித்தார்கள். இங்கே "ஓம்" என்கிற பதம் உத்கீதத்தின் அவயவ பூதமாக (அங்கமாக) விருக்கிறது. இந்த உத்கீதம் பிரகரண விஷயமாக முன்பாகச் சொல்லப்பட்டு - அது பிராண பாவத்தை அடைந்து-அந்த உத்கீதமே சாந்தோகர்களுக்கு உபாஸ்யப் பொருளாக ஆகிறது ஆனல் வாஜஸேனர்களின் விஷயத்திலே, உத்கீதம் முழுவதுமே பிராணதிருஷ்டி உபாஸ்யமாக பாடுகிறவனுக்கு (அதாவது உத்காதாவுக்கு) (உத்காதிரி என்று அவனுக்கு பெயர்) ஆகிறது. இந்த சுருதியிலே - अथ हेममासन्यं प्राणमूचुस्त्वं न उदगायेति । तथेति तेभ्य एष प्राण उदगायत् - அவர்கள் முக்யபிராணனைக் கேட்டார்கள் - நீ எங்களுக்கு பாடுவாயா ? - ஆகட்டும் என்று ஒப்புக் கொண்ட பிராணன் அவர்களுக்காகப் பல பாட்டுகளைப்பாடின. இதனல் உத்காத்ரிக்கு (பாடுபவனுக்கு) பிராண அத்யாஸத்தைச் சொல்லி, य एवं वेद - எவன் இவ்விதமாக அறிகிருனே, அதாவது பிராண பாவத்தையடைந்த அந்த உத்கீதமே உபாஸ்யப் பொருளாக விதிக்கப்பட்டதாகிறது. அதனல் ரூபபேதம் வித்யைகளுக்கு இருக்கிறது - (இந்தக் காரணத்தாலும் இரண்டு வித்யைகளுக்கு ரூபபேதம் உண்டு).

நீ வாதிக்ககூடாது-எப்போது உத்கீத்தை உபாஸ்யப் பொருளாக விதிக்கப்பட்டிருந்தால், அப்போது उदगीयेनात्ययाम - நாம் இந்த உத்கீதத்தின் உதவியைக் கொண்டு அசுரர்களை ஜயிப்போம் - என்கிற வாக்யத்துடன் வரும் ஆக்யாவுடன் (பெயர்) (கதையுடன்) விரோதம் ஏற்படும் - ஏனெனில் உத்காதாவை (பாடுபவனை) (கர்த்தாவை) விஷயமாகக் கொண்ட உபாஸனத்தில், உத்காத்ரி அவசியமாகிறபடியால்; அதனுலே, அவனே பல ஹேதுவாகிற - அசுரர்களின் அபஜயத்திற்குக் காரணமாகிருன். (ஆதலால் இந்த வித்யா உத்காதா விஷயமாகிறது) - இதனல் இரண்டு வித்யைகளுக்கு வித்யாஸம் ஏற்படுகிறது-ரூபத்திலே வேருக விருக்கிறபடியால் ; ஆகவே விதிகளில் இரண்டிலும்

வித்யாஸமில்லாவிடினும், ரூபத்திலே இருக்கிறபடியால், வித்யை ஐக்யமில்லை. ஸ்ரீபாஷ்யத்திலே—

उद्गातुरूपासने उद्गीथस्योद्गानकर्मभूतस्यावश्यापेक्षितत्वात्, तस्यापि पर परिभाव्य फलं प्रतिहेतुत्वात्। अतो रूपभेदाद्विद्याभेद इति चोदनाद्यविशेषेऽपि न विद्यैक्यम्।

[இங்கு சொல்லப்படுவது - சூத்ரத்திலுள்ள वा - என்பதற்கு வாஸ்தவமாக என அர்த்தம் கொள்ளப்பட்டு - பொருந்தாது எனக் காட்டப்பட்டது. அதனை உறுதிப் படுத்த, ராமானுஜர் ஏற்கனவே முந்தின சூத்ரத்தில் சொல்லப்பட்டபடி - ஆக்ஷேபத்தை எதிர்பார்த்து அதற்குப் பரிகாரம் செய்ததைத் தொடர்ந்து, இங்கேயும் அது சரிதான் என்று மீண்டும் சொல்லி, பூர்வபக்ஷியின் கருத்தைத் தள்ளுகிறார். வாக்ய ஆரம்ப பிரகரணத்திற்கு முக்யத்வத்தைக் கொடுக்கும் விதியின் அர்த்தம் - அது அந்த பிரகரணத்திலே அறியப்படாததும், பிற்பாடு சொல்ல படுவதுமாகிற அபிப்ராயம் - என்பதில்லை - அதனால் அது தள்ளப்பட வேண்டியதாகும். அந்த விதியின் நிபந்தனை யாவது - எது வாக்ய ஆரம்பபிரகரணத்திலே சொல்லப்படு கிறதோ அதை விரோதிக்கக்கூடாது-அதனால் தள்ளப்பட்ட தாக ஆகிவிடக்கூடாது. இங்கே, பிருஹ். உ. (1-3ல்) பிற்பாடு வரும் வாக்யங்கள் முந்திச்சொல்லப்பட்ட உத்கீதத்தை ஒப்புக் கொண்டு, அத்துடன் கூடப் பாடுபவனையும் (உத்காதா) சொல்லுகிறது. ஆகவே பிரகரண ஆரம்பத்தில் முந்திச் சொல்லப்பட்ட விஷயத்தை - அதற்கு அர்த்தமாக - உத்காதாவினால் பாடப்பட்ட உத்கீதம் எனக்கொள்ள வேண்டியது (சுருதபிரகாசிகை)]

மேலும் சூத்திரத்தில் சொல்லப்பட்டது - परोवरीयस्त्वादिवत् वरीयासां परः — परोवरीयत् - பரோவரீயஸ்தவம் முதலிய குணங்களுடன் கூடின உத்கீதோபாஸனமானது — அதாவது மிகச் சிறந்ததானவற்றிலும் மேலான (ஸ்ரேஷ்டமான)

குணங்களைப்போல - என்கிற அர்த்தத்தினுல், அதே இடத்திற் சொல்லப்படும் வேறு உத்கீத உபாஸனையைவிட வேறு பட்டதாக எவ்விதம் கொள்ளப்படுகிறதோ - அதுபோல இங்கும்; (ஒரே வேத சாகையில் எப்படி ஓம் என்கிற பதத்திற்கு தியானம் விதிக்கப்பட்டிருக்கிறதோ அதற்கு அங்கமாக (அவயவ பூதமாகச்) சொல்லப்பட்டிருக்கிறதோ, உத்கீத அவயவ பூத - (பிரணவத்தை) பரமாத்மா திருஷ்டி விதான ஸாம்யமாக விருப்பினும் - (இந்த விதிபரோவரீயஸ்த்வம் முதலான குணங்களுடன் கூடிய உத்கீதோபாஸனமாக விருப்பினும் அது வேறுபட்டதாக (அதே இடத்திற் சொல்லப்படும் வேறு உத்கீத உபாஸனையைவிட வேறு பட்டதாக)-எவ்விதம் கொள்ளப்படுகிறதோ அதுபோலவே இங்கும் காண்க - அந்த விதியினுல் சொல்லப்படும் பரம புருஷனின் உபாஸனம் - ஹிரண்மய புருஷ த்ருஷ்டியாக விருப்பதும் - பரோவரீயஸ்த்வாதி குண - விசிஷ்ட திருஷ்டி விதான அர்த்தாந்தர பூதமான-சாகையிலிருந்து வேறுபட்டதாக எவ்விதம் அறியப்படுகிறதோ - அதுபோல எனக் கொள்ளவும். இங்கு சொல்லப்படும் - परोवरीयस्त्वं - சாந்தோ. பிரதமே (5-9-ல் प्रथमम्) -

य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते तस्मादुद्गीथः -इति परमात्मदृष्टिरुद्गीथे विहिता; अनन्तरं, "आकाशइति होवाच सर्वाणि हवा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते - स वा एष परोवरीयानुद्गीथः " इति पुनस्तत्रैव तद्दृष्टिः । तावता न विद्यैक्यम् - तदधिकरूपविषयभेदात् न विद्यैक्यमिति ।

(உத்தமூர்ஸ்வாமி—பா. தர்ப்பணம்)

(பிரகரண பேதமிருப்பதால் வித்யை ஐக்யமில்லை).

(இங்கே இரண்டு வித்யைகள் சாந். உபநிஷத்தில் 1-6&9ல் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டிலும், உத்கீதத்தை திருஷ்டியாக பிரும்மம் என உபாஸனமாகச்

சொல்லப்படுகிறது. ஆனால் குணங்கள் வெவ்வேறாக விருக்கின்றன. 1-6ல் பரமாத்மா (பிருஹ்மம்) சூரியனுக்குள் உள்ளிருப்பதாகவும், தங்க நிறமான தாடியும் தங்க நிறமான மயிரும் - தங்க நிறமான நகநுனிகளும் உள்ளதாகச் சொல்லப்படுகிறார். அதே சா. உ. 1-9ல் பிருஹ்மம் பரமாத்மா மேலான எல்லாவற்றிலும் மேலானதாகவும் (வெகு ஸ்ரேஷ்டமாகவும்) சொல்லப்படுகிறார். வித்யைகள் பிருஹ்மத்தின் குணங்களின் வேறுபாட்டினால் வேறாக விருக்கின்றன). வித்யை ஐக்யமில்லை.

சூத்ரம். संज्ञातश्चेत् तदुक्तम्, अस्ति तु तदपि (3-3-8)
ஸம்ஞாதஸ்சேத் ததுக்தம், அஸ்தி து ததபி (3-3-8)

ஸம்ஞாதஸ்சேத் - உத்கீதவித்யை என்கிற பெயர் இரண்டு இடத்திலும் ஒன்றாக விருப்பதிலிருந்து இரண்டு வித்யையும் ஒன்றே தானாகும் என்று சொல்லப்பட்டால் ததுக்தம்-அந்த விஷயத்தில் முந்தின சூத்திரத்தில் சொல்லப்பட்டது. ததபி-ஒரே விதமான பெயரும், அஸ்தி து-பிரஸித்தமான பேதமுள்ளவைகளான பரோவரீயஸ்த்வம் முதலிய குணவிசிஷ்ட உபாஸனங்களில் உத்கீதவித்யை என்பதாய் காணவே படுகிறது - (ஒரே விதமான பெயர் இருக்கிறது - வித்யைகளில் பேதமிருப்பினும்).

இரண்டு இடத்திலும் உத்கீத வித்யை என்கிற பெயர் இருக்கிறது அதனால் வித்யைஐக்யம் என்று சொல்லப் போனால், அந்த ஒரே பெயராக விருத்தல் இருக்கத்தான் இருக்கிறது - உபாஸ்ய பொருள்களில் வித்யாஸம் - பேதம் இருக்கிற போதும்கூட (विधेयभेदऽप्यस्त्येव) எப்படி அக்னி ஹோத்ரம் என்கிற பெயர் (அக்னிஹோத்ர ஸம்ஞா) நித்ய அக்னிஹோத்ர விஷயத்திலேயும் குண்டபாயிநர்களின் அக்னிஹோத்ரத்திலும் உபயோகப்படுகிறது (அதாவது அக்னி ஹோத்ரம் - அக்னியில் ஆஹுதிஹோமம் செய்வது இரண்டுவிதம். தினமும் நித்ய நைமித்திக கர்மாவாக ஆயுட்பரியந்தம் செய்யப்படுவது. இல்லாத

போஞல், சில குறிப்பிட்ட சமயங்களில் இஷ்டப்பட்டால் செய்யப்படுவது. உதாரணமாக - ஒரு வருஷம் நடத்தப் படும் யாகத்திலே, குண்டலினியர்கள் அக்னி ஹோத்ரத்தை ஒருமாதத்திற்கு ஒரு தடவை செய்யும்படி சொல்லப்பட்டிருக் கிறது. (தாண்ட்ய பிராஹ்மணத்தைப் பார்க்கவும்) மேலும் - உத்கீத வித்யை என்கிற பெயர் சாந்தோக்யத் திலே பிரதம பாடகத்திலே உபயோகப்படுத்தப்படுகிறது- பலவித்யைகளைக் குறிப்பதற்கு.

சூத்ரம். व्याप्तेश्च समञ्जसम् (3-3-9)
வ்யாப்தேஸ்ச ஸமஞ்ஜஸம் (3-3-9)

வ்யாப்தே: ச - ஓம் என்கிற அக்ஷரத்திற்கு உபாஸனப் பொருளாக சாந். உபநிஷத்திலுள்ள எல்லா வித்யை களுக்கும் வியாப்தி இருக்கிறது. அவ்விதம் ஸர்வேத வியாபியான ஓங்காரத்தை உத்கீதவித்யையில் உபாஸனப் பொருளாக சேர்த்துக் கொள்வதில் பொருத்தமாகும் - ஸமஞ் ஜஸம்.

சாந்தோக்யத்தில் பிரதம பாடத்திலே, 'ஓம்' என்கிற உத்கீத அவயவம் சொல்லப்படுகிறது - பிரகரண விஷய மாக; பிறகு அந்த ஓம் உபாஸ்யப் பொருளாக எல்லா வித்யைகளுக்கும் பிற்பாடு சொல்லப்படுபவை இவை - இந்த எல்லா வித்யைகளுக்கும் பிரயோகமாக ஆகிறது. (வ்யாப்தியாகிறது). ஆகையால், உத்கீத என்கிற வார்த்தை பிரகரண நடுவிலே வருகிறது; तद्ध देवा उदगीथमाजह्रुः (சா. உ. 1-2-1ல்) அங்கே தேவதைகள் உத்கீதத்தைக் கொணர்ந்தார்கள் - அதனுல் அது ஓம் என்கிற பிரண வத்தை குறிப்பதில் பொருத்தமாகும், (प्रणवविषयत्वमेव (समञ्जसम्); அவயவமும் ஒரு ஸமுதாய சப்தமாகும். (பல பொருள்களைச் சேர்த்து - ஸமுச்சயமாக குறிக்கிற சப்த மாகும்). உதாரணமாக ஒரு வஸ்திரம் ஒரு நுனியில் எரிந்துவிட்டிருக்கிறது. ஆனுல் அதைச் சொல்லும் போது पटोदग्ध: வஸ்திரம் எரிந்துவிட்டிருக்கிறது (முழுவதையும்

சொன்னுப் போல ஆகும்). என்று காணப்படுகிறது. ஆகவே உத்கீத அவயவபூத பிரணவமே உத்கீத சப்தமாக நிர்திஷ்டம் காட்டப்படுகிறது) அதுவே स एव प्राणदृष्टोपास्य: பிராண திருஷ்டியாக உபாஸ்யப் பொருளாகிறது-இவ்விதம் சாங்தோக்யத்தில் அறியப்படுகிறது. ஆனுல் வாஜஸே நயகர்கள் விஷயத்திலே, உத்கீத என்கிற வார்த்தை - உத்கீத வித்யை முழுவதையும் (कृत्स्नां) காட்டுகிறது; ஆகவே முழுவதுமான உத்கீத கர்த்தாவாகிற உத்காதா வையே உபாஸிக்க வேண்டியது - அந்த உத்காதாவை பிராண திருஷ்டியாக உபாஸிக்க வேண்டியதாகும் இதனுல் வித்யா பலவகைப்பட்டது (नानात्वं) என்பது ஸித்தமாகும்.

## सर्वाभेदाधिकरणम् (8 3-3) (கௌஷீதகி பிரா.)

## சூத்ரம். सर्वाभेदादन्यत्रेमे 3-3-10

## ஸர்வாபேதா தந்யத்ரேமே (3-3-10)

ஸர்வாபேதாத் - எல்லாவிடங்களிலும் உபாஸ்ய வஸ்துவில் வேற்றுமை இல்லாமலிருப்பதினுல், அந்யத்ர - கௌஷீதகி உபநிடத்திலே கூட; இமே-இந்த வசிஷ்டத்வம் முதலான சாந்தோக்ய பிரஹதாரண்யகத்தில் ஓதப்பட்ட குணங்களை கௌஷீதாகி சாகையிலும் மாற்றிச் சேர்த்துக் கொண்டு உபாஸிக்கப்பட வேண்டும்.

சாங்தோக்ய பிருஹ. உபநிஷத்தில் (வாஜஸே நயர்கள்) பிராண வித்யை ஓதப்படுகிறது. பிராண இந்திரியம் ஸம்வாதம் சொல்லுமிடத்தில் வாக்கு இந்திரியமானது முக்ய பிராணன் மூலமாக அந்த வசிஷ்டத்வம் என்கிற குணம் முக்ய பிராணனுடையதாகும் என்று ஓதினது. அதேமாதிரி பிரதிஷ்டத்வம், ஆயதனத்வம், ஸம்பத் - இத்யாதி குணங்களையும் முக்ய பிராணனுக்குச் சொல்கிறது. ஆனுல் கௌஷீதிகியில் முக்யப்பிராணனுக்கு ஸ்ரைஷ்ட்யம் என்கிற குணம் மாத்திரம் ஓதப்படுகிறது; மற்றது சொல்லப்படவில்லை,

ஆகவே சா. உ. 5-1-2ல் यो ह वै ज्येष्ठं च श्रेष्ठं च वेद, ज्येष्ठश्च ह वै श्रेष्ठश्च भवति। प्राणो वाव ज्येष्ठश्च श्रेष्ठश्च - என்பதால் - எவன் ஜ்யேஷ்டனாகவும் ஸ்ரேஷ்டகனாகவுமிருக்கிறவனை அறிகிறானோ - அவன் ஜ்யேஷ்டனாகவும் ஸ்ரேஷ்டனாகவும் ஆகிறான் - முக்ய பிராணனே ஜ்யேஷ்டனாகவும் ஸ்ரேஷ்டனாகவுமிருக்கிறது. இங்கே ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்ட குணங்கள் முக்ய பிராணனுக்கு ஓதப்பட்டு, அதுவே உபாஸ்யமாக விருக்கிறது; பிறகு வாக்கு சக்ஷுஸ் ஸ்ரோத்ரம் மனஸ் முதலியவைகளும் வசிஷ்டத்வம், பிரதிஷ்டத்வம், ஸம்பத் ஆயதநத்வம் இத்யாதி குணங்களையும் முக்ய பிராணனுக்கு ஓதி-இந்த வாக்கு சக்ஷுஸ் முதலானவை பிராணனையே நம்பியிருப்பதால், பிராணனே இந்த குணங்களை உடைத்ததாகும். இந்த விதமாக சாந்தோக்யவாஜ ஸநேயகர்கள் இந்த முக்ய பிராணனுக்கு, இம்மாதிரி ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்ட குணங்கள் இருப்பதாயும்; அத்துடன் மற்ற குணங்களையும் (வசிஷ்டத்வம் முதலியவைகளையும்) முக்ய பிராணனுக்குச் சொல்லி, அதனால் பிராணன் உபாஸ்ய: (உபாஸிக்கப்படுவது) என்றும் காட்டப்பட்டது. ஆனால் பிராண வித்யை கௌஷீதகியிலும் பேசப்படுகிறபடியால் - அங்கே ஜ்யேஷ்டத்வம் ஸ்ரேஷ்டத்வம் மாத்திரம் சொல்லப்பட்டு, உபாஸ்ய: (உபாஸிக்கப்படுவது) - மற்ற குணங்கள் சொல்லப்படாதபடியால் சம்சயம் எழுகிறது - இங்கே வித்யா வேறாகவுள்ளதா (பேதமா) அல்லது ஏகமா? (ஒன்றுதானா?)

(இங்கேசொல்லப்படுவது - பிருஹ. உபநிடத்தில் முக்ய பிராணனை ஜ்யேஷ்டன் ஸ்ரேஷ்டன் என்று சொல்லி வாக்கு மனம் சக்ஷுஸ் ச்ரோத்திரத்திற்கு மேலாகச் சொல்லிற்று. பிராணனாலே இந்த இந்திரியங்களனைத்துக்கும் இந்த குணங்கள் ஏற்படுகின்றன. அதனால் அவைகளே பிராணனுக்கு அந்த குணங்களை ஓதின).

**பூர்வபக்ஷம்:**—வித்யைகள் வேறு (பேதம்) ஏன்? ரூப பேதமிருப்பதாலே. வாஸ்தவமாகவே இரண்டு பிரகரணங்களிலும் (சாந். பிருஹ. உபநிடதங்களில்) - அதே மாதிரி

கௌஷீதகியிலும், முக்ய பிராணனே ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்ட குணங்கள் உள்ளதாகவும், உபாஸனைக்கு உரியதாகவும் சொல்லப்படுகிறது. ஆயினும் ஒரு பிரகரணத்திலே (அதா சாங்கியிருஹ. உப.) - உபாஸ்யமான பிராணனுக்கு ஜ்யேஷ்டத்வம் ஸ்ரேஷ்டத்வம் சொல்லி, கௌஷீதகியில் பிராணனுக்கு மற்ற குணங்களைச் சொல்லி இந்த ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்டத்வம் சொல்லாதபடியால் - வித்யா பேதமே ரூபத்தினால் ஏற்பட்டதாகும். (ரூபபேதாத் - வித்யாபேதமாகும்).

இப்படி ஏற்படுமானால் நாம் பதில் கூறுவோம் - सर्वाभेदादन्यत्रेमे - ஏனெனில் மூன்று பிராண வித்யையை ஓதும் இடங்களில் - யாதொரு வித்யாஸமும் இல்லை; ஆகவே முதல் இரண்டு பிருஹ. சாங். உபநிடதங்களின் ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்டத்வ குணங்களை கௌஷீதியில் ஓதப்பட்ட குணங்களுடன் சேர்த்துக் கொண்டு - இப்படியாக வித்யைகளுக்குள் வித்யாஸம் இல்லை என்பதாகும். கௌஷீதிகியில் பிராணவித்யையில் மற்ற குணங்களாகிற வசிஷ்டத்வம், பிரதிஷ்டத்வம் சம்பத் ஆயதநத்வம் - தியானிக்கப்பட வேண்டியவை. ஏன்? ஏனெனில் அவைகளுக்குள் பேதமில்லை என்கிற காரணத்தினால் பிராணனை ஜ்யேஷ்டன் ஸ்ரேஷ்டன் எனக் காட்டப்படும் பல வழிகளிலே - வித்யாஸம் யாதும் இல்லை என்கிற காரணமாகும்.

சுருதி எவ்விதம் ஓதுகிறது? சா. உ. 5·1·6 अहं श्रेयसि व्यूदिरे - இந்திரியங்கள் தங்களுக்குள் யார் பெரியவன் என்று சண்டை போட்டுக்கொண்டு - ஒவ்வொரு இந்திரியமாக வெளியில் போனாலும், தேகம் உயிருடன் வாழ்ந்து கொண்டிருந்த படியாலே, பிராணனே ஸ்ரேஷ்டன் ஜ்யேஷ்டன் என நிருபணம் பண்ணப்பட்டது. பிராணன் போக முயற்சி செய்ய - எல்லா இந்திரியங்களும் வேலை செய்ய மறுத்தன. ஆனால் அவ்விதமில்லை மற்ற இந்திரியங்கள் கிளம்பும் போது, இதிலிருந்து இந்திரியங்கள் முக்ய பிராணனை நம்பி வாழ்கின்றன என்பது தெரிய வருகிறது. இதை வாக்கு

சக்ஷுஸ - முதலிய இந்திரியங்களும் சொல்லி - உறுதி படுத்தின—

प्राणाधीनत्वं - अथहैनं वागुवाच यदहं वसिष्टोऽस्मित्वं तत् वसिष्टोऽसि,

நான் வஸிஷ்டத்வாதி குணங்களை உடையவனாக விருக்கிறேன். முக்ய பிராணனாகிற நீ இந்த குணங்களை உடைத்ததாகவிருக்கிறாய். கௌஷிதிகியில் பிராணவித்யையில் - பிராணனுக்கு ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்ட குணங்களை நிரூபித்துக் காட்டுவதற்கு, வாகாதிகள் வசிஷ்டத்வாதி குணங்களைஉடையதாக பிரதிபாதித்து – அந்த குணங்களை முக்ய பிராணனுக்கு ஓதின. (எப்படி ?) अथहैमा देवता: प्रजापतिं पितरमेत्याब्रुवन् - को वै न: श्रेष्ट: ? பிரஜாபதியிடம் அவை கேட்டன - 'எங்களுக்குள் யார் ஸ்ரேஷ்டர்?' அவர் பதில் சொல்ல-அதன்படி. ஒவ்வொரு இந்திரியமும் வெளிச் செல்ல - உயிர்மாத்திரமிருந்தது. ஆனால் பிராணன் போக முயற்சித்த போது எல்லா இந்திரியங்களும் செயலற்று போயின. இதனால் பிராண அதீனத்வம் இந்திரியங்களுக்கு அனுவாதமாத்திரம் செய்யப்படவில்லை - நிரூபணமாகக் காட்டிற்று. பிராணனுக்கு வாக்கு முதலியவை வசிஷ்டத்வாதி குணங்கள் உண்டு என்பதால் — வித்யாரூபங்களில் பேதமில்லை. அதனால் காட்டப்பட்டது பிராணனே வசிஷ்டத்வாதி குணச் சேர்க்கையை (योगित्वं) ஹேதுத்வம் பெற்றதாகும் என்பதாகும்.

ஆகையால் வசிஷ்டத்வாதி குணயோகத்தினாலே பிராணன் ஜ்யேஷ்ட: என்று காட்டி, இதனால் வித்யாபேதம் இல்லை என்று சொல்லப்பட்டதாகும். नास्तिविद्याभेदम्

(அதாவது வசிஷ்டத்வம் ஹேதுவாக விருப்பதால் கௌஷிதகியில் சொல்லப்பட்ட ஸ்ரேஷ்டத்வம் ஜ்யேஷ்டத்வம் முக்ய பிராணனுக்கு யேற்படுகிறது - ஏனெனில் எல்லா இந்திரியங்களும் முக்ய பிராண அதீனம். ரூபபேத

மில்லை என்பதாகும் - அதனாலே வித்யாபேதமில்லை-பிராணன் இல்லாத போனால் மற்ற இந்திரியங்கள் செயலற்றுப் போகின்றன. இந்த சாமார்த்தியம் பிராணனுக்கு - பிராணனாலே ஏற்பட்டதாகும்).

### आनन्दाद्यधिकरणम् (3-3-4) (தை. ஆன)
### ஆனந்தாத்யதிகரணம் (3-3-4)

### அவதாரிகை:

பிராண வித்யாங்க விஷயம் - இன்னொன்று எடுக்கப்படுகிறது. அதையும் இப்போதே நிருபணம் செய்கிறோம். எப்படி பிராணனுக்கு வசிஷ்டத்வாதி குணங்களை அனுஸந்தானம் செய்வதால் ஒழிய, அந்த முக்யபிராணனுக்கு ஜ்யேஷ்டத்வ - ஸ்ரேஷ்டத்வ குணங்களையும் அனுஸந்தானம் செய்வது சரியாகாதோ, அதனால் கௌஷீதகி உபநிஷத்தில் ஓதப்பட்ட வசிஷ்டத்வாதீ குணங்கள் பிராண வித்யைக்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாகவிருக்கிறது, அந்த குணங்கள் அந்தவிடத்தில் ஓதப்படாமற் போனாலும் - ஒப்புக் கொள்ள வேண்டியதாகிறது. அதேபோல, எந்த குணங்கள் இல்லாமல் பிருஹ்மஸ்வரூபம் அனுஸந்தானத்தினால் அறியப்படமாட்டாதோ, அந்த குணங்களை ஸர்வ (எல்லா) பிருஹ்ம வித்யைகளிலும் தியானிக்கப்பட வேண்டியதாகும்-என்கிற அர்த்தம் கீழே சொல்லப்படுகிறது.

(அதாவது பிருஹ்மத்தின் தர்மங்களில் ஸ்வரூபநிருபண தர்மம் - நிருபிதஸ்வரூபதர்மங்கள் என இருவகை. ஸ்வரூப நிருபண குணங்கள் (தர்மங்கள்) எக்காலத்திலும் பிருஹ்மத்தைவிட்டுப் பிரியாதவை, அவை எல்லா வித்யைகளிலும் அந்த அந்த குணங்களோடு சேர்த்து அனுஸந்தானம் செய்யப்பட வேண்டும். இந்த ஸ்வரூப நிருபண தர்மங்கள் - ஸத்யம் ஞானம் அனந்தம், ஆனந்தம் அமலத்வம் நிருபித ஸ்வரூப தர்மம் - ஸ்ரீயப்பதித்வம் - இத்யாதி. இங்கே காட்டப் போகும் விஷயம், முக்யபிராணனுக்கு

வாக்காதி குணங்களை சொல்லப்படாத போனாலும், சேர்த்துக் கொள்ள வேண்டியது என்கிற விஷயம் அடுத்தது.

சித். சூத்ரம். आनन्दादय: प्रधानस्य (3-3-11)

ஆனந்தாதய: பிரதானஸ்ய (3-3-11)

ஆனந்தாதய:—ஸத்யம் ஞானம் அனந்தம் - இத்துடன் ஆனந்தம் - (அமலத்வம்) போன்ற குணங்களை எல்லா வித்யைகளிலும் சேர்த்து உபாஸிக்கவேண்டும். பிரதானஸ்ய - மற்ற தர்மங்கள் யாவும் - ஸ்வரூப நிரூபக தர்மங்கள் என்று சொல்லப்படுபவை - (விதிக்கப்பட்ட தர்மங்கள் எனக் கொள்ளலாம்). அவைகளை ஸ்வரூபமாகவே உடைய புருஷன் (பரமாத்மா) விஷயத்தில் – யாதொரு வித்யாஸமின்றி எல்லா விடங்களில் ஓதப்பட்டிருப்பதால். சேர்த்துக் கொள்ளப்படவேண்டும்.

இங்கே பிருஹ்ம ஸ்வரூபத்திற்கு யேற்ப - எல்லா பர வித்யைகளிலும் உபஸம்ஹாரம் ஸ்வரூப நிரூபக தர்மங்களுக்கு ஏற்படுவதாகிறதா - ந - இல்லையா - என்கிற சந்தேகம் விசாரிக்கப்படுகிறது. பிரகரணமாக இல்லாத சுருதிகளில் (அதேமாதிரி இன்னும் சில சாகைகளில் வேறு விடங்களில்) ஓதப்பட்டிருக்கும் குணங்களைச் சேர்த்துக் கொள்வதற்கு பிரமாணம் யாதும் இல்லாதபடியால் - பிரகரணத்தில் ஓதப்பட்ட குணங்களையே உபஸம்ஹாரம் செய்து கொள்ள வேண்டியது என்கிற நிலை யேற்படும்.

அவ்விதமானால் நாம்பதில் சொல்வோம் - आनन्दादय: प्रधानस्य - ஆனந்தம் முதலிய குணங்கள் பிருஹ்மத்துக்கு ஓதப்படுகின்றனவே - அவை எல்லா வித்யைகளிலும் சேர்த்துக் கொள்ளவேண்டியது - பிருஹ்மத்தின் ஸ்வரூப நிரூபண தர்மமாகிறபடியால் (ஸத்யம், ஞானம், அனந்தம் - அமலத்வம் என்பதைப் போல) – ஏனெனில் பிருஹ்மம் ஸ்வரூபத்திலேயே இந்த குணங்களை உடையதாக வித்யாஸமின்றி இருப்பதால் (அப்ரகரணனே - ஸமான பிரகரணே - (तदेवकम्) உபஸம்ஹாரம் யேற்படுகிறது என்கிற பாவம்).

अभेदादिति - ऐक्यात् - வித்யாஸமில்லாமல் எல்லா வித்யைகளி லும் இந்த ஸ்வரூப நிரூபக தர்மங்களைக் கூடச் சேர்த்து - அந்த அந்த வித்யையின் குணங்களுடன் சேர்த்து - பிருஹ்மம் உபாஸிக்கப்படவேண்டியது. பிரதான சப்தம் பிரதான ஸ்வரூப நிரூபண தர்மங்களை உடைய குணீ - புருஷன் - பரமாத்மா என்பதாகும். அந்த பரமாத்மா - प्रधानस्य गुणिनो ब्रह्मण: - ஸர்வ உபாஸனங்களிலும் ஐக்யமாக - வித்யாஸ மின்றி-இந்த குணங்கள் பிருஹ்மத்தை எப்போதும் விட்டுப் பிரிக்கமுடியாதபடி ஸ்வரூபமாகவே விருப்பதால் - அபிரதக் ஸித்தபாவத்தாலே-ஸ்வரூப நிரூபண தர்மங்களாகும். இந்த தர்மங்கள் (ஸத்யம் ஞானம் அனந்தம் அத்துடன் ஆனந் தத்வம் - (பிற்பாடு சொல்லப்படும் அமலத்வமும் ஸ்ரீயப் பதித்வம்) ஸ்வரூப நிரூபண தர்மங்கள் - பிருஹ்மத்தின் அப்ரதிக்ஸித்த குணங்களாகும். இந்த குணங்களை உடைய தாகவிருப்பதால்—गुण्यपृथग्भावाद् गुणानाम् - எல்லாவிடங்களிலும் இந்த ஆனந்தம் முதலிய குணங்களை அனுஸந்திக்கவேண் டும். எல்லாவிடங்களில் அந்த குணங்களை உடைய பிருஹ்மம் ஒன்ருக பிரதானமாக - விசேஷ்யமாக இருக்கிறபடி யாலே. சுருத பிரகாசிகையில் - आनन्दत्वादय: आनन्दत्वादय: - द्वयैक्यो:: - எனபதைப்போல் भाव प्रधान निर्देश: - )

அப்படிச் சொல்லப்படுமானல், பிரியசிரஸ்தவம் முதலிய குணங்களும் அப்ரதிக் ஸித்த குணங்களாகச் சொல்லப்பட லாமே - எங்கனமெனில் तस्य प्रियमेवशिर: - தைத்திரியத்தில் ஆனந்தமயனை ஆத்மாவைச் சொல்லத் தொடங்கி, அவ னுக்கு பிரியமே சிரஸ்ஸாகும். மோதமே வலது பக்கத்து இரக்கையாகும். பிரமோதம் - இடது பக்க இரக்கை -

---

Foot Note பிழை திருத்தம்:—முந்திய பக்கம் 29-ல் 6வது வரி, இப்படி படிக்கவும்:—

"னுக்கு இந்த ஜ்யேஷ்ட ஸ்ரேஷ்டத்வம் மாத்திரம் சொல்லி மற்ற குணங்களை (அதாவது வசிஷ்டாதி குணங்களை) சொல்லாதபடியால் - வித்யா பேதமே ரூபத்தினுல் யேற் பட்டதாகும் (ரூப பேதாத் - வித்யா பேதமாகும்)."

ஆனந்தமானது நடு உடலாகவாகும். பிருஹ்மம் நிலைத்து நிற்பதற்கு புச்சம் (வால்) காரணமாகும் - ஆதாரமாகும். (வஸ்துவின் தர்சனம் பிரியம்; வஸ்துவின் பிராப்தியினால் ஆனந்தத்தை மோதம்; வஸ்து அனுபவத்தால் யேற்படும் ஆனந்தம்—பிரமோதம்.) இந்த குணங்களும் எல்லா வித்யைகளிலும் ஆனந்தத்தைப் போல சேர்த்துக் கொள்ளப் படவேண்டிவருமே - என்கிற ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரர் அடுத்த சூத்ரத்தில பதில் கூறுகிறார். (ஸ்வரூப நிரூபக தர்மங்கள் ஸ்வரூபத்தைக் காட்டுகின்றன. (மணிக்கு (சூர்யனுக்கு) ஒளியைப் போல).

சூ. प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे (3-3-12)

பிரியசிரஸ்த்வாத்யப்ராப்திருபசயாபசயௌ ஹி பேதே (3-3-12)

பிரயசிரஸ்த்வாத்ய பிராப்தி: - தைத்திரீயத்தில் ஓதப் பட்ட பிரிய சிரஸ்தவம் முதலிய தர்மங்களுக்கு வேறு இடத்தில் பிராப்தியாவது கிடையாது (இல்லை). (ஏனெனில் உபசயாபசயௌ - உயர்வு தாழ்வுகள் - பேதோஹி - உபாஸ்யமான பொருளில் பேதம் இருப்பதால் ஏற்படக் கூடும்.

மேலே பிருஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக குணங்களை எல்லா வித்யைகளிலும் சேர்க்கப்படுமானால் - தைத்ரீயத்தில் சொல்லப்பட்ட ப்ரிய சிரஸ்த்வம் முதலியவை வேறு இடத்தில் பிராப்தி இல்லை - கிடையாது (மற்ற ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தாதி குணங்களைப் போல), ஏனெனில் இந்த குணங்கள் பிருஹ்மத்திற்கு ஸ்வரூப நிரூபக தர்மங்களாக ஆகமாட்டாது. (பிரியம் - மோதம் - பிரமோதம் - ஆனந்தம் - இவை ஒன்றையொன்று அபேட்சித்தும் வேறு போக்தாவை அபேக்ஷித்தும் உயர்வு தாழ்வுள்ளனவாகக் காணப்படுவதே அதன் காரணமாகும். உயர்வு தாழ்வுகள் பேதமிருப்பதால்ஸம்பவிக்கும். இந்த பிரியசிரஸ்த்வம் என்கிற குணங்கள் நிருபிதஸ்வரூபதர்மங்களாகும். பிருஹ்மத்துக்கு

குணமில்லை - அதனால் அதனை மனதில் படிவதற்க்காக ஒரு ரூபம் (கற்பிக்கப்பட்டு) சொல்லப்படுகிறது - पूर्वविषयस्वरूप-मात्रान्तर्गतत्वात् - ஏற்கனவே படிக்கப்பட்ட ஸ்வரூப நிரூபக தர்மங்களை விளக்கி - விமர்சிப்பது இன்னொரு வகையான நிரூபித ஸ்வரூப தர்மங்களாகும். ஸ்வரூப நிரூபக தர்மங்கள் அப்ரதிக் ஷித்த (விட்டுப் பிரியாதபடி) ஸ்வரூபத்திலே சொல்லும் குணங்கள் - வைலக்ஷண்யம் கொண்டவை. பிர யோஜக தர்ம ஸத்பாவம் பிரதி வஸ்துவிலும் இருப்பதால் யேற்படுபவை — ஜாதி தர்மங்களைப் போல. ஜகத் காரணம். ஸர்வக்ஞத்ம் இத்யாதி குணங்கள் நிரூபித ஸ்வரூப குணங் களாகும். ஏற்கனவே அப்ரதிக் ஷித்த தர்மங்களால் காட் டப்பட்ட வஸ்துவை, அந்த தர்மிக்கு (குணிக்கு) மீண்டும் விளக்குபவை - இந்த குணங்களாலும் அதன் விபவம், ஐஸ்வர்யம் யேற்படுகிறது என அர்த்தமாகும். ஆனந்தத் வாதி குணம் இத்தகைய ஸ்வரூப நிரூபகதர்மம். பிரிய மோத சிரஸ்த்வம் நிரூபித ஸ்வரூப விசேஷணமாகும். காம் பீர்ய - ஔதார்ய இத்யாதி குணங்களைப் போல. ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தம் அமலத்வம் (ஸ்ரீயப்பதித்வம்) • गवादेर्गोत्वादिकमिव स्वरूप निरूपक - தர்மங்களாகும்).

ஆகையால் சிர: பக்ஷ புச்சம் இத்யாதி அவயவபேதங் கள் இருப்பதால், இந்த அவயவங்களில் பெரியது-சிறியது பிருஹ்மத்திற்கோ அதை உடைய வேறு வ்யக்திக்கோ ஏற்படும். அதனால் - பிருஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக தர்மங்களான ஸத்யம் ஞானம் அநந்தம் - இத்யாதி சுருதி யுடன் விரோதம் யேற்படும். सत्यं ज्ञानमनन्तं ब्रह्म (தை. உ).

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்படுவது - தை. உ. பிருஹ்மம் ஆனந்த குண்முடையது அந்த பிருஹ்மத்தை உருவகமாக-ஒரு ரூபத் திலே பக்ஷியைப் போல (கருடனைப் பேரல)ச் சொல்லி • பிரியம் சிரஸ் - மோதம் வலது பக்கம் இரக்கை......வால் (புச்சம்) நிலைத்து நிற்பதற்கு - ஆதார காரண பூதமாக வால் (புச்சம்) எனப்படிக்கப்பட்டது. இந்த குணங்கள்

உபாஸ்யமாக மாட்டாது ஏனெனில் - தார தம்யங்கள் போக்தாவை அநுசரித்து-உயர்வுதாழ்வு ஏற்படக்கூடும். (மேலும் - ஒரு அரசனை இரண்டு ஸ்திரிகள் - அவர்களில் ஒருத்தி குடையினாலும், மற்றொருத்தி சாமரத்தினாலும் சேவை செய்கிறார்கள். உபாஸ்யமான அரசன் ஒன்றாயினும், உபாஸனை பேதமும் தர்மத்தில் வறையறையும் (யேற்றம் - தாழ்வு) ஏற்படுவதுபோல் - இங்கேயும் இருக்கலாம். இதனால் சுருத ப்ரகாசிகைக்காரர் சொல்லியது போல - கால பேதத்தினால் ஏற்ற தாழ்வுகள் ஏற்படலாம். ஸ்தூலத்வம் - க்ருஸத்வம் யேற்படலாம். இதனால் நித்யத்வ தர்மங்களுடன் இம்மாதிரியான மாறுதல்களை ஹ்ரஸ்வம் தீர்க்கம் - உடைய சுருதிகளுக்கு விரோதம் யேற்படுகிறது. வ்யக்திகளின் விக்ரஹங்களின் (ரூபங்களின் பரிமாணத்தை) ஒட்டி ஏற்படும் ரூப மாறுதல்கள் இவைகளில் சேர்க்கப்பட்டவையாகும். இதுமாதிரி தேச விசேஷம் - வஸ்து விசேஷங்களால் ஏற்படும் மாறுதல்களாகும். பரிமாண தாரத்மயம் உள்ள ஸ்தூலத்வாதி சுருதி நித்யத்வ சுருதிகளுடன் விரோதிக்கும். ஸ்வரூபத்திற்கு விரோதமாகவிருக்கிறபடியால்). மேலும் பிருஹ்மம் கல்யாண குணங்களுக்கு இருப்பிடம். இவை எப்போதும் இருப்பவை, பிருஹ்மம் அஸ்தூலத்வம் - அனுத்வம் தீர்க்கமில்லை குட்டையில்லை - இத்யாதி பிராகிருத (நீச - ஹேய) குணங்கள் பிருஹ்மத்திற்கு இல்லை. (தை. உ. 1.1; பிரு. உ. 3-8-8; இத்யாதி).

**ஸ்ரீபாஷ்யம்:**—மேலும் இவ்விதமாக ஆட்சேபிக்கப்படலாம் - பிருஹ்மத்திற்கு ஐஸ்வர்ய, காம்பீர்ய, ஔதார்ய, காருண்ய குணங்கள் கணக்கில்லாதபடி ஓதப்பட்டிருக்கின்றன - அனந்தமானவை. ஆயினும் இவை ஸ்வரூப நிரூபக தர்மங்களாகமாட்டா. இந்த குணங்கள் பரமாத்மாவுக்கு ஓதப்படினும், அவை அந்த வித்யா பிரகரணத்தில் ஓதப்படவில்லை. ஓதப்படாத குணங்களை ஒவ்வொரு வித்யையிலும் சேர்க்கப்படவேண்டுமென்றால், எல்லாக் குணங்களும் எல்லா விடங்களிலும் சேர்க்கப்பட வேண்டிய நிலைமை ஆகும். ஆகவே நிருபித ஸ்வரூப தர்மங்களைப் போல மற்ற குணங்

களை எல்லா வித்யைகளில் சேர்க்கக் கூடாது; அப்படிச் சேர்த்தால் வித்யை அனுஷ்டிக்கப்படாமல் ஆகும்-அதனால் ஓதப்படாத குணங்களை உபஸம்ஹாரம் (சேர்த்தலால்) செய்வதால், எல்லாவிடங்களிலும் எல்லாக் குணங்களைச் சேர்க்க நேரிடும் அந்த குணங்களோ கணக்கற்றவை. அனுஸந்திப்பதும் இயலாது. இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக் காரர் பதில் அளிக்கிறார்.

ஸி. சூத்ரம். इतरे त्वर्थ सामान्यात् (3-3-13)

இதரேத்வர்த்தஸாமாந்யாத் (3-3-13)

இதரே-து-மற்ற குணங்கள் (ஸ்வரூபநிரூபகதர்மங்கள்) ஆனந்தம் முதலியன ஆகும். ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தம் என்கிற ஸ்வரூப தர்மங்கள் அர்த்த ஸாமாந்யாத்-எல்லா விடங்களிலும் சேர்க்க யோக்யதை பெற்றவை - ஏனெனில் அவற்றின் தர்மியாகிற பிருஹ்மம் ஒன்றாகவிருப்பதால் - குணங்கள் - வித்யாஸமின்றி இருப்பதால் - அவை பிருஹ்மத்திற்கு அப்ரதிக் ஸித்தமாக விருக்கின்றன. அதனால் ஸ்வரூப நிரூபக தர்மங்களாகும். எல்லாவித்யைகளிலும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டியதாகும். தர்மி ஒன்றாக விருக்கிறபடியால்; குணீ தோன்றுமிடமெல்லாம் கூடத் தோன்றுகின்றனவாம். அதனால் எல்லா வித்யைகளிலும் அநுசந்திக்கத்தக்கவையாகின்றன.

து - சப்தார்த்தம் - மேல் சொல்லப்பட்ட ஆட்சேபத்தைத் தள்ளுகிறது (நிரூபக ஸ்வரூப தர்மங்களை சேர்த்துக் கொள்ளக் கூடாது. ஸ்வரூப நிரூபக தர்மங்களைத்தான் சேர்த்துக்கொள்ள வேண்டியது-அத்துடன் ஆனந்தம் என்கிறதையும் சேர்க்க வேண்டியது). இதரேது-ஆனந்தாதய ஸ்வரூப நிரூபக தர்மங்கள். अर्थसामान्यात् - எல்லா விடங்களிலும் (வித்யைகளில்) சேர்க்கப்பட சாமர்த்தியம் பெற்றவை) அதனால் सर्वत्रानुवर्तते. இந்த குணங்களால் போதிக்கப்படும் தர்மி ஒன்றாக ஸமானமாக விருப்பதால்-(குணமும் அதை உடைய வ்யக்தியும் ஸாம்யமாக-ஸமானமாக ஓதப்பட்டிருப்பதால்) அந்த குணங்களே அதை உடைய தர்மியை

அவனுடைய ஸ்வரூபத்தை நிருபணம் செய்யும் தர்மங் களாகிறபடியாலே, அவை எல்லாவிடங்களிலும் எப்போதும் அப்ரதிக் ஸித்தமாகவே (வஸ்துவை விட்டுப் பிரியாதபடி யிருக்கும்) ऐश्वर्यस्वरूपवत् सर्वानुवर्तन्ते - அத்தகைய ஸ்வரூப நிருபண தர்மங்கள் ஸத்யம் - ஞானம் - ஆனந்தம் அமல த்வம் அனந்தத்வம் என்கிற குணங்களாகும். தை. பிரு. 1ல் यतो वा इमानि - எந்த பிருஹ்மத்திடமிருந்து-இந்த பிராணிகள் எல்லாம் உண்டாயிற்றோ - இங்கே ஜகத் காரணத்வம் பிருஹ்மத்திற்கு உபலக்ஷிதமாக (ஏற்கனவே வேறு குணங் களால் முதலில் அறியப்பட்ட பிருஹ்மம் - இப்போது இந்த (நிரூபித ஸ்வரூப தர்மங்களால்) மீண்டும் விளக்கம் செய் யப்பட்டு உதாஹரிக்கப்பட்டு - பிருஹ்ம ஸ்வரூபத்தை உறுதி படுத்துகின்றன. (இந்த விஷயம் ஜன்மாத்யதி கரணத்தில் விளக்கப்பட்டதாகும்). தை. ஆன. सत्यं ज्ञान - मनन्तं ब्रह्म (இவை ஸ்வரூப நிருபண தர்மங்களாகும். இவை களினுல் அறிவிக்கப்பட்ட பிருஹ்மம் ஜகத்காரணமாகும்). அதேமாதிரி आनन्दो ब्रह्म பிரும்மம் ஆனந்தம் என்கிற குணத்தை உடையதாகவிருக்கிறது - தை. பி. 6 - இங்கே ஆனந்தாதி குணங்கள் பிருஹ்ம ஸ்வரூபத்தையே நிருபிக் கின்றன.

ஆகையால் இந்த குணங்கள் உபாஸ்யப் பொருளான பிருஹ்ம ஸ்வரூபத்தைச் சொல்வதாலே, எல்லா வித்யை களிலும் அனுவர்த்திக்கின்றன. (ஸத்யம் ஞானம் அனந்தம் போல), இன்னும் சில குணங்கள் நிருபித ஸ்வரூப குணங்கள்-யேற்கனவே உடையப்பெற்ற பிருஹ்மத்திற்கு- அவைகள் காருண்யம் காம்பீர்யம் இத்யாதி குணங்கள் ஆகும். இவையும் பிருஹ்மத்தைப் பிரதி பாதிக்கின்றன. ஆனுல் இந்த குணங்கள் அப்ரதிக் ஸித்தமாயிருப்பினும் பிருஹ்மம் தோன்றும் போதெல்லாம் தோன்றுகின்றவை யல்ல - அதனுல் பிருஹ்ம ஸ்வரூபத்தையோ—பிருஹ்மத்தின் நிஜஸ்வரூபத்தை அறிவதற்கு - குணியை (தர்மியை) அறியவோ இவை, அவசியமிருக்காது. அதாவது அவை களை எல்லாவற்றிலும் சேர்க்க வேண்டியதில்லை.

गुणिनो गुणापृथक्सिद्धिरप्यपेक्षिता । यं गुणं विहाय गुणी- कदापि न भवति । स एव प्रायः स्वरूपनिरूपको भवति

(உத்தமூர் ஸ்வாமி); இதுதான் இலக்கணம். ஆகையால் சுருதிகளில் எந்த வித்யைகளில் எந்த ஸ்வரூப நிருபக குணங் கள் ஓதப்பட்டிருக்கின்றனவோ • (மேலே காட்டப்பட்ட ஸத்யம் ஞானம் இத்யாதி குணங்கள் தைத்; சாந்தோக்யம், முதலியவைகளில) ஓரிடத்தில் - அவைகளே வேறு இடத் திற்கு உபஸம்ஹாரம் செய்து - तं तत्रोपसंहार्याः தோஷ மில்லாதது—

निरवद्यम्—एवञ्च प्रथमसूत्रे अर्थसामान्यस्यैव हेतुत्वं विवक्षि- तमिति न व्यभिचार इति भावः

(இங்கு அறியப்பட வேண்டியது • குணம் வஸ்துவின் முக்ய தர்மமாகிறது - அந்த வஸ்துவை அறிவதற்கு அந்த குணம் மிக அவசியமாகும். இதனுல் குணமும் வஸ்துவும் ஸாம்யத்தை-ஒன்ருக விருப்பதை அடைகிறது. ஸாமாநாதி கரணத்தினுல் விசேஷண விசேஷ்ய பாவத்தினுல் யேற்படு கிறது - இந்த விஷயம் ஜிக்ஞாஸாதி கரணத்தில் சொல்லப் பட்டதாகும்). ஸத்யம் ஞானம் அனந்தமாகிற குணங்கள் விசேஷ்யமாக எப்போதும் இருக்கின்றன) உபலக்ஷணம் என்கிறது அமுக்யமான - இன்னொரு தர்மத்தைக் குறிக்கும். ஏற்கனவே வேறு முக்ய தர்மங்களால் அறியப்பட்டதை இந்த உபலக்ஷண முறையினுல் அறிந்து - வஸ்துவை உறுதிபடுத்துவதாகும். அதனுல் உபலக்ஷண குணம் (தர்மம்) வஸ்துவின் அப்ரதிக் ஸித்த தர்மமாகாது. ஆகை யால் உபலக்ஷண முறையும் வஸ்துவை அறிவதற்கு வேறொரு வழியினுல் - யேற்கனவே குறிப்பிட்ட லக்ஷணங் களுடன் கூடியதாகவிருக்கும். உதாரணமாக பிருஹ்மம் ஆனந்தம்.(ஆனந்த ஸ்வரூபமும் குணத்தையும் உடையது). ஞானம் என்பதைப் போல-அந்த பிருஹ்மமே ஜகத்காரணம்- முதலில் சொல்லப்பட்ட ஆனந்தம் ஸ்வரூபகுணம் (அப்ரதிக்

ஸித்த தர்மமாகும்). பின்னுல் சொல்லப்பட்ட ஜகத்காரண த்வம் உபலக்ஷண முறையினுல் அறியப்பட்டதாகும் (ஜன் மாத்யஸ்ய யததி கரணத்தில் விளக்கத்தைப் பார்க்கவும்). இரண்டு முறைகளும் அவசியமாகும் - பிருஹ்ம ஸ்வரூப நிரூபணத்திற்கு.

ஸ்ரீபாஷ்யம்:—

மேலும் இவ்விதமாகச் சொல்லப்படலாம். உபசயம் அபசயம் (பெரியது - சிறியது - போக்தாவை அனுஸரித்து பிருஹ்ம அவயவங்களிலே யேற்படுதல் - பிரியம் மோதம் பிரமோதம் ஆனந்தம் இவை ஒவ்வொன்றும் போக்தாவை அபேக்ஷித்து - ஏற்ற தாழ்வுள்ளனவாகக் காணப்படுவதே காரணமாதலரல் உயர்வு தாழ்வு பேதம், தர்மிபேதத்தால் ஸம்பவிக்கும்) - ஆகவே பிருஹ்மத்திற்கு உபசயாபசய ஏற் படுதல்பிரிய சிரஸ்த்வத்தினுல் ஏற்படலாம் (பிருஹ்மத்தின் அம்ஸங்களுக்கு (அவயவங்களுக்கு) யேற்படலாம் - ஆனுல் பிரிய சிரஸ்த்வம் புருஷவிதத்வரூபணபாவார்த்தமாக பிருஹ்மத்தை ஒரு உருவகமாகக் காட்ட எண்ணப்படுவதால் அவை பிருஹ்மத்தின் குணங்களாகமாட்டா. அப்படியானுல், ஒரு கேள்வி எழலாம்-பிருஹ்மம் அத்தகைய அந்த ரூபத்தை கொண்டதாகவில்லாமல் - ஆனுல் உருவகமாக இத்தகைய ரூபத்தைக் கொள்வதனுல் - அந்த ரூபத்தினுல் என்ன பயன்? अत या रूपस्य ब्रह्मणः तथात्वेन रूपणं किमर्थंक्रियते இத்தகைய உருவகமாகச் சொல்லப்பட்ட ரூபம், ஆனுல் வாஸ்தவத் திலே இல்லாதபடியிருக்கிற ரூபத்தினுல் - யாருக்கு - (பிருஹ் மத்திற்கு) யாது பிரயோசனம் இருக்கக்கூடும்? எப்படி யெனில் - கட. 1-3-3ல் आत्मानं रथिनं विद्धि - என்கிற சுருதியில் (ஜீவனை சாரதியாகதேரில் இருப்பவனுக - அறிந்துகொள்) என்பவைகளால் என்ன உபதேசிக்கப்படுகிறது வென்றுல் உபாஸகனுக்கு - அவனுக்கு உபகரணங்களாகவிருக்கும் ரதி - ரதம் - (ஜீவன் ரதி; ரதம் - தேகம்) இத்தகைய உரு வகம் (ரூபணம்) - உபாஸனைக்கு உபகரண பூதங்களாக விருக்கும் சரீரம் இந்திரியாதிகளை தன் வசப்படுத்தி - உபா ஸனம் செய்ய வேண்டியது என்கிற நோக்கத்தால் யேற்

பட்டதாகும். அம்மாதிரியான உபயோகம் (நோக்கம்) இங்கு ஏற்படுவதாகக் காணப்படவில்லை. ஆகையால் நாம் ஒத்துக் கொள்ள வேண்டியதாகும் (பூர்வபக்ஷி சொல்கிறான்) பிரிய சிரஸ்தவம் என்கிற குணங்களை (ஆனந்தமயனான ஆத்மாவைச் சொல்லத் தொடங்கி - அவனுக்குப் பிரியமே சிரஸ்ஸாகும், மோதமே வலது இரக்கை - ப்ரமோதம் இடது பக்க இரக்கை - ஆனந்தம் நடுவுடலாக ஆகும். பிருஹ்மம் நிலைத்து நிற்பதற்கு புச்சமாக (வாலாக) ஆகும் என்கிற உருவகம் - தை. உ.). பிருஹ்மத்தின் குணங்களாக ஒத்துக் கொள்ள வேண்டும் - (அதனால் அவைகளையும் சேர்த்து உபாஸிக்க வேண்டியது - பிருஹ்ம குணத்வம் பிரிய சிரஸ் த்வாதி நாமப்யுபேத்யம்-) - இந்த ஆட்சேபத்திற்கு, சூத்ரக் காரரே பதில் கூறுகிறார்.

சூத்ரம். आध्यानाय प्रयोजनाभावात् (3-3-14)

ஆத்யாநாய பிரயோஜநாபாவாத் (3-3-14)

ஆத்யாநாய - ஸதாயேற்படும் தியானத்திற்கு பிரிய சிரஸ்தவம் என்கிற உருவகம் யேற்பட்டதாகும். பிரயோசன அபாவாத் - வேறு தனித்த பிரயோசனம் - அதாவது பயன் எதுவும் அதற்கில்லை. இந்தக் காரணத்தினால் முக்கிய குணமாகாது - அதனால் ஆனந்தமயனான பிருஹ்மத்தை அறிவதற்கு எப்போதும் தொடராது (ஸம்பவிக்காது ஸத்யம் ஞானம் ஆனந்தம் அனந்தம் அமலத்வத்தைப் போல.) (அதாவது ஸ்வரூபக தர்மமாகாது). ஆனால் உபாஸனத்திற்கு உபயோகப்படும்.

(சங்கரபாஷ்யத்தில் - இது வேறு விதமாகச் சொல்லப் படுகிறது - அவர்களுக்கு கடவல்லியில் ஓதப்படும் புருஷன் ஒருவனே தான் வேத்யனாக (அறியத்தக்கவனாக) ஆகிற படியால் - இந்திரியங்களைக் காட்டிலும் அர்த்தங்கள் (விஷயங்கள்) பரமானவை; அர்த்தத்தைவிட மனம் மேலானது மனத்தைவிட புத்தியும் புத்தியைக்காட்டிலும் மஹானும், மஹத்தைவிட அவ்யக்தமும், அவ்யக்தத்தை விட புருஷன்

மேலானவன் - அவனே அறியத்தக்கவன் - அவனைப்பற்றிய ஞானத்தை உண்டுபண்ண இவ்விதம் அர்த்தாதிகளின் (விஷயங்களின்) பரத்வம் பரம்பரையாக ஓதப்பட்டிருக்கின்றன.)

**ஸ்ரீபாஷ்யம்:**—பிரிய சிரஸ்த்வம் போன்ற உருவக மானது தியானத்திற்கு (உபாஸனத்திற்கு) யேற்பட்ட தாகும். அதைத் தவிர அதற்கு தனித்த வேறு பிரயோசன மில்லை; அதனுல் தியானத்திற்க்காக யேற்பட்டது ரூபத் திணுல் (உருவகத்தால்) உபதேசம். ध्यानम् - என்பது அனுசிந்தனம் - உபாஸனம் என்று சொல்லப்படுகிறது அது ஸதா தியானத்திஞல் ஏற்படுவதாகும். தை. உ. (2 - 2 - 1) ब्रह्मविदाप्नोति परम् - பிருஹ்மத்தை அறிகிறவன் மேலான பதத்தை அடைகிருன். இங்கே உபதேசத்தின் நோக்கம் - ஆத்யயன ரூபத்திஞல் வேதனம் (தியானம் - உபாஸனம்) ஸித்திப்பதற்க்காக; (ஸத்யம்) ஞான ஆநந்த மயமான பிருஹ்மத்தை அறிவதற்கு - எப்படி?) ப்ரிய மோதாதி ரூபத்திஞல் - உருவகமாக (மேலே கருட பக்ஷிரூப மாகக்காட்டி) - சிரம்-பக்ஷம்-புச்சம் இத்யாதிகளால் உருவக மாகக் கற்பனை செய்து) சொல்லப்படுகிறது. (எங்கன மெனில்) எவ்விதம் அந்நமயமான சரீரத்தையுடைய புருஷன் நம்மனத்திற்குப் புரியும்படி - இது தேகம், இது சிரஸ் - இவை இரக்கைகள் - तस्येदमेव शिरः - இதுதான் அவனுடைய தலை தை. உ. 2-2-1 என்று கற்பிக்கப்பட்ட உருவகமாக (ரூபமாக) காட்டப்பட்டதோ - அதுபோல இங்கேயும் கொள்ளவேண்டியது; மேலும் இன்னொரு உதாரணம் - பிராணமயம் - மனோமயம், விக்ஞானமயம் — என்கிற தத்வங்கள் அவயவங்கள் மூலமாக, புத்திக்கு எளிதில் புலப்படும்படி तस्य प्राण एव शिरः - பிராணன் தான் அதன் சிரஸ் என்று எளிதில் கிரஹிக்கப்படும் தன்மை पुच्छविग्रह- कल्पनेयमनवयव एव बौद्धावयवकल्पनयेति भावः - என்பதாகும்.

प्रियादीनां सर्वेषां सुखानामेतदंशत्वरूपणेन मयडर्थपरिच्छि-न्नत्व बोधनमात्रमिति नोपासनविषयत्वं साक्षादिति भावः

உத்தராதி - [illegible] - ப்ரஜாயேய என்பதில் பரமாத்மா சொல்லப்படுகிருன் மேல்வாக்கியத்திலிருந்து இது தெரியும் (உத்தமூர் ஸ்வாமி)—

**ஸ்ரீபாஷ்யம்:—**

இவ்விதமாக அன்னமயபுருஷன் பிராணுதி அவயவங்களால் புத்திக்கு எப்படி காட்டப்படுகிறதோ - அதுபோல இதனுல் பரமாத்மா (ஆனந்தமயன்) இவைகளிலிருந்து வேறுபட்டவனுக - அவைகளுக்கு அந்தராத்மாவாக - (அர்த்தாந்தரபூத - ததந்தராத்மா - ஆனந்தமயோ அபி-) விருக்கும் ஆனந்தமயன் நமது புத்திக்கு எளிதில் கிரஹிக்கும்படி - தியான (உபாஸனத்தின்) பிரயோஜனத்திற்காக - பிரிய சிரஸ்த்வம் - மோதத்வம் - பிரமோதத்வம் — ஆனந்தத்வம் - புச்சத்வம்—இவைகளை உருவகமாக சிரஸ் இருபக்க இரக்கைகள் - நடுவுடல் - வால் இத்யாதிகளால் பக்ஷிரூபமாக கற்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்தவிதமாக, ஸதா தியானிப்பதற்க்காக புத்திக்கு எளிதில் கிரஹிக்கும்படிக்கு உருவகமாகச் சொல்லப்பட்டது - (ஆத்மாநம் ரதினம் வித்தி - என்பதைப்போல), இவ்விதம் ஆனந்தமய உபலக்ஷணத்வாத் - (மயட் அர்த்த) மயட் பிரத்யயத்திஞலபரிச்சின்னத்வத்தை போதிப்பதற்க்காகவே-ஸாக்ஷாத் உபாஸன விஷயமில்லாதபடி - ஏற்கனவே அறியப்பட்டதை உபலக்ஷணமுறையால்-பிரியசிரஸ்த்வம் முதலானவை ஓதப்பட்டவையாகும் - அமுக்யார்த்தமாகச் சொல்லப்பட்டதால் ஆனந்தமயனுக்கு உபலக்ஷணமுறையால் நிரூபக ஸ்வரூப தர்மங்களால் இம்மாதிரி ரூபமாகச் சொல்லப்படுவதாலே - பிரிய சிரஸ்த்வம் போன்ற குணங்கள் ஆனந்தமயனுன பிருஹ்மத்தை காட்டுவதற்கு எப்போதும் தொடருவதில்லை.

(இங்கு சொல்லப்படுவது - பிரயசிரஸ்த்வம் என்கிற குணத்திஞல் யாது பிரயோசனம்? அவை ஆனந்த மயனுடைய முக்ய ஸ்வரூபநிரூபக-குணங்களாகவேண்டும் என்கிற ஆட்சேபத்திற்குப் பதிலாக-இந்த குணங்கள் உபாஸனை செய்வதற்கு உபயோகப்படுகின்றன-எளிதில் இந்த குணங்களால்

ஆனந்தமயனைப் புரிவதற்கு உபயோகப்படுகின்றன. உபா ஸனத்திலே-முதல்படி-அஸ்திவாரம் (ஆரம்பம்) அதைப் பற்றிய சுருதிகளின் ஞானம்; அதனுல் பிருஹ்மத்தைப் பற்றிய ஸ்மிருதி (நினைவு-சுருதிகள் ஓதியபிரகாரம்) அடிக்கடி யேற்படுகிறது. அந்த ஸ்மிருதி ஸதா-இடைவெளியின்றி அவிச்சின்னமாக - யேற்படுமாகில், உபாஸனை உண்டாவதாகும். ஆனந்த மயன் பிருஹ்மம் என்பதை ஒரு தத்வமாக எவ்விதம் அறிவது ? அது எளிதில் புரிவதற்கு - மனத்திற்கு - பிருஹ்மத்தை உருவகமாக கற்பிப்பது - சிரஸ் பிரியம், மோதம் - பிரமோதத்வம் இதயாதிகளால் புருஷ ரூபமாகக் கற்பிப்பது; எப்போது மனது மேலான (உச்ச) நிலையை அடைந்து, அபரிசின்ன பிருஹ்மத்தை அறிவதால் கௌணமாக உருவகப்படுத்தியது - அதற்கேற்ப குணங்களைக் காட்டுவது - என்பவை யேற்படினும், அவை உபாஸனத்திற்கு முக்யமாகாது. அதாவது ஆனந்தமய வித்யைக்கு பிரியசிரஸ்த்வம் குணமாகாது - (ஆனந்தமயமாகாது).]

சூத்ரம். आत्मशब्दाच्च (3-3-15)

ஆத்மசப்தாச்ச (3-3-15)

ஆத்மசப்தாத் ச - பிரகிருத புருஷனிடத்தில் ஆத்ம சப்த பிரயோகம் காணப்படுவதைக் கொண்டு - மற்றவை தேகத்தைச் சொல்லும், (இதனுல் பரமாத்மாவாகிற ஆனந்த மயனை ஆத்மாவாகவும் - மற்றவை அநாத்மாவாகவும் (தேகமாகவும்) சொல்லப்படுவதாகும்.

अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः - ஆனந்தமயஞன அந்தராத்மா வேருகவிருக்கிருன் - இங்கே ஆனந்த மயனை ஆத்மசப்தத்தால் சொல்லப்பட்டு, அந்த ஆத்மசப்தத்திற்கு சிரஸ், பக்ஷம் புச்சம் ஆகிற அவயவங்கள் அஸம்பவமாக விருப்பதால் பிரியசிரஸ் முதலானவை அந்த ஆனந்தமயனுக்கு சுகபிரதிபத்த்யர்த்தம் - சுகத்தை தலையாகவும் - என்கிற உருவக (ரூப)மாக எளிதில் புரிவதற்காக - சொல்லப்பட்டதாகும்,

மேலும் இவ்விதம் சொல்லப்படலாம். अन्योऽन्तर आत्मा प्राणमय: - பிராணமயனைச் சரீரமாகவுடைய ஆத்மா வேறுன வன்; अन्योऽन्तर आत्मा मनोमय: - மனோமயனைச் சரீரமாக வுடைய ஆத்மாவேறுனவன்-இம்மாதிரி ஆத்ம சப்தத்திற்கு (பிராணமயாதியாகிற மற்றவை-அனாத்மாவாக) தேகத்தைக் குறிப்பதாகும் - பரமாத்மாவாகிற ஆத்மாவைத் தவிர - மற்றவை (ஆத்ம சப்தத்தினுல்) தேகத்தைக் குறிப்பதாகும்- என்று முன்பே (ஆனந்தமயாதி கரணத்தில்) சொல்லப்பட்ட தாகும். அதனுல் மீண்டும் ஆட்சேபம் எழுகிறது - अन्योऽन्तर आत्माऽऽनन्दमय: - ஆனந்த மயனுன அந்தராத்மா வேறுனவன் தை. உ. 2-5-1); இங்கே ஆத்மந் – என்கிற சப்தம் பரமாத் மாவைத்தான் சொல்லும், அவனைப்பற்றிய விஷயத்வம் எப்படி நிச்சயிக்கப்படுகிறது – என்கிற ஆட்சேபத்திற்கு, சூத்ரக்காரரே இவ்விதம் பதிலளிக்கிருர்.

சூத்ரம். आत्मगृहीतिरितरवत् उत्तरात् (3-3-16)
ஆத்மக்ருஹீதிரிதரவத் உத்தராத் (3-3-16)

(இந்த சூத்ரத்திற்கு சங்கரர் தனி அதிகரணம் ஸ்தாபிக் கிருர்). ஆத்ம க்ருஹிதி: - ஆத்மா ஆனந்தமய: - என்கிற தில் பரமாத்மா கிரஹணமே ஆத்மசப்தத்தால் அறியப்பட வேண்டும். இதரவத் - சிருஷ்டி வாக்யங்களில் படிக்கப் பட்ட ஆத்மசப்தத்தால் பரமாத்மா அறியப்படுவது போல உத்தராத் - அதே வாக்யத்தில் பிற்பாடு வரும் இடத்தில் லோகங்களை சிருஷ்டிக்கிறேன் என்பதாய், பரமாத்மாவைக் கிரஹிப்பதற்கு உரிய விசேஷணம் காணப்படுவதும் - ஒரு காரணமாகும். (இங்கு சொல்லப்படும் சுருதிவாக்யம் ஆத்மா என்பதற்கு அந்தராத்மா - अन्योऽन्तरऽऽत्मा आनन्दमय: பரமாத்மா விஷயமாகவும்; உத்தர வாக்யம் - सोऽकामयत - बहुस्यां प्रजायेय என்பதாகும்.)

(தை. உ. 2-5-1) अन्योऽन्तर आत्माऽऽनन्दमय: - அந்தராத்மா வாக விருப்பவன் வேறுனவன் (பரமாத்மாவாகிற - ஆனந்த மயன். இங்கே ஆத்மசப்தத்தால் பரமாத்மாவே காட்டப்

பட்டதாகும். இதாவத் - இந்த மாதிரி சுருதிகளிலே (ஐத். 1-1-1ல்) आत्मा वा इदमेक एवाग्र आसीत् ।स ईक्षत लोकान्नु सृजे ஆத்மா வாகிற பரமாத்மா ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒரே ஒன்றாக விருந்தார். அந்த பரமாத்மா சங்கல்பித்தார் - நான் இந்த உலகத்தைப் படைப்பேன் - இங்கே ஆத்ம சப்தத்தால் பரமாத்மா சொல்லப்படுகிறார். அது மற்ற சுருதிகளை ஒத்திருக்கிறது - அதெப்படி? उत्तरात् அதே வாக்யத்தில் பிற்பாடு சொல்லப்படுகிறது - सोऽकामयत - அந்த பிருஹ்மம் இச்சித்தது; बहुस्यां प्रजायेय நான் பலவாக ஆவேன்-பிறப்பேன் (தை. உ. 2-6-1) என்று ஆனந்தமய விஷயமாக (பரமாத்மா வாக) உத்தரவாக்யம் காட்டுகிறது. ஆகவே ஆத்மசப்தத் தால் பரமாத்மாவே சொல்லப்படுகிறான் எனத் தெரிய வருகிறது.

சூத்ரம். अन्वयादितिचेत् – स्यादवधारणात् (3 3-17)
அங்வயாதிதிசேத் - ஸ்யாதவதாரணாத் (3-3-17)

அங்வயாதிதிசேத் - ஆத்மசப்தத்திற்கு இவ்விதம் பரமாத்மாவைச் சொல்வது சரியாகாது என்று சொல்லப்படு மாகில், ஏனெனில் - (பதிலாக) ஸ்யாத் - பரமாத்மாவின் கிரஹணமே சரியாகும்; ஏன்? அவதாரணாத் - ஜகத் உற்பத் திக்குச் சொன்ன முந்தின வாக்யத்தை மீண்டும் உறுதிப் படுத்துவதாகும்.

முந்தின சூத்ரங்களிலே - சரீரத்தைச் சொல்லும் ஆத்ம சப்தம் प्राणमयादि என்பவைகளில் சொல்லப்பட்டதற்கு பிராணமய - மனோமய - விக்ஞானமய இத்யாதி சப்தங் களுடன் (சம்பந்தம்) அங்வயம் கொண்டதாக விருக்கிறது; அப்படியானால் பின்னால் சொல்லப்படும் ஆத்மசப்தம் (பரமாத்மாவைக் குறிக்கும் சப்தம்) என்பதோடு வேறாக விருக்கணும் - அதனால் உத்தர வாக்யத்தின் உதவியினால் ஆத்மா - சப்தார்த்தத்தை சரியாக நிச்சயிக்க முடியாது. என்கிற ஆட்சேபம் எழ; அப்படியானால் நாம் பதில் கூறுவோம் - स्यादवधारणात् (இருக்கிறது); சம்பந்தம்

சரியாகத்தான் விருக்கிறது; அவதாரண சப்தத்தாலே முன்பு சொல்லப்பட்டதை உறுதிப்படுத்தியதாகும் - நிச்சய சப்தமாகும். எப்படி? अवधारणात् - உறுதிபடுத்துவ தாலே. முன்பு சொல்லப்பட்டதிலும் - ஆத்மா பரமாத்மா வென்று காட்டப்படுகிறது - तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूत - அந்த பரமாத்மாவிடமிருந்து ஆகாசம் (பூதாகாஸம்) உண்டாயிற்று (தை. உ. 2-1-1) இங்கேயும் அதேபடி.

இங்கே பரமாத்மாவே புத்தியினுல் விஷயமாக அறியப்படுகிருன். பிற்பாடு வரும் சுருதியுடன் அந்வயம் இப்போது காட்டப்படுகிறது - அந்நமயாத் (சரீரமாகிற அந்நமயன் என்ற உடலிலும், பிராணமயன் என்கிற ஆத்மா உண்டு. அன்னமயத்திற்கு அவயவங்கள் போல (தலை - புஜம் – உடல் இத்யாதிகளை போல) பிராணமயத் திற்கு - சூக்ஷ்மமாக உள்ளே உள்ளது மனோமயம் – மநோ மயத்திற்கு சூக்ஷ்மமாக உள்ளிருப்பது ஜீவனுகிற விக்ஞன மயனுகிற ஜீவன் -விக்ஞானமய ஜீவனைவிட சூக்ஷ்மமாயுள்ள ஆத்மா பரமாத்மா ஆனந்தமயம்-இதற்கு உட்பிரிவுகளாகிற அவயவங்கள்-பிரியம் (தலை) மோதம்-பிரமோதம், ஆனந்தம், பிருஹ்மம். இவற்றிற்கு எல்லாம் ஆதாரமான பிருஹ்மமே ஆனந்தமயன் - அந்தராத்மாவாகும் – பரமாத்மா ஆகும்)

அதனுல் அந்நமயனுள் இருக்கும் பிராணமயன் - பிராணமயனுள் சூக்ஷ்மமாக இருப்பவனும் பரமாத்மாவே என்று நமது புத்திக்குக் காட்டுவதற்க்காக - பிராணமயன்- அதனுள் ளிருக்கும் மனோமயன் - அதனுள் இருக்கும் விக்ஞானமயனுகிற ஜீவன் - அதனுள் இருக்கும் ஆனந்த மயன் பரமாத்மாவே ஆகும். இவ்விதம் பிரகரண முடிவிலே பரமாத்ம புத்தி அந்த அந்த பொருளில் அந்தராத்மாவாக விருப்பதாலே, (அதாவது பிராணமய சரீர பரமாத்மா, மனோமய சரீர பரமாத்மா, விக்ஞானமயனுகிற ஜீவசரீர பரமாத்மா என்பதாகும்)—(அந்தராத்மாவாக விருப்பதால் யேற்படுகிறது) (நீ சொல்கிறபடி உபக்ரமத்திலே ஆத்ம சப்தத்திற்கு ஒரு விதமாயும் முடிவிலே ஒரு விதமாயு

மில்லாமல் - எல்லாவிடங்களிலும் ஆத்ம சப்தம் முக்ய ஆத்மா பரமாத்மா பரமாக அர்த்தமாகவே சொல்லப்படு கிறது). ஆகையால் உபக்ரம விரோதம் ஒன்றுமில்லை. உபக்ரமும் ஸித்தாந்த ஸாதகமே - ஆகையால் பிரிய சிரஸ்த்வாதி குணங்கள் ஸ்வரூப நிருபக தர்மங்களாக மாட்டா) - ஏனெனில் உபக்ரமத்திலே பிருஹ்ம அவய வங்களைச் சொல்வது போல - तस्माद्वा एतस्मादन्योऽन्तर आत्मा - என்று சொல்லி (உள்ளிருக்கும் பரமாத்மாவைச் சொல்லி) - பிற்பாடு तस्यैष एव शारीर आत्मा - என்று (சரீர சம்பந்தித்வமாகிற சாரீரத்வம் - கர்மவச்ய ஜீவனுக) சொல்லியதால், ஆத்மத்வம் வேறு ஒன்று ஊஹது எனக்காட் டிற்று-பிறகு அன்ன ரஸமயத்தில் ஆரம்பமாகி-ஒவ்வொன்றி லும் அனுப்ரவேசம் செய்து - ஸர்வத்தையும் சரீரமாக்க கொண்ட சாரீரத்வம் பரமாத்மாவே என்பதாக ஆனந்த மயனில் முடித்தது.

பிற்பாடு सोऽकामयत-தை. உ. 2-1-1-என்று ஸ்ருஷ்டி வாக் யம் ஆரம்பமாகிறது (இதனுல் - பரமாத்மாவாகும் இங்கே). ஆகையால் பரமாத்மாவைத் தவிர வேறு வஸ்துக்களுடன் 'ஆத்மந்' என்கிற பதம் (சப்தம்) உபக்ரமத்திலேயும்; உபக்ர மிக்கப்பட்ட ஆனந்தமயனுன ஆத்மா பரமாத்மாவே ஒவ் வொன்றிலும் அனுப்ரவேசம் செய்வதால் - என்று காட்டிய தால் - ஆத்ம சப்தத்தின் பொருளாக - பரமாத்மாவிடம் அந்வயம் தோஷமில்லை (निरवद्यम्) அந்த ஆத்மா அந்யோந்தர ஆத்மா; ஆனந்தமயனில் உபஸம்ஹாரம் ஆகிறது—அதுவே ஈக்ஷணம் செய்தது (ஸங்கல்பித்தது) என்பதாம்.

இங்கு சொல்லப்படுவது - சுருதி அந்தத்தில் தைத். உ. 2-6-1 முந்தின சூத்ரத்தில் சொல்லப்பட்டதை தை. உ. सोऽकामयत बहुस्यां प्रजायेय - (பரமாத்மாவை சொல்லி - இதனுல் முன்பிருக்கும் வாக்யங்களிலுள்ள அர்த்தத்தை எடுக்கக் கூடுமா? எனக் கேட்கலாம் அது எப்படியெனில் - முதலில் ஆகாசம் ஆத்மாவிலிருந்து (பரமாத்மாவிடமிருந்து) உண்டா யிற்று என்கிற சுருதி; இரண்டாவதாக அன்னரஸமாய் -

மனோமயம் - பிராண - விக்ஞானமயம் - இத்யாதிகளில் ஆத்மா என்கிற எண்ணம் இல்லாமல் இல்லை - பிராண மயாதி ஒவ்வொன்றும் சரீரமாயும் - ஒவ்வொன்றிலும் பரமாத்மா உள் இருப்பதால் அந்தராத்மாவாக விருக்கிறது. இவைகளில் ஒவ்வொன்றும் அதற்கு முந்திச் சொல்லப்பட்ட தின் உள்ளிருப்பதாக விருக்கிறது; இந்த உள்இருக்கும் தத்வம் (அந்தராத்மாவாக) ஆத்மா என்று காட்டப்படு கிறது. தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந:-என்கிற மேல்வாக்யத் தில் ஆத்ம சப்தத்தை ஓதி - கடைசியில் பரமாத்மாவே - ஆனந்தமயனாக விருப்பவன் அவனைவிட உள்ளே யாரு மில்லை. இங்கே அந்யோந்தர ஆத்மா ஆனந்தமய:-ஆத்மா என்கிற சப்தம் முடிவையடைகிறது.) உபக்ராந்தமான ஆத்மோபதேச பரம்பரை ஆனந்தமயனில் முடிவடைகிறது. (சுருதபிரகாசிகை) சுருதபிரகாசிகையில்—

परमात्मन् एव - एवमुपक्रमोपक्रमे परमात्मन् एवाऽऽत्मबुद्धिः शब्दविषयत्वान्नोत्तर वाक्यस्यौपक्रम बाध इत्यर्थः । अन्त-प्रविष्टः...अन्तः प्रवेशननियन्तृत्वं हि आत्मत्वं । तत्र प्राण-मयेऽन्नमयादन्तरत्वमात्रेण परमात्मबुद्धिर्जाता, तस्याप्यन्तर-दर्शनेन तत्रापि परमात्मबुद्धिर्जाता पूर्वत्र तु निवृत्ताः उत्तरो-त्तरे तत्तदन्तरे चात्मशब्दः प्रयुक्तः । यस्यान्यदन्तरं नास्ति ईक्षणादिकं च श्रुतम्, तस्मिन् परमात्मबुद्धिरात्मशब्दश्च प्रति-ष्ठितौ । एवं पूर्वत्रापि परमात्मबुद्धिविषय एवाऽऽत्मशब्दम-योगादयमप्यात्मशब्दः परमात्मविषय एवेति - नात्रोपक्रम-बाध इत्यर्थः—

கார்யாக்யாநாதிகரணம் 3-3-5

ஸூத்ரம் कार्याख्यानादपूर्वम् (3-3-18)

கார்யாக்யாநாத பூர்வம் (3-3-18)

கார்யாக்யாநாத் - பிராணவித்யையில் ஆசமனத்தை பிராணனுக்கு வஸ்திரமாக ஓதியிருக்கிறது. அதனுல் அது

அவசியம் கர்த்தவ்யம். அபூர்வம்-சுருதியினால் எது ஸ்தாபிதமில்லையோ - அந்த வாக்யத்தாலே யேற்பட்டதாகும் (அதாவது ஸ்மிருதியிலே ஓதப்பட்டதாகும் - இது பூர்வபக்ஷம் - சித்தாந்தப்படி சாந்தோக்யத்தில் ஜலமாகிற பிராணவஸ்திரம் ஓதப்பட்டிருக்கிறது).

இங்கு சொல்லப்படுகிற விஷயம் - பிராண வித்யையில் ஏற்கனவே சொல்லப்பட்ட மிச்சமான (शेषभूतमिदानीं - சேஷ வாக்யங்களின் விஷயங்கள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவை. சாந்தோக்ய - வாஜஸே நயர்கள் - பிராணனை ஜ்யேஷ்டம்-ச்ரேஷ்டமுமாக உபாஸிக்கவேண்டும் என்று சொல்லிவிட்டு, பிராணனுக்கு மேல் வஸ்திரமாக ஆப: (ஜலத்தைச்)சொல்லி - அதனால் நாம் ஆசமனீயம் செய்கிறோம் என்றும் சொல்லப்பட்டது. சாந்தோக்யத்திலே அந்த விடத்திலே - (5-2-2)

स होवाच, किं मेवासो भविष्यतीति । आप इति होचुः । तस्माद्वा एतदशिष्यन्तः पुरस्ताच्च परिष्टाच्चाद्भिः परिदधति, लम्भुको, हवासो भवति अनग्नो भवति ।

அந்த முக்யபிராணன் ஓதிற்று - எனக்கு மேல் ஆடையாக எது இருக்கும்? மற்ற இந்திரியங்கள் பதில்கூறின "ஜலம்" இவ்விதம் ஜலம் பிராணனுக்கு மேல் ஆடையாக ஆனது.

**விளக்கம்:—**

(பிராணவித்யை – ஜ்யேஷ்டமும் ஸ்ரேஷ்டமுமாம் பிராணன் - என்று உபாஸிக்கப்படவேண்டும் - மூத்ததாய் (ஜ்யேஷ்ட) சிரேஷ்டமுமானது. முக்யபிராணனும் இந்திரியங்களும் ஒரு சமயம் கலஹம்செய்து கொண்டு - யார் உயர்ந்தவன்? என்று கேள்வி கேட்டுக்கொண்டு - இதற்கு விடையளிக்கும்படி பிரஜாபதியை அணுகின - அப்போது அவர் சொன்னதாவது "உங்களுக்குள் யார் சரீரத்தைவிட்டு வெளிப்பட்டால் சரீரம் நிலைகுலைந்து அழியுமோ - அவரே ச்ரேஷ்டன்" என்றார். இதன்படி-வாக்கு கண் ச்ரோத்ரம் ஒவ்

வொன்றாக வெளிக்கிளம்பின, ஒரு வருஷம் - ஒவ்வொன்றும் வெளித்தங்க ஆனால் சரீரம் ஜீவித்து நின்றது. பிராணன் வெளிக்கிளம்பப் பார்த்ததும் கட்டியிருக்கும் கொழுத்த குதிரை கட்டுத்தறியின் முளைகளையெல்லாம் பிடுங்கிக் கொண்டு எப்படி புறப்படுமோ அதுபோல புறப்பட - வாக்கு முதலிய இந்திரியங்கள் தடுமாறி-வதைக்கப்பட்டு பிராணனை வேண்டா - வேண்டா - என்று தடுத்து-எங்களுக்கு உள்ள பெருமைகள் யாவும் உன்னுடையனவே - என பிராணனைத் துதித்து - ஐஹிக ஆமுஷ்மிக எல்லாப் பலன்களையும் மனது ஆத்மாவிற்கு எல்லாக் குணங்களையும் உண்டாக்குவது எல்லாம் - பிராணனின் மஹிமையினால் என்று சொல்ல - எல்லாவற்றையும் பிராணனுக்கே அர்ப்பணம் செய்தன. அதன் பிராணன் மேல் பிரபுவாகி, எனக்கு ஆடை அன்னம் எல்லாம் அளித்துப் பூஜிக்கவேண்டும் என்றது. உலகம் புஜிக்கும் அன்னம் எல்லாம் பிராணனுக்கே என்றும்; புஜிப்பதற்கு முன்னும் பின்னும் அருந்தும் ஆசமநதீர்த்தம் அதற்கு உடையென்றும் சொல்லி - ஊணும் உடையும் அவை அளித்தன- ஆக பிராணனை இங்கனம் ஜ்யேஷ்டம் ஸ்ரேஷ்டம் என உபாஸிப்பது எனவாகும். ஆகையால் நாம் அன்னம் உண்பதற்கு முன்பு - பிராணனைத் தியானித்து ஜலம் அருந்தி (ஆசமனீயம்செய்து) பிறகு சாப்பிட்டபின்பும் பிராணனைத் தியானித்து - ஜலத்தை அருந்துகிறோம் - அதன் மேலாடையாக ஜலத்தினால் பரிசேசனம் செய்கிறோம். ஏன் இவ்விதம் செய்கிறானோ - வஸ்திரத்தை அடைகிறான் - அவன் நிர்வாணத்திலிருந்து விடுபடுகிறான். லம்புகோ - ப்ராப்தா - ஸவான் - தத்கிரது நியாயத்தால் வஸ்திரத்தை பலனாக அடைகிறான். ஆகவே ஆப: வாஸ இதி.

வாஜஸேநயர்கள் (பிருஹ். உ.) ஓதுகிறார்கள் - முக்ய பிராணனால் கேள்வி கேட்கப்பட்டு, "எங்கே என் ஆடை?" வாக்கு முதலிய இந்திரியங்கள் ஜலத்தைக் கூறின - "ஜலம் தான் உனக்கு ஆடை" இதை அறிந்தவர்கள். வேதங்களை ஓதுகிறவர்கள் ஜலத்தை அன்னம் சாப்பிடுவதற்கு முந்தியும் பிந்தியும் அருந்துகிறார்கள்; ஆசனம் செய்கிறார்கள். இவ்

விதமாக அவர்கள் பிராணனை - ஆடை - உடுத்தியதாக - (अनग्नं - பிராணனை) நினைக்கிறார்கள். ஆகையால் இதை அறிகிறவன் சாப்பிடுவதற்கு முந்தியும் பிந்தியும் ஜலத்தை அருந்துகிறார்கள். அவர்கள் பிராணனை ஆடையுள்ளதாக (நிர்வாணமின்றி) செய்கிறார்கள். (கண்வசாகையிலும் இது சொல்லப்படுகிறது). (முற்றும்)

ஸ்ரீபாஷ்யம்:—

இங்கு சம்சயம் - இங்கு சொல்லப்படும் ஆசமனம் விதியாகச் சொல்லப்பட்டிருக்கிறதா? அல்லது பிராணனின் ஆடையாகச் சொல்லப்படும் ஜலத்தை அனுஸந்திக்க வேண்டியதா? இந்த வாக்யத்திலே - अशिष्यन् आचामेदशित्वा चाचामेत् - சாப்பிடுவதற்கு முன்பும், சாப்பிட்ட பின்பும். ஜலத்தை சாப்பிடவேண்டும் (ஆசமனீயம்) செய்யவேண்டும் என்பதில் - ஆசமனத்தில் விதி ப்ரத்யயம் காணப்படுகிறது; एतमेव இந்த விதமாக तदनमनग्नं பிராணனுக்கு ஆடை உடுத்தியதாக (ஆடையில்லாமையிலிருந்து விடுதலை)ச் சொல்லி, இங்கே விதி ப்ரத்யயம் இல்லாதபடியாலே, ஆடையில்லாமையிலிருந்து விடுபட்ட நிலையைச் சொல்வதாலே சரியாகும்; (முன் கூறப்பட்ட வாக்யத்திற்கு) அதற்கு ஸ்துதி - அநுவாதம் செய்வதாக இது பொருந்தும்; போஜன அங்கமாக ஆசமனம் ஸ்மிருதிகளிலும் - ஆசார அனுஷ்டானத்திலும் கிடைக்கப் பெறுவதால், விதி ப்ரத்யய பலத்தினால் பிராண வித்யைக்கு ஆசமனீயம் அங்கமாக விதிக்கப்பட்டிருக்கிறது (ஆகவே பிராண வஸ்திரமாக ஜலத்தின் தியானத்தை (அனுஸந்திப்பதை) விதிக்கிறதா - அல்லது ஆசமனம் செய்வது என்கிறதை விதிக்கிறதா என்கிற சம்சயத்ற்குப் பதிலாக - ஆசமனீயம் பிராண வித்யைக்கு விதிக்கப்பட்டிருக்கிறது என்பதாம்).

இவ்விதம் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுவோம் - ஆசமனீயம் செய்யப்படும் ஜலத்தை தியானிப்பது - பிராணனுக்கு ஆடையாகத் தியானிப்பது அந்த பிரகரணத்திலே அனுஸந்தானம் செய்யப்படுகிறது. ஏங்கனமெனில்-

अपूर्वम् - அது புதிதாகவும் - அதாவது ஏற்கனவே அடையப் படாததாகவும் अप्राप्तं - (வேறு ஞான ஸாதனத்தினுல் அடையப்படாததாகவுமிருக்கிறது. कार्यैक्यानात् - अप्राप्ताख्या- नात् - அதாவது சப்தமாகிற வேதம் ஒன்றினுலே அறியத் தக்கதாயும் - மற்ற பிரமாணங்களால் ஸ்தாபிக்கப்பட முடியாதயாதலாலும்; - शब्दस्यार्थवत्वादित्यर्थः-இதற்கு அர்த்தம்- சப்தமாகிற சுருதிக்கு ஒரு குறிக்கோள் (நோக்கம்) உண்டு - ஸ்வத: பிரமாணம் - வேறு ஒன்றையும் அபேக்ஷிக்காது. அதனுல் ஏற்கனவே இதர பிரமாணங்களால் அறியப்படா ததை - அது சொல்வதாகும்.

இதனுல் என்ன சொல்லப்பட்டதென்றால் - சா. உ. किं मे वास: - எனக்கு எது ஆடையாகும்? (பிராணன் மற்ற இந்திரியங்களைக் கேட்க) - இந்திரியங்கள் பதில் கூறின— आपो वास: - ஜலம் தான் உனக்கு ஆடை; (பிரு. உ.); சாங். अद्भि: परिदधति - அவன் பிராணனை ஆடையினுல் அலங்கரிக் கிறுன்; பிரு. உ. एतमेव तदनमनग्नं कुरुते - அவன் பிராணனை ஆடையில்லாமையிலிருந்து விடுவிக்கிறுன் - என்று சுருதி கள் ஓதுவதாலே - இந்த சுருதிகள் பிராணனுக்கு ஆடை யாக விருக்கும் ஜலத்தை உபக்ரம உபஸம்ஹார வார்த்தை களால் ஜலங்களே प्राणवासो த்ருஷ்டி பரத்வமாக விருப்பதாக விருக்கிறது. அந்த ஆசமனீயமே வழக்கத்திலிருப்பதால் ஸ்மிருதிகளில் ஆசார பிராப்தமாக ஆகிறது. ஆகவே ஆசமனத்தைப் புகழ்வதாலே, அப்பினுல் ஆசமனீயம் செய்வது பிராணனின் வஸ்திரத்வம் (वासस्त्वं) அனுஸந்தானம் இந்த தியானத்தில் விதிக்கப்பட்டதாகும். அதனுல் தான் சாந்தோக்யத்தில் (5-2-2ல்) तस्माद्वा एतदशिष्यन्त: पुरस्ताच्चो- परिष्टाच्चाद्भि: परिदधति - ஆகையால் எவர்கள் இந்த சமயத்தில் ஆகாரம் சாப்பிடுகிறுர்களோ, அவர்கள் முந்தியும்-சாப்பிட்ட பின்பும் முக்ய பிராணனுக்கு ஆடையையும் அலங்கரிக்கிறுர் கள் - என்று சொல்வதால் ஜலமாகிற பிராண வஸ்திரம்-சாங் தோக்யத்தில் (விதியாக) ஓதப்பட்டதாகும் - (परिधानमेव) ஆச மனம் சொல்லப்படவில்லை என்பதாகும். (नाचमनम्) -ஆகவே ஆசமனம் செய்யப்படும் ஜலம் பிராணனுக்கு வஸ்திரமா கிறது என்னும் அனுஸந்தானமே விதிக்கப்பட்டதாகும்.

(இங்கே அபூர்வம் - கார்யம் என்கிற பதங்கள் சூத்ரத்தில் சொல்லப்பட்டவை - ஏற்கனவே மற்ற பிரமாணங்களால் அறியப்படாததை சுருதி சொல்லும். இதை வீணான அர்த்தவாத சொற்கள் எனக்காட்டாமலிருப்பதற்கு (அதற்கு அர்த்த சாமர்த்தியம் உண்டாக்குவதற்கு) புதிது என்று சொல்லும்படி ஒன்று சொல்லப்படவேண்டும் - இது சுருதியின் லக்ஷணமாகும். இங்கு சொல்லப்படுவது - நாம் ஆசமனம் செய்வது - விதியாக செய்யப்படும் பழக்கம் சாப்பிடுவதற்கு முந்தியும் பிந்தியும் - பிராண வித்யையில் ஸ்மிருதி ஆதாரத்தினால் ஏற்படாது என்பதாகும். ஆனால் இங்கு அபூர்வம் யாதெனில் பிராணனுக்கு வஸ்திரமாக விருக்கும் ஜலங்களைத் தியானம் செய்யவேண்டியது - கர்த்தவ்யம் என்பதாகும். (சூத்ரத்தில் இருக்கும் அபூர்வம் - காரியம் என்பதற்கு பொருளாகும்.)

ஸமாநாதி கரணம் - 3-3-6

சூத்ரம். समान एवं चाभेदात् (3-3-19)

ஸமாந ஏவம் சாபேதாத் (3-3-19)

வேறு சாகைகளில் வித்யைகத்வமும் - குணோப ஸம்ஹாரமும் ஏற்படுவது எவ்விதமோ - ஏவம் (இவ்விதமே) ஸமாநேச - ஸமானமாகவிருக்கும் போது வேதத்திலும்கூட (அதாவது அக்னிரஹஸ்யத்தில் ஓதப்பட்ட சாண்டில்ய வித்யையிலும் பிருஹதாரண்யக உபநிஷத்திலும் - வித்யை ஐக்யமும் குணோப ஸம்ஹாரமும் யேற்படுகிறது. அதே லக்ஷணங்கள் ஸமானமாகும். அபேதாத் - உபாஸ்யமான பொருள் (பிருஹ்மம்) ஒன்றாகவிருப்பதே அதன் காரணமாகும். (இன்னொரு விதமாக - வசித்வாதி குணங்கள் அதிகமாக ஓதியிருப்பினும் - அவை ஸத்யஸங்கல்பாதி குணங்களைவிட பேதமில்லை).

(காண்வர்களுக்கு சாண்டில்ய வித்யை இரண்டு விதமா அல்லது ஒரே விதமா? என்கிற சந்தேஹம் - ஒரே சாகையில் இரண்டு தடவைகள் சொல்லியிருப்பதால் இரண்டுவிதம் என்பது - பூர்வபக்ஷம்.)

வாஜஸேநயர்களின் அக்கிரஹஸ்யத்தில் சாண்டில்ய வித்யையைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. (அக்னிரஹஸ்யம் சதபதபிராம்மணம் (1-10). அது ஓதுகிறது सत्यं ब्रह्मेत्युपासीत, अथ खलु क्रतुमयोऽयं पुरुष: - என்று ஆரம்பித்து பிருஹ்மத்தை ஸத்யம் என்று உபாஸிக்கவேண்டும் - இப்போது இந்த புருஷன் க்ருதுமயமாக (யாகமயமாக) விருக்கிறான். அது முடிகிறபோது - स आत्मानमुपासीत् मनोमयं प्राणशरीरं भारूपमाकाशात्मानं...सत्यसङ्कल्पम् —

(வாஜஸேநயீசாகையில் அக்னிரஹஸ்யத்திலே - சாண்டில்ய வித்யையில் - அவன் (அதிகாரி புருஷன்) ஆத்மாவை மநோமயனாகவும், பிராணசரீரனாகவும், பாரூபனாகவும் ஸத்ய சங்கல்பனாயும், ஆகாசத்தைப் போலவும் - என உபாஸிக்க வேண்டும் - என்கிற குணங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. அவ்விதமே சாண்டில்ய வித்யை (சதபதபிராம்மணம்) பிருஹதாரண்ய உபநிஷத்தில் மீண்டும் ஓதுகிறது-அதே வாஜஸேநயீ சாகையில், (பிருஹ.) 5-6-1ல்.

मनोमयोऽयं पुरुषो भास्सत्यः । तस्मिन्नन्तर्हृदये यथा व्रीहिर्वा यवोवा । स एष सर्वस्य वशी सर्वस्येशान: सर्वस्याधिपतिः सर्वमिदं प्रशास्ति, यदिदं किंच–

இந்த புருஷன் (ஆத்மா) மனோமயனும் பாரூபனும், ஸத்யனும், ஹ்ருதயத்துக்குள்ளே வ்ரீஹியோ யவமோ போன்றவனும், (சூக்ஷ்மனாகவும்); அந்த புருஷனே எல்லோருக்கும் ஈசானன் - அடக்கி ஆள்பவன் - ஸர்வ பொருள்களுக்கும் அதிபதி, யாதொரு இந்தப் பொருள் உண்டோ, இவை யாவற்றையும் ஆள்பவனாகவும் ஆவான் என்று திரும்பப் படிக்கப்படுகிறது.

स एष सर्वस्य वशी - सर्वस्येशानः सर्वस्याधिपतिः सर्वमिदं प्रशास्ति, यदिदं किञ्च–

அவன் சிறிய உருவத்தில் இருப்பினும் - அவனே ஸர்வஸ்ய பதி - ஈஸானன் இத்யாதி.

இங்கே சம்சயம் - இங்கே வித்யா பேதமாக (இரண்டாக) விருக்கிறதா - அல்லது ஒன்றுதாளு? (அதாவது அக்னிரஹஸ்யம், பிருஹதாரண்யகம் - இரண்டிலுமுள்ள இந்த வித்யை (உபாஸனம்) ஒன்றானல் - குணோப ஸம்ஹாரம் (மற்றொரு இடத்தில் சேர்த்தல்) ஏற்படுமா? இரண்டும் வேறானல் உபஸம்ஹாரமில்லை — வித்யாபேதம் யேற்படுவதால் (ரூப பேதம் வருகிறதால்) அதாவது வசித்வாதி குணங்கள் அக்னிரஹஸ்யத்தில் இல்லை - ரூபபேதம் வருகிறது). அந்த இவர் ஸர்வத்துக்கும் ஈசானர் - என அக்னிரஹஸ்யத்தில் படிக்கப்படவில்லையாதலால் - அது மட்டுமே பிருஹதாரண்யகத்தில் படிக்கப்படவேண்டும் - வித்யையின் பலன்களில் வித்யாஸமில்லை இரண்டிலும்; விதியிலுமில்லை; நாம விசேஷத்திலும் வித்யாஸமில்லை - வசித்வாதிகுணங்கள் அக்னிரஹஸ்யத்தில் இல்லாதபடியால், குணபேதத்தாலே ரூபபேதம் யேற்படுகிறது - வித்யா பேதம் உண்டாவதாகும் என்று (பூர்வபக்ஷம்) சொல்லப்படுமாகில்—

நாம் பதில் கூறுவோம், समान एवमिति - இரண்டிலும் அக்னிரஹஸ்யத்திலுள்ள சாண்டில்ய வித்யையில் பிருஹதாரண்யகத்திலும் வித்யை ஐக்யம் இருக்கிறது - எங்கனமெனில் — அக்னிரஹஸ்யத்திலே மனோமய - பிராண சரீர - பாரூப - ஸத்யஸங்கல்பத்வ குணகணங்கள் பிருஹ்மத்திற்கு ஓதப்பட்டிருக்கின்றன. அதே பிரகாரம் (एवं) பிருஹதாரண்யத்திலும் மனோமயத்வாதி ஒரே மாதிரியிருக்கின்றன - வசித்வாதி குணங்கள் அதிகமாக ஓதப்பட்டிருப்பினும், அவை ஸத்யஸங்கல்பாதி குணங்களைவிட பேதமில்லை - அதனால் வித்யைகளில் ரூபபேதமில்லை - அதாவது ஸத்யஸங்கல்பத்தின் விளக்கமே - இந்த வசித்வ குணங்கள். ஆகையால் न रूपभेद: - ரூபபேதமில்லை. ஆகையால் வித்யைக்யமும், குணோப ஸம்ஹாரமும் கொள்ளுவது சரியாகும். (இங்கே ஸர்வவசீ - எல்லோரையும் ஆள்பவன் -

ஸத்யசங்கல்பம் காரணம்-ஸர்வவசீகாரியமாகும். ஆகவே ஸத்யஸங்கல்பத்தின் விளக்கமாகும்).

சம்பந்தாதி கரணம் - 3-3-7

संबन्धादेवमन्यत्रापि - (3-3-20)

ஸம்பந்தா தேவமந்யத்ராபி (3-3-20)

சாண்டில்ய வித்யை பிரித்து உபதேசிக்கப்படினும் - ஓரிடத்திற் சொல்லப்பட்ட குணங்களை மற்றொருவிடத்தில் உபஸம்ஹாரம் செய்தல் எவ்விதமோ - ஏவம் - அதுபோல, அந்யாத்ராபி - வேறிடத்திலும் கொள்ளுதல் பொருந்தும் - (ஏன்?) ஸம்பந்தாத் - உபாஸ்யப் பொருளுடன் ஸம்பந்தத்தாலே வித்யை ஒன்றுதான் - அதாவது ஒரே வித்யையைச் சேர்ந்ததாக அவையிருப்பதே - காரணம். (சூரிய மண்டலத்தில் உள்ள புருஷனும் அக்ஷிபுருஷனும் என்கிற விஷயத்திலே ஆகும்). பிருஹதாரண்யகத்திலே ஓதப்படுகிறது - 5-4-2ல் உபக்ரமத்திலே - ஸத்யம் பிருஹ்ம - (ஸத்யம் பெரியதாக விருக்கிறது). तत् यत् सत्यमसौ स आदित्यो य एष एतस्मिन् मण्डले पुरुष: - यश्चायं दक्षिणे अक्षन् - இந்த சூரிய மண்டலத்தில் யாதொரு புருஷன் உண்டோ, வலது கண்ணில் யாதொரு இந்தப் புருஷன் உண்டோ அவன் இவனே ஆகும்- என்பதாய் அதே ஸத்தியமான பிருஹ்மத்துக்கு அதி தைவ தத்திலும் அத்யாத்மத்திலும் ஆயதன (இருப்பிடஸ்தான) விசேஷத்தை உபதேசித்து, வ்யாஹ்ருதி சரீரனாக விருப்பதைச் சொல்லி, "அவனுக்கு அதி தைவதத்தில் அஹ: என்பது ரஹஸ்யமான பெயராகும், அத்யாத்மத்தில் அவனுக்கு அஹம் என்பது ரஹஸ்ய பெயராகும் (அதனுடைய உபநிஷத்) - என இரண்டு நாமங்கள் (ரஹஸ்யபெயர்கள்) உபதேசிக்கப்பட்டிருக்கின்றன.

**விளக்கம்:—**

வ்யாக்ருதி - அந்த உபாஸ்யப் பொருள் பூர் - புவ: - சுவ: என்கிறதாம் - அதனுடைய உடல்; அந்த ரஹஸ்ய நாமம் அஹர் - தேவதைகளுடன் சம்பந்தப்பட்டது - அதே

மாதிரி அத்யாத்மத்தில் அஹம்; அது ஆத்மாவுடன் சம்பந்தப் பட்டிருக்கிறது. (பிரு. உ. 5-2-3) - இரண்டு உப நிஷத்துக்களிலும் இரண்டு ரஹஸ்யப் பெயர்கள் ஓதப்பட்டிருக்கின்றன - அந்த ரஹஸ்யப் பெயர்கள் சுருதிகளில் உபாஸ்யப் பொருளுக்கு அடங்கியவையாகும். (இங்கே இரண்டு உபநிஷத் (ரஹஸ்ய நாமங்கள்) பிரிவின்றியே இரண்டு இடங்களிலும் அனுஸந்தானம் செய்யத்தக்கனவா? அல்லது ஒன்று அதிதைவத்திலும் மற்றொன்று அத்யாத்மத்திலும் அனுஸந்திக்கப்படணுமா? அதனால் சூத்ரமே பூர்வபக்ஷத்தைச் சொல்கிறது).

இங்கே ஆதித்யமண்டல புருஷன் - அக்ஷிபுருஷன் ஸத்யத்தின் வ்யாஹ்ருதியான சரீரத்துடன் கூடியதாக உபாஸ்யம் செய்யப்படவேண்டும் எனக்கூறிவிட்டு - तस्योप-निषदहरिति -; பூ: சிரம், புவ: பாஹூ:, சுவ: - பாதங்கள் என்று சொல்லி - அதி தைவதம் அத்யாத்மம்; - அதி தைவதத்தில் அஹ: என்றும் அத்யாத்மத்தில் அஹம் என்றும் இரண்டு ரஹஸ்ய பெயர்கள் द्वे उपनिषदौ - ரஹஸ்யநாமாநி); உபாஸன ஃசேஷமாக விருப்பதாக ஓதப்படுகிறது.

இங்கு சம்சயம் – அஹ: என்றும் அஹம் என்றுமான பெயர்களுக்கு வ்யவஸ்தை (சுருதியில் எந்த ஸ்தான விசேஷம் ஓதப்பட்டிருக்கிறதோ) - அந்த இரண்டு இடங்களிலும் (ஆங்காங்குள்ளதை ஆங்காங்கே வைத்துக் கொள்ளுதல்)— அநியமமாக (ஒருவரையறுப்பு இல்லாமல்) ஏற்படலாமா? அதாவது அதி தைவதத்தில் அஹ: என்பதும் அத்யாத்மத்தில் அஹம் என்கிற பெயர்களுக்கு உபஸம்ஹாரம் உண்டா- இல்லையா - (இது சந்தேகம்).

ஸத்யத்தினுடைய வ்யாஹ்ருதி சரீரத்துடன் விருக்கும் பிருஹ்மத்தை உபாஸிக்கவேண்டும் இரண்டு ஸ்தானங்களிலும் உபாஸ்யப் பொருளுடன் ஸம்பந்தத்தாலே வித்யை ஒன்றாக்விருப்பதால் - அதனுல் ரூபபேதம் இல்லாதபடியாலே, பலன்களின் சம்பந்தத்திலும் பேதமில்லை என்பதாலும் பேதமில்லை என்பதாலும் - (ஸம்யோகாத் அபேதாஸ்

ச)-வித்யை ஐக்யம் (ஒரே வித்யையைச் சேர்ந்ததாக)-அதனுல் அந்த இரண்டு ரஹஸ்ய பெயர்கள் அநியமேந (வித்யாஸ மின்றி) அத்யாத்மாதி தைவதங்களில் உபஸம்ஹாரமுண்டு என்பதாகும். (பூர்வபக்ஷம்) இதே விஷயத்தை இந்த (பூர்வ பக்ஷி) சூத்ரத்தில் संबन्धादेवमन्यत्रापि - உபாஸ்யப் பொருளுடன் சம்பந்தத்தாலே - வித்யைஐக்யம் (முந்தின் பிரகரணத்தில்) அதே தான் மற்ற விடங்களிலும் (அதாவது சூரியமண்டல புருஷன் - அக்ஷி புருஷன் இவர்களைப் பற்றிய ஓதப்பட்ட விடங்களிலும் अन्यत्रापि-) கொள்ளுதல் பொருந்தும். (சம்பந் தாத் - உபாஸ்யப் பொருளாகிற பிருஹ்மத்துடன் - ஒரே வித்யையைச் சார்ந்ததாகச் சொல்லப்படுவதே காரணமாகும்).

எப்படி மநோமயத்வாதி குண விசிஷ்ட ஒரே ஒரு உபாயப் பொருள் இருக்கிறதோ (அதாவது பிருஹ்மம்) - அதே போல ரூபபேதம் இல்லாதபடியால், வித்யை ஒன்று தான் - குணோப ஸம்ஹாரம் ஏற்படுவதாக விருக்கிறது. இந்த மாதிரியாக வேறு விடத்திலும் கூட பிருஹ்மம் ஆதித்ய மண்டலத்தில் இருப்பவனுகவும், அக்ஷிபுருஷனுக வும் சம்பந்தப்பட்டு-ஸத்யமாயும் ஒரே உபாஸ்ய பொருளாக விருப்பதால், வித்யை ஐக்யம் (ஒன்றுதான்) அதனுல் குணோபஸம்ஹாரம் உண்டாகும் - என்பதாம் - (பூர்வபக்ஷம்) (பூர்வ பக்ஷியின் கருத்து - சங்கரரின்படி ஒரே வித்யையின் சம்பந்தம் இருப்பதால் குணோபஸம்ஹாரம் உண்டாகலாம். சாண்டில்ய வித்யையில் குணோபஸம்ஹாரம் எப்படி சொல்லப் பட்டதோ அவ்விதமே வேறிடத்திலுள்ள இம்மாதிரியான விஷயத்திலும்கூட விருப்பது சரியாகும். அதிதைவதத் திலும் அத்யாத்மத்திலும் - ஸத்யவித்யைதான் பேசப்படு கிறது - ஆகவே இரண்டு ரஹஸ்ய நாமங்களுக்கு இரண்டு இடத்திலும் பிராப்தி யேற்படத்தான் செய்யும்).

அவ்விதமானுல் — நாம் பதில் கூறுவோம்

சித். சூத்ரம். न वा विशेषात् (3-3-21)

ந வா விசேஷாத் (3-3-21)

நவா - அவ்விதமில்லை; விசேஷாத் - இரண்டிலும் வித்யாஸமிருப்பதாலே. (ஸ்தானம் ஒன்றுதான், ஆயினும்

சாண்டில்ய வித்யையில் வித்யாஸமிருக்கிறது ரூப:ஸ்தானம் சொல்லப்பட்டதாகும்).

இவ்விதம் நீ சொல்கிறபடி இல்லை - இரண்டு நாமங்களும் இரண்டு வித்யைகளில் சேர்க்கப்பட்டிருப்பதால் - வித்யை ஒன்ருக விருப்பதால் - உபஸம்ஹாரம் இரண்டு நாமங்களுக்கு யேற்படலாம் என்பதாகும் எப்படி ? विशेषात् - உபாஸ்ய பொருளின் ரூபத்தில் வித்யாஸம் இருப்பதால். (ரூபம்-ஸ்தானம் சொல்லப்பட்டதாகும்) இரண்டு உபாஸனைகளிலும் பிருஹ்மமாகிற உபாஸ்யப் பொருள் ஒன்ருகவிருப்பினும் - ஸ்தானத்தில் வித்யாஸம் இருக்கிறது - சாண்டில்ய வித்யையில் ஓரிடத்தில் கண்ணில் இருப்பவனுகவும் (அக்ஷிணி புருஷன்); இன்னொரு இடத்தில் சூரியமண்டலத்தில் இருப்பதாகச் சொல்லபபடுகிறது. இதனுல் ஸ்தான ஸம்பந்தத்திலே வித்யாஸமிருப்பதால், ரூபபேதம் இருக்கிறது; அதனுல் வித்யா பேதமே (ஐக்யமில்லை). சாண்டில்ய வித்யையில் உபாஸநஸ்தானம் இந்த விதமாக வித்யாஸப் படவில்லை, ஏனெனில் இரண்டு இடங்களிலும் பரமாத்மா ஹிருதய ஆதாரத்தினுல் உபாஸிக்கப்படுகிருன் - ஆகவே இந்த ரஹஸ்ய பெயர்கள் அந்த அந்த ஸ்தானங்களில் வ்யவஸ்தை (வரையறை) சொல்வது சரியாகும்.

சூத்ரம். दर्शयति च (3 3-22)
தர்சயதி ச (3-3-22)

சுருதியும் அவ்விதமே இம்மாதிரியான தர்மங்களுக்கு வ்யவஸ்தை சொல்கிறது தான் பொருந்தும் - எனக் காட்டுகிறது.

சுருதி காட்டுகிறது - ஹ்ருதயாதாரத்வேந உபாஸ்யத்வாத் - என்பதற்கு கண்ணுக்கு ஆதாரமாயும், ஆதித்யனுக்கு ஆதாரமாயும் விருக்கிற குணங்களை உபஸம்ஹரிப்பதால் (மாற்றுவது) கூடும். சா. உ. 1-7-5ல் तस्यैतस्य तदेव रूपम्, यदमुष्य रूपम् - இதுதான் கண்ணுக்குள் இருக்கும் அதே புருஷனின் ரூபம்; எந்த ரூபம் அந்த புருஷனுக்கு ஆதித்ய

மண்டலத்தில் அந்தர்யாமியாக ஓதப்பட்டதோ - அதே ரூப் மாகும் (கண்ணுக்குள்ளே) - இதனால் ரூபத்திலே மாறுதல் ஏற்படுவதாகிறது. இவ்விதம் ஸ்வத: தானே அடையப் படாத போனால், அதிதேசம் (இதே போல அது - மாற்று தலின் பிராப்திக்கு அபேக்ஷை (அவசியம்) யேற்படுகிறது.

(இங்கு சொல்லப்படுவது - பிருஹ. உ. 5-9ல் ஹ்ருதயா தார வித்யை பேசப்படுகிறது. அடுத்த பிரகரணத்தில் சாண்டில்ய வித்யை (சூரியமண்டல புருஷன் - அக்ஷிபுருஷன் இரண்டும்) பேசப்படுகிறார்கள். அவர்களின் ரஹஸ்ய பெயர்கள் அஹ: - அஹம் - (வெளிச்சம் - ஆத்மா). இதே மாதிரி சா. உப. பிரகரணத்தில் ஒன்றின் ரூபத்தை இன்னொன்றுக்கு மாற்றுதல் விதிக்கப்படுகிறது இதனால் குணோப ஸம்ஹாரம் யேற்படுவதால் மாத்திரம் இரண்டு வித்யைகளும் ஒன்றல்ல - பேதமாகும் என்பதைக் காட்டு கிறது).

சித். ஸம்பிருத்யதிகரணம். 3-3-8

संभृतिद्युव्याप्त्यपि चातः (3-3-23)

ஸம்பிருதிதயுவ்யாப்த்யபி சாத: (3-3-23)

ஸம்ப்ருதிதயுவ்யாபத்யபிச - ஸம்ப்ருதி - த்யு வ்யாப்தி- ஆகிய ஸர்வகுணபூர்த்தி - பிருஹ்ம விபூதிகள் - வ்யாப்தி - (சாண்டில்ய வித்யைகளில் சேர்த்துக் கொள்ளக் கூடியவை அன்று - ஏன்? அத: - முற்கூறிய ஆயதந விசேஷத்தின் சம்பந்தம் இங்கும் கூறியிருப்பதாலே - (அதுவே காரண மாகும்).

**விளக்கம்:**—பிருஹ்ம ஜ்யேஷ்டா வீர்யா ஸம்ப்ருதாநி பிரும்ஹாக்ரே ஜ்யேஷ்டம் திவமாததாந - பிருஹ்மத்தை ஜ்யேஷ்ட காரணமாகவுடைய வீர்யா - ஆகாசத்தை உண்டு பண்ணுதல் முதலியன ஸம்ப்ருதாநி - இடையூறின்றி ஸம்ருத்தியாக விருக்கின்றன—ஸர்வ நியந்தாவாகிற பரமாத் மாவுக்கு காரிய விக்னம் செய்பவர் இல்லை—அந்த பரமாத்மா எப்பொழுதும் ஸர்வ குண பூர்த்தியுள்ளவர், ராணாயனீயனீ

யர்களின் கிலங்களில் வீர்யம், ஸம்ப்ருதி பூர்த்தி - முதலிய பிருஹ்ம விபூதிகள் பேசப்படுகின்றன. அதே உபநிஷத்தில் சாண்டில்ய வித்யை முதலிய பல பிருஹ்ம வித்யைகளில் படிக்கப்படுகின்றன - அந்த வித்யைகளில் முற்கூறிய வீர்யம் முதலிய பிருஹ்ம விபூதிகள் சேர்த்துக் கொள்ளப் படணுமா? இல்லையா - இதுதான் சந்தேகம் இந்த அதிகரணத்தில்.

ஸ்ரீபாஷ்யம்:—தைத்ரீயத்திலும் ராணாயணீயகர்களின் பாடங்களிலே-கிலங்களில் (வித்யையோ விலக்கையையோ கூறாத உபநிஷத் வாக்யங்கள் – கிலங்கள்) இப்படி ஓதப்படுகின்றன. தை. நா. 52

**ब्रह्मज्येष्ठा वीर्या संभृतानि ब्रह्माग्रे ज्येष्ठं दिवमाततान् ब्रह्म भूतानां । ऋतस्य ब्रह्म ते प्रथमातजज्ञे तेनार्हति ब्रह्मणा स्पर्धितुं कः—**

பிருஹ்மத்தை ஜ்யேஷ்டா (காரணமாகவுடைய) வீர்யா: - ஆகாசத்தை உண்டுபண்ணுதலாகிற ஸம்பிருதாநி - ஸம்ருத்தியோடு (செல்வப்பெருக்கு) இருக்கின்றன. அத்தகைய பிருஹ்மம் த்யுலோகம் வரை பரவியுள்ளது. அதாவது ஸர்வ குண பூர்த்தி - எப்பொழுதும் நீக்கமற நிறைவு பெற்றுள்ளது - என்று ராணாயணீயர்களின் கிலங்களில் சொல்லப்படுகிறது. மேலும் அவனே எல்லாப் பிராணிகளுக்கும் முன்பே பிறந்தான். ஆகவே அவனோடு யார் தான் போட்டி போடமுடியும் - ஸர்வ நியந்தாவுடன் போட்டி செய்பவர் யாருமில்லை—இவ்விதமாக பிருஹ்மத்திற்கு காரணமான வீர்யங்களின் ஸமிருத்தி (பெருக்கு) த்யுலோகம் வரை பரவியுள்ளது என்று ஓதப்பட்டது. இவ்விதம் பிருஹ்மத்திற்கு ஜ்யேஷ்ட வீர்யங்களின் ஸம்பிருதாநி (பெருக்கு) த்யுலோகம் வரை வ்யாப்தி - இவை ஓதப்படுகின்றனவே - இவை பிருஹ்ம (விசேஷ) குணங்களாக - முந்தின குறிப்பிட்ட வித்யைகளில் ஏற்கனவே சொல்லப்படாமையால், இவை எல்லா வித்யைகளிலும் சேர்க்கப்படலாமா? - உபஸம்ஹாரம் செய்யலாமா - என்றால் - அதற்கு நாம் பதில் கூறுவோம்,

संभृतिद्युव्याप्त्यपि-इति – அதே காரணத்தினுல் - ஜ்யேஷ்ட வீர்யா: என்கிற குணங்களும், த்யுலோகம் வரை வ்யாப்தி ஆகிய குணமும் குறிப்பிட்ட வித்யைகளில் தான் வரலாம். (எல்லாவற்றிலுமில்லை). ஸம்ப்ருதி - த்யுவ்யாப்தி என்கிற பதம் ஸமாஹார (கூட்டுப் பொருள்களின்) த்வந்த்வாத் - சேர்க்கை பெற்ற பதம்—(Cumulative Compound) அதனுல் ஒருமை-ஏகவத்பாவமாகும். இந்த ஸம்பிருத்யாதிகம் (இடையூறு இல்லாமை) பொதுவாக சுருதிகளில சொல்லப்பட்டாலும் முந்தின விஷயத்திற்கு சம்பந்தம் காட்டாமல்-சொல்லப் படினும் - அதே காரணத்தினுல் (अत एव) ஸ்தான பேதம் யேற்படுகிறது. அதனுல் இந்த குணங்கள் குறிப்பிட்ட வித்யைகளுக்கே—எல்லாவற்றிற்கும் அல்ல. உபஸம்ஹாரம் செய்யக் கூடாது.

நீ கேட்கலாம் - எப்படி இந்த குணங்கள் பொதுவாகக் கூறப்பட்டு, முந்தின அதிகரண விஷயமாக வில்லாதபடி குறிப்பிட்ட வித்யைகளுக்கே உண்டாகும் என்றுல்; அதனுல் ஸ்தான விசேஷ நியதத்வம் (அவைகளுக்கே சொந்தம்) - என்கிற ஆட்சேபத்திற்கு நாம் பதில் கூறுவது - அதன் ஸாமர்த்தியமே காரணமாகும். த்யுலோக வ்யாப்திக்கு பாத்திரமான உபாஸன குணம் அற்ப இடங்களுக்கு (ஹ்ருதயம் போன்றவை - அற்ப ஸ்தானங்கள்) உரிய உபாஸனங்களில் எப்படி சேர்க்கக் கூடும்? உபஸம்ஹாரம் செய்ய முடியாது; அதனுல் ஸம்ப்ருத்யாதி குணங்கள் (ஜ்யேஷ்டவீர்யா - த்யுலோக வ்யாப்தி) இரண்டும் சேர்ந்து ஒன்றுக விருப்பதால், அதே ஸ்தானங்களுக்குரிய வித்யைகளில்தான் - (सहचारिण: தத்துல்ய தேசோ இதி) - சேர்க்கக் கூடும் - அதனுல் அல்பஸ்தானங்களை விஷயமாகக் கொண்ட வேறு உபாஸனங்களில் (வித்யைகளில்) உபஸம்ஹாரம் செய்ய முடியாது. (அந்த ஸ்தானங்களுக்கே தனிப்பட்டதாக ஆகும்). ஆகவே சாண்டில்ய - தஹர வித்யைகளில் ஸ்வல்பஸ்தானங்களே விஷயமாகும் சா. உ. 3-14-3 ज्यायान् पृथिव्या: அவன் ப்ருதிவியைவிட பெரியவன்; சா. உ. 8-1-3ல் यावान् वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाश: —

இந்த பூத ஆகாசத்தின் அளவு எதுவாக விருக் கிறதோ, அதே அளவுதான் ஹ்ருதயாகாசத்திலும் உளது; என்பதால் அந்த அந்த ஸ்தானங்களில் ஓதப்பட்ட குணங் கள் (மேற்படி இரண்டு வித்யைகளிலும்) - சாண்டில்ய - தஹர - வித்யைகளிலும்) அற்பஸ்தானங்கள் ஓதப்பட் டிருக்கும் காரணத்தால் - மற்ற வித்யைகளுடன் (அதே போலவுள்ள பிரகரணங்களில்) இந்த ஸம்பிருதாணி குணங் களை உபஸம்ஹாரம் செய்யப்பட முடியாது. ஆகவே இந்த குணங்கள் பிருஹ்மத்தின் மாஹாத்மியத்தை (பெருமையை) (எப்படிப்பட்ட பெருமைகள் -) மநோமயத் வாதி குணங்கள் கொண்டவை - அபஹதபாப்மத்வாதி குணங்கள் கொண்ட - விசிஷ்ட பிருஹ்மம் - இந்த பிருஹ் மத்தின் பெருமைகளை விமர்சனம் (விளக்கம்) பிரதிபாதன பரா: - என்று கொள்ளவேண்டும். (அதனால் குணோப ஸம்ஹாரம் இல்லை.) - குணத்தை அநுஸந்திக்கவேண்டாம்.

(இங்கே கூறப்படும் விஷயம் - சில வித்யைகளில் பிருஹ்மத்தை குறிப்பிட்ட வித்யைகளுக்கே - அந்த அந்த வித்யைகளுக்கே உபாஸ்யம். இங்கு த்யுலோக வ்யாப்தி சரியாகாது. ஜ்யேஷ்டவீர்யா: என்கிற குணம் த்யுலோக வ்யாப்தி என்கிற குணத்துடன் சேர்த்துச் சொல்லப்பட்டது; அதனால் அந்த குணம் மற்ற வித்யைகளில் சேர்க்க முடி யாது. பிருஹ்மத்துக்கு அநந்தத்வம் ஸ்வரூப நிரூபக தர்மமாக எல்லா வித்யைகளிலும் ஓதப்படுவதால்; அந்த பிருஹ்மமே உபாஸகனுக்கு நன்மையைச் செய்யும் பொருட் டுத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு-மிக்க கருணையால் தஹர சாண்டில்ய வித்யைகளின் அல்ப ஸ்தானங்களை (ஹ்ருதயம்- அக்ஷி) - மிக்க சிறிய அளவுக்கு உட்படுகிறது. அப்பேற் பட்ட பிருஹ்மத்தின் மாஹாத்மியத்தை மனோமயாதி குணங்கள் அபஹத பாப்மத்வாதி குணங்களுடன் சேர்ந்து விருப்பதாகச் சொல்லப்படுகிறதாகும்.)

## पुरुषविद्याधिकरणं (3-3-9)

## புருஷவித்யாதிகரணம் (3-3-9)

தைத்திரீயத்திலே - புருஷ வித்யை ஓதப்படுகிறது;)- இவ்விதம் - (தை. நா. 51) तस्यैवं विदुषो यज्ञस्याऽऽत्मा यजमानः, श्रद्धा पत्नी, शरीरमिध्मम्, उरो वेदिर्लोमानि बर्हिः - தன்னையே யக்ஞமாக ஆக்குகிறான் - என்கிற யாகத்திலே, அது ஒன்றுகவும், அதை இவ்விதம் அறிபவனுகவும் - அவனுடைய ஆத்மா யக்ஞத்தின் எஜமானன்; அவனுடைய சிரத்தை மனைவி- அவன் உடம்பு விறகு; அவன் மார்பு யாகத்தின் வேதி; அவன் மயிர்கள் தர்ப்பை; சாந். உபநிஷத்தில் புருஷ வித்யையைப் பற்றி இவ்விதம் சொல்லப்படுகிறது-(3-16-1) पुरुषो वाव यज्ञः, तस्य यानि चतुर्विंशति वर्षाणि - "வாஸ்தவத்திலே அந்த புருஷனே யக்ஞமாகும். அவனுடைய இருபத்து நான்கு வருஷங்கள் காலையில் ஹோமம் செய்யப்படும் ஆஹுதிகள்" இங்கே சம்சயம் - வித்யைகள் ஒன்று - வேருக விருக்கின்றனவா ?

புருஷவித்யை ஒன்றுதான் என்பதற்குக் காரணங்கள். நாமம் ஒன்று (நாம ஐக்யம்) புருஷ வித்யை; ரூப ஐக்யமும் இருக்கிறது. புருஷ அவயவங்களைப் பற்றிய இந்த யாகத்தில் அவயவ கற்பனை - அதன் ஸ்வரூபம் ஒன்றுகவிருக்கிறது. ஏனெனில் தைத்திரீயத்தில் பலத்தைப் பற்றிய சம்பந்தம் சொல்லப்படவில்லை - ஆனால் சாந்தோக்யத்திலே பலன் இவ்விதம் சொல்லப்படுகிறது - 3-16-7 - प्र ह षोडशं वर्षशतं जीवति - (அவன் - மஹிதாஸன் - நூற்றுப்பதினறு வர்ஷங்கள் வாழ்ந்தான் - இதனுல் பலன் புருஷவித்யைக்கு ஓதப்படுகிறது. அதனுல் பலன் சம்பந்தத்திலே வித்யாஸமில்லை; வித்யை ஐக்யம் தான் (ஒன்று) என்பதற்கு நாம் பதில் கூறுவோம்.

### पुरुषविद्यायामपि चेतरेषामनाम्नानात् (3-3-24)

### புருஷவித்யாயாமபி சேதரேஷாமநாம்நாநாத் (3-3-24)

புருஷவித்யாயாமபி ச - புருஷவித்யையிலும் பேதமிருக்கிறது. (புருஷவித்யை தாண்டிரஹஸ்ய பிராம்மணம்

பைங்கிரஹஸ்ய பிராம்மணம் இவற்றில் சொல்லப்பட்டவை; இதரேஷாம் - (மற்றதைத்தீரிய சாகையில், அநாம்நாநாத் - சொல்லப்படாததாலே, தாண்டி பைங்கிரஹஸ்யத்திற்குச் சொல்லப்பட்டதற்கு தைத்ரீயத்தில் உபஸம்ஹாரமில்லை.)

இந்த இரண்டு புருஷ வித்யைகளும் இரண்டு இடங்களில் ஓதப்பட்டிருப்பினும், வித்யைகளுக்குள் வித்யாஸம் இருக்கிறது - வித்யாபேதம் இருக்கிறது. எப்படி ? इतरेषामनाम्नानात् - ஏனெனில் மற்ற தைத்ரீய சாகையில் சொல்லப்படாததாலே; ஒரு சாகையில் ஓதப்பட்ட குணங்கள் இன்னொரு சாகையில் ஓதப்படவில்லை. இது காட்டப்படுகிறது இவ்விதமாக - यत्सायं प्रातर्मध्यन्दिनं चतानि सवनानि-(மஹா. நா. 25-1) இந்த வஸ்துக்கள் - சாயந்திரம் - மாத்யந்தினம். காலைவேளையாக விருக்கின்றன. தைத்ரீயத்தில் உள்ள அவை சாந்தோக்யத்தில் ஆஹுதிகளாகச் சொல்லப்படவில்லை. புருஷனுடைய ஆயுட்காலமே மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு - அந்த ஆயுட்காலமே ஆஹுதிகளாகும், சாந்தோக்யத்தில் மூன்றாகப் பிரிக்கப்பட்டு, அந்த ஆயுட்காலமே ஆஹுதிகளாகச் கற்பிக்கப்படுகிறது. त्रेधाविभक्तं पूरुषायुषं छान्दोग्ये सवनत्वेन कल्पयते । சாந்தோக்யத்திலே ஓதப்பட்ட வைதிக கர்மாவாகிற தீக்ஷாத்வம் (தீக்ஷை முதலியன) தைத்ரீயத்தில் ஓதப்படவில்லை; அதே மாதிரி உபவாஸம் இருப்பது (சாந்தோக்யத்திலே சொல்லப்படுகிறது) - அது தைத்ரீயத்தில் இல்லை. தைத்ரீயத்திலே யஜமானன், பத்னீ முதலியவைகளும் வேறாகவிருக்கின்றன. ஆகவே இரண்டு ஸ்தானங்களிலும் அவைகளின் ரூபம் வேறாகவிருக்கிறது. (रूपं उभयत्रभिद्यते).

அதேமாதிரி இரண்டு உபநிஷத்துக்களிலும் - பல ஸம்யோகத்தில் (சேர்க்கை) வித்யாஸமாகவிருக்கிறது. தைத்ரீய பூர்வானுகத்தில ब्रह्मणेत्वामहस ओमित्यात्मानं युञ्जीत - பிருஹ்மத்தை தியானிப்பதில்-ஓம் என்கிற பதத்தின் உதவியுடன் ஒருவன் தன்னை பிருஹ்மத்தினிடம் ஒப்பிவிக்க வேண்டும் - அந்த பிருஹ்மமே மேலான பரம் பொருள்-என

உபாஸிக்கப்பட வேண்டியது இவ்விதமாக பிருஹ்ம வித்யையை அதன் பலத்துடன் சொல்லிவிட்டு, ब्रह्मणो महिमान- माप्नोति - "அவன் பிருஹ்மத்தின் மகிமைகளை அடைகிறான்" (மஹாநா. 24-1) என்று ஓதிவிட்டு; तस्यैवं विदुषः - எவன் இப்படி பிருஹ்மத்தை அறிகிறானோ - அவனை; இதனால் தைத்ரீயத்தில் ஓதப்பட்ட புருஷவித்யையே - அந்த பிருஹ்மத்தை அறிந்தவனுக்கு (तस्यैवंविदुषः) - யக்ஞமாக கற்பிக்கப் படுகிறது. ஆகையால் பிருஹ்ம வித்யைக்கு இது அங்கமாக விருப்பதால், பலனும் பிருஹ்ம பிராப்தி என ஓதப்படுகிறது. फलवत्संनिधावफलं तदङ्गम् - என்கிற நியாயப்படி அதாவது ஒரு வஸ்துவின் முன் நிலையில் பலன்களைத் தருவது - அதில் ஏதாவது பலன் இல்லாமல் இருப்பது என ஒன்று சொல்லப்படுகிறதோ, அது அங்கமாக விருப்பதால் அதற்கே அதே பலன்கள் சொல்லப்படுகிறதோ, அதனாலே (அந்த நியாயத்தால்) காட்டப்படுகிறது - தைத்திரீயத்தில் ஓதப்பட்ட புருஷவித்யை பிருஹ்மவித்யைக்கு அங்கமாக விருக்கிறது. ஆனால் சாந்தோக்யத்தில் சொல்லப்படுகிறது - புருஷவித்யையின் பலன் ஆயுட்பிராப்தி (சிரகாலஜீவத்வம்). (சாந்தோக்யத்தில் அங்கம் - அதற்கு சிரகாலஜீவத்வம்; பிருஹ்ம பிராப்தி பலனாக தைத்தீரீயத்திலே சொல்லப் படுகிறது. ஆகையால் ரூபஸம்யோகங்களின் பேதத்தினால், வித்யாபேதம்; ரூபம் - பலன் இவை இரண்டின் பேதத்தினால் வித்யா பேதம். ஆகையால் ஓரிடத்தில் ஓதப்பட்ட குணங்கள் வேறிடத்தில் உபஸம்ஹாரம் செய்யப்படமாட்டாது. (குணங்களைச் சேர்க்கக்கூடாது, ஏனெனில் இரண்டும் வேறான வித்யைகள்)

(ஸ்ரீதேசிகர் சொல்கிறார்-நியாஸ வித்யைக்குப் பிராதானியம் கிடைக்கிறது. ஆத்மாவை பரமாத்மாவினிடம் ஸமர்ப்பணம் செய்வதே ஒரு யாகம். "பிருஹ்மமே நீ சிறந்தவனாய்-சிறந்தவரால் அடையத் தகுந்தவனாய் - ஜீவனை பிராணாதிகளோடு சேர்க்கிறாய் - அகிஞ்சனனை என்னால் கிரஹிக்கப் பட்டாய். பரபிருஹ்மமாய் தேஜோரூபியான உன்பொருட்டே யான் ஆவேன்" என்று விக்ஞாபனம்செய்து, பிரணவத்தைக்

கொண்டு ஜீவனை பரமாத்மாவினிடம் ஆசார்யர் சேர்க்கிறார் - இதனை அறிந்தவன் பிருஹ்மத்தின் பரமஸாம்யத்தைப் பெறுகிறான். இந்த யாகத்திற்கு இவன் எஜமானன், சிரத்தை பத்னீ, உடல் யாகஸமித்து, மார்பு மேடை, மயிர்கள் தர்ப்பை - இவனது மரணமே அவபிருதம். இதுமுடிவு வரையில் செய்யும் அக்னிஹோத்ரமாகும். சாந்தோக்யத்திலே புருஷவித்யை என ஒரு வித்யை இருக்கிறது. அது ஒரு உபாஸனமுறை. அதற்கு 116 ஆண்டுகள் தீர்க்கமான (சிரஜீவத்வம்) ஆயுள் பலனாக ஓதப்படுகிறது. தைத்தீரீய புருஷவித்யை இந்த வித்யையல்ல (சாந்தோக்யத்தில் சொல்லப்பட்டதல்ல அது போலத் தோன்றும். அவ்வாறான வித்யை அல்ல இது. இதன் கருத்து யாதெனில், ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணவன் மேல் ஒரு ருத்விக்கைத்தேட வேண்டாம். யாகம் ஹோமம் ஒன்றும் செய்யவேண்டாம். அவனுக்கு இன்றியமையாத வஸ்துக்களும் சாஸ்திர முறைப்படி தேகதாரணத்திற்குக்கான செயல்களும் இருக்கின்றனவே - அவற்றிற்கு மேல் ஒன்றும் வேண்டாம் ஆகவே தைத்தீரீயத்தில் ஓதப்பட்ட ந்யாஸவித்யை ஸ்வதந்திரமானது பிருஹ்ம பிராப்தி பலன். சாந்தோக்யத்தில் ஓதப்பட்டதற்கு, ஆயுட் பிராப்தியாகும்)

ந்யாஸமானது பரந்யாஸம் - சரணாகதி - பிரபத்தி தியாகம், ஸந்யாஸம், ஆத்ம நிக்ஷேபம் என்று எல்லாம் பெயர் பெறும். இதற்கு ஐந்து அங்கங்கள் ஆனுகூல்ய - ஸங்கல்பம் பிராதிகூல்ய வர்ஜனம், கார்ப்பண்யம், மஹா விஸ்வாஸம், கோப்திருத்வ வரணம் என்கிற ஐந்து அங்கங்களாகும்). விவரத்திற்கு ரஹஸ்யத்ரய ஸாரம் பார்க்கவும்.

### वेधाद्यधिकरणम् (3-3-10)

### சூ. वेधाद्यर्थभेदात् (3-3-25)

### வேதாத்யர்த்தபேதாத் (3-3-25)

வேதாத் அர்த்த பேதாத் - ஹ்ருதயத்தைப் பிளந்துவிடு என்கிற பொருளுள்ள மந்திரங்கள் (அதர்வவேதம் ஆரம்பத்

திலுள்ள வாக்யத்தில். ஸர்வம் ப்ரவித்யஹ்ருதயம் பிரவித்ய தமநீ: ப்ரவிருஜ்ய சிரோபி ப்ரவிருஜ்ய திரிதா விப்ருக்த:-தேவதையே-நீ எனது சத்ருக்களின் அங்கங்களை-ஹ்ருதயத்தைப் பிளந்து விடு. நரம்புகளை ஒடித்துவிடு - தலையை நாசம் செய் (இதனால் சத்ரு பிரிதலை அடைவான்) என்று மந்திரங்கள் இருக்கின்றன. இவை வித்யைகளின் அங்கமாகவில்லை. இதேபோல இன்னும் சில மந்திரங்கள் வேதாத்யயனத்தைப் பற்றியது. அவைகளும் வித்யைகளின் அங்கமல்ல. ஆகவே ப்ரவித்ய என்கிற மந்திரங்களும் - ப்ரவர்க்யாதி கர்மங்களும் உபநிஷத்திற் சொல்லிய உபாஸனங்களில் சேருமா - இல்லையா? இது விசாரிக்கப்படுகிறது.

அதர்வணிகர்கள் உபநிஷத் ஆரம்பத்தில் சொல்கிறார்கள் - शुक्रं प्रविध्य हृदयं प्रविध्य – தேவதையே - நீ சத்ருவின் அங்கங்களை நாசம் செய்வாயாக. அதிலும் விசேஷமாக ஹ்ருதயத்தை பிளந்துவிடு என்கிற மந்திரங்களை ஓதுகிறார்கள். ஸாமகர்கள் ரஹஸ்ய பிராம்மண ஆரம்பத்தில் देव सवितः प्रसुव यज्ञं प्रसुव – என்று படிக்கிறார்கள். ஸவிதா (சூர்யனே) யக்ஞத்தையும் யக்ஞபதியையும் உண்டாக்கித் தருவீராக (தாண்டிகளுடைய உபநிஷத்). காடகத்தில்-தைத்தீரீயத்தில் - शं नो मित्रश्शं वरुणः (1.1-1) மித்ரன் எங்களுக்கு நன்மை செய்யட்டும் - வருணனும் நன்மை செய்யட்டும். சாட்யாயினர்கள் - श्वेताश्वो हरिनीलोऽसि - என்கிற அதிகபாடமிருக்கிறது. ஸ்வேதாஸ்வோ - உச்சை ஸ்ரவஸ் என்கிற வெள்ளை நிறமுள்ள குதிரையையுடைய இந்திரனை நீர் நீல நிறமான மணி போன்றிருக்கிறீர். ஐத்ரேயிணர்களும் மஹாவ்ரத பிராம்மணத்தில் இப்படி ஓதுகிறார்கள் - इन्द्रो ह वै वृत्रं हत्वा महानभवत् - இந்திரனே - விருத்ராசுரனைக் கொன்ற பிறகு பெரியதாக ஆனான். கௌஷீதகி உபநிஷத்தில் மஹாவ்ரத பிராஹ்மணமே - प्रजापतिर्वै संवत्सरः। तस्यैष आत्मा यन्महाव्रतम् - ஓதுகிறது - பிராஜாபதியே ஸம்வத்ஸரமாக இருக்கிறார்; எது மஹாவிரதமாக விருக்கிறதோ அதுவே அவருடைய தேகம். வாஜஸேநயர்கள் பிரவர்க்ய பிராஹ்மணத்தில் படிக்கிறார்கள் - देवा ह वै सत्रं निषेदुः வாஸ்தவத்திலே அந்த தேவதைகள் யாகத்தைச் செய்தார்கள்.

இங்கே சந்தேகம் - உபநிஷத் ஆரம்பத்திலே சொல்லப் பட்ட शुक्रंप्रविध्य - சத்ருவின் பிரகாசமான அங்கங்களை நாசம் செய்; शंनो मित्रः - மித்ரன் எனக்கு நன்மை செய்யட்டும். இந்த கர்மங்களும் பிரவர்க்ய அதுபோன்ற மஹாவிரதம் என்பதும் வித்யா அங்கங்களா? அல்லது இல்லையா? எது சரியாகும்? வித்யாங்கம் எனச் சொல்லலாம். எப்படி? இவை வித்யைகளின் பிரகரணங்களில் (ஸந்நிதிகளிலே) வித்யா சம்பந்தம் உள்ளவைகளாக சுருதிகளில் படிக்கப்படுகின்றன. அதனுல் வித்யாங்கத்வம் யேற்படுகிறது. ஆயினும் शुक्रं प्रविध्य - சுக்ரனை பிளப்பாய் என்கிற மந்த்ரங்களால் பிரவர்க் யர்தி கர்மாக்களும் ஸ்வதந்திரமாக - அந்த அந்த இடத் திற்கு ஓதப்படுகின்றன - இதனுல் சுருதி, லிங்கம், வாக்யம் பலமுள்ளதாக விருக்கின்றன. ஆயினும் மித்ரன் எனக்கு நன்மை செய்யட்டும்-வேதங்கள் எங்களை ஒன்ருகக் காட்டட் டும் - शंनोमित्रः; सहनाववतु - என்கிற மந்திரங்கள் விஷயத் திலே, அவை வேறு இடங்களில் விநியோகம் செய்யப்படு வதில்லை - அவை எந்த வித்யையின் பிரகரணத்தில் வரு கிறதோ, அந்த பிரகரணம் வித்யாதி காரமாக விருக்கிற படியால், அதனுல் வித்யா அங்கத்வத்தை விலக்கமுடியாது. ஆகையால் எல்லா வித்யைகளிலும் இந்த மந்திரங்கள் உப ஸம்ஹாரம் செய்யப்பட யோக்யமுள்ளவை. (பூர்வபக்ஷம்)

இவ்விதம் சொல்லப்படுமானுல் நாம் பதில் சொல்கிருேம் वेधाद्यर्थभेदात् - ஏனெனில் பிளந்துவிடு என்கிற மந்திரத்தில் நோக்கம் வேருகவிருக்கிறது. (சத்ருநாசம்). शुक्रंप्रविध्य हृदयं प्रविध्य - சுக்ரனைப் பிளப்பாய் - ஹ்ருதயத்தை பிளப்பாய் -

ऋतं वदिष्यामि सत्यं वदिष्यामि - ऋतमवादिषम् सत्यमवादिषम् ।

நான் ஸத்யத்தை - சரியான விஷயங்களைச் சொல்வேன். தை. உ. நான் ஸத்யத்தைப் பேசுவேன். तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै - நாம் எதைக் கற்கிருேமோ - அது வீர்யத் துடன் இருக்கட்டும், நாம் மற்றவர்களை வெறுக்க

வேண்டாம். இவைகளிலிருந்தும் இதுபோன்ற மற்றவை களிலிருந்தும் தெரியவருகிறது - இந்த மந்திரங்கள் வேத படனத்திற்கு உபயோகப்படுகின்றன - அபிசார கர்மாக் களுக்கும் உபயோகப்படுகின்றன. ஆகவே லிங்கங்களால் அபிசார அத்யயன கர்மாக்களுக்கு உபயோகப்படுவதால் - வித்யா அங்கமாக இல்லை. नविद्याङ्गत्वम्.

என்ன சொல்லப்பட்டதென்றால் - यथाहृदयं प्रविध्य - (எப்படி) என் சத்ருவின் ஹ்ருதயத்தைப் பிளப்பாய் - எனப் பட்ட மந்திரங்களின் சாமர்த்தியத்திலுல் शुक्रं प्रविध्य:யசுக்ரனு கிற பிரகாசத்தைப் பிளப்பாயாக - என்கிற வாக்யங்கள் அபிசாராதிகளுக்குச் சேஷமாகவிருக்கின்றன எனத் தெரிய வருகிறதோ, அதே பிரகாரம் ऋतं वदिष्यामि - நான் சரியான (உண்மையான) வார்த்தைகளை பேசுவேன்; तेजस्वि नावधीत-मस्तु - நாம் எதை அத்யய்னம் செய்கிறோமோ - அது முழு வீர்யத்துடன் இருக்கட்டும். இப்படிப்பட்ட மந்திரங்களின் சாமர்த்தியத்திலுல் ஸ்வாத்யாய சேஷத்வம் (வேதம் ஓது வதற்கு அங்கமாக - அடங்கினதாக) - शंनोमित्र: - மித்ரன் எங்களுக்கு நன்மை பயக்கட்டும் என்கிற மந்த்ரங்கள் ஆகின்றன. ஆகையால் அவை வித்யைகளுக்கு அங்க மில்லை. (அதாவது शंनो मित्र: என்கிற மந்திரம் வேத அத்ய யன அங்கம், வித்யைக்கு அங்கமில்லை;) அதனுல் வித்யை யில் சேர்த்துக் கொள்ளக் கூடாது. शुक्रं प्रविध्य சுக்ரனைப் பிளப்பாயாக - என்கிற மந்திரத்தை பிரவர்க்யாதி மந்திரங் களுடன் - வித்யைகளுடன் சேர்த்துப் படிப்பது இவைகள் பகல்வேளையில் ஓதப்படுகிறதாலேயும்; காட்டில் ஓதப்பட்டு ரகசியமாக அறியப்படுவதாலேயும் ஆகும்.

(இந்த அதிகரணத்தின் நோக்கம் शं नो मित्र: - என்கிற மந்திரங்களின் நோக்கத்தை நிர்ணயிப்பதற்கு ஆகும்; ப்ரவித்யாதிகளான மற்ற மந்திரங்களும் (यथाहृदयं प्रविध्य शुक्रं प्रविध्य - இவை போன்றவை) சூத்திரத்தில் சொல்லப்பட்ட ப்ரவர்க்யாதிகளான கர்மாக்களும் உதாரணமாகக் காட்டப் பட்டவை. பூர்வபக்ஷம்-இந்த பிரவித்யாதிகளான மந்திரங்

களின் ஆதாரத்தில் காணப்பட்டும், கர்மாக்கள் வித்யை யைப் பற்றிய பிரகரணங்களின் அருகே விவரிக்கப்பட்டிருக் கின்றன. இங்கே கர்மா சம்பந்தம் பட்டவரை, வாதம் பல மற்றது. இந்த பிரவித்யாதி மந்திரங்கள் மற்ற அபிசார உபயோகங்களுக்கும் உபயோகப்படுகின்றன. அவை களின் இருப்பு - வித்யையின் பிரகரணங்களுக்கு அருகே யிருப்பதால் - அந்த மந்திரங்களும் பிரவர்க்யாதி கர்மாக் களும் ரகசியமாக அறியப்படவேண்டும் - வித்யையைப் போல எனக் கருத்தாகும்.)

(இம்மந்திரங்கள் வித்யையின் சமீபமாக விருக்கும் சாமர்த்தியத்தைக் கொண்டு-பயனுள்ளதாக ஆகமாட்டாது, பொருந்தாது. பிரவர்க்யாதி கர்மங்களோ வேறு பிரயோ ஜனத்தை ஒட்டி விதிக்கப்பட்டிருக்கின்றன, வித்யார்த்த மாகவும் ஆகும். மந்திரம் கர்மம் இவற்றுக்கு வித்யைகளில் உபஸம்ஹாரமானது கிடையாது. ஸந்நிதியானது (சமீபத் திலுள்ள பாடமானது) சுருத்யாதிகளைக் காட்டிலும் துர்ப் பலமானதாக பூர்வ மீமாம்ஸத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சுருதி லிங்க வாக்ய பிரகரண ஸ்தான ஸமாக்யானும் ஸமவாயே பாரதௌர்பல்யம் அர்த்த விப்ரகர்ஷாத் - என்ப தாகும். அவ்விதமே வேறு இடத்தில் விநியோகிக்கப்பட்ட ப்ரவர்க்யம் முதலிய கர்மங்களுக்கும் வித்யாசேஷத்வம் சொல்வது சரியில்லை, இவற்றுக்கு வித்யைகளுடன் கூட ஐகார்த்யம் (ஒரே - ஒத்த பொருள்) சொல்வது சரியில்லை. ஆகையால் இம்மாதிரி மந்திரங்களுக்கோ - கர்மங்களுக்கோ வித்யா சமீபத்தில் பாடமிருப்பதைக் கொண்டு - வித்யா சேஷத்வம் எனச் சொல்ல முடியாது. அரண்யத்தில் அத்யயனம் செய்தல் என்கிற தர்மம் இரண்டுக்கும் பொது வாகயிருப்பதால், அதைக் கொண்டு வித்யா ஸந்நிதியில் இதுஓதப்பட்டது எனச் சொல்ல க்கூடும்). (சங்க பாஷ்யம்).

## ஹாந்யதிகரணம் (3-3-11)

ஸூ. हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दस्स्तुत्युपगानवत्तदुक्तम् (3.3-26)
ஹாநௌ தூபாயந சப்தசேஷத்வாத் குஸாச்சந்தஸ்ஸ்துத்யு பகாந வத் த துக்தம் (3-3-26)

**சங்கதி** - இந்த அதிகரணத்தில்-வித்வான் இறந்த பின்பு சில சுருதிகள் அவனுடைய பிரியர்கள் சுக்ருதத்தையும் துவேஷிப்பவர்கள் பாபத்தையும் அடைகின்றனர் - இவ்விதம் சுக்ருத துஷ்கிருதங்களுடைய ஹாநியும் சிலவற்றில் சுக்ருதத்தை பிரியர்களும் துஷ்கிருதத்தை துவேஷிகள் அடைகின்றனர்-இன்னும் சில சுருதிகளில் புண்யபாபங்களை பரித்யாகம் மட்டும் காணப்படுகிறது - இதன் சந்தேகத்தைப் போக்க வேண்டி - ஒரே அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிறது.

ஹாநௌ து - சுக்ருதம் துஷ்க்ருதங்களுடைய ஹாநி மட்டும் சொல்லியவிடத்தில் - உபாயநஞ்ச - பிறர் புண்ய பாபங்களை எடுத்துக்கொள்ளுதலை ஒப்புக்கொள்ளவேண்டும். ஏன் ? உபாயந சப்தசேஷ்த்வாத் - ஹானம் என்கிற சப்தமானது உபாயந சப்தத்தை சேஷமாகவுடையதாக கௌஷீதகிகள் ஓதுவதே - அதன் காரணமாகும். குசா: சநதாஸ் - ஸ்துதி - உபகானவத் - குசை சந்தஸ் ஸ்துதி உபகானம் அதாவது ஓரிடத்தில் படிக்கப்படும் வாக்யம் மற்றொரு விடத்தில் படிக்கப்படும் - வாக்யத்திற்கு சேஷமாகக் கொள்ளப் படுவது போல் இங்கும் இவை போலவாம். த துக்தம் - அவ்விதம் பூர்வமீமாம்ஸையில் (ஸூத்ரம் 10-8) சொல்லப்படுகிறது.

சாந்தோகர்கள் ஓதுகிறார்கள் சா. உ. 8-13-1ல்

अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य ।
धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसंभवामि ।

குதிரை தனது பழைய ரோமங்களை உதிர்த்து நிர்மலமாக ஆவதுபோல, நானும் (வித்வான்) பாபங்களிலிருந்து விடு

பட்டு - தெளிந்த முகத்துடன் ஆகிறேன் - எவ்விதம் சந்திரன் ராகுவிலிருந்து விடுபட்டு தெளிந்தவனாகிறானோ - அதுபோல; சரீரத்தை விடுத்து பிருஹ்மலோகத்தை அடைகிறேன். அதர்வணிகர்களும் இப்படி ஓதுகிறார்கள் - மு. 3-2-3 तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति - அப்போது வித்வான் புண்யபாபங்களை உதறித்தள்ளி - நிரஞ்ஜனனாக - (களங்கமில்லாதவனாக) பிருஹ்மத்துடன் ஸாம்ய நிலையை அடைகிறான் - சாட்யாயநிநர்கள் -

तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम

மிருதனான வித்வானுடைய புத்ரர்கள் தனத்தையும் சுஹ்ருத்துக்கள் புண்யத்தையும் த்வேஷிகள் பாபத்தையும் அடைகின்றனர், என ஓதுகிறார்கள். கௌஷீதிகிகள் ஓதுகிறார்கள் -

तत् सुकृतदुष्कृते धूनुते तस्य प्रियाज्ञातयः सुकृतमुपयन्ति अप्रिया दुष्कृतम् ।

இந்த வித்யா பலத்தினால் உபாஸகன் புண்ய பாபங்களை உதறித்தள்ளுகிறான். பிரியர்களான அவனது ஞாதிகள் சுக்ருதத்தையும் துவேஷிப்பவர்கள் பாபத்தையும் அடைகின்றனர். இவ்விதமாக சில சுருதிகளில் மரித்த வித்வானின் புண்யபாபங்களின் நாசம் (ஹாநி) சொல்லப்படுகிறது; இன்னும் சிலவற்றில் சுஹ்ருத்துக்களும் துஷ்கிருத்துக்களும் அவைகளை அடைகிறார்கள் என்றும்; இன்னும் சில சுருதிகளில் இரண்டும் (அவன் தியாகம் செய்தலும் - பந்துக்களும் சத்ருக்களும் அவைகளை அடைகிறார்கள் எனவும்) ஓதப்படுகின்றன.

இந்த விதமாக இரண்டும் தனித்தனியாக பிரத்யேக வித்யைகளில் ஓதப்படினும் - இந்த விஷயம் எல்லா வித்யைகளுக்கும் அங்கமாக ஒப்புக்கொள்ளவேண்டும். ஏதாவதொரு பிருஹ்ம வித்யையுள்ள நிஷ்டர்களுக்கும், பிருஹ்ம பிராப்தி அவர்களுடைய புண்ய பாபங்கள் நஷ்டமாகிற போதுதான்

ஏற்படத்தான் நேரிடும். அவர்கள் வேறிடத்திற்கு கமனம் செல்வதற்கு இவைகளை விட்டுத் தான் ஆகவேண்டும். ஆகையால் அவைகளைப் பற்றிய சிந்தனம் - மேல் சொல்லப் பட்ட சுருதிகளிலே விதிக்கப்படுகிறதே - அது ஸர்வ வித்யாங்கமாக இருக்க அர்ஹதையாகும்.

**விளக்கம்:—**

இங்கே விசாரிக்கப்படுவது என்னவென்றால்-இதுதான்-இப்படி புண்ய பாபங்களை விடுவது - இன்னொரு இடத்திற்குப் போய்ச் சேருதல், இரண்டும், அதாவது பாபபுண்யங்களை விடுதலும் இன்னொரு இடம் போய்ச் சேர்தலும், இவை எல்லாவற்றிலும் விகல்பம் செய்யக் கூடுமா? மாற்ற முடியுமா? அல்லது இவை எல்லாவற்றையும் ஒன்று சேர்க்க முடியுமா? எது யுக்திக்கு சரியாகும்? விகல்பம் (இதாவது அல்லது அதாவது) என்று சொல்லக் கூடுமா? எப்படி? இதற்கு சுருதியின் தெளிவான ஆதாரத்தினாலே, இவை எல்லாவற்றையும் ஸமுச்சயமாக (ஒன்று) சேர்த்து, அந்த ஸமுச்சயம் எல்லா வித்யைகளிலும் எல்லா விடங்களிலும் அனுஸந்தானம் செய்ய நேரிடும். இம்மாதிரி ஸித்திப்பது கௌஷீதிகி வாக்யத்தின் ஆதாரத்தாலேயாகும். அதனைப்பற்றி மற்ற சுருதிகளில் அர்த்தமில்லாமல் ஆகி விடும். ஆகவே அவைகளைப் பற்றி ஒன்றுக்கு மேல் பல சுருதிகளில் சொல்லியிருப்பதன் நோக்கம் விகல்பத்திற்க்காகவே. இதுவா அல்லது அதுவா. (விகல்ப ஏவ பிரயோஜனம்). இம்மாதிரி பலவிடங்களில் சொல்லியிருப்பதை வேறுவிதமாக அத்யயனம் செய்வதை பேதத்தினால் விளக்க முடியாது. அவிசேஷமாக புந: ஸ்ரவணம் (திரும்பக் கேட்டுதல்) அத்யயனம் செய்பவர்களின் பேதத்தினால் (வ்யக்தி வேறானபடியால்) சமாதானம் சொல்லக் கூடும். ஆனால் இங்கே இந்த விஷயத்தில், ஹாநியே (கர்மாக்களைத் தியாகம் செய்தல்) இரண்டு சாகைகளில் ஓதப்பட்டிருக்கிறது. ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் சேருதலும் ஒரு சாகையில் ஓதப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட வித்யைகளில் வித்யா பேதத்தினால் இவைகளை நிர்ணயிக்கமுடியாது. ஏனெனில் ஸர்வசேஷ பூதமாகிற இது இங்கே அனுஸந்தானம்,

இங்கே நாம் பதில் இங்கனம் கூறுவோம். हानौ तूपायन. शब्दशेषत्वात् - பாபபுண்யங்களை விடுதலும் பிறர்கள் அவைகளை எடுத்துக் கொள்ளுதலும் ஒப்புக் கொள்ள வேண்டும். இரண்டும் (உபயமும்) விதியாகும் - து சப்தம் பூர்வபக்ஷத்தை தள்ளுகிறது - மேல் சொன்ன அபிப்ராயத்தைத் தள்ளுகிறது. हाना विति - (சுக்ருதம் துஷ்கிருதத்தைப் பற்றிய ஹாநி சொல்லப்பட்டதாலே) - இது ஒரு உதாரணத்தைக் காட்டும் - அது அந்த கர்மாக்கள் வேறு இடத்தை அடைதலும் சொல்லப்படுகிறது. எங்கே பாபபுண்யங்களை விடுதலும் - அல்லது எங்கே அவை பிறர்களிடம் போய் சேருதலும் சுருதிகளில் ஓதப்பட்டிருக்கின்றதோ — அங்கே ஸமுச்சயமாக இரண்டையும் ஒன்று சேர்த்தல் அவசியமாகிறது. என் ? उपायन शब्दशेषत्वात् - ஹானம் என்கிற சப்தமானது உபாயந சப்தத்தை சேஷமாகவுடையதாக கௌஷீதாகிகள் ஓதுகிறார்கள் - இதனால் ஒரிடத்தில் விடுதலும்-அவை வேறு ஒரு இடத்தில் சேருதலும் இரண்டும் பரஸ்பரம் சரியாகும்-ஏனெனில் ஹானம் என்கிற சப்தம் உபாயந சப்தத்தை சேஷமாக உடையதாக. கௌஷீதகீ ஓதுகிறது. உபாயந (எடுத்துக்கொள்ளுதல்) வாக்யம் - ஹாநிவாக்ய சேஷத்தவம் எனச்சொல்வது சரியாகும். ஏனெனில் பிறர் சுக்ருததுஷ்கிருதத்தை அடைதல் என்பதை சுருதி சொல்கிறது. வித்வான்களால் பரிதியாகம் செய்யப்படும் புண்யபாபம் வேறிடத்தில் புகுவதை (சேருதலைச்) சொல்கிறது. அதாவது எடுத்துக்கொள்வதைச் சொல்கிறது.

ஒரிடத்தில் சொல்லப்பட்ட சுருதி வாக்யம் இன்னொருவிடத்தில் சொல்லப்படும் சுருதி வாக்யங்களுக்கு ஒன்றுக்கொன்று சரியாகும், என்கிற விஷயத்தில், உதாரணங்கள் கொடுக்கப்படுகின்றன - कुशाच्छन्दस्तुत्युपगानवदिति - குச:- சந்தஸ்-ஸ்துதி-உபகானவத்-குசை சந்தஸ்துதி உபகானம்- இவைபோல வாகும் - (இங்கே நான்கு உதாரணங்கள் வேதமந்திரங்களுடன் வைதிக கர்மாக்களுடன் சம்பந்தப்பட்டது - ஓதப்பட்டது. குசஸ் - தர்ப்பை; (உத்காதிரி

யினால் உபயோகப்படுத்தப்படுவது). சந்தஸ் - மீட்டர். ஷோடசம் என்பது அக்னிஷ்டோம யக்ஞத்தைக் குறிக்கும். அத்வர்யுயாகத்தின் ஒரு புரோகிதனாக இருப்பவன் - யஜுர் வேதத்தை ஓதுபவன்). நான்கு உதாரணங்கள் சொல்லப் படுகின்றன.

காலாபினர்கள் இவ்விதம் ஓதுகிறார்கள் कुशा वानस्पत्याः- குசங்கள் (முளைகள்) வானஸ்பதியிலிருந்து உண்டாகின்றன. (அதாவது மரத்தினாலான சமத்துக்கள்) சாடயாயினர்கள் இவ்விதம்படிக்கிறார்கள் - औदम्बर्यः कुशाः- இந்த மரத் துண்டுகள் எல்லாம் அத்தி மரத்திலானவை. (10 - 8). என்கிற வாக்யம் சாமாந்யமாக (எந்த மரம் என்று குறிப்பிட்டுச்சொல்லாமல்) ஓதப்படுகிறது - இங்கே மரத்திலான சமித்துக்கள் அத்தி மரத்திலானவை என்று விசேஷிக்கும் இரண்டாவது வாக்யம் வேறு ஸாகையிலிருந்தாலும் முதல் வாக்யத்திற்கு ஸேஷமானது - என்று பூர்வ மீமாம்ஸையில் நிர்ணயிக்கப்பட்டது.

இதேமாதிரி - देवासुराणां छन्दोभिः - தேவசந்தஸ் அசுர சந்தஸ் ஆகிய இரண்டையும் ஓதவேண்டியது - எனக் கூறப்பட்டது. இங்கு பாடக்ரமத்தில் தேவ சந்தஸ் முதலில் கூறப்பட்டது - அசுரர்கள் மூத்தவர்களானபடியாலே அவர்களுடைய சந்தஸை முதலில் படிப்பதா என்கிற சந்தேகம் எழுகிறது - இந்த விஷயத்தை பைங்கிரஹஸ்யத்தில் देवच्छन्दांसि पूर्वम्-தேவச் சந்தஸை முதலில் ஓத வேண்டும்- என்னும் வாக்யம் தெளிவு படுத்துகிறபடியால், வசன க்ரம விசேஷம் பிரதிபாதிதமாகையாலே - இரண்டாவது வாக்யம் முதல் வாக்யத்திற்கு ஸேஷம் (அடங்கியது) என்று பூர்வ மீமாம்ஸையில் சொல்லப்பட்டது. அவ்விதமே हिरण्येन - षोडशिनः स्तोत्रमुपाकरोति - பொன்னை வைத்து ஷோடசீஸ்தோத்ரத்தை ஆரம்பிக்கிறான் (தை. 6-1-6) - எந்த காலத்தில் இந்த ஸ்தோத்ரத்தைச் செய்யவேண்டும் என்று கூறப்படவில்லை. யஜு - 6-6ல் समयाविषिते सूर्ये षोडशिनः स्तोत्रमुपाकरोति-சூர்யன் பாதி அஸ்தமித்துக் கொண்டிருக்கும்போது, ஷோட சீஸ்தோத்ரத்தைச் சொல்லவேண்டுமென்று வேறு சாகை காட்டு

கிறது; அதனுல் முதல் வார்க்யத்திற்கு சேஷமாகிறது (பூர்வமீமாம்ஸ நியாயம்). विशेष विषयं वद्वाक्यशेषतां भजते। அவ்விதமே ऋत्विज उपगायन्ति - ருத்விக்குகள் உபகானம் செய்கிருர்கள் - இவ்விதமாக அவி சேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது ஒரு சாகையில். வேறு சாகையில் (யஜு 3-6ல்) नाध्वर्युरुपगायेत அத்வர்யு உபகானம் செய்யக்கூடாது-என்கிற வாக்யம் முந்தின வாக்யத்தில் சொல்லப்பட்டதற்கு விதி விலக்கைக் கூறி அத்வர்யுவைத் தவிர்த்து-மற்ற ருத்விக்குகளே உபகரனம் செய்யவேண்டும் என்பதால் முந்தின வாக்யத்திற்கு இது சேஷமாகிறது (பூர்வமீமாம்ஸ நியாயப்படி).

இந்த விதமாக, நான்கு உதாரணங்களால் காட்டப்பட்டது. வெவ்வேறு சாகைகளிலிருந்த போதிலும் ஹாநி வாக்யமும் உபாயந வாக்யமும் ஒன்றுக் கொன்று ஸேஷ ஸேஷி பாவத்தை அடைக்கின்ற படியால், அவை ஸ்வதந்தர வாக்யங்களாய் ஹாநி உபாயநம் ஆகியவற்றின் விகல்பத்தை (இதுவா - அதுவா என்கிற alternatives - விஷயத்தை) விதிப்பவை அல்ல.

இந்த விதமாக சாமான்யமாகச் சொல்லப்படும் வாக்யங்கள் கூட குறிப்பிட்ட வஸ்துக்களேக்காட்ட சக்தி பெற்றவை (மேற் காட்டிய பூர்வமீமாம்ஸ நியாயப்படி). எவர்கள் இதை ஒப்புக் கொள்ளமல் - முந்தின வாக்யங்களுக்கு பிந்தின வாக்யங்கள் ஸேஷம் என்கிற வ்ய வஸ்தையை (ஒப்புக்கொள்ளாதவர்கள்) - விகல்பமாக (இதுவா-அல்லது அதுவா) - இரண்டு வஸ்துக்களிடையே - என்பதை ஒத்துக் கொள்ளவேண்டும் (विकल्पः समाश्रयितव्यः) இம்மாதிரி விகல்பம் சரியாகாது - எப்போது? வேறு ஒரு வழி இருக்கும்போது. இந்த விஷயம் பூர்வமீமாம்ஸத்தில் ஏற்கனவே சொல்லப்பட்டதாகும் - 10-8-1-4 சூத்ரத்திலே अपितु वाक्यशेषः स्यात् अन्याय्यत्वाद्विकल्पस्य विधीनामेकदेशः स्यात् - யாகங்களில் யேயஜா மஹத்தை உச்சரிக்கவேண்டும் என விதித்தது. அது இன்னொரு வாக்யத்திேடு சேர்த்தால் பூர்த்தி ஆகிறது. விகல்பமாக கொண்டால் யுக்திக்குச் சரியாகாது. பொதுவான விதிகளுள் இது ஒரு அங்கமாகும் யேயஜா

மஹமாவது - ஆஸ்ராவய (4 அக்ஷரம்) அஸ்து ஸ்ரௌஷட்; (4 அக்ஷரம்) யஜேதி (2 அக்ஷரம்) யேயஜாமஹ (5 அக்ஷரம்); வஷட்காரம் (2 அக்ஷரம்) (வௌஷட்) ஆக யஜ: யேயஜா மஹே வௌஷட் என்னும் பதினேழு அக்ஷரங் களிலுள்ள ஐந்து மந்திரங்களாகும். மற்றொரு வாக்யத்தில் நாநூயாஜேஷீ யேயஜா மஹம் கரோதி - அநுயாஜம் எனப் படும் சில யாகங்களில் யேயஜாமஹத்தை உச்சரிக்கக் கூடாது - எனத் தடுக்கப்பட்டது.

இங்கு அநுயாஜம் தவிர்த்த யாகங்களில் யேயஜா மஹத்தை உச்சரிக்க வேண்டும் என பர்யுதாஸத்தை கொள்வதா ? அநூயாஜங்களில் யேயஜாமஹபடனத்தைச் செய்தாலும் செய்யலாம் - செய்யாமலும் இருக்கலாம், என்று விகல்பத்தைக் கொள்வதா (இதுவா - அதுவா) என்று கேள்வி எழுந்தது. இதன் மேல் அதிராத்ரேஷோட சிநம் கிருஹ்ணாதி - என்று அதிராத்ரமானது ஒரே கிரியை யில் ஷோடசீ எனப்படும் பாத்ரத்தை எடுக்கவேண்டும் என ஒரு வாக்யத்திலும், எடுக்கலாகாது என்று வேறு ஒரு வாக் யத்திலும் விதிக்கப்பட்டிருப்பதால் எடுத்தாலும் எடுக்கலாம்- எடுக்காமலும் இருக்கலாம் என்று விகல்பத்தைக் கொண் டது போல, இங்கும் விகல்பத்தை ஒப்புக் கொள்ளவேண்டும் என்கிற பூர்வபக்ஷம் யேற்பட்டது. இதன் மேல் அதிராத்ர ஷோடஸிக்ரஹண விஷயத்தில் பர்யுதாஸம் கொள்ள இட மிருப்பதால் - விகல்பத்தை ஒப்புக் கொண்டால் பல தோஷங்கள் யேற்படுகையால் பர்யுதாஸத்தையே கொள்ள வேண்டும் - என்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது.

(பரயுதாஸம் - அத்வர்யுவைத் தவிர்த்து - ருத்விக்கு களே உபகானம் செய்யவேண்டும். இதுவா - அதுவா அனுஷ்டிக்கப்பட வேண்டும் என்பது விகல்பம் எனப்படும்).

(முன் காட்டப்பட்ட நான்கு உதாரணங்களிலும் இது போல் இடமிருக்கையால், பர்யுதாஸமே கொள்ளவேண்டும் என விளங்கும், ஆக, ஹாநி சிந்தனம் உபாயசிந்தநம் ஆகியவற்றுக்கு விகல்பம் கொண்டால், இந்த சூத்ரத்தில்

சொன்னபடி பல தோஷங்கள் வருமாகையால், அவற்றிற்கு ஸமுச்சயம் கொள்வது தக்கதே எனத் தோன்றுகிறது. ஆகையால் பிருஹ்ம வித்யாநிஷ்டர்கள் அனைவரும் வித்யைக்கு அங்கமாக ஹாநி உபாயநம் ஆகிய இரண்டை யும் அநுஸந்திக்க வேண்டும் என்பது முடிவான தீர்மான மாகும்).

(ஸ்தோத்ரம் - கானம் செய்யத்தகுந்த வேதபாடம். ஷோடசிந் - அக்நிஷ்டோம யாகத்தின் ஒரு மாறுதலாகும். அத்வர்யு - யஜீர்வேத ருக்குக்களை யாகத்தில் கானம் செய்பவன்.)

பூர்வ மீமாம்ஸ சூத்ரம் 10-8-4ல் வேறு சாகையிலுள்ள விசேஷத்தை வேறு சாகையிலும் கிரஹித்துக் கொள்ள வேண்டும் என்கிற விஷயத்தில் இந்த திருஷ்டாந்தங்கள் கூறப்படுகின்றன. ஒரு பிரகரணத்தில் ஓதப்படும் சாகை இன்னொரு வேறான பிரகரண சாகைக்கு ஒத்து வரும். இங்கே அர்த்த நிர்ணயத்திற்கு பிரமாணம் கண்டு பிடிக்க வேண்டிய நோக்கத்தால்—விதிகளை விகல்பமாகக் கொள்ளக் கூடாது - (எப்போது?) அவைகளை சமரஸப்படுத்த இன் னொரு வழியிருக்கும் போது. சங்கரர் 10-8-16 - பூர்வ. மீமா. சூத்ரத்தைச் சொல்கிறார். பாமதியில் 10-8-4 பூர்வ மீமா. சூத்ரம் இங்கு சரியாகும் எனச் சொல்லப்படுகிறது.]

**ஸ்ரீபாஷ்யம்:**—மேற்படி பூர்வ மீமாம்ஸ சூத்ரப்படிச் சொல்வதின் காரணமாக - கேவலம் ஹாநி (எந்த சாகையில் புத்திமான்கள் புண்ய பாபத்தை விடுகிறார்களோ - என்று சொல்லப்படுகிறதோ); உபாயந வாக்யம் (பிறர்களிடம் அவை போய் சேருவது - இரண்டையும் ஒரே வாக்யமாகக் கொள்ள வேண்டும்; கேவலம் விடுதலும் கேவலம் பிறர்கள் புண்ய பாபங்களை எடுத்துக் கொள்வதும்—இரண்டும் இல்லை (अभावात्) அதனாலே விகல்பம் (இதுவா - அதுவா என்கிற அபிப்ராயம்) ஏற்படாது. (विकल्पो नोपपद्यते). ஆகவே கௌஷீ தகீ சாகையில் இரண்டையும் ஓதினது சரியாகும் - ஏனெ னில் வித்யாஸந்நிதி (அவிசேஷமாக) புந: ஸ்ரவணத்வும்

(திரும்பப்படித்தல்) ஏற்படுகிறது. எவர்கள் இவ்விதம் ஓதி அறிபவர்களாக விருக்கிருர்களோ அவர்கள் மற்றவர்களை விட வேருனவர்கள் - இங்கு மற்றவர்கள் என்பதற்கு வேறு சாகைகளை ஓதுபவர்கள் - என அர்த்தம் புந: श्रवणत्वेन प्रतिपत्त भेदा दविरूद्वम् - என்பதாகும்.

ஸாம்பராயாதிகரணம் (3-3-12)

ஸி. சூ. साम्पराये तर्तव्याभावात् तथा ह्यन्ये (3-3-27)

ஸாம்பராயே தர்த்தவ்யாபாவாத் ததா ஹ்யந்யே (3-3-27)

ஸாம்பராயே - மரணத்திற்கு முந்தியே (உபாஸகனுடைய புண்யபாபங்களின் ஹாநமானது (நாசமாகுதல்) ஏற்படுகிறது. தர்த்தவ்யாபாவாத் - வித்யையுடன் பரலோகம் செல்பவர்க்கு இடையில் அனுபவிக்க வேண்டிய சுகதுக்க போகங்களில்லாமையால், ததாஹி அந்யே - அவ்விதமே மற்ற வேதவாக்யங்களும் தாண்டிகளும் சாட்யாயனிர்களும் ஓதுகிருர்கள்.

**சங்கதி**—மோக்ஷமடையும் உபாஸகன் தன்புண்ய பாபங்களை உதறுகிருன் - அவை வேறிடத்தில்போய்ச் சேருகின்றன என்கிற விஷயம் முந்தின அதிகரணத்தில் ஓதப்பட்டது. அப்படியானல் - எந்தக் காலத்தில் அவை (புண்யபாபங்கள்) நீங்குகின்றன. அவன் எப்படி விரஜை யைத்தாண்டுகிருன் ? கர்மத்யாகம், தேக தியாகம் எப் போது ? எனபல கேள்விகள் எழும் - அதற்கு சித்தாந்தம் உரைக்கப்படுகிறது.

**ஸ்ரீபாஷ்யம்:—**

உபாஸகனுக்கு சுக்ருத துஷ்கிருதங்களின் ஹாநம் (நாசமானது) உபாயநம் (அவை வேறிடத்திற்குப் போய்ச் சேருதலும்) எல்லாவித்யைகளிலும் சிந்திக்கப்படவேண்டிய விஷயம் என்று சொல்லப்பட்டது. தத்தாநம் (तत्-ஹாநம் - तद्धानं - அந்த புண்யபாபங்களின் நாசம் - சிறிது சிறிதாக - தேகவியோக (மரண) காலத்திலே யேற்படுகிறதா - (ஜீவன் தேகத்தை உத்க்ராந்தி அடையும் போதா -) அல்லது அவற் றில் மீதியுள்ளவை பரமபதத்திற்குச் செல்லும் வழியில்

நீங்குகிறதா - என்கிற விஷயம் ஆராயப்படுகிறது. (அதாவது சரீரத்திலிருக்கும் போதே அவனுடைய புண்ய பாபங்கள் நாசமாகின்றனவா?) (பூர்வபக்ஷம் சரீரம் விடும் போது போகின்றன; சிலவற்றை அவன் வழியின் நடுவிலா விடுகிறுை என்பதாகும்) இரண்டையுமே சொல்வதால் சரி யாகும். இரண்டுக்குமே சுருதி ஆதாரமிருக்கிறது. (விரஜா என்ற நதியைத் தாண்டின பிறகு புண்யபாபங்கள் விடு கின்றன - இதற்கு பிரமாணம் கௌஷீதகி உபநிஷத் சொல் வதாலே. கௌஷீதாகினர்கள் படிக்கிறுர்கள். "स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति - என்று ஆரம்பித்து வித்யா உபா ஸகன் அர்ச்சிராதி (தேவயான பாதையில்) கதியில் செல்லத் தொடங்குகிறுன், முதலில் அக்நிலோகத்திற்குவருகிறுன்— स आगच्छति विरजां नदीं तां मनसाऽत्येति तत् सुकृतदुष्कृते धूनुते । (கௌ - 1-37). அவன் விரஜாநதிக்குவருகிறுன் - அங்கே அவன் சூக்ஷ்ம தேகத்தைவிடுகிறுன் - அவன் தன் சங்கல்பத்தாலே (வித்யையின் பலத்தினுலே, மஹிமை யினுலே) விரஜையைத் தாண்டுகிறுன்.

அதனுல் விரஜைக்குவந்ததுமே அவன் புண்யபாபங் களைக் கைவிடுகிறுன் - இதனுல் உபஸகனுடைய பாபபுண் யங்கள் பரமபதம் செல்லும் வழியிலே (விரஜையைத் தாண்டுவதற்கு முந்தியே) விடுகிறுன்-என்பதாகும். இங்கே வாக்யத்தில் வழியிலே (அர்ச்சராதிகதியிலே) விடுகிறுன் சுக்ருததுஷ்கிருதங்களை; என்று காட்டப்படுகிறது. தாண்டி நர்கள் - (சா-8-13) ஓதுகிறுர்கள் - சா - உ.

अश्व इव रोमाणि विधूय पापं चन्द्र इव राहोर्मुखात् प्रमुच्य । धूत्वा शरीरमकृतं कृतात्मा ब्रह्मलोकमभिसंभवति

அசுவமானது தன் தேகத்தின் மயிர்களை உதிர்ப்பது போலவும், சந்திரன் ராஹுவினுடைய முகத்திலிருந்து விடு பட்டவனுக எவ்விதம் விருப்பானே, அதுபோல உபாஸகன் விடுதலை பெறுகிறுன் - பிருஹ்ம பிராப்தியையடைகிறுன். கிருதாத்மா - பிருஹ்மலோக பிராப்தியடைகிறுன் - கிருதாத்

மாவாக நான் நித்யமான பிருஹ்மலோகத்தை அடைகிறேன் என்று ஓதப்பட்டது). இங்கே, தேஹவியோக காலத்தில் (மரணசமயத்தில்) அவன் புண்யபாபங்களை விடுகிறான். ஆனால் சாட்யாயனர்கள் ஓதுவது - तस्य पुत्रेषु दाय

**संक्रान्तिसमकालं सुकृतदुष्कृतसंक्रमणश्रूयमाणं देहवियोगकाले इति गम्यते । अतः सुकृतदुष्कृत्योरेकदेशो देहवियोगकाले हीयते: शेषस्त्वध्वनि-**

அவனது புத்திரர்கள் தனத்தை அடைகின்றனர். சுகிருத்துக்கள் நற்காரியத்தை (புண்ணியத்தை)யும், அவனைத் துவேஷிப்பவர்கள், பாபகாரியத்தையும் அடைகின்றனர். இங்கே மரணத்துக்கு முந்திய நிலையிலேயே சுக்ருத துஷ்கிருதங்களின் ஹானியைப் படிக்கின்றனர். ஆகவே உபாஸகனுடைய புண்ய பாபங்கள் தேக வியோககாலத்தில் ஏக தேசமாக (ஒரு பகுதி) யேற்படுகிறது என்றும்; மீதமுள்ளவை அர்ச்சராதி வழியில் விட்டு விடுகின்றன எனத் தேறும். (பூர்வபக்ஷம்) இரண்டு விதமான வேதவாக்யங்கள் இருப்பதால் தேகத்தை விடும் போதும்; பரமபதம் போகும் வழியிலும் அவை நீங்குகின்றன எனக் கொள்ளலாம்.

அவ்விதம் சொல்லப்படுமானால், நாம் பதில் அளிப்பாம். सांपराये इति - தேகத்தினின்றும் கிளம்பும் காலத்திலே உபாஸகனுடைய புண்ய பாபங்கள் முழுவதும் (மீதமின்றி) அவனை விட்டு நீங்குகின்றன. ஏனெனில் உபாஸகன் தேகத்தை விட்டுக் கிளம்பிய பின்பு புண்ய பாபங்களின் பலனாக அவன் அனுபவிக்க வேண்டிய சுகதுக்கானுபவம் எதுவுமில்லை. तर्त्व्याभावात् - இதனால் காரணத்தையும் சொல்லப்படுகிறது. அவன் அனுஷ்டித்த பிருஹ்ம வித்யை யின் பலனாக பிருஹ்மாநுபவத்தைத் தவிர - அதாவது புண்ய பாப பலமாக அவனால் அனுபவிக்கப் படவேண்டிய சுகதுக்கானுபவம் எதுவுமில்லையாகும். तरितव्यं (அனுபாவ்யம்) भोगाभावात् प्राप्तव्यम्, என அர்த்தம். இதனால் தெரியவரும்- அவனது புண்ய பாபங்கள் முழுவதுமே நீங்கி விடுகின்றன.

(தேக வியோக காலத்திலே). வித்யா பலபூத ப்ருஹ்ம ப்ராப்தியைத் தவிர, அவனுக்கு அனுபாவ்யமான சுக துக்கங்கள் யாதுமில்லை; அதனால் அவன் அடையவேண்டிய பிருஹ்ம பிராப்தியைத் தவிர வேறு ஒன்றுமில்லையாகும்.

तथा ह्यन्ये - அவ்விதமே மற்றவர்களும் சொல்கிறார்கள். அதாவது சிலசாகைகளில் - தேக வியோகத்தை அடைந்ததும், உபாஸகனுக்கு மேல் நோக்கி (ஊர்த்வ) கதியில் செல்பவனுக்கு பிருஹ்ம பிராப்தியைத் தவிர, வேறு பிராகிருத சுக துக்கானுபவம் ஏற்படுவதில்லை. சா. உ. 8-12-1·

...अशरीरं वा व सन्तं न प्रियाप्रिये स्पृशत: एष सम्प्रसादोऽस्माच्छरीरात् - समुत्थायपरंज्योतिरूपसंपद्यस्वेन रूपेणाभिनिष्पद्यते

(சரீரமில்லாதவனை சுகதுக்கங்கள் ஸ்பர்சிக்கமாட்டா. சா.உ. 8-12-1-இந்த ஜீவன் இந்த தேகத்தைவிட்டுக் கிளம்பி, பரம் ஜ்யோதிசையடைந்து தன் ஸ்வருப ப்ராப்தியை அடையப் பெறுகிறான். சா. உ. 6-14 तस्यतावदेव चिरं यावन्नविमोक्ष्येऽथसंपत्स्ये· அந்த உபாஸகனுக்கு பிராரப்த கர்மத்தினால் யேற்பட்ட சரீரம் நீங்குவது தான் தாமதம்; அது நீங்கினதும் அவன் பிருஹ்மத்தை அடைகிறான் - இம்மாதிரியான வேத வசனங்கள் இருப்பதால் உபாஸகனுக்கு பிருஹ்மானுபவத்தைத் தவிர - அவனால் அனுபாவ்யமான சுக துக்கம் ஒன்றுமில்லை. அதனால் புண்யபாபங்கள் தேகவியோக காலத்திலே ஹானமானது ஏற்படுகிறது என்பதாகும்.

(இங்கே ஒரு கேள்வி கேட்கப்படும் - உபாஸகன் வித்யையின் பலனை மாத்திரம் கொண்டதால் - அவன் எப்படி விரஜையைத் தாண்டுகிறான்? எதன் பலத்தினால் தாண்டுகிறான்? அதற்குப் பதில் வித்யையின் பலத்தினாலேயே, அவன் விரஜையைத் தாண்டுகிறான் என்பதாகும்)·

## ஸ்ரீ. ஸூ. छन्दत उभयाविरोधात् (3-3-28)
## சந்தத உபயாவிரோதாத் (3-3-28)

உபயாவிரோதாத் - வேதவாக்யம், அர்த்த ஸ்வபாவம் ஆகிய இரண்டுக்கும் முரண்பாடு இல்லாமல், சந்தத: - (கௌஷிதாகியில்) இஷ்டப்படி (அந்வயம்) கொள்ள வேண்டும்.)

இந்த விதமாக அர்த்த ஸ்வபாவத்தாலே - சுக்ருத துஷ்கிருத ஹானி (நாசம்) இம்மாதிரி தேகவியோக காலத்திலே யேற்படுகிறன என்று நிர்ணயத்தளவில், கௌஷீதிக மற்ற சுருதிகளின் வாக்யங்களுக்கும் அர்த்த ஸ்வபாவத்திற்கும் முரண் இல்லாமல் இருப்பதற்காக - தர்க்கானு க்ரஹீத ஸ்ருத்யர்த்தம் (சுருதி-தர்க்கம் (யுக்தி) ஆகிற உபய (இரண்டும்) விரோதமில்லாமலிருப்பதற்காக) அதாவது கௌஷீதீகி சுருதியில் இஷ்டப்படி பதங்களின் அந்வயம் கொள்ளத் தகுந்தது-அதாவது கௌஷீதகி வாக்யத்திலே, तत् सुकृतदुष्कृते धूनुते (அவன் புண்ய பாபங்களை உதறித் தள்ளுகிறான் - (கடைசியாக வாக்யப்பகுதியில் ஓதப்பட்டது) - அதை एतं देवयानं पन्थानमापद्य – அந்த அர்ச்சராதிகதியை அடைந்த பிறகு - அதுவே தேவயானமாகும் - அவன் அக்னி லோகத்தை அடைகிறான்.) என்று முதலில் உள்ள வாக்யப் பகுதிக்கும் முன்னால் கொண்டுபோய்ச் சேர்த்துக் கொள்ள வேண்டியதே - என்கிற கருத்தாகும்.

(இங்கு சொல்லப்படுகிறது - அர்ச்சராதிகதியை அடைந்த பிறகு அவன் அக்னிலோகத்தை அடைகிறான் என்று கௌஷீதாகியில் ஆரம்பமாகிறது. பிற்பாடு, கடைசியில் இந்த வாக்யம் வருகிறது - அவன் புண்யபாபங்களை உதறித் தள்ளுகிறான. இங்கே சூத்திரத்தின் நோக்கம் வரிசைக்கிரமமாக பாபபுண்யங்களை விடுதலை முதலில் ஏற்படுவதாகச்சொல்லி - பிறகு தேவயான மார்க்கத்தை அடைகிறான் - என்பதாகும். छन्दत - இஷ்டபிரகாரம் இந்த பதத்தை இப்படி அர்த்தம் கொள்ளவேண்டியது - அதாவது அர்த்த ஸ்வபாவமாக - நமக்கு எப்படி இஷ்டமிருக்கிறதோ -

அந்த இஷ்டபிரகாரம் என்று கொள்ளவேண்டியது. இதனால் சுருதிக்கும் தர்க்கத்திற்கும் விரோதம் யேற்படாது; தர்க்க அனுக்ரஹீத சுருதியின் அர்த்தமாகும்.

अत्र कौषीतकिसंदर्भे बहूनि वाक्यानि छन्दतो योज्यानि सन्तीति परिष्कारे द्रष्टव्यम् । (உத்தமூர் ஸ்வாமி)

மீண்டும் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறான்.

பூ. ஸூ. गतेरर्थवत्त्वमुभयथाऽन्यथा हि विरोधः (3-3-29)

கதேரர்த்தவத்த்வமுபயதாऽந்யதா ஹி விரோத: (3-3-29)

உபயதா—புண்யபாபங்களின் நாசம் தேகத்தை விட்டுக் கிளம்பும்போதும்; எஞ்சிய பாகம் வழியில் நீங்குகின்றன என்று இருவிதமாகக்கொண்டால் தான், கதே: அர்த்தவத்த்வம் - அர்ச்சராதிகதியை ஓதும் வேதம் வாக்யம் பொருள் உள்ளதாக ஆகும். அந்யதா - வேறுவிதமாக (அதாவது தேகத்தை விட்டுக்கிளம்பும்போது எல்லாப் புண்யபாபங்களும் மிச்சிமின்றி நீங்குகின்றன என்று கொண்டால்) விரோத: ஹி - சுருதிக்கு விரோதம் ஏற்பட்டு விடும் (சூக்ஷ்ம சரீரம் அழிந்துவிடுமாகையால், சரீரமில்லாத ஜீவாத்மா அர்ச்சராதிகதியில் செல்லுவதே பொருந்தாமல் போய்விடுமன்றோ?)

சுக்ருதம் துஷ்கிருதம் இவைகளின் ஏகதேஸம் (ஒரு பகுதி) தேகவியோககாலத்தில் ஹாநி: (நாசம்) ஏற்பட்டு, மீதியுள்ளபகுதி பிறகு நீங்குகின்றன (வழியில் அழிகின்றன) என்றால் - இந்த பிரகாரம் இருவிதமாகக் கொண்டால் தான் (उभयथा) கர்மக்ஷயம் ஏற்படுமானால் நிஜமாகவே அர்ச்சராதி கதி(गतेरर्थवत्त्वं)யில் செல்வதைப் பற்றிச் சொல்லும் வாக்யம் அர்த்தமுள்ளதாகும் - அதாவது தேவயானகதியைச் சொல்லும் சுருதி பொருளுடையதாகும். अन्यथा हि அப்படியில்லாமல் அதாவது தேகத்தை விட்டுக் கிளம்பும்போது எல்லாப் புண்யபாபங்களும் நீங்குகின்றன என்று வேறுவிதமாகக் கொண்டால், விரோதம் ஏற்படும் - (அதெப்படி எனில்)

தேகவியோக காலத்திலே தான் ஸர்வகர்மக்ஷயம் (பாப புண்யங்களின் ஹாநி) யேற்படும் - அதே கர்மங்களின் பலனுக யேற்பட்ட ஸூக்ஷ்மசரீரமும் அழிய வேண்டிவரும். ஸூக்ஷ்மசரீரம் அழிந்த பிறகு சரீரமில்லாத வெறும் ஆத்மா அர்ச்சராதிகதியில் செல்வதும் பொருந்தாமலே போய்விடும். (கேவல ஆத்மாவின் கமனம் ஏற்படாது) ஆகவே இப்படி சரீரத்தை விட்டுக் கிளம்பும்போது உபாஸகனின் கர்மங்கள் முழுவதும் அழிந்துபோகின்றன என்று கூறுவது பொருந்த மாட்டாதாகையால், உத்கிராந்தி சமயத்தில் வித்வானுடைய பாபபுண்யங்கள் மிச்சமின்றி அழிகின்றன - நிஸ்ஸேஷகர்ம க்ஷயோ - சரியாகாது, ஆகவே ஒருபகுதிதான் கழிகிறது எனத் தீர்மானிக்க வேண்டும். - இது பூர்வபக்ஷம் - நாம் கீழே பதில் அளிக்கிறோம்.

ஸ். ஸூ. उपपन्नस्तल्लक्षणार्थोपलब्धेर्लोकवत् (3-3-30)

உபபந்நஸ்தல்லக்ஷணர்த்தோபலப்தேர்லோகவத் (3-3-30)

தல்லக்ஷணர்த்தோபலப்தே: - (கர்மம் கழியப் பெற்ற முக்தனுக்கும்) தேக சம்பந்தம் (சுருதிகளில் சொல்லப்படுவதால்) உபபந்ந: - முக்தன் சரீரத்தை விட்டுக் கிளம்பும் காலத்திலேயே எல்லாக் கர்மாக்களும் மிச்சமின்றி கழிவது பொருந்தும் - சரியாகும். லோகவத் - உலகில் பயிருக்கு நீர் பாய்ச்ச வெட்டிய ஏரி - பயிருக்கும் - குளிக்கவும் குடிக்கவும் உபயோகப் படுவது போல - கர்மாநுபவத்துக்காக யேற்பட்ட ஸூக்ஷ்ம சரீரம் கர்மம் அழிந்த பின்பும் - வித்யையின் மஹாத்மியத்தால் நிலை நிறுத்தப்பட்டு - அழியாமல் - முக்தன் அர்ச்சராதி கதியில செல்வதற்கு உபயோகமாகிறது. அதாவது சரீரம் இருந்தாகவேணும் கமனத்திற்கு; சரீரமிருப்பதற்கு கர்மபலனுகத்தான் இருக்க வேண்டிய அவசியமில்லை. கர்மாதான் சரீரத்திற்கு இருக்கவேண்டும் என்கிற நிர்ப்பந்தமில்லை. வித்யையின் மஹாத்மியத்தினுல் சரீரம் அழியாமல் இருக்கலாம். அதனுல் கமனம் ஏற்படலாம். (சித்தாந்த ஸூத்ரம்). ஆயினும் எல்லாக் கர்மாக்களின்

நாசம் உத்கிராந்தி காலத்திலே ஏற்படுகின்றது என்று சொல்வது சரியாகும். எப்படி?

तल्लक्षणार्थोपलब्धेः - கர்மம் அழியப் பெற்ற முக்தனுக்கும் சூக்ஷ்ம சரீரம் ஓதப்படுவதால்; கர்மாக்களும் க்ஷீணமடைவ தால் அடையப்பெறுவது ஆவிர்பூத ஸ்வரூபம் - இதனால் முக்தனுக்கும் தேக சம்பந்தம் உண்டு என்பது சுருதி ஸித்தம். देहसंबन्धलक्षणार्थोपलब्धेः - (பிறகு சூக்ஷ்ம சரீரம் முக்த னால் அடையப்படுகிறது - சா. உ. 8 - 12 - 3ல் परंज्योतिरुपसंपद्य स्वेन रुपेणाभिनिष्पद्यते - स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाणः - அந்த முக்தன் பரஞ்சோதியை அடைந்து - தன் ஸ்வரூபம் ஆவிர் பாவமடைவதால் அவன் பரமாத்மாவை முற்றிலும் அனுஸரிக்கிறான். எல்லாவிதமான போகங்களையும் அனு பவிக்கிறான். சா. உ. 7-25-2 स स्वराङ्भवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति - அந்த முக்தன் கர்மவச்யனில்லை. அதனால் அவன் தன் இஷ்டப்படி எல்லா உலகங்களிலும் சஞ்சரிக் கிறான். சா. உ. 7–26–2 स एकधाभवति त्रिधा भवति அவன் பலவித மான சரீரங்களை எடுத்துக் கொள்கிறான். இத்தகைய வேத வாக்யங்களில் முக்தனுக்கும் தேகசம்பந்தம் ஓதப்படுகிறது. அதாவது கர்மம் அழிந்த பின்பு-ஸ்தூல தேகத்தை விட்டுக் கிளம்பிய உபாஸகன் சூக்ஷ்ம சரீரத்தோடு கூடியவனாக அர்ச்சராதி கதியில் கமனம் (செல்வது) செய்வது சரி யாகும். ஆகையால் கர்மாக்கள் நாசமடைந்த பிறகும், சூக்ஷ்ம சரீரம் சம்பந்தம் கொண்ட முக்தனுக்கு அர்ச்சராதி கதியில் கமனம் பொருத்தமாகும்.

இப்போது கேள்வி எழும். சூக்ஷ்ம சரீரம் தன்னைத் தோற்றுவித்த கர்மம் கழிந்ததும் - அழிந்த பின்பும் எப்படி நிற்கமுடியும்? அதற்குப் பதிலாக வித்யா மஹாத்மியத் தினாலே என்று நாம் கூறுவோம். (அதாவது உபாஸநம் தனது பலனான பிருஹ்மாநுபவத்தை அவனுக்கு அளிக்கும் பொருட்டு, அர்ச்சராதி கதியில் இவன் செல்வதற்காக அந்த தேகத்தை அழியாமற் காப்பாற்றிவிடுகிறது). வித்யாஸ்வயமாகவே சூக்ஷ்ம சரீரத்தை உற்பத்தி செய்யா

விடினும், ஸ்தூல சரீரம் சுகதுக்கானுபவத்திற்கு சாதன மாகவிருப்பது, அது பூர்ணமாக தேகவியோகத்திலே அழியும்போது - பிராகிருத சுகதுக்கமாகிற கர்மங்களின் போகஸாதனமாகிற ஸ்தூலசரீரம் பூர்ணமாக அழிந்த பிறகும், உபாஸக வித்யை அந்த ஸூக்ஷ்ம சரீரத்தை அழியா மல் - காப்பாற்றி - அதனுடைய சொந்த பலனான பிருஹ்ம பிராப்தியை அடையவிக்கிறது - அதனால் வித்யா உபாஸ கனுக்கு அர்ச்சராதி பாதையில் கமனம் ஏற்படுகிறது.

(இங்கு சொல்லப்படுவது - ஸூக்ஷ்ம சரீரம் எதுவரை உபாஸகனுடன் இருக்கிறதென்றால் - அவன் மோக்ஷமடை யும் போது திவ்யமான ரூபத்தை அடைகிறவரைவிருக் கிறது. சரீரமில்லாதபோனால் கமனம் (செல்லுதல்) ஜீவ னுக்குப் பொருந்தாது. ஸூக்ஷ்ம சரீரம் ஸர்வ கர்மங்கள் (புண்ய பாபங்கள்) அழிந்த பிறகும் இருந்துகொண்டு அவன் மோக்ஷமடையும் வரை தொடருகின்றன என அர்த்தம். இந்த சரீரம் அழியாமல் இருப்பதற்குக் காரணம் வித்யா மஹாத்மியம் தான்). सूक्ष्मशरीरं स्थापयति.

लोकवत् - லோகதிருஷ்டாந்தத்திலே. எவ்விதம் தடாகம் (குளம்) முதலியவை பயிர் விளைவதற்க்காக வெட்டப்பட்டா லும், அந்த நோக்கம் (ஆசை) அந்த பயிர்கள் விளைந்த பிறகும்கூட, பயிரை வளர்க்க வேண்டும் என்கிற ஆசை அழிந்த பிறகும் - அந்த ஜலம் குளிப்பதற்கும், குடிப்பதற்கும் உபயோகப்படுகிறது. அதனால் அந்த தடாகம் காப்பாற்றப் பட்டு பிறர்களுக்கு உபயோகப்படுகிறது. அதேமாதிரியாக இங்கேயும் கர்மானுபவத்திற்காக ஏற்பட்ட ஸ்தூல சரீரத் தோடு சேர்ந்த இந்த ஸூக்ஷ்ம சரீரம் அழியாமல் உபாஸ கனுக்கு அர்ச்சராதி பாதையில் கமனத்தைச் செய்வதற்கு உபயோகமாக விருக்கிறது; இதனால் யாதொரு விரோதமு மில்லை. இங்கே சொல்லப்படும் விஷயம் அதேமாதிரியாக விருக்கிறது.)

अथस्यात् - மீண்டும் ஆட்சேபிக்கப்படலாம் பெரிய ஞானிகளுக்கு - பரமாத்மாவை உயிருடன் இருக்கும்போதே

ஸாக்ஷாத்கரித்தவர்களுக்கு அவர்களின் தேகம் விழுந்த சமயத்தில் - எல்லாக் கர்மாக்களும் மிச்சமின்றி க்ஷய மடைந்துவிடுகின்றன - அதனால் தேகம் விழுந்த பின்பு - சூக்ஷ்ம சரீரம் மாத்திரம் அவர்களுடன் இருந்து வருகிறது - அவர்களின் அர்ச்சராதி கமனத்திற்க்காக - உதவுகிறது என்று சொல்லுவதும்; அங்கு அவர்களுக்கு பிராகிருத சுக துக்கானுபவமில்லை - என்று சொல்லுவதும் பொருந்த மாட்டாது. (அனுபாவ்யமான கர்மானுபவம்ம் இல்லை என்று கூறியது சரியாகாது) - பரதத்வத்தை சாக்ஷாத் கரித்தவர்களான வசிஷ்டர் - அபாந்தர தமஸ் ஆகிய மஹா சிரேஷ்டர்கள் பரதத்வத்தை சாக்ஷாத்கரித்தவர்கள் - அவர்களுடைய சரீரம் நஷ்டமான பின்பு, அவர்களுக்கு வேறு தேகசம்பந்தம் ஏற்படுகிறது; அதனால் அவர்களுக்கு புத்திர ஜன்ம - இறத்தல் ஆகிற நிமித்த சுகதுக்கானுபவங்கள் யேறபடுகின்றன என்பதும் காணப்படுகிறது. ஆகையால் வேறு சரீரம் உண்டாகிறது - சுகதுக்கானுபவம் ஏற்படு கிறதே என்னும் ஆட்சேபத்திற்கு - அடுத்த சூத்திரத்தில் சூத்ரக்காரர் பதில்அளிக்கிறார்.

ஸி. சூ. यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् (3-3-31)

யாவததிகாரமவஸ்தி திராதிகாரிகாணும் (3-3-31)

அதிகாரிகாணும் - (வசிஷ்டர் முதலான) அதிகாரி புருஷர்களுக்கு, யாவததிகாரம் - அவர்களுடைய பதவி முடியும் வரையில், அவஸ்திதி :- (பதவிக்குக் காரணமான கர்மம் நீடிபபதும்) (அதனால் பதவி நீடிப்பதுமே உள்ளது - அதாவது - அவர்களுக்கு அதுவரையில அர்ச்சிராதிகதி இல்லை என்பதாம்) எங்களால் சொல்லப்படவில்லை — (அதாவது நாம் சொல்லவில்லை) - எல்லா ஞானிகளுக்கும் தேகம் விழுந்ததும் - அந்த சமயத்திலே - சுகிருத துஷ்கிருதங் களின் நாசம் ஏற்படுகிறது என்று; அதற்கு மாருக, எந்த ஞானிகளுக்கு அந்திம சரீரம் போன பிறகுதான் அர்ச்சிராதி கதி (வித்யையினால் ஸம்பவிக்குமோ) - யேற்படுகிறதோ - அவர்களுக்கு தேகம் விழுந்ததும், அதுவே கடைசி சரீர

மாகிறபடியால், பாபபுண்யங்களின் நாசம் யேற்படுகிறது என்போம் - அது வரை அவர்களுக்கு ஊர்த்வகதி இல்லை. (அதாவது சரீரத்தை விடும்போது எல்லா ஞானிகளும் அர்ச்சிராதிகதியை அடைகின்றனர் - அவர்களுடைய புண்ய பாபங்கள் நீங்கிவிட்டபடியால் - என்று நாம் சொல்லவில்லை. சரீரம் என்பது பாபபுண்யங்களின் அனுபவத்தைத் தரும் ஸாதனம்; அவர்களுக்கு கர்ம பாக்கியிருக்குமானால் - அதை அனுபவித்த பிறகே தான், ஊர்த்வகதி யேற்படக்கூடும்). வசிஷ்டர் முதலான பிருஹ்மரிஷிகள் அந்த அந்த பதவிகளை (வசிஷ்ட பதவி-அதுபோல அவரவர்களின் தபஸ்ஸின் பலனாக அடையப்பட்ட பலன்களை) வகிப்பவர்கள், அவர்கள் தேக வியோக காலத்திலே, உடனேயே, அர்ச்சிராதி கதியை அடைகிறார்கள் என்று சொல்ல முடியாது (ஏனெனில்) அவர்களின் பிராப்த கர்மாக்களின் பலன் முடிவையடையவில்லை: அதனால் அவர்களுடைய அதிகார பதவி நீடிக்கிறது. அப்பேற்பட்ட பிருஹ்ம ஞானிகளுக்கு அவர்களின் சிறப்பான கர்மவிசேஷங்களாலே அடையப் பெற்ற அதிகார பதவிகள்; அந்த கர்மவிசேஷங்கள் அழியப்படவில்லை-ஆகவே அதன் பலன் அனுபவிக்கப் படவேண்டியதாகும்.

यावदधिकारसमाप्ति எதுவரை அந்த பலன்களின் அனுபவ (முடிவு) ஏற்படவில்லையோ, என்று அர்த்தம். பலன்களைக் கொடுக்கிற கர்மாக்கள் அனுபவிக்கப்படாமல் அழிவது கிடையாது. பிராரப்த கர்மாக்கள் போகத்தினாலே தான் க்ஷயமாகின்றன. ஆகையால் அதிகாரிகளுக்கு, எந்த அவர்களின் புண்ய கர்மாக்கள் அந்த அதிகார பதவியைக் கொடுத்தனவோ, அவை அனுபவிக்கப்பட்டு முடியும் வரை, அவர்கள் தங்கள் பதவிகளில் நீடித்து வாழ்கிறார்கள் அவர்களின் ஆரம்பமான கர்மாக்கள் (பிராரப்தம்) முடியும் வரை அவர்கள் பதவியில் இருக்கிறார்கள். यावदधिकारमवतिष्टते பதவிக்குக் காரணமான கர்மாக்கள் நீடிக்கின்றன; அதன் பலனாக பதவியும் தொடர்கிறது. இக்காரணத்தால் அவர்களுடைய பதவி முடியும் வரை அவர்களுக்கு வித்யையின்

பலஞக - அர்ச்சிராதிகதி ஏற்படாது. ஆகவே நாம் முந்திக் கூறினேமே - சரீரம் விழுந்தவுடன் அர்ச்சிராதிகதி யேற் படுகிறது என்று, அந்த ஞானிகளுக்கே அந்திம சரீரம் விழும் அக்கணத்திலே கர்மம் அழிந்துபோய், அதற்குப் பிறகு அர்ச்சிராதி கமனம் பிராப்தி: (அடையப் பெறு கிறது.)

## அநியமாதிகரணம் (3-3-13)

### अनियमः सर्वेषामविरोधः शब्दानुमानाभ्याम् (3-3-32)

**அநியம: ஸர்வேஷாமவிரோத: சப்தாநுமாநாப்யாம் (3-3-32)**

ஸர்வேஷாம் அநியம: — உபாஸகர்கள் அனைவருக்கும் வாசியில்லாமல் (வித்யாஸமின்றி - அர்ச்சிராதிகதியினுலே பிருஹ்மம்) அடையப்படுகிறது. (ஏனெனில்) சப்தாநுமா நாப்யாம் அவிரோத: (அப்படி ஒப்புக் கொண்டால் தான்) சுருதி ஸ்மிருதிகளோடு முறண்பாடு இல்லாமலிருக்கும். (சுருதி - (ஸமிருதி) அனுமானம் - யுக்தி இத்யாதிகளுடன் விரோதம் இல்லாமலிருக்கும்). (பொதுவாக தேவயாந மார்க்கம் எல்லா வித்யா உபாஸகர்களுக்கும் உண்டு.)

**ஸ்ரீபாஷ்யம்:**-உபகோஸல வித்யையிலும் இன்னும் சில உபாஸந வித்யைகளிலும் அர்ச்சிராதிகதி பலஞக ஓதப்படு கிறது. இங்கே சந்தேகம் யாதெனில் இந்த உபகோஸலாதி வித்யையைப் பற்றியவர்களுக்கே அர்ச்சிராதிகதி ஏற்படு கிறதா - அல்லது எல்லா பிருஹ்ம வித்யா (உபாஸந) நிஷ்டர்களுக்குமே அர்ச்சிராதி கமனம் ஏற்படுகிறதா? - ஏனெனில் மற்ற வித்யைகளில் அர்ச்சிராதிகதியினுல் பிருஹ்மபிராப்தி அந்த சுருதிகளில் ஓதப்படவில்லை. சா. உ. 5-10.1ல் ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते - எவர்கள் காட்டை அடைந்து (இங்கே பஞ்சாக் நிவித்யை நிஷ்டர்களைப் பற்றிச் சொல்லியது) தங்களது ஆத்மாவை பிருஹ்மாத்மகமாக உபாஸிக்கிறுர்களோ, எந்த பிருஹ்மோபாஸகர்கள் காட்டை அடைந்து சிரத்தையோடு ஸத்யம் எனப்படும் பரமாத்

மாவை தம் ஆத்மாவுக்கு அந்தர்யாமியாக உபாஸிக்கிறார்களோ பிரு. உ. 5-2-15ல் இவர்களிருவரும் அர்ச்சிராதி கதியையடைகிறார்கள் என்றும் (श्रद्धां सत्यमुपासते) என்று படிக்கிற வேதவாக்யங்களில் பிருஹ்மோபாஸகர்கள் அனைவர்க்குமே அர்ச்சிராதிகதி படிக்கப்பட்டது என்பதற்கு பிரமாணம் இல்லாதபடியாலே, எந்த வித்யைகளில் அர்ச்சிராதி கதி படிக்கப்பட்டுள்ளதோ - அந்த வித்யைகளைக் காட்டிலும் வேறுபட்ட பிருஹ்மோபஸன வித்யைகளை அனுஷ்டிப்பவர்களுக்கு அர்ச்சிராதிகதி யேற்படாது. (அதாவது உபகோஸல வித்யை முதலான அந்த வித்யைகளை அனுஷ்டிப்பவர்களே அர்ச்சிராதிகதியையடைகிறார்கள் என அர்த்தம்.)

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுவோம்- अनियमः - யாதொரு தடையின்றி வித்யாஸமின்றி-உபாஸகர்கள் அனைவருக்குமே அர்ச்சிராதி கமனம் யேற்படுகிறது. सर्वेषां - என்பதற்கு ஸர்வ உபாஸன நிஷ்டையுள்வர்களுக்கு என்று அர்த்தம் - அவர்களுக்கு அர்ச்சிராதி கமனம் யேற்படவேண்டியதால் - யாதொரு வாசியின்றி அடையப்படவேண்டியதால் - அந்த குறிப்பிட்ட வித்யை நிஷ்டையுள்ளவர்களுக்கே அர்ச்சிராதி கமனம் என்கிற நியமம் இல்லை என்பதாகும். அப்படி கொள்ளாவிடில், அந்த வித்யைகளில் மாத்திரம் அந்த கதியைப் பற்றிப் படித்தது பொருளற்றதாகும். எல்லா வித்யைகளுக்கும் கமனம் உண்டு என்றால்- शब्दानुमानाभ्याम् . (அப்படி எல்லோருக்கும் உண்டு என்றால் - ஸ்ருதிஸ்மிருதிகளோடு விரோதம் வராது. இல்லாத போனால் விரோதம் யேற்படும் என்கிற அர்த்தமாகும்.)

சுருதி என்ன சொல்கிறது வென்றால் - சாந்தோக்யம், வாஜஸேநயர்களால் ஓதப்படும் சாகைகளில், பஞ்சாக்நி வித்யா உபாஸகர்களுக்கு, அர்ச்சிராதி மார்க்கமாகக் கமனம் ஓதப்பட்டிருக்கிறது. அதேபடி ஸர்வ பிரும்மோபாஸந நிஷ்டர்களுக்கு கமனம் ஓதப்படுகிறது. எங்கன

மெனில் வாஜஸேநயர்கள் य एवमेतद्विदुः ये चामि अरण्ये श्रद्धां सत्यमुपासते तेऽर्चिषमभिसंभवन्ति - எவர்கள் (பஞ்சாக்நி வித்யை நிஷ்டர்கள்) இவ்வண்ணமாக தங்களது ஆத்மாவை பிருஹ்மாத்மகமாக உபாஸிக்கிறார்களோ, எந்த பிரும்மோபாஸகர்கள் காட்டிலிருந்து கொண்டு சிரத்தையோடு ஸத்யம் எனப்படும் பரமாத்மாவைத் தமது அந்தர்யாமியாக உபாஸிக்கிறார்களோ)-; அதேபடி சாந்தோக்யத்தில் तद्य इत्थं विदुर्ये चेमेऽरण्ये श्रद्धा तपइत्युपासते, तेऽर्चिषमभिसंभवन्ति - எந்த பஞ்சாக்னி வித்யா நிஷ்டர்கள் இந்தமாதிரி தங்களது ஆத்மாவை பிருஹ்மாத்மகமாக உபாஸிக்கிறார்களோ - எந்த பிருஹ்மோபாஸகர்கள் காட்டிலிருந்து கொண்டு சிரத்தையோடு தபஸ் எனப்படும் பரமாத்மாவைத் தம் ஆத்மாவுக்கு அந்தர்யாமியாக உபாஸிக்கிறார்களோ - இவர்கள் இருவர்களும் அர்ச்சிராதி கதியை அடைகிறார்கள் என ஓதப்பட்டிருக்கிறது.

य इत्थं विदुः - எவர்கள் இந்த மாதிரி உபாஸிக்கிறார்களோ (பஞ்சாக்நி வித்யை உபாஸகர்களைப் பற்றியது) (அதே போல) ये चेमे - எவர்கள் - அவர்களுக்கும் என்கிற சுருதி வாக்யங்களால் என்ன ஓதப்படுகிறது என்றால் - எவர்கள் பிருஹ்மத்தை சிரத்தை பூர்வமாக பிருஹ்மத்தை உபாஸிக்கிறார்களோ-அவர்களுக்கும் அர்ச்சிராதிகதி பேசப்படுகிறது. தை. ஆனந்-1ல் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म பிரும்மம் ஸத்யம் ஞானம் அனந்தம் என்று ஓதப்படுகிறது (ஸ்வரூபமாயும் குணமாகவும் ஓதப்படுகிறது). அதே பிரகாரம் சா. உ. 7 - 17ல் सत्यं त्वेव विजिज्ञासितव्यम् - ஸத்யம் என்பதையே (முயற்சி செய்து) அறியப்படவேண்டியதாகும் (ஸாக்ஷாத்காரம் செய்யவேண்டியதாகும்) என்பதால் ஸத்ய சப்தத்திற்கு பிருஹ்மம் சொல்லப்படுவதாகப் பிரஸித்தம். தபஸ் சப்தத்திற்கும் கூட ஸத்யசப்தத்தோடு ஏகார்த்தம் ஏற்படவேண்டும் - அதாவது பிருஹ்மமாகும். ஆகவே ஸத்யம் - தபஸ் என்கிற இரண்டு பதங்களால் பிருஹ்மமே சொல்லப்படுகிறது. श्रद्धा पूर्वकं ब्रह्मोपासनं चान्यत्रश्रुतम् - சிரத்தை பூர்வகமாக பிரும்மோபாஸநம் யேற்படவேண்டும் என்று வேறிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

सत्यं त्वेव विजिज्ञासितव्यम् - ஸத்யத்தையே சாக்ஷாத்கரிக்க வேண்டும் என்று உபகிரமித்து - முடிக்கிறபோது श्रद्धा त्वेव विजिज्ञासि तव्या - சிரத்தையே சாக்ஷாத்கரிக்கப்பட வேண்டும் - என்று ஒதுகிறது. (இங்கு சொல்லப்படுவது - சாந்தோகத்திலும் பிருஹதாரண்யத்திலும், பஞ்சாக்னிவித்யா உபாஸகர்களுக்கும் மற்ற வித்யா உபாஸகர்களுக்கும் அர்ச்சிராதி கமனம் ஒதப்படுகிறது. (பிருஹ்மத்தை ஏதாவது ஒரு வித்யையினால் ஆராதித்தால் போதுமானது. பிருஹதாரண்யகத்திலே, எல்லா வித்யா உபாஸகர்களும் சத்யத்தை சிரத்தையோடு உபாஸிப்பவர்கள் - "ஸத்ய" என்கிற பதம் பிருஹ்மத்தைக் குறிக்கும்).

இதற்குப் பர்யாயசாந்தோகசாகை "எவர்கள் தபஸ்ஸை சிரத்தையுடன் உபாஸிக்கிறார்களோ" என்று ஒதப்பட்டிருக்கிறது. பிருஹதாரண்யகத்திலே ஒதப்பட்ட அதேமாதிரி சுருதிக்கு அர்த்தஸ்வபாவம் யேற்பட்டு 'தபஸ்' என்பதற்கு சத்யம் என்றும், தபஸ், சத்யம் ஆகியவற்திற்கு பிருஹ்மம் என்று ஒரே (ஏக) அர்த்தம் கொண்டதாகவிருக்கிறது. (सत्यतपश्शब्दानां ब्रह्मैवाभिधीयते) வேறொரு சுருதியிலே श्रद्धापूर्वकं ब्रह्मोपासनं चान्यत्र श्रुतम् (சிரத்தா பூர்வகமாக பிருஹ்மத்தை உபாஸிக்கவேண்டும் எனறு ஒதப்பட்டிருக்கிறது. सत्यंत्वेव विजिज्ञासि तव्यम् - (சத்யத்தையே விசாரித்து சாக்ஷாத்கரிக்கப் படவேண்டும்) என்று உபக்ரமித்து - (சா. உ. 7-16-1ல்); அது முடிக்கிறபோது श्रद्धात्वेव विजिज्ञासितव्या-சிரத்தையையே விசாரித்து - ஸாக்ஷாத்கரிக்கப் படவேண்டும். (இங்கு சொல்லப்படுவது - சாங். உபநிஷத்தும் பிருஹ. உபநிஷத்தும் இரண்டு விதமான உபாஸகர்களைச் சொல்லி, அவர்களுக்குப் பலனாக அர்ச்சிராதிகதியைச் சொல்லின. முதலில் பஞ்சாக்நி வித்யையை உபாஸிப்பவர்கள். இன்னொரு வகை பிருஹ்மத்தை வேறு எந்த வித்யையினால் உபாஸிப்பவர்களை பற்றிச் சொல்லிற்று. பிரு. உபநிஷத்தில் வேறு எந்த வித்யையை அனுஷ்டிப்பவர்கள் என்பதற்கு ஸத்யத்தை சிரத்தா பூர்வமாக ஓதுகிறவர்கள் என்று பொருள். ஸத்யம் என்கிற பதம் பிருஹ்மத்தைக் குறிப்ப

தாகுர். அதேபடி சாந்தோக்யத்தில் தபஸ்ஸை சிரத்தா பூர்வமாக உபாஸிப்பவர்களைச் சொல்லிற்று. பர்யாயமான பிரு. உபநிஷத்வாக்யத்தின் அர்த்த வீர்யத்தினுல் - தபஸ் ஸத்யத்தையே அர்த்தமாகக் கொள்கிறது, அந்த ஸத்யமே பிருஹ்மமாகும் என்றும் காட்டிற்று). இவர்களுக்கும் அர்ச்சிராதிகதி பின்னுல் வரப்போகும் அதிகரணம் (4-2-ல்) சொல்லப்படும்).

ஸ்மிருதி கூட (கீதை. 8-24) இவ்விதம் ஓதுகிறது. अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् । तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः - அக்னி, ஜ்யோதிஸ், பகல், சுக்லபக்ஷம் உத்தரா யணம், ஸம்வத்ஸரம், வாயு சூர்யன் சந்திரன் மின்னல் புருஷன் - வித்யுத் புருஷன் - வருணன் இந்திரன் பிரஜாபதி என்கிறவர்கள் வழி நடத்தும் மார்க்கத்தில் - அச்சிராதி மார்க்கத்தில் செல்லும் பிருஹ்ம வித்துக்களை பிருஹ்மத்தை அடையச் செய்கிருர்கள் - (முதலில் அக்னி என்று அர்ச்சிஸ் ஸைச் சொல்லியிருப்பதால் - இந்த மார்க்கத்தை அர்ச்சிராதி மார்க்கம் என்கிருர்கள் - பகல் முதலான கால வாசியான சப்தங்கள் அதற்கு அபிமானியான தேவதைகளைக் குறிக் கின்றன) - என்று ஓதியிருப்பதால் எல்லா வித்யைகளை அனுஷ்டிப்பவர்கள்—பிருஹ்ம வித்துக்கள் இந்த அர்ச்சிராதி மார்க்கத்தினுல் செல்கிருர்கள்.

ஸ ஏதாந் பிருஹ்மகமயதி என்றும்; ஏதேந பிரதிபத்ய மாநா இமம் மா நவமாவர்த்தம் நாவர்த்ததே - என்றும் சொல்லியிருக்கிறபடியால் - பஞ்சாக்நி வித்யை நிஷ்டனுக்கு பரமாத்ம சரீரோऽஹம் என்று பரமாத்மாவின் சரீரமாக தன்னை உபாஸிக்கிறவன், (மதாத்மக பரமாத்மா எனப் பொருள்) - இவனுக்கு அர்ச்சிராதி கமனம் யேற்படுகிறது. இந்த விதமாக ஒரே ஜாதியை (வகுப்பைச்) சேர்ந்த ஸ்ருதி ஸ்மிருதிவசனங்கள் பலவிருக்கின்றன) இந்தமாதிரி கமனம் எல்லாவித்யைகளையும் அனுஷ்டிப்பவர்களுக்கு யேற்படு கிறது. இவ்விதமாக ஸர்வவித்யா நிஷ்டர்களுக்கும் பொது வாக இந்த அர்ச்சிராதிகதி கிடைக்கிறதாக உபகோஸல

வித்யா அதுபோன்ற மற்றவித்யைகளுக்கும் பலனுக கிடைக்கிறது - என்கிற விஷயம் மீண்டும் உறுதி படுத்தப் படுகிறது.

(இன்னெரு விஷயம் கவனிக்கப்பட வேண்டியது. இரண்டு சுருதி வாக்யங்களால் - ஸத்யம் - தப: என்று படிக்கப்பட்டது பிருஹ்மத்தையே பராமர்சிக்கிறது - கேவலம் ஸத்யம் பேசுவதையோ - தபஸ் காயக்லேச சப்தத் தையோ சொல்லவில்லே. அவ்விதம் கொண்டால் பிருஹ்ம வித்யை ஆகமாட்டா, அர்ச்சிராதி கமனம் யேற்படாது• ஆகவே சுருதி ஸ்மிருதிகளிலும் எல்லா வித்யைகளுக்கும் பலன்பொதுவாகப் படிக்கப்படுகிறதாகையால்-உபகோஸல வித்யை முதலானவற்றிற்கும் பலனுன அர்ச்சிராதிகதி அந்த அந்த வித்யைகளில் அனுவாதம் செய்யப்படுகிறது. அதனுல் தேறுவது அர்ச்சிராதி கமனம் எல்லா வித்யைகளுக்கும் பொதுவானதேயொழிய - உபகோஸல வித்யை முதலான சிலவற்றுக்குத்தான் உரியது அல்ல - என்பதாகும்.

## அக்ஷரத்யதிகரணம் (3-3-14)

ஸி. சூ. अक्षरधियां त्ववरोध: सामान्यतद्भवाभ्यामौपसदवत् तदुक्तम् (3-3-33)

ஸி. சூ. அக்ஷரதியாம் த்வவரோத: ஸாமாந்யதத் பாவாப்யாம் ஔபஸதவத்ததுக்தம் (3-3-33)

அக்ஷரதியாம் - அக்ஷரம் எனப்படும் பரம்பொருளுக்குப் படிக்கப்படும் (அஸ்தூலத்வம் முதலான குணங்களேப் பற்றிய) அறிவுகளுக்கு, அவரோதது - எல்லா வித்யை களிலும் ஸங்கிரஹமே (உபஸம்ஹாரமானது செய்யத் தக்கது) ஏன் ? ஸாமாந்யதத்பாவாப்யாம்-பிருஹ்மம் எல்லா வித்யைகளுக்கும் பொதுவாகையாலும் (அஸ்தூலத்வம் முதலான) அந்தகுணங்கள் பிருஹ்மத்தில் அடங்கியவை யாகையாலும். ஔபஸதவத் - நான்கு தினங்கள் செய்து முடிக்கவேண்டிய ஜாமதக்னியம் என்கிற அஹீநத்தில்

யாகத்தில்) (புரோடாசின்ய உபஸதோ பவந்தி-உபஸத்துக்) கள் (இஷ்டிகள்) புரோடசித்திஞல் செய்யத்தக்கனவாக ஆகின்றன என தைத்ரீயத்தில் விதிக்கப்பட்டவிடத்தில் அந்த இஷ்டிகள் அத்வர்யுவிஞல் செய்யப்பட வேண்டிய தாகவிருப்பதால், அந்த இஷ்டிகளில் ஸாமவேதோத் பந்நங் களான (அக்னிர்வேர் ஹோத்ரம் வேரத்வரம் என்ற பன்னிரண்டு மந்திரங்களுக்குப் புரோடச மந்திரங்களுக்குப் புரோடச பிரதானத்தில் விநியோகம் காணப்படினும் அவற்றை அத்வர்யு உச்சாரணம் செய்யவேண்டிமே ஒழிய, ஸாமவேதியான உத்காதா உச்சாரணம் செய்தல் கூடாது - என்பது எவ்விதமோ, அவ்விதமே இங்கும் காணவேண்டும். ததுக்தம் – இந்த விஷயம் பூர்வமீமாம்ஸத்தில் சொல்லப் பட்டதாகும் அதாவது அங்கங்கள் வேறு எந்த சாகையில் படிக்கப்படினும்கூட, பிரதானத்தையொட்டியே அங்கத்தை நயனம் (நிர்ணயம்) செய்யவேண்டுமே யொழிய - வேறு சாகையில் படிக்கப்பட்டிருப்பதற்க்காக அவை பிரதானத் துக்கு முறண்பட்டனவாக ஒருபொழும் ஆகமாட்டா.

**அவதாரிகை:** – சென்ற அதிகரணத்தில் எல்லா வித்யை நிஷ்டர்களுக்கும் அர்ச்சிராதிகதி உண்டு என்று சொல்லப்பட்டது. அதுபோல அஸ்தூலமநணு போன்ற பிருஹ்மத்தின் குணங்கள் எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் உபாஸகர்களால் அனுஸந்திக்கத்தக்கவை என்று இந்த அதிகரணத்தில் நிலே நிறுத்தப்படுகிறது.

பிருஹ. உ. 5-8-8ல் एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनणव ह्रस्वमदीर्घमलोहित मस्नेहमच्छायमतमोऽवाय्वनाकाशमसङ्गमरसमगन्धमचक्षुष्क मश्रोत्रमवागमनोऽतेजस्कम प्राणसुखमसुखममात्रमनन्तरमबाह्यम् । न तदश्नोति किं चन... । एतस्य वा अक्षरस्यप्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः—

(அக்ஷரபிராஹ்மணம் - கார்க்கி, இந்த அக்ஷர பிருஹ் மத்தையே பிருஹ்ம ஞானிகள் அவ்யாகிருதமான ஆகா சத்துக்கும் அதாவது பூத சூக்ஷ்மம் (மூலபிரகிருதிக்கும்)- ஆதாரமாகக் கூறுகின்றனர். அந்த பிருஹ்மம் ஸ்தூலத் தைக்காட்டிலும் வேறுபட்டது, அணுவைக்காட்டிலும் வேறுபட்டது, குட்டை நெட்டையாக விருப்பதைக்காட்டி லும் வேறுபட்டது. பசையுடையவற்றைக்காட்டிலும் வேறு பட்டது. இருளைக்காட்டிலும் வேறுபட்டது. நிழலுடைய வற்றைக்காட்டிலும் வேறுபட்டது. இருளைக்காட்டிலும் வாயுவைக்காட்டிலும் ஆகாசத்தைக்காட்டிலும் வேறுபட் டது. ஸ்பர்ஸம், ரஸம் மணம், ரூபம் சப்தம் என்கிற விஷயங்களைக் காட்டிலும், வாக்கு முதலான கர்மேந்திரியங் களைக்காட்டிலும் சுகமுடையதைக்காட்டிலும் உள்ளும் புறமும் உடையவற்றைக்காட்டிலும் வேறுபட்டது. அது எதையும் உண்பதில்லை. அதை எவனும் உண்பதில்லை. இந்த அக்ஷரபிருஹ்மத்தின் சங்கல்பத்திலே (நியமனத் தாலே - प्रशासने) சூர்ய சந்திரர்கள் தாங்கப்பட்டு - அவரவர் களின் ஸ்தானங்களில் நிலை நிற்கின்றனர்.

अथ परा: यया तदक्षरमधिगम्यते यत्तदद्रेश्य मग्राह्यमगोत्रमवर्णमचक्षुः श्रोत्रं तद पाणिपादम् பரவித்யையாகிற உபாஸநத்தால் அக்ஷரப் பிருஹ்மம் அடையப்படுகிறது. அந்த பிருஹ்மம் ஞானேந் திரியங்களால் அறியத்தகாதது. கர்மேந்திரியங்களுக்கும் விஷயமாகாதது; குலமில்லாதது. வர்ணம் எனப்படும் ஜாதியில்லாதது. ஞானேந்திரியங்களற்றது. கர்மேந்திரி களும் அற்றது. காலத்தாலும் தேசத்தாலும் அளவு படா தது. மிக நுண்ணியதாகையாலே, எங்கும் பரவியது. அழிவற்றதாய், எல்லாப் பொருள்களுக்கும் காரணமான அதைப் பேரறிவாளர்கள் காண்கிறார்கள் - சாக்ஷாத்கரிக் கிறார்கள் - என அக்ஷரமான பிருஹ்மத்திற்கு அஸ்தூலத் வம் போன்ற குணங்கள் ஓதப்பெற்றன. இந்த குணங்கள் எல்லாவித்யைகளிலும் அனுஸந்திக்கத்தக்கவையா அல்லது

எந்த வித்தைகளில் படிக்கப்பட்டுள்ளனவோ அந்த வித்யை களில் மாத்திரம் தான் அநுஸந்திக்கத் தக்கனவா - என்கிற சந்தேகம்.

**பூர்வபக்ஷம்:**—இங்கே அக்ஷர சப்த நிர்திஷ்டமுன பிருஹ்மத்திற்கு ஓதப்பட்ட அஸ்தூலத்வாதி குணங்கள் பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேறுபட்டதான (ப்ரத்யக்ஷ) ஸ்வரூபங்கள் எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் அநுஸந் திக்கப்படத்தக்கவையா - அல்லது எந்த வித்யைகளில் இந்த குணங்கள் ஓதப்பட்டிருக்கின்றனவோ - அங்கே மாத்திரம் அநுஸந்திக்கப்பட வேண்டியவையா? என்கிற சந்தேகம். யாது சரியாகும்? எந்த வித்யைகளில் அவை ஓதப்பட்டிருக்கின்றனவோ - அவைகளில் மாத்திரம் அநு ஸந்திக்கப்படவேண்டும் (श्रुतास्तत्रैवेति) ஒரு வித்யையில் ரூப மாகப் படிக்கப்பட்ட குணங்களை மற்றொரு வித்யையில் அநுஸந்திக்கவேண்டும் என்பதற்கு பிரமாணமில்லை என்ப தால், த்வைத நிஷேத குணங்களாகிற அஸ்தூலத்வம் - அநணுத்வம் — இத்யாதி குணங்கள் வேறு வித்யைக்கு உபாஸ்யமான ரூபத்திற்கு ஆகாது; அவைகளை மாற்ற முடியாது (உபஸம்ஹாரம் செய்ய முடியாது).

ஆகவே எந்த வித்யைகளில் அஸ்தூலத்வம் இத்யாதி ஓதப்பட்டுள்ளனவோ, அந்த வித்யைகளிலே இவற்றை அநுஸந்திக்கவேண்டும். ஆனந்தம் முதலான பிருஹ்ம குணங்கள் ஸ்வரூப நிரூபண தர்மங்களாகும். அவைகளை எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் சேர்க்கப்படவேண்டும். அவைகளைப் போல இவையல்ல, இவை ஸ்வரூபத்தை நிரூபிப்பவை என்பதற்குப் பிரமாணமில்லை (अभावरूप); ஆனந் தாதி குணங்கள் பிருஹ்ம ஸ்வரூபத்தைக் காட்டுகின்றன. ஆனால் இவை ஏற்கனவே ஸ்வரூப நிரூபண தர்மங்களால் நிரூபிக்கப்பெற்ற பிருஹ்மத்தினிடம் ஸ்தூலத்வம் அணுத் வம் முதலிய குணங்கள் இல்லை என்றும் பிரபஞ்ச தர்மங் களாக விருக்கும் இவை நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன-என்ப தால் காட்டப்படுகின்றன. ஆகவே இவை நிரூபிதஸ்வரூப மாகவே விருக்கும் குணங்களாகும் அபாவரூபத்தினுலே,

நிராலம்பந பிரதிஷ்டாயோகாத் - ஏனெனில் ஏற்கனவே ஏதற்கு ஆதாரமில்லையோ - எது வேறு பிரமாணத்தினுல் ஸாதிக்கப்படவில்லையோ - அதற்கு மறுப்பு காட்டப்படுகிற படியால் ஆகும். (ஆகவே பூர்வபக்ஷி சொல்வது இந்த குணங்கள் அந்த குறிப்பிட்ட வித்யைகளில் தான் அநு ஸந்தேயம். ஆனந்தம் போன்ற ஸ்வரூப நிருபண குணங் களாகமாட்டா).

இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுவோம். अक्षराधियां त्ववरोधः அக்ஷரம் எனப்படும் பரம் பொருளுக்குப் படிக்கப்படும் (அஸ்தூலத்வம் முதலான குணங்களைப் பற்றிய) அறிவுகளுக்கு அவ ரோத: து (உபஸம்ஹாரம் செய்து கொள்ளத்தக்கது. அதாவது, அக்ஷரத்தை உப தேசிக்கும் எல்லாவிடங்களிலும் ஸங்கரஹமே. இதன் அர்த் தம் யாதெனில் எல்லாவித்யைகளிலும் அவரோத: (உபஸம் ரம் செய்யத்தக்கது). அக்ஷரஸம்பந்த உபதேசிக்கப்பட்ட குணங்கள் - அஸ்தூலத்வாதி குணங்கள் - ஸர்வ பிருஹ்ம வித்யைகளிலும் சேர்க்கப்படலாம் - ஸங்கிரஹமே. संग्रहण - मित्यर्थः । எப்படி ? सामान्य तद्भावाभ्याम् — எல்லா வித்யை களிலும் பிருஹ்மமே பொதுவாகவும் (ஒன்ருகவு) மிருப்ப தாலே - எல்லா உபாஸநங்களிலும் அக்ஷரமே (பிருஹ்மமே) உபாஸ்யப் பொருளாகவும், எல்லாவற்றிலும் பிருஹ்மம் ஸமானமாகவிருப்பதாலும் - அஸ்தூலத்வாதி குணங்கள் பிருஹ்ம ஸ்வரூபத்தை விமர்சிக்கின்றன.

என்ன சொல்லப்பட்டதென்ருல், ஒரு வஸ்துவை மனத் திற்குக் கிரஹணம் செய்தல் அதனுடைய அஸாதாரண ஆகாரத்திறுல் (லக்ஷணங்களினுல்) - அதன் உதவியினுல் யேற்படுவதாகும். கேவலம் ஆனந்தம் முதலிய பிருஹ்ம குணங்கள் பிருஹ்மத்தின் அசாதாரண ஆகாரங்களாக (லக்ஷணங்களாக) ஆகமாட்டா. ஏனெனில் பிரத்ய காத்மா வுக்கு (ஜீவனுக்கும்) இம்மாதிரி ஆனந்தாதி குணங்கள் ஓதப்படுகின்றன. பிருஹ்மமோ ஹேய ப்ரத்யனீகம். (நீச (துச்ச) குணங்களுக்கு ஸ்வரூபமாகவே எதிர்தட்டு),

ஆனந்தம் முதலிய குணங்கள் (ஹேய ப்ரத்யனீகம்) பிருஹ்மத்திற்கு ஸ்வரூப நிருபக தர்மங்களாகிறபடியால், அவை அதன் அஸாதாரண ரூபமாகும். பிரத்யகாத்மாவாகிற ஜீவனுக்கு, (ஹேய) நீச குணங்களுக்கு இயற்கையாகவே (ஸ்வதோ) இருப்பிடமாகவில்லாமல் இருப்பினும் (பிரதானத்துடன் சம்பந்தமிருப்பதால்) ஹேய ஸம்பந்தம் பெற யோக்யதை இருக்கிறது. ஹேய ப்ரத்யனீகத்வமும் சித் அசித் வஸ்துக்களுக்கு ஆத்மாவாகவிருப்பதும் பிரபஞ்சதர்ம பூத குணங்களாகிற ஸ்தூலத்வாதி குணங்களுக்கு இயற்கையாகவே விபரீத ரூபத்துடன் (எதிர்த்தட்டாக) கூடியது பிருஹ்மம். ஜீவன் அப்படி அல்ல. அதாவது பிருஹ்மத்திற்கு ஆநந்தம் முதலான குணங்களால் மாத்திரம் பிருஹ்மத்தை அறியமுடியாது ஏனெனில் அவை ஜீவனுக்கும் இருப்பதாலே, ஹேய ப்ரத்யனீகத்வம் கூடிய ஆனந்தம் முதலான குணங்களே பிருஹ்மத்தின் அஸாதாரண லக்ஷணமாகும். அவ்விதமல்ல ஜீவன். பத்த ஜீவன் அசித் சம்பந்தத்தால் கெடுக்கப்பட்டிருக்கிறன். ஸ்தூலத்வம் போன்ற பிராகிருத தர்மங்களுக்கு எதிர் தட்டாயிருப்பது பிருஹ்மம். ஆகையால் தனித் தன்மைகளோடு (அஸாதாரண தர்மங்களுடன்) பிருஹ்மத்தை உபாஸிப்பவன் - அஸ்தூலத்வம் முதலான விசேஷணங்களோடு கூடிய ஆனந்தாதி குணங்களைக் கொண்டதாகவே அதை அநுஸந்திக்கவேண்டும்).

ஆகவே அஸ்துலத்வாதி குணங்களும் பிருஹ்ம ஸ்வரூபத்தை தெரிந்து கொள்ள அவசியமான ஸ்வரூபநிரூபண தர்மங்களாகும்-ஆனந்தாதி குணங்களைப்போல. ஆகையால் அஸாதாரண ஆகாரத்தினுல் பிருஹ்மத்தை அநுஸந்திப்பது எங்ஙனமெனில் -அஸ்தூலத்வாதி விசேஷித ஞான ஆநந்தாதி ஆகாரம் - அத்துடன் கூடிய பிருஹ்மம் என அநுஸந்திக்கப்படவேண்டியது (அநுஸந்தேயம்) ஆகும். அஸ்தூலத்வாதி குணங்களும் ஆனந்தாதி குணங்களைப் போல பிருஹ்மத்தின் நிஜஸ்வரூபத்தை விமர்சிப்பதால், எல்லா பிருஹ்மவித்யைகளிலும் அவை அந்த பிரகாரமே

பிருஹ்மாநுஸந்தேயமாகும் (பிருஹ்மத்துடன் அந்த குணங்களைச் சேர்த்து உபாஸிக்கப்படவேண்டும் – என்று தெளிவாகிறது.)

குணங்கள் (அப்ரதிக் ஷித்த தர்மங்கள்) குணத்தை உடைய வ்யக்தியை எப்போதும் விட்டுப் பிரியாமல் அவனை தொடருகின்றன - என்பதை விளக்குவது औपसदवत्- உபஸத்துக்கு குணபூதமான மந்திரம் போலே - (பூர்வ மீமாம்ஸத்தில் சொல்லப்பட்டது). (இங்கே அஸ்தூலத்வம் நிருபகதர்மமாதலால், எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் அவைகளுடன் கூடிய பிருஹ்மம் என்று அநுஸந்திக்க வேண்டும்). இதற்கு ஒரு திருஷ்டாந்தம் கூறப்படுகிறது. ஜாமதக்ங்ய சதூராத்ரபுரோடாஸ்யுபஸத்துக்கு குணமாயிருக்கும் அக்நிர்வை ஹோத்ரம்வே (தாண்ட்ய மஹா பிராஹ்மணம் 21-10-11) अग्निर्वैहोत्रंवे:-என்கிற மந்தரம் (ஸாம வேதம்) - அதற்கு உச்சஸ்வரம் உளது. ஆனால் பிரதானமான முற்கூறிய உபஸத யஜுர்வேதத்தைச் சேர்ந்ததாகையால், அதன் அங்கமான இம்மந்திரத்தை உபாம்ஸீ ஸ்வரத்தோடு அநுஸந்திப்பது தக்கது - ஒன்றுக்கொன்று முரண்பட்ட இந்த இரண்டு ஸ்வரங்களில் எதை ஏற்பது என்கிற கேள்வி எழுந்தவளவில், இந்த மந்திரம் ஸாமவேத மந்திரமாயினும், யஜுர்வேதத்தைச் சேர்ந்த உபஸதத்துக்கு அங்கமாகையால் யஜுர்வேதத்திற்கு உரிய உபாம்ஸீ ஸ்வரத்தோடுதான் (கூடத்தான்) இதை உச்சரிக்கவேண்டும் என்று அறுதியிடப்பெற்று அப்படியே அநுஷ்டிக்கப்படுகிறது. அவ்வண்ணமே பிரதானகுணியைத் தொடர்கின்றன-அந்த பிரதான பொருளின் ஸ்வரூப நிருபணகுணங்களாகிற அஸ்தூலத்வாதி குணங்களுமாகும். ஆகவே இவை சில வித்யைகளில் காணப்படினும் - எல்லா வித்யைகளிலும் அநுஸந்திக்கத் தக்கவையே-இந்த அர்த்தம் பூர்வமீமாம்ஸையில் சொல்லப்படுகிறது - (பூர்வம் மீ. 3-2-9) गुण मुख्यव्यतिक्रमे तदर्थत्वान्मुख्येन वेद संयोगः

அங்கஸ்வரத்துக்கும், பிரதான ஸ்வரத்துக்கும் விரோதம் யேற்படுமாகில், அங்கம் (குணம்) முக்யஸ்வரத்தை

முன்னிட்டு - ஸ்வரத்துக்கு வேதஸம்யோகம் யேற்படுகிறது- என்று சூத்ரம் ஓதப்பட்டது. ஆகவே யஜுர்வேத உபாம் சுஸ்வரத்தினாலே மந்திரம் செயல்படவேண்டும். இதன் பிரகாரம் பிரதானமான ப்ருஹ்மத்தின் ஸ்வரூபநிரூபக குணங்களாகி அஸ்தூலத்வம் முதலானவையும் சில வித்யை களிலும் அநுஸந்தேயமாகும்.

(உபாஸத் ஜ்யோதிஷ்டோம யாகத்தைச் சேர்ந்தது - பன்னிரண்டு மந்திரங்கள். ஸாம வேத மந்திரமான உபாம்ஸு யஜுர்வேத பிரதானமான உபஸத்துடன் (உபாம்ஸு ஸ்வரத்துடன் கூடச் சேர்த்து) இதை உச்சரிக்க வேண்டும் (உச்சஸ்வரத்துடன் கூடப் பாடவேண்டும்) - ஸாமவேத ஸ்வரம்; குறைந்த ஸ்வரத்துடன் யஜுர்வேத மந்திரம் ஓதவேண்டும்).

மேலும் ஆட்சேபிக்கப்படலாம். எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் பிருஹ்மத்தையே அக்குணங்களை உடைய தாகப் போற்றப்படுகின்றன. குணங்கள் வ்யக்தியைத் தொடருவதால் (गुणानां च प्रधाना नुवर्तित्वात्) அதாவது குணியை அனுஸந்திக்க வேண்டிய இடத்தில் இந்த குணங் களும் சேர்த்து ஓதப்படவேண்டும்.) என்பதால்; சிலசாகை களில் ஓதப்படும் பிருஹ்ம குணங்கள் (உதாரணமாக) - (சா. உ. 3-14-4.) सर्वकर्मा सर्वगन्धः सर्वरसः - பரமாத்மா ஸ்ருஷ்டி முதலான எல்லாக் கர்மங்களை உடையவன்; திருமேனியில் எல்லா வாஸனைகளையும் உடையவன்; எல்லா நற்சுவைகளை யும் உடையவன். இந்த குணங்கள் பிரதி வித்யையிலும் அனுஸந்திக்கப்படவேண்டியவையே எனத்தேறும். அதனாலே அந்த அந்த வித்யைகளில் மாத்திரமே அனுஸந்திக்க வேண் டியவை என்று எந்த குணத்தையுமே கொள்ளமுடியாது - என்கிற ஆக்ஷேபம் வர, அதற்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதிலளிக்கிறார்.

## ஸ்ரீ. ஸூ. इयदामननात् (3-3-34)

## இயதாமநநாத் (3-3-34)

இயத் - ஆனந்தமயாதி கரணத்திலும் - முன் சூத்ரத்திலும் கூறியபடி - அஸ்தூலத்வம் முதலானவற்றேடு கூடிய ஆனந்தம் முதலான (இவ்வளவு குணங்களே) எல்லா வித்யைகளிலும் அநுஸந்தேயம் - ஆமநநாத் - (இவ்வளவிலேயே பிருஹ்மஸ்வரூபம்) அறியப்பட்டு விடுகிறபடியால். அதாவது ஸ்வரூப நிருபக தர்மங்கள் என அர்த்தம்.

आमननम् - ஒரு விஷயத்தைப் பற்றி சிந்தனை செய்வது - आभिमुख्येन मननम्; अनुचिन्तनम् - ஸதா தியானிப்பது. இத்தகைய தியானத்திற்கு வேண்டி பிருஹ்மத்தின் குணங்களை எல்லாம் (सर्वत्र) அநுஸந்திக்கவேண்டியது என்பது பிராப்தம். அதாவது எல்லாக் குணங்கள் என்பதற்கு அர்த்தம் - ஆனந்தமயாதி குணங்களுக்கு விசேஷமாக விருக்கும் அஸ்தூலத்வம் முதலிய குணங்களாகும். இவற்றேடு கூடிய ஆனந்தம் முதலான இவ்வளவு குணங்களே எல்லா வித்யைகளிலும் அநுஸந்திக்கப்படவேண்டும். அதாவது ஸ்வரூப நிருபக குணங்கள் பிருஹ்மத்தை அறிவதற்குக் காரணமாகின்றன. அவைகளை அநுஸந்திக்க வேண்டும்.

அந்த பிருஹ்ம ஸ்வரூபத்தை - (எப்படிப்பட்டது?) - சித் அசித் வஸ்துக்களைவிட வேறுபட்டதாக அநுஸந்திப்பதற்கு எந்த குணங்கள் இல்லாவிடில் இயலாதோ - ஏற்படாதோ - அந்த ஸ்வரூபக குணங்களே ஸர்வத்ர (எல்லா வித்யைகளிலும்) அனுவர்த்தனீயம் (தொடருகின்றன - அநுஸந்தானம் செய்யப்படவேண்டியவை). (பிருஹ்ம உபாஸனத்திற்கு ஸத்யம் ஞானம் அனந்தம், ஆனந்தம், அமலத்வம் ஆகிற ஐந்தும் ஸ்வரூப நிருபக குணங்களாகும். ஸ்ரீயப்பதித்வமும் நிருபித ஸ்வரூப குணமானுலும் - அதையும் சேர்க்கவேண்டியது) - அந்த குணங்கள் இவ்வளவு

தான். பிருஹ்மம்தின் இதர குணங்களாகிற ஸர்வ கர்மத்வம் - அவை பிரதானமான (குணியான) பிருஹ்மத்தோடு சேர்ந்திருப்பவையாலும், எங்கெந்த வித்யைகளில் ஓதப்பட்டிருக்கின்றனவோ, அந்தந்த வித்யைகளிலேயே தியானிக்கத்தகுந்தவை - प्रतिविद्यं चिन्तनीयत्वेन என வ்யவஸ்தையாகும்.

லிங்க பூயஸ்த்வாதி கரணத்தில் நாராயண வல்லியிலுள்ள பதினோராவது அநுவாகமான நாராயணுநுவாகம் எல்லா பிருஹ்ம வித்யைகளிலும் உபாஸிக்கப்படும் பரம் பொருள் - எந்த தேவதை என்று ஸ்தாபிப்பதற்கு யேற்பட்டது. அதில் ஸ்ரீயப்பதித்வம் இருந்தால் தான் நாராயணத்வம் ஸித்திக்கும் எனக் காட்டப்பட்டது. அதனுல் நித்ய ஸ்ரீயுடன் கூடிய ஸ்ரீமந்நாராயணனே - ஐக்யமிதுனமே உபாஸ்யம் எனக் கண்டு கொள்வது.

|| சுபமஸ்து ||



## அந்தரத்வாதி கரணம் (3-3-15) (தொடர்ச்சி)

ஸி. ஸூ. अन्तरा भूतग्रामवत्स्वात्मनोऽन्यथा
भेदानुपपत्तिरिति चेन्नोपदेशवत् (3-3-35)

**அந்தரா பூதக்ராமவத்ஸ் வாத்மநோர்ந்யதா
பேதாநுபபத்திரிதி சேந்நோ பதேசவத் (3-3-35)**

*அந்தரா - பிருஹதாரண்யக - உஷஸ்த பிரஸ்னத்தில் அனைத்துக்கும் ஸர்வாந்தரத்வமானது (உள்ளிருப்பவன் என்று கூறும் பதில்) பூதக்ராமவத்ஸ்வாத்மந: - பஞ்ச - பூதமயமான சரீரத்தை நியமிக்கும் ஜீவாத்மாவைப் பற்றியதே. அந்யதா- இவ்விதமாக கொள்ளாவிடில் பேதாநுபபத்தி-(உஷஸ்தகஹோள பிரஸ்னங்களுக்கிடையே பதிலில்) வேறுபாடு (பேதம்) யேற்பட்டு பொருந்தாமல் போய்விடும். ஆகையால் இந்த இரண்டு வித்யை களும் வேறுபட்டவை ; இதிசேத் என்றால் - ந - அவ்விதமல்ல- (அதாவது இந்த உஷஸ்தகஹோள பிரஸ்னங்களில் ஓதப்படும் இரண்டு வித்யைகள் வேறுபட்டவையல்ல. உபதேஸவத்-(ஸத் வித்யையில்) உபதேசத்தைப் போலே.*

*(சங்கரர் முன்பகுதியை ஒரு சூத்ரமாக அமைத்து நிர்வஹிக் கிறார்- ஆத்மா ஒருவனுக்கே ஸர்வாந்தரத்வம் பேசப்படுகிறது- அதுவே இங்கும் காண்க. ஸமானமாயுள்ளவனே இரண்டு தடவைகள் சொல்லியிருப்பதால் வித்யைகள் வேறு என்பது பூர்வ பக்ஷம். இரண்டிலும் உள்ள ஆத்மாவுக்கு ஸர்வாந்தரத்வம் இருக்கிறது. அதனால் வித்யை ஐகத்வம் ஸித்திக்கிறது. இந்த சங்கையைப் போக்க வேண்டி-தத்வமஸி என்பது போல, இரண்டு தடவை படிக்கப்பட்டது - என்பது ஸித்தாந்தம்)-*

*பிரு. உபநிஷத்தில் உஷஸ்தர் பிரஸ்னத்தில் இவ்விதம் ஓதப் படுகிறது-பி. உ. 5-4-1ல்* यत् साक्षादपरो क्षाद् ब्रह्म य आत्मा सर्वान्तरः तं मे व्याचक्ष्व*-நேரில் எங்கு பார்த்தாலும் எல்லாக் காலங்களிலும் ஸாக்ஷாத் பிருஹ்மமாக அனைத்துக்கும் அந்தராத்மாவாக விருப் பவன் எவனோ-அவனை எனக்குக் காட்டுவாய்-என்கிற உஷஸ்தரின் கேள்விக்கு - யாக்ஞவல்கியர் பதில் அளித்தார்; -* (प्रतिवचनं

यः प्राणेन प्राणिति स त आत्मा सर्वान्तरः; योऽपानेनापानिति स त आत्म - உமக்கு ஆத்மாவாக இருப்பதே அது. பிராணனென்னும் வாயுவைக் கொண்டு ஜீவனத்தை நடத்தும் ஆத்மாதான் அது. எவன் பிராணனால் பிராணநம் செய்கிறானோ, அவனே ஸர்வாந்தர்யாமியான உனது ஆத்மா; எவன் அபாநத்தினால் அபானகிரியை செய்கிறானோ, அவனே ஸர்வாந்தர்யாமியான உனது ஆத்மா - என்று பதில் கூறப்பட்டது. இதனால் திருப்தி யடையாத உஷஸ்தர் - மீண்டும் கேள்வி கேட்டார் - அதற்கு யாக்ஞவல்கியர் பதிலளித்தார். न दृष्टेर्द्रष्टारं पश्येः; न श्रुतेः श्रोतारं शृणुयाः; न मतेर्मन्तारं मन्वीथाः। न विज्ञातेर्विज्ञातारं विजानीयाः। एष त आत्मा सर्वान्तरः। अतोऽन्यदार्तम् (பிரு. 2. 8-4-3 நான் கூறிய ஸர்வாந்தர்யாமியான ஆத்மாவை - காண்பவனாகவும், நினைப்பவனாகவும் அறிபவனாகவும் நீ உணரும் ஜீவாத்மாவாக எண்ணாதே; ஜீவாத்மாவான உனக்கும் மற்ற எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவாக இருப்பவன் இந்த பரமாத்மாவே. அவனைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவன் துன்ப முடையவன் என்று பதிலளித்தார். (அதாவது சிரவண மனனம் தியானம் தர்சனம் என்றவற்றைச் செய்யும் ஆத்மாவை யான் எல்லாவற்றிற்கும் உள்ளிருக்கும் ஆத்மாவாகச் சொன்னதாக நினைக்கவேண்டா. நான் சொன்ன ஆத்மாவைத் தவிர்த்து மற்றது எல்லாம் அழிவுற்றதாம் என்றும் கூறினார்).

அப்போது கஹோளர் உஷஸ்தருடைய கேள்விக்கு மறு மொழி கூறின உமக்கு "எது அந்த ஆத்மாவெனக் கருத்தில் உள்ளது என்று விளங்கச் சொல்ல வேண்டும்" என்று கேட்க நினைத்து உஷஸ்தருடைய கேள்வியை அப்படியே தாமும் கேட்டார்-(கஹோள பிரஸ்னம்)-यदेव साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः तं मे व्याचक्ष्व-; அதற்கு யாக்ஞவல்கியர் பதில் அளித்தார்-"அந்த பரமாத்மாவே-பிருஹ்மமாக இருப்பவனே-ஸாக்ஷாத்தாக நேரில் எல்லாவிடங்களிலும் எல்லாக்காலங்களிலும் பார்க்கப் படுகிறான். அவனே எல்லோருக்கும் அந்தராத்மா. அவனைப்பற்றி எனக்கு உபதேசிப்பீர்" (பிரஸ்னம்) - இதற்கு யாக்ஞவல்கியரின் பதில் - (प्रतिवचनं) योऽशनायापिपासे शोकं मोहं जरां मृत्युमत्येति।

एतं वै तमात्मानं विदित्वा ब्राह्मणाः पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च- इत्यादि-अतोऽन्यदार्तम् - इत्यन्त-பாக:-"எவன் பசி தாகம் சோகம் மோஹம் மூப்பு மரணம் என்றவையில்லாத ஆத்மா அது. இதனை அறிந்துதான் பிராஹ்மணர்கள் புத்ரன் பணம் உலகம் என்ற மூன்றிலும் அறப்பற்றற்று (ஸந்யாஸம் செய்து கொண்டு) பிக்ஷையால் தேகயாத்திரையை நடத்திக்கொள்கின்றனர்; பிராஹ்மணன் (ரஹஸ்யமாக உபதேச மூலம் பெற வேண்டு மான) பாண்டியத்தைப் பெற்று பாலன் போலே அஹங்காரம் அற்றிருக்க வேண்டும். இவ்விதம் பாண்டித்யம் பெற்ற அவன் எப்போதும் ஆத்மாவையே ஸதா சிந்தித்த வண்ணமிருந்து முனி என்கிற பெயர் பெற வேண்டும். நன்கு தியானிப்பதால் பிராம் மணன் எனப்படுகிறான்-அவனுக்கு இதைவிட வேறு வழி ஏது?- அதோந்யதார்த்தம்-இந்த பரமாத்மாவைக் காட்டிலும் வேறு பட்டவன்-ஜீவன் துன்பமுடையவன்" - என்கிற பதில் கடைசி யாகக் கூறினதாகக் காணப்படுகிறது. இவ்விதம் உஷஸ்த கஹோள பிரஸ்னங்களில் ஓதப்பட்ட வித்யை இரண்டும் வேறு பட்டவையா-அல்லது ஒன்றேதானா என்கிற ஐயம் எழுந்தளவில், பூர்வபக்ஷம், சித்தாந்தம் சொல்லப்படுகிறது.

(உஷஸ்தகஹோள பிரஸ்னங்கள்-விதேகராஜனின் (ஜனகனின்) யக்ஞமொன்றில் நடத்திய ஸதஸ்ஸில் கேட்கப்பட்டன. ஜனகன் எந்த பிராம்மணர் ஸர்வ வித்யையிலும் தேர்ச்சி பெற்றவர் என்பதை பரிக்ஷிக்க - பெரிய பரிசை ஏற்படுத்தி-சிறந்த பிரும்ம ஞானிக்கு இப்பசுக்களுடன் கூடிய பரிசு சொந்தமாகும் என்று ஸதஸ்ஸில் பிரகடனம் செய்தான். அச்சமயம் யாக்ஞ்யவல்கியர் தமது சிஷ்யனைப் பார்த்து "இந்த பசுக்களைத் தமது கிரஹத் திற்கு ஓட்டிப்போக" கட்டளையிட - அங்கு கூடியிருந்த மற்ற பிரும்மஞானிகள் ஆட்சேபித்து - அவரை பிரஸ்னம் செய்தனர். அச்வலர்—ஆர்த்திபாகர்-புஜ்யு - உஷஸ்தர் - கஹோளர் - கார்க்கி இப்படி பலர் பல கேள்விகளைக் கேட்க-யாக்ஞ்யவல்கியர் ஒவ் வொன்றுக்கும் சரியான பதில் கூறி, சமாதானம் செய்தார். இதை யெல்லாம் கேட்டு-கார்கி என்பவள் பிராம்மணர்களைப் பார்த்து- இனி இவரை ஜயிக்கமுடியாது-நமஸ்காரம் செய்து விடுதலுற்று நில்லுங்கள் என்று கூறி வணங்கி நின்றாள். ஆக இவற்றுள் வருவது உஷஸ்த பிரஸ்னம்-கஹோளர் பிரஸ்னம் ஆகும்).

ஸ்ரீபாஷ்யம்:-இரண்டு வித்யைகளும் வேறாக விருக்கின்றன. எப்படி - ரூப பேதத்தினால் - வித்யை வேறு. இந்த உஷஸ்த கஹோளர் ப்ரஸ்னங்களுக்கு யாக்ஞவல்கியர் அளித்த ப்ரதி வசனங்களிலிருந்து பேதம் - ரூபத்திலே விருக்கிறது. கேள்வி இரண்டிலும் ஒன்றாயிருந்தபோதிலும் பதில் வெவ்வேறாக விருப்பதால் ரூபம் வேறுபடுகிறது. எனத் தெரியவருகிறது. முந்திய தான உஷஸ்தபிரஸ்ந பதிலில் பிராணனம் (பிராணவாயுவை செயல்படுத்துவது) முதலான காரியங்களைச் செய்பவனே எல்லாவற்றிற்கும் அந்தராத்மா என்று ஜீவன் உபாஸ்யனாகச் சொல்லப் படுகிறான்-(ஸர்வாந்தராத்மத்வேந) மற்றொன்றுதான கஹோளர் பிரஸ்நத்தின் பதிலில்-பசி தாகம் முதலியவை இல்லாதவனாகவும், ஜீவனைக் காட்டிலும் வேறுபட்ட பரமாத்மா உபாஸ்யனாகக் கூறப்படுகிறான். ஆகவே இரண்டு வித்யைகளிலும் உபாஸ்ய ரூபம் வேறுபடுகிறது. ஆகையால் முந்தின உஷஸ்த ப்ரஸ்னத்தின் பதிலில்-ப்ராணிதா-பிராணனைச் செயல்படுத்தும் கர்த்தாவை (அதாவது ஜீவனைச்) சொல்லியதாகும். அவனே அந்தராத்மாவாகக் கூறப்படுகிறான். ஆனால் கஹோள ப்ரஸ்ன ப்ரதி வசனத்தில் அவனுக்கு பசி தாகம் இல்லை என்று கூறப்படுகிறது. प्राणिता - ஜீவன் - தேக இந்திரிய புத்தி மனபிராணனை விட வ்யதிரிக்தः (வேறுபட்டவன்) ப்ரத்யகாத்மாதான் (ஜீவனேயாகும்) இன்னொன்றான கஹோளபிரஸ்னத்தில் பசி தாகம் இவைகளைக் கடந்தவன்-ரஹிதன்-பரமாத்மாவாகும். ஆகையலே ரூபம் வேறு படுத்தப்படுகிறது. भूतग्रामवतश्च-பஞ்சபூதமயமான சரீரத்தை நியமிக்கும் ஜீவாத்மாவாகும். அந்த ஜீவாத்மா பஞ்ச பூதங்களடங்கிய சரீரம் எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாக விருப்பதாலே, ஜீவனுக்கு ஸர்வாந்தரத்வம் சரியாகும். எப்படியெனில், பஞ்சபூத மயமான சரீரத்தை ஆளுகிற ஜீவாத்மா அந்த பஞ்சபூதங்களுக்கும் அந்தர்யாமியாக விருப்பதையிட்டு இங்கு ஸர்வாந்தரனாகக் கூறுவது சரியாகும்.

ஜீவாத்மாவுக்கு ஸர்வாந்தரத்வம் அவனுடைய சரீரத்தை ஆளுவதாலே யேற்படுகிறது (பூத கிராம மாத்ர அபேக்ஷத்வேந) அவ்விதமாயினும் அதுவே செயல்படுகிறது. (அதனால் அறிய முடிகிறது). இல்லாதபோனால் முக்யாந்தராத்மாவை பரிகிரஹிப்ப

தற்கு, தன் வசம் கொள்வதற்கு-பரமாத்மாவையே ஸ்வீகாரம் (அங்கீகாரம்) செய்வதால், பிரதி வசன பேதங்கள் ஏற்படுவதில்லை. பிரதி வசனம் முந்தினதான உஷஸ்த பிரஸ்னத்திற்கு ஜீவாத்மா (பிரத்யகாத்மா) விஷயமாகும் - ஏனெனில் பரமாத்மாவுக்கு பிராணனை செயல்படுத்துவது - அதே மாதிரி அபான வாயுவை செயல்படுத்துவது (பிராணனுடைய செயலாற்றத்துக்கு, பிரதானமாக ஜீவனே இந்தச் செயல்களைச் செய்யத் தகுந்தவன். பரமாத்மாவல்ல. பிராணச் செயல்களைச் செய்யமாட்டான், அதே மாதிரி அபான வாயுவைச் செயல்படுத்துபவன் ஜீவனே யாகும். பரமாத்மா அல்ல.

(அதாவது இங்கே கேள்வி ஸர்வாந்தர:-என்று ஸர்வாந்தர் யாமியாகச் சொல்லியிருப்பது ஜீவனுக்கு எப்படி பொருந்தும்? இதற்குப் பதில்-பஞ்சபூதமயமான சரீரத்தையுடைய ஜீவாத்மா பஞ்ச பூதங்களுக்கும் அந்தர்யாமியாக விருப்பதையிட்டு, இங்கு ஸர்வாந்தரனாகக் கூறப்படுகிறானாகையால் பொருந்தும். இதற்கு ஸர்வாந்தரத்வத்தைக் குறுக்கிக் கொள்ளாமல், ஸர்வாந்தரன் பரமாத்மாவே என்று கொண்டால், இந்த உஷஸ்த கஹோளர் பிரஸ்னங்களின் பிரதி வசனங்கள் (பதில்கள்) ஒட்டாது. உஷஸ்த பிரஸ்னத்தில் பிராணநம் (மூச்சு விடுதல்) அபாநக்ரியை (அபான வாயுவை விடுதல்)-இவை ஜீவனுக்கு சரியாகும் பரமாத்மாவாக ஆக முடியாது. அதே பிரகாரம் கஹோள பிரஸ்னத்தில் பிரதி வசனம் (பசி தாகம் கடந்தவன்) பரமாத்மாவேயாகும். ஆக இப்படி பதில்கள் வேறுபடுவதால்-வித்யைகளின் ரூபங்கள் வேறு, வித்யைகளும் வேறு என்று தேறுகிறது. இங்கே சங்கை இது தான்-अन्तरा भूतग्रामवत्स्वात्मनः-பஞ்ச பூதமயமான சரீரத்தை நியமிக்கும் ஜீவாத்மாவைப் பற்றியதே. अन्यथा-இவ்விதம் கொள்ளாவிடில், भेदानुपपत्तिरिति चेत् - உஷஸ்தகஹோள பிரஸ்னங்களிடையே பதிலில் வேறுபாடு பொருத்தாமல் ஆகிவிடும். (ஆகவே இந்த இரண்டு வித்யைகளும் வேறுபட்டவையே) इति चेत्-என்று சொல்லப்படுமாகில், என்று அர்த்தம். अन्तरा-ஸர்வாந்தரத்வேந பிரதம பிரதி வசனம் (பதில்) भूतग्रामवत्स्वात्मनः ஜீவாத்மாவைப் பற்றியதே. (எப்படி) भूतग्रामवान् (சரீரப்) तदन्तरः स्वात्मा-பிரத்யகாத்மா (ஜீவாத்மாவே) ஸர்வாந்தா: என்று சொல்லப்படலாம்

என்று அர்த்தம். अन्यथा - இவ்விதம் கொள்ளாவிடில் यः प्राणेन प्राणिति, (எவன் பிராணனால் பிராணநம் (மூச்சு விடுதல்) செய்கிறானோ; (அவனே ஸர்வாந்தர்யாமியான உனது ஆத்மா- (ஜீவாத்மா) என்கிற பதில்; योऽशनायापिपासाद्यतीतः எவன பசி தாகம் இவற்றைக் கடந்தவனோ-(அதாவது பரமாத்மா என்கிற பதில்)-இவ்விதம் பிரதிவசனங்களில் பேதம் இருக்கிறது-என்று इति चेत् - சொல்லப்படுமாகில் - अत्रोत्तरं (அவ்விதமில்லை - நாம் சமாதானம் கூறுகிறோம்). नेति-அவ்விதமில்லையென்று (சொல்கிறோம்).

விளக்கம்:-(இங்கு பூர்வபக்ஷியின் அபிப்ராயம்-உஷஸ்தருக்கு ஜீவாத்மாவைப் பற்றியும், கஹோளருக்கு பரமாத்மாவைப் பற்றியும் பிரதிவசனமாக உபதேசம். முதல் பிரஸ்னத்தின் பதிலிலிருந்து அறிகிறான்-ஜீவாத்மா எல்லாத் தேகங்களிலும் இருக்கிறான்-எங்குமிருக்கிறான்-அவனே உயிரை தரிக்கிறான்- நிருபாதிகமாக வில்லாவிடினும் (வ்யவஹாரிகமாக ஏற்படுகிறான்-என அர்த்தம்) ஆதலால் பார்த்தல் கேட்டல் ஆகிற காரியங்களில் வேறுபட்டதாக நினைக்கப்படவேண்டும் என்பது மறுக்கப்படுகிறது-ஏனெனில் ஞானம் என்கிற அறிவு திரவியம் மாத்திரமல்ல, அதனை குணமாகவுடைய ஒரு வ்யக்தியுமிருக்கிறான் (ஞானம் தர்மமாகவிருக்கிறது) கஹோள பிராம்மணத்திலே, அதே பிரஸ்னம் கேட்கப்பட்டாலும், அது கருத்தில் வேறாகவுடையது-அதற்குப் பதிலும் அவ்விதமே யிருக்க வேண்டும்-ஆகவே ஜீவாத்மாவின் தியானம் (வித்யை) உஷஸ்தருக்கும், பரமாத்மாவைப் பற்றிய உபாஸனம் கஹோளருக்கு உபதேசிக்கப்பட்டது-என்கிற அபிப்ராயம் பூர்வபக்ஷிக்கு. இனி சித்தாந்தம் உரைக்கப்படுகிறது.)

अत्रोत्तरं-இதற்கு நாம் பதில் கூறும் नेति-நீ சொல்வது போல அல்ல. அதாவது न विद्याभेदः-வித்யா பேதம் இல்லை என்று அர்த்தம். இரண்டு பதில்களிலும பரமாத்மாவே விஷயமாகிறான். அது எவ்விதம் எனக் காட்டுகிறோம் - यत् साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः நேரடியாக அபரோக்ஷத்தினாலே (சாஸ்திர அறிவினாலே) எவன் எக்காலங்களிலும் காணப்படுகிறானோ, எவன் ஸர்வாந்தர (எல்லா வஸ்துக்களிலும் வசிப்பவனாக - ஆத்மாவாக

விருக்கிருனே.) அவன்தான் கேள்விக்கு விஷயம் அதாவது பரமாத்மாவைப் பற்றியே கேள்வி, அதற்குப் பதிலும் பரமாத்மாவேயாகும் - பரமாத்மா விஷய ஏவ. பிருஹ்ம சப்தத்திற்கு பரமாத்மா என்கிற அர்த்தம் அஸாதாரணமாக விருப்பினும், சில சமயங்களில் அது பிரத்யகாத்மாவையும் (ஜீவனை யும்) ஔபசாரிகமாகக் குறிக்கும்படி பிரயோகிக்கப்படும் (நிஷ் கர்ஷ பிரயோகம்). அந்த ஜீவாத்மாவுக்கு வேருகவுள்ள பரமாத் மாவை அறிவதற்கு (பரமாத்மா ப்ரதி பத்யர்த்தம்)-யஸ்மா ஞாதுர்ஞயா எவன் பிருஹ்மத்தைத் தவிர வேருகவில்லையோ-அவனை (விசே ஷணமாகக்) காட்டியிருக்கிறது. अपरोक्षत्वमपि - என்பதற்கு அர்த் தம்-ஸர்வ தேச ஸர்வகால ஸம்பந்தம் உள்ளது. அது பிருஹ்ம மாகத்தான் இருக்க வேண்டும். (सर्वदा दृश्यमानत्वा भावात् स्वरूपयोग्यतैव वक्तव्या । ... उपकरणं विना धर्मभूतज्ञानमात्रेण भक्तियो- गानन्तरभवेन भगवत्प्रसादेनापरोक्षयो भवतीति साक्षादपरोक्षादित्युच्यत इत्यपि स्यात् । (உத்தமூர் ஸ்வாமி सर्वदा ஸர்வ என்கிறதற்கு ஐந்தாம் வேற்றுமை அர்த்தமில்லை. सर्वाभिधानमिति. सर्वमिदमाह- तथाह्नेति என அர்த்தம்).

அதெப்படியெனில்-தை ஆன. 1-1ல் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म- ஸத்யம் ஞானம் அனந்தம் பிருஹ்மம் என்று பிருஹ்ம ஸ்வரூப லக்ஷணங்கள் ஓதப்படுவதாலே-அபரோக்ஷ த்ருஸ்யத்வம் (காணப் படுதல்) - எல்லா விடங்களிலும் எல்லாக் காலங்களிலும், என்கிற விசேஷணமிருப்பதாலே - பரமாத்மாவைதான் அநந்தம் என்று சொல்லி இவ்விதம் (பிரதி வசனம்) காட்டுகிறது. परमात्मन एव सर्वान्तरत्वमपि - எல்லா வஸ்துக்களிலும் உள் நுழைந்து மேலான நியமனம் செய்தல் பரமாத்மாவுக்கே பொருந்தும். பிரு. மா. यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः என்று ஆரம்பித்து (எவன் பிருத்விக்குள் நின்று கொண்டு-பிருத்விக்குள் இருக் கிருனே-என்று ஆரம்பம்)-यः आत्मनि तिष्ठन (ஆத்மாவில்-அதாவது சேதனத்தில் (ஜீவனுள்) உள்ளேயிருந்து கொண்டு-आत्मनोऽन्तरः ஆத்மாவுக்குள் உள் இருக்கிருனே-அவன் பரமாத்மாவே ஆகும். (பி. 3-7-3-22). இவ்விதம் சுருதி சொல்வதால், ஸர்வாந்தர் யாமி பிரமாத்மா ஒருவனுக்கே முடியும்.

பிரதி வசனமும் (பதிலும்) கூட இவ்விதமாகவே பரமாத்மா விஷயமாக விருக்கிறது. யः प्राणेन प्राणिति - எவன் பிராணனுல் உயிர் தரிக்கும்படி செய்கிருனே-என்று நிருபாதிகமாகவே பிராணனம் (மூச்சு விடும்படி) செய்தல் பரமாத்மாவுக்கேதான் முடியும். (ஜீவன் நினைத்தால் ஒரு க்ஷணம் அவன் உயிர் வாழ முடியுமா? பரமாத்மாவின் ஸங்கல்பம் தான் ஜீவனுக்கு உயிர் நிலையாக விருப்பது). பிரத்யகாத்மா ஸுஷுப்தியவஸ்தையில் (எல்லா இந்திரியங்களும் அடங்கிய சமயத்தில்) பிராணனைத் தரிப்பவனல்ல-காப்பாற்றவில்லை-இதை நன்கு புரிந்துகொள்ளாத உஷஸ்தருக்கு பிரத்யகாத்மாதான் பிராணனைச் செயல்படுத்துகிருன் என்கிற எண்ணம் இருந்ததாலே, (ஜீவனுக்கு செயல்படுத்துதல் நிருபாதிகமாக கிடையாது-பரமாத்மாவின் ஸங்கல்பத்தால் செயல்படுத்துகிருன் என்று அர்த்தம்); இந்த பதிலில் திருப்தி அடையாத கஹோளர் (ஸாதாரணமாக புரிந்து கொள்ளாது-பரமாத்மாவை மனதில் வைத்துக் கொண்டு) யாக்ஞவல்கியரை (மீண்டும்) பிரஸ்நம் அதே கேள்வியால் கேட்டார். पुनः पप्रच्छ - அந்த செயலைச் செய்கிற ஜீவாத்மாவைவிட வேருன பிராணநத்தின் மூச்சு விடுதலில்) கர்த்தாரம்-பரமாத்மாதான் என்று நினைப்பிலே-யாக்ஞயவல்கியரைக் கேள்வி கேட்க, பரமாத்மாதான் நிருபாதிகமாக கர்த்தாரம் (பிராணனை மூச்சு விடும்படி செய்கிருன்)-என்று சொல்வதற்கு न दृष्टेर्द्रष्टारं पश्येः-நீ பார்த்தலைச் செய்யும் பார்க்கிறவனை, நீ பார்க்கிருயில்லை (பிரு. 2. 3-4-2) என்பதால் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் பேதம் சொல்லியதாகும்-(प्रत्यगात्मनो व्यावृत्तं निरुपाधिकत्वेन प्राणस्य कर्तारं परमात्मा). இதன் அர்த்தம் யாதெனில், இந்திரியங்கள் முதலியவற்றின் உதவியால்-எல்லாம் சேஷ்டைகளும் தர்சனம், ஸ்ரவணம், மநநம், விக்ஞானனும்-(அறிதல்) இத்யாதிகளைச் செய்யும் (கர்த்தாரம்) ஜீவனை - இவைகளைச் செயல்படுத்துவது ஜீவன்தான் என்று எண்ணுதே-ஏனெனில் ஸுஷுப்தி மூர்ச்சா அவஸ்தைகளில் ஜீவன் அவைகளை செயல்படுத்துவதில்லையே - அந்த அவஸ்தைகளில் இந்திரியங்கள் எல்லாம் அடங்கிவிட்டிருக்கின்றன. அப்போது பரமாத்மாதான் ஜீவனைத் தாங்குகிருன், என்பது சுருதி ஸித்தம்.

ஜீவனைக் கர்த்தாவாகச் சொல்லாதே என்பது சுருதி ஸித்தம். இது இவ்விதம் ஓதப்படுகிறது-தை. ஆன. 8-1ல் को ह्येवान्यात् कः प्राण्यात्- यदेष आकाश आनन्दो न स्यात्-எல்லா ஜீவர்களுக்கும் பிராணனத்துக் குக்(மூச்சுவிடுதலுக்குக்) காரணமானவன் பரமாத்மாவே (தூங்கும் போது ஜீவனுக்கு பிராணன கர்த்ருத்வம் இல்லை-மற்ற அவஸ்தை களிலும் இல்லை என இதனாலும் தெளிவு)." இந்த ஆகாசம் (இங்கே பரமாத்மா என அர்த்தம். ஆகாச சப்தத்திற்கு) ஆனந்தமாக வில்லையானால், யார்தான் உயிருடன் வாழமுடியும், யார்தான் அனுபவிக்க முடியும்?-என்பதால் ஸர்வ பிராணிகளின் பிராணந (மூச்சு விடுதலின்) ஹேதுத்வம் (காரணம்) பரமாத்மாஹி-பர மாத்மாவேதான் ஆகும் என்று நிச்சயம். ஆகவே முதல் கேள்வி யிலும் (உஷஸ்த பிரஸ்நத்திலே) பரமாத்மாவைப்பற்றியே கேள்வியும்-பதிலுமாகும். (இதனால் இரண்டு வித்யைகளும் வேறல்ல-ஒன்றுதான் என்பது தெளிவாகும்).

ஆகவே பூர்வபிரஸ்ன (உஷஸ்த) பிரதி வசனத்தினால்-பரமாத் மாவே விஷயமாகிறான். இவ்விதம் பதில் பிற்பாடுள்ள பிரஸ்னத் திலும் கிடைத்தபோதிலும், பசி தாகம் முதலியவற்றிற்கு அதீத னை பரமாத்மாதான்-அஸாதாரண லக்ஷணமாகச் சொல்லப்படு கிறான். இரண்டு பதில்களிலும், अतोऽन्यदार्तम् (முடிக்கிறபோது) மற் றவை எல்லாம் துக்கமே-என்று இரண்டிலும் உபஸம்ஹாரத்தில் ஏக (ஒரே மாதிரியான) ரூப: (முடிவு) இருக்கிறது. பிரஸ்நபிரதி வசனங்களை மீண்டும் திரும்பப் படிப்பதால், ஸப்பூர்ண பிராணி களின் பிராணந(மூச்சு விடுதலுக்கு) ஹேதுவாக விருப்பவர் பரமாத்மாவேதான் என்று உறுதிபடுத்துவதற்க்காகவும், அந்த பரமாத்மாவே பசிதாகம் முதலியவைகளுக்கு அதீதன் என்று பிரதி பாதிப்பதற்க்காக எனக் கொள்ளவேண்டும்.

(இங்கே உஷஸ்த கஹோள பிரஸ்நங்களின் விஷயம் பரமாத்மா தான் என்று காட்டப்பட்டது); அவனைத் தியானம் செய்ய வேண் டியது. யாக்ஞவல்கியர் பதிலளிக்கையில் ஜீவாத்மாவே பிராண தாரணம் எல்லாப்பிராணிகளிலும் செய்கிறான்-பிராணன் மூலமாக உயிர்தரிக்கிறான்-என்று சொல்லும்போது, உஷஸ்தரின் மனத்தில் பிராணனைச் செயல்படுத்துபவன்(ஜீவன்)-அவன் ஸர்வாந்தராத்மா

வாக விருக்க முடியாது என்கிற நினைப்பு இருக்கிறது. அதனால் அவர் மீண்டும் யாக்ஞயவல்கியரால்-அவன் பார்க்கிற செயலைச் செய்யும் பார்க்கிறவனாகவில்லை என்று பதில் அளிக்கப்படுகிறார். (न दृष्टे இத்யாதி) - இதிலிருந்து தெரிகிறது - ஜீவாத்மா பார்க்கப்பட வேண்டிய ஆத்மாவுக்கு விதியாக ஆகமாட்டாது. அவன் பார்க்கிற வனாக விருப்பதாய் எது பார்க்கப்படுகிறதோ அதுவாக ஆகாது. மேலும் இதில் சொல்லப்படுகிறது ஜீவாத்மா எவன் இந்திரியங்களின் உதவி கொண்டு பார்த்தல் முதலிய காரியங்களைச் செய்கிறானோ அவன் உயிர்தரிக்கிற விஷயத்தில் கர்த்தாவாகச் செயல்பட முடியாது (ஏனெனில் இது பரமாத்மாவின் சங்கல்ப ஆதீனம்). உஷ்ஸ்தர் திருப்தி யடைந்தார். ஆனால் கஹோளர் திருப்தி அடையாமல் அதே கேள்வியைக் கேட்டார். சில சந்தர்ப்பங் ஜீவாத்மாவே அவனுடைய உயிர் தரிப்பதற்குக் காரணமாகலாம்- அவனே சரீரத்திற்குள் வசிக்கும் எல்லா பிராணிகளுக்கும் அந்தராத்மாவாக ஆகலாம், அவனே பார்க்கிறவனாகவும் பார்த்தலாகிற செயலாகவும் ஆகலாம் அதனால் அவர் மனத்தில் எழுந்த எண்ணம்-பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள வித்யாஸம் சரியாகச் சொல்லப்படவேண்டியது தெளிவாகவும் ஆதாரமாகவும் சொல்லப்படவேண்டியது. அதனால் கஹோளர் அதே கேள்வியைக் கேட்டார்; அதன் பதிலாக பிருஹ்மம் பசி தாகத்திற்கு அதீதம் என்றும் சொல்லப்பட்டது.)

இங்கு சூத்திரக்காரரே ஒரு உதாரணம் கொடுக்கிறார். उपदेशवदिति-ஸத்வித்யையில் ஓதப்பட்ட உபதேசத்தைப் போல (சாந்தோக்யத்தில் ஸத்வித்யையில் ஓதப்பட்டது - उत तमादेश मप्राक्ष्यः-அது மற்ற உபதேசங்களைப் போல விருக்கிறது. உதாரணமாக, ஸத்வித்யையில் - ஸத்தைப்பற்றி இப்படி ஆரம்பமாகிறது. உத்தாலகர் தம் பிள்ளை ஸ்வேதகேதுவைக் கேட்டார்-நீ உன் ஆசார்யரிடமிருந்து ஆதேசத்தை அறிந்து வந்தாயா? என்று ஆரம்பித்து பிரகரண முடிவிலே ஸத் உபதேசம் இப்படி ஓதப்படுகிறது-भगवांस्त्वेव मे तद्ब्रवीत् इति பகவன், நீரே எனக்கு அதை உபதேசிப்பீர்-நீரே அதை என்னிடம் மீண்டும் ஸ்தாபிதம் செய்வீர் (என்கிற கேள்வி) भूय एव मा भगवान् विज्ञापयतु - சொல்லி உபதேசிப்பீர்; என்கிற கேள்விக்குப் பதிலாக அமைந்தது -

एषोऽणिमा ऐतादात्म्यमिदं सर्वं तत् सत्यम्-அவன் மிக சூக்ஷ்ம வடிவமுள்ளவர் (அணிமா); இவை எல்லாம் பிருஹ்மத்தை ஆத்மாவாகவுடையது. அவரே ஸத்யம் (ஸத்தாக விருப்பவர்)-விகாரமடையாதவர்)இந்த பதிலினுலே அடிக்கடி அடிக்கடி ஆவிருத்தி செய்யப்படுவதன்மூலம் பிருஹ்மத்துக்குப் பலவகையான மஹாத்மியங்களை (பெருமைகளை) வெளிப்படுத்துவதற்காக-காணப்படுகிறது-அதைப்போல இங்கும் கொள்வது(तद्वत्)-ஸர்வாந்தரமான (அனைத்தினுள் இருக்கும்) ஒரே பிருஹ்மம் எல்லா உயிர்களும் மூச்சு விடுவதற்குக் காரணமாக விருப்பதும், (सर्वान्तरभूतस्य ब्रह्मणः- कृत्स्नप्राणिप्राणन हेतुता); அதே பிருஹ்மம் अशनायाद्यतीतत्वप्रतिपादनेन रूपैक्यात् विद्यैक्यम् - என்பதாகும். பசிதாகம் முதலானவற்றைக் கடந்ததாகவும் மிருக்கிறது. இதனால் தெளிவது உஷஸ்த கஹோளருடைய பிரஸ்நங்களிரண்டிலும் ரூபம் ஒன்றுதான்-அதுதான் வித்யை ஐக்யமாகும். அதாவது வெவ்வேறு கேள்வி பிரஸ்னங்களாயினும், பதிலில் பரமாத்மாவே விஷயமாதலால், வித்யைகள் ஐக்யம் (ஒன்றுதான் என்பதாகும்.)

மேலும் இவ்விதம் சொல்லப்படலாம். இந்த இரண்டு பிரஸ்நபிரதி வசனங்களிலே பரமாத்மாவே விஷயமானாலும், ஆயினும் இவை இரண்டுக்குமுள்ள வித்யாபேதம் விலக்கப்படாதது. ஒன்றிலே-பரமாத்மா ஸர்வ பிராணிகளும் பிராணந (மூச்சுவிடுதலுக்குக்)ஹேதுவாக (காரணமாக விருப்பதாக) உபாஸிக்கப்பட வேண்டியது. இன்னென்றில் பரமாத்மா பசி தாகம் முதலியவற்றைக் கடந்தவன் என்று உபாஸிக்கப்பட வேண்டும்: இதனால் உபாஸனைகளில் குணபேதம் விருப்பதால், ரூப பேதமும் இருக்கிறது; இந்த ரூபபேதம் ஏற்படுவதற்கு காரணம் கேள்வி கேட்பவர்கள் வேறாக விருக்கிறபடியால் (உஷஸ்தர்-கஹோளர்). இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார்.

**பூர்வ. சூத். व्यतिहारो विशिंषन्ति हीतरवत् *(3-3-36)***

**வ்யதி ஹாரோ விசிஷந்தி ஹீதரவத் ( do )**

வ்யதிஹாரः-உஷஸ்த கஹோளர்-ஆகிய இருவர்களிடமும் அறிவு பரிமாற்றம் (பிரதி வசனத்தை ஒட்டிச் செய்யத்தக்கது).

விஸிம்ஷந்திஹி-இரு வித்யைகளிலும் ஸர்வாந்தர்யாமியான ஒரே பரம் பொருளேயே யாச்ஞயவல்கியர் கூறினர்-அதனல் அவ ருடைய பதில்கள் விசேஷிக்கின்றனவன்றே. இதரவத்-ஸத் வித்யையைப் போல.

இங்கு மீண்டும் பூர்வபக்ஷி ஆட்சேபிக்கிறன். இங்கு வித்யா பேதமில்லே. பிரஸ்ந பிரதி வசனங்களால் காட்டப்படுவது-ஏக ரூபார்த்த விஷயமாக, அதேபடி ரூபார்த்தத்திலும் ஒரே பிருஹ்மம் விஷயமாகிறபடியாலே விதி பதத்திஞல் ஏகவாக்ய முள்ளதாக விருப்பதால், பிரகரணம் ஒன்ருகவே இருக்கிறது. நிச்சயமாக இரண்டு கேள்விகளும் பிருஹ்மத்தைப் பற்றியே உளது-ஸர்வாந்தராத்மா என்கிறகுணவிசிஷ்ட பிருஹ்மம் விஷய மாகிறது. இரண்டாவதான (கஹோளா) பிரஸ்நத்தில் यदेव साक्षादपरोक्षाद् ब्रह्म य आत्मा सर्वान्तरः-அவன் பிருஹ்மமேயாகும். அபரோக்ஷ ஞானத்திஞல் (பிரத்யக்ஷத்திஞலும்) எல்லா இடங் களிலும் எல்லாக் காலங்களிலும் காணப்படுகிருர். அவரே எல் லோருக்கும் உள்ளிருக்கும் அந்தராத்மாவாகிருர். (பிரு.2-3-5 ।) இங்கு ஏவகாரம் (एव) (அதுவே) மாத்திரம் என்கிற அர்த்த முள்ளது. அதனல் கஹோளரின் பிரஸ்நம் ஏற்பட்டது. இதன் நோக்கம் முன்பு உஷஸ்தரால் கேட்கப்பட்டதற்கு-பதில் அளிக்கப் பட்டதே அந்தக் கேள்வி குணவிசிஷ்ட பிருஹ்மத்தையே பற்றிய விஷயமாகும். அதையே உறுதிப்படுத்துவதாகும் இரண்டாவதான கஹோள பிரஸ்நம். இரண்டு பதில்களிலும் பிரதிவசனம் (பதில் स त आत्मा सर्वान्तरः-அவனே உனக்கு ஆத்மா-எவன் ஸர்வ பிராணிகளிலும் உள் வசிக்கிருனே- 'அவனே உனக்கு ஆத்மா'- இவ்விதமாக ஸர்வாந்தர ஆத்மத்வ விசிஷ்ட பிருஹ்ம விஷய மேக ரூப மேவ - 'இரண்டிலும் ஏக ரூபம்தான்'. விதியைக் காட்டும் பிரத்யயம் பிற்பாடுவரும் வாக்யத்தில் இருக்கிறது-तस्माद् ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत् ஆகையால் எவன் வேதத் தைப் படித்து பாண்டித்யம் பெற்று, குழந்தையைப் போல குணங்களுடன் சேர்ந்திருக்கிருனே, அவன் பிருஹ்மத்தை உபா ஸிக்க வேண்டும். (एतं वै तमात्मानमित्यादिवाक्यजातमुभयोर्देश्यकम् । एतं त्वां प्रति उक्तं उषस्तं प्रति उक्तश्चात्मा इति तदर्थः ।) (நிர்வித்ய ப்ராப்ய-பால்யேந) இந்த விதமாக ஸர்வாந்த ராத்ம விசிஷ்ட

பிருஹ்மைக - பிருஹ்மமே இரண்டு கேள்விகள் இரண்டு பிரதி வசனங்களில் விஷயமாவதால், அந்த ஒரே பிருஹ்ம விஷயத்தில் ஒவ்வொருத்தருடைய எண்ணங்களை மாற்றி அமைப்பதால், பரிமாற்றம் செய்வதால் இரண்டு பேர்களுக்கும் ஒரே ஸர்வாந்தராத்மத்வ விசிஷ்ட பிருஹ்மமே உபாஸ்யமாக விருப்பதாலே, உஷஸ்தகஹோள விஷயங்களை பரஸ்பரம் வ்யதிஹாரம் (மாற்றிக் கொள்ளுதல்) செய்ய வேண்டியது (இங்கு வயதிஹாரः - स्वकीय-स्यार्पणेनान्यदीयस्य ग्रहणम् । नायं व्यतिहारो गुणोपसंहाररूपः । किंतु उपासनपूर्वभावितयापास्य वस्तु विषयविशद निश्चयार्थः इत्याह एवमिति ।

அதாவது உஷஸ்தரின் அந்தரங்க அபிப்ராயம் பிருஹ்மத்தை பற்றியது - அந்த பிருஹ்மமே ஸர்வாந்தராத்மா அவரே ஸர்வ பிராணிகளின் உயிருடன் வாழ்வதற்கும் உயிர்தரிப்பதற்கும் முக்ய காரணமாக விருப்பவர், இதை கஹோளர் பிரஸ்னம் செய்வதற்கு முன்பு நினைத்திருக்கவேண்டும். கஹோளரின் அந்த அபிப்ராயம் - பசிதாகம் முதலியவற்றைக் கடந்தவன் - என்கிற விஷயம் அதே உஷஸ்தராலும் நினைக்கப்படவேண்டியது. (இவ் விதம் பரிமாற்றம் பரஸ்பரம் செய்து கொள்வதால், வித்யைப் பற்றிய விஷயங்களும், பிருஹ்மத்தைப்பற்றிய குணங்களும் ஸமானமாகும். (सा कहोलेनापि पृष्टा कार्या । सा उपस्ते नापि कार्या- இவ்விதம் வியதிஹாரம் செய்வதால் பரிமாற்றம் (Transfer) செய்வதால் - இந்த அறிவுபரிமாற்றம் (பதிலை ஒட்டிச்செய்யத் தக்கது) - (ஏனெனில் இரண்டு வித்யைகளிலும் ஸர்வாந்தர்யாமியான ஒரே பிருஹ்மமே யாக்ஞ்யவல்கியரின் இரண்டு பதில் களிலும் காணப்படுகிறது.)

(இதனால் ஸித்திப்பது யாது). ஸர்வாந்தர்யாமியான பிருஹ்மத்துக்கு ஸர்வபிராணி பிராணந ஹேதுத்வத்தைப் பற்றிய உஷஸ்தருடைய அறிவுயாதொன்று உண்டோ, அது இரண்டாவது பிரஸ்னத்தில் கஹோளருக்கும் உள்ளதாகக் கொள்ள வேண்டும். அந்த பிருஹ்மத்துக்கே பசிதாகம் முதலியவற்றை அதீதனாக விருப்பது- இது பற்றிய கஹோளருடைய அறிவுயாதொன்று உண்டோ, அது முதல் பிரஸ்னத்தில் உஷஸ்தருக்கும் உள்ளதாகக் கொள்ளவேண்டும். இப்படி அறிவு பரிமாற்றம்

செய்யப்படின் - இருவராலும் ஸர்வாந்தர்யாமியான பிருஹ்மம் ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டது என்று அறியப்பட்டதாகும். இதனால் பிருஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் (ஸர்வாந்தரத்வம் ஸர்வ பிராணந ஹேதுத்வம்) பேதம் காட்டப்பட்டதாகும். பசிதாகம் அதீதம்-என்பது ஸர்வந்தராத்வத்தை அனுவாதம் செய்வதாகும். ஸர்வாந்தராத்மத்வம் உபாஸ்யகுணமாகும், ஆக இரண்டிலும் ரூபபேதமில்லை. வித்யை ஐக்யமே பேசப்படுகிறது)]இப்படி வ்யதி ஹாரம் செய்வதால், இரண்டு வித்யைகளுக்கும் ஸர்வாந்தராத்ம பிருஹ்மமே-ஜீவனைவிட வேறுபட்டது (வ்யாவிருத்தி;) என்பது ஸித்திக்கிறது.

இந்த விதமாக ஸ்ர்வாந்தர ஆத்மா - பரபிருஹ்மம் பிரத்ய காத்மாவை விட வேறானது - என்று காட்டுவதற்கு, ஸர்வ பிராணி பிராணந (மூச்சு விடுதலுக்கு) ஹேதுவாக விருப்பதும், பசிதாகம் முதலியவற்றைக் கடந்திருப்பதும்-ஆகிய விஷயங்களைப் பிருஹ்மத்திற்கு பிரதிபாதனம் செய்வதால், विशिष्यन्ते हि-நிச்சயிக் கப்படுகிறது. (எது ஜீவபிருஹ்ம பேதம்-ஒரே பரம் பொருளையே யாக்ஞ்யுவல் கியரின் பதில்கள் விசேஷிக்கின்றன) இந்த பெருமை களை பிருஹ்மத்திற்கு (ஸ்ர்வாந்தராத்மத்வம்) ஒரு அந்த பிருஹ்மம் ஜீவாத்மாவைவிட வேறானது-என்றும் காட்டி-யாக்ஞ்ய வல்கியரின் பிரதி வசனங்கள் ஒரே பரம் பொருளின் குணமகி மைகளாக ஸர்வாந்தராத்மத்வம்-பசி தாகம் இதியாதிகளை கடந் தவன்-என்று நிருபாதிகமாகவே பிருஹ்மத்திற்குக்காட்டி, ஜீவ பிருஹ்ம பேதத்தை உறுதிபடுத்துகிறது. ஆகையால் பிருஹ்மமே ஸர்வாந்தராத்மகத்வம் என்பதே பிருஹ்மத்தின் உபாஸ்யகுண மாகும். பிராணந (மூச்சு விடுதலுக்குக்) ஹேதுவாக (காரணமாக) விருப்பதும்-இந்த குணங்கள் உபபாதகா:-ந உபாஸ்யா: (விளக்கம் கொடுப்பதே அதனால் உபாஸ்யகுணங்களாகமாட்டா).

மேலும் ஆட்சேபிக்கப்படும்-உபாஸ்யகுணம் ஸர்வாந்தராத் மத்வம் என்பதே ஆகுமானால் (एव)- எதற்க்காக கேள்விகேட்பவர் களால் இந்த குணங்களின் பர்மாற்றம் செய்து கொள்வது (பிராண ஹேதுத்வம்-அசநாயாதி அதீதத்வம் (பசிதாகம் முதலிய வற்றை கடந்திருப்பது) இந்த பரிமாற்றப்பட்ட குணங்களை அனு ஸந்தானம் செய்வது-எதற்க்காக ஏன் செய்ய வேண்டும்? எனக

கேள்வி எழும். இதற்கு நாம் பதில் கூறுவோம்-'ஸர்வபிராணிகளின் மூச்சுவிடுதலுக்கு ப்ராண ஹேதுவாக இருப்பதும், ஸர்வாந்தராத்மத்வம் இவைகளால் ஜீவாத்மாவைவிட வேறுபட்டது பிருஹ்மம், அத்தகைய மகிமைகளை உடையதாக பிருஹமம், உஷஸ்தரால் எண்ணப்பட்டதால்-ஜீவனைவிட வேருனதாகும். அவ்விதம் செய்வதாலே, ஜீவனுக்கு ஸர்வாந்தராத்மத்வம் ஸ்வாபாவ விசேஷமாகவே சம்பவிக்கமாட்டாது-என்பதை அனுஸந்திப்பதால மறுபடியும் கஹோளரால் அதே கேள்வி கேட்கப்பட்டது. (அனுஸந்தானம் எதற்கு-வைலக்ஷண்ய ஞானத்திற்குப்பதில்)-இரண்டிலும் ஸர்வாந்தராத்மத்வம் பொதுவானது); யாக்ஞ்யவல்கியரும் கஹோளரின் அபிப்ராயத்தை அறிந்துகொண்டு,பதிலளிக்கையில் கஹோளருக்கு பிருஹ்மம் பசிதாகத்தைக்கடந்தது - இந்த விஷயம் ஜீவாத்மாவுக்கு ஸ்வபாவமாகவே (நிருபாதிகமாகவே) ஏற்படாது. இந்தக் காரணத்திஞலும்கூட, (கஹோளர பிரஸ்னம் முன்பு சொன்னதை அதாவது வித்யாஸத்தை உறுதிபடுத்தி-தெளிவாக்க நினைப்பதால், இவ்விதமாக வ்யதிஹாரம் (அறுவு பரிமாற்றம்) செய்வது இரண்டு பேர்களுக்கும் செய்யவேண்டியதாகும் எனக் காட்டப்பட்டது-அதுசரிதான் என்று முடிவு கட்டப்பட்டது. யாக்ஞபவல்கியர் இந்த அபிப்ராயங்களை மனத்திற்கொண்டு பிரத்யகாத்மாவுக்கு நிருபாதிகமாக பசி தாகம் முதலியவற்றை கடந்திருத்தல்-அஸம்பாவிதமாகையால், பிருஹ்மம் ஜீவனைவிட வேருனது என்றும் காட்டப்பட்டது. ஆகையால் உபாஸ்ய பொருளான பிருஹ்மம் ஜீவாத்மாவைவிட வேருனது-இதை நன்கு விளக்குவதற்கு இம் மாதிரியான வேற்றுமை படுத்தும் குணங்களைச் சொல்லி, உறுதி படுத்துவதால், இப்படி பரஸ்பர புத்தி (அறிவு) வ்யதிஹாரம் கர்த்தவ்ய:-செய்யத் தகுந்ததேயாகும்.

(இங்கு சொல்லப்படுவது-ஜீவனுக்கும் (உபாஸகன்) பிருஹ்மத்துக்கும் (உபாஸ்யம்) இரண்டுக்குமுள்ள வைலக்ஷண்யம்-பல விஷயங்களில் இரண்டுக்கும் பேதங்கள் இருக்கின்றன. அதஞல் கஹோள பிரஸ்னத்தின் பதிலிஞல் லாபத்தை உஷஸ்தரும், உஷஸ்தருடைய கேள்வி பதில்களிலிருந்து கஹோளர் அடைவதும் தெரியவரும். 2. மேலிருந்து பார்ப்பவர்களுக்கு (அதாவது பூர்வபக்ஷிக்கு) இரண்டு வெவ்வேருன வ்யக்திகள் கேள்விகேட்ப

வர்கள்-இதனுல் இரண்டு வெவ்வேருன வித்யைகள் வெவ்வேறு நோக்கத்தாலே கேட்கப்பட்டதாகும் எனத் தோன்றும். இது தவருகும். இரண்டிலும் ஒரே பிருஹ்மத்தைப்பற்றிய வித்யையே பேசப்படுகிறது. உதாரணமாக வைஸ்வநர வித்யையில் ஆறு பேர்கள் (நிஷ்டர்களாக) உபாஸகர்களாகச் சொல்லப்படு கிருர்கள்).

इतरवत् - வேறிடத்தில் சொல்லப்பட்ட ஸத்வித்யையைப் போல. இந்த ஸத்வித்யையில் அடிக்கடி அடிக்கடி கேள்விகள் கேட்கப்பட்டு-அதற்குப் பதில்களிலிருந்து அந்த பிருஹ்மமே (तदेव सद्ब्रह्म) ஜீவனிலிருந்து வேறுபடுத்திக் காட்டப்பட்டது. (வ்யவசித்யதே-வேறுபடுத்திக் காட்டி - न हि प्रतिवचनानि जीवादिभ्यो वृत्ततया सदन्तरं बोधयन्ति हि; यथा गौतमवाक्यानि सद्विद्यायां सदेक मेव विशिंषन्तीति) ஸத் எனப்படும் பிருஹ்மம் பிரத்யகாத்மாவிலிருந்து வேறுபட்டது; ஆனுல் அங்கு ஓதப்படவில்லை-பரமாத்யா ஒரு குணவிசேஷத்துடன் கூடியதாகவும்-அந்த குணம் அந்த பிருஹ்மத்துக்கு முன்பு கூறப்பட்ட அதே பிரகரண வாக்யத்திலே எது அறியப்பட்டதோ-அதைவிட வேருனதாக விருக்கிற அந்த குண விசிஷ்ட பி ரு ஹ் ம ம் உபாஸிக்கப்பட வேண்டியது - இங்கே அது போலவே விஷயம் ஒன்ருக விருக்கிறது.

ஆயினும் பிரஸ்ந பிரதிவசன பேதத்தாலே, கேள்வி கேட்கப் படலாம்-எப்படி வித்யை ஐக்யம் (ஏக வித்யைதான்) யேற்படு கிறது-அதற்கு சூத்ரக்காரரே பதிலளிக்கிருர்.

ஸி. சூ. सैव हि सत्यादयः (3-3-37)

ஸைவ ஹி ஸத்யாதயஃ ( do )

ஸா ஏவ ஹி-ஸத்வித்யையில் ஓதப்பெற்ற ஸேயம் தேவதா ஐக்ஷத (சா. 2.6-3-2ல்) அத்தகைய இந்த தேவதையே (பிருஹ்மமே) சங்கல்பித்தது-என்பது ஸத்யாதயஃ (ஹி) எல்லாப் பதில்களிலும் (தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி-(சா. 2 6-8-7) என்று ஸத்யம் முதலானவையன்ருே (உபஸம்ஹாரத்தில் ஓதப்

படுகின்றன). (இங்கே ஸத்வித்யையில் உபாஸிக்கத்தக்க பிருஹ்மம் ஒன்றே என்று எப்படி அறிவது - என்கிற ஐயம் தவிர்க்கப்படுகிறது) सैवहि - ஸத்வித்யையில் ஜகத்திற்குப் பரம காரணமாக விருக்கும் பிருஹ்மமே (परा देवतैव) காட்டப்படு கிறதே - அதுவே விஷயமாக இந்த சுருதிகளிலிருந்து தெரிய வருகிறது - சா. 2. 6-3-1ல் सेयंदेवतैक्षत - அந்த தேவதையே சங்கல்பித்தது: சா. 2. 6-8-6ல் तेजः परस्यां देवतायाम् - (தேஜஸ்-பூத சூக்ஷ்மங்களுடன் கூடிய ஆத்மா மரணகாலத்தில் ஒடுங்கி-பரமாத்மாவிடம் லயமடைகிறது) சா. 2. 6-9-1ல்) यथा सोम्य मधु मधुकृतो निस्तिष्ठन्ति எவ்விதம் தேனீக்கள் தேனே உண்டாக்கு கிறதோ-என்று பாடம் ஆரம்பித்து-வரிசைக்கிரமமாக ஓதப்பட்டு கடைசியில் பாடம் ஓதுகிறது - பர்யாயங்களில் எல்லாம் காட்டப் படுகிறது- हि?)यत (சா. 2. 6-8-7ல்) ऐतदात्म्यमिदं सर्वं तत् सत्यं स आत्मा - இந்த இவை எல்லாம் பிருஹ்மத்தை ஆத்மாவாக வுடையது. அதுவே ஸத்யம் அதுவே ஆத்மாவாக (பரமாத்மா வாக) விருக்கிறது-

(இங்கே படிப்படியாக ஓதப்பட்டு-பரமாத்மாவில் முடிவடை கிறது-பல கேள்விகள் கேட்கப்பட்டு, உபதேசம் ஆரம்பமாகி-ஒவ்வொன்றிலும் உபாஸ்யமான தெய்வம் ஜகத்திற்குப் பரம காரணமான பொருள் என்று உபதேசிக்கப்பட்டு, அதன் குணங்க ளாகிற விகாரமற்றது-सत्यम् பரமார்த்மானது-அதுவே எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவாக விருக்கிறது-அதுவே ஒவ்வொரு பொருளிலும் உள் நுழைந்து அந்தர்யாமியாக விருந்துகொண்டு-யாவற்றையும் நியமிக்கிறது (இவ்விதம் பல தடவைகள் உபதேசிக்கப்படுகிறது).

சில பேர்கள் (அத்வைதிகள்) - சொல்கின்றனர் - व्यतिहारो विशिषन्ति हीतरवत् - அறிவு பரிமாற்றம் செய்ய வேண்டியது-யாக்ஞவல்கியரின் பிரதிவசனங்கள் (பதில்கள்) ஒரே ஒரு பிருஹ் மத்தைக் குறிப்பிடுகின்றன. அந்த பரமாத்மாவே सैवहि सत्यादयः ஸத்வித்யை முதலியவற்றின் விஷயமாகும்-என்று கூறி-இரண்டு சூத்ரங்கள் கூறி - இதனால் இரண்டு அதிகரணங்களை வர்ணிக் கிறார்கள். (வ்யத்ஹாராதி கரணம்-அந்தராதிகரணம் என்றும்;

ஸத்தியாத்யதிகரணம் என்றும் வ்யதிஹாரோ விசிம்ஷந்திஹி இதரவத்-என்று இரு சூத்ரங்களைப் படிக்கிறார்கள்.)

(சங்கர பாஷ்யம் விளக்கம்:-மஹத்யக்ஷம் ப்ரத மஜம் வேத என்கிற வாக்யத்திலும், ஸ ஆதித்யோ யஏஷ ஏதஸ்மிந் மண்டலே புருஷ:-என்கிற வாக்யத்திலும், இரண்டு ஸத்திய வித்யைகள் சொல்லப்படுகின்றனவா-அல்லது ஒன்றா? லோக பிராப்தியும் பாப நிவிருத்தியும் தனியாகச் சொல்லியிருப்பதிலிருந்து பல பேதம் இருப்பதால் அவை இரண்டு வித்யைகள் என்பது பூர்வ பக்ஷம். ஆதித்ய வாக்யத்தில் தொடர்ந்து வரும் பொருளைக் கூறும் தத்யத்தத்-என்ற தாதி ஸர்வநாம சப்தங்களால் தொடர்ந்த பொருள் ஒன்றே சொல்லப்படுவதால், வித்யை ஐக்யம் (ஒன்றுதான்). அங்கத்தில் கூறப்படும் பயன் அர்த்த வாதமாகும்-என்றபடி பாப நிவிருத்தியைச் சொன்னது அங்க ஞானத்தின் பலனுகையால் அர்த்தவாதமாகும்.அல்லது அதிகாரத்தைக் கல்பிப்பது பற்றி-பாப நிவிருத்தியானது முக்யமாகவும் ஆகலாம் (சித்தாந்தம்).

ஸ்ரீபாஷ்யம்;- அங்கே (ஸத்த்யாத்யதிகரணத்தில்) அவர்கள் ஓதுவது-(ஜாபா.) त्वं वा अहमस्मि भगवो देवते अहं वै त्वमसि भगवो देवते-பகவானே-நீராகவே நானிருக்கிறேன். நானுகவே நீர் இருக்கிறீர் என ஜாபாலர்கள் படிக்கிறார்கள் (விசிம்ஷிந்திஹி-ந்யாகநான் இருக்கிறேன். நானுக நீர் இருக்கிறீர் என ஜீவ ஈஸ்வரர்களுக்கு விசேஷண விசேஷ்பாவம் கொடுத்துக் கூறுகின்றன). ஐத். ஆ. 1-1-4ல் तद्योऽहं सोऽसौ, योऽसौ सोऽहम्-யாதொரு நான் உண்டோ-அவர் இவரே யாதொரு இவர் உண்டோ, அவரே நான்-என்பதாய் ஆதித்ய மண்டலாபிமானி புருஷனைச் சொல்லத் தொடங்குகிறார்கள். ஜீவ பரமாத்மாவை வ்யதிஹார அனுஸந்தானம் காட்டப்பட்டு-இப்படி ஓதுகிறது. (இதைப் போல உஷஸ்தகஹோளா கேள்விகளுக்கு உத்தரங்களாக விருந்த யாக்ஞயவல்கியரின் பதில்கள்-ஒரே பிருஹ்மத்தைக் குறிக்கின்றன - அந்த ஸத் வித்யையில், பரமாத்மாவே விஷயமாகும்-அவருக்கு ஸத்யம்-இன்னும் சில கல்யாண குணங்கள் ஓதப்பட்டிருக்கின்றன. (இதற்கு இரண்டு அதிகரணங்களாக சங்கரர் சொல்கிறார்). அவர்கள் சொல்கிறார்கள் ஜீவ பரமாத்மாக்களின் உபாஸநத்தை பரிமாற்றம் செய்து -

அதுவே இந்த சுருதிகளுக்கு விஷ்யமாகிறது-तत् (அது)-சா. 2 3-14-1ல் सर्वं खल्विदं ब्रह्म இவை எல்லாம் பிருஹ்மத்திலுல் உண்டாக்கப்பட்டவையன்றோ? சா. 2. 6-16-3ல் ऐतदात्म्यमिदं सर्वं तत्त्वमसि-இவை எல்லாம் பிருஹ்மத்தை ஆத்மாவாகக் கொண்டவை. நீ பிருஹ்மமாகவே யிருக்கிறாய்! இப்படி தீர்மானிக்கப்படுகிறது - ஸர்வ ஆத்மபாவ விஷயத்வாத்-(அதைக் காட்டும் வாக்யத்திலுல்) ஆகவே இங்கு புதிதாகச் சொல்லப்பட வேண்டியது ஒன்றுமில்லை-அதுவே உபதேசத்திற்கு விஷயமாக வேண்டியது என்பதாகும்-என்கிற இந்த அபிப்ராயம் சரியானதல்ல-தள்ளப்பட வேண்டியதாகும்-பூர்வமேவ அஸ்தீதி முன்பே யிருக்கிறபடியால்)-அதற்கு பிற்பாடு சமாதானம் சொல்லப்படுகிறது-சா. 2. 4-1-3ல் आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च-ஜாபாலர்கள் பரமாத்மாவை ஆத்மாவென்று உபாஸிக்கிறார்கள். சுருதிகளும் அவ்விதமே நம்மை அறியும்படி ஓதுகின்றன. (சூத் 4-1-3) (பிருஹ்மத்தை உபாஸகனுடைய ஆத்மாவாக எண்ணி உபாஸிக்க வேண்டும். மேலும் பிருஹ்மத்தை ஸர்வாத் மத்வானு ஸந்தானம்-அதைத் தவிர்த்து-பிருஹ்மத்தை ஜீவாத்மாவாக நினைத்து உபாஸிப்பது-அதே மாதிரி ஜீவாத்மாவிடத்தில் பரமாத்மாவாக நினைத்து உபாஸிப்பது அது ஸத்யமாகாது. (பிருஹ்மணி ஜீவாத்மா அனுஸந்தானம் - அதேபோல ஜீவே பரபிருஹ்ம அனுஸந்தானம் தத்யம் ஸம்பவதி-இங்கு தத்யம்-அபாதித விஷயகம்).

(இங்கு நாம் சித்தாந்தமாகக் கூறுவது சூத் 4-1-3ல் எல்லா சப்தங்களும் பரமாத்மாவையே குறிக்கின்றன. ஆகவே பிரத்யகாத்மாவின் ஆத்மாவுக்குள் அந்தர்யாமியாக விருக்கும் பரமாத்மாவை-ஜீவாத்மாவிலிருந்து வேறுபட்ட பரம்பொருளை-தான் சரீரமாகவும் பரமாத்மா அதற்கு ஆத்மாவாகவும் உபாஸிக்கப்பட வேண்டும்—(சரீர ஆத்ம பாவத்திலுல்) அதனாலே இவ்விதமின்றி மேல் சொல்லியபடி பரமாத்மாவை ஜீவாத்மாவாகவும் ஜீவனை பரபிருஹ்ம அனுஸந்தானம் செய்வது சரியாகாது-என்பதாம்).

பிற்பாடு வரும் சூத்ரத்திலே, ஸத்வித்யைகளுள் ஐக்யம் இந்த சுருதிகளின்படியிருக்கிறதாகச் சொல்லப்படுகிறது-பிரு. 2. 5-4-1ல் स यो हैतन्महद् यक्षं प्रथमजं वेद सत्यं ब्रह्म - इति - जयतीमान् लोकान् - எவன் இந்த ஹ்ருதயத்தில் உபாஸிக்கிருனே - மஹத் (பெரியது) என்றும், யக்ஷம் (தேவன்) என்றும், முதலில் உண்டானவன் என்றும் - விகாரமற்றவன் என்றும், ப்ருஹ்மம் என்றும் இத்யாதிகளால் ஸத்ய உபாஸனை சொல்லப்பட்டதாகும். பிரு. 2.5-5-1ல் तद्यत् सत्यम् असौ स आदित्यो य एष एतस्मिन् मण्डले पुरुषः यश्चायं दक्षिणेऽक्षन् - அத்தகைய யாதொரு அந்த ஸத்யம் உண்டோ, இவன் அந்த ஆதித்யனே, அதாவது இந்த மண்டலத்தில் யாதொரு புருஷன் உண்டோ, இவனே அவனுக்கு அஹர் என்கிற ரகஸ்ய நாமமாகும். எவன் இவ்விதம் உபாஸிக்கிருனே-என்றவிடத்திலும் வலது கண்ணில் யாதொரு புருஷன் உண்டோ அவனுக்கு அஹம் என்கிற ரகஸ்ய நாமமாகும். எவன் இவ்விதம் உபாஸிக்கிருனே, அவன் பாபத்தை நாசம் செய்கிருன்.- இத்யாதி வாக்யங்களால் காட்டப்படும் உபாஸன ஐக்யம் (ஒரே வித்யைதான்) பிரதிபாதிக்கப்படுகிறது என்பதாகும். (நாம் பதிலளிப்பது)-இவ்விதம் சொல்வது சரியாகாது ஏனெனில் உத்தர வாக்யத்திலே அக்ஷி முதலானவைகளால் ஏற்படும் ஸ்தான பேதத்தினுல் வித்யாபேதம் ஏற்பட்டிருக்கிறது. இந்த விஷயம் பூர்வமேவ ஸ்தாபிதம்-சார். மீ. 3-3-21ல் न वा विशेषात् ரூபம் வேறு படுகையால் வித்யாபேதமே. அஹ: அஹம் என்னும் பெயர்கள் அந்தந்தவித்யைகளுக்கு மாத்திரம் உரியவையல்ல, இரண்டிலுமே சேர்த்துக் கொள்ளத்தக்கவையே-என்கிற அபிப்ராயம் சரியில்லை. சித்தாந்தம் வித்யைகள் இரண்டும் ஒன்ருகையால், அஹ: அஹம் என்கிற நாமங்களை இரண்டிலும் சேர்த்துக் கொள்ள வேண்டியதே என்பது தவறு. ரூபபேதம் ஸ்தான பேதத்தால் ஏற்படுகிறது அதனுல் வித்யை வேருகிறது என்பதாகும்).

**விளக்கம் :—**

இந்த இரண்டு வித சுருதிவாக்யங்களிலே - (பிரு. உ. 5-4; பிரு. உ. 5-5) இரண்டு வித்யைகள் இருக்கின்றன. இவைகளில் வ்யாஹ்ருதி சரீரத்தினுல் ரூபம் (விஷயமாக) கொண்டதாக ஆகின்றன. हन्ति पाप्मानं जहाति च य एवं वेद - (பிரு. உ. எவன்

இவ்விதம் உபாஸிக்கிறுனே. அவன் பாபத்தைக்கொல்கிறுன் சரீரத்தைத்தியாகம் செய்கிறுன்) என்கிற வாக்யத்திஞல் இரண்டு வித்யைகள் - இரண்டுக்கும் பலபேதம்-விதிகளும் வேருக விருக் கின்றன-ஆகவே இந்த இரண்டு ஸத்திய வித்யைகளும் வேருக விருக்கின்றன; பிரு.உ. 5-4-1ல் स यो हैतन्महद्यक्षं प्रथमजं वेद सत्यम् ब्रह्मेति जयतिमान् लोकान्- எவன் தன் ஹ்ருதயத்தை மஹத் என்றும் ப்ரியாதைக்கு உரியது என்றும், முதலில் பிறந்தது என்றும் மாருத தாகவும்-அநந்தமாக விருக்கிறது-என்று உபாஸிக்கிறுனே-அவன் இந்த உலகங்களை ஜயிக்கிறுன்-என்பதால் இரண்டு வித்யைகளும் வேருக விருக்கின்றன - பல பேதம் இருப்பதால். அவைகளுக்கு தனித்தனிபலன் - விதிகள் இத்யாதிகளால் ஏற்படுவது (இங்கு கூறப்படுவது - 36, 37 சூத்ரங்கள் சங்கரரின்படி தனித்தனியான இரண்டு அதிகரணங்களாகும். ராமானுஜர் இந்த கருத்து வேற்று மையைச் சொல்லி-தன்பக்ஷத்திற்குக் காரணங்களைச்சொல்கிறுர்.)

(ராமானுஜர் சொல்வது) ஸ்ரீ பாஷ்யம்:- न அவ்விதம் சொல் லக்கூடாது. இந்த வாக்யம் हन्ति पाप्मानं जहाति அவன்பாபத்தைச் கொல்கிறுன் சரீரத்தை விடுகிறுன்-இக்குண பலாதிகாரத்வத்தைச் சொல்கிறது -(அப்ரதானபலன்). (அதாவது மூன்று வித்யைகள் தனித்தனியாகக் கொள்ள வேண்டும். பலன் வேருகவிருப்பதால் தனித்தனியே). प्रमाणम् இல்லாத படியாலே. அதாவது மேல் சொல்லப்பட்ட சுருதி வித்யையின் அங்கத்தின் பலன்களைச் சொல்கிறது. ஏனெனில் அதற்கு வேறு ஒரு காரணமும் இல்லை. சரி-இந்த வித்யைகள் ஒன்றுதான் என்று முந்தியே சொல்லப் பட்டது என்ருல் - அதுவும் சரியாகாது, ஏனெனில் ஒன்றை யொன்று ஆஸ்ரயம் செய்வதாகிற தோஷம்யேற்படும். எப்போது இரண்டு வித்யைகளை ஒரே வித்யையாக நிச்சயமாகச் சொல்லப் படுமாகில், முந்தின வித்யையின் பலன் பிரதானமாகும் (முக்கிய மாகும்). ஆகவே பின்னல் ஓதப்படும் வித்யைகள் (பாபங்களைக் சொல்வது-சரீரத்தை விடுவது) இவை வித்யா அங்கத்தின் பலனுகும். இந்த இவை இரண்டும் வித்யா அங்கத்தின் பலன்களாக நிச்சயிக்கபடுமானல், அப்போது அவை பிரதான பலத்துடன் வேருகவிருக்க முடியாது - (फलयोर्गुणफलत्वम्) (குணம்-அப்ரதா னபலன்); அவைகளை வித்யா அங்கங்களின் பலன்களாக

நிச்சயிக்கப்படுமாகில், அப்போது संयोग भेदाभावात् முக்ய பலனின் சேர்க்கையிலிருந்து வேறாக விருக்க முடியாத படியாலே, முந்தின வித்யையுடன் ஐக்யம் (ஒன்றாக விருக்கும்) யேற்படும். இவ்விதமாக அன்யோன்ய ஆஸ்ரய தோஷம் ஏற்படுவதாகும். இந்த விதமாக, இந்தக் காரணங்களாலே, இந்த இரண்டு சூத்ரங்களும் நாம் சொல்லியபடியே அறிந்து கொள்ளப்படவேண்டும்.

(இங்கு கூறப்பட்டது-பலபேதத்தாலே-சங்கரர் வேறுவிதமாக எண்ணுகிறார். பிரு. உ. ஓதப்பட்ட பலன் (பிரு. 2-5-5) புகழ் சொற்களால் சத்யத்தின் ரஹஸ்ய நாமாக்களை ஓதுவதாகும். மேலும் பலன்களை அர்த்தவாதத்தில் தேடப்படுமாகில் (ஏனெனில் அந்த வித்யை நிஷ்டர்களைப்பற்றிச் சொல்லப்படாததாலே - ) வித்யையின் அங்கங்களுக்கு ஓதப்படும் பலன்களை ஸமுச்சயமாகச் சேர்த்துச் சொல்லப்படவேண்டும். இதனால் ராமானுஜருக்கு சங்கர பக்ஷத்தில் வாதாட இன்னொரு வாதமும் கிடைத்தது).

(Prof. M. Rangacharya - Sri Bhashya.)

(அந்தரத்வாதி கரணம் முடிவுபெற்றது)

### காமத்யதிகரணம் (3-3-16)

ஸ்ரீ. சூ. कामादीतरत्र तत्र चायतनादिभ्यः (3-3-38)

காமாதீதரத்ரதத்ர சாயதநாதிப்ய: ( do )

காமாதி இதரத்ர தத்ரச-(பிருஹதாரண்யகத்திலும் சாந்தோக்யத்திலும் ஸத்யகாமத்வம் முதலானவையே ரூபமாகும். (ஏனெனில்) ஆயதநாதிப்யः-ஹ்ருதயத்தை இருப்பிடமாகக் கொண்டிருப்பது-ஸத்யஸங்கல்பத்வத்தின் விசேஷமான வஸித்வம் முதலானவற்றால் அவற்றோடுகூடப் படிக்கப்படும் ஸத்யகாமத்வம் முதலானவை ஞாபகப்படுத்தப்படுவதால் - (இங்கு தஹரவித்யை பிருஹதாரண்யகத்திலும்-சாந்தோக்யத்திலும் ஓதப்பட்டாலும்-சோதநா - ரூபம் - ஸம்யோகம் - ஆக்யா - இவைகளில் வேறுபடாமலிருப்பதால், இரண்டு இடங்களில் படிக்கப்படும் தஹர வித்யை வேறுபடாமல் ஒன்றேயாகும் எனக்கொள்ளவேண்டியது).

அவதாரிகை-விசேஷ்யம் வேறுபடாத இடங்களில் வித்யைகள் ஒன்றே என்று முன் அதிகரணத்தில் ஸ்தாபிதம். அப்படியானால் விசேஷ்யம் வேறுபடுமிடத்தில் வித்யைகள் வெவ்வேறு என்றே கொள்ளவேண்டும் என்கிற நியமம் (ஐயம்) இங்கு தள்ளப்படுகிறது.

சாந். 2. 8-1-1-ல் ஓதப்பட்டிருக்கிறது-अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीक वेश्म दहरोऽस्मिन्नन्तराकाशः तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यम् – इत्यादि-இப்போது, இந்த பிருஹ்மபுரத்திலே (அதாவது சரீரத்திலே) தாமரை பூவை ஒத்த சிறியதான (ஹ்ருதய( மிருக்கிறது. அந்த ஹ்ருதயத்தினுள்ளே சூக்ஷ்மமான ஆகாசம்-அந்த சூக்ஷ்மமான ஆகாசத்தினுள்ளே யிருப்பதான ஒன்றை (அதாவது பிருஹ்மத்தை) தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். பிரு. 2. வாஜஸேநயத்தில் பிரு 6-4-12ல் स वा एष महानज आत्मा योऽयं विज्ञानमयः प्राणेषु य एषोऽन्तर्हृदय आकाशः, तस्मिञ्छेते सर्वस्य वशी सर्वस्येशान.-வாஸ்தவமாகவே அவன்-அந்த மஹாந்-அவரே பிறப்பில்லாதவர்-எவர் இந்திரியங்களுக்குள்ளே விக்ஞானமயனாக விருக்கிறாரோ, எவர் ஹ்ருதயத்தினுள்ளே விருக்கும் ஆகாசமோ, அதில் அவர் நன்கு படுத்து தூங்குகிறார், அவரே எல்லோரையும் அடக்கி ஆள்பவர்-வசீ (எல்லோரையும் தன் வசத்தில் வைத்திருப்பவர்)-ஈசாநர். இங்கே சம்சயம் இந்த இரண்டு சாகைகளில் வித்யாபேதமிருக்கிறதா அல்லது இல்லையா? எது சரியாகும்? பேதம்தான் (பூர்வபக்ஷம்). எப்படி? ரூப பேதத்தாலே. அபஹத பாப்மத்வாதி குணாஷ்டக விசிஷ்ட ஆகாசம் சாந்தோக்யத்திலே உபாஸ்யம் என்று ஓதப்பட்டிருக்கிறது (தஹராகாசமும்-அதில் இருக்கும் அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகங்களும் சேர்ந்து உபாஸிக்கப்படவேண்டும். அதாவது ஆகாசத்திலே படுத்துக் கொண்டிருக்கிறவன் - பரமாத்மா என்று அர்த்தம்.) வாஜஸேநயகத்திலே எவர் ஆகாஸத்தில் உறங்குகிறாரோ, எவர் வசித்வாதி குணங்களுடன் கூடியவரோ-அவரே உபாஸ்யமாகும். ஆகையால் ரூபபேதம் இருக்கிறபடியால்-வித்யை பேதம் இருக்கிறது-என்று சொல்லப்படும். (பூர்வ பக்ஷம்)

அவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுவோம் பேத மில்லை என்று சொல்வோம். எப்படி? ஏனெனில் ரூபத்தின் பேதம் இல்லாதபடியாலே. इतरत्र तत्र च வேறிடத்திலும் - அங்கேயும் (அதாவது சாந்தோக்யம் தைத்திரீயம் என்று சேர்த்துப்படிக்க வேண்டியது-தைத்ரீயம் तस्मिन् यदन्तः என்று ஓதுவதால் சாந் தோக்யத்திலே பிரஸித்தமான காமாதி குணஜாதமேவ கிராஹ்யம்). காமாதி குணங்களே ரூபம் எனக் கொள்ள வேண்டும். வாஜஸேநாயகத்திலே - சாந்தோக்யத்திலும் கூட சத்ய காமாதி குணங்களுடன் சேர்ந்தே யிருக்கும் பிருஹ்மம் உபாஸ்யம்-என அர்த்தம். எப்படி இது அடையப்படுகிறது? आयतनादिभ्यः) ஏனெனில் ஹ்ருதயத்தை ஆயதநமாக யிருப்பிடமாகக்) கொண்டிருத்தல் ஸத்ய ஸங்கல்பத்வத்தின் விசேஷமான வசித்வம் (வஸித்வம்) முதலானவற்றால் - அவற்றோடு கூடச் சேர்ந்தே படிக்கப்படும் ஸத்யகாமத்வாதி குணங்களை நினைவு படுத்துகிறபடி யால்.) ஹ்ருதயத்தை இருப்பிடமாகக் கொண்டு, அவரே ஸேது வாக (பாலமாக-ஆதாரமாக-அழைத்துச் செல்லும் உபாயமாக) விருப்பதாலும், விதரணத்வாத் (வ்யவஸ்தை செய்யக்கூடிய வராகவும்) குணங்களுடன் கூடிய பரமாத்மா-அதனால் இரண்டு சாகைகளிலும் ஒரே வித்யை தான் பேசப்படுகிறது-பிரத்யபிஞை செய்யப்படுகிறது (ஒன்றில் சொல்லப்பட்டதை இன்னொன்றில் ஞாபகப்படுத்துக்கிறது). வசித்வாதி குணங்கள் வாஜஸே நயகத் தில் சொல்லப்பட்டிருக்கின்றன-சாந்தோக்யத்திலே குணாஷ்டகம் (அபஹதபாப்மத்வாதி) ஓதப்பட்டதால் - அவைகளில் ஒன்றான (ஸத்யகாம) ஸத்ய ஸங்கல்பம் என்பதால் அதன் விசேஷமே ஒரே வகையே (வசித்வாதி குணங்களாகும்) ஸத்யஸங்கல் பத்வ குணங்களுடன் கூடச்சேர்ந்து செல்பவை ஸத்யகாமத்வாதி அபஹதபாப்மத்வாதி குணாஷ்டகங்கள் பரியந்தம் பாபமில்லாமை வரை ஒன்றாகச் சேர்த்து படிக்கப்பட்ட குணங்களாகும். ஆகை யால் இரண்டு வித்யைகளிலும் ரூபம் மாற வில்லை.

(இங்கே கூறப்பட்ட விஷயம் சா. உ- பிருஹ. உ. இரண்டி லும் வெவ்வேறு குணங்கள் பிருஹ்மத்துக்கு ஓதப்பட்டிருக் கின்றன. பிருஹ்மத்தை தஹராகாசம் என்றும் அதில் படுத் துறங்கும் பரமாத்மா வென்றும்-அவரும் குணாஷ்டகமும்

உபாஸ்யம் என்று சாந்தோக்யத்தில் ஓதப்பட்டிருக்கிறது. பிரு. உ. வசித்வாதி குணங்கள் பேசப்படுகின்றன இதனால் குணங்கள் வேறு என்பதால்-ரூபபேதம் என்கிறான் பூர்வபக்ஷி. சித்தாந்தி சொல்வது ரூப பேதமில்லை. வசித்வாதி குணங்கள் (பிரு. உப) ஸத்ய காம ஸத்யஸங்கல்பத்வாதி (சாந் உப) குணங்களின் ரூபங்களே யாகும். இன்னும் சில குணங்கள் (அபஹத பாப்மத்வாதி-) அதே மாதிரி ஸத்ய காமத்வாதி குணங்கள் (பிரு. 2) இவைகளும் ஓதப்பட்டிருக்கின்றன. இரண்டு சாகைகளுக்குப் பொதுவானவை-ஹ்ருதயத்தை இருப்பிடமாகக் கொண்ட பிருஹ்மம் - அது உபாஸ்யம்-அதன் ரூபம் ஒரே மாதிரியானவையே-இரண்டிலும் பொதுவானவையே). ஆகவே ரூபம் பேதமில்லை - வித்யை ஒன்றுதான்.

இரண்டு வித்யைகளிலும் பலனும் ஒன்றாகப் பேசப்படுகிறது. சா. 2. 8-3-4ல் பரं ज्योतिरुप संपद्य स्वेन रूपेणा भिनिष्पद्यते-(முக்தன்) பரஞ்சோதியை யடைந்து தன் ஸ்வரூபத்தை விளக்கம் பெறுகிறான் - (பிருஹ்ம பிராப்தியை யடைகிறான்) - பிரு. 2. 6-425ல் अभय वै ब्रह्म भवति-(முக்தன்) அவன் பிருஹ்மத்துடன் ஒன்றாகி-பயமில்லாதவனாக ஆகிறான்-என்பவைகளால் பிருஹ்ம பிராப்தி ரூபம் இரண்டிலும் மாறாகவில்லை (பலனில்). ஆகாச சப்தம் சாந்தோக்யத்திலே பரமாத்மா விஷயம் என்று காட்டப்படுகிறது-दहर उत्तरेभ्यः-ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் சிறிய ஆகாசம் என்கிற பதம் பிருஹ்மத்தைத் தான் குறிக்கின்றது-இப்படிக் கொள்வதற்கு அதற்குப் பின்னால் ஓதப்படும் பிரகரண வாக்யங்கள் பரமாத்மாவையே குறிப்பதாலே-என்று தஹர வித்யா அதிகரணத்தில் ஏற்கனவே ஸ்தாபிதம். (பூத ஆகாஸமில்லை என்பதாம் வாஜஸேநயகர்களால் ஓதப்படும் ஹ்ருதய ஆகாசத்திலே படுத்துறங்குபவனான பரமாத்மாவுக்கு - வசித்வாதி (எல்லோரையும் அடக்கி ஆளுதல் போன்ற) குணங்கள் பரமாத்மாவுக்கு ஓதப்படுகிறதே யென்றால் (அதற்கு நாம் பதில் கூறுவது) ஆகாச சப்தம் அதற்கு (பரமாத்மா ஆதாரம் என்றும் காட்டப்படுகிறது - (எவ்விதமெனில்) தை. நா. 11ல் तस्यान्ते सुषिरसूक्ष्मं तस्मिन् सर्वं प्रतिष्ठितम् - அந்த ஹ்ருதயத்தினுள்ளே, ஒரு சூக்ஷ்மமான த்வாரம் (ஆகாசம்) (இடைவெளி)

இருக்கிறது-இதை ஆகாசம் என்கிற பதத்தால் காட்டப்படுகிறது. ஹ்ருதய அந்தர்கத सुषिर - த்வாரம் என்கிற சப்தவாச்ய ஆகாசம்-என்று சொல்லி-காட்டப்படுகிறது. ஆகையால் வித்யா ஐக்யமே !(அதாவது ஹ்ருதயவர்த்தி எவன் தஹர வித்யையில் உபாஸ்யமோ-பரமாத்மா-அவரேதான் இங்கேயும் உபாஸ்யம்-பிரும்மா சிவன் முதலானவர்களுக்கும் அந்தர்யாமி என்று சொல்லி உபஸம்ஹாரம் பத்மகோசம் இத்யாதிகளால் செய்கிறது சுருதி). (ரங்கராமானுஜர் பிரு 2. வ்யாக்யானத்திலே ஆகாசத்தை ஒரு ஜீவாத்மா-அபிமானி தேவதையாகச் சொல்கிறார்).

மேலும் (அத்வைதிகளால்) இவ்விதம் சொல்லக்கூடும். பிரு வாஜஸேநயகத்திலே-வசித்வாதி குணங்களோடு கூட ஸத்ய காமத்வாதி குணங்களும் ஸத்பாவமாக அங்கே ஓதப்பட்டிருக்கின்றன என்கிறார்கள். (நாம் சொல்வது) அவ்விதமில்லை-ஏனெனில் அங்கே வசித்வாதி குணங்களை பரமார்த்தமாக ஸத்பாவத்துடன் (இருப்பதாக) எண்ணப்படமாட்டாது-பரமாத்மாவை விட்டுத் தனியாக விருப்பின் அர்த்தம் பெறமாட்டாது. तदभावश्च - (பிருஹ்மத்துக்கு) வசித்வாதி குணங்கள் இல்லை - என்றால்-நிர்குண பிருஹ்மம் பரம் என்றாகி விடும். (இது பூர்வ பக்ஷம்-அத்வைதி பூர்வ பக்ஷி). பிரு 2. 6-4-19-ல் मनसैवानुद्रष्टव्यं (பிற்பாடு-அதாவது கேட்ட பிறகும்-எண்ணியபிறகும்-பரமாத்மா மனத்தினால் ஸாக்ஷாத்கரிக்கப்பட வேண்டும்; இங்கே பிருஹ்மத்தினிடம் பலவகைப்பட்டது என்பது ஒன்றுமில்லை. नेह नानास्ति किञ्चन - मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति । एकधैवानुद्रष्टव्य-मेतदप्रमेयं ध्रुवम्-எவன் (பிருஹ்மத்தை விட்டு) வேறாகப் பார்க்கிறானோ-அவன் மிருத்யுனிடமிருந்து (ஸம்ஸாரத்திலிருந்து) மீள்வதில்லை-சம்சாரத்தையே அடைந்து தவிக்கிறான். இந்த பிருஹ்மம் ஒன்றாகவே யிருக்கிறது-அவ்விதமே பார்க்கப்பட வேண்டியது. அந்த பிருஹ்மம் சாஸ்வதமாகவும் நினைக்க வொண்ணாதபடி மகிமைகள் பெற்றதாக விருக்கிறது - என்று அந்த பிரகிருதத்திலே சொல்லி - பிற்பாடு அதே பிரகரணத்திலே வரும் வாக்யத்தில் இவ்விதம் ஓதப்படுகிறது-(பிரு. 2. 4-4-20-22) स एष नेति नेत्यात्मा-அவரே-அந்த பரமாத்மாவே-இப்படி இல்லை-இப்படி

இல்லை-என்று ஓதப்படுகிறார். (இவ்வளவு என்று சொல்லப்படும் அளவைக் காட்டுவதுதான் நிஷேதிக்கப்படுகிறது - என்பது ஸ்ரீ ராமானுஜரின் அபிப்ராயம்)-என்று பிற்பாடு சொல்லப்படும். வாக்யத்தில் உபாஸிக்கப்படும் ப்ருஹ்மம் நிர்விசேஷத்வம் (குணமில்லை) என்று காட்டப்படுகிறது ஆகையால் வசித்வாதி குணங்களும் அதுபோல ஸ்தூலத்வாதி- அணுத்வாதி குணங்களும் ப்ருஹ்மத்திற்கு நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் காரணத்தினால், சாந்தோக்யத்திலும் கூட ஸத்யகாமத்வாதி குணங்களும் ப்ருஹ்மத்திற்கு பாரமார்த்தசையில் இல்லை என்று ஓதப்படுகின்றன; ஆகையால் இம்மாதிரியான குணங்களும் (ஸத்ய காமத்வாதி குணங்களும்) (அதேபோல வசித்வாதி குணங்களும்) அபரமார்த்தமாக விருப்பதாலே, மோக்ஷார்த்த உபாஸனைகளில் நாசம் ஏற்படுகின்றன. ((லோப-நாசம்) - (தள்ளப்படுகின்றன என்று அர்த்தம்.) இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் கொடுக்கிறார். அடுத்த சூத்ரத்தில்-

(இங்கு சங்கரருடைய அபிப்ராயத்திற்கு கண்டனம்- சங்கரர் தஹர வித்யை (சாந்-உபநிஷத்) ப்ருஹ்மத்தை குணாஷ்டகத்துடன் உபாஸனம் செய்யப்பட வேண்டும் என்று சொல்லி-ப்ருஹ உபநிஷத்தில் ஓதப்பட்ட தஹர வித்யை ப்ரும் மத்திற்கு குணங்கள் இல்லாததாக ஓதுகிறது. (ப்ரு. 2-4-4). ப்ருஹ. உப(வாக்யம் மோக்ஷார்த்தத்திற்காக உபதேசிக்கப்படுகிற தாக எண்ணுகிறார். அதே சமயத்தில் சங்கரர் சொல்கிறார்-ப்ருஹ் மத்தின் குணங்களை-இரண்டு சாகைகளிலும் ஓதப்பட்ட ப்ருஹ்ம குணங்களை ஞாபகப்படுத்தி-மற்றொன்றில் அறியப்படவேண்டும் (உபஸம்ஹாரம் செய்யப்படவேண்டும்) என்பதாகும். ஆனால் தஹர வித்யையில் இன்னொரு சாகையில் ஓதப்பட்ட குணங் களும் உபாஸிக்கப்பட வேண்டும். ப்ருஹ. உபநிஷத் ப்ரகரணத் திலே, தஹர வித்யையின் குணங்களை அப்படியே சேர்த்துக் கொண்டு ப்ருஹ்மத்தைப் புகழ்வதாகக் கொண்டு (உபாஸனைக்கு ஏற்றவையாக வில்லாமல்) உபாஸிக்க வேண்டும் என்கிறார். பாமதி வ்யாக்நத்தில் இரண்டு வித்யைகளுக்கும் வித்யாஸம் இருக்கிறது-ஒன்றில் (சாந்) ப்ருஹ்மத்தின் குணங்களும், இன் னொன்றில் (ப்ருஹ) ப்ருஹ்மத்திற்கு குணங்கள் இல்லை என்றும்

சொல்லப்படுவதால்-ஆகவே வித்யா பேதமிருக்கிறது-இப்படி பேதமாக விருப்பதால்-ஒவ்வொரு பிரகரண குணங்களை மற்றொன்றில் சேர்த்துக் கொள்வதற்கு நியாயம் இருப்பதால்-அவ்விதம் மாற்றப்படலாம் என்கிறார். இதற்கு ராமானுஜரின் பதில்-பின்வரும் இரண்டு சூத்ரங்களில் சொல்லப்படுகிறது. சங்கரர் இந்த இரண்டு சூத்ரங்களை தனி ஒரு அதிகரணமாக மாற்றுகிறார்-அதில் பிராணாக்னி ஹோத்ரம் (வைஸ்வா நரவித்யையில் சொல்லப்படுவது) அது உபவாஸம் செய்யப்படும் போது செய்ய வேண்டியதா-இல்லையா என்று ஆராயப்படுகிறது).

ஸித். சூத். आदरादलोपः (3-3-39)

ஆதராதலோப: ( do )

ஆதராத்-(குணங்களை உபநிஷத்) ஆதரத்தோடு படிப்பதால்-அலோப: - அவை நாசமாகவில்லை - (கைவிடத்தக்கவை யல்ல) (குணங்களுக்கு நாசமில்லை. குணத்தோடுதான் பிருஹ்மம் உபாஸிக்கப்பட வேண்டும்.)

பிருஹ்மத்தின் குணங்களாகிற வசித்வம் ஸத்யகாமத்வம் இத்யாதி வேதம் தவிர வேறு பிரமாணத்தால் அறியப்படாதவை. இந்த குணங்களை மிகுந்த ஆதரத்துடன் வேதம் பலவிடங்களில் பிருஹ்மத்துக்கு உள்ளதாக ஓதுகையால்-அவற்றை அந்த வேதமே இல்லை என ஆக்குகிறது என்று கூறுவது சரியில்லை அஸம்பாவிதம். இவ்விதம் வேதத்தால் ஓதப்பட்டவை ஸத்யகாமத்வம்-வசித்வம் என்கிற குணங்கள் பரமார்த்திகமாகும். அதனால் நிர்குண பிருஹ்மம் இல்லையென்று ஆகிவிடுகிறது. அதனால் வித்யை ஐக்யம் என்றும் குணோப ஸம்ஹாரம் செய்யத்தக்கது என்கிற அபிப்ராயத்தை சூத்ரம் சூசிக்கிறது. பிருஹ்மத்தை இந்த குணங்களோடு சேர்ந்து உபாஸிக்கப்படவேண்டியதாகையால்-ஸத்யாந் காமாந் என்கிற விசேஷணங்களாலே-ஏஷ ஏஷ இதி - ஏதச் சப்த ஆவிருத்தியினால் வேதம் ஓதும் இந்த குணங்களை ஆதாரத்தோடு படிப்பதால், அவை உபாஸனைக்கு சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்-பரமாத்மாவுக்கு உண்மையான குணங்களே-என்று கொண்டு -

உபாஸிக்கப்படவேண்டும். சா,2. 8-1ல் तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यम्... एष आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसंकल्पः-(ஹ்ருதய தஹர ஆகாசத்தில் உள்ளிருக்கும் (பரம்பொருளின் உள்ளிருக்கும்) குணங்களை உபாஸிக்க வேண்டும்; இந்த பரமாத்மா பாபமற்றவன், கிழத்தனமற்றவன், மரண மற்றவன் வருத்தமற்றவன்-பசியற்றவன் - தாகமற்றவன் - நித்ய கல்யாண குணங்களையுடையவன்-ஸத்யகாமத்வம் (நினைத்ததை ஸாதிப்பவன்.) தடைபடாத ஸத்ய சங்கல்பன் (அதாவது மீருத ஸங்கல்பத்தை யுடையவன்); பிரு ஹ. 6-4-22 सर्वस्य वशी सर्वस्येशानः एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरण एषां लोकानामसंभेदाय-அனைத்தையும் தன் வசத்தில் வைத்து ஆள் பவன்-நியமிப்பவன்); இவனே அனைத்தையும் நியமிக்கும் பிரபு-இவனே எல்லாப் பிராணிகளுக்கும் ஈஸ்வரன்; ரக்ஷகனும் ஆவான். இந்த உலகங்கள் ஒன்றோடொன்று கலந்துவிடாமல் குழம்பிப் போகாதபடி அணைபோலிருந்து வ்யவஸ்தை செய்பவன். (இம்மாதிரி சுருதிகள் அநேகம்-அவைகளிலிருந்து தெரியவரும் இந்த குணங்கள் இவைகளை பிருஹ்மத்துடன் உபாஸிக்கவேண்டும்-மோக்ஷார்த்தம் உபாஸநா உபாஸ்ய பிருஹ்ம குணங்களாகும். இவைகளை ஆதரத்தோடு (நம்பிக்கையுடன்) சுருதிகள் உபதேசிப் பதால்; இந்த குணங்கள் கைவிடத்தக்கதல்ல - अलोपः அதனால் இரண்டிற்கும் உபஸம்ஹாரம் (இரு உபநிஷத்துக்களிலும் மாற்றிச் சேர்த்துக்கொள்ள வேண்டியது) உபாஸகனின் காரியமாகும்.

சாந்தோக்யத்திலே 8-1-6ல் நிச்சயமாக இந்த வாக்யம் तत् य इहाऽऽत्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान्, तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति-இப்போது - அவர்களுக்கு (எவர்கள் இந்த உலகத்தை விட்டு கிளம்புகிறார்களோ-பிருஹ்மத்தை நன்கு அறிந்து கொண்டு-அதே மாதிரி இந்த நித்யமான கல்யாண குணங்களையும் அறிந்து கொண்டிருக்கிறார்களோ - அவர்களுக்கு அவர்கள் இஷ்டப்படி சஞ்சாரம் (கமனம்) யேற்படுகிறது (எங்கு வேண்டுமானாலும் போகலாம்) என்கிற சுருதியினால் - ஸத்ய காமத்வகுண விசிஷ்ட பிருஹ்மத்தையே வேதநமாக (அறிய வேண்டிய உபாஸன உபாயமாக) சொல்லிவிட்டு, மீண்டும் சுருதி

ஓதுகிறது (சா. 2) अथ य इहाऽऽत्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान् तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति-ஆகையால் எவர்கள் இவ்வுலகத்தை விட்டு நீங்குகிறார்களோ-அவர்கள் ஆத்மாவை (பரமாத்மாவை) அறியாமலும், இந்த நித்யமானதும் கல்யாண குணங்களையும் அறிந்து கொள்ளாமல் உயிர் நீக்குகிறார்களோ - அவர்களுக்கு தங்கள் இஷ்டப்படி சஞ்சாரம் எல்லா உலகங்களிலும் ஓதப்படவில்லை; இதனால் உபாஸனை யில்லாதபோனால் நிந்தனை செய்யப்படுகிறது. வ்யதிரேகமுகேந-தெரிய வருகிறது-குணவிசிஷ்ட வேதனத்திற்கு (உபாஸநத்திற்கு) ஆதரத்வம் (மிக்க மரியாதை) காட்டப்படுகிறது.

அப்படியே வாஜஸேநயகர்களிலும் सर्वस्य वशी सर्वस्येशानः.... एष सर्वेश्वरः एष भूताधिपतिरेष भूतपालः-அவனே (பரமாத்மாவே) அவனே எல்லோரையும் வசீ (தன்வசம்) வைத்திருப்பவர் (அடக்கி ஆள்பவர்) எல்லோருக்கும் பிரபு (நியந்தா). அவர் ஸர்வேஸ்வரர்-அவரே ஜீவர்களுக்கும் (எல்லாப் பிராணிகளுக்கும் பதி ரக்ஷகர்-என்று அடிக்கடி பரமாத்மாவின் ஐஸ்வர்யங்களை (பரத்வ மகிமைகளை) உபதேசிப்பதால், அந்த கல்யாண குணங்களை ஆதரத்தோடு காட்டப்படுகின்றன-அதனால் அவை தியானிக்கப்படத் தகுந்தவை.

இந்த விதமாகவே அந்யத்ர (வேறு ஒரு) சுருதியும் - (வாஜஸேநயிகள்) சொல்கிறது-ஸர்வாஸ்ய வஸீ ஸர்வஸ்யேஸாந:-) ஏஷ ஸர்வேஸ்வர:... அஸம்பேதாய)...எவர்கள் பரமாத்மாவையும் குணங்களையும் உபாஸிக்கிறார்களோ-அவர்கள் எல்லா உலகங்களிலும் தடையில்லாத சஞ்சாரத்தைப் பெறுகிறார்கள். न च मातापितृसहस्रेभ्योऽपि वत्सलतरं शास्त्रं प्रतारकवत् अपारमार्थिकान् निरसनीयान् गुणान् प्रमाणान्तराप्रतिपन्नान् आदरेणोपदिश्य - இப்படி கல்யாண குணத்தோடு கூடிய பரம்பொருளை உபாஸிப்பதில் மேலான ஆதரத்தை வேதம் காட்டுவதால்-வேதம் ஆயிரம் தாய் தந்தையர்களைக் காட்டிலும் அன்பு கருணை, வாத்ஸல்யம் அதிகம் கொண்டது-அதனால் அது மற்ற பிரமாணங்களை ஆதரிக்கும் வஞ்சகர்களைப்போல முதலில் ஆதாரத்தோடு சொல்லி-பிற்பாடு இவை அபரமார்த்தம் பொய்யாக தள்ளப்பட வேண்டும் என்பதை ஒருக்காலும் உபதேசிக்காது. சாஸ்திரம் தவிர இதர பிரமாணங்களால் அறிய முடியாதவையான இந்த கல்யாண

குணங்களை வேதம் ஆதரத்தோடு ஓதுவதால், நாம் அது ஓதுவதை முழுவதும் கைக்கொள்ள வேண்டும் என்பதாகும்; அவ்விதமில்லாத போனால் ஸம்சார சக்ரமாகிற சுழலில் அகப்பட்டுக் கொண்டு தவிப்பது மயங்குவது-தாபத்திரயங்களால் யேற்கனவே வாட்டப்பட்ட முமுக்ஷுவுக்கு அந்த வேதம் மீண்டும் ஸம்சார சக்ரத்தில் பிரவர்த்திக்கச் செய்து-மயக்கமடை யச்செய்யுமா? (வஞ்சகர்கள்-முதலில் கல்யாண குணங்களை ஓதிவிட்டு-பிற்பாடு அவை பரமார்த்தமல்ல-தள்ளப்பட வேண்டியவையே-என்று வாதாடுபவர்கள் (அத்வைதிகள்) இவை வேதத்தைத் தவிர்த்து மற்ற பிரமாணங்களால் அடையப்படாதது அவர்கள் தங்களையே ஏமாற்றிக் கொண்டவர்களாக - சபசார சுழலில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறார்கள்-அத்தகைய முமுக்ஷீக்கள் மோக்ஷார்த்தம் செயல்படுகிறார்கள் - ஸம்சார சுழலில் (சக்கரத்தில்) அகப்பட்டுக் கொண்டு அலைகிறார்கள். (இதிலிருந்து சாஸ்திரம் ஒன்றினாலேயே அறியப்படும் பிருஹ்மமும் பிருஹ்ம குணங்களும் உபாஸ்யம்).

மேலும் அத்வைதிகள் சொல்கிறார்கள்-नेह नानास्ति किञ्चन - एकधैवानुद्रष्टव्यम् - एकधैव - ஏகதை பிருஹ்மாத்மகத்வேனைவ - பிருஹ்ம விநா கிமபி நாஸ்தி என்று அர்த்தம். இங்கே (உலகில்) பல என்று சொல்லக்கூடியது அதாவது அபிருஹ்மாத்மகமாக ஒன்றுமில்லை. அவனை ஒருவனாகவே தியானிக்கப்பட வேண்டும். இதனால் இந்த உலகத்திலுள்ள பொருள்கள் ஸர்வமும் பிருஹ்மத்தின் காரியமாதலால், பிருஹ்மம் அவைகளுக்கு ஆத்மாவாக விருப்பதால், அவன் ஒருவனே தான் (ஏகதா அநுதர்சநம்) ஸதா தியானிக்கப்பட வேண்டியது-பார்க்க வேண்டியது-(இதனால் ஸித்திப்பது யாதென்றால்) அப்ருஹ்மாத்மகமாக ஒன்றுமில்லை. ஏற்கனவே அறியப்பட்ட பலவகைப்பட்ட நாநாத்வ தர்சந: அபிருஹ்மாத்மகமாக ஒன்றுமில்லை-என்று நிஷேதிக்கிறது. (அப்ருஹ்மாத்மக நாநாத்வ தர்சனத்தை நிஷேதிக்கிறது). என்று அர்த்தம். அதனால் முன்பே நாம் நன்கு விளக்கியிருக்கிறோம். பிரு. 2. 6-4-11ல் स एष नेति नेत्यात्मा என்று இங்கேயும் (இதி ந இதி ந-என்று ஏற்கனவே சொல்லிய கல்யாண குணங்களைத் தள்ளியிருக்கிறதே என்றால் - ந - அவ்விதம் சொல்வது பொருந்தாது. इति சப்தத்தால் பிரத்யக்ஷம் முதலான மற்ற பிரமாணங்களால் அறியப்பட்ட இவ்வுலகத்தை

''ந''என்று அந்த பிருஹ்மம் அப்படி-அத்தகையது அன்று. அந்த அளவுடன் கூடியது என்பது இல்லை. (इति शब्देन प्रमाणान्तर-प्रतिपन्नम् प्रपञ्चाकारं परामृश्य न तथा विधम् ब्रह्मेति)-அதனால் ஸர்வாத்ம பூதமாக விருக்கும் பிருஹ்மத்திற்கு பிரபஞ்சத்தைக் காட்டிலும் மேன்மை (விலக்ஷணத்வம்) கூறப்படுகிறது, இந்த விஷயத்தையே (விலக்ஷணத்வத்தை) பிற்பாடு வரும் வாக்யம் விளக்கிக் காட்டுகிறது अग्राह्यः; न हि गृह्यते; अशीर्यः न हि शीर्यते, असङ्गः, न हि सज्यते; अव्यथितः न व्यथते; न रिष्यति; इति-அவர் மற்ற பிரமாணங்களால் (சாஸ்திரம் ஒன்றைத் தவிர) அறியப்பட மாட்டார். அவர் அழிவில்லாதவர், அழிக்கப்பட மாட்டாதவர், (சிதறக் கூடிய அழிந்து போகக்கூடிய பொருளைக் காட்டிலும் வேறானவர்) ஒட்டும் பொருளைக் காட்டிலும் வேறுபட்டவர்-அதனால் அவருக்கு ஒட்டுதல் கிடையாது. அவர் துக்கம்தரும் பொருளைக் காட்டிலும் வேறுபட்டவரானபடியால், அவர் துக்கமடைவதில்லை. அவர் துன்புறுத்தப்படாதவர்-என்று ஓதப்பட்டிருக்கிறது-அந்த பரமாத்மா சாஸ்திரம் ஒன்றினாலே அறியத்தக்கவரானபடியால்-மற்ற பிரமாணங்களால் அறியப்படக்கூடாதவர் மற்ற பிரமாணங்களால் அறியப்படும் வஸ்துக்களையும் விட வேறானவர். அவர் உடைந்து சிதறிப் போவதில்லை. இந்தப் பிரகாரமே உத்தர (மேல் வரும்) வாக்யத்திலும் சொல்லப்படும் குணங்களை அறிந்து கொள்ள வேண்டும் சாந்தோக்யத்திலும் கூட (8-5-6) नास्य जरयै तज्जीर्यति, न वधेनास्य हन्यते; एतत् सत्यम् ब्रह्मपुरम्। अस्मिन् कामाः समाहिताः (இந்த ஜீவன் உடலினால் ஏற்படும் கிழத்தன்மை, அடைவது இல்லை: இந்த சூக்ஷ்ம தஹராகாசமாகிற பிருஹ்மத்திற்கு கிழத்தன்மை இல்லை; தேகம் மரணமடைவதனால் இந்த பிருஹ்மம் கொல்லப்படுவதில்லை. இந்தக் காரணத்தினால் ஸத்யம் எனப்படும் தஹராகாசம் பிருஹ்மபுரம் எனப்படுகிறது. இதில் அடங்கியுள்ளவை எல்லா விரும்பத்தக்க கல்யாண குணங்கள் இதனால் பிருஹ்மத்தின் விலக்ஷணத்தைக் காட்டி (எல்லா வஸ்துக்களையும் விட வேறுபட்டது)-என்று கூறப்பட்டு, அந்த விலக்ஷண பிருஹ்மத்தின் விஷயத்திலே ஸத்ய காமத்வம் போன்ற குணங்களும் ஓதப்பட்டிருக்கின்றன.

(नेतिनेति न इति-விலக்ஷணத்வம் பிருஹ்மத்திற்கு ஓதப்படு கிறது. இந்த குணங்களுக்குத் தாத்பர்யமுண்டு என்று காட்டப் படுகிறது. அத்வைதி சொல்வதுபோல நிர்விசேஷ பிருஹ்மம் இல்லை).

மேலும் அத்வைதிகளால் இவ்விதம் சொல்லக்கூடும்- तद् य इहाऽऽत्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान्, तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति स यदि पितृलोककामो भवति। எவர்கள் இந்த உலகை விட்டு நீங்குகிறார்களோ - அவர்களுக்கு இந்த ஆத்மாவை நன்கு அறிந்துவிட்டு, எப்படி அதனை இது நித்யமானதும், அனந்த கல்யாண குணங்களை உடையதாக அறிவதாலும், அவர்களுக்கு மேல் உலகங்களில் தங்கள் இஷ்டப்படி சஞ்சாரம் யேற்படு கிறது. அவர்களுக்கு பித்ருலோகம் போக இஷ்டமிருக்குமானால், பித்ருலோகம் போகமுடிகிறது இத்தகைய ஸத்யகாமாதி குணங் கள் கூடிய (விசிஷ்ட) பிருஹ்ம உபாஸநத்தைப் பற்றி சொல்லப் படுகிறது-அதனால் முமுக்ஷுவாக விருப்பவன் பிருஹ்ம பிராப் தியை விரும்புகிறவன், அவனுக்கு இத்தகைய ஸகுண பிருஹ்ம உபாஸனை (குணங்களை உடைய பிருஹ்மத்தை) உபாஸனை செய்வது) சரியாகாது - பிருஹ்மம் உபாஸ்ய பொருளாகாது. (न सगुणम् ब्रह्मोपास्यम्); பரவித்யையின் (பரமாத்மாவை பூஜிப் பதின்) பலன் இப்படி சொல்லப்படுகிறது-சா. 2. 8-3-4 परं ज्योतिरूपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते - மேலான ஜ்யோதி ரூபமான பரமாத்மாவை அடைந்த பிறகு, அவன் (முக்தாத்மா) தன் ஸ்வஸ்ரூபத்தை அடைந்து நன்கு பிரகாசிக்கிறான்-ஆகையால் ஸத்யகாமத்வாதி குணங்களை பிருஹ்மத்தை உபாஸிப்பதில் உபஸம்ஹாரம் செய்யக்கூடாது (அந்த வித்யைகளில் சேர்த்துக் கொள்ளக்கூடாது-முமுக்ஷுக்களால்) இது அத்வைதபக்ஷம்-இந்த ஆட்சேபத்திற்கு நாம் பதில் கூறுகிறோம்-அடுத்த சூத்ரம்.

ஸித். उपस्थितेऽतस्तद्वचनात् *(3-3-40)*

**உபஸ்திதேऽதஸ்தத்வசநாத்** (do)

*உபஸ்திதே:-பிருஹ்மத்தை அடைந்தவன் விஷயத்தில் அத:- பிருஹ்மத்தை அடைந்ததே காரணமாக (அதனை அடைந்ததின்*

பலஞக) தன் இஷ்டப்படி மேல் உலகங்களில் சஞ்சாரம் அடையப் படுகிறதை ஓதப்படுவதாலே, இதற்கு ஆதாரமாக சுருதி பல வாக்யங்களால் கூறுவதாலே-(அதாவது ஸர்வலோக சஞ்சாரம் முக்தியின் பலஞகும்-சம்சாரிக பலனல்ல).

उपस्थितिः - उपस्थानम् - அடைவது - அதாவது முகதன் பந்தங்களிலிருந்து விடுபட்டு தன் ஸ்வஸ்வரூபத்தை அடைந்து-பிருஹ்ம பிராப்தியை அடைகிருன்-இந்தக் காரணத்தினுலே ஸர்வலோக சஞ்சாரம் இஷ்டப் பிரகாரம் முக்தனுக்கு யேற்படுகிறது (उप संपत्तेरेवहेतोःसर्वेषुलोकेषु कामचार उच्यते) சா-உ. 8.3.4 परं ज्योति उपसंपद्य, क्रीडन् रममाणः स्त्रीभिर्वा यानैर्वा ज्ञातिभिर्वा, नोपजनम् स्मरन्निदम् शरीरम् முக்தன் பரம் ஜ்யோதிஷை அடைந்த பிறகு – தன் இஷ்டப் பிரகாரம் சஞ்சரிக்கிருன் - சாப்பிட்டுக் கொண்டும், விளையாடிக்கொண்டும், ஸ்திரிகளுடன் கூடச் சேர்ந்தும்-வாகனங்களுடனும்-ஞாதிகளுடனும் சேர்ந்து அனுபவிக்கிருன்-அப்போது அவனுக்கு (முக்தனுக்கு) இந்த சரீரத்தைப் பற்றிய நினைவு கிடையாது ; சா. உ. 7-25-2, स स्वराड् भवति, तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति । அவன் ஒரு அரசனைப் போல ஸ்வதந்தரமாக விருக்கிருன். அவனுக்கு மேல் உலகங்கள் எல்லாவற்றிலும் தன் இஷ்டப்படி சஞ்சாரம் யேற்படுகிறது. இந்த பிரகாரம் (தன் இஷ்டப்படி முக்தன் அனுபவிப்பது) நான்காம் அத்யாயத்தில் நிபுணதரமாகச் சொல்லப்போகிறோம். (4-4-7-8) ஆகையால் எல்லாமேல் உலகங்களிலும் தன் இஷ்டப்படி முக்தன் சஞ்சரிப்பது-போக்யமான பலனை அனுபவிப்பது - முமுக்ஷுவுக்கு உபாஸநத்திஞல் (அதன் பலஞக) யேற்படுகிறது. ஆகவே ஸத்ய காமத்வாதி குணங்களை அவன் உபஸம்ஹாரம் செய்து கொள்ள வேண்டும் (சேர்த்துக்கொள்ள வேண்டும்). அதாவது மோக்ஷார்த் பலனை விரும்புகிறவன் இந்த ஸத்யகாமத்வாதி குணங்களைச் சேர்த்து உபாஸனை செய்ய வேண்டும்.

(स्वराड् भवति) பூமவித்தையில் சொல்லப்பட்டது. தஹர வித்யை-பூம வித்யை இரண்டிலும் ஓதப்படுகிறது)

## தந்நிர்தாரணு நியமாதிகரணம் (3-3-17)

**ஸூத், तन्निर्धारणानियमः तद्दृष्टेः; पृथग्घ्यः प्रतिबन्धः फलम् (3-3-41)**

**தந்நிர்தாரணுநியம: தத்த்ருஷ்டே: ப்ருதக்த்ய பிரதிபந்த: பலம் (3-3-41)**

*தந்நிர்தாரணு நியம;- யாகங்களில் உத்கீத உபாஸநத்தை அங்கமாகக் கொள்ள வேண்டும்-என்கிற நியமமில்லை. தத்திருஷ்டே:- (ஏனெனில்) வேதவாக்யங்களில் அநியமம் காணப்படுவதால். ஹி- (ஏனெனில்) அப்ரதிபந்த:- ப்ருதக்பலம் (உத்கீத உபாஸநத்நுக்கு) தடையின்மையாகிற தனிப்பலன் (ஓதப்படுகிறதன்றே).*

அவதாரிகை: முன் அதிகரணத்தில் (ஸத்யகாமத்வாதி குணங்கள் உபஸம்ஹாரம் செய்வதுஎன்று சொல்லப்பட்டது. அதுபோலவே யாகங்களில் உத்கீத உபாஸநமும் யாகத்துக்கு நியதமான அங்கமாகையால், எல்லா யாகங்களிலும் அங்கமாகக் கைக்கொள்ளத்தக்கதே-என்கிற ஐயம் இந்த அதிகரணத்தில் தள்ளப்படுகிறது. (கர்மா-அங்கீ; உத்கீதம்-அங்கம். உத்கீத கானம் பண்ணும்போது உத்கீத உபாஸனை செய்யவேண்டும்.

சா, 2. 1-1-1ல் ओमित्येतदक्षरमुद्गीथ मुपासीत् ஒருவன் உத்கீதத்துக்கு அவயவமான ஓம் என்கிற அக்ஷரத்தை உபாஸிக்கக்கடவன்-என்று உத்கீதத்தின் அங்கமான பிரணவத்தின் உபாஸநம் விதிக்கப்பட்டது. இதுவும் இன்னும் சில வித்யைகளும் கர்மாங்கங்களை ஆஸ்ரயம் (நம்பி) செய்திருக்கின்றன. (கர்மா-அங்கீ, உத்கீதம்-அங்கம்). கர்மாங்கபூதமான உத்கீதாதிகளின் உதவியினால், கர்மா (அங்கி) செய்யப்படுகிறது எப்படி பர்ணமரத்தினால் செய்யப்பட்ட கரண்டியையாகத்திற்கு அங்கமாக உபயோகப்படுத்துகிறார்களோ அதுபோல அங்க அங்கீ பாவம்ஸ்தாபிதமாகிறது-உத்கீதத்திலே. ஆகையால் எந்த வஸ்துக்கள் உத்கீதத்துடன் சேர்ந்து விருக்கிறதோ - அவையாகங்களில் அனுஷ்டிக்கப்படவேண்டியது-(ஏனெனில்) அவை உத்கீத உபாஸநங்களில் சம்பந்தம் கொண்டவை என்பதால் சா. உ. 1-1-10 ல் यदेवविद्यया करोति श्रद्धयोपनिषदा, तदेव वीर्यवत्तरं भवति அந்த

கர்மாவே (யாகமே) உபாஸநத்துடன் கூடச் செய்யப் படுவது நம்பிக்கையுடன சம்பந்தப்பட்டது. அதுவே பிருஹ்ம ஞானத்துடனும் சம்பந்தம் கொண்டது, அதற்கு அதிக வீர்யம் யேற்படுகிறது-இந்தக் காரணத்தினுல் வர்த்தமான (நிகழ்) காலம் என்பதால் எது காட்டப்படுகிறது என்றுல், உத்கீதத்திற்குத் தனியான (வேறுன) பலன் கல்பிப்பது சரியாகாது. எது போல வென்றுல், பர்ண மரத்தினுல் செய்யப்பட்ட கரண்டியுடன் சம்பந்தப்பட்ட பலன் கற்பிக்கப்படுகிறதோ-அது போலவாம் அதனுல் அந்த பலனுக்கு யாதொரு கெட்ட (அசுப) வாக்யமும் கேட்கப்படாமல் ஆகிறது— அதாவது உத்கீத உபாஸனே செய்பவன் கெட்ட சமாசாரங்களைக் கேட்கமாட்டான்)-ஆகையால் யாகங்களில் உத்கீதத்தை கானம் செய்வது கட்டாயம் சேர்த்துக் கொள்ள வேண்டியதாகும்.

(இங்கு சொல்லப்படுவது-ஜுஹு-என்பது மரக்கரண்டி-இதனுல் நெய் எடுக்கப்பட்டு யாகாக்நியில் ஆஹுதி செய்யப்படுகிறது. தை. ஸம். 3-5-7-ல் சொல்லப்படுகிறது - யாகம் செய்கிறவன் ஜுஹு (கரண்டி) (பலாச) பர்ண மரத்தினுல் செய்யப்பட்ட கரண்டியை உபயோகித்தால், அவன் அசுப வார்த்தைகளைக் கேட்கமாட்டான். பூர். மீமா. (3-6-1-8)ல் பர்ண (பலாச) மரக்கரண்டியைப்பற்றி புகழ்ச் சொல்லாகச் சொல்லி-அதனுல் ஒரு குறிப்பிட்ட விசேஷமான பலன் யேற்படுவதாகவில்லை என்று காட்டப்படுகிறது. ஆகவே ஜுஹு பலாச (பர்ண) மரத்தினுல் ஆகவேண்டியது. யாகம் செய்கிறவனுக்கு வேறு ஒரு கரண்டியை அதற்குப் பதிலாக உபயோகப்பது சொல்லப்படவில்லை. எப்போது அவன் ஒரு சிறப்பான பலனை விரும்புவானுகில். ஆனுல் சா. உபநிஷத்தில் ஓதப்பட்டிருக்கிறது - அது புகழ்ச் சொல்லாகவில்லை. ஆகவே எவன் விசேஷபலனை மாத்திரம் அடைய ஆசைப்படுகிறுனே - அவன் பலனைக் கொடுக்கும் விதி வாக்யத்தை அனுசரிக்க வேண்டும்.) (இங்கு சொல்லப்படும் கருத்து-எவன் ஸ்ருக்-ஸ்ருவம் முதலான ஜுஹுக்களை பர்ண மயமான மரத்தினுல் கொண்டிருக்கிறுனே, அவன் பாப சுலோகத்தை (பழிச்சொல்லை-அசுபமான வார்த்தைகளைக் கேட்கமாட்டான். இதனுல் யாகத்தின் அங்கமாக ஜுஹுவின் வாயிலாக, அதன் பர்ண (பலாச) மரத் தன்மையைப் போல)

யாகத்திற்கு நியதமான அங்கமாகிறதா-அல்லது பசுவை விரும்புகிறவன் பால் கறக்கும் பித்தளைப் பாத்திரத்தில் நீரைக் கொண்டு வா-என்கிற வேதவாக்யத்தைப் போல, பசுவில் விருப்ப மிருந்தால் (பசுகாமந:) பித்தளை பாத்திரத்தில் நீர் கொண்டு வருவது, இல்லாவிடில் இல்லை என்கிற ரீதியில் அநியதமான (விதிக்கப்படாத) அங்கமாகிறதா? என்கிற கேள்வி எழ-பூர்வ பக்ஷம் சித்தாந்தம் யேற்படுகின்றன (சாரீரக காரிகாவளி.)

(பூர்வபக்ஷம்—யஸ்ய பர்ணமயீ என்கிற வாக்யத்தில் விதிக்கப் பட்ட ஜீஹீவின் பர்ணத்தை யாகத்துக்கு அங்கமான ஜீஹீவின் வாயிலாக யாகத்துக்கு நியதமான அங்கமாவது போல்-உத்கீத உபாஸநம் யாகத்திற்கு அங்கமாகக் கொள்ளவேண்டும், உத்கீத உபாஸநம் யாகத்திற்கு அங்கமான உத்கீதத்தை விஷயமாகக் கொண்டதாகையால், உத்கீதத்தின் வாயிலாக யாகத்துக்கு நியதமான அங்கமாகக் கொள்ளவேண்டும்). (இதற்கு மேல் ஒரு ஆட்சேபம் எழுகிறது).

அவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுவோம். तन्निर्धारणानियमः-யாகங்களில் உத்கீத உபாஸநத்தை அங்கமாகக் கொள்ளவேண்டும் என்கிற நியமமில்லை, निर्धारणं-என்பதற்கு நிச் சயமாக மனத்தை அவஸ்தாபநம் செய்யவேண்டும்) (அடக்கவேண் டும்); அதாவது தியானம் என்று அர்த்தம். तन्निर्धारणानियमः-அங்க மாகக் கொள்ளவேண்டும் என்கிற நியமம் இல்லை. (கட்டாயமாக யாகங்களுக்கு உத்கீத உபாஸநம் இருக்க அவசியமில்லை) ஏன்? तद्दृष्टेः-அப்படி சுருதிகள் ஓதுவதாலே. இந்த மாதிரி கட்டாய நியமம் (உத்கீத உபாஸநத்திற்கு) இல்லை என்பது இந்த சுருதியில் காணப்படுகிறது- तेनोभौ कुरुतः यश्चैतदेवं वेद, यश्च न वेद-ஓம் என் பதை உச்சரித்ததும், இரண்டு பேர்களும் கர்மாவை அனுஷ்டிக்க வேண்டும்-இரண்டு பேர்கள் யாரென்றால்-ஒருத்தன் உபாஸநம் செய்பவன்-இன்னொருவன் உபாஸநம் செய்யாதவன்-ஏனெனில் இங்கே உபாஸநம் செய்யாதவன் கூட அவனாலும் தியானிக்கப் படவேண்டும் (என்று சொல்லப்படுகிறது-) (சுருதி வாக்யத்தி னாலே) மேலும் அந்த உத்கீத தியானம் யாகத்திற்கு அங்கமாக விருப்பின், அந்த உபாஸநத்துக்கு அது அவசியம்

இருக்க வேண்டியதில்லை என்று சொல்வது பொருந்தாது. இந்த விதமாக உத்கீத உபாஸநம் அங்கமாவதில்லை என்று நிச்சயமாகத் தீர்மானிக்கப்படுமாகில், அந்த தியானத்தைப் பற்றிய விதி அதன் பலனை ஸ்பஷ்டமாகக் காண்பிக்கிறது. அவ்விதம் இருப்பதால், ராத்ரி ஸத்ரம் செய்யப்படும் போது-ஒரு வசனம் உண்டு (ராத்ரி ஸத்ர நியாயத்தினுல்) वीर्यवत्तरत्व कर्मणात् पृथग्भूतमेव फलमित्यत्र गम्यते வீர்யம் கொண்டதாக பலன் இருக் இருக்கிறது, அந்த பலன் பிரதானமான யாக கர்மாவை விட வேறுகவும் விருக்கிறது.

நீ கேட்கலாம்- இங்கே வீர்யம் கொண்டதாக விருக்கிறது என்பதின் அர்த்தம் யாது? கர்ம பலத்தைத் தடுக்காமல் இருப்பதே (அப்ரதி பந்தம் (தடை) இல்லாததே யாகும்). அந்த தடை யாக பலனை அடைய முடியாமல் தடுக்கிறது-(அந்த கர்மாவைவிட இன்னும் பலமுள்ள வீர்யமுள்ள கர்மாவின் பலனுக-அனுபவிக்கப் பட்டு முடியும் வரை தடையாக விருக்கிறது. இவ்விதமான தடையில்லாமை பலனைத் தடுக்க வில்லாமையாக ஆகும். இந்த தடையில்லாமை அதுவே ஒரு பலனுகும். அது யாக பலனை விட வேறுனது. அந்த யாகத்திற்கு ஸ்வர்க்காதிலோக மடைதலை பலனுகக் கூறுகிறது. அதனுலே சூத்ரத்திலே ஓதப்பட்டிருக்கிறது- அப்ரதிக் பந்த-பிருதக்பலம் (உத்கீத உபாஸநத்துக்கு) தடையின்மை யாகிற தனிப்பலன் ஓதப்படுகிறது. तदभावोऽप्रतिबन्धः। स्वर्गादि .. फलम्। तदिदमुच्यते पृथग्ध्यप्रतिबन्धः फलमिति)

ஆகையால் உத்கீத உபாஸனை கர்மாங்கங்களை ஆஸ்ரயம் செய்தாலும் கூட-யாக சடங்குகளின் பலன்களைவிட வேறுனதைக் கொடுக்க சக்தி பெற்றது. கோ தோஹநேந பசுகாமஸ்யப்ரணயேத்-பசுவை விரும்புகிறவன் பால் கறக்கும் பித்தளைப்பாத்திரத்தில் நீரைக் கொண்டு வர வேண்டும் என்கிற வேதவாக்யத்திற் போல, பசுவில் விருப்ப மிருந்தால் பித்தளை நீர் கொண்டு வருவது இல்லாவிடில் இல்லை என்கிற ரீதியில் அநியதமான அங்கமாகிறதா இல்லையா-என்பதில் வீர்யவத்தரத்வமாகிற பலனில் விருப்ப மிருந்தால் உத்கீத உபாஸநத்தோடுயாகத்தைச் செய்யவேண்டும்

என்றும், அப்பலனில் விருப்பமில்லாவிடில் அவ்வுபாஸந மில்லாமலே யாகத்தைச் செய்ய வேண்டும்-என்று கொள்ளவேண்டும் அதே மாதிரி இங்கேயும் உத்கீத உபாஸனத்திற்கு வீர்யவத்தரத்வமே பலன் எனக்கூறலாம். அதனுலே யாகங்களிலே உதகீத உபாஸநங்களிலே, நியமம் இல்லாதபடி உபஸம் ஹாரம் ஒப்புக் கொள்ளப் படுகிறது.

(இங்கு சொல்லப்படுவது - ராத்ரிஸத்ர நியாயம் - ராத்ரி ஸத்ரயாகம் வேதத்தில் விதிக்கப்பட்டது. இதற்குப்பலன்-இந்த ராத்திரி ஸத்ரயாகம் செய்பவர்கள் நிலே நிற்கிருர்கள்-என்கிற அர்த்த வாதவாக்யத்தில் சொல்லப்பட்ட பிரதிஷ்டை (நிலே நிற்கை என்கிற பலனுகும், இந்த பலன் இந்தயாகத்திற்குவிதிக் கப்படுசிறது என்று கொள்ளவேண்டும் என்பது பூர்வ மீமாப்ஸ ஸித்தம். அதுபோல உத்கீத உபாஸநத்திற்கு விர்யவத்தரத்வமே பலனுகும். இந்த பலன் உத்கீத உபாஸநத்திற்கு உள்ளது. யாகத்தின் பலன் ஸ்வர்க்கம்-அதை விட வீர்ய வத்தரமான பலன் உத்கித உபாஸநத்துக்கு-உண்டு-அதனுல் ஸ்வர்க்கம் தடைபடாமலிருக்கையாகும். அந்த தடையை உத்கீத உபாஸநம் நீக்கி-ஸ்வர்க்க பலனே விரைவில் அடையும்படி செய்கிறது. அதாவது உத்கீதம் தடையை நீக்கும் என்பதாகும்).

*பிரதாநாதி கரணம் (3-3-18)*

### ஸூ. प्रधानवदेव तदुक्तम् (3-3-42)

### பிரதாநவதேவ ததுக்தம் (do)

ப்ரதாநவத் ஏவ (இந்திராய ராஜ்ஞே-இந்த்ராய அதிராஜாய-இந்த்ராய ஸ்வராஜ்ஞே-என்கிற மூன்று இடங்களிலும்) ஹவிஷ் ப்ரதாநாவிருத்தி செய்வது போலே (ஏதாம்ஸ்ச ஸத்யாந் காமாநி என்னுமிடத்திலும் தர்மி சிந்தனத்தின் ஆவிருத்தி செய்யப்பட வேண்டும். ததுக்தம் - இந்த விஷயம் யேற்கனவே சொல்லப் பட்டது (எங்கே;) நாநா வா தேவதா ப்ருதக்த்வாத் என்ற ஸங்கர் ஷகாண்டத்தில் சொல்லப்பட்டது.

(தைத்ரீயத்திலே 2-3-6ல் இந்தராய ராஜ்ஞே புரோடாஸ மேகாதஸ்க பாலம் நிர்வபேத்-இந்த்ராயாதி ராஜாயா-இந்திராய ஸ்வராஜ்ஞே-என்ற விடத்தில் விதிக்கப்பட்டிருக்கிற ஹவிஸ்ஸீக்கு உத்தேஸ்ய தேவதை இந்திரன்-அவன் ஒருவனாக விருந்தபோதிலும், ராஜ்ஞே-அதிராஜாய-ஸ்வ ராஜ்ஞே (அதாவது ராஜத்வம் அதிராஜத்வம் - ஸ்வராஜத்வம்) என்று விசேஷணகார பேதத்தினால் உத்தேஸ்யாகாரம் வேறு படுவதால், உத்தேஸ்யமும் வேறுபடுகிறது - இதனால் இவை மூன்று யாகங்களாகக் கொள்ளப்பட்டு ஹவிஸ் பிரதானம் ஆவிருத்தி செய்யப்படுகிறது. அது போல இங்கேயும் உபாஸ்யாகாரம் வேறு படுவதையிட்டு, உபாஸ்யம் வேறுபடுகிறபடியால், குணோபாஸநங்களிலும பரமாத்மா ஸ்வரூபோபாஸநம் ஆவிருத்தி செய்யப்படவேண்டும். இது தஹர வித்யையைப் பற்றியது இதனால் ஸித்திப்பது குண பேதத்தினால் குணி பேதம் சொல்லித் தீரவேண்டியது) அதாவது குணத்தோடு கூடிய குணியை உபாஸிக்கவேண்டும்).

தஹர வித்யையில்-சா. 2. 8-1-6-ல் तद्य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान्-எவர்கள் இங்கிருந்து சரீரத்தை விட்டுப் புறப்படுகிறார்களோ, அவர்கள் பரமாத்மாவை அறிந்து கொண்டு அந்த பரமாத்மாவின் நித்யத்வம் - கல்யாண குணங்களை நினைவிற் கொண்டு . (ஸத்யாநி-காமாநி-): இங்கு தஹராகாசத்தை பரமாத்மாவாக உபாஸிக்க வேண்டியது, என்று சொல்லி, एतांश्च सत्यान् कामान्-இந்த நித்யத்வம் (ஸத்ய விகாரமற்றது)-கல்யாண குணங்களை உபாஸிக்க வேண்டியது என்று தனியாக விதிக்கப்பட்டது. இதில் சம்சயம் - குண சிந்தனம் யேற்படினும், அந்த அந்த குணவிசிஷ்ட பரமாத்மா-தஹரஸ்ய-உள் இருக்கும் ஆத்மாவை-சிந்தனை ஆவர்த்தி செய்யப்பட வேண்டியதா-அல்லது இல்லையா? குணத்தை மாத்திரம் உபாஸிக்க வேண்டுமா?

(அதாவது தஹர வித்யையில் சொல்லப்பட்டது-தஹராகாசமும் குணாஷ்டகமும் சேர்ந்து உபாஸிக்கப்பட வேண்டியது-அப்படி உபாஸிக்கும் போது தஹராகாசமாகிற பரமாத்மாவின் உபாஸநத்தையும் மறுபடி செய்ய வேண்டுமா-வேண்டாமா?

என்பது பூர்வபக்ஷம். குணோபாஸநம் மாத்திரம் விதிக்கப்படுவதால், குணியான பரமாத்மாவைச் சேர்த்துக் கொள்ளாமல் அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகமே வுபாஸனம் செய்ய வேண்டியது.)

தஹராகாசத்துடன்கூட அபஹதபாப் மத்வாதி குணாஷ்டகம் சிந்திக்கப்பட வேண்டியதா - அடிக்கடி தியானிக்கப்படவேண்டியதா-ஏனெனில் அந்த தஹராகாசமே பரமாத்மாவே (குணி). அந்த குணீயை ஸக்ருத் (ஒரு தடவை) சிந்தித்தல் கூடும். அதனாலே, இந்த குணங்களுக்காக அவனைப்பற்றிய உபாஸனை அடிக்கடி ஆவர்த்தனீயம் அவசியமில்லை. (திரும்பப் படிப்பது அவசியமில்லை). (பூர்வபக்ஷம்)

இவ்விதம் சொல்லப்படுமாகில்-நாம் பதில் கூறுவோம். प्रदान-वदेवेति ராஜத்வம், அதிராஜத்வம் ஸ்வராஜத்வம் என்ற குணம் வேறு படுவதின் மூலம் ராஜத்வம் முதலிய குணங்களுடன் கூடின தேவதை வேறுபடுவதால் அந்த அந்த தேவதையைக்குறித்து தனித்தனியே ஹவிஸ்ஸை பிரதானம் (ப்ரக்ஷேபம்) செய்வது எவ்விதமோ-அது போல இங்கும் காண்க. அந்த விஷயம் நாநாவா தேவதா ப்ருதக்ஞானாத்-தேவதையானது வெவ்வேறாகவே தான் ஆகும். ராஜத்வம் முதலிய குணம் வேறுபடுவதால்-அந்த குணமுள்ள தேவதையும் வேறானதாகும்) இதனால் प्रयानप्रदानवदिति सेवार्थ: புரோடசத்தின் பிரதானம் (ப்ரக்ஷேபம்) செய்வது எவ்விதமோ அது போல இங்கும் காண்க. இதற்கு அர்த்தம் ஆவிருத்தி செய்யவேண்டும் - மேல் காட்டப்பட்ட ஆஹுதிகளைப் போல. இங்கே தஹராகாசம் ஒன்று தான் ஆயினும், அதற்கு அபஹத பாப்மத்வாதி குணங்கள் கொண்ட ஒரே குணீ - அந்த குணி முதலில் சிந்திக்கப்பட வேண்டியது. ஆயினும் ஒவ்வொரு குணவிசிஷ்ட பிருஹ்ம ஆகாரம் பின்னமாக விருப்பதால் ஸ்வரூப மாத்திரத்தாலே இந்த பிரத்யேக குண விசிஷ்ட ஆகாரம் வேறுபடுவதாலே; மேலும் இந்த சுருதி ஓதுகிற படியாலே-अपहतपाप्मा பாப மில்லாதவர், विजर: கிழத்தனமில்லாதவர் இத்யாதிகளால் குணவிசிஷ்ட பிருஹ்மம் - உபாஸிக்கத் தகுந்ததாக (விஹிதத்வாத்) யேற்படுவதாலே, முந்தின ஸ்வரூபத்

துடன் கூட அனுஸந்திக்கப்பட்ட அபஹதபாப் மத்வம்-அத்துடன் கூடிய (விசிஷ்டதயா) பிருஹ்மம் அனுஸந்தானுர்த்தமாக ஆவிருத்தி கர்த்தவ்யம் (செய்ய வேண்டியதாகும்).

(அதாவது இங்கு சொல்லப்படுவது ஒவ்வொரு குணத்துடன் தனித்தனியே விசிஷ்டமாகவிருக்கிறது-பிருஹ்மம் என்று ஆவிருத்தி செய்யவேண்டியது - (ஏங்கனமெனில் அபஹதபாப்மாதஹரா காஸ:; விஜரோ தஹராகாஸ:-என்று சொல்லும்படி ஆவிருத்தி செய்தால்-ஸ்வரூபம் மாறிவிடுகிறதே என்கிற விஷயமாகும்.)

இங்கே பரமாத்மாவே உபாஸ்யமாக விதிக்கப்பட்டிருக்கிறது (ஏனெனில்) அவனுக்குத்தான் இந்த எட்டு குணங்களின் சேர்க்கை யிருக்கிறது; அதனால் அந்த பரமாத்மாவை அந்த குணஷ்டகத்தோடு கூடிய (விசிஷ்ட பிருஹ்மமாக) பரமாத்மாவையே உபாஸிக்க வேண்டியது-அவனுடைய ஸ்வரூப நிரூபக தர்மங்களோடு சேர்த்து உபாஸிக்க வேண்டியதாகும். (அதாவது ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தத்வம் அமலத்வம் இத்யாதிகளுடன் கூட என்று அர்த்தம் - ஆவிருத்தி அடிக்கடி செய்ய வேண்டியது).

எப்படி? உதாரணமாக, யஜு. 2-3-6-2-ல் इन्द्राय राज्ञे पुरोडाशमेकादशकपालम् निर्वपेत् इन्द्रायाधिराजाय, इन्द्राय स्वराज्ञे- இந்திரன் ஒருவனாக விருந்தாலும், விதிக்கப்பட்டிருக்கிற ஹவிஸ்ஸிக்கு ராஜ்ஞே - அதிராஜாய - ஸ்வராஜ்ஞே என்று விசேஷணகார பேதத்தினால் உத்தேஸ்யாகாரம் வேறுபடுவதால், உத்தேஸ்யமும் வேறுபடுகிறது. அதனால் மூன்று யாகங்களாக கொள்ளப்பட்டு-ஹவிஸ்ஸுக்கு பிரதானம் ஆவிருத்தி செய்யப் படுகிறது. இங்கே இந்திரன் ஒரே வ்யக்தியானாலும், அவன் இந்த குணங்களைக் கொண்டிருப்பினும், அவனுடைய ஆகாரம் (ரூபம்) ஒவ்வொரு ராஜத்வ குணத்தினால் மாறுபட்டு விருக்கிறது, அதனால் ஒவ்வொரு ஆகாரத்திற்குத் தனித்தனியே ஆஹூதி ஆவிருத்தி செய்யப்படுகிறது. இந்த விஷயம் ஸங்கர்ஷண காண்டத்திலே நன்கு விளக்கப்பட்டிருக்கிறது - नाना वा देवता पृथक्त्वात् - திரவியங்கள் வேறுபடுவதாலும் விசேஷணங்களின் வேறுபாட்டை முன்னிட்டு தேவதைகளும் வேறுபடுவதால்-

மூன்று திரவிய தேவதா ஸம்பந்தங்களாலே கற்பிக்கப்பட்ட அந்த அந்த தேவதைதையே உத்தேசித்து வரிசையாக ஹவிஷ் பிர தானம் செய்யப்பட வேண்டும் (तत्तद् गुणसंस्थाकारस्य भिन्नत्वात् प्रधानावृत्तिः क्रियते. तदुक्तम् सङ्कर्षणे नाना वा देवतापृथक्त्वात्) ஆகையால் அபஹத பாப்மத்வம் முதலிய ஒவ்வொரு குணத்தை உபாஸிக்கும் போதும், குணியின் ஆவிருத்தி செய்யப்பட வேண்டும்-என்று தேறிற்று.

(இங்கு சொல்லப்படுவது—सत्यज्ञानम् - இத்யாதி ஸ்வரூப நிரூபக தர்மங்களோடு பரமாத்மா ஸ்வரூப உபாஸநம் செய்யப் பட்டபோதிலும், தஹர வித்யையில் ஓதப்பட்ட அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகங்களோடு கூடிய அந்த ஸ்வரூபமே உபாஸநம் மறுபடி செய்யத்தக்கது-என்கிற பூர்வபக்ஷம் தவறு. அபஹத பாப்மத்வம் முதலானவற்றோடு சேராத பரமாத்மா ஸ்வரூப உபாஸநத்தைக் காட்டிலும் அந்தக் குணங்களோடு கூடிய பரமாத்மாவின் உபாஸநம், அந்த அந்த குணங்களோடு கூடிய உபாஸ்யாகாரம் வேறாக யிருப்பதால், உபாஸ்யம் வேறாகிறது; அபஹதபாப் மத்வம் முதலிய ஒவ்வொரு குணத்தை உபாஸிக்கும் போதும் குணியின் ஆவிருத்தி (தனித்தனியே) செய்யப்படவேண்டும்-என்று தேறிற்று. (எதுபோல) ராஜத்வம் முதலிய குணம் வேறுபடுவதின் மூலம் அக்குணமுள்ள தேவதை யும் வேறாகவேதானாகும் என்பதும் உபதேசிக்கப்பட்டுமிருக்கிறது; தியானமும் வேறாகவேதானிருக்கிறது).

## லிங்கபூயஸ்த்வதி கரணம் (3-3-19)

**लिङ्गभूयस्त्वात् तद्धि बलीयः तदपि (3-3-43)**

**லிங்கபூயஸத்வாத் தத்தி பலீயஸ்ததபி ( do )**

லிங்கபூயஸ்த்வாத் (தைத்ரீயே-நாராயணாநுவாகம்-எல்லாப் பர வித்யைகளிலும் உபாஸிக்கப்படும் தேவதை எது? என்று நிர்த் தாரணம் செய்வது என்கிற விஷயத்தில், அடையாளங்களாகிற வாக்யங்கள் அதிகமாகயிருக்கையால், அந்த விஷயம் நிர்ணயிக்கப் படுகிறது. தத்ஹி பலீய:-அந்த வாக்யமன்றோ பிரகரணத்தைக்

காட்டிலும் பலீயஸ் (வலிமை கொண்டது)-தத் அபி - இந்த விஷயம் பிரதம காண்டமாகிற பூர்வமீமாம்ஸத்தில் சொல்லப் பட்டதாகும்.)

தைத்திரீயத்தில் தஹர வித்யைக்குப் பிறகு இப்படி வாக்யம் ஆரம்பமாகிறது-(மஹா நாரா. 11)- सहस्रशीर्षं देवं विश्वाक्षम् विश्वशम्भुवम् । विश्वं नारायणं देवमक्षरं परमं प्रभुम् - எவனுக்கு ஆயிரம் தலைகள் உள்ளனவோ, எவருடைய திருக்கண்கள் எல்லாவற்றை யும் பார்க்கின்றனவோ, எவர் உலகிற்கு நன்மை மங்களங்களைச் செய்கிறாரோ, எவர் இந்த விஸ்வமாக விருக்கிறாரோ-எவர் நாராயணரோ, எவர் மஹாபிரபுவோ, எவர் அகாரமான (அழி வில்லாத - மாறுதல் இல்லாத) பொருளோ எவர் எல்லோருக்கும் மேலான பிரபுவோ-அவர் ஸ்ரீமந் நாராயணர் ஆவர்:-மஹாநா. 11-1ல் முடிக்கிற போது-सोऽक्षरः परमः स्वराट् எவர் (அவரே) அக்ஷர:—முக்தாத்மாவைப் போல எல்லாவற்றிலும் விடுபட்டவர்; மேலான பரம்பொருள்-தனக்குத் தானே எஜமானன். இதில் சம்சயம் - पूर्वप्रकृत-தஹர வித்யையை ஒட்டி-ஸஹஸ்ர சீர்ஷம் என்று ஆரம்பித்து பரம: ஸ் வராட் என்று இறுதியாகப் படிக்கப் படும் வித்யை-பதினொராவது அநுவாகம்-தஹர வித்யையின் உபாஸ்யப் பொருளை நிர்ணயிக்கிறதா-உபாஸ்ய விசேஷ நிர் தாரணம் இதனால் செய்யப்படுகிறதா- அல்லது எல்லா வேதாந்த பர வித்யைகளிலும் உபாஸ்ய பொருள் (விசேஷம்) இன்னதென்று நிர்ணயிக்கிறதா? என்பதாகும்.

(தைத்திரிய பத்தாவது அநுவாகத்தில் தஹர வித்யை ஓதப் படுகிறது-அதற்கு அடுத்தது (11வது) நாராயண அநுவாகம். இந்த தஹர வித்யையில் உபாஸிக்கப்படும் பரம்பொருள் எது என்று நிர்ணயிப்பதால் - பத்தாவது அநுவாகத்தில் படிக்கப் பட்ட தஹர வித்யைக்கு, சேஷமாயிருக்கிறது.) என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது. சித்தாந்தம்-பர பிருஹ்மத்தை உபாஸிக்கும் எல்லா வித்யைகளிலும் உபாஸிக்கும்படி விதிக்கும் எல்லா வித்யைகளிலும் உபாஸ்ய தேவதை ஸ்ரீமந் நாராயணன் எனப்படும் பர பிருஹ்மமே-அவன் தான் ஜகத் காரணம் என்றும் காட்டப்பட்டது.)

(பூர்வபக்ஷம்) நாராயண அநுவாகம் தஹர வித்யையின் உபாஸிக்கப்படும் பொருள் நாராயணனே என்று நிர்ணயிப்ப தற்காகவே யேற்பட்டது; எப்படி? प्रकरणात्-இரண்டு அநுவாகங் களும் ஒரே பிரகரணமாகவன்றோ உள்ளது-(அதாவது முந்தின அநுவாகத்தில் ஓதப்பட்டது தஹர வித்யை-அதன் தொடர்ச்சி யாகும் நாராயண அநுவாகம்)- தை. நா. 10 - दहं विपापं परवेश्मभूतं यत् पुण्डरीकं पुरमध्यसंस्थम्। तत्रापि दहं गगनं विशोकः; तस्मिन् यदन्तस्तदुपासितव्यम्-பரமாத்மா இருக்கிற இடம்-உபாஸக னுடைய சரீரத்தின் நடுவிலிருப்பது,மிகச்சிறியதாகவிருப்பதுமான இதயத்தாமரை-அதில் அதை விடச் சிறியதாயும் பாபமற்றதாயும் கிழத்தனமற்றதாயும் முதலான அஷ்ட குணங்களை உடையதாக-ஆகாஸத்தைப் போல அளவிட வொண்ணுதபடி யிருக்கும் பரம் பொருளும்-அதனுள் இருக்கும் எட்டு குணங்களும் உபாஸிக்கப் படவேண்டியது. - என்பதாகும். இந்த அநுவாகத்திலே पद्मकोशप्रतीकाशं हृदयं चाप्यधोमुखम् - தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருக்கும் தாமரை போன்ற ஹ்ருதயம்-கழுத்தின் ஸந்திக் குக் கீழ், கொப்பூழுக்கு மேல்; இத்யாதிகளால் ஹ்ருதய புண்ட ரீகத்தைச் சொல்லி நாராயண அநுவாகம் தஹர வித்யையின் உபாஸ்யப் பொருளை நிர்த்தாரணம் செய்வதற்க்காகவே யேற் பட்டது என்னும் விஷயத்தை வலியுறுத்துகிறது (பூர்வபக்ஷம்).

இப்படிச் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுவோம் - लिङ्गभूयस्त्वात् - அடையாளங்களாகிற வாக்யங்கள் இருக்கிற படியால்-இந்த விஷயம் தேறுகிறது-நாராயணனே எல்லா வித்யைகளிலும் உபாஸ்ய தேவதை. இந்த நிகில பரவித்யா உபாஸ்ய விசேஷம்-இந்த ஸ்ரீமந் நாராயணனே-என்று நிர்த் தாரணம் செய்வதற்க்காகவே மீண்டும் லிங்கங்கள் (அடையா ளங்கள்) காணப்படுகின்றன (அவவிதமே எல்லாப் பர வித்யை களிலும் அக்ஷரம், சிவன்-சம்பு பரபிருஹ்ம, பரம் ஜ்யோதி-பரதத்வம்-பரமாத்மா இத்யாதி சப்தங்கள் காட்டுவது-ஆங்காங்கு குறிக்கப்படும் உபாஸ்யப் பொருள் இங்கு அந்தந்த சப்தங்க ளாலேயே அனுவதிக்கப்பட்டு, அது ஸ்ரீமந் நாராயணனே என்று காட்டப்படுகிறது. திரும்ப திரும்ப பல பெயர்களைப் படித்த

பிறகு-எல்லா வித்யைகளிலும் படித்த பிறகு, ஸ்ரீமந் நாரா யணனை இந்த சப்தங்களால் குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறார்- அந்த ஸ்ரீமந் நாராயணரே ஸர்வ வித்யைகளிலுமுள்ள உபாஸ்யப் பொருள்களைக் கூறும் பரம்பொருளை நாராயண ஏவ; அவருக்கே அஸ்தூலத்வம் முதலிய கல்யாண குணங்களோடு ஆனந்தாதி குணங்களும் உண்டு-அத்தகைய பரப்பிருஹ்மம் அவரே என்று இந்த வாக்யங்களால் மிகுதியான லிங்கங்களால் - அடையாளங் களால் காட்டப்படுகிறார். लिङ्ग भवति - அடையாளங்களாகிற வாக்யங்கள் பல விருக்கின்றன. (नारायण एव - ஸ்வரூப நிரூபக குணங்கள் முந்தியே ஸித்தம்-அதனால் ஸ்வரூபம் நாராயணனே- பிற்பாடு நிரூபக ஸ்வரூப தர்மங்கள்-विधानभूतस्त्वं लिङ्गम् भवति- त्यन्वयः। लिङ्गम् भवति-हेतुर्भवति என அர்த்தம். भूयः बहुतर लिगम् भवतीत्यन्वयः ।१।

இங்கு லிங்க சப்தம் - चिह्नपर्यायः அடையாளங்கள்-அர்த்த சாமர்த்தியம் கொண்ட அடையாளங்கள் - भूयः என்பதால் பஹீ தரம் (வாக்யங்கள் மிகுதியாக விருக்கின்றன) என்று அர்த்தம். तद्धि - வாக்யம் प्रकरणाद् बलीयः - பூர்வபக்ஷத்தில் சொல்லப்பட்ட பிரகரணத்தைக் காட்டிலும் இந்த வாக்யங்களே பலீயஸ் (வலிமை பெற்றவை). பூர்வமிமாம்ஸ நியாயம் 3·3-24 श्रुतिलिङ्ग वाक्य प्रकरणस्थान समाख्यानाम् (இந்த ஆறும்-அங்காங்கி பாவம் சொல்வது. समवाये ஒன்றாகப் பிரயோகப்படும்போது - पा(प)र दौर्बल्य मर्थविप्रकर्षात् - மேல் படிக்கப்படும் ஒன்று வரிசைக் கிரம மாக வரும் பின் சொல்லப்பட்டதைவிட அர்த்த சாமர்த்திய முள்ளது. (பலீயஸ்).

(ஸ்வதந்திரமான சுருதி வாக்யங்கள் எல்லாவற்றிலும் மிக மிக பலீயஸ். அதற்கு அடுத்தாற்போல லிங்கம் (அடையா ளங்கள்) - அதற்குப் பின்பு வரிசைகிரமமாக வாக்யங்கள் பிர கரணங்கள் (சந்தர்ப்பங்கள்) நீண்ட வாக்யங்கள்) ஸ்தானம்- ஸமாக்யா நாம்-(அங்காங்கி பாவம் சொல்வது)-வ்யுத் புத்திக்கு இடம் தருவது-பல சுருதி வாக்யங்களுக்கும் பல சாகைகளுக்கும் சம்பந்தம் காட்டுவது-இத்யாதி பிரமாண விதிகளாகும்).

மேலே சொல்லப்பட்டது என்னவென்றால் पद्मकोशप्रतीकाशम्- தலைகீழாக விருக்கும் தாமரை போன்ற ஹ்ருதயம் - இத்யாதி வசனம் தஹர வித்யையின் சேஷம் (மீதியுள்ளது)-அதன் உபாஸ்யப் பொருளை விளக்க வந்தது-(நாராயண அநுவாகம்)-அதனை வலியுறுத்த வந்தது-என்பதாகும் (பூர்வபக்ஷம்)-இது சரியாகாது. बलीयसा प्रमाणेन பலமுள்ளதான பிரமாணத்தினால் காட்டப்படுகிறது-அதாவது நாராயண அநுவாகம் எல்லாப் பரவித்யைகளிலுமுள்ள உபாஸ்யப் பொருளை (நாராயணன்) என்று காட்டுவதற்க்காகவே யேற்பட்டது-அதில் தஹர வித்யையும் சேர்க்கப்பட்டதாகும். அங்கேயும் ஸ்ரீமந் நாராயணனை-மற்ற பர வித்யைகளைப் போலவே - உபாஸ்யமான தேவதையாகும்-அந்த வசனம் சரியாகும் (नारायणस्योपास्यत्वेन तद्वचनोपपत्तेः)

இதனால் நாம் எண்ணிவிடக் கூடாது सहस्रशीर्षं - இத்யாதி வாக்யங்கள் இரண்டாம் வேற்றுமையில் உள்ளது-அதற்கும், முந்தின அனுவாகத்தில் ஓதப்பட்ட உபாஸகனுக்கும் சப்பந்தம் உள்ளது (என்று கூறக்கூடாது). ஏனெனில் तस्मिन् यदन्तः तदुपासितव्यम् - உபாஸிக்கக் கடவது (எது) எது அதற்குள் இருக்கின்றதோ-அது உபாஸிக்கத் தக்கது என்று 'த்வ்ய:' என்கிற விதி பிரத்யயத்தினால்-உபாஸகனோடு சம்பந்தத்தைக் காட்டுகிறது; க்ருத் ப்ரத்யயத்தினால் உபாஸ்யமான கர்மத்தினால் விளைவதான சப்பந்தம் சொல்வதால் तदुपास्ये இரண்டாம் வேற்றுமை அவனால் உபாஸிக்கப்படும் உபாஸ்யப் பொருளுக்கு பொருந்தாது.

(அதாவது सहस्रசீர்ஷம்-என்று இரண்டாம் வேற்றுமை படிக்கிறது. முந்தின அநுவாகத்தில் உள்ள உபாஸனையோடு இந்த இரண்டாம் வேற்றுமை சேருகிறது-அதனால் முந்தின அனுவாகத்திற்கு இந்த நாராயண அநுவாகம் சேஷமே என்கிற பூர்வபக்ஷியின் வாதம் சரியில்லை. ஸஹஸ்ர சீர்ஷம் உபாஸித-என்று முந்தின அனுவாகத்தில் இல்லை. உபாஸிதவ்யம் என்றே உள்ளது. அது ஸஹஸ்ர சீர்ஷம் என்கிற இரண்டாம் வேற்றுமை பதத்தோடு அந்வயிக்காது. இன்னொரு காரணமும் கூறப்படுகிறது)- அதாவது-विश्वमेवेदं पुरुष इந்த புருஷனே இந்த விஸ்வமாகும்; तत्त्वं नारायणः परः - மேலான தத்வம் நாராயணனே-இத்யாதி

வாக்யங்களில் முதல் வேற்றுமையில் பல பதங்கள் ஓதப்பட்டிருக்கின்றன; ஸஹஸ்ர சீர்ஷம் என்று படிக்கப்படும் இரண்டாம் வேற்றுமையும் முதல் வேற்றுமை பொருளிலேயே படிக்கப்படுகிறது எதை தெளிவாகிறது. (த்வதீயைக்கு அர்த்தம் பிரதமத்தில் (முதல் வேற்றுமையில்) தான். (प्रथमार्थे द्वितीया वेदितव्या).

மேலும் अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणस्थितः— எந்தப் பொருள் இந்த உலகில் காணப்படுகின்றதோ, பார்த்தோ கேட்கப்படுகிறதோ நாராயணரே அந்த பிரதி வஸ்துவில் உள்ளும் புறமும் வ்யாபித்திருக்கிறார்-இதனால் ஸர்வ வ்யாப்தி ஓதப்படுகிறது-तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः। स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराड्—அந்த ஜ்வாலையின் நடுவிலே பரமாத்மா அமர்ந்திருக்கிறார் அவரே பிருஹ்மா-அவரே சிவன்-அவரே இந்திரன் அவரே அக்ஷரம். (முக்தாத்மாவைப் போல ஸ்வதந்தரர்) பரபிருஹ்மம். ஸ்வராட் (தனக்குத்தானே எஜமானர்). இந்த வாக்யங்களால் காட்டப்படுவது-ஸர்வஸ்மாத் பரன் (எல்லாவற்றிலும் மேலானவன்) ஸ்ரீமந் நாராயணரே ஸர்வத்ர வித்யைகளிலும் வுபாஸ்யமான தேவதை என்று நிர்ணயிப்பதற்காக-ஸஹஸ்ர் சீர்ஷம் என்கிற பதத்திலுள்ள த்வீதீய (இரண்டாம் வேற்றுமைக்கு) பிரதமார்த்தம் (முதல் வேற்றுமையின் அர்த்தம் (பொருளிலேயே)-அதாவது த்வதீயைக்கு அர்த்தம் பிரதமத்தில்தான்-என்பது நிச்சயிக்கப்படுகிறது.)

ஆகையால் பரபிருஹ்மத்தை உபாஸிக்கும்படி விதிக்கும் எல்லா வித்யைகளிலும், உபாஸ்ய பொருள் ஸ்ரீமந் நாராயணன் எனப்படும் பரபிருஹ்மமே ஆகும்-இந்த விஷயம் பதிமூன்றாவது அநுவாகத்தில் காட்டப்பட்டதாகும்.

## பூர்வவிகல்பாதி கரணம் (3-3-20

**பூ.சூ. पूर्वविकल्पः प्रकरणात् स्यात् क्रिया मानसवत्** *(3-3-44)*

**பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மானஸவத் ( do )**

(மனஸ்சிதி - முதலான அக்னிஸமுஹம்) க்ரியா ஸ்யாத் - கிரியா மயமான யாகத்துக்கு அங்க பூதமாகிற ப்ரகரணாத் கிரியா மயமான யக்ஞத்தைக் காட்டிலும் பிரகரணமாகையால்

பூர்வவிகல்ப:—முந்தியதான இஷ்டக சிதாக்னியோடு விகல்பம் செய்து கொள்ளப்படுகிறது - மாநஸவத் - மானஸகிரஹத்தைப் போல.

அவதாரிகை முந்தின அதிகரணத்தில் பிரகரணத்தைக் காட்டிலும் வாக்யம் வலிமை மிக்கது என்று சொல்லப்பட்டு, நாராயண அநுவாகம் தஹர வித்யைக்கு சேஷமானது என்னும் வாதம் தள்ளப்பட்டது. இந்த அதிகரணத்தில் ''மனஸ்சித்'' முதலான அக்னிகள் பிரகரணமாகிற ஹேதுவாலே கிரியாமய மான யக்ஞத்துக்கு ஸேஷமானவை என்கிற வாதம் தள்ளப் படுகிறது.

சுக்ல யஜுர் வேதத்திலே - அக்னி ரஹஸ்யம் என்கிற உபநிஷத்திலே, மனஸ்சித் எனப்படும் அக்னிகள் ஓதப்படு கின்றன. மனஸ்ஸின் செயல்களை அக்னியாக உருவகப்படுத்தும் போது, மனஸ்சிதாக்னி என்று அழைக்கப்படுகிறது. அது போலவே வாக்கில் செயல்களை அக்னியாக உருவகப்படுத்தும் போது, வாக்சிதாக்னி என்று அழைக்கப் படுகிறது. இந்த பிரகாரம் பிராணசிதாக்னி கர்ம (இந்திரிய) சிதக்னி ஆகியவற்றை யும் தெரிந்து கொள்ளவும். இந்த மனஸ்சிதாக்னி கிரியாமயமான யக்ஞத்துக்கு சேஷமானதா-அல்லது வித்யா மயமான யக்ஞத் துக்கு சேஷமானவையா என்கிற கேள்வி-இதை ஒட்டி பூர்வபக்ஷம், சித்தாந்தம் பேசப்படுகின்றன.

(பிரபல பிரமாணமில்லாதபடியால் மனஸ் சிதாக்னிகளும் பிரகரணத்தினாலே யாகத்திற்கு சேஷத்வமா என்பது சங்கை.)

வாஜஸநேயகத்திலே, அக்னி ரஹஸ்யம் என்கிற உபநிஷத் தில் மனஸ் சிதாக்னிகள் ஓதப்படுகின்றன. (10-5-30)ல் मनश्चितः, वाक्चितः प्राणचितः-चक्षुश्चितः, श्रोत्रचितः, अग्निचितः - என்று பல பிரகாரம் சிதாக்னிகள் இருக்கின்றன. இதில் சம்சயம் இந்த மனஸ்சிதாக்னிகள் - உருவகங்களாகச் சொல்லப்படு கின்றதே (வாக்-மனம்-பிராணன் இத்யாதி) அவை सांपादिकत्वेन ஆரோபிதமானதாக - கல்பிதமானதாலே - வித்யாரூப (ஞான ரூபமா) அக்னிகளா - அல்லது க்ரியா மயக்ருது (யாகத்திற்கு

உபயோகப்படும்படி) கிரியா ரூபமா? இதனுல் வித்யாமயக்ருதுத்வ அனுப்ரவே சேந-வித்யா ரூப யாகத்திலே உபயோகப்படுவதால்-வித்யா (ஞான) ரூப என்று சொல்லும்படியான விஷயத்தில் சூத்ரம் அமைந்திருக்கிறது-க்ரியா ரூபத்வமே என்பதாகும். पूर्वविकल्पः- முந்தியதான இஷ்டக சிதாக்னியோடு விகல்பம் கொள்ளப்படுகிறது - என்பதால் சிதாக்னியாக கல்பிக்கப்படுவதால்-மனஸ்சித் போன்ற யாகங்களில் நுழைந்து வித்ய ரூபமாஞலும் க்ரியா மயமான யக்ஞத்தோடு சேரும்போது, கிரியா மயமாகின்றன. இதில் ஸ்தான விஷயமாக விதி ஒன்றுமில்லை· ஏனெனில் இந்த சுருதியில் (अग्नि) असद्वा इदमग्र आसीत् - அஸத்தான் முதன் முதலில் இருந்தது-இதில் இஷ்டகசிதாக்னி ஓதப்படுகிறது. அதில் கிரியா மயக்ரது சேர்ந்திருப்பதால், அங்கு கிரது (யாகம்) அருகில் இருப்பதால், கல்பிக்கப்பட்ட மனஸ்சிதாக்னிகள் அந்த பிரகரணத்திலே வருவதாலே, இஷ்டக சிதாக்னிகளுடன் விகல்பம் (இது வா-அதுவா என்கிற சந்தேகம்) செய்யப்பட்டு-க்ரியா ரூபம் தான் என்ருகிறது. இவை வித்யா ரூபத்தை யடைந்தபோதிலும் - கிரியாமய யாகத்தில் உபயோகப் படுவதால் கிரியா ரூபத்தை அடைகின்றன ·மானஸக்ரஹவத் (மானஸகிரஹத்தைப் போல).

மானஸகிரஹம்-अनया त्वा पृथिव्या पात्रेण समुद्रं रसया प्रजापतये जुष्टं गृह्णामि—என்கிற மந்திரத்திஞல் ப்ருதிவியைப் பாத்திரமாக வைத்து - ஸமுத்ர ஸோமரஸத்தை மனத்திஞல் கல்பிக்க வேண்டியது—பன்னிரண்டு தினங்கள் நடக்க வேண்டிய யாகத்திலே, பத்தாவது தினத்தில் மனத்தால் கல்பிக்கப்பட்டவை யாகையால்-மநோமயமான பாத்ரம் (க்ரஹம்) அதற்குரிய ஸ்தோத்ரம், ஸஸ்திரம் முதலியவை முற்கூறிய பன்னிரண்டு (த்வாதசாஹ) யக்ஞத்திற்கு அங்கமாயிருக்கையால் (சேஷமானதால்) கிரியா மயமாவது போல், மானஸமான மனஸ்சித் முதலான அக்னிகளும் கிரியா மயக்ருதுவோடு சேர்ந்தபடியால் க்ரியா ரூபத்தை அடைகின்றன. மனஸ்சித் முதலான அக்னிகள் ஓர் யாகத்தில் சேருவதை எதிர்பார்க்கின்றன (பன்னிரண்டு நாள் யாகத்தில்-பத்தாவது தினத்தில் அவிவாக்யம்-என்று சொல்லப்

படும் தினத்திலே பாடங்கள் ஓதப்படுவதில்லை-அன்று சண்டை சச்சரவு கூடாது). அதனால் மானஸக்ருதுவில் பாத்திரத்தில் ஸோமரஸ்த்தை எடுத்துப் போகும் விஷயத்திலே, அதனதன் (மநோநிஷ்பத்ம) ஸ்தானத்திலே, ஸ்தோத்ரம், ஓதுவது, யாக சேஷத்தைக் கொண்டு வருவது-அதை சாப்பிடுவது-இத்யாதி விஷயங்கள் வித்யா ரூபமாக விருப்பினும் கிரியாமயமாகவும்-யாகத்திற்கு அங்கமாக (சேஷமாக) விருப்பதாலும், கிரியா ரூபத்தை அடைகின்றன.

(இங்கு சொல்லப்படுவது-சதபத பிராஹ்மணம்-மனத்தினால் ஒருவனுடைய வாழ்க்கை கர்மாக்கள் 36000 அக்னிகளாகக் கற்பிக் கப்படுகின்றன. இந்த அக்னிகள் மனத்தினால் கல்பிக்கப்பட்ட உருவகம். இங்கே கேள்வி-கற்பிதமானதாலே இந்த அக்னிகள் வித்யாரூபமா-க்ருது மயமாக (ஏனெனில்) அவை யாகத்துடன் சம்பந்தப்பட்டதால் கிரியாமயம் என்பதற்கு உதாரணமாக ஸோம யாகத்திலே, ஒரு கற்பிக்கப்பட்ட சடங்கு இருக்கிறது. அதன்படி - யாகம் செய்பவன் ஸோமரஸத்தை சமுத்திரமாகக் கற்பித்து, அதில் பிருத்வியைப் பாத்திரமாக அமைத்து-அதில் சோமரஸத்தை எடுப்பது-(ஆனால் இங்கு சரியான அபிப்ராயம் வித்யை போதிக்கப்படுகிறது).

ஆகவே மனஸ்சித் முதலான அக்னிகள் வித்யா ரூபமாயினும்-கிரியா மயமானவையே-இஷ்டக சிதாக்னியோடு விகல்பிக்கப் பட்டவைகளாம். क्रियामय ऋत्वङ्गतया क्रियारूपत्वम् - கிரியா ரூபத்வமாகும். அது போல இங்கேயும் கொள்ள வேண்டிய தாகும்.

பூ. சு. अतिदेशाच्च (3-3 45)

அதிதேஸாத்ச (do)

அதிதேஸாத்ச-முதலில் சொல்லப்படும் இஷ்டக சிதாக்னி யின் வீர்யம் மனஸ்சித் முதலான அக்னிகளுக்கும் அதிதேஸம் சொல்லப்படுவதாலே, மனஸ்சித் முதலானவை கிரியாமய மானவையே யாகும்.

இஷ்டக சிதாக்னியினுல் விகல்பிக்கப்பட்டவைகளாக மனஸ்சித் முதலான அக்னிகள் கிரியா ரூபத்தை அடைகின்றன- என்பதற்கு இந்தக் காரணத்தினுலேயும் ஏற்படுகிறது - तेषामेकैक एव तावान् यावान् असौ पूर्वः-(அக்னி ரஹஸ்யம்-1-15) இவைகளுள் ஒவ்வொன்றும் முந்தியதான இஷ்டக சிதாக்னி எந்தக் காரியத்தை செய்கிறதோ-பிந்தியதான மனஸ்சித் முதலானவையும் அந்தக் காரியத்தையே செய்கின்றன என்று முன்கூறிய வாக்யத்துக்கும் பொருளாகும். இங்கே இஷ்டக சிதாக்னியின் காரியத்தைச் செய்வதற்கு சாமர்த்தியம் (வீர்யம்) மனஸ்சித் முதலிய அக்னிகளுக்கு மாற்றப்படுகிறது. அதனுல் அவை அவைகளுக்குத் துல்யமான காரியங்களை உண்டு பண்ணுகின்றன-என்பது விகல்பத்தினுல் யேற்படுகிறது. ஆகையால் இஷ்டக சிதாக்னிகளைப் போல, அந்த யாகங்களைச் செய்து முடிப்பதால், மனஸ்சித் முதலானவையும் அவைகளுக்கு அங்கமாக ஆகி, க்ரியாமய க்ருதுக்களில் பிரவேசித்து கிரியா ரூபத்தை அடைகின்லன. (இதனுல் இஷ்டக சிதாக்னியைப் போல கிரியா மயமான யக்ஞத்துக்கு அங்கமாக, மனஸ்சித் முதலானவையும் கிரியாமயமானவையே ஆகும்) (பூர்வபக்ஷம்) இவ்விதம் சொல்லப்படுமாகில்-நாம் பதில் கூறுகிறோம்.

ஸித். ஸூத். विद्यैव तु निर्धारणात् दर्शनाच्च (3-3-46)
வித்யை வது நிர்த்தாரணுத் தர்ஶநாச்ச (do)

வித்யா ஏவது - மனஸ்சித் முதலான அக்னிகள் வித்யா ரூபமானவையே (அதாவது வித்யாமயமான யாகத்துக்கு அங்கமானவையே). நிர்தாரணுத்-தீர்மானிக்கப்பட்டு சொல்வதாலே; தர்சநாத்ச - (சுருதியும் வித்யாமயமானயாகம் - இந்த பிரகரணத்திலே ஓதுவதாலே); (சித்தாந்த ஸூத்ரம்), உபயோகம் வித்யையில்தான் – கிரியையில் இல்லை-என்பதாகும்.

துசப்தம் பூர்வபக்ஷத்தைக் கண்டிக்கிறது. என்ன சொல்லப் பட்டதென்றுல், மனஸ்சிதாதிகள் க்ரியாமய யாகத்தில் உபயோகப்படுவதால் க்ரியாரூபம்தான் என்று சொல்வது - சரியில்லை. அவை வித்யாரூபமேயாகும். வித்யாரூப க்ருதுக்களில்

உபயோகம் என்று அர்த்தம். எப்படி? निर्धारणात् - (தீர்மானிக்கப் படுவதாலேயும்); दर्शनाच्च - சுருதியும் வித்யாரூபம் என்று சொல்வதாலே.

निर्धारणम् - சொல்லப்படுகிறது - ते हैते विद्याचित एव । विद्यया हैवैत एवं विद्श्चिता भवन्ति— ஏனெனில் அந்த மனஸ்சித் யாகங்கள் வித்யாமயமான யாகங்களுக்கு ஏற்பட்டவை (அங்கமாகவிருக்கின்றன). இவ்விதம் அறிகிறவனுக்கு; இந்த மனஸ்சித் முதவான அக்னிகள் வித்யா ரூபமான யாகத்தோடு தொடர்பு கொண்டனவாய் சயனம் செய்யப்பட்டவை யாகின்றன. வாக்கு, மனஸ்சக்ஷிஸ், இத்யாதிகளின் வ்யாபா ரங்கள் (சேஷ்டிதங்கள்) இஷ்டிகாக்னியைப்போல அடுக்கப் பட்டவைபோல விருப்பது அஸம்பாவிதம். ஆகவே அவைகளுக்கு வித்யாரூபம் கல்பிக்கப்பட்டதாகிலும் ஸ்தாபிதமானலும் சுருதிகளிலே विद्य चित एव வித்யைக்காகவே இவை யேற்பட்டவை विद्यया हैवेते-வித்யைக்காக ஏற்பட்டவை, என்று உறுதிப்படுத்துவ தாலே, இவை வித்யாமய யாகத்தில் உபயோகப்படுகிறபடியால் வித்யாரூபத்வத்தை மீண்டும் நினைவுபடுத்துவதற்க்காகவே நிச்சயிக்கப்படுகிறது.

இந்த விஷயம் சுருதிகளிலும் காணப்படுகிறது. இதே பிரகரணத்திலே, அவைகளின் முக்கியமான யாகம் - அதாவது வித்யாரூபகிரது (யாகம்) விவரிக்கப்படுகிறது - ते मनसैवाधीयन्त मनसैवा चीयन्त मनसैषु ग्रहा अगृह्यन्त, मनसाऽस्तुवन्त, मनसाऽशंसन्, यत् किञ्च यज्ञे कर्म क्रियते, यत् किञ्च यज्ञियं कर्म मनसैव तेषु मनोमयेषु मनश्चित्सु मनोमय मक्रियत - இவை (மனஸ்சித் அக்னிகள்) மனத்தி ஞல் உண்டாகப்பட்டவை, மனத்திற்காகவே யேற்பட்டவை; இவைகளின் விஷயத்தில் - சோமரஸபாத்திரங்கள் மனத்திஞலே எடுத்துக்கொள்ளப்பட்டவை; அவர்கள் அந்த ஸ்துதிகளை மனத்திஞல் ஓதிஞர்கள் - எந்த சிறிய சடங்குயாகத்தில் செய்யப்பட்டதோ – எந்த சிறிய காரியம் யாகத்தில் சம்பந்தப் பட்டதோ - மனத்திஞலேயே செய்யப்பட்டதாகும் - இந்த அக்னிகளும் மனத்திஞலேயே உண்டாக்கப்பட்டவையாகும்.

இம்மாதிரி வாக்யத்தினுல், எந்த யாகமும் கிரியாரூபமாக விருப்பின் - சிதாக்னியில் செய்யப்பட்டதாகும் - இதுமனத்திலே சிதாக்னியில் உண்டாக்கப்பட்டு - கல்பிக்கப்பட்டதாகும். இதி லிருந்து தெரிய வருகிறது-யாகமும் (क्रतुरपि विद्यामयोऽत्रप्रतीयते) வித்யாமயமேயாகும். (யாகம்கூட மனோமயம் என்று முடிக்கிறார்)

நீ சொல்லலாம் - இங்கே, இந்த பிரகரணத்திலே, விதியைப் பற்றி ஒரு வார்த்தையும் சொல்லப்படாததாலே, மேலும் பல ஸம்பந்தம் ஒன்றும் கொடுக்கிறதாக தெரியப்படாதாலே, இஷ்டிக சிதாக்னி பக்கத்திலே ஸ்தாபிக்கப்பட்ட கிரியாமயகிருது பிர கரணத்திலே, வித்யாமயகிரது சம்பந்தப்பட்டிருப்பதாலே, வித்யா ரூபமாக விருக்கும் அவை பாதிக்கப்பட்டு விரோதம் யேற்படலாம்; அப்படியானுல் நாம் கூறுவது அவ்விதமில்லை - என்று சொல்லி - இதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார்.

சூத்ரம் श्रुत्यादिबलीयस्त्वाच्च न बाधः (3-3-47)

ஸ்ருத்யாதி பலீயஸ்த்வாச்ச ந பாதஃ (do)

ஸ்ருத்யாதி பலீயஸ்த்வாத்ச - ஸ்ருதிலிங்கம் வாக்யம் இம் மூன்றும் பிரகரணத்தைக் காட்டிலும் பலீயஸ் (வலிமையுள்ளது) ந பாத: - மனஸ்சித் முதலான அக்னிகள் வித்யாமயமான யாகத்துக்கு அங்கமாக விருப்பதை, பிரகரணம்) தடை செய்யாது - பாதிக்காது.

சுருதி லிங்கம் வாக்யம் பிரகரணத்தைவிட பலீயஸ்ஸாக விருப்பதாலே, சுருதிகளால் அறியப்படுவதான க்ருது (மனஸ்சித் முதலான அக்னிகள்) வித்யாமயமான யாகத்துக்கு அங்கமாக விருப்பவையே என்று காட்டித்தருவதால் - இதனுல் யேற்படும் வலிமையற்ற (துர்பலமாகவிருக்கும்) பிரகரணத்தைக் கொண்டு தள்ள (பாதிக்க) முடியாது. இங்கே சுருதி (சத. பிரா. 10-4-1-12) சொல்வது ते हैते विद्याचित एव - முன் சூத்ரத்தில் விவரணத்திலே எடுக்கப்பட்ட வேதவாக்யங்களே சுருதியாகும் (அந்த அக்னிகள் ஞானத்திற்காகவே யேற்பட்டவை). அந்த

வாக்யங்களை இந்த சுருதி விவரிக்கிறது - चित्या हैवैत एवं विद्विचता भवन्ति - எவன் இதை இவ்விதம் அறிகிருனோ - அதாவது அந்த அக்னிகள் வித்யைக்காகவே யேற்பட்டவை - என்று; இதன் அர்த்தம் யாதெனில் மனஸ்சித் அக்னிகளும் அதுமாதிரி இன்னும் இதுபோல சிலவும் வித்யையினுல் க்ருது வுடன் சம்பந்தம் கொண்டவை-(मनश्चिदादयः चित्या भवन्ति इत्यर्थः இதற்கு லிங்கமாக "तान् हैतान् एवंविदे सर्वदा सर्वाणि भूतानि चिन्वन्ति, .अपि स्वपते-इति लिङ्गम् - இந்த வாக்யம் வித்யாமயமான க்ரதுவைஉடைய புருஷனுக்குத் தூங்கும் நேரமும் உள்பட-எல்லா நேரங்களிலும், எல்லா ஜீவராசிகளிலும் மனத்தாலே சயனம் செய்கின்றன, என்று ஓதுகிறது. (இதற்கு விளக்கமாக)-கிரியா மயமான இஷ்டகசிதம் முதலான யாகங்களோ அளவுபட்ட கர்த்தா காலம் கிரியை ஆகியவற்றை உடையவை. இதற்கு நேர் மாருனது வித்யா மயமான யாகம் என்று காட்டும் இந்த வாக்யம் மனஸ்சித் முதலானவை வித்யா மயமான யாகத்துக்கு அங்க மானவையே ஒழிய கிரியா மயமான யாகத்துக்கு அங்கமானவை யல்ல என்று நிர்ணயிக்கும் விஷயத்தில் லிங்கமாகிறது: இந்த லிங்க மான வாக்யமும்-एवंविदे चिन्वन्ति इति-முன் சொன்ன வித்யையை யுடைய புருஷனுக்காகவே சயனம் செய்கின்றன-என்பது வாக்ய பிரமாணமாகிறது. समभिव्याहारो वाक्यम् சேர்த்துப் படிப்பது வாக்யம்-என்று வாக்ய லக்ஷணம் சொல்லப்டுகையாலே-சயன கிரியை வித்யையையுடைய புருஷனுக்காகவே என்று கூறும் இது இவ்விஷயம் வாக்ய பிரமாணமாகிறது. இந்த விதமாக ஸ்ருதி லிங்க வாக்யங்கள் மனஸ்சித் முதலான அக்னிகள் வித்யாமயமான யாகத்துக்கு அங்கமானவையே என்று காட்டுவதால்-வித்யாமய க்ருதுவுக்கு எல்லாக் காலங்களிலும் எல்லா பூதங்களும் (ஜீவராசி களும்) மனத்தாலே சயனம் செய்கின்றன-என்று எவன் ஒருவன் இவ்விதமாக அறிகிருனோ-மனத்தினுல் கற்பிக்கப்படுகின்றதோ-என்று அர்த்தம் ஏற்படுகிறது. सर्वभूतकर्तृकम् सर्वकालव्यापि चयनं मनसा संपादितम् - இவ்விதம் யேற்படாது-(யாருக்குு?) அளவுபட்ட கர்த்ரு, கிரியை, கிரியா-இவைகளை உடைய கிரியா மயமான இஷ்டக சிதம் முதலான யாகங்களுக்கு ஏற்படாது. அதற்கு நேர் மாருனது. வித்யா மயமான யாகம் என்பதற்கு ஏற்படுவதால்-

அந்த வித்யா மயமான யாகத்துக்கு அங்கமானவையே ஒழிய, கிரியா மயமான யாகத்துக்கு அங்கமானவை அல்ல - என்று நிர்ணயிப்பதற்கு (तदनु प्रवेशो) लिङ्गम् भवति-லிங்கமாகிறது- அதற்கு வாக்ய பிரமாணமாகிறது. (வாக்ய லக்ஷணம் ஓதப்படுவதால் - சயன கிரியை வித்யையை உடைய புருஷனுக்காகவே என்று கூறும் விஷயத்தில்-வாக்ய பிரமாணமாகிறது-இவற்றை விட துர்பலமான பிரகரணத்தைக் கொண்டு இந்த அக்னிகளை வித்யா மயமான யாகத்திற்கு அங்கமாவதைத் தடுத்து கிரியா மயமான யாகத்துக்கு அங்கமாக்குவது பொருந்தாது - என்று நிருபிக்கப்பட்டதாகும்.

(இங்கு சுருத பிரகாசிகையில் சொல்லப்பட்டிருக்கிறது- வித்யாமயமான கிரதுவை உடைய புருஷனுக்கு தூங்கும் காலத்திலும் உள்பட எல்லாக் காலங்களிலும் எல்லா ஜீவராசிகளும் மனத்தாலே சயனம் செய்கின்றன என்று உபாஸகன் தன் மனத்தில் எல்லா ஜீவராசிகளையுமே தியானிக்க வேண்டும்- தன்னுடைய மனத்தில் மாத்திரம் சயனம் செய்வதாக தியானிப்பதில்லை. ஆகவே மனத்தினுல் கற்பிக்கப்பட்ட யாகம் எல்லாப் பிராணிகளிலும் எல்லாக் காலங்களிலும் செய்யப்படுவதாக - கருதப்படுகிறது (கல்பிக்கப்படுகிறது) என்று அர்த்தம் கொள்ள வேண்டும்).

இதுவரை மேலே சொல்லப்பட்டது-இங்கே யாகத்தை விதிக்கும் (विधिप्रत्ययाश्रवणात्) விதி (கிரியா மயமான யாகத்தைக் காட்டிலும் வேறுபட்டது வித்யா மயமான யாகம் ஒன்று உள்ளது என்று கூறுவது சரியில்லை-ஏனெனில் விதி பிரத்யயம் சொல்லப்படவில்லை மேலும் பல சம்பந்தம் ஓதப்படவில்லை. இதனுல் கிரியாமயமான யாகத்தைக் காட்டிலும் வேறு ஒன்று வித்யாமயமான யாகம் உளது என்பதற்கு ஆட்சேபம் எழ- அதற்கு சமாதானம் அடுத்த சூத்ரத்தில் கொடுக்கப்படுகிறது (அதாவது விதி இல்லை என்றாலும்-அதையும் கல்பித்து விட வேண்டியது என்பதாகும்).

**ஸி. ஸூ. अनुबन्धादिभ्यः प्रज्ञान्तरपृथक्त्ववत् दृष्टश्च तदुक्तम् (3-3-48)**

**அநுபந்தாதிப்ய: ப்ரஜ்ஞாந்தர பிருதக் த்வவத் திருஷ்டஸ்சததுக்தம் (3-3-48)**

*அநுபந்தாதிப்ய:—(சம்பந்தம்) - யக்ஞத்துக்கு சம்பந்தப் பட்ட க்ரஹம் ஸ்தோத்ரம் ஸஸ்திரம் ஆகியவற்றாலும், முன் கூறிய சுருதி முதலானவற்றாலும் கிரியாமயமான யாகத்துக்கு வித்யா மயமான யாகத்தைக் காட்டிலும் வேறுபாடு அறியப்படு கிறது. பிரஜ்ஞாந்தர ப்ருதக்த்வவத் - உபாஸாநந்தரங்களான தஹர வித்யை முதலானவை (கிரியாமயமான யாகத்தைக் காட்டிலும் வேறுபட்டவை என்று அறியப்படுவது போல) திருஷ்ட: ச-அநுவாத ரூபமாய் இருக்கும் வாக்யங்களிலும் விதி கற்பிக்கப்பட்டு பிரமாணமாவது போல) காணப்படுகிறது. தத் உக்தம் (ச)-இது பூர்வமீமாம்ஸையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.*

*இஷ்டக சிதாக்னியை அங்கமாகக் கொண்ட கிரியாமயமான யாகத்தைக் காட்டிலும், முற்கூறிய வித்யா மயமான யாகம் அநு பந்தங்கள் (சம்பந்தங்களால்) வேறுபட்டது என்று அறியப் பட்டது (அதாவது அனுபந்தங்களே காரணமாவதால் வேறு என்று அறியப்பட்டது ) अनुबन्धा:-சம்பந்தப்பட்டவை-யாகத்தி னோடு சம்பந்தப்பட்டவை—கிரஹம், ஸ்தோத்ரம் சஸ்திரம்- இத்யாதிகளாகும். அவை मनसैषु ग्रहा अगृह्यन्त, मनसा ऽस्तुवन्त, मनसाऽशंसन् - என்கிற வாக்யத்தில் காட்டப்பட்டிருக்கின்றன. சூத்ரத்தில் அநுபந்தாதிப்ய:-என்னும் பதத்தில் ஆதி பதத்தால் முன் சூத்ரத்தில் சொன்ன சுருதிலிங்க வாக்யங்கள் காட்டப்படு கின்றன. ஆக, சூத்ரத்தில் அநுபந்தாதிப்ய என்கிற முதல் பதம் சுருதிலிங்க வாக்யங்களாலும் கிரஹ ஸ்தோத்ர ஸஸ்திரங்களா லும் கிரியா மயமான யாகத்தைக் காட்டிலும் வேறுபட்ட வித்யா மயமான யாகம் அறியப்படுகிறது என்று பொருள் படுகிறது. இனி அடுத்த பதம் இந்த விஷயத்திலே ஒரு திருஷ்டாந்தமும் உண்டு என்று சொல்கிறது-அதாவது - श्रुत्यादिभिः सानुबन्धैर्विद्यामयक्रतुः पृथगवगम्यत इत्यर्थः-கிரியா மயமான யாகத்தைக் காட் டிலும் வேறுபட்டது வித்யா மயமான யாகம் என்பதாகும்.*

प्रकरणात् पृथक्त्वम्-மற்ற வித்யைகள் எப்படி வெவ்வேறாக விருக்கின்றனவோ-அது போலவே இங்கும். மற்ற வித்யைகளாகிறவை-தஹரவித்யை கிரியா மயமான யாகத்திலிருந்து வேறுபட்டது என்று சுருதிகளாலேயே எப்படி அறியப்படுகின்றனவோ-அதைப் போலவே இங்கும் அறியப்பட வேண்டியது. (அதாவது தஹ்ர வித்யை ஞானமயமாகும் அதனால் ப்ரக்ஞாந்தரம் என்று அழைக்கப்படுகிறது-அதைப் போல இன்னும் சில வித்யைகளும் உள. இந்த உபாஸனங்கள் கிரியா மயமான யாகத்தைக் காட்டிலும் வேறுபட்டவை என்று சுருதி முதலானவற்றால் எப்படி அறியப்படுகின்றனவோ-அப்படியே முற்கூறியதும் அறியப்பட வேண்டியதாகும். இதனால் கிரியா மயமான யாகத்தைக் காட்டிலும் வித்யா மய யாகம் வேறுபட்டதாக - அறியப்பட்டவளவில், அதற்குரிய விதியையும் நாம் கற்பித்துக் கொள்ளலாம் (அதாவது பரமாத்மாவைப் பற்றிய உபாஸனம் எல்லாமே வித்யா (ஞான) உபாஸநமாகும். கர்மாவினால் இல்லை). அனுவாத வாக்யங்களிலேயும் விதியை நாம் கற்பித்து பிரமாணமாக்குவது போல இங்கேயும். யதேவ வித்யயா கரோதிததேவ வீர்ய வத்தரம் பவதி-(சா. 2. 1-1-10) முதலான அநுவாத ரூபமான வாக்யங்களிலே விதி எப்படி கற்பிக்கப்படுகிறதோ-அது போல இங்கும் கற்பித்துக் கொள்ளலாம். இந்த விஷயம் वचनानित्त्वपूर्वत्वात् - (பூ. மீ. சூ 3-5-21) என்னும் பூ. மீமாம்ஸா சூத்ரத்தில் கூறப்பட்டது. அந்த சூத்ரத்தில் ஸர்வதः பரிஹாரம் ஆஸ்விநம் பக்ஷயதி என்னும் அநுவாத ரூபமான வசனத்தில் ஸோமபக்ஷண விதி இல்லாவிடிலும் அந்த விதி கற்பிக்கப்படவேண்டியதே என்று கூறப்பட்டது-அதுபோல இங்கேயும் கொள்ளவும்.

இன்னொரு ஆட்சேபம்-பலன் சம்பந்தம் சொல்லப்படவில்லை என்பதாகும்—இதுவும் சரியில்லை. எங்கனமெனில் तेषामेकैक एव तावान् यावानसौ पूर्वः-(அக்னி ரஹஸ்யம்-1-15- இந்த அதிதேசத்தில், இஷ்டக சிதாக்னியின் வீர்யம் மனஸ்சித் முதலான அக்னிகளுக்குமுண்டு என்று கூறுவதால் இஷ்டக சிதாக்னிக்குத் தன் அங்கியான யாகத்தின் மூலம் எந்த பலன் சொல்லப்பட்டதோ - அந்தப் பலனே மனஸ்சித முதலான அக்னிகளுக்கும் தம் அங்கியான யாகத்தின் மூலம் ஏற்படுகிறது என்று

அறியப்படுகிறது-(அதாவது இஷ்ட கிருதுக்களின் பலன் மனஸ்சித் முதலானவற்றில் எல்லாம் ஒன்றுதான் என்பதாகும்).

(இங்கு 45 சூத்திரத்தில் உபஸம்ஹாரம் செய்தால்-விகல்பம் வித்யைக்கும் மனஸ்சிதாக்னி யாகத்திற்கும் ஏற்படும். இப்போது உபஸம்ஹாரம் (மாற்றுதாலே) அதே பலன் தான் - வித்யாமய யாகத்திற்கும்-கிருதுமய யாகத்திற்கும் என்று சொல்லப்படுகிறது) அந்தப் பலனே மனஸ்சித் முதலான அக்னிகளுக்கும் தன் அங்கி யான யாகத்தின் மூலம் ஏற்படுகிறது-என்பதாகும்)

மேலே சொல்லப்பட்டது-பரிமாற்றம் செய்து கொள்வதாலே (கிரியாமய யாகம்-வித்யாமயக்ருது)-மனஸ்சித் முதலிய யாகங்களின் பலன்கள் ஒரே மாதிரியாக இஷ்டக சிதாக்னிக்கும் விருப்பதால் நாம் ஊஹித்துக்கொள்ள வேண்டியது-துல்ய கார்யத்தை உடையவை என்றும், இஷ்டக சிதத்தைப் போலே மனஸ்சித் முதலானவைகளும் கிரியா மயமான யாகத்துக்கு அங்கமானவையே என்று சொல்வது-சரியாகும்-(இது பூர்வபக்ஷி சொல்வது)- அதற்கு சூத்திரக்காரர் அடுத்த சூத்ரத்தில் பதில் அளிக்கிறார்.

ஸி. சூ न सामान्यादप्युपलब्धेर्मृत्युवन्न हि लोकापत्तिः (3-3-49)

நஸாமாந்யாதப்யுபலப்தேர் மிருத்யுவந்ந ஹி
லோகாபத்தி: 3-3-49

ந - அவ்விதமில்லை (அதாவது அதிதேஸத்தாலே இஷ்டக சிதத்தைப்போல மனஸ்சிதாதிகளும் கிரியாமய யாகத்திற்கு அங்கமாகிறது என்பது - சரியாகாது) (ஏனெனில்) ஸாமாந்யாத் அபிஉபலப்தே! - வீரியவத்தரமாக விருப்பதாகிற பலத்தில் ஸாம்யத்தைக் கொண்டும் பொருந்தவிடலாமா கையால், ம்ருத்யுவத் நஹி லோகாபத்தி :- (ஸஏஷ யேவம்ருத்யு) என்கிற அதிதேசத்தால், ம்ருத்யு: எனப்படும் புருஷனுக்கு மிருத்யு லோகமடைந்திருத்தல், இல்லையன்றோ.

பரிமாற்றத்தாலே, அதிதேசத்தினுல் யேற்படும் நடுவிலே சம்பிவிக்கும் வ்யாபாரங்களும் துல்யமாக விருக்கவேண்டியது. இதனுல் கிரியாமயக்ரதுவில் (மனஸ்சித் முதலிய அக்னிகளுக்கு) அநுபிரவேசம் யேற்படும்; ஏனெனில் ஏதாவது ஒன்று இரண்டு பொதுவாக விருப்பதால், அதிதேசம் (பரிமாற்றம்) அடையப் படுகிறது. அப்படி எல்லாவற்றையும் அழிக்கிறதற்குக் காரண மாக விருத்தலே ஸாமான்யமாக லக்ஷணமாகக் கொள்வதாலே, அதிதேசம் அடையப்படுகிறது. (அதாவது தேஷாம் ஏகைக... பூர்வ:- என்னும் வாக்யத்தில் இஷ்ட சிதாக்னியின் வீர்யம் மநஸ்சிதாதிகளுக்கும் உண்டு என்று அதிதேஸம் (பரிமாற்றம்) செய்வதால் - இரண்டுக்கும் எல்லாச் செயல்களிலும் ஒற்றுமை யைக் கருதுவதாகக் கொள்ளக்கூடாது. ஏதாவது ஒன்று இரண்டு விஷயங்களில் ஸாம்யம் இருந்தாலும், அதனுல் அதி தேஸம் பொருந்தலாம், அக்னி ரஹ 10-5ல் स एव एव मृत्युः, य एष एतस्मिन् मण्डले पुरुषः- மேலே சொல்லப்பட்ட அவனே ம்ருத்யு; அவனே சூரியமண்டல மத்தியில் இருக்கும் புருஷன். இதனுல் உள் இருக்கும் எந்தப் புருஷனே - அவனே ஸம் ஹார்த்தா வாகவும் இருக்கிறுன்; இத்தகைய சில ஒற்றுமை களைக் கொண்டு சூர்ய மண்டல புருஷனே யமனுவான் என்கிற வேதவாக்யத்தில் ஸம்ஹார்த்தாவாய் இருப்பது முதலிய சில ஒற்றுமைகளைக்கொண்டு அதிதேஸம் செய்யப்பட்டது. (பரி மாற்றம் செய்யப்பட்டது) இப்படி அதிதேஸம் செய்ததால் சூர்ய மண்டல புருஷனுக்கு யமனைப்போல யமலோக பிராப்தி யும் சொல்லப்படுகிறது என்று கூறமுடியாது. (அவனுக்கு - மிருத்யுவைப்போல - யமலோக பிராப்தி ஏற்படாது). அது போலவே இங்கும் இஷ்டகசிதாக்னியின் வீர்யம் மனஸ்சிதாக்னி களுக்கும் உண்டு - என்று அதிதேஸம் செய்வதால், இஷ்டக சிதத்தைப்போலே மநஸ்சித் முதலானவையும் கிரியாமயமான யாகத்துக்கு அங்கமானவை என்றே - அதே தேஸத்தையும் ரூபத்தையும் உடையவை என்றே தேருது. வீர்யவத்தரமா யிருக்கை எனப்படும் பலத்தின் ஸாம்யத்தைக் கொண்டே அதிதேஸத்தைப் பொருத்தவிடலாம். ஆகையால் இஷ்டக சிதாக்னிகளுக்கு அங்கமாக விருப்பதாலே எந்த பலன் அடையப்

படுமோ, அதேபலனை மனஸ்சிதாக்னிகளும் வித்யாமயக்ரது வழியாக பலனுகும் என்று அதிதேஸத்தினுல் ஏற்படுகிறது. (அதாவது கிரியாமயத்தை அந்வயிக்கிறது ஞானம். உபகரணங் கள் வேறுகவிருக்கலாம். ஞானம் ஞானத்தையே அந்வயம் செய்யும் இரண்டுக்கும் ஒரேகிரியை அவசியமில்லே. இரண்டும் தனித் தனியே அந்வயிக்கிறது )

**ஸித். ஸூ. परेण च शब्दस्य ताद्विध्यं भूयस्त्वात्त्वनुबन्धः (3-3-50)**

**பரேணச சப்தஸ்ய தாத்வித்யம் பூயஸத்வாத்**
**த்வநுபந்த: (3-3-50)**

பரேணச - மேல் பிராம்மணத்தாலும் (மந்திரபாகம்), சப்தஸ்ய - மனஸ்சித் முதலானவற்றைச் சொல்லும்) ஸப்தத்திற்கு, தாத் வித்யம் - வித்யாமய யாகத்தை சொல்லுவதாக யிருக்கும் தன்மை (அறியப்படுகிறது); பூயஸ்த்வாதத்து-மனஸ்சித் முதலான வற்றுக்கு வேண்டிய அக்னி அங்கங்கள் மிகுதியாக விருப்பதா லேயே அநுபந்த:- வித்யாமயமான மனஸ்சித் முதலானவை இங்கு (அக்னி ரஹஸ்யத்தில்) சேர்க்கப்பட்டிருக்கின்றன.

**परेण च** - மேல் பிராம்மணத்திலும் (மந்திரபாகத்திலும்) மனஸ்சித் முதலிய யாகங்களைச் சொல்லும் **शब्दस्य** (சப்தங்கள்) **ताद्विध्यं तद्विधत्वम्** வித்யாமய யாகத்தைச் சொல்லுவதாக அறியப்படுகிறது. **परेण हि ब्राह्मणेन** - மேல் சொன்ன பிராம் மணத்திலும் அக்னிரஹ 10-5-4- **अयं वाव लोक एषोऽग्निश्चितः तस्याप एव परिश्रितः** என்பவைகளால் சயனம் செய்யப்பட்ட இந்த அக்னி இந்த லோகமாகும் அதை பரிஷேசனம் செய்யும் ஜலம் கடலோகும். என்பவைகளாலும்: **स यो हैतदेवं वेद लोकं पृणाम्, एवं भूत्मेतत् सर्वमभिसंपद्यते** - லோகம் ப்ருணு எனப்படும் சயனம் செய்யப்படும் பூ - பிரதேசத்தை பூரணம் செய்யும் செங்கற் கற்களை எவன் இவ்விதம் அறிகிருனே, (இதனுல் வேறுன பலனைவித்யையே காட்டுகிறது). அதுபோலவே அக்நிரஹ. 10-5-6ல் **वैश्वानर विद्यादौ च** - இங்கு படிக்கப்படும் வைஷ்வாநா வித்யை முதலானவற்றிலும் வித்யையே விதிக்கப்படுகிறது.

ஆகையால் அக்னிரஹஸ்யம் கிரியையை மாத்திரம் ஏக விஷயத்வமாகக் கொண்டதில்லை. (சதபதபிராம், 5-4-1ல் சயனரின் அபிப்ராயப்படி இந்த உலகம் பூராவுமே அக்னியாக நினைக்கப்படுகிறது. ஆனல் ராமானுஜரின் அபிப்ராயம் - அந்த அக்னியையே உலகமாகக் கருத வேண்டியது) அப்படியானல் மனஸ்சித் முதலான வித்யாமயங்களையே பிருஹதாரண்ய கோபநிஷத்தில் சேர்க்க வேண்டியிருக்க, எதற்க்காக கிரியை களை அதிகமாகக் கொண்ட அக்னி ரஹஸ்யத்தில் சம்பந்தப் படுத்த வேண்டியது? (அதாவது அக்னிரஹஸ்யத்தில் ஏன் படிக்க வேண்டும்); இந்தக் கேள்விக்கு நாம் பதில் கூறுவது – भूयस्त्वात्त्वनुबन्धः इति – மனஸ்சித் முதலான அக்னிகளுக்கு வேண்டிய அக்னி அங்கங்கள் (சம்பந்தங்கள்) மிகுதியாகப் படிப்பதாலே, இந்தவிடத்திலேயே மனஸ்சித் முதலானவையும் சேர்க்கப் பட்டிருக்கின்றன என்று அர்த்தம். ஆகையால் மனஸ்சித் முதலான அக்னிகள் கிரியாமயமான யாகத்துக்கு அங்கமாக விருப்பவை அல்ல. வித்யாமயமான யாகத்துக்கே அங்கமாக விருப்பவை என்பது திருடமாகிறது.

**मनश्चिदादिषु संपादनीयानामग्न्यङ्गानां भूयस्त्वात् तत् संनिधाविहानुबन्धः कृतः**—சம்பந்தங்கள் மிகுதியாக விருப்பதாலே - மனஸ்சித் முதலிய அக்னிகள் கற்பிக்கப்பட வேண்டியவையாகும். அவைகளை இங்கே அக்நி ரஹஸ்யத்தில் சந்நிதியில் (வெகு அருகில்) சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பதால்-வித்யாமயமான யாகத்துக்கே அங்கமாக விருப்பது-என்று உறுதியாகிறது.

## சரீரே பாவாதி கரணம் (3-3-21)

**பூ. சு. एक आत्मन शरीरे भावात्** *(3-3-51)*
**ஏக ஆத்மந: சரீரே பாவாத் ( do )**

ஏக-(ஏகே)-(ஜீவாத்மா ஞாத்ருத்வம், கர்த்ருத்வம் போக்த்ருத்வம் முதலானவற்றை உடையவனுகவே உபாஸநனங்களில் அனுஸந்திக்கத் தக்கவனென்று சிலர் கருதுகிருர்கள்; (ஏனெனில்) ஆத்மந:-உபாஸகனுக ஆத்மாவுக்கு சரீரே பாவாத்-சரீரத்தில் இருப்பு காணப்படுகையாலே.

**அவதாரிகை:—**

முந்தின பத்தொன்பதாவதான லிங்க பூயஸ் தவாதி அதி கரணத்துடன் தொடர்புடையது இந்த அதிகரணம். இருபதாவது அதிகரணம் பிராஸங்கிக வந்தது. லிங்க பூயஸத்வாதி கரணத்தில் நாராயணனே எல்லா பரவித்யா உபாஸனைகளிலும் ஆராத்ய மான தேவதை என்று நிரூபிக்கப்பட்டது. அதே விஷயமாக, உபாஸக ஸ்வரூபம் யாது, உபாஸ்ய வஸ்துவின் ஸ்வரூபம் யாது, இவர்களுக்குள்ள சம்பந்தம்-அனுஸந்தானம், அனுஸந்தேயம் எப்படி என்கிற விஷயங்கள் ஆராயப்படுகின்றன இந்த அதி கரணத்தில் அதாவது பரம புருஷன் எவ்விதம் உபாஸிக்கத் தக்க வனோ அதேபடி ஜீவாத்மாவும் உபாஸிக்கத் தக்கவனாகக் கூறப்படு கிறான். உபாஸ்ய உபாஸந ஸ்வரூபங்களைப் போலவே, உபாஸக ஸ்வரூபமும் அறியத் தக்கதாகும்-காரணம் ஜீவாத்மாவுக்கு ஞாத்ருத்வம், (அறிபவனாகவும்) கர்த்ருத்வம் (செய்பவனாகவும்) போக்த்ருத்வம் (அனுபவிப்பவனாகவும்) இருப்பதால்-அவ்விதம் தியானிக்கத் தகுந்தவனா? பிரஜாபதி வித்யையில் ஓதப்பட்ட அபஹத பாப்மத்வாதி குணங்களையும் உடையவனாகவும் உபா ஸிக்கத் தகுந்தவனா? (சங்கதி)

எல்லா பர வித்யைகளிலும் உபாஸ்ய, உபாஸனை ஸ்வரூபங் களைப் போல, உபாஸக (ஜீவாத்மாவின்) ஸ்வரூபமும் அறியப்பட வேண்டியதாகும். (பிரு. சூத்ரம் 1-4-6ல் त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च என்பதில் உபாயம், உபேயம், உபேதா ஆகிய மூன்றைப் பற்றியே-முமுக்ஷுக்களால் அறியத் தக்கதாகக் கூறப்பட்டது). நாசிகேதஸ்ஸின் கேள்வியும், யமதர்மராஜனுடைய பதிலி லிருந்து தெரியவரும்). இங்கு சொல்லப்படுவது இந்த உபாஸக னாகிற ஜீவாத்மாவினால் பரமாத்மா எவ்விதம் உபாஸிக்கப்படு கிறான் என்கிற விஷயமாகும். சாரீ. மீ. 4-1-3ல் आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च என்று சொல்லப்பட்டது. (ஜாபாலர்கள் பரமாத்மாவை தங்களது ஆத்மாவாக உபாஸிக்கிறார்கள்-சுருதி களும் நம்மை அவ்விதமே அறிவுறுத்துகின்றன.) அப்படியிருக்கும் போது, இந்த பிரத்யகாத்மா (ஜீவாத்மா) ஞாதா-(அறிபவனாகவும்) கர்த்தா (செயல்படுகிறவனாகவும்) போக்தா (அனுபவிப்பவ னாகவும்) இந்த உலகிலும் மேலுலகிலும் சஞ்சரிப்பதற்கு சக்தி

யுள்ளவனாக விருப்பதாகவும் அனுஸந்திக்கப்பட வேண்டுமா? அல்லது பிரஜாபதி வித்யையில் ஓதப்பட்ட அபஹத பாப்மத்வாதி எட்டு குணங்கள் முக்த தசையில் யேற்படுகின்றதே-அந்த பல தசையிலுள்ள ஸ்வருபத்தை அனுஸந்திக்க வேண்டுமா? எது சரியாகும்? சிலர் இதில் அபிப்ராயப்படுகிறார்கள் (ஏகே-சிலர்)-ஞாத்ருத்வாதி ஆகாரமாத்ரமாகவே (ஆகாரத்தை உடையவனாகவே) உபாஸகன் தன்னை அனுஸந்திக்க வேண்டும்-पक्षे-என்று நினைக்கிறார்கள் எப்படி? अस्योपासकस्याऽऽत्मनः शरीरे भावात् உபாஸகனை ஜீவாத்மா சரீரத்தில் வசிப்பவனன்றோ-சரீரத்திலிருக்கும்போது இந்த பிரத்யகாத்மாவுக்கு ஞாத்ருத்வம், கர்த்ருத்வம் போக்திருத்வம்-இவை ஸ்வரூபமாக உள்ளது. அபஹதபாப்மத்வாதி குணங்கள் பிரகடனமாவதில்லை-அவை முக்த தசையில் யேற்படுபவை. ஆத்மா சரீரத்தில் இருக்கும் வரை-அந்த ரூபத்தை அவன் பெறுகிறான்; அவ்விதம் அனுஸந்திப்பதாலே, அதன் பலனும் அவனுக்கு ஸித்திக்கிறது-என்பது சரியாகும். ஸ்வர்க்கம் முதலான இஷ்ட பலன்களை விரும்பி ஜ்யோதிஷ்டோமம் முதலான யாகங்களை அனுஷ்டிப்பவர்கள் ஜ்ஞாத்ருத்வம் முதலானவற்றை உடையதாக தம் ஸ்வரூபத்தை அனுஸந்திக்கிறார்களே தவிர, ஸ்வர்க்க பலனை அனுபவிக்கும் தசையில் எவ்விதம் ஸ்வரூபம் யேற்படுகிறதோ, அதை அனுஸந்திப்பதில்லை. ஞாத்ருத்வம் முதலானவற்றை உடையதாக தன் ஸ்வரூபத்தை தியானிப்பதாலே, ஸாதனமான (உபாயமான) ஜ்யோதிஷ்டோமமும் அதன் பலனாகிற ஸ்வர்க்கமும் ஸித்திக்கின்றன. பல தசையில் வரப்போகும் ஸ்வரூபத்தை அனுஸந்திப்பதில் பிரயோசனமில்லை. அதுபோல இங்கேயும் பல தசையில் யேற்படும் அபஹதபாப்மத்வாதி குணங்களும் ஸ்வரூபமாக இங்கு அனுஸந்திக்க தக்கதன்று எனக் கொள்ள வேண்டும். இதற்குமேல் ஒரு ஆட்சேபம் எழலாம். சா. உ. 3-14-1ல் यथा क्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति - உபாஸகன் எவ்விதம் உபாஸிக்கிறானோ - அப்படியே மோக்ஷத்திலும் அவன் பலனாக அடைகிறான் - இந்த விசேஷ வசனத்தினால். பல தசையில் ஏற்படப்போகும் அபஹதபாப் மத்வாதிகளை தனது ஆகாரமாக அடையப் போவதாக இங்கும் அனுஸந்தானம் செய்யலாம் என்று தேறுகிறது. அப்படியில்லாமல்

அளவுபட்ட கர்த்ருத்வம் முதலானவற்றோடு மாத்திரம் உபாஸகன் தன்னை அனுஸந்தித்தால், அளவுபட்ட கர்த்ருத்வம் முதலானவைகளையுடைய ஸ்வரூபமே மோக்ஷ தசையிலும் பலனாக அடையக்கூடும். இந்த ஆட்சேபமும் தவறாகும். ஏனெனில் மாத். அக்னி-10-5-2ல் तं यथायथोपासते तथैव भवति - அவனை உபாஸகன் எப்படி எப்படி உபாஸிக்கிறானோ-அப்படியே ஆகிறான்-என்கிற உபாஸ்யப் பொருளைப்பற்றிய விஷயமிருப்பதால்-முதலில் சொன்ன ஆட்சேபம் "யதாக்ரது:"-என்னும் வாக்யமும் உபாஸ்யமான பரமாத்மாவைப் பற்றியதே தவிர-ஜீவாத்மாவைப் பற்றியது அல்ல-என்று தேறும். இதற்கு நாம் பதில் கூறுவோம்.

ஸி. ஸூ. व्यतिरेकस्तद्भाव भावित्वान्न तूपलब्धिवत् (3-3-52)
வ்யதிரேகஸ்தத் பாவ பாவித்வாத்ந து உபலப்திவத் ( do )

ந து - பூர்வபக்ஷி கூறியது சரியல்ல. வ்யதிரேக -மோக்ஷ தசையில் ஏற்படப் போகும் அபஹதபாப்மத்வாதி குணங்கள் - இப்போதிருக்கும் ஸம்சார தசையில் உள்ளதைவிட வேறுபட்ட படியால்-(வ்யதிரேக:)-அவை அனுஸந்திக்கத் தக்கவை. தத்பாவ பாவித்வாத்-அந்த அபஹதபாப்மத்வம் முதலான ஸ்வரூபத்தை உடையவனாக (பல தசையில் யேற்படுகிறபடியால்) உபலப்திவத்-இது சாஸ்திரங்களில் காணப்படுவது போல. (பிருஹ்ம பிராப்தியைப் போதிக்கும் சாஸ்திரங்களில் என்று அர்த்தம்).

न चैतदस्ति - முற்கூறிய பூர்வபக்ஷம் தள்ளப்பட வேண்டியதாகும். (எதில்) ஞாத்ருத்வாதி ஆகாரம் உடையவனாக தன்னை அனுஸந்திக்க வேண்டியது-என்பது தள்ளப்பட வேண்டியது. இந்த ஜீவாத்மாவுக்கு சம்சார தசையைக் காட்டிலும் வேறுபட்டதான மோக்ஷ தசையில் எந்த வேறுபாடு (व्यतिरेकः)-அதாவது அபஹத பாப்மத்வாதி குணங்கள் உண்டோ-அவை அனுஸந்திக்கப்படவேண்டும். இந்த ஜீவனுக்கு மோக்ஷ தசையில் எந்த ரூபம் யேற்படுமோ-அதே ரூபத்தையே தன் ஸ்வரூபமாக ஜீவாத்மா நினைத்துக் கொண்டு உபாஸிக்க வேண்டியது என்கிற அர்த்தமாகும். ஜீவாத்ம ஸ்வரூபம் அபஹதபாப்மத்வாதி குணங்களை உடையதாகவே உபாஸிக்கப்படவேண்டும். எவ்விதம்?

तद्रूपम् विद्यात् அந்த அபஹதபாப்மத்வாதி குணங்களை உடைய ஸ்வரூபத்தை உடையவனாக; அந்த ரூபத்தையே தியானிக்க வேண்டியது. यथा क्रतुरस्मिन् लोके पुरुषो भवति, तथेतः प्रेत्य भवति- எப்படி உபாஸகன் உபாஸிக்கிறானோ-அப்படியே மோக்ஷத்திலும் பலனை யடைகிறான்-என்கிற நியாயப்படி சரியாகும். முத்கோப. 3 तं यथा यथोपासते, तथै(दे?) व भवति-எப்படி ஞான விஷயத்தில் உண்டோ, அதாவது பிரும்மோபாஸனைகளில் பிருஹ்ம பிராப்தி எப்படி சொல்லப்படுகிறதோ-அதைப்போல உபாஸனமே பிராப்தியாக (அடையயிப்பதாகச்) சொல்லப்படுகிறது. (அதாவது பிருஹ்மத்திற்கு ஸ்வரூப நிருபகதர்மங்களோடு அந்த அந்த வித்யையின் குணங்கள் எப்படி தியானிக்கப்பட வேண்டுமோ அதைப் போல இங்கேயும் சுத்த ஜீவனுடைய ஸ்வரூபமும், பிருஹ்மத்தின் சரீரமாக ஜீவாத்மாவின் ஸ்வரூபம் விருப்பதாகவும்-தியானிக்கப்படவேண்டியது என்பது சுருத பிரகாசிகையில் சொல்லப்பட்டிருக்கிறது). இங்கே பரஸ்வரூபம் மாத்திரமே விஷயம் என்று சொல்வதற்கு முடியாது ஜீவஸ்வரூபமும் அவனுடைய லக்ஷணங்களும் (தர்மங்களும்) சுத்த ஸ்திதியில் எவ்விதமிருக்க வேண்டுமோ அவ்விதமே நினைக்கத் தகுந்தது என்கிற அர்த்தம் யேற்படுகிறது. பிரத்யகாத்மாவும் அவன் உபாஸிக்கிற பரபிருஹ்மத்திற்கு சரீரமாக விருக்கிறபடியால், ஜீவாத்மாவும் உபாஸிக்கத் தக்கதாகவே உள்ளது. ஆகவே அபஹத பாப்மத்வாதி குணங்களை உடைய ஜீவனைச் சரீரமாகக் கொண்ட ஈஸ்வரனுடைய உபாஸநத்திற்கு, அத்தகைய ஈஸ்வரனை அடைவது எப்படி மோக்ஷ சாஸ்திரத்தில் காணப்படுகிறதோ-அப்படியே இயற்கையான (சுத்த) ஜீவ ஸ்வரூபத்தோடு உபாஸித்தால்தான், அந்த மாதிரி ஜீவ ஸ்வரூபம் அடையப்படும் என்பது சரியாகும். (अपहतपाप्मत्वादि गुणक प्रत्यगात्मशरीरपरमात्मोपासनस्य तथारूपमेव प्राप्यमित्युक्तम् भवति-) (அதாவது பூர்வபக்ஷி கூறினனே-ஜ்யோதிஷ்டோம யாகத்தைச் செய்கிறவன் பல தசையில் அடையப் போகும் ஞாத்ருத்வாதி குணங்களை உடையவனாகத் தன்னை அனுஸந்திக்கிறான், அவன் ஸ்வர்க்காதி பல தசையில் யேற்படும் ஸ்வரூபத்தை நினைப்பதில்லை-அதுபோல (இங்கேயும்) பல தசையில் அபஹதபாப்மத்வம் முதலான ஸ்வரூபத்தை அனுஸந்திக்க வேண்டியதில்லை என்று

சொல்லியது தவிருகும். இங்கே ஸ்வர்க்காதி பலன்களுக்கு யாகமே கர்மவிதியாகும் அந்த சர்மத்திற்கு ஆத்ம ஸ்வரூபத்தை அங்கமாகக் கொள்வது சரியாகாது.

ஆகையால், அக்னி. 1-10-6ல் एवं ऋतुहामु लोकं प्रेत्याभि संभवति-என்று சொல்லப்படுகிறது. எவன் ஸ்வர்க்கத்தை இச்சித்தால், அவன் யாகத்தைச் செய்ய வேண்டும்; அந்த பலன் அவனைக் கர்மாவில் தூண்டுகிறது. ஆகையால் பிரத்யாகாத்மா தான் அடையப் போகும் ஆகாரத்தை உடையவனாக அனுஸந்திக்க வேண்டியது. उपलब्धव्य-இயற்கையான ஸ்வரூபத்தை.

மோக்ஷ சாஸ்திரங்கள் கூறுவது காணப்படுவது போல என்று அர்த்தம். (ஸம்சாரிக கர்த்ருத்வம், போக்த்ருத்வம மோக்ஷத்திலே அவனுக்கில்லை).

எப்படி பிருஹ்மத்தைப் பற்றிய ஞானம் பிரும்மோபாஸநங்களில் விஹிதமாகக் காட்டப்பட்டிருக்கின்றனவோ, எப்படி பிருஹ்ம ஸ்வரூபம் இருக்கிறது என்று பிருஹ்ம பிராப்தி சாஸ்திரங்களில் போதிக்கப்பட்டிருக்கிறதோ-அந்த மாதிரி ஜீவாத்மாவைப்பற்றிய அறிவும், எப்படி சுத்த தசையில் அவனுடைய ஆத்ம ஸ்வரூபம் விஷயமாக இருக்க வேண்டுமோ-அதே படிக்கும்-இங்கேயும் ஸ்வரூப விஷயமாகும்-அதாவது பிராப்ய தசையில் உள்ள அபஹதபாப்மத்வாதி குணங்களுடன் கூடிய ஸ்வரூபத்தோடு கூடியவனாகவே (உபாய) ஸாதந தசையில் தன்னை தியானிக்க வேண்டும். கர்மாவும் ஆத்ம ஸ்வரூப அனுஸந்தானமாகும். அது கர்மாங்கமாகாது. (யஜு. 1-5-5) यजेत स्वर्गकामः-ஸ்வர்க்கத்தை இச்சிப்பவன் ஜ்யோதிஷ்டோமம் யாகம் செய்ய வேண்டும். இதில் கர்மானுஷ்டானமே பலனை அளிக்கிறது. ஸ்வரூப தியானம் அவசியமில்லை. ஸ்வர்க்கத்தை விரும்புகிறவனுக்கு-இத்தனை ஞாத்ருத்வம் இருந்தால் போதும்-தான் (ஆத்மா) தேகத்தைவிட வேறானது; அந்த ஆத்ம ஸ்வரூபம் ஞாத்ருத்வத்தை ஆகாரமாக உடையது. அந்த அறிவே அவனை பலனை அடைவதற்கு தகுதி ஆக்குகிறது. அந்த பலனோ காலாந்தரத்திலுல் (பிற்பாடு) வருவதாகும். இதைத் தவிர வேறு எந்த விதமான அறிவும் தேவையில்லை. न किंचिद्रूपहीतम्-இதுவே போதும்-வேறு ஒன்றும் தேவைப்படாது.

## அங்காவபத்தாதிகரணம் 3-3-22

ஸி. ஸூத் अङ्गाव बद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् (3-3-53)

அங்காவ பத்தாஸ்து ந சாகாஸுஹி ப்ரதிவேதம் (do)

*அங்காவபத்தா: து-கர்மத்திற்கு அங்கமான உத்கீதத்தைப் பற்றிய உபாஸநங்களோவெனில், ஸாகாஸீ அந்தந்த சாகைகளில் ந - நிலைநிற்பவை அல்ல. ப்ரதிவேதம் - எல்லா சாகைகளிலும் அந்வயிக்கின்றன-ஹி-எனில் (எல்லா சாகைகளிலும் உத்கீத ஜாதியைச் சேர்ந்த அனைத்தும் சம்பந்தப்பட்டிருப்பதால் (அதாவது உத்கீதம் எல்லா உபாஸனைகளுக்கும் உண்டு. உத்கீத உபாஸனை எல்லா வித்யைகளுக்கும் அங்கமாகும்)*

*சா.2. 1-1-1-*ओमित्येतदक्षरमुद्गीय मुपासीत *- உத்கீதத்தின் அவயவமான* ஓம் *எனும் பிரணவத்தை எல்லாவற்றிலும் உபாஸிக்கக்கடவன். சா. 2 2-2-1ல்*लोकेषु पञ्चविधं सामोपासीत *அவன் உபாஸிக்கட்டும்-ஐந்து விதமான ஸாமத்தை-அவைகளை உலகங்களாகப் பாவித்து உபாஸிக்கட்டும்.*

*ஐ. ஆ. 2-1-2ல்* उक्थमुक्थमिति वै प्रजा वदन्ति । तदिदमेवोक्थ-मियमेव पृथिवी *-பிராணிகள் தங்களைப் பற்றிச் சொல்கின்றன-அது உக்த, உக்த; ஆகையால் இது உக்தம்-இதுவே ப்ருதிவி; அக்னி 10-5-6.* अयं वाव लोक एषोऽग्निश्चितः *- இந்த சிதாக்னி இந்த உலகமாகிறது இப்படியாக க்ருதுக்களுக்கு அங்கங்களாக உபாஸனைகள் இருக்கின்றன. இங்கே விசாரம் யாதெனில்-அந்த அந்த உபாஸனைகள் எந்த சாகைகளில் ஓதப்பட்டிருக்கின்றனவோ, அவைகளுக்கு மாத்திரம் சம்பந்தம் உள்ளதோ-அல்லது எல்லா சாகைகளிலும் உத்கீதங்களுக்கு சம்பந்தம் உண்டா என்பது விசாரமாகும். (அதாவது எங்கெங்கு பரமாத்மாவின் உபாஸநம் உள்ளதோ. அங்கே எல்லாம் பிரகிருதி சம்பந்தம் நீங்கப் பெற்ற (சுத்த) ஜீவோபாஸநமும் உள்ளது என போன அதிகரணத்தில் நிர்ணயம் செய்யப்பட்டது. அதுபோலவே, எந்தெந்த சாகையில் ஓதப்படும் உபாஸநங்களில் உத்கீதத்தின் சம்பந்தம் உள்ளதோ, அங்கெல்லாம் உத்கீதா உபாஸநம்*

உள்ளது என்று நிலை நிறுத்தப்படுகிறது. இங்கு உத்கீதத்தின் அவயவமான ஓம் என்கிற பிரணவத்தை உபாஸிக்கக்கடவன் (ஓமித்யேதத் உத்கீத முபாஸீத-என்று விதிக்கப்பட்ட கர்மாங்க மான உத்கீத உபாஸநங்கள் எந்த சாகையில் விதிக்கப்பட் டவையோ- அவைகளுக்கு மாத்திரம் சம்பந்தம் உள்ளதா-அல்லது எல்லா வித்யைகளிலும் அந்வயிக்கின்றனவா-என்பது சந்தேகம்).

**सर्ववेदान्तप्रत्ययत्वे** - அவ்விதம் எல்லா வேதாந்தங்களிலும் இருப்பினும், உத்கீத சப்தம் பிரதிவேதத்திலும் ஸ்வர பேதத்தினுல் வித்யாஸப்படுவதாலே, அந்த அந்த சாகைகளில் தான் சம்பந்தம் கொள்ள வேண்டியதாகும்; அதுதான் சரியாகும். ஆகையால் கர்மாங்கமான உத்கீதத்தைப் பற்றிய உபாஸநங்கள் எந்தெந்த சாகையில் விதிக்கப்பட்டிருக்கின்றதோ, அவை அந்த அந்த சாகையிலுள்ள கர்மத்திற்கே அங்கமாகின்றன எனக் கொள்ள வேண்டும் - (பூர்வபக்ஷம்).

எது சரியாகும்? உபாஸநங்கள் அந்த அந்த சாகைகளுக்கே சொந்தம். எப்படியெனில், **उद्गीथमुपासीत** உத்கீதத்தை அவன் உபாஸிக்கட்டும். (சா. 2. 1-1-1); என்பதால் பொதுவாக உத்கீத ஸம்பந்தம் சுருதிகளில் ஓதப்பட்டிருக்கிறது. அதற்கு சமீபத்திலே- இம்மாதிரியும் ஓதப்பட் டிருக்கிறது—அதே சாகைகளில் உத்கீத சப்தத்திற்கு (ஓம் என்கிற பிரணவத்துக்கு) ஸ்வர விசேஷம் சொல்லப்பட் டிருக்கிறது. அதனுல் உத்கீதத்திற்கு குறிப்பிட்ட ஸ்வரத்தை யுடையதாகவே, அந்த சாகையிலுள்ளதையே உபாஸநத்தையே கொள்ளவேண்டும். (**तस्मिन्नेव विशेषं पर्यवसानं युक्तमिति** (பூர்வபக்ஷம்).

இப்படி சொல்லப்படுமானுல்-நாம் பதில் அளிக்கிறோம். **अङ्गावबद्धास्तु** கர்மத்திற்கு அங்கமான உத்கீதத்தைப் பற்றிய உபாஸநங்களோவெனில்-என்பதாகும். இங்கு து சப்தம் பூர்வ பக்ஷியின் கருத்தைத் தள்ளுகிறது அதாவது அந்த அந்த உபா ஸனங்கள் அந்த அந்த சாகைகளிலேயே இருப்பவையல்ல. ஆனுல் எல்லா சாகைகளிலும் எல்லா உபாஸநங்களிலும் அன்வயிக் கின்றன. **हि** (ஹேது) ஏனெனில் எல்லா சாகைகளிலும் உத்கீத

ஜாதியைச் சேர்ந்து அனைத்தும் ஸம்பந்தப்பட் டிருப்பதாலே-தாரணம் சொல்லப்படுவதால், ஏதனால் சுருதி மூலமாகவே, அந்த உபாஸனங்கள் உத்கீதம் போன்ற அங்கங்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதாலே எங்கெங்கே உதகீத மிருக்கிறதோ-அநத விடங்களில் எல்லாம் சம்பந்தப்பட் டிருக்கின்றன. ஸ்வர பேதத்தினாலே உத்கீத சப்தம் அங்காங்கே விதடாஸப்படுத்தப்பட்டாலும், சுருதிகள் மூலமாகவே-பொதுவாக, எல்லா உத்கீத விஷயங்களும் ஒருங்கே ஒரிடத்திலே சேர்க்கப்படுகின்றன; அதனாலே, இப்படி குறிப்பிட்ட சாகைகளுக்குத்தான் சொநதம் என்று கட்டுப்படுத்துவதற்கு பிரமாணமில்லை. ஸர்வ சாகாப்ரத்யய நியாயத்தினால் (ஒரு சாகையில் ஓதப்பட்ட விதி சடங்கு எல்லா சாகைகளுக்கும் பிரயோகம் என்பதால்) வேதம் ஒன்றே ஒன்றுதான், அதுபோல யாகமும் ஒன்றுதான்-அதுதான் எல்லா சாகைகளிலும் ஓதப்படுகிறது, அதனால் உத்கீதம் அங்கமாக யாகத்திற்கு இருப்பதாலே-எல்லா சாகைகளிலும் அந்வயிக்கலாம். எல்லா சாகைகளிலும் ஒரே யாகம் பேசப்படுவதாலே-அந்த யாகத்துக்கு அங்கமாகவிருக்கும் உத்கீதங்களும் அருகே யிருப்பதாலே - அந்த விடத்திற் ஓதப்பட்ட உபாஸனத்திற்குத்தான் அங்கம் என்பது இல்லை. नैकस्य संनिधिविशेषोऽस्तीति न व्यवस्थां-அந்த சாகையிலுள்ள உபாஸனத்திற்கு அங்கமாக விருக்கிறது என்கிற வியவஸ்தை இல்லை. (அதாவது உத்கீத உபாஸனங்கள் எல்லா சாகைகளிலும் அன்வயிக்கின்றன எனக் கொள்ள வேண்டும்.)

ஸி. சூ. मन्त्रादिवद्वाऽविरोधः (3-3-54)

மந்த்ராதிவத்வாऽவிரோதः ( do )

மந்த்ராதி வத்வா-ஒவ்வொரு சாகையிலும் ஒரே கர்மத்திற்கு அங்கமாகப் படிக்கப்பட்ட மந்திரம் முதலானவை, எல்லா சாகையிலுள்ள அக்கர்மத்திற்கும அங்கமாவது போல, அவி ரோத:-(இங்கும்) விரோதமில்லை.

வா என்கிற சப்தத்திற்கு போல (கூட) என்கிற அர்த்தம். ஆதி சப்தத்தினால்-ஜாதி, குண, ஸங்க்யை (எண்ணிக்கை), ஸாத்ருஸ்யம் (ஒற்றுமை) க்ரமம், திரவியம், கர்மாக்கள் காட்டப்

படுகின்றன. எப்படி மந்திரங்களிலே, ஒவ்வொரு மந்திரமும் ஒவ்வொரு சாகையில் ஓதப்பட்டிருப்பினும், அதன் பிரயோகம் எல்லா சாகைகளுக்கும் உண்டு, सर्वासु शाखासु विनियोगी-: அந்த யாகம் எல்லா சாகைகளிலும் ஓதப்பட்டிருப்பதாலே-அதே நியாயப் பிரகாரம், ஒன்றுக்கு மாத்திரமில்லாமல்-எல்லாவற்றிற்கும் உபயோகப்படுவதுபோல - இங்கேயும் கொள்வதால் யாதொரு விரோதமுமில்லை. (ஸ்வரபேத மிருப்பினும் எல்லாவற்றிலும் பிரயோகமாகும். அதாவது மந்திரம் ஜாதி முதலானவை ஒவ்வொரு சாகையில் இருப்பினும், அங்கியான யாகம் ஒன்று எல்லாவற்றிலும் என விருப்பதால்-சுருதி முதலானவற்றுள் எல்லா சாகைகளிலும் அங்கமாக ஏற்றுக் கொள்ளப்படுவதில் விரோதமில்லை என்பதைப் போல-இங்கேயும் எல்லாவற்றிற்கும் பிரயோகம் என்பதாகும்.

(சுருத பிரகாசிகை-பாவ பிரகாசிகையிலும் மந்திரம் ஜாதி-ஸாங்க்யை இத்யாதிகளுக்கு வேத திருஷ்டாந்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன.)

## பூமஜ்யாயஸ்த்வாதி கரணம் 3-3-23

ஸி. சூத். भूम्नः क्रतुवज्ज्यायस्त्वं तथा हि दर्शयति (3 3-55)

பூம்நः க்ரதுவஜ்ஜ்யாயஸ்த்வம் ததாஹி தர்சயதி (do)

பூம்ந:-எல்லா அவயவங்களோடு கூடிய வைஸ்வாநர உபாஸனத்திற்கே, ஜ்யாயஸ்த்வம்-பெரியதாகிறது-அதாவது பிராமாணிகத்வ பதவி உண்டு; க்ரதுவத்-துவாதசகபால யாகத்தின் ஒரு பகுதியே அஷ்டாக பால வாக்யத்தில் அநுவாதிக்கப்படுவது போல,(பூர்ண வைஸ்வாஹரனின் ஒரு பகுதியான அவயவங்களைப் பற்றிய உபாஸநங்களிலும் அவற்றுக்குப் பலமும் சொல்லப்படுகிறது ) ததாஹி தர்சயதி ( அவயவங்களின் உபாஸநத்தை நிந்திக்குப்) வேதவாக்யமும் இதையே காட்டுகிறது.

சா: 2. 5-11-1ல் प्राचीनशाल औपमन्यु-பிராசீன சால ஔபமன்யவ உபமன்யுவின் புத்ரன் என்று ஆரம்பித்து வைஸ்வாநர வித்யை ஓதப்படுகிறது. அதிலே வைஸ்வாநரன் பிரமாத்மாவாகும்

அவருக்கு த்ரைலோகங்களும் சரீரமாகவும், அவருடைய சரீரத்தின் பாகங்களாக (அவயவங்களாக) ஸ்வர்க்கம், ஆதித்யன், வாயு ஆகாஸம், அப்பு, ப்ருதிவீ ஆகும்-அத்தகைய வைஸ்வநர பரமாத்மாவை உபாஸிக்க வேண்டியது என்று சுருதிகளில் காட்டப்பட்டிருக்கிறது. இவைகளுள் த்யௌ (ஸ்வர்க்க) லோகம் அவருடைய தலையாகவும், ஆதித்யன் சக்ஷுஸ்ஸாகவும், வாயு பிராணனாகவும், ஆகாசம் நடு உடலாகவும், (सन्देह-ஆகவும்), ஜலம் மூத்திரகோசமாகவும், பூமி அவருக்கு பாதங்களாகவும் அவயவ விசேஷங்களாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இதில் சந்தேகம் இந்த த்ரைலோக்ய சரீரத்தை உடையது - பல அவயவங்கள் கொண்ட சரீரத்தை யுடையதான அவயவங்களுக்கோ, அல்லது அவயவங்களுக்கும் பூர்ணவைஸ்வா நரனுக்குமோ உபாஸனம் விதிக்கப்படுகிறதா - (த்ரைலோக்ய சரீரஸ்ய வ்யஸ்தஸ்ய (அவயவங்களுக்கோ) உபாஸனம்-அல்லது அவயவங்கள் எல்லாவற்றிற்குமா - அல்லது ஸமஸ்தஸ்ய (பூர்ண வைஸ்வாநரனுக்கா,) என்பது சந்தேகம் - அங்கங்கள் உபாஸனமா - அவயவங்களுக்கும் பூர்ணவைஸ்வா நரனுக்குமா-அல்லது பூர்ண வைஸ்வா நரனுக்கு மாத்திரமா உபாஸனம் விதிக்கப்படுகிறதா எனக் கேள்வி) எது சரியாகும்?

முதலில் பூர்வபக்ஷம் - யாது என்பதை தெரிவதற்கு - சாந்தோக்யத்தில் ஓதப்பட்ட ஆக்யாயிகையானது. ஆறு ரிஷிகள் உத்தாலகரைத் தலைமையாகக் கொண்டு கேகய அரசன் அசுவபதியிடம் இந்த வித்யையைப்பற்றி வினவினர். ஒவ்வொருத்தரும் தாம் தாம் அறிந்ததை அரசனுக்குச் சொல்ல - அரசன் இதுவல்ல என்று மறுத்து - வைஸ்வாநர வித்யையை அவர்களுக்கு உபதேசித்தான். ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு அவயவத்தை தலை, சக்ஷுஸ் - பிராணன் - ஆகாசம் - மத்ய உடலான இடை - மூத்திரப்பை - பாதம் என்று கூறி - ஒவ்வொரு அவயவத்தின் உபாஸனையே விதிக்கப்படுகிறது என்று கூறி - அப்படி ஒவ்வொரு அவயவத்தை உபாஸிப்பதற்குப் பலனையும் கூறி - விதிக்கப்படுகிறது என்றனன். மேலே எல்லா அவயவங்களோடு கூடிய வைஸ்வாநரனுடைய உபாஸனத்தையும் அதற்குப் பயனையும் கூறியிருப்பது அந்த உபாஸனத்தின்

அனுவாதம் என்றே சொல்லலாம். ஆகவே அவயவங்களின் உபாஸனமே செய்யவேண்டும். அதற்குரிய பலனும் ஓதப்படுவதால் அவயவ உபாஸனையே செய்ய வேண்டியது அல்லது பூர்ண வைஸ்வாநரனுடைய உபாஸனமும் அதற்குப் பலனும் இங்கு கூறப்படுவதால், அவயவ உபாஸனமும் பூர்ணவைஸ்வாநர உபாஸனமும் இங்கு செய்யப்பட வேண்டும் - என்பதும் கருத்து ஆகும்.)

வைஸ்வாநரனை ஒவ்வொரு அவயத்தோடுத் தனித்தனியாக உபாஸிக்க வேண்டியது ஏன்? உபக்ரமத்திலே ஒவ்வொரு அவயவத்தை தனித்தனியாகப் படித்துப் பேசப்படுவதாலே. அவ்விதமே உபதேசிக்கப்படுகிறது - ஔபமன்வாதிகள் உத்தாலகரைத்தலைமையாகக் கொண்டு அசுவபதியை வைஸ்வாநர ஆத்மாவைப் பற்றி வினவினார்கள். आत्मानमेवेमं वैश्वानरं संप्रत्यध्येषि तमेव नो ब्रूहि - என்று கேட்டனர். அவர்களில் ஒவ்வொருத்தரும் தங்கள் தங்கள் உபாஸ்யப் பொருளை (தலை - கண் - பிராணன்) - இத்யாதிகளைச் சொல்ல, ஒவ்வொரு அவயவ உபாஸனைக்கும் தனித் தனியாக பலனையும் ஒத - तत्रतत्र फलं - अत्स्यन्नम, पश्यति प्रियं, भवत्यस्य ब्रह्मवर्चसं कुले, य एतमेवमात्मानं वैश्वानरमुपास्ते, मूर्धात्वेष आत्मन् - என்று சொல்ல (எவன் இந்த வைஸ்வாநரனை ஆத்மாவாக உபாஸிக்கிறானோ - அவனுக்கு நல்ல ஆகாரம் கிடைக்கிறது - அவன் தனக்குப் பிரியமானவர்களைப் பார்க்கிறான், அவனுடைய குலத்திலே பிருஹ்மவர்ச்சஸ் நிரம்பியிருக்கும்; இந்த த்யுலோகம் உன்னால் உபாஸிக்கப் படுகிறதே - அது வைஸ்வாநரனின் தலையாகும் என்று அசுவபதி ஓதினான். இந்த மாதிரி வாக்யங்களில் एष वै सुतेजा आत्मा वैश्वानरः - இந்த வைஸ்வாநர ஆத்மா ஸுதேஜஸ்ஸுடன் (பிரகாசமாக) விளங்குகினார்;-என்பவைகளால், ஒவ்வொருத்தருடைய தனித்தனியான உபாஸனங்களில் வைஸ்வாநரனே உபாஸ்ய தேவதையாகச் சொல்லப்படுகிறான். அதனால் ஒவ்வொரு அவயவமும் தனித்தனியாக உபாஸிக்கப்பட வேண்டியது - (अतो व्यस्तस्योपासनं कर्तव्यम्).

இன்னொரு வாக்யத்திலே, यस्त्वेनमेवं प्रादेश मात्रमभिविमान-मात्मानं वैश्वानरमुपास्ते - எவன் மேல் சொல்லப்பட்ட வைஸ்வாநரனை-ஆகாசம் இந்த்ராதிகளுடன் ப்ராதேசமாக அளவுடன் கூடியவனாகவும் - வாஸ்தவத்திலே அளவிடப்படாதபடி இருக்கிறவனாகவும் நினைத்து உபாஸிக்கிறானோ, இம்மாதிரி வாக்யங்களால் அறியப்பட வேண்டியது - த்யு முதலிய பிரதேசங்கள் அவிச்சின்னமாகவும் விருப்பதால், வைஸ்வாநரன் பூர்ண அவயவங்களுடன் உபாஸிக்கப்பட வேண்டியது என்பது தெளிவு. இன்னும் சில வாக்யங்களிலே, இதேமாதிரி ஸமஸ்த அவயங்களுடன் வைஸ்வாநரன் உபாஸிக்கப்பட வேண்டியது-ஏனெனில் இந்த உபாஸனைக்குப் பலனாக - स सर्वेषु लोकेषु सर्वेषु भूतेषु सर्वेष्वात्मस्वन्नमिति - அவன் நல்ல உணவை சாப்பிடுகிறான், எல்லா உலகங்களிலும் ஆனந்தமடைகிறான், எல்லா பிராணிகளிலும் எல்லா ஆத்மாக்களிலும் திருப்தியடைகிறான். இதனால் வாக்ய பேதம் காணப்படுகிறதில்லை. எப்படி - பூமவித்யையின் உபக்ரமத்திலே நாமாதிகளில் உபாஸநம் அந்த அந்த உபாஸனங்களுக்குத் தனித்தனியாக பலன் ஓதப்பட்டிருக்கிறதோ - (அதுபோல). இன்னும் சா. உ. 7-16-1ல் एषतुवा अतिवदति यः सत्येनातिवदति - இவைகளால் பூமவித்யையை உபதேசித்து (எவன் ஸத்யத்தைக் கைக் கொண்டு அதை மேலானதாகவும், அதையே உபாஸ்யமாகவும் கொண்டிருக்கிறானோ - அவன் அதிவாதியாகிறான். அங்கே அவனுக்கு பலன் உபதேசிக்கப்படுகிறது - சா. உ. 7-25-2ல் स स्वराटभवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति - அவன் தனக்கே எஜமானனாக - எலலா உலகங்களிலும் தன் இஷ்டப்படி சஞ்சரிக்கிறான் - என்று பிரத்யேகமாக பலனும் ஓதப்படுகிறது. அங்கே பிரகரணம் பூம வித்யையைப்பற்றியதானாலும், நாமாதி அவாந்தர (இடையே வரும்) உபாஸனங்களும், அதனதன் பிரத்யேக பலனும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றது. அதேமாதிரி இங்கேயும் அவயவ உபாஸனைக்குப் பலனும் தனித்தனியாக ஓதப்பட்டிருககிறது.

இப்படிச் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுவது - भूम्नो ज्यायस्त्वमिति - எலலா அவயவங்களோடு கூடிய

வைஸ்வாநரனின் உபாஸனத்திற்கே - ஜ்யாயஸ்த்வம் - பெருமை - பிராமாணிகம் என ஓதப்பட்டிருக்கிறது. भूम्नः - विपुलस्य - மிகப்பெரியது ஸமஸ்த அவயவங்களும் ஒன்றாக; அதுவே பெருமை கொண்டது - பிராமாணிகத்வம் என்று அர்த்தம். அது ஏக வாக்யத்தினாலே (பிரகாணம் ஒன்றாகவே) காட்டப்படுகிறது. அவ்விதமே - ப்ராசீனசாலஔபமன்யவ: - என்று ஆரம்பித்து - (முடிக்கிறபோது) उद्दालको ह्वै भगवन्तोऽयमारुणिः संप्रतीममात्मानं वैश्वानरमध्येति तंहन्ताभ्यागच्छाम - "பகவன், அருணையின் புத்ரனை இந்த உத்தாலகம் ஆத்மாவை வைஸ்வாநரனை உபாஸிக்கிறார் - நாம் அவரிடம் சென்று இதுபற்றிக் கேட்போம்". இப்படி சொல்லிக் கொண்டு ஐந்து ரிஷிகள் - ஔபமன்யு மற்றவர்கள் அந்த உத்தாலகனை அணுகி விசாரிக்க; அவரிடமிருந்து இந்த வித்யை அடையப்பெறாமல் - எல்லோரும் சேர்ந்து அசுவபதியையடைந்து அவனை வினவினர். "நீர் வைஸ்வாநர ஆத்மாவை உபாஸிக்கிறீர். அதை எங்களுக்கு உபதேசிப்பீர்-" என்று கேட்க; அந்த அரசனிடமிருந்து இவ்விதமாக அவர்கள் அறியப்பெற்றார்கள்.

आत्मानमेवेमं वैश्वानरं संप्रत्यध्येषि, तमेव नो ब्रूहि इतिपृष्टा அவன் மூலம் அறிந்து கொண்டனர் - परमात्मानं वैश्वानरं स्वर्गलोकादि-पृथिव्यन्त शरीरमुपास्यमवगम्य பரமாத்மாவே வைஸ்வாநரன், ஸ்வர்க்கத்தைத் தலையாகவும் பிருத்வியை பாதங்களாகவும் விஸ்வவிராட் ஸ்வரூபத்தை உணர்ந்தவர்களாகவும், அந்த மாதிரி அறிவதின் பலனை ஸர்வலோக, ஸர்வபூத ஸர்வாத்மகத - (இவைகள் சாப்பிடும்) அன்னம் பிருஹ்மானுபவமாகும்; ஆனந்தமாகும் என்று சுருதி உபஸம்ஹாரம் செய்வதால் வாக்யம் ஒன்றாகவே (ஒரே விஷயமாக) (वाकयस्यैकत्वम्) காட்டப்படுகிறது. இந்த விதமாக ஏக வாக்யத்தினால் ஒன்றாகவேயிருப்பதால், ஒவ்வொரு அவயவ விசேஷ உபாஸனமும் அதன் பலனும் காட்டப்பட்டிருப்பது - ஸமஸ்த வைஸ்வாநர உபாஸன - ஏகதேச அனுவாத மாத்திரம்தான் என்று நிச்சயிக்கப்படுகிறது. (அதாவது பிரதி அங்க உபாஸனையையும் அதன் பலனையும் ஓதி

யிருப்பது - பூர்ண வைஸ்வாநரனுக்கு இந்த அவயவங்கள் அவயவி அவயவ ஸம்பந்தத்தைக் காட்டி - அதில் ஒரு அவயவம் பூரண வைஸ்வாநரனின் ஒருபாகமாகும் என்று காட்டுவதற்கே. (இங்கு சொல்லப்படுவது - ஸர்வாத்மாக்களிலும் இருக்கும் அன்னமாகிற பிருஹ்மானுபவம் என்றும் இப்பிரகரணம் சொல்லி முழுவதும் நிறைவடைவதால், இது முழுவதும் ஒரே வாக்யம் என்றும், வைஸ்வாநர ஆத்மாவின் அவயவங்களான ஸ்வர்க்க - பிருத்வி இத்யாதிகளை உபாஸிக்கவேண்டும் என்று விதித்திருப்பதும் - அதற்குத் தனிப் பலனைக் கூறுவதும் - பூர்ண வைஸ்வாநரனின் உபாஸனத்தின் ஒரு பகுதியேயாகும் - வைாஸ்வநர உபாஸனத்தின் பெருமையை அனுவாதம் செய்வது போல ஆகும் என்று நிச்சயிக்கப்படுகிறது).

क्रतुवत्- த்வாதச கபால யாகத்தின் ஒரு பகுதியே அஷ்டா கபாலவாக்யத்தில் அனுவாதம் செய்யப்படுவதுபோல - பூர்ண வைஸ்வாநரனின் ஒருபகுதியான அவயவங்களைப் பற்றிய உபாஸனங்களும் அவற்றுக்குப் பலமும் சொல்லப் படுகிறது. எப்படி யஜுஃ 2-2-5ல் वैश्वानरं द्वादशकपालं निर्वपेत् पुत्रे जाते - ஒரு புத்ரன் பிறந்ததும், வைஸ்வாநரனுக்கு பன்னிரண்டு கபாலங்களில் அன்னம் ஸமர்ப்பிக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இதே கருத்து மீண்டும் சிலவாக்யங்களில் வலியுறுத்தப்படுகிறது. அந்த சுருதியிலே यदष्टाकपालो भवति-அதில் எட்டு கபாலங்களில் அன்னம் ஆஹுதியாக ஸமர்ப்பிக்கப்படுகிறது - அது காயத்திரியின் உதவியினால் அவனை சுத்தமாக்கி தேஜஸ்மிக்கவனாகக் காட்டுகிறது. இப்படி அனுவாதிக்கப்படுகிறது என்று பொருள். அதே பிரகாரம் ஸமஸ்த அவயவங்களுடன் சேர்ந்து உபாஸிப்பதே ந்யாயமாகும். ஒவ்வொரு அங்கமாகக்கூடாது ஏகதேச அனுவாதம் - ஒரு உபாஸனையின் பலன் மாத்திரம் அவசியமில்லை.

அந்தப் பலனும் பெரிய பலனில் சேர்க்கப்பட்டுள்ளதாகும். न व्यस्तोपासनम्-பிரித்து அங்கம் அங்கமாக உபாஸிப்

பது வ்யஸ்த உபாஸனம், கூடாது. அதையே சுருதியும் காட்டுகிறது. வ்யஸ்த (அங்கமாகப் பிரித்து) உபாஸிப்பதால் கெடுதல் விளைகிறது. இதைக் காட்டுகிற சுருதிவாக்யம் -मूर्धा ते व्यपतिष्यत् यन्मां नागमिष्य: - நீ என்னிடம் வந்திருக்காத போனால், உன் தலை சிதறியிருக்கும் என்றும்; अन्धोऽभविष्यो यन्मां नागमिष्य: - என்னிடம் வராதபோனால் - குருடனாக ஆகியிருப்பாய் - இம்மாதிரி வாக்யங்களால் - அநர்த்தம் (கெடுதல்) சொல்லப்படுகிறது - அங்க உபாஸனைக்கு.

ஆகையால் இங்கே கூட அந்த வாக்யம் தள்ளப்பட வேண்டியதாகும்; அதாவது - यत् नामाद्युपासनसाम्यमुक्तं - பூம வித்யையில் நாமாதிகளின் உபாஸனைக்கு ஸாம்யத்தைச் சொல்லியதே - அது தள்ளப்படவேண்டியதாகும். அங்கே நாமாதிகளின் பிரத்யேக உபாஸனைக்கு நற்பயன்களை சுருதி ஓதிற்று. இங்கே வைஸ்வாநர அங்க உபாஸனைக்கு விபரீத பலன் ஓதப்படுகிறது. பூம வித்யையில் நாமாதிகளின் உபாஸனைக்கு அதிசய பலன் சொல்லப்படுகிறது - சா. உ. 5-16-1ல் एष तु वा अतिवदति य: सत्येनातिवदति - எவன் ஸத்யத்தைக் கொண்டு அதன்படி நடந்து - அதையே உபாஸிக்கிறானோ - அவன் அதிவாதியாகிறான் - அவனே ஸத்யத்தினால் அதிவாதியாகிறான். (ஆகவே பூம வித்யையில் அங்க (நாமாதி அங்க) உபாஸனை ஏற்படலாம். ஆனால் இங்கு கூடாது - விபரீத பலன் ஓதப்படுவதாலே). பூம வித்யை உபாஸனை நாமாதி உபாஸனைகளின் பலனை விட மேன்மையான பலன்களை அளிக்கிறது என்பது தெளிவாகும். இல்லாத போனால் அதிசய பலன்களை அளிப்பதின் நிமித்தத்தினால் – அதிவாதத்தினால் பூம வித்யையைப் புகழ்வது சரியானதாகாது - பொருந்தாது. பூம வித்யையும், அங்க உபாஸனையையும் புகழ்வதால் சரியானதாகும்-இங்கு அப்படி இல்லை. வைஸ்வாநர அங்க உபாஸனைக்கு கெடுதல் பலன்கள் ஓதப்படுகின்றன. ஆகவே அங்கமாகப் பிரித்து உபாஸிப்பது - வ்யக்த உபாஸனம் - கூடாது.

இக்காரணத்தினாலே ஸமஸ்த அவயவங்களுடன் கூடச் சேர்ந்தே வைஸ்வாநரனை உபாஸிக்கவேண்டும் •

என்பது நியாயமாகும். பூர்ண வைஸ்வாநர உபாஸநமே முறையானது.

(பூமவித்யையை திருஷ்டாந்தமாகக் காட்டியது பொருந்ாது. வைஸ்வாநரன் ஒரே ரூபத்துடன் பல அவயகளுடன் கூடச் சேர்ந்துதான் உபாஸிக்கப்படவேண்டியது.

தைத். உபநிஷத் - அஷ்டகபால ஆஹூதி உதாரணம் காட்டப்பட்டதின் நோக்கம் - இவ்விதம் ஆஹூதி செய்வதால் பிறந்த பிள்ளைக்கு ஆயுஸ் - கீர்த்தி போன்ற நற்பலன்கள் பேசப்படுகின்றன. இங்கு தனித்தனித்யாக பலன்களை ஒன்று சேர்த்துக் கொடுப்பதால் நற்பலன்களைப் பெறலாம்; கெடுதல்களை தவிர்க்கலாம். இங்கு சங்கரர் அமாவாசை - பூர்ணிமாக்களில் தர்சசிரார்த்தத்தை உதாஹரிக்கிருர்.)

## சப்தாதிபேதாதிகரணம் (3-3-24)

ஸி. சூ. नाना शब्दादिभेदात् (3-3-56)

நாநாசப்தாதி பேதாத் (3-3-56)

நாநா - ஸத்வித்யை - ஆனந்தமயவித்யை போன்ற பிருஹ்ம வித்யைகள் - 32 வித்யைகள் ஒன்ருகாது (அதாவது வெவ்வேருனவையே). சப்தாதி பேதாத்-விதிவாக்யம் (ஒவ்வொன்றிலும்) வேறுபட்டிருப்பதாலும், ரூபம் வேறுபட்டிருப்பதாலும் - (வித்யைகள் வெவ்வேருனவையே).

(முன் அதிகாணத்தில் வைஸ்வாநர உபாஸனத்தைப் பற்றிச் சொல்லி - அவயவங்களின் உபாஸனம் முறையில்லை என்று சொல்லி தள்ளப்பட்டது. இது போலவே பிருஹ்மோபாஸநங்கள் பல என்பதும் சரியாகாது - என்கிற ஆக்ஷேபம் எழ - அது பலவாயிருப்பவை - ஸத்வித்யை - தஹரவித்யை - பூமவித்யை போன்று பலவாக விருக்கின்றன - ஆனல் பலனில் மோக்ஷத்தை உடையவை என்பதாகும்).

இங்கே பிருஹ்மவித்யைகள் எல்லாமே பிருஹ்ம பிராப்திருபமாகிற மோக்ஷத்தையே ஏகபலனாக உடையவை அவையாவன - ஸத்வித்யை, பூமவித்யை, தஹரவித்யை, உபகோஸலவித்யை, சாண்டில்யவித்யை, வைஸ்வாநர வித்யா, ஆனந்தமயவித்யை, அக்ஷரவித்யை - இத்யாதி களாகும். இவைகளில் சில ஒரு சாகையைச் சேர்ந்தனவா யும்; இன்னும் சில வேறுசாகைகளைச் சேர்ந்ததாகவும்விருக் கின்றன. பிருஹ்மவித்யைகளிலிருந்து வேறுபட்ட இன்னும் சிலவற்றுள் - ஒவ்வொன்றும் ஒரே ஒரு விஷயமாகவும், பலனையுடையதாகவும் - உதாரணமாக பிராணனைப் பற்றியதாகவும் இருக்கிறது (பிராணவித்யை). ஆகவே இந்த வித்யைகள் ஒன்றே ஒன்றுதானு - அல்லது வெவ்வேரு? அல்லது வித்யாபேதம் என்கிற சம்சயம் யேற் படுகிறது. இங்கேயே - ஒரு நியமம் உண்டாறது. வித்யை களுக்குள்ளே பரஸ்பர பேதம் ஏற்படுவதானுல், அப்போது அந்த நியாயப்படி எந்த ஒரு விஷயம் எல்லா வித்யைகளி லும் போதிக்கப்படுகிறதோ, அதுவே ஒரு வித்யைக்கு - உதாரணமாக தஹர வித்யைக்கு, உபயோகப்படலாம் - அது ஒரு வித்யை விஷயமே ஸர்வவேதாந்த ப்ரத்யய நியாயப்படி எல்லாவற்றிலும் ஓதப்படலாமே. (ஆகவே வித்யா பேதம் எப்படி ஸித்திக்கும் - விஷயம் (அதாவது பிருஹ்மம்) எல்லாவற்றிலும் ஒனருகயிருக்கிறது. வித்யை யிலிருந்து அறியப்படுவது - அதுவே ருபமாகிறது. அந்த ருபம் ஒன்றேயாகையால் எல்லா வித்யைகளும் ஒன்று தானே என்பதாகும்.

(இங்கு சொல்லப்படுவது. சா. மீ. 3-1-5ல் ஒரே வித்யை பலசாகைகளில் ஓதப்பட்டாலும் - வித்யை ஒன்றே ஒன்று தான். பூர்வபக்ஷி சொல்வது - வித்யையின் ருபம் ஒவ் வொரு சாகையிலும் வெவ்வேருக விருக்கிறது. ஏனெனில் அதை வித்யாஸமின்றி திரும்பப் படித்தல் - அதுவே பல சாகைகளில் ஓதப்பட்டிருத்தல், அந்த வித்யையை வேறு படுத்திக் காண்பிக்கிறது. ஆகவே வித்யாபேதத்திற்குள்ள காரணங்களின் அங்கீகரிக்கப்படும் தன்மை - அதாவது

வித்யாஸமின்றி திரும்பப்படித்தல் இத்யாதி - அங்கு கல்பிக்கப்பட்டது; அந்த சூத்ரத்தில் சொன்னதை இங்கும் ஸ்தாபிக்க முயல்கிறது - எனலாம்).

எது சரியாகும்? வித்யை ஒன்றுதான் என்று சொல்ல லாம் (பூர்வபக்ஷம்). எப்படி? वेद्यस्य - அறியப்பட வேண்டிய விஷயமாகிற பிருஹ்மம் எல்லா வித்யைகளிலும் ஒன்று தானே அறியப்படுகிற விஷயமே வித்யையின் ரூபமாகிறது. ஆகையால் ரூபஐக்யம் யேற்படின், வித்யா ஐக்யம் என்று சொல்லலாமே (ஒன்றேதான்).

இவ்விதம் சொல்லக்கூடுமானுல் - நாம் சொல்வது नाना इति - வேறுபட்டவையே-ஒன்ருகாது. வித்யைகள் பல விதமாக விருக்கின்றன - எப்படி? शब्दादिभेदात् - ஒவ்வொரு வித்யையிலும் சப்தம் முதலியவை வேறுபட்டிருப்பதாலே, இங்கே आदि சப்தத்திஞல் பூர்வ மீமாம்ஸையில் பேதத்தை ஸாதிக்கிறவையாகச் சொல்லப்பட்ட அப்யாஸம், ஸங்க்யை, குண, ப்ரகிரியா (பிரகரணுந்தரம்) ஆகியவை எடுக்கப் பட்டிருக்கின்றன. ஆகவே, பிருஹ்மம் எல்லா வித்யை களிலும் ஒன்ருகவிருப்பினும், ஒவ்வொறு வித்யையில் விதிக்கப்பட்ட வாக்யங்கள் மற்ற வித்யைகளில் வேறு பட்டிருப்பதால் - குணங்கள் வெவ்வேருகையால் - அந்த குணங்களோடு பிருஹ்மம் தியானம் செய்யப்படவேண்டி என்பதால். த்யாயீத போன்ற சப்தங்கள் வேறுபடுவதால், வித்யாபேதம் சப்த பேதத்திஞல் யேற்படுகின்றது - அதன் காரணமாக அனுபந்தபேதமும் காணப்படுகிறது (சப்த பேதம் விதிவாக்யபேதம்) காரணமாக ரூபபேதம் - குண பேதம் - ஏற்படுகின்றன).

**விளக்கம்:—**

(இங்கு சொல்லப்படுகிறது) பூர்வ மீமாம்ஸத்தில் (2-2-ல்) வைதிக சடங்குகள் வேறுபடுத்திக்காட்டப்பட்டு பல காரணங்களால் வேருகவிருக்கின்றன. இவைகளை வித்யாஸ மின்றி திரும்பப்படித்தல் ஒன்ருகும். யாகம் ஹோமம்,

தானம் ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு சடங்கு (கிரியா) உண்டு. திரும்பப்படித்தலைப்பற்றி அடுத்த சூத்ரம் (2-2-1) விளக்கப்போகிறது. அடுத்தாற்போலவருவது ஸங்க்யா (எண்ணிக்கை) சூத்ரம் (2-3-12) இங்கே பல பிராணிகளைக் கொல்லும்படி, விதியிருக்கும் போது ஒவ்வொரு பிராணியின் பலியும் தனிப்பட்ட செய்கையாகும். அதற்கு அடுத்தாற் போல வரும் நாமாக்களின் வித்யாஸத்தினலே வெவ்வேறு கிரியைகள் (சடங்குகள்) யேற்படுகின்றன என்று விளக்கப் படுகிறது. ஆகவேயாகப் பொருள்கள் வெவ்வேருயின், உத்தேஸ்ய தேவதைகளும் வேருகவிருப்பின், யாகங்கள் வேருனவையேதான் என்று சூ. 2-3-12ல் காட்டப்பட்டிருக் கிறது. அதே பிரகாரம்பிரகரணபேதம் சூத்ரம் 2-3-24ல் சொல்லப்படுகிறது).

ஆகவே "அவன் தெரிந்துகொள்கிருன்" - அவன் தியானம் செய்யட்டும் - "இத்யாதிபதங்களால் அறியப்பட வேண்டியதை திரும்பப்படித்தல்-அத்தகைய ஆவிருத்தியை அத்யாயினர்கள் சொல்லிடினும்-இங்கு விஷயம் (அறியப்பட வேண்டியது) பிருஹ்மம் ஒன்றுதானே - அதுவே ஏக விஷயமாக விருக்கிறது. ஆயினும் அந்த அந்த பிரகரணங் களிலே, அந்த அந்த வித்யைகளைப்பற்றி திரும்பப்படித்த லால் ஓதுப்படும்போது பிருஹ்மத்திற்கு - ஜகத் ஏககாரண த்வம்; அபஹதபாப்மத்வாதிகுண விசேஷணங்கள் - இவை களுடன் கூடிய (விசிஷ்ட) பிருஹ்மம்தான் சொல்லப்பட்டா லும், (ப்ரத்யய) ஆவிருத்தி அவபோதந:- பிரத்யயா விருத்தி ரூபா:- வித்யா: भिन्दन्ति - அந்தக் காரணங்களாலே வித்யா பேதம் ஏற்படுகிறது. (வித்யாஸப்படுகின்றன). சில பாடங்களில் குறிப்பிட்ட உபாஸனங்களில் பிருஹ்மப்ராப்தி ரூப பலனுடன் சம்பந்தம், உபாஸன விசேஷங்கள் (ரூபம் - குணம் இத்யாதி) சொல்லப்படுகின்றன; மேலும் நிரா காங்க்ஷ வாக்யங்கள் (ஸ்வதந்திரமாகவே அர்த்தசாமர்த் தியம் வேறு உதவியின்றி சாதிக்கக்கூடியவை); அத்தகைய வாக்யங்களும் ஒவ்வொரு பிரகரணத்திலும் விலக்ஷணமாக (வேருக) விருப்பதாலே, வித்யைகளும் வேருகவுள்ளவை என்பதை நிச்சயிக்கின்றன. இதே அர்த்தத்தை பூர்வ,

மீமா. சூத். 2-2-1ல் शब्दान्तरे कर्मभेदः (சப்தம் வேறுபட்டால் - கர்மாக்களும் வேறுபடுகின்றன) - காட்டப்பட்டதாகும். இன்னும் சில சூத்ரங்களில் குத்ருஷ்டிகளாலே (அறிவில்லாத வர்களாலே) சொல்லப்படுவது இங்கு ஸ்தாபிதமானதை பிருஹ்மம் - ஸித்தமாயிருப்பதால் விதிக்கு விஷயமாகாது - वेदान्त वाक्यानि अविधेय ज्ञानपराणीति) - என்று சொல்பவர்களைக் கண்டிப்பதாகும் - குத்ருஷ்டி நிரஸநாய - இப்படி மீண்டும் पुनरिह प्रतिपादनं - சொல்வதாலே - அவர்களுடைய கருத்து தள்ளப்பட வேண்டியதாகும். ஆகையால் வித்யாபேதம் என்பது ஸ்தாபிதமாகிறது.

(வித்யா பேதத்திற்கு காரணங்கள் பூர்வ மீமாம்ஸ நியாயப்படி - இங்கு மீண்டும் சொல்லப்படுகின்றன. இன்னொரு அபிப்ராயம் - இலக்கண அறிவாலே அர்த்தம் செய்வது - வாக்ய ஜன்யஞானம் - சுருதிகளை அர்த்தம் செய்து கொள்ளுதல் இங்கு கண்டிக்கப்படுகிறது-குத்ருஷ்டி களை நிரஸனம் செய்வதற்க்காக-என்று சொல்லப்படுகிறது- அதாவது நிர் விசேஷ விஷய ஞானத்தைப் பற்றியதை நிர ஸனம் செய்வது. பல அதிகரணங்களிலே பல சூத்ரங்களை விசாரிக்கும் போது, ஒவ்வொரு இடத்திலும் குத்ருஷ்டிகளின் கருத்து கண்டிக்கப்பட்டதாகும். अविधेयज्ञानपराणीति - என் பதற்கு விளக்கம் (சுருதி பிரகாசிகை) குத்ருஷ்டிகள் - அத்வைதிகள்.

(அனுபந்தம் - नानाशब्दादि भेदात् - என்பதில் आदि - சப்தத்திஞல நியாஸ வித்யை காட்டப்படுகிறது. சரணுகதி என்று அழைக்கப்படும் வித்யைக்கும், மற்ற வித்யை களுக்குமுள்ள வித்யாஸத்தைக் காட்ட இந்த சூத்ரத்தின் நோக்கமாகும். ஏனெனில் சப்த பேதம் காரணமாக வித்யா பேதம் யேற்படுகிறது - நியாஸம் - உபாஸநம் என்பது சரணுகதியையும் (பக்தியையும்) குறிக்கும். வேதாந்த வாக்யங்கள் விதிக்கு விஷயமில்லாத வெறும் இலக்கண அறிவையே போதிக்கின்றன என்று சொல்லும் குத்ருஷ்டி களின் அபிப்ராயம் கண்டிக்கப்படுகிறது - (அதாவது நிர் விசேஷ விஷய ஞானம்) -வித்யாபேதம் (ஒவ்வொரு வித்யை

யிலும் உளது) - என்பது சந்தேகமின்றி ஸ்தாபித குண பேதங்கள் - ரூப பேதங்கள் இருப்பின் உபாஸ்ய பேதம் உண்டாகிறது. சில வித்யைகளில் சுத்த பிருஹ்ம பிராப்தி பலன், அதனுல் பல பேதமும் காட்டப்படுகிறது. சரணுகதி மோக்ஷ ஸாதனமாகும். சரணுகதிக்கு மற்ற வித்யைகளேப் போல பெருமையும் யேற்றமும் உண்டு. ஆனல் மோக்ஷ பலனில் தாரதம்யமில்லே. முமுக்ஷுவுக்கு பகவத் பிராப்தியில் - பிருஹ்மானுபவம் ஸமம் என்பதாகும். இதே கருத்து நான்காம் அத்யாயம்—முதற்பாதம்—13-வது அதிகரணத்தில் - तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेष विनाशौ तद्व्यपदेशात என்பதில் ब्रह्मविद्याप्राप्तौ पुरुषस्योत्तरपूर्वाघयोर श्लेषविनाशौ श्रूयते - என்கிறுர் பகவத் ராமானுஜர். (இது பற்றி விளக்கம் பிருஹ்ம வித்யா-முதற்பாகம், பக்கம் - 8, 10-ல் பார்க்கவும்).

இங்கு நியாஸவித்யைக்கும் மற்றவித்யைகளேக் காட்டிலும் பேதம் சொல்லப்பட வேண்டியதாலே, உபாஸனேத்தைக் குறிக்கும் - த்யாயீத - உபாஸீத - முதலான சப்தங்களேக் காட்டிலும் நியாஸவித்யையை விதிக்கும் வாக்யத்திற்கும் - முக்யமான சப்தபேதமே ஹேதுவாக உள்ளதாலே - சப்த பேதத்தைப் பற்றிச் சொன்னது சரியாகும். நியாஸவித்யாஸ்தலத்தில் "த்யாயீத" போன்ற உபாஸனு ஸ்தலங்களேக் காட்டிலும் இயற்கையாகவே தாத்வர்த்த பேதம் சொல்லப்படுகிறது. சப்தாந்தரே - கர்மபேத: - என்கிற பூர்வமீமாம்ஸா சூத்ர (2-2 1) விஷயம் சொல்லப்பட்டதாயிருக்க - மறுபடியும் இங்கு கூறுவது எதற்க்காக ? எனக்கேள்வி எழ; மாயாவாதிகள் சொல்கிறுர்களே - (குத்ருஷ்டிகள்) விதிக்கப்படாத வாக்யார்த்த ஞானத்திலுலே (வாக்ய ஜன்யஞானம்) மோக்ஷம் ஸித்திக்கும் என்கிறுர்களே அவர்களின் கருத்தை நிரஸனம் செய்வதற்க்காக; அதாவது ஜிக்ஞாஸாதிகரணத்தில் லகுசித்தாந்தத்தில் சொல்லப்பட்டது - விதிக்கப்படும் உபாஸாநாத்மக ஞானத்திலுலேயே மோக்ஷம்-என்பதை நிலேநிறுத்துவதற்க்காகவே-வேதவ்யாஸரால் பிருஹ்ம சூத்ரத்தில் இந்த அதிகரணம் அமைக்கப்பட்டது எனக்கொள்ளவும்.

श्रीः

# அனுபந்தம்

## பதயோஜனையின் கருத்துக்கள்.

### अधिकरण सारावली

### शब्दादि भेदाधिकरणम्

सर्वासु ब्रह्म वेद्यं फलमपि खलु तद्ब्रह्मविद्येति चाख्या
ध्यानाद्युक्त्येकलक्ष्ये विधिरपि भजने सर्वविद्यैक्यमित्थम् ।
तन्नाख्या रूपभेदात् तदुपहितविधौ तेन वैशिष्ट्यसिद्धेः
मिश्रं मध्वादि विद्याफलमिह च पृथक्काम्यविद्यासु चैवम् ॥

पद—सर्वासु ब्रह्म वेद्यम् - வைச்வாநர, தஹர, அக்ஷர, உபகோஸல, சாண்டில்ய வித்யைகளில் எல்லாவற்றிலும் தியானத்துக்கு விஷயமான ப்ருஹ்மம் ஒன்றுதான். இதனால் எல்லா வித்யைகளிலும் ரூபம் ஒன்றுதான் என்றேற்படுகின்றது.

फलमपि तत् खलु - எல்லா ப்ரம்ம வித்யைகளாலும் உண்டாகும் பயனும் அந்த ப்ருஹ்ம்மமே.

आख्या च ब्रह्मविद्येति - ப்ருஹ்ம்ம வித்யை என்ற பெயரும் எல்லாவற்றுக்கும் பொதுவானதே.

विधिरपि ध्यानाद्युक्त्येकलक्ष्ये भजने - ஆக்ஞையும் (விதியும்) தியானம் உபாஸநம் என்ற ஞானவிசேஷத்தைச் சொல்லும் சொல்லுக்குப் பொருளான பக்தி என்ற விஷயமும் பொதுவானதே.

इत्थं सर्व विद्यैक्यम् - இவ்வாறு பயனும், தியானத்துக்கு இலக்கான ரூபம் (விஷயமும்), விதியும் (ஆக்ஞையும்), பேரும் ஒன்றானது என்று விவரித்ததால் எல்லா வித்யைகளும் ஒன்றுதான் என்பது பூர்வபக்ஷம்.

तत्र - இவ்வாறு ஸந்தேகித்துப் பூர்வபக்ஷம் செய்வது. யுக்திக்குப் பொருந்தியதல்ல. ஏனெனில்—

नाम्ना रूप भेदात् - ஸத்வித்யை, தஹரவித்யை, பூம வித்யை என்று இது முதலிய பெயர்களும், தியானிக்க வேண்டிய அபஹதபாப்வம் முதலிய ரூபங்களும் வெவ் வேருக இருப்பதால், பொதுவான ப்ருஹ்ம்மவித்யை என்ற பேரும், ப்ருஹ்மம் என்ற பொதுவான ரூப(விஷயமும்) தஹர வித்யை, அக்ஷரவித்யை என்ற விசேஷமான பேர்களையும், அபஹதபாப்மத்வம் முதலிய அந்தந்த வித்யைகளுக்கு மாத்ரம் ஏற்பட்ட குணவிசேஷப் பிரிவுகளையும் தடுப்பதற்கு சக்தியுள்ளதாக ஆகாது.

तदुपहितविधं तेन वैशिष्टयसिद्धेः - மேற்கூறிய அந்தந்த ரூப விசேஷத்தோடு கூடிய ஞான விசேஷத்தை விதிப்பதில், அந்தந்த ரூபவிசேஷங்களாலே வித்யைகளுக்கு ஒன்றுக் கொன்று வேறுபட்ட விசேஷவிதிகள் ஏற்படுவதால்.

मध्वादिविद्या फलं मिश्रम् - மதுவித்யை முதலிய வித்யை களில் வஸுபதம் முதலியதை முதலில் பெற்று பிறகு ப்ருஹ்மத்தை அடைவதைப் பயனுகக் கூறியிருப்பதால் ப்ருஹ்மத்தை அடைதல் என்ற பயன் மற்ருெரு பயனுடன் கூடியிருப்பதாலும் ஒரே பயன் எல்லா வித்யைகளிலும் உண்டு என்று கூறுதல் தகாது.

इह - மதுவித்யையைத் தவிர மற்ற வித்யைகளில்

पृथक् - வேறுபயனேடு கலக்காது ப்ருஹ்ம்மத்தை அடை தல் பயன்.

काम्यविद्यासु च एवम् - உபநிஷத்துக்களில் கூறப்பட்ட காம்யவித்யைகளிலும், பயன் ரூபம் விதி முதலியவை களின் வேறுபட்டால் வேறுபாடு காணத்தக்கது.

नानाशब्दादिभेदादिति कथमवदत् सूत्रकृच्छब्दसाम्ये
न ह्येते यागदानादय इवभिदुरा भक्तिविश्रान्तिसिद्धेः ।

सत्यं शब्दस्य भेदस्त्वयमुपचरितो रूपभेदद्रढिम्ने
ज्ञानं ये चाविधेयं करणमिति जगुः तन्निरासेऽभिसन्धिः ॥

पद - सूत्रकृत् शब्दसाम्ये शब्दादि भेदात् नान इति कथमवदत् - வேதநம் உபாஸநம் தியானம் முதலிய வித்யையைக் கூறக் கூடிய சப்தங்கள் ஒரே பொருளைக் கூறுவதால், ஸூத்ர காரர் சப்தபேதங்களால் பல என்று எவ்வாறு கூறினார். (சொற்கள் வெவ்வேறு ஆனாலும் எல்லாச் சொற்களும் ஒரே பொருளைக் கூறுவதால் வெவ்வேறு சொற்கள் என்று கூறு வது பொறுந்தாது. வெவ்வேறு பொருளுடைய சொற்களைத் தான் வெவ்வேறு என்று கூறலாம்).

भक्तिविश्रान्तिसिद्धेः - वेदनमुपासनं स्यात् - என்று வாக்யகார பாஷ்யகார வாக்யங்களால் மோக்ஷத்துக்கு ஸாதநமாகக் கூறப்பட்ட ஞானத்தைக் கூறும் சொற்கள் பக்தியென்ற ஞான விசேஷத்திலேயே சேர்வதால் (பக்தி என்ற விசேஷ ஞானத்தையே மோக்ஷ காரணமாகக் கூறப்பட்ட வேதநம் உபாஸனம் என்ற ஞானவிசேஷத்தைச் சொல்கிற சொற் கள் கூறுகின்றன.)

एते - 'विद्यात् उपासीत ध्यायीत' இவை முதலிய சொற்கள். यागदानादयइव-யாகம் தாநம் ஹோமம் இவைகளைச் சொல்லும் यजति ददाति जुहोति முதலிய சொற்கள் போலே भिदुरा नहि வெவ் வேறு பொருருளைக் கூறும் வெவ்வேறு சொற்கள்போல், ஒரே பொருளைக் கூறும் विद्यात्முதலிய சொற்கள் ஆகாதல்லவா? (பர்யாயச் சொற்களாக இருப்பதால் அபர்யாய சப்தங்கள் போல் ஆகாதல்லவா?) வெவ்வேறு விதி என்பது यजति जुहोति ददाति என்று வெவ்வேறு பொருளைக் கூறும் சொற் களால் உண்மையான பொருளை விதிப்பது. இம்மாதிரி யான கேள்வியில் பாதி ஒப்புக்கொண்டு பாதியை மறுக் கிறார் सत्यम - என்று.

उपचरितोऽयं शब्दस्यभेदस्तु रूपभेदद्रढिम्ने - சப்தாந்தராதிகரணத் தில் முக்யமான வெவ்வேறு பொருளைக் கூறும் சொல்

வில்லாமற் போனாலும் ரூப (உபாஸ்யகுணம்) வேறுபாட்டி னால் ஏற்பட்டதால் முக்யமில்லாமல் சொல்லப்பட்ட சப்த பேதம், ரூபபேதத்தை நிலை நிறுத்துவதற்காக (அதாவது ரூபவேறுபாட்டின் உண்மையை நிலை நிறுத்துவதற்காக எடுத்துக்கொள்ளப்பட்டது.)

ये अविधेयं ज्ञानं करणमिति जगुः तन्निरासे चाभिसन्धिः - அத்வைதி முதலியவர்கள் விதிக்கு அவிஷயமான ஞானம் கரணம் மோக்ஷத்துக்குக் காரணமாகின்றது) என்று கூறு கின்றனரோ அவர்களைத் தடுப்பதில் எண்ணம் கொண்டது. அந்தந்த பிரகரணத்திலுள்ள வேதநம் உபாஸனம் முதலிய சொற்களுக்கும் ஒரே பொருளைக்கூறும் தன்மையாலும், அல்லது ஸாமான்ய விசேஷந்யாயத்தாலே பசு என்ற சொல் லுக்கு ஆடு (சாகம்) என்ற சொல்லில் முடிவு என்று ஒப்புக் கொண்ட முறையில், வேதநம் முதலிய சொற்கள் பக்தி என்ற சொல்லில் முடிவுறுகின்றது என்றாலும், அல்லது ஸ்ரீபாஷ்யகாரர் சொன்ன ரீதியில் வெவ்வேறு இடங்களில் உபாஸ்ய குணப்பிரிவின் காரணமாக விதிபேதங்கள் ஏற்படு வதால் இவை ஒரே பொருளைக் கூறுவதில்லை என்றாலும் எந்தவிதத்திலும் சரி விதிக்கு விஷயம்தான் ஞானம், அந்த ஞானத்தால் தான் மோக்ஷம் ஏற்படுகிறது என்பதைக் காண்பிப்பதற்காகவே சப்தபேதத்தை ஸூத்ரக்காரர் கூறி னார் என்று அபிப்பிராயம்.

यद्वा शब्दादिभेदादिति तु कथयता सूत्रकारेण सम्यङ्-
न्यासोपासे विभक्ते यजनहवनवत् शब्दभेदादभाक्तात् ।
आख्यारूपादिभेदः श्रुत इतरसमः किञ्चभिन्नोऽधिकारः
शीघ्रप्राप्त्यादिभिस्स्यात् जगुरिति च मधूपासनादौ व्यवस्थाम्

சிந்தா - இம்மாதிரி ஸ்ரீபாஷ்யக்காரர் கூறியபடி, சப்த பேதம் என்று ஸூத்ரகாரர் கூறியதன் பொருளைக் கூறி, ஸ்ரீபாஷ்யகாரருக்கு அபிமதமாகவும் அவரின் மனதில் இருக்கும் முக்யமான சப்தபேதத்தையே விவரிக்கிறார்.

यद्वेति - नानाशब्दादिभेदात् என்று ஸூத்ரகாரர் முக்யமான சப்தபேதத்தையே சொல்லுகிறுர். அந்த சப்தபேதம் என்பது வெவ்வேறு பொருளைக் காண்பிக்கும் வெவ்வேறு சொற்களே. அவை (சப்த பேதம்) ப்ருஹ்ம வித்யைக்கு நேரிடையாக உள்ளன. மோக்ஷத்துக்குக் காரணமாக (வழியாக) பக்தி ப்ரபத்தி என்று வெவ்வேறு விதி சாஸ்த்ரங்களில் காணப்படுவதால் 'अनित्यमसुखंलोकमिमं प्राप्य भजस्वमाम्' என்று பக்தி விதியும், मामेकं शरणं व्रज' என்று ப்ரபத்திவிதியும் காணக்கிடக்கின்றது. ப்ரபத்தியென்பது தான் சரணுகதி என்று கூறப்படுகின்றது. ப்ரபத்திக்கு அடையாளம் (லக்ஷணம்) சொல்லும் 'अनन्यसाध्ये स्वाभीष्टे' என்னும் வாக்யத்தில் प्रपत्तिश्शरणागतिः என்று உபதேசித்திருப்பதால்.

पद - यद्वेति - வேறு விதமாக. शब्दादिभेदादिति तु कथयता- 'नानाशब्दादिभेदात्' என்ற ஸூத்ரத்தில் शब्दभेदात् - என்ற சப்த பதத்தை உபயோகப்படுத்திய ஸூத்ரகாரராலே.

अभावतात् - முக்யமான. शब्दभेदात् 'अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम्' என்றும் 'सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज' என்றும் भजस्व, शरणं व्रज என்று வெவ்வேறு விதிகாண்பதால்.

यजन हवनवत् यजति जुहोति என்று விதிக்கப்பட்ட யாக ஹோமம்போலே.

न्यासोपासे न्यासम् என்ற பிரபத்தியும், उपासा என்ற பக்தியும், (प्रपत्तिविद्येயும், भक्तिविद्येயும்).

सम्यक् - நன்ருக (ஸ்பஷ்டமாக).

विभक्ते - பிரிந்து வெவ்வேருக இருக்கின்றன.

आख्यारूपादि भेदः-ஸத்வித்யை, தஹரவித்யை முதலியவை பக்திக்குப் பெயர். நிக்ஷேபம்-நியாஸம் சரணுகதி முதலியவை ப்ரபத்திக்குப் பெயர். அதனுல் இவை வெவ்வேறு சொற்களாக இருப்பதால் ஸூதத்ரகாரர் கூறிய சப்தபேதம் இவைகளுக்கு இருக்கிறது. அவ்வாறே ஸத்வித்யை தஹர வித்யை முதலியவைகளில் அபஹத பாப்மத்வம் முதலிய

குணங்கள் ரூபம்; பகவானுக்கு உபாயாந்தர ஸ்தாநநிவேசம் என்ற நிரபேக்ஷோபாயத்வம் என்பது ப்ரபத்திக்கு ரூபம். இம்மாதிரி இரண்டுக்கும் ரூப பேதமும் இருக்கின்றது. आदि என்றதால் வர்ணாச்ரமதர்மங்கள் பக்திக்கு அங்கங்கள். (ஆநுகூல்யஸங்கல்பம், ப்ராதி கூல்ய வர்ஜநம், மஹா விச்வாஸம், கோப்த்ருத்வவரணம், கார்பண்யம் முதலியவை ப்ரபத்திக்கு அங்கங்கள் - என்ற வேறுபாடும் அறியத் தக்கது).

इतरसमः- ஸத்வித்யை தஹரவித்யை முதலியவை களுக்குப் போல் ப்ரபத்திக்கும் ஸமாநமாக.

श्रुतः - வேதம் ஸ்ம்ருதி முதலியவைகளால் சொல்லப் பட்டிருக்கின்றன.

किञ्च - ப்ரபத்தியும் பக்தியும் வெவ்வேறு வித்யைகள் என்பதற்கு வேறுகாரணமுமிருக்கின்றது.

शीघ्रप्राप्त्यादिभिः - 'साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी. இது முதலிய ப்ரமாணங்களால் பிரபத்திக்கு, விரும்பிய இந்த சரீரத்தின் முடிவிலோ அல்லது அதற்குள் தான் விரும்பிய காலத்திலோ மோக்ஷத்தைத் தரும் சக்தியிருப்ப தாலும் (பக்திக்கு தான் அநுபவிக்கத் துவங்கிய பாபத்தின் முடிவில் தான் மோக்ஷத்தைத் தரும் சக்தியிருப்பதால் சீக்ரம் பயன் கிடைக்காதாகையாலும் - அதாவது பிராரப்தம் கழிய இன்னும் ஒன்று இரண்டு பிறவிகள் எடுப்பதாயினும்.

अधिकारः - அந்தந்த பயன்களின் காரணமாக அதற்கு ஸாதநமான வித்யைகளைச் செய்யும் தகுதி. भिन्नः रूपात् - வேறுபடும் (வேறுபட்டவையாக ஆகும்) मधूपासनादौ - அத ஞல் மதுவித்யை முதலியவைகளில் व्यवस्थाम् - வித்யைகளைச் செய்யும் தகுதிகளின் வேறுபாடு.

इति च जगुः- இவ்வாறே நாட்கழித்துக்கிடைத்தல் சீக்ரம் கிடைத்தல் என்றுபயன்களுக்குத்தக்கவாறு வித்யைகளைச் செய்யும் தகுதிகளின் ஏற்பாட்டை (வ்யவஸ்தையை) நம் ஆசார்யர்கள் சொன்னார்கள் - इति.

**(கோஷ்டீபுரம் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் ஸ்வாமி அவர்கள்)**

## விகல்பாதிகரணம் (3-3-25)

ஸ்ரீ. ஸூ. विकल्पोऽविशिष्टफलत्वात् (3-3-57)
விகல்போऽவிசிஷ்டபலத்வாத் (3-3 57)

**விகல்ப:** (பிருஹ்ம வித்யைகளில் பலன் விஷயத்தில் ஒன்ருகவிருப்பதால் - ஒரு வித்யையே அனுஷ்டிக்கத் தக்கது. அவிசிஷ்ட பலத்வாத்-ஒவ்வொன்றிலும் அடையப் படும் பலன் வேருகவில்லாதபடியால்-முழுவதும் மிச்சமின்றி அடையப்படுவதால் ஏதாவது ஒன்றை அனுஷ்டித்தால் போதும்.

(இங்கு விஷயம் - வித்யைகள் வேறுபட்டிருப்பதால் ஒன்றுக்கு மேல்பட்ட வித்யையை அனுஷ்டிக்க வேணுமோ- என்கிற ஐயம் எழ - ஒரே வித்யையை அனுஸந்தித்தால் போதும் - பலனில் யாதொருவித்யாஸமில்லாதபடியால்).

பிருஹ்ம ப்ராப்தியைப் பலனுக உடையதானுலும் ஸத்வித்யை, தஹரவித்யை - முதலியவை வேறுபட்ட வித்யைகளாகும் என்க்காட்டபட்டது. இங்கே, சந்தேகம் யாதெனில் எல்லா வித்யைகளேயும் ஸமுச்சயமாக (ஒன்று சேர்ந்து) தனக்கு உபயோகமுள்ளவை என்று நிணைத்து ஒருவன் அனுஷ்டிக்கவேண்டுமா ? அல்லது அவை பிரயோஜன மில்லாவிடினும், விகல்பஏவ - ஒரே ஒரு வித்யையை தனக்கு அனுஷ்டிப்பதற்க்காகப் பொறுக்கிக் கொள்ளவேண்டுமா? (அவிசிஷ்ட-மிச்சமில்லாமல் முழுவதும் என்று அர்த்தம். உதாரணமாகதஹர சாண்டில்ய வித்யை களேச் சேர்த்து அனுஷ்டிப்பது) எது சரியாகும் ? ஒரே உபாஸகன் பல வித்யைகளே ஒன்று சேர்த்து ஸமுச்சய மாக அனுஷ்டிக்க வேண்டும் - எப்படி ? பலனில் வித்யாஸ மில்லாத போனுலும், சாஸ்திரங்களில் வித்யைகளே வேருக வும் பலவாகவும் - சொல்லப்பட்டிருப்பதால் நாமும் பார்க் கிறேம் - பலனில் ஸ்வர்க்கமே ஏகபலனுகவிருக்கிறது. ஆனுல் ஸாதனமோ - அக்னிஹோத்ரமோ - அமாவாசை தர்ச பூர்ணிமா க்ருதுக்களில் - அதுபோல மற்றயாகங்

களிலும் ஒரே வ்யக்தி பலயாகங்களைச் சேர்த்துப் பண்ண லாம்; அதேமாதிரி பிருஹ்மபிராப்தி வித்யைகளுக்கு ஏக பலனாகவிருக்கிறது - பிருஹ்மானுபவத்திற்க்காக - ஒரே வ்யக்தி பல வித்யைகளைச் சேர்த்து அனுஷ்டிக்கலாம்.

இப்படிச் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுவது विकल्प एव - ஒன்றே ஒன்றுதான். இதில் பலவித்யைகளை ஸமுச்சயமாகச் சேர்க்க வேண்டியதில்லை. अविशिष्टफलत्वात् மிச்சமில்லாமல் - முழுவதும் அடையப்படுவதால் - ஒன்றை அனுஷ்டித்தால் போதும். எல்லா பிருஹ்ம வித்யைகளுக்கும் அநவதிகாதிசய ஆனந்த பிருஹ்மானுபவம் பலனாக விருக் கிறது. அது மிச்சமின்றி முழுவதுமாக அனுபவிக்கப் படலாம் என்று சுருதி சொல்கிறது (பரிபூர்ண பிருஹ்மானு பவம்). தை. ஆ.) ब्रह्मविदाप्नोति परं - பிருஹ்மத்தை அறிந்த வன் மேலான பதத்தை அடைகிறான். தை. ஆ. 8-स एको ब्रह्मण आनन्दः श्रोत्रियस्य चाकामहतस्य - அது பிருஹ்மானந்தத்தின் ஒரு அளவை குறிக்கிறது. அந்த ஸ்ரோத்திரியனைப் போல - ஆசைகளிலிருந்து விடுபட்டவனாக - (அனுபவிக் கிறான்). மு. உ. 3-1-3ல்

**यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम्, तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति -**

எப்போது அந்த அறிவுள்ளரிஷி (ப்ரும்மவித்து) பரமாத் மாவைப்பார்க்கிறானோ - தங்கமேனியுடன் பிரகாசிப்பவனாக வும் - எல்லாவற்றையும் படைக்கும்) ஆளும் ஈசனாகிற புருஷனாகவும், பிருஹ்மயோனி உபாதான காரணமாகவும், விருக்கிற அந்த பரமாத்மாவைப் பார்க்கிறானோ, அவன் அப்போது எல்லாபுண்யபாபங்களை உதறிவிட்டு நிஷ்களங்க மாக, பிருஹ்மத்துடன் ஸாம்யத்தை அடையப் பெறுகிறான். இங்கே சொல்லப்படும் பிருஹ்மமே - தனக்காகவும் பிறருக் காகவும் ஆனந்தகுணயோகத்துடன் கூடியதாக விருக் கிறது; அனுபவிக்கும்படியிருக்கிறது; அநவதிகாதிசய ஆனந்தகுணப் பெருக்குடன் விளங்குகிறது. அப்பேற்பட்ட

உத்தமமான பிருஹ்மானுபவம் ஒரே ஒரு வித்யையின் பலனாகக்கிடைக்கப் பெறுமானால், எதற்காக வேறு வித்யைகளையோ - அவைகளைச் சேர்த்தோ அனுஷ்டிக்க வேண்டும்? - அஸம்பவ:. ஸ்வர்க்கம் முதலிய பலன்கள் காலம் தேசம் - ஸ்வரூபம் இவைகளாலே அளவுபட்ட போகங்களாக விருக்கின்றன. அவைகளின் விஷயத்திலே, அவைகளைப் பூர்ணமாக அனுபவிப்பதற்கு, ஸமுச்சயமாக அக்னிஹோத்ரம் - தர்ஸபூர்ணிமாக்களைச் சேர்த்து அனுஷ்டிப்பது சரியாகும். இங்கேயோ - ஸ்வர்க்கத்திற்கு எதிராக விபரீத ஸ்வரூபத்திலே பிருஹ்மம் இருப்பதாலே, அந்தமாதிரி ஸமுச்சய அனுஷ்டானம் ஏற்படுவதற்கில்லை. எல்லா வித்யைகளும் பிருஹ்மானுபவத்தைப் பலனாகக்கொண்டவை; அதற்கு விரோதமான அநாதிகர்ம அவித்யா முதலியவற்றை நிரஸனம் செய்வதாலே பிருஹ்மபிராப்தி பலனாக ஸம்பிவிக்கிறது. ஆகவே இதனால் மிச்சமின்றி முழுவதும் பிருஹ்மானுபவம் யேற்படுவதால், வித்யாஸமின்றி விருப்பதால் - விகல்பம் - ஒன்றே ஒன்று அனுஷ்டிக்கப்பட்டால் போதுமானதாகும். सर्वासां विकल्प एव.

சரி, பிருஹ்ம பிராப்திக்கு வேறாக (வ்யதிரிக்த) பலனாக விருக்கும் அந்த வித்யைகள் இருக்கின்றனவோ, அந்த வித்யைகளில் - ஸ்வர்க்காதிகளை அடையவிக்கும் கர்மாக்களைப்போல, ஒன்றையோ - ஸமுச்சயமாகவோ (சேர்த்தோ) ஒருவன் இஷ்டப்பட்டால் அனுஷ்டிக்கலாம், (எதுபோல - ஸ்வர்க்கத்தைப் பலனாக உடைய கர்மாக்களைச் சேர்த்துப் பண்ணுவதுபோல). ஏனெனில் அவைகளின் பலன் பரிமிதம் (அளவுபட்டதாகும்.) அவைகளைப் பரிபூர்ணமாகவும் அதிக அளவில் பெறுவதற்க்காகவும் - அபேக்ஷை இருக்கலாம் - அப்போது ஸமுச்சயமாகச் சேர்த்துப் பண்ணலாம்.

இதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார். அடுத்த சூத்ரத்தில்.

**விளக்கம்:—**

இங்கு கூறப்படுவது—ஒன்றுக்கு மேற்பட்ட பிருஹ்ம வித்யையை அனுஷ்டிக்க அவசியமில்லை, ஒவ்வொரு

வித்யையும் பிருஹ்ம பிராப்திக்கு உதவுகிறது—பிரதி பந்தத்தைப் போக்குகிறது. பிருஹ்மம் அபரிச்சின்னம்—அபரிமிதம் - தேச காலம் முதலியவைகளால் பாதிதமாகாதது. மோக்ஷ பலன் நித்யம், ஸ்வர்க்காதி அனுபவம் அநித்யம். உபாஸனையினால் பகவத் நிக்ரஹ உள்ளம் மாறுகிறது - அனுக்ரஹ சங்கல்பத்துடன் கூடியதாக ஆகிறது. உபாஸனம் உபாஸகனுடைய ஸ்வாபாவிகமான ஸ்வரூப பிரவிருத்தியை அடையும்படி செய்கிறது. ஒரு வித்யையின் பலன் தான் (மோக்ஷ பிராப்தி) மற்ற வித்யைகளுக்கும் தான் - முழுமையான பலன் பேசப்படுகிறது. அதனால் ஒரே வித்யையை அனுஷ்டித்தால் போதும் என்பதாகும். பிருஹ்மானுபவத்தைத் தருவதும் - வேறுபடாத பலனை உடையதாகையால், ஒன்றை அனுஷ்டித்தால் போதும்.

ஸ்ரீ. சூ. काम्यास्तु यथाकामं समुच्चीयेरत् न वा पूर्वहेत्व भावात (3-3-58)

காம்யாஸ்து யதாகாமம் ஸமுச்சீயேரத் ந வா
பூர்வஹேத்வ பாவாத் (3-3-58)

காம்யா: து-காம்யா பலன்களான ஸ்வர்க்கம் முதலானவற்றைத் தரும் வித்யைகளோவெனில் - யதாகாமம் - அவர்களின் இஷ்டப் பிரகாரம் ஸமுச்சீயேத் - சேர்த்து அனுஷ்டிக்கப்படலாம். ந வா - இல்லை - தனியாகவும் அனுஷ்டிக்கலாம். பூர்வ ஹேத்வ பாவாத் - அவற்றின் பலன் பிருஹ்ம வித்யையிற்போல அளவற்றதாயிராமையால்.

பிருஹ்ம உபாஸனையினாலே, அபரிமித பலன் ஏற்படும். மற்ற வித்யைகளில் அபரித பலன் இல்லாதபடியாலே - சேர்த்துப் பண்ணலாம் (ஸ்வர்க்காதிகளை அடையவிக்கும் அக்னிஹோத்ரம் தர்ஸ - பூர்ணிமா சிரார்த்தங்களைப் போல) பிருஹ்மானுபவம் தவிர்த்து - நீங்கலாக - மற்ற காம்ய வித்யைகளில் காம்ய பலன்களை அதிகமாக ஒருவன் விரும்பினால் - ஸமுச்சயமுமாக அனுஷ்டிக்கலாம். அதிகமான பலனை விரும்பாவிடில் தனியாக அதனை அனுஷ்டிக்கலாம்

அவன் இஷ்டம். ஆகவே பிருஹ்ம ப்ராப்திக்கு ஒரே வித்யையை அனுஷ்டித்தால் போதும். ந்யாஸ வித்யை இங்கு பிருஹ்ம பிராப்தி வித்யைகளுக்குள் ஒன்றாகும். அது ஒன்றே அனுஷ்டிக்கப்படலாம்.

இங்கு சுருத பிரகாசிகையில்-இந்த சூத்திரத்தில் பேசப் படுவது பிருஹ்ம பிராப்தி வ்யதிரிக்த பலாஸ்த்விதி-வித்யை களின் ஏகரூபம் - ஸமாதியில் ஸாக்ஷாத் கரணமிதி பரே; இவ்விதம் சொல்வது சரியில்லை. சாக்ஷாத்காரம் ஏக ரூபத்வே அபி, பந்தநிவிருத்தியாநந்தராபாவி பிருஹ்மாநுபவ வைஷம்ய சங்காநிராஸேந விநா ஸமுச்சய நிராஸா யோகாஸ்ச பந்த நிவிருத்த பூர்வக பிருஹ்மாநுபவ பலைக ரூப்யம் வக்தவ்யம் - (சுருத பிரகாசிகை) - விகல்பாதி கரணத்திலே விகல்போSவிசிஷ்டபலத்வாத் - இதில் ந்யாஸ வித்யையைச் சேர்த்துக் கொள்ள வேண்டியது. இந்த விஷயம் ஏற்கனவே நாநாசப்தாதித்யத்ராபி அதிகரணத்தில் விளக்கப்பட்டது.

शब्दभेदस्यापि सूत्रे निर्देशादिति भावः सङ्गतिः — ப்ரஹ்ம-பிராப்தி- परमं साम्यमुपैति अनवधिकातिशयानन्दं ब्रह्मस्व-सदृशानन्दं ददाति । ततोऽधिकानन्दस्याभावान्नभूयस्तदपेक्षा-संभव इति भावः ।

யதாஸ்ரயபாவாதிகரணம் (3-3-26)

பூ. சூ. अङ्गेषु यथाश्रयभावः (3-3-59)

அங்கேஷு யதாஸ்ரயபாவ: (3-3-59)

அங்கேஷு - யாகத்துக்கு அங்கமான உத்கீதத்தைப் பற்றிய உபாஸனங்கள், யதாஸ்ரய பாவ: - அவற்றுக்கு ஆஸ்ரயமான உத்கீதத்தைப்போல யாகத்துக்கும் அங்க மாக விருப்பவையாகும்.

முந்தின அதிகரணத்தில் பிருஹ்மவித்யைகளில் பிருஹ்மபிராப்தியைப் பலனாக உடைய வித்யைகளில்

ஏதாவது ஒன்றை அனுஷ்டித்தால் போதும்; இதர காம்ய வித்யைகளை தனியாகவோ - ஒன்று சேர்த்தோ அவனவன் இஷ்டப்படி அனுஷ்டிக்கலாம் என்று சொல்லப்பட்டது. அதுபோலவே உத்கீத உபாஸனம் அனுஷ்டிப்பவனின் இஷ்டப்படி கர்மங்களோடு சேர்த்து அனுஷ்டிக்கப்படலாம். இல்லாவிடில் அனுஷ்டிக்கப்படாமலும் இருக்கலாம் என்று இந்த மூன்றும் பாதத்தில் 17வது அதிகரணம்தந்நிர் த்தாரணு நியமாதி கரணத்தில் சில காரணங்களைக் காட்டி நிர்ண யிக்கப்பட்டது. இங்கே தூணை அசைத்து அசைத்து உறுதியாக நடுவதுபோல, (ஸ்தூணு நிக நந ந்யாயப்படி) பல ஆக்ஷேபங்களுக்குப் பதில் கூறி - அந்தவிஷயமே மீண்டும் நிலை நிறுத்தப்படுகிறது. (உத்கீத உபாஸநம் தடைகளை நீக்கி - பரபிருஹ்மத்தை அடைய உதவுகிறது என்று பேசப்படுகிறது).

உத்கீதம் போன்றவை யாகங்களின் அங்கமாக விருப் பவையாகும். சா. உ. 1-1-1-ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत-என்று தொடங்கி விதிக்கப்படும் உத்கீதத்தைப் பற்றிய உபா ஸனங்களில் உத்கீதத்தை உபாஸிக்க வேண்டும் - என்பவை (அதாவது உத்கீதத்தை ஓம் என்கிற பிரணவமாகத் தியானம் செய்யப்படவேண்டும்) – இங்கே வித்யைகள் சொல்லப்பட்டவையும் - இன்னும் வேறு சில சாகைகளில் ஓதப்பட்டவையும் - இவையெல்லாம் உத்கீதத்தை (ஓம்) அங்கமாகக் கொண்டவை. இங்கே சந்தேகம் யாதெனில் இந்த உபாஸனங்களை யாகத்திலே யாகாங்கமாக அனுஷ் டிக்க வேண்டுமா-உத்கீதத்தை போலே, அல்லது புருஷார்த் தத்திற்குத் தக்கப்படி கோதோஹனபாத்திரத்தைப் போல - இஷ்டப்படி சேர்த்துக் கொள்ளப்படலாமா ? (இங்கு சொல்லப்படுவது – உத்கீதத்தைப் பற்றிய உபாஸனங்கள் பல உண்டு. அவற்றுக்கு உத்கீதம் ஆஸ்ரயம்; அது போல யாகத்துக்கு அங்கமாக எப்போதும் கொள்ள வேண்டுமா - அல்லது புருஷார்த்தத்துக்குத் தக்கபடி - இஷ்டப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம் - இல்லாத போனால் வேண்டாம் - கட்டாய நியமமில்லை. (பூர்வ

பக்ஷம்) नियमेनोपादेयाइतियुक्तं - அவ்விதமானல், எப்போதும் சேர்த்துக் கொள்ளவேண்டியதாகும். (பூர்வமீமாம்ஸத்திலே யாகத்திற்கு வேண்டிய பொருள்கள்யாவை - எவை உத்தேஸ்ய பலனை அடையவைக்கிறது - என்கிற சர்ச்சையிருக்கிறது. அதில் - தேவதைகளைப் ப்ரீதி செய்து ஏதாவது ஒன்று செய்யப்படுமாகில், அது புருஷார்த்தமாகும். உதாரணமாக கோதோஹன பாத்ரம் தண்ணீர் கொண்டு வருவதற்கு சில சடங்குகளில் உபயோகப்படுகிறது. யாக விதிக்கு சம்மதமாக விருக்கவேண்டியது. அதனுல் நேரான பலன் உடனேயே ஸம்பவிக்காது. விதிக்கப்பட்ட நியமமானுல் சரி; சிலசமயங்களில் கேவலம் மனிதனின் இஷ்டப்படி பிரகாரமும் அது உபயோகப்படுகிறது.

ஆனுல் இங்கு ஆட்சேபிக்கப்படலாம் - புருஷார்த்தத்தை அடையவிக்கும் (ஸாதனம்) - அது இஷ்ட பிரகாரமாக (அநியம:) உபயோகப்படுகிறது எனக் காட்டுவதற்க்காக, சா. மீ. சூ. 3-3-41-ல் तन्निर्धारणानियमस्तद् दृष्टेः पृथग्घ्यप्रतिबन्ध फलं - என்று அங்கே கூறப்பட்டது. அதாவது யாகங்களில் உத்கீத உபாஸனத்தை அங்கமாகக் கொள்ளவேண்டும் என்கிற நியமம் இல்லை; வேத வாக்யத்தில் இம்மாதிரி அநியமம் காணப்படுவதல், (ஹி-ஹேது-ஏனெனில்) - உத்கீத உபாஸநத்திற்கு தடையைப் போக்குவது தனிப்பலன் என்று ஓதப்படுகிறதே. அதனுல் தான் அநியம: என்பதாகும்.

சத்யம் - சரிதான் - அங்கு நியமம் இல்லைதான். அதைப் போல இங்கேயும் அதே அபிப்ராயத்தை உறுதிப்படுத்துவதற்க்கு - சில அடையாளங்களைக் காட்டி அவைகளை ஆட்சேபித்து - பரிகாரம் மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது. அங்கே சில லிங்கங்களைக் காட்டி, யுக்தியினுல் உறுதி செய்யப்படுகிறது. அங்கே-சா. உ. 1-1-10ல் तेनोभौकुरुत:-மும் என்று உச்சரிப்பதுடன் இரண்டு பேர்களும் கிரியையைச் செய்யவேண்டியது - என்கிறபடியால் விதி (நியமம்) இல்லை. அதனுல் பலன்கள் வேறு என்று முடிவு செய்யப்பெற்றது.

உத்கீத உபாஸனைகளை ஆஸ்ரயம் செய்யும் உத்கீதத்தைப் போல, அங்கமாக கொள்வதாலே, உபாஸனங்களிலும் கூட அங்கமாகவிருப்பதாலே பல காரணங்கள் காணப் படுகின்றன. ஆனால் இங்கே - गोदोहनेन पशुकामस्य प्रणयेत् - பசுக்களை விரும்புகிறவன் கோதோஹன பாத்திரத்தில் ஜலத் தைக் கொணரவேண்டும் - என்பதைப்போல, உபாஸநா விதி வாக்யத்திலே, பலனும் சேர்ந்து சொல்லப்படுகிறது. ஆனால் உபாஸனம் பலத்தோடு சம்பந்தப்பட்டதாக - இந்த வாக்யத்தில் உபாஸனத்தைப் பற்றிய விதியிருப்பதாகக் கொள்ளமுடியாது, ஆனால் இங்கு உபாஸனம் உத்கீதத் தோடு சம்பந்தப் பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது - இந்த வாக்யத்தினாலே उद्गीथमुपासीत् - அவன் உத்கீதத்தை உபாஸிக்கட்டும் (விதி) - என்று காட்டுகிறது. (நியமத் தினாலே). இங்கேயும் यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेववीर्य-वत्तरम्-அந்த யாகக்கிரியையே - உபாஸனத்துடன் சேர்ந்து செய்யப்பட்டால் - சிரத்தையுடனும் இந்த பிருஹ்ம அறிவுட னும் - அதாவது அந்தயாகம் செய்யப்பட்டால், அந்தயாகம் மிக்க பலமுள்ளதாக ஆகிறது—வீர்யமுள்ளதாக ஆகிறது.

இங்கே பல சம்பந்தம் (கிரியைக்கு) இன்னொரு வேத வாக்யத்தினால் காட்டப்படுகிறது - அந்த வாக்யம் இங்கு உபதேசிக்கப்படுவதைக் போலத்தோற்றம் அளிக்கிறது. (அதாவது பலன் சம்பந்தம் விதிவாக்யத்தில் இல்லை. அர்த்தவாதத்தில் இருப்பதால்-அதை எடுத்துக்கொள்ளலாம் எனக்கருத்து). யாகத்துடன்கூடிய உத்கீதத்துடன் சம்பந்தப்பட்ட வாக்யத்தினாலே அதனுடைய லக்ஷணம் - அதாவதுயாகத்துக்கு அங்கமாகவிருத்தல், நன்றாகத் தெரிந்து போகிறது; அப்போது வேறு ஒரு வாக்யத்திலே வர்த்தமான (நிகழ்) காலத்திலே அதனுடைய பலனுடன் சம்பந்தப்பட்டிருப்பது - அர்த்தவாதமாக விருக்குமானால், (எது போலவென்றால்) பர்ணமரத்தினால் செய்யப்பட்ட கரண்டியை உபயோகப்படுத்தும்போது, அபாபவார்த்தை களைக் கேட்காமலிருப்பது போலவாகும். ஆகையால் எப்படி உத்கீதங்கள் உபாஸனங்களின் விஷயங்களாக,

ஆஸ்ரயிப்பதால், க்ருதுக்களின் அங்கமாக பிரயோகவிதியி ஞல் ஆகின்றனவோ, அதுபோல உத்கீதத்தை ஆதாரமாகக் கொண்ட உபாஸனங்கள் அந்த உத்கீதங்களின் முக மாகவே, அவையாகங்களின் அங்கமாக விருப்பதால், நியமேந அனுஷ்டிக்கப்படவேண்டும்.

(இங்கு சொலலப்படுவது - உத்கீத உபாஸநம் நியம மாக அடையப்பட வேண்டியது. கர்மாவுக்கு அங்கம் உத்கீதம். உபாஸனம் உத்கீதத்திற்குப் பண்ணவேண்டும்).

(பர்ணு மரத்தின் கரண்டி உபயோகப்படுவது யாகத் திலே. இம்மாதிரி கரண்டியை உபயோகப்படுத்துவதால் யேற்படக்கூடிய பலன்கள் - புகழ்ச் சொற்களாகும். இவ் விதமாக (கரண்டி) உபயோகம் இஷ்டப்படிக்கு உபயோகப் படுவதல்ல - அது விதியாகும். ஆனுல் உத்கீதத்தின் உபாஸனேக்குத் தனியான பலன் ஏற்படுகிறது, அதனேக் கூறுவது புகழ்ச்சொல்லாக ஆகாது. அதனுல் உபாஸனம் இஷ்டமிருந்தால் செய்யலாம்; நியமமில்லே).

பூ. சூ. शिष्टेश्च *(3-3-60)*

*சிஷ்டேஸ்ச* **(3-3-60)**

*சிஷ்டே: ச* - விதிக்கப்பட்டிருக்கையாலும் (உத்கீதோ பாஸனம் யாகாங்கமே.)

**ஸங்கதி:** (முந்தின சூத்ரத்தில் உத்கீத உபாஸனம் யாக பலனேக் காட்டிலும் வேறுபலனே விளைவிக்கமாட்டாது, இந்த உபாஸனம் தனக்கு ஆஸ்ரயமான உத்கீதத்தின் வழியாக யாகத்துக்கு அங்கமாக விருக்கிறது என்று கூறுவது சரியாகும், அதனுல் யாகத்தில் எப்போதும் கைக் கொள்ளத்தகுந்ததே என்று சொல்லப்பட்டது. இங்கு சொல்லப்படுவது உத்கீதத்துக்கு அங்கமாக உபாஸனத்தை விதிவாக்யமாகிற "உத்கீதமுபாஸீத"—என்பதில் விதிக்கப் பட்டிருப்பதால், அது எப்போதும் யாகத்துக்கு அங்கமாகும் என்று ஸ்தாபிக்கப்படுகிறது)

சிஷ்டே: ச - உத்கீதமுபாஸீத - என்னும் விதிவாக்யத்தில் உத்கீதத்துக்கு அங்கமாக உபாஸனத்தை விதித்திருக்கையால், உத்கீத உபாஸனம் யாக அங்கமேயாகும். शिष्टिः- சாஸனம் (கட்டளை) विधानमित्यर्थ:- விதியாகும். "உத்கீதத்தை அங்கமாகக்கொண்டு - உபாஸனவிதியாக உபாஸனத்தை கைக்கொள்ளவேண்டுமென்கிற நியமமாகும். யாகத்திற்கு (கர்மாவுக்கு) அங்கம் உத்கீதம். உத்கீதத்திற்கு உபாஸனம் செய்ய வேண்டும்). गोदोहनेन पशु कामस्य प्रणयेत् பசுக்களைவிரும்புகிறவன், ஜலத்தை கோதோஹன பாத்ரத்தில் கொணரவேண்டும் - என்கிறதைப்போலவே, இங்கே விதிவாக்யத்தினால், அதிகாராந்தரமாக (விதியை உடைய வாக்யமாக) சொல்லப்படுவதால், இது பற்றிய பிரகரணம் வேறு ஒன்றுமில்லாதபடியாலே, உத்கீத அங்கபாவமே இங்கு காட்டப்பட்டிருக்கிறது என்று தெரியவும். (அதாவது उपासीतेति விதி: ; உத்கீதமிதி த்விதீயா

चास्तीति तदुद्देश्यकविधिविषयत्वरूपमङ्गत्वं स्पष्टम् । एवमपि यदि गोदोहनेन पशुकामस्य प्रणयेदित्यत्रेव कामपद-घटितमन्यत् स्यात्, तर्हि उद्गीथस्य द्वितीयाश्रवणेऽप्यङ्गत्व-मङ्ग आलोच्येत, ततुनेति भावः ।

(உத்தமூர்ஸ்வாமி).

**சுருதபிரகாசிகையில்** பலன் விதியோடு சம்பந்தப்பட்டதாக சொல்லப்பட்டிருந்தால் அந்த கர்மாவை இஷ்டப்படி செய்யலாம் அல்லது செய்ய வேண்டியதில்லை; இல்லாத போனால் அது அங்கமாகும். இதற்கு சுருதிவாக்யத்திலிருந்து அடையாளம் கொடுக்கப்படுகிறது.

ஸூ. சூ. समाहारात् (3-3-61)

ஸமாஹாராத் (3-3-61)

ஸமாஹாராத் - சமாதானம் சொல்வதாலே - (அதாவது உத்காதாவுக்கு ஞானமில்லாவிடில் ஹோதாவின் ஞானத்

தைக்கொண்டு சமாதானம் செய்யலாம் என்று சொல்வ தாலே - உத்கீத உபாஸனம் யாக அங்கமே.

சா. உ. 1-5-5 होतृषदनाद्धैवापि दुरुद्गीथ मनुसमाहरति - உத்கீதத்திற்கும் ஓம் என்கிற பிரணவத்துடன் சம்பந்தத்தைப் பற்றிய சரியான ஞானம் - ஹோத்ரியிலிருந்து அடையப் படுவது; இது பற்றிய நியமம் உபாஸனத்தின் தோஷத்தை விலக்குகிறது. இதனுல் உபாஸனத்தின் ஸமாஹார நியமம் (சமாதானமான விதி) காணப்படுகிறது. துருத்கீதம் என் பதற்கு वेदनविहीन मुद्गीथम् - உபாஸிக்கப்படாத உத்கீதத் தைச் சொல்லும். ஆகவே அந்த வாக்யம் தோஷத்தைப் போக்குகிற இன்னொருத்தனை (ஹோதாவை)ச் சொல்கிறது - உபாஸனம் இல்லாதபோது யேற்படும் தோஷத்தைப் போக்குகிற இன்னொருத்தனைச் சொல்வது; அதனுலே அது (உத்கீதம்) நியமமாகவே யாகத்துக்கு அங்கமாகக் கொள்ள வேண்டியது என்பதாகும்.

இங்கு சொல்லப்படுவது - உத்காதா உபாஸனத்துடன் பண்ணுதபோனுல் தோஷம் ஏற்படுகிறது - ஹோதாவின் ஞானத்தினுல் அதை சரிக்கட்டணும். ஆகவே உத்கீத உபாஸனம் நியமமாகும். வேருரு (அதாவது ஹோதாவின்) ஞானத்தினுல் சரிக்கட்டணும் என்பதாகும்.

மேல் சொன்ன வாக்யத்தில் உத்காதா உத்கீதத்தை செய்யாவிடில், ஹோதாவின் அனுஸந்தானத்தாலேயே அந்தக் குறை நீக்கப்படும். தோஷ பரிஹாரம் சொல்லப் படுகிறது. இதிலிருந்து உத்காத உத்கீதத்தைப் பற்றி எப்போதும் அறிந்திருக்கவேண்டும் என்பது தெளிவு. ஆகவே உத்கீதம் எப்போதும் யாகத்தின் அங்கமாகும்).

பூ. சூ. गुणसाधारण्यश्रुतेश्च (3-3-62)

குணஸாதாரண்ய ஸ்ருதேஸ்ச (3-3-62)

குண ஸாதாரண்ய ஸ்ருதே: ச—பிரணவமும் உபாஸன மாகும் - பிரணவத்தின் குணமான உபாஸனத்துக்குப் பொதுவாயிருக்கும் தன்மை ஓதப்படுவதாலே.

பிரணவத்தின் குணமான உபாஸனம் — அதாவது உபாஸனனத்துடன் கூடிய பிரணவமாகும். அதனை ஆஸ்ரயித்திருக்கும் பிரணவம் (ஓம்) விஷயமாகிறது. இந்த விஷயம் இந்த சுருதியிலிருந்து தெரியவருகிறது. சா. உ. तेनेयं त्रयो विद्यावर्तते - ओमित्याश्रावयति ओमिति शंसति ओमित्युद्गायति - பிரணவத்தினுல் த்ரீயீ வித்யா - மூன்று வேதங்களும் நிலை நிற்கின்றன. அவன் (அத்வர்யு) "ஓம்" என்கிற பிரணவத்தினுல் ஆக்ஞை செய்கிருன், அவன் (ஹோத்ரி) ஓம் என்பதை படிக்கிருன் (ஓதுகிருன்); (கேட்கும்படிச் செய்கிருன்); அவன் (உத்காதிரி) ஓம் என்பதை கானம் செய்கிருன். (இதிலிருந்து ஓங்காரத்தினுலே மூன்று வேதங்களிலும் விதிக்கப்படும் கர்மங்கள் செயல்படுகின்றன. கர்மங்களில் செய்யப்படும் ஆஸ்ராவணம், ஸம்ஸனம், உத்கானம் ஆகிய செயல்கள் ஓங்காரத்தை முன்னிட்டே செய்யப்படுகின்றன - அதனுல் உபாஸனத்துடன் கூடிய பிரணவம் தான் பொதுவாக எல்லா வைதிக கர்மாக்களிலும் சொல்லப்படுகிறது. (उपासनसमाहारो - உபாஸனவிசிஷ்ட பிரணவம் என்பதாகும்). तेन - அந்த பிரணத்வத்தினுல் அதாவது உபாஸனத்தோடு கூடிய பிரணவமே குறிக்கப்படுகிறபடியாலே, (प्रकृतपरामर्शात्) பிரணவ உபாஸனமே (உத்கீத உபாஸனமே) எல்லாக் கர்மங்களிலும் அன்வயித்து நிற்கிறது. (सर्वत्रसञ्चरति) ஆகையால் இப்படி உபாஸனம் பிரணவத்தோடு கூடியதாகவே (உபாஸன விசிஷ்ட பிரணவம்) இருக்கையால் உத்கீதத்தைப் போல, இந்த உபாஸன விசிஷ்ட பிரணவமும் (உபாஸனமும்) யாகங்களில் நியமமாகச் சேர்த்துக் கொள்ளவேண்டியதாகும். (அங்கமென்று தெரிகிறது). (பூர்வபக்ஷம்) - மூன்று சூத்ரங்களும் பூர்வபக்ஷமாகும். இனி சித்தாந்த சூத்ரம் சொல்லப்படுகிறது. (சுருதியில் உத்கீதத்திற்கும் பிரணவத்திற்கும் (ஓம் என்பதற்கும்) ஒற்றுமையை விதிக்கிறது - உத்காத்ரி ஓம் என்பதை படிக்கிருன் - அதை ஹோத்ரி வேதபாடங்களுடன் சேர்ந்து பாடுகிருன். உத்காதா உத்கீத உபாஸனமின்றி படிப்பதால் தோஷம் உண்டாகிறது. அந்த தோஷம் ஹோத்ரி

உபாஸனம் செய்து பாடினால் போகிறது. இங்கே தோஷ பரிஹாரம் சொல்லப்படுவதால் - உபாஸனம் விதிக்கப்பட்ட தாகும். இஷ்டப்படி செய்யலாம், செய்யவேண்டியதில்லை என்பதாகும்).

ஸ்ரீ. ஸூ. न वा तत्सहभावाश्रुतेः (3-3-63)
ந வா தத்ஸஹபாவாச்ருதே: (3-3-63)

தத் ஸஹபாவாஸ்ருதே: - உத்கீதத்திற்கு யாகாங்க மாக விருக்கும் தன்மை ஓதப்படாததால், ந வா - உத்கீதோ பாஸனம் யாகாங்கமாக விருக்கிறது என்பது சரியில்லை. (இங்கு பூர்வ மூன்று ஸூத்ரங்களின் கருத்தை வேறுபடுத்த - न वेति - என்பது காட்டுகிறது. உபாஸனத்திற்கு உத்கீத ஸஹபாவ நியமம் (கூடச் சேர்ந்தது என்கிற நியமம் - பூர்வபக்ஷியின இஷ்டம் - அது நிரஸிக்கப்படுகிறது. (எங்கெனமெனில் பிரணவம் அவசியம் தான் – ஆனால் உத்கீத உபாஸனத்திற்கு அங்கமில்லை. உபாஸனை அவசியமில்லை. பிருதக் பல ஸாதானமாகவிருக்கலாம். தடை நீங்குகிறது என்பது உத்கீத உபாஸனத்தின் பலனாகும்).

ஸ்ரீபாஷ்யம்: — நீ சொல்லுகிறபடி இல்லை (பூர்வ பக்ஷியை நோக்கி சித்தாந்தி சொல்வது) - நியமமாக உத்கீத உபாஸனங்களை யாகாங்கமாக அனுஷ்டிக்கப்பட வேண்டியது என்பது இருக்க முடியாது. (உத்கீதத்தைப் போல) உபாதான நியமமாக விருக்கமுடியாது. ஏன்? ततसह भावाश्रुतेः - உத்கீத உபாஸனமும் யாகமும் சேர்ந்து இருக்கவேண்டும் என்று சுருதியில் ஓதப்படவில்லை. (யாகாங்கமாயிருக்கும் தன்மை சுருதியில் ஓதப்படவில்லை.) उद्गीथाङ्गभावाश्रुतेरित्यर्थः - என்கிற அர்த்தம் ஆகும். அங்க பாவம் என்றால் - எப்போதும் கூடச் சேர்ந்து விருப்பது என்பது அர்த்தம் (सहभावनियमः) - (அதாவது அங்கமில்லை யென்றால் உபாஸனமுமில்லை என்பதாகும்) उदगीथमुपासीत - உத்கீதத்தை உபாஸிக்கட்டும் என்கிற விதியிருப்பினும், இதில் அதிகாராந்தரம் (ஒரு விசேஷத்தன்மை) காட்டப்பட வில்லை, ஆயினும் உடனேயே பின்னால் வரும் வாக்யத்

திலே, यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति - (அந்த யாககிரியையே - அதையே வித்யையுடன் கூடச் சேர்ந்து சிரத்தையுடனும் - ப்ருஹ்ம அறிவுடனும் செய்யப் பட்டால், அந்த யாககிரியை வீர்யவத்தரமாக ஆகிறது. (சக்தியை அதிகமாகப் பெறுகிறது) (பலனைக் கொடுக்கா மல் தடை செய்யும் பிரதிபந்தகத்தைப் போக்குகிறது) - இதனுல் உபாஸனம் யாகத்திலே அதிக வீர்யத்தை சம்பாதித்துக் கொடுக்கிறது எனத் தெரிவு - வீர்யவத்தரத் வத்திற்கு பிரதி ஸாதனபாவத்தைப் போதிக்கிறது). அதனுல் க்ருது (யாகத்தின்) பலனைவிட வேருனதான பலனை அடைவதற்கு வித்யா ஸாதனமாவதாலே அது உத்கீதத்தை உபாஸிக்கட்டும் என்கிற கர்ம கர்த்தவ்யத்தை (செய்யவேண்டியதைப்) போதிக்கிறது.

சரி - யாகபலனைவிட வேருன பலனை அடைவதற்கு ஸாதனமாக அமைவது உபாஸனம் ஆகும். அது உத்கீதத்திற்கு அங்கமாகவும் - யாகங்களிலும் அங்க பூத மாகவுமிருக்கிறபடியால் - இங்கு அதன் உபயோகம் ஏற்படுவதில்லை. ஏனெனில் உபாஸனத்திற்கு ஆஸ்ரய அபேக்ஷை - அதாவது உத்கீதம் - அது ஸந்நிஹிதமாக (அருகே) யிருப்பதால், உத்கீதம் ஆஸ்ரயத்தை மாத்திரம் (விஷயம் மாத்திரம்) விரும்புகிறது. (உபாஸனமே அதிஷ் டானமாகவும், உத்கீதம் விஷயமுமாகிறது). உத்கீதமும் க்ருது அங்க பூதமாகவிருக்கிறபடியால் - க்ருது பிரயுக்த உத்கீதம் உபாஸனத்தை ஆஸ்ரயிப்பதால், உத்கீதமும் யாகத்தில் பயன்படுகிறது. இந்த விதமாக க்ருதுவுக்கு அதிகபலத்தைக் (வீர்யவத்தரமாக ஆக்குவதற்கு) கொடுப் பதற்கு யாகத்தைச் செய்யும் அதிகாரிக்கு உபயோகப்படு கிறது. वीर्यवत्तरत्वं - அந்த யாககிரியை உபாஸனத்துடன் கூடச் செய்வது - அது அதிகபலத்தைப் பெறுகிறது. க்ருது பலத்தை பிரபல கர்மாந்தர பலத்தினுல் தடை பெரு மல் செய்கிறது. அதாவது க்ருதுவின் பலன் காலதாமத மின்றி சீக்கிரமே கிடைக்கும்படி செய்கிறது என்கிற அர்த்தம் யேற்படும்.

உத்கீத உபாஸனத்தின் பலன் பிரதிபந்தகத்தை நீக்கு கிறது. சுருதிகள் ஓதுவதில்லே. பர்ணமரத்திஞல் செய்யப் பட்ட கரண்டி (ஆப்பை) - அதுவே அபாவார்த்தைக் கேட்க நேரான ஸாதனமாவதில்லே என்பது எப்படியோ - அதுபோல உபாஸனமும் பலனே அடைவிப்பதற்கு ஸாதனமாகவில்லே- இந்த விஷயம் இதில் ஓதப்படுகிறது - சா. உ. 1-1-10 यदेव विद्यया करोति...तदेव वीर्यवत्तरं भवति - அந்த யாகக்கிரியையே உபாஸனத்துடன் கூடச் சேர்ந்து செய்யப்படுகிறதால், அதுவே மிக்க வீர்யத்தைப் பெறுகிறது - இதஞல் வித்யை யிஞல் பலன் அடையப்படுகிறது. अपाप ஸ்லோக (கெட்ட வார்த்தைகளே) ஸ்ரவணம் செய்யாதபடி பலன் ஏற்படு கிறது. இதஞல் ஸாக்ஷாத் காரிய காரணபாவமில்லாத போதிலும், (ஸாதன அபாவமாக விருந்த போதிலும்) அது க்ருதுவுக்கு அங்கமாக உபயோகப்படுவதில் யாதொரு விரோதமுமில்லே. ஆகையால் நாம் எண்ணிவிடக்கூடாது- யாகத்திற்கும் உபாஸனத்திற்கும் அங்க பூதமாக - வேஞெரு பலனே அடைவதற்கு ஸாதனமாக கல்பிக்கப்படுகிறது. அதஞல் சுருதிகளில் ஓதப்பட்ட பலன்கள் - பர்ண மரத்தி ஞல் செய்யப்பட்ட கரண்டியை உபயோகப்படுத்துவதால் ஏற்படும் பலன்கள் (அதாவது அசுப வார்த்தைகளே கேட்கா மலிருத்தல்) - இவை யாவும் இந்த பல சுருதிகள் யாவும் அர்த்தவாதம் மாத்திரமேயாகும் (புகழ் சொற்களாகும்).

(இங்கே - சூத்ரம் 59ல் சொல்லப்பட்ட விஷயத்தை மறுத்து சித்தாந்தம் சொல்லப்படுகிறது. உத்கீத உபா ஸனத்துடன் பர்ண மரத்திஞல் செய்யப்பட்ட கரண்டியை யாகத்தில் உபயோகப்படுத்துவது - இரண்டுக்குமுள்ள சம்பந்தத்தை மறுக்கிறது பர்ணு மரத்தின் கரண்டியின் உபயோகம் இன்ஞெரு சுருதியில் பலஞகச் சொல்லப்படுகி றது. அங்கே விதியாகவில்லே(அர்த்தவாதமாகவிருக்கிறது). அந்த கரண்டியை உபயோகித்தலே பலனே அடைவதற்கு நேரான ஸாதனமாகவில்லே - விதியும் பலனே அடைதலும் இரண்டும் சேர்ந்து ஓரிடத்தில் காணப்படவில்லேயாயினும். இங்கே உபாஸனத்துக்கு அதிக வீர்யத்தைக் கொடுப்பதற்கு

உத்கீத உபாஸனம் உபயோகப்படுகிறது என்கிற விஷயத்தில் - அது நேராகவே உத்கீத உபாஸனத்தினுல் அடையப் பெறுகிறது என்று சொல்லப்படுகிறது. இங்கு பர்ண மரத்தினுல் செய்யப்பட்ட கரண்டியின் உபயோகமும், உத்கீத உபாஸனமும் பார்ப்பதற்கு ஒன்ருகிலும் - கோதோஹன பாத்ரத்தில் ஜலத்தைக் கொண்டுவருதல் தன் இச்சைப்படி பலனை அடைவதில் ஒன்று போலவிருக்கிறது எனலாம்.

(இங்கு சொல்லப்படும் விஷயம். உத்கீதமுபாஸீத - என்கிற வாக்யத்தில் உத்கீத உபாஸனப்பலம் சொல்லப் படவில்லை. அது வேருெரு வாக்யத்தில் சொல்லப்படுகிறது. யாகத்தின் பலனைக்காட்டிலும் வேறு ஒரு பலனுக்கு ஸாதனமாக இங்கு முதல் வாக்யத்தில் விதிக்கப்படுகிறது. யாகத்தின் அங்கமான உத்கீதத்துக்கு அங்கமாக - விநியோகம் கொள்வது பொருந்தாது. ஆகையால் இந்த உபாஸனம் எதைப்பற்றியது எனக் கேள்வி எழ - உத்கீதத்தைப் பற்றியதே ஆகும். "யஸ்ய பர்ணமயீ" - பர்ண மரத்தின் கரண்டியை உபயோகித்தல் - இதற்கு பலனுக அர்த்தவாதத்தில் கிடக்கிறது. பசுகாமஸ்ய- என்றவிடத்தில் போலவீர்யவத்தரமாகையாகிற தனிப்பயன் ஓதப்படுவதால் உத்கீத உபாஸனம் கைக் கொள்ளத்தக்கது. இதனுல் தேறுவது உத்கீத உபாஸனம் யாகத்தில் எப்போதும் அங்கமாவதில்லை.

ஸ்ரீ. சூ. दर्शनाच्च (3-3-64)

தர்சனுச்ச (3-3-64)

தர்ஸநாச்ச - உத்கீத உபாஸனம் யாகாங்கமல்ல என்று வேதவாக்யம் கூறுகிறது. (இதனுல் யாகத்தில் உத்கீத உபாஸனத்தை எப்போதும் கைக் கொள்ளவேண்டியதில்லை.)

சுருதியும் காட்டுகிறது - உத்கீத உபாஸனம் யாகாங்கமில்லை என்று, (उपासनोपादानानियमम्) உத்கீத உபாஸனை

நியமமில்லை (விதிக்கப்படவில்லை). சா. உ. 4 - 17 - 10ல் एवं विद्ध वै ब्रह्मा यज्ञं यजमानं सर्वांश्चर्त्विजोऽभिरक्षति – இங்கு சொல்லப் பட்ட யக்ஞதோஷத்தைப் போக்கும் பரிஹாரத்தை அறிந்த பிரும்மா யக்ஞத்தையும், எஜமானனையும் எல்லா ருத்விக்கு களையும் பாதுகாக்கிறான். இதனால் யக்ஞம் - யஜமானன் - ஸர்வான் ருத்விக்குக்களின் தோஷம் நீங்குகிறது. பிருஹ்மா எனப்படும் ருத்விக்கின் தோஷபரிஹார ஞானத்தினாலே யாகம் முதலியவை ரக்ஷிக்கப்படுகின்றன. உத்காதா முதலானவர்களுக்கு தோஷ பரிஹாரஞானம் இல்லா விடினும் பிரும்மாவின் ஞானத்தினாலே யாகம் ரக்ஷிக்கப் படுகிறது என்பதால், உத்காதா முதலானவர்களின் ஞானம் யக்ஞத்துக்கு அங்கமல்ல - என்றும் காட்டப்படுகிறது. யக்ஞரக்ஷணம் என்பதற்குப் பொருள் யக்ஞப்பலனை அடைய விடாமல் தடுக்கும் தடை அது இல்லாமையே யாகும்.

இந்த ரக்ஷணம் உத்கீதத்தைப் பற்றிய அறிவு இல்லா மலே, பிரும்மா எனப்படும் ருத்விக்கின் தோஷபரிஹார ஞானத்தாலேயே ஸித்திப்பதாகக் கூறப்படுகிறது- அத னால் உத்கீத உபாஸனம் யாகத்தில் எப்போதும் கொள்ளத் தக்கதில்லை. அதேமாதிரி ஹோத்ருஷதநாத் (சா. உ. 1-1-15) என்னும் வாக்யத்திலிருந்து உத்கீத உபாஸனம் யாகத்தில் எப்போதும் கைக்கொள்ளத் தக்கது என்பதும் (இது பூர்வபக்ஷியின் கருத்து) - இதுவும் சரியில்லை. உத்கீத உபாஸனத்தோடு கூடவே வீர்யவத்தரமான பலத் தின் பொருட்டு, யாகத்தை அனுஷ்டிப்பது - இதுவும் சரி யில்லை - தேநேயம் த்ரயீவித்யா வர்த்ததே (இதில் உத்கீத உபாஸனம் எல்லாக் கர்மாக்களிலும் அங்வயிக்கிறது - 62வது சூத்ரவிஷயம் இதுவும் சரியில்லை. ''தேந'' என்கிற பதம் அந்த பிரகரணத்தில் முன் உள்ள உத்கீத மாத்திரத் தைக் குறிக்குமே ஒழிய - உத்கீதோபாஸனத்தைக் குறிக் காது. ஏவம் வித்திவை - (சா. உ. 4-17-16) என்று தொடங்கும் வாக்கியத்திலிருந்து உத்கீதோபாஸனம் யாகத்

துக்கு அங்கமல்ல - என்று விளங்குகிறபடியால், ஹோத்ரு ஷதநாத் - என்று தொடங்கும் வாக்யத்துக்கும் 'தேனேயம் த்ரயீ வித்யா' என்னும் வாக்யத்திற்கும் இந்தப் பிரகாரம் பொருள் கொள்ள வேண்டியதாகும். ஆகையால் அந்த வாக்யங்களோடு விரோதமில்லை. ஆகவே உத்கீதோபாஸனம் யாகத்துக்கு எப்போதும் அங்கமல்ல என்பதும் தெளிவு.

சரி அப்படியானால் பிருஹ்ம வித்யையைப் பற்றிய இந்த 3ம் பாதத்தில், பிருஹ்மவித்யையில்லாததான உத்கீத உபாஸனத்தைப் பற்றிய விசாரம் ஏன் செய்யப்படுகிறது என்றால் - பலனில் விருப்பமற்று, யாகங்களை அனுஷ்டிப்பது பிருஹ்ம வித்யைக்கு அங்கமாகும். இந்த உத்கீதோபாஸநம் முதலானவை அந்த யாகபலனை அடையவிக்க முடியாமல் தடையாக விருப்பவைகளை நீக்கி - காலதாமதமின்றி - பலனை அடைய உதவுவதால் - அதனால் அது இங்கு விசாரிக்கப்படுகிறது—சமாதானமாகும்.

ஸ்ரீ பகவத் ராமானுஜரின் ஸ்ரீ பாஷ்யத்தில்
மூன்றும் அத்யாயம் - மூன்றும் பாதம் நிறைவுற்றது.

(ஓம் சுபமஸ்து)



ஸ்ரீ



ஸ்ரீமதே ராமானுஜாய நம:   ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிகயதீந்திர

மஹாதேசிகாய நம:

# பிருஹ்ம வித்யா

## (ஐந்தாம் பாகம்)

*ஸ்ரீபகவத்ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே*

*மூன்றும் அத்யாயம்—நான்காம் பாதம்*

## புருஷார்த்தாதி கரணம் (3-4-1)

**ஸி. சூத். पुरुषार्थोऽतः शब्दादिति बादरायणः (3-4-1)**

**புருஷார்த்தோऽதः சப்தாதி பாதராயண: ( 3-4-1 )**

अतः முன் பாதத்தில் விசாரிக்கப்பட்ட பிருஹ்ம வித்யை களிலிருந்து, புருஷார்த்த:-புருஷார்த்தமாகிற மோக்ஷபலன் யேற்படுகிறது. சப்தாத்-வேதவாக்யங்கள் கூறுவதாலே - இதி - என்று பாதராயண: - பாதராயணராகிய சூத்ரக்காரர் கருது கிறார். (இது சித்தாந்த சூத்ரம் - முதலில் சொல்லப்படுகிறது. பலப்ரத: - சூத்ரம் மாதிரி).

முந்தின பாதத்தில் வித்யைகள் ஒன்றாக விருக்குமானல் ஒரு சாகையிலுள்ள பிருஹ்ம குணங்களை மற்றொரு சாகையில் சேர்த்துக் கொள்ளலாம் - என்கிற குணோபஸம்ஹாரமும்; வேறானதாக விருக்குமானல் சேர்த்துக் கொள்ளப்பட முடியாது என்றும் நிர்ண

யிக்கப்பட்டது. அதாவது வித்யை ஏகத்வமா-அல்லது நானாத்வமா? (வேறாகவுள்ளதா) என்பது சிந்தனை செய்யப்பட்டது. இங்கே, நான்காம் பாதத்திலே, வித்யையிலிருந்து மேலான புருஷார்த்தம் யேற்படுகிறதா அல்லது பிருஹ்ம வித்யைக்கு அங்கமான கர்மத்தினால் யேற்படுகிறதா? எது சரியாகும்? (இதனால் இந்த பாதத்திற்கு அங்கபாதம் - பிருஹ்ம வித்யாங்கமான கர்மத்தைப்பற்றி விசாரிக்கப்படுவதால் - எனச் சொல்லப்படுகிறது. இதிலே வர்ணாஸ்ரமதர்மங்கள் சமதமாதிகள், பாண்டித்யம் பால்யத்தில் யேற்படவேண்டியது-மௌனம் இத்யாதிகள் பேசப்படுகின்றன). இங்கு தீர்மானிக்கப்படுவது-பலன் பரமாத்மாவினால் தான் யேற்படுகிறது-வித்யையினாலுமில்லை, கர்மாவினாலுமில்லை. வித்யை புருஷார்த்த ஸாதனம்-அதனால் திருப்தியடைந்த பரமாத்மாவே புருஷார்த்த பலபிரதன் ஆகும்).

ஸ்ரீ பாஷ்யம்

எது சரியாகும்? अतः - பிருஹ்ம வித்யையினால் - புருஷார்த்தம் ஏற்படுகிறது என்று சூத்ரக்காரரான பாதராயணர் (வியாஸர்) கருதுகிறார். எப்படி? शब्दात् - வேதவாக்யம் அவ்விதம் கூறுவதாலே. ஔபநிஷத்வாக்யங்கள் வித்யையிலிருந்து புருஷார்த்தம் யேற்படுகிறது என்று சொல்கின்றன. உதாரணமாக - தை ஆ. 1ல். ब्रह्मविदाप्नोति परम् பிருஹ்மத்தை அறிந்தவன் மேலான பதத்தை அடைகிறான் - (உத்தர நாரா.) वेदाहमेतं पुरुषं महान्तमादित्यवर्णं तमसः परस्तात्। तमेवं विद्वानमृत इह भवति नान्यः पन्था विद्यतेऽयनाय — நான் இந்த புருஷனை நன்கு அறிவேன் - சூரிய ஒளியைப் போலப் பிரகாசிக்கிறவனும், தமஸ்ஸிற்கு அப்பால் இருப்பவனும், (நான் நன்கு அறிவேன்). இவனை அறிவதைவிட - வேறு ஒரு மார்க்கமும் மோக்ஷமடைவதற்கு இல்லை. அவனை அறிந்து கொண்டுதான் வித்வான் (உபாஸகன்) மோக்ஷத்தை அடைகிறான். முண். 3-2-8ல் यथा नद्यः स्यन्दमानाः समुद्रे अस्तं गच्छन्ति नामरूपे विहाय, तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम् - எவ்விதம் நதிகள் கடலில் சங்கமமாகி மறைகின்றனவோ—தங்கள் நாம ரூபங்களை விட்டுவிட்டு கடலுடன் ஒன்றாகி விடுகின்றனவோ, அது போல உபாஸகன் நாம ரூபங்களை

விட்டு மேலான பரமபுருஷனை - திவ்யமான புருஷனை அடை கிறான்.

இங்கு பூர்வபக்ஷி எதிர்த்து நிற்கிறான்.

(இங்கு கூறப்படுவது - வைராக்ய பாதத்திலே "கர்மங்கள் கைவிடத்தக்கவை" என்று கூறியிருக்கும் போது - இங்கே கர்மங்கள் பிருஹ்ம வித்யைக்கு அங்கம் என்று கூறுவது எப்படி பொருந்தும்? இதற்கு சமாதானம் - மோக்ஷம் தவிர - மற்ற பலன்களில் விருப்பத்தோடு (காம்யமாகச்) செய்யப்படும் கர் மங்கள் விடத்தக்கவை அல்ல என்று வைராக்ய பாதத்தில் நிர் ணயம். காம்யமாக (இஷ்ட பலன்களை) இல்லாமல், செய்யப்படும் கர்மங்கள் பிருஹ்மவித்யைக்கு அங்கம்-அவை செய்யப்பட வேண் டியது என்று இந்த பாதத்தில் கூறப்படுகின்றன. மேலும் வித் யைக்கு நானாத்வம் (வேறாக இருப்பது) உண்டாகுமாகில், பலன் களும் வேறாக இருக்கும். ஆகவே கர்மத்தை அங்கமாகக் கொண்ட பிருஹ்ம வித்யையாகிற அங்கியே மோக்ஷ பல ஸாதன மாகிறது என நிருபிதம்).

ஸி. சூ. शेषत्वात् पुरुषार्थवादो यथाऽन्येष्विति जैमिनिः (3-4-2)

**சேஷத்வாத் புருஷார்த்த வாதோ யதா**
**அந்யேஷ்விதி ஜைமிநி: (3-4-2)**

ஸேஷத்வாத்-வித்யை (கர்மமாகிற) யாகத்துக்கு ஸேஷ மகையால், புருஷார்த்த வாத;-(வித்யையின் பலன்) கர்த்தா வைப் புகழும் அர்த்தவாதமேயாகும்; யதா அந்யேஷு-திரவியம் முதலான மற்ற விஷயங்களில் போலே, இதி ஜைமிநி: ஜைமிநி அபிப்ராயப்படுகிறார்.

(இங்கு வேதசப்த பிரமாணத்தாலே பிருஹ்ம வித்யையி லிருந்து மோக்ஷபலன் ஸம்பவிக்கிறது என்று கூறுவது சரியில்லை. வேத சப்தத்திலிருந்து அப்படி கொள்ளக்கூடாது. அதற்கு காரணம் சொல்லப்படுகிறது.)

அவ்விதமல்ல-வேத சப்தத்திலிருந்து மோக்ஷம் பிருஹ்ம வித்யையினால் உண்டாகிறது என்பது சரியாகாது. வித்யைதான் புருஷார்த்த பிராப்திக்கு காரணம் - என்பது சப்தத்தினால் அறியப்படுகிறது-இது சரியாகாது-ஏனெனில் ब्रह्मविदाप्नोति परं பிருஹ்மத்தை அறிந்தவன் மேலான பதத்தை அடைகிறான் என்கிற வேத வாக்யங்கள் வித்யையினால் மேலான மோக்ஷ பதம் அடையப்படுகிறது என்பதைக் காட்டவில்லை; ஏனெனில் கர்மமோ அதைச் செய்யும் கர்த்தா (ஜீவாத்மா)விற்கு ஆத்மாவைப் பற்றிய ஞானத்தை உண்டாக்குவதற்கு-காரணமாகிறது-அதைப் பற்றி விளக்குகிறது (याथात्म्य वेदनप्रतिपादन परत्वात्) ஆகையால் கர்மாவைச் செய்யும் கர்த்தா ஸமஸ்காரங்களால் சுத்தமாக்கப் பட்டு, வித்யை கர்மத்துக்கு அங்கமாக விருப்பதாலே, அங்கே வித்யையைப் பற்றி பல சுருதி அர்த்தவாதமாகும் (புகழ் சொல லாகும்) यथाऽन्येषु द्रव्यादिषु - திரவியம் முதலானவைகளிற் போல் இவ்விதமாக ஜைமினி ஆசார்யர் அபிப்ராயப்படுகிறார். இதற்கு பிரமாணமாக - சொல்லப்படுகிறது - பூர்வமீ. 4-3-1ல் द्रव्यसंस्कारकर्मसु परार्थत्वात् फलश्रुतिरर्थवादः स्यात् - திரவியங்களின் பலன்களை ஓதும்போது - ஸம்ஸ்காரங்களும் கர்மாக்களும் புகழ்ச் சொற்களாகும். ஏனெனில் அவை இன்னொரு நோக்கத்திற்கு (அபிப்ராயத்திற்கு) சேஷமாக விருப்பதால். (இது மீமாம்ஸகனின் கருத்து ஆகும். அவன் சொல்லும் உதாரணங்கள் வ்ரீஹீந் ப்ரோக்ஷதி - நெல் சுத்தமாவதற்கு ப்ரோக்ஷணம் விதிக்கப்பட்டது. அந்த ப்ரோக்ஷணம் யாகத்துடன் சம்பந்தப்பட்ட வ்ரீஹிக்கு ஸம்ஸ்காரமாக யிருந்து கொண்டு - யாகத்திற்கு அங்கமாகிறது. யஸ்யபர்ணமயீ ஜுஹூர் பவதி நஸ பாபம் ஸ்லோகம் ஸ்ருணோதி - எவன் பர்ணமரக் கரண்டியை உபயோகிக்கிறானோ அவன் அசுப மான வார்த்தைகளைக் கேட்பதில்லை. (அபகீர்த்தி வராது யாகம் செய்யும் தீக்ஷதருக்கு). இங்கு பர்ணரூபமான திரவியத்தை யாகாங்கமான ஜுஹூ விஷயத்தில் விதிக்கும் போது கூறப்பட்ட பலன் அர்த்தவாதம் என நிர்ணயிக்கப்பட் டிருக்கிறது. இந்த விஷயங்கள் மேற்காட்டிய பூ. மீ. 4-3-1-திரவ்ய ஸம்ஸ்கார கர்மஸீ பரார்த்தத்வாத் பலசுருதி, அர்த்த வாதஸ்ஸ்யாத் என்கிற சூத்திரத்தில் விளக்கப்பட்டுள்ளன. இது ஜைமினியின்

கருத்தாகும். அதுபோல யாகத்தைச் செய்யும் கர்த்தா-ஜீவாத்மா வித்யையினுல் சுத்தமாக்கப்படுகிறுன். ஆகவே அவன் முக்கிய யாக கர்மாவுக்கு அடங்கினவனுகிறுன்.

இன்னொரு விதமாகவும் சொல்லலாம் - கர்த்தா மூலமாக வித்யை எல்லா யாகங்களுடனும் சம்பந்தப்பட்டிருக்கிறது; ஆகவே அதற்கு ஓதப்பட்ட பலன்கள் எல்லாம் புகழ் சொற்களாகும் (அர்த்தவாதம்). (சில பாடங்களில் பூர்வமீமா. 4-3-1ல் திரவ்ய குண ஸம்ஸ்காரம் என்று பாடமிருக்கிறது).

மேலும் ஆட்சேபிக்கப்படலாம் - கர்மங்களோ அவைகளைச் செய்யும் கர்த்தா ஜீவாத்மாவை விட வேறுனவனை (பரமாத்மாவை) முமுக்ஷுக்கள் அடையவேண்டியது-அவனைத் தான் வேதாந்தங்களின் உதவியினுல் அறியப்பட வேண்டியது என்று உபதேசமிருப்பதாலே - இந்த விஷயம் இம்மாதிரி சூத்ரங்களால் அறியப்படுகிறது. சா. மீ. 1-1- 7 नेतरोऽनुपपत्तेः - விபஸ்சித் (பேரறிவாளன்) ஜீவனுக்கு பொருந்தாது. இதர: ந-ஆனந்தமயன் முக்த ஜீவனுகவும் மாட்டான். भेदव्यपदेशात् சா. மீ.1-1-18 ஜீவனைக் காட்டிலும் ஆனந்தமயனுக்கு பேதத்தைச் சொல்வதாலே ஆனந்தமயன் ஜீவனில் வேறுன பரமாத்மாவேயாகும். अनुपपत्तेस्तु न शारीरः (சூத் 1-2-3)-பலகல்யாண குணங்கள் பரமாத்மாவுக்கு சரியாகும், ஜீவனுக்குப் பொருந்தாது. அதனுல் இந்த குணங்களை உடையவன் சாரீர:-ஜீவனுக न ஆகமாட்டான்; சூத் 1-3-17-इतरपरामर्शात् स इति चेन्नासंभवात् பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவனைக் குறிப்பதாலே-ஸ-(தஹராகாஸ) ஜீவனே இதிசேத்-என்றுல்; ந-பொருந்தாது (சரியில்லை). அஸம்பவாத்-தஹராகாச குணங்கள் ஜீவனிடம் நிருபாதிகமாகவே இருக்க முடியாதபடியால், இம்மாதிரி சூத்ரங்களால் ஜீவனை உபாஸகனுகவும் பரமாத்மாவையே உபாஸ்யமான பொருளாகக் கூறப்படுகின்றன.

இந்த அபிப்ராயமே-அதாவது பிருஹ்மமே ஜீவனுகிறது ஸம்சாரதசையில் - அதனுல் तत्त्वमसि நீ பிருஹ்மமாக விருக்கிறுய்-போன்ற (அத்வைத பக்ஷம்) வாக்யங்களில் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஸாமாநாதிகரணத்தினுல் ஸாம்யம் ஓதப்பட்

டிருக்கிறது-இம்மாதிரி வாக்யங்களின் கருத்து வேறாகும். நமது சித்தாந்தப்படி பிருஹ்மம் ஜீவனைவிட வேறானதாகும்-ஏனெனில் பேதம் இருவர்களுக்கும் ஸித்திப்பதாலே. ஆகவே அவர்களின் பக்ஷம் தள்ளப்பட வேண்டியதாகும். பரமாத்மா ஜீவனைவிட உத்கிருஷ்டமானவர் अधिकं तु भेदनिर्देशात् - (சூத் (2-1-22) என்பதின் அர்த்தமாகும். ஸாமாநாதிகரணத்தினால் பரமாத்மாவுக்கும் ஜகத்திற்கும் ஒற்றுமையைக் காட்டி - சா. உ. 6-8-7ல் ऐतदात्म्यमिदं सर्वम् - இந்த இவை எல்லாம் பிருஹ்மத்தை ஆத்மாவாக உடையது. சா. 2 4-14-1ல் सर्वं खल्विदं ब्रह्म (இது எல்லாம் பிருஹ்மமே) எல்லாப் பொருள்களோடு (சேதன-அசேதனப் பொருள்களோடு) ஒரே வேற்றுமையில் ஓதப்படும் பிருஹ்மம பரமாத்மாவே யொழிய ஜீவனல்ல. ஆகவே பரமாத்மா ஜகத் காரணமாகவும் ஸர்வாத்மாவாகவும் ஓதப்படுவதால் பரபிருஹ்மம் உபாஸ்யம்-அது ஜீவனாக மாட்டாது பிரு. உ. மா. 6-5ல் य पृथिव्यां तिष्ठन्...यः आत्मनि तिष्ठन् - எவன பிருத்வியினுள்ள வசிக்கிறானோ - எவனை பிருத்வி அறியாதோ - எவன் ஆத்மாவினுள்ளே இருக்கிறானோ-எவனை ஆத்மா அறியாதோ இத்யாதிகளால் பிருஹ்மம் ஸர்வாத்மாவாகவும் - அந்தர்யாமியாகவும்-ஸர்வநியந்தாவாகவும் - அம்ருதனாகவும் ஓதப்படுகிறது (ஸர்வ ஆத்மதயா-அவஸ்திதி-நிபந்தன இதி); சா. மீ. 1-4-22ல் अवस्थितेरिति काशकृत्स्नः பரமாத்மா ஜீவனுக்குள் நிற்கையாலே, ஜீவனைச் சொல்லும் சப்தங்கள் பரமாத்மாவரை சொல்லும்-இவ்விதம் காசுகிருத் ஸநர் என்கிற ஆசார்யர் நினைக்கிறார் என்பதாலும் பரமாத்மா வேறானவனே-ஜீவனுள் நிற்கையால் இருவரையும் ஒன்றாகக் காண்கிறார்கள். அவ்விதமிருக்கும் போது எவ்விதம் வேதாந்த வாக்யங்கள் கர்மங்களைச் செய்யும் கர்த்தாவையும் (ஜீவாத்மாவையும்) உண்மையான உபதேசத்தைப் போதிப்பதில் (பரமாத்மாவை) எண்ணமுள்ளவைகளாக விருக்கும் போது - வித்யைகள் எவ்விதம் கர்மாக்களுக்கு அங்கம் (கர்மாங்கத்வம்) காட்டுகின்றன? कथं विद्यायाः कर्माङ्गत्वं प्रतिपाद्यते ? இதற்கு நாம் பதில் கூறுவோம்.

பதில் வேதாந்த வாக்யங்களிலே கர்மாக்களைவிட வித்யைகளுக்குப் பிராதான்யம் (முக்யத்வம்) உண்டு என்பதற்கு அடை

யாளங்கள் (லிங்கங்கள்) இருக்கின்றன. இந்த லிங்கங்களிலிருந்து ஸாமாநதிகரணத்தினுல் காட்டப்படுகின்றன. இந்த லிங்கங்களி லிருந்தும் - ஸாமா நாதிகரண்யத்தினுல் யேற்படும் ஸாம்யத் தினுலே இந்த வேதாந்த சப்தங்கள் தேகத்தை விட வேறுனவன் ஜீவன்; அவனுடைய ஸ்வரூபம், யாதாத்மிய உபதேச நோக்கத் தைக் கொண்டு, தேகத்தைவிட வேறுனவன் ஜீவன்-அதனை ஒப்புக் கொள்ள வேண்டும் என்கிறுன் பூர்வபக்ஷி.

மேலும் ஆட்சேபிக்கப்பட வேண்டியது யாகத்தைச் செய் யும் கர்த்தாவை ஸம்ஸ்காரங்களால் சுத்தம் செய்வதால், வித்யை களுக்கு யாகத்தில் அனுப்ரவேசப் கிடைக்கின்றது என்று சொல்ல முடியாது-ஏனெனில் கர்த்தாவாகிற ஜீவன் லௌகிக வைதிக கார்யங்களுக்குப் பொதுவானவன் - அவ்விதமில்லை, ஏனெனில் கர்த்தாவுக்கு லௌகிக கர்மாக்களை செய்து முடிக்க முடியும், தேகத்திலிருந்து வேறுக வில்லாமல் நினைக்கப்படும் போதும், அவ னுடைய ஆத்மாவின நிஜஸ்வரூபம் நித்யமாகவும் தேகத்தை விட வேறுக விருப்பதாலும் - அது வைதிக காரியங்களுக்கு உப யோகப்படுவதாகவும்-அதனுல் அதனுடைய நிஜஸ்வரூபத்தைப் பிரதிபாதிப்பதனுலே, வித்யைகளுக்கு யாகத்தில் அனுப்ரவேசம் செய்வதற்கு விரோதம் ஒன்றும் யேற்படவில்லை. ஆகையால் வித்யைக்ருதுவுக்கு சேஷமாகிறது. அதனுலே மேலான புரு ஷார்த்தமாகிற மோக்ஷம் இந்த வித்யைகளினுல் அடையமுடியாது. (அதாவது வித்யை க்ருதுவுக்கு சேஷமாதலால், புருஷார்த்தத்தை அடைய உதவாது). இங்கு பூர்வபக்ஷி - ஜைமினி முனிவரின் கருத் தாகச் சொல்கிறுன் வித்யை க்ருதுவுக்குச் சேஷமாதலால், அது புருஷார்த்தமில்லை. வித்யையிலிருந்து பரம புருஷார்த்தம் ஸித்திக்கிறது என்று ஓதும் வேத வசனங்கள் கர்த்தாவைப் பற்றிய புகழ் சொற்களாகும். அர்த்தவாதமாகும்-பூ. மீ. சூ 4-3-1)

மேலும் கேள்வி கேட்கப்படும்-அந்த லிங்கங்கள் யாவை? அந்த லிங்கங்கள் விளக்கப் கொடுப்பதாயும் ஸாமாநதிகரணத்தை ஆதரிப்பதாலே, அதனுல் நிர்தேசம் செய்யப்படுகிறது-வேதாந்த சப்தங்கள் ஜீவஸ்வரூபத்தைச் சொல்கின்றன என்று (நிச்சயிக்கப் படுகிறது). இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக் கிறுர்.

## ஸூ. ஸீ. आचार दर्शनात् (3-4-3)

## ஆசார தர்சநாத் ( do )

ஆசார தர்ஸநாத் - பிருஹ்ம (ஜீவாத்ம) ஞானிகளுக்கு கர்ம விஷயத்திலேயே - ஆசாரம் காணப்படுவதால் - வித்யை கர்மாங்கமே.

பிருஹ்ம வித்துக்களுக்கு பிராதான்யமாக கர்மாக்களிலே அவர்களின் ஆசாரம் இருக்கிறது; அது எங்கனமெனில்-கேகய அரசனுன அசுவபதி - ஆத்மாவை அறிந்தவர்களுள் மேலானவன்- பிருஹ்ம ஞானத்தை அடைய விருப்பம் கொண்டு தன்னை வந்து அடைந்த ரிஷிகளை நோக்கி இவ்விதம் கூறினான் - சா. 2-5-1-5 यक्ष्यमाणो ह वै भगवन्तोऽहमस्मि - इति - "பகவந் தோ - நான் யாகம் செய்யப்போகிறேன். உங்களை மரியாதை செய்யப் போகிறேன்." "அதே பிரகாரம் ஜனகன் முதலான கர்ம யோகிகளும், பிருஹ்ம வித்துக்களில் மிகமுக்கியமாக விருப்பவர்கள் - கர்மாக்களிலே கண்ணும் கருத்துமுள்ளவர்களாக விருந்தார்கள் என்பது இந்த வாக்யங்களில் காணப்படுகிறது. கீதை 3-20- कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः-கர்மாக்களாலேயே ஜனகர் முதலானவர்கள் ஸித்தியடைந்தார்கள். வி. புரா. 6-6-12ல் इयाज सोऽपि सुबहून् यज्ञान् ज्ञानव्यपाश्रयः-அவன் (கேசித்வஜன்) பல யாகங்களைச் செய் தான்-பிருஹ்ம ஞானத்தின் உதவிகொண்டு, ஆகையால் பிருஹ்ம ஞானிகள் கர்மத்தையே பிரதானமாகக் கொண்டு வாழ்ந்தனர்- என்று சுருதி ஸ்மிருதிகள் காட்டுவதால், பிருஹ்ம வித்யை கர்த்தாவின் ஸ்வரூபத்தை நன்கு அறிவதற்கே உபயோகப்படு வதால், கர்மாங்கமாக வித்யை ஆகிறது-அதனுல் பிருஹ்ம வித்யையிலிருந்து பரம புருஷார்த்தமான மோக்ஷம் ஸித்திக்கிற தில்லை அடையப்படமாட்டாது-எனத் தெளிவாகிறது. இங்கு சொல்லப்படுவது கர்மாக்கள் முக்கியம்-வித்யை கர்மாக்களுக்கு அடங்கியவை அசுவபதி-ஜனகர் ஆகிற உதாரணங்கள் காட்டப் படுகின்றன கேசித்வஜனும் கூட.

(பலனில் இச்சையில்லாதபடி-கர்மாக்களைச் செய்வதால் - சித்த சுத்தி யேற்பட்டு பாபபுண்யங்கள் நீங்குவதால் பரம

புருஷனை திருப்தி செய்வித்தலால் கர்மாக்கள் வித்யைகளுக்கு சேஷமாகி - மோக்ஷத்திற்கு காரணமாகின்றன என்பது ராமானுஜரின் அபிப்ராயம்.)

**लिङ्गमिदम्;** இது எல்லாம் (அர்த்த-அடையாளங்களாகும். சாமர்த்தியம்) **श्रुतिसहकारमितःश्रुत्याह** - தர்க்க அனுக்ரஹீத பிரமாண ஸித்தி - சுருதி பிரமாணத்தினால், யேற்படட்டும் - அதற்க்காக அடுத்த சூத்ரம் ஆரம்பமாகிறது. (அதுவும் பூர்வபக்ஷம்).

**பூர். சூ. तच्छ्रुतेः** (3-4-4)

**தச்சுருதே** (do)

தத்-வித்யை கர்மாங்கம் என்பது - சுருதே:-வேத வாக்யத்தி லிருந்து தெரிய வருகிறது.

(இங்கே கேள்வி கேட்கப்படலாம்-நீ உன் பிரகாரம் சொல்வ தற்கு பிரமாணங்கள்-லிங்கங்கள் யாவை என்கிற கேள்விக்கு - இந்த சூத்ரம் பதிலாக அமைகிறது).

சுருதியே வித்யைகளை கர்மாங்கமாகச் சொல்கிறது. உதா ரணமாக, சா. 2. 1-1-10ல் **यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरं भवति - इति**—அதுவே (அதாவது க்ருதுவே) வித்யையுடன் செய்யப்பட்டால், அதிக வீர்யத்தைப் பெறுகிறது. இதிலிருந்து - பிரகரணத்தினாலே, உத்கீதத்துடன் விஷய சம் பந்தம் பெற்றுள்ளதாகச் முடிவு செய்ய முடியாது - ஏனெனில் பிரகரணத்தைவிட சுருதிமிக்க பலமுள்ளது. (ஞானஸாதனத் திற்கு). **यदेव विद्यया करोति** - அந்த க்ருதுவே வித்யையுடன் சேர்ந்து செய்யப்பட்டால் என்கிற சுருதியே வித்யாமாத்திர விஷயமாக விருக்கிறது.

வித்யயா-என்று பொதுவாகக் கூறினாலும் அது எல்லா வித்யைகளையும் குறிக்கிறது. இங்கு பிரகரணத்தாலே - வேத வாக்யம் உத்கீத வித்யையை மாத்திரமே குறிக்கிறது என்று சொல்லப்போனால், சுருதி பிரகரணத்தைவிட பலீயஸ் - எல்லா

வித்யைகளேயும் குறிப்பிட்டதாகும். உத்கீத வித்யைக்கு மாத்திர மல்ல - எல்லா வித்யைகளேயும் சொல்லியதால்-எல்லா வித்யைக ளுக்கும்-கர்மாவுக்கு வித்யை அங்கம் என்பதாகும்.

பூ. ஸூ. समन्वारम्भणात् (3-4-5)
ஸமந்வாரமபணுத் (do)

ஸமந்வாரம்பணுத் - வேதவாக்யம் வித்யாகர்மங்கள் ஒரு புருஷனேயே சேர்ந்து பின் தொடர்வதாகப் புடிக்கப்படுவதால் - வித்யை கர்மாங்கமே. பிரு. 2. 6-4-1ல் त विद्याकर्मणी समन्वारभेते - உபாஸகனே - வித்யையும் கர்மாக்களும் பின் தொடர்கின்றன - இங்கு இரண்டும் சேர்ந்து செல்வதாகச் சொல்லப்படுகின்றன- என சுருதி காட்டுகிறது. இந்த இரண்டின் சேர்க்கை (सा हित्य) முன்பு சொல்லப்பட்ட நியாயத்திஞலே - ஆத்மா கர்மாவுக்கு அடங்கினது என்கிறதற்கு) எப்போது ஏற்படக்கூடும்-வித்யை கர்மாவுக்கு அங்கமாக ஆஞல்தானே, அதஞல் कर्माङ्गत्वे सत्येव भवति)

பூ. ஸூ. तद्वतो विधानात् (3-4-6)
தத்வதோவிதாநாத் ( do )

தத்வதோ-வித்யையை உடையவனுக்கு-விதாநாத் - கர்மம் விதிக்கப்படுவதாலே,-வித்யை கர்மாங்கமே. வித்யை உள்ளவ னுக்கு கர்மம் விதிக்கப் பட்டிருப்பதாலே, வித்யை கர்மாங்க மாகும் என்று யேற்படுகிறது. இந்த சுருதியிலே - आचार्यकुलात् वेदमधीत्य यथा विधानं गुरोः कर्मातिशेषेणाभि समावृत्य कुटुम्बे शुचौ देशे - இத்யாதிகளாலே. ஆசார்ய குலத்திலிருந்து - ஆசார்யர் கூறுகிற விதிகளுக்கு கட்டுப்பட்டு, ஒருவன் வேதத்தைக் கற்க வேண்டும்; கர்மாக்களேச் செய்து கொண்டும், பிறகு கிருஹஸ்தா ஸ்ரமம் புகுந்து குடும்பத்தை ஸ்தாபித்து-சுத்தமான இடத்தில் வாழ வேண்டும் - वेदमधीत्य - வேதங்களேப் படித்து - இதஞல் அத்யயனம் செய்தல், அதற்குரிய கர்மாக்களே ஒழுங்காகச் செய் தல் விதிப்பிரகாரம் நடந்து ஒழுகுதல் - அதன் அர்த்தத்தைப் பற்றி சிந்தித்தல் (அர்த்த போத) பர்யந்தம்-வேதம் ஓதிக்கொண்

டிருக்கவேண்டும்-கர்மாக்களையும் செய்துகொண்டிருக்க வேண்டும், குமரிலராலும் பிராபகரனுலும் சொல்லப்பட்ட பிரகாரம் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளும் வரை என-அத்யயனம் செய்வது என்பதற்கு பொருள். ஆகையால் பிருஹ்ம வித்யையிலும் கூட கர்மாக்களுக்குப் பிரயோசனம் உண்டு அதனுலே அதற்கு வேருன பலன் கிடையாது.

(இங்கு சொல்லப்படுவது-மீமாம்ஸகர்களில் இரு வகுப்பினர்கள்-குமரில்பட்டரைச் சார்ந்தவர்கள் பிராபாகரனைச் சேர்ந்தவர்கள்-இவர்களின் அபிப்ராயப்படி வேத சப்தம் மாத்திரம் ஓதுவது இல்லை-அதன் அர்த்தங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்-என்பதால் வித்யை கர்மாங்கமே ஆகும் என்பதாகும்).

பூ. சூ. नियमात् - (3-4-7)
நியமாத் ( do )

நியமாத் - புருஷன் ஆயுட் பர்யந்தம் கர்மாக்களைச் செய்ய வேண்டும் என்கிற நியமத்தால்-வித்யை கர்மாங்கமே.

ஈ. சா. 2. 2ல் कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत् शतं समाः- கர்மாக்களை மாத்திரம் இங்கு செய்து கொண்டு, ஒருவன் நூறு வருடகாலம் வாழவேண்டும் என்கிற ஆசையுடன் விருக்க வேண்டும் - இதிலிருந்து ஆத்மாவை அறிகிறவனின் ஆயுள் காலம் ஸர்வ கர்மங்களிலும் பயன் பெறவேண்டும்-இந்தக் காரணத்திஞலே கர்மாவிற்கே பலன் உண்டு. வித்யை கர்மாவுக்கு அங்கமாவதால், வித்யையினுல் புருஷார்த்தம் ஏற்படுவதில்லை.

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுவோம்.

சி. சூத். अधिकोपदेशात् तु बादरायणस्यैवं तद्दर्शनात् (3-4-8)
அதிகோபதேசாத்து பாதராயணஸ்யைவம்
தத்தர்சநாத் ( do )

அதிகோப தேசாத்து - கர்த்தாவான ஜீவனைக் காட்டிலும் மேலான பரமாத்மாவையே (உபாஸிக்கத் தக்கவனுக) அப்படி சுருதி உபதேசமிருப்பதாலே, பாதராயணஸ்ய-பாதராயணருக்கு, ஏவம்-பிருஹ்ம வித்யையாலே பலம் உண்டாகிறது என்கிற கருத்

தாகும். தத்தர்சநாத்-உபாஸன வாக்யங்களில் பரமாத்மாவே காணப்படுவதால்.

து சப்தம் பூர்வபக்ஷியின் கருத்துக்களை தள்ளுகிறது. வித்யையினாலேயேதான் புருஷார்த்தம் அடையப்படுகிறது - अधिकोपदेशात् - பரமாத்மா ஜீவனைவிட உத்க்ருஷ்டமானபடியால் அவரே உபாஸிக்கத் தக்கவர் என்கிற சுருதி உபதேசமிருப்ப தாலே ஜீவனை விட வேறான ஒன்றைப் பற்றிய (அதாவது பரமாத்மாவைப் பற்றிய) உபதேசமிருப்பதாலே கர்மங் களைச் செய்யும் ஜீவாத்மாவைவிட - வேறான ஒரு தத்வ மாகிற பரமாத்மாவை - ஹேய குணங்களுக்கு எதிர் தட் டாகவும், அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணங்களை உடைய பரமாத்மாவை - अधिकस्यार्थान्तरभूतस्य - ஜீவனைவிட வேறானவனும்-மேலான ஒருவன்-தனியான தத்வம்-அத்தகைய பரமாத்மாவை அறிந்துகொள்ளப்பட வேண்டியது-உபாஸிக்கப் படவேண்டியது என்கிற உபதேசமிருப்பதாலே, பகவான் பாதராயணரால் சித்தாந்தமாக அருளிச் செய்யப்பட்டது - வித்யையினால் தான் புருஷார்த்தம் யேற்படுகிறது (पुरुषार्थः) [फलं] इत्येवमेव मतम् ) லிங்கங்கள் இருக்கட்டும்-எவனை (பர மாத்மாவை) அறியப்படவேண்டிய தத்வமாக உபதேசமிருப்ப தாலே, அபபோது கர்மத்தைப் பிரதானமாகக் கொண்ட ஜீவனு கிற பிரத்யகாத்மாவைவிட அந்த பரமாத்மாவே வேறானவன்-உபாஸிக்கத்தக்கவன். कथम् (எவ்விதம்) तद्दर्शनात् உபாஸன வாக்யங்களில் பரமாத்மாவே காணப்படுவதாலே - (இதனாலே கர்மம் பிரதானம் என்கிற பக்ஷம் தள்ளப்படுகிறது). பிரத்ய காத்மாவைவிட அந்ய: (வேறானவன்): சுத்த (முக்தன்) ஜீவன், அசுத்த ஜீவன் (ஸம்சாரி) இவர்களுக்கு பரமாத்மாவுக்கு உரிய அனந்த கல்யாண குணங்கள் அஸம்பாவனீயம் (யேற்படாது). (எப்பேற்பட்ட பரமாத்மாவின் குணங்கள்-அதை விளக்க -) அனந்த (முடிவில்லாத) குணாகரன் (கல்யாண குணங்களை ஸ்வரூப நிரூபண-நிரூபித ஸ்வரூப தர்மங்களாக உடைய-பரமாத்மா)-வேத்யன் - (அறியப்பட்டு உபாஸிக்கப்படத் தகுந்தவன்) நிரஸ்த நிகிலஹேய கந்தன் (ஹேயகுணங்களுக்கு எதிர் தட்டு) ஸர்வக் ஞன்-தன் சங்கல்ப மாத்திரத்தாலே ஜகத்தை ஸ்ருஷ்டிப்பவன்-

அதன் மகிமைகளை உண்டாக்குபவன், லய முதலியவைகளை லீலை யாகச் செய்பவன் (சங்கல்பத்தாலே செய்பவன்), ஸர்வசக்தியுள் ளவன், வாக்கு மனஸ் முதலியவைகளுக்கு எட்டாதபடி அபரிச் சின்ன ஆனந்த ஸ்வரூப குணத்தை உடையவன், ஜீவாத்மாக்க ளுக்கு அதிபன் (பதி) - ஸம்பூர்ண ஜகத்தை தனது சாஸனத் திறைல் ஆள்பவன் (प्रशासित:) அத்தகைய மேலான பிருஹ்மத்தை அப்படி (மேல் சொல்லிய பிரகாரம்) உபநிஷத் வாக்யங்களே காட்டுகின்றன - சா. 2. 8-1-5 अपहतपाप्माविजरोविमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसङ्कल्पः— பாபமில்லாதவன்- ஜரை ம்ருத்யு இல்லாதவன்-சோகமற்றவன்-பசிதாகமற்றவன் - ஸத்யகாம ஸத்ய ஸங்கல்பன்-சா. 2. 6-2-3 तदैक्षत बहुस्याम प्रजायेयेति तत्तेजोऽसृजत—அவன் சங்கல்பித்தான்-நான் பலவாக ஆவேன்; பல பிரஜைகளை உண்டாக்குவேன். அது தேஜஸ்ஸை உண்டாக்கியது. முண். 2-1-1-9 यः सर्वज्ञः सर्ववित्-எவன் எல்லா வற்றையும் பொதுவாகவும்-விசேஷமாகவும் அறிவானோ; ஸ்வே. 6-8 - पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च அவ ருடைய சக்தி மேலானதாகவும்-பலவிதப்பட்டதாகவும் சொல்லப் படுகிறது-இயற்கையாகவே அவருக்கு ஞானபலக்ரியா-எல்லாம் உண்டு தை. ஆன ²-8-4 स एको ब्रह्मण: आनन्द: அதுதான் பிருஹ்மானந்தத்தின் ஒரு பகுதி - (அளவு) தை. ஆ. 4-1ல் यतोवाचो निवर्तन्ते अप्राप्यमनसा सह அந்த ஆனந்தத்தை வர்ணிக்க முடியாமல் வாக்கும் மனமும் திருப்பி விடுகின்றன - आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चनेति - எவன் பிருஹ்மத்தை இப்படி அறிகிறனோ) இம்மாதிரி ஆனந்தத்தை உடையது என்று அறிகிறனோ)-அவன் எதற்கும் பயப்படவேண்டியதில்லை. பிரு. 2. 6-4-21ல் एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरण: - அவரே ஸர்வேஸ்வரர், எல்லாப் பிராணிகளுக்கும் எஜமானன், எல்லோரையும் காப்பாற்றுகிறவர், அவரே யாவற் றையும் வ்யவஸ்தை செய்யும் (ஆதாரமாகத் தாங்கும்) ஸேது (பாலம்) ஆவர். ஸ்வே. 6-8ல் स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिप: - அவரே எல்லாவற் றிற்கும் காரணம். கரணாதிபதியான ஜீவனுக்கு எஜமானன்.

அவருக்கு மேலானவரோ – அவரை உண்டாக்கினவரோ இல்லை. பிரு. உ. 5-8-9ல் - एतस्य वाऽक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः (एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि द्यावा पृथिव्यौ विधृते तिष्ठत:-கார்க்கி - எவருடைய மேலான நியமனத்தாலே-சூர்ய சந்திரர்கள் தாங்கப்படுகிறார்களோ-அவரவர்களின் ஸ்தானங்களில் நிலைநிற்கிறார்களோ-பூமியும் ஆகாசமும் தாங்கப் படுகின்றனவோ - தை. ஆ. 8 - 1 - भीषाऽस्माद्वातः पवते भीषो देति सूर्यः। भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युः धावति पञ्चमः-எவருக்குப் பயந்து காற்று வீசுகின்றதோ-எவருடைய பயத்தினால் சூர்யன் உதயமாகிறானோ, எவனுக்குப் பயந்து இந்திரனும், அக்னியும் வேலை செய்கிறார்களோ - எவரிடமுள்ள பயத்தினால் மிருத்யுவும் ஓடி ஐந்தாவதாக ஓளிகிறானோ அந்த பரமாத்மாவே உபாஸிக்கத்தக்கவன். ஆகையால் வேதம் - உபநிஷத்துக்களின் சப்தங்கள் பிருஹ்மத்தை இவ்விதமாக உபதேசிப்பதால் - அவைகளில் கர்த்தாவாகிற பிரத்யகர்த்மாவை (ஜீவன்) மின் மினிப் பூச்சிக்குச் சமமாக (खद्योत) விருக்கிறதாகக் கல்பித்து - அவனுக்கு அவித்யை கர்மம் முதலிய ஹேய சம்பந்த யோக்யமுள்ளவனாகவும் - அசுத்தனாகவும் இருக்கிற ஜீவனைப்பற்றி யாதொரு பிரஸ்தாபமும் உபாஸனைக் குரியவனாக - சொல்லப்படவில்லை. எல்லா வாக்யங்களும் பரம புருஷனையே உபாஸ்ய விஷயமாகச் சொல்வதாலே - வித்யைகளிலிருந்துதான் அந்த பரம புருஷனை அடைதலாகிற பிராப்தி - அம்ருதத்வம் - அந்த அந்த விடங்களில் ஓதப்பட்டு பலனாகச் சொல்லப்படுவதாலே - புருஷார்த்தம் வித்யையினாலே அடையப் படுகிறது-கர்மாவினால் இல்லை என்பது முடிவான தீர்மானமாகும் பிருஹ்மோபாஸனத்தாலேயே மோக்ஷ புருஷார்த்தம் ஸித்திக்கிறது என்பது தெளிவு.

மேலே காட்டப்பட்ட லிங்கங்களும் விலக்கப்பட்டு - தள்ளப் படுகின்றன,

ஸி. ஸூ तुल्यं तु दर्शनम् (3 - 4 - 9)
**துல்யம் து தர்சனம் ( do )**

*தரிசனம் து* - சுருதிகளிலே வித்யை கர்மாங்கமில்லை என்பதற்கு சரிசமானமான பிரமாணம் யிருப்பதால் *துல்யம்* - வித்யை

கள் விஷயத்திலும் இருப்பதால் சமமானதே - (அதாவது சுருதி களின் பிரமாணம் வித்யைகளின் பக்ஷம் இருப்பதாலும், பிருஹ்ம ஞானிகளின் கர்மானுஷ்டானத்தை காண்பது - (துல்யம்) பிருஹ்ம வித்யை கர்மத்தை அங்கமாகக் கொண்ட அங்கியாக விருப்பினும் சரிசமமானதே - ஒத்ததே எனவும் கொள்ளலாம்.

மேலே சொல்லப்பட்டது - மூன்றும் சூத்ரத்தில் பிருஹ்ம ஞானிகளுக்குச் கர்ம விஷயத்திலே, ஆசாரம் காணப்படுவதால் " வித்யை கர்மாங்கமே என்று. இது சரியான அபிப்ராயமில்லை. வித்யை கர்மாவுக்கு அங்கமாகவில்லாவிடினும், சுருதிகளின் பிரமாணம் துல்யம் - தர்சனம் வித்யைகளின் பக்ஷமாவிருக்கிறதால் - சமமானது (ஒத்ததே). பிருஹ்ம வித்துக்கள் கர்மாக்களை அனுஷ்டானம் செய்து காண்பிப்பது. (அனுஷ்டான தர்சன நியதம்) - அவ்யாபகம் - எப்போதும் காணப்படுகிறதில்லை - எங்கு எங்கு வித்யையிருக்கிதோ - அங்காங்கே கர்மானுஷ்டானமும் இல்லை என்பதாகும். (அதாவது பிருஹ்ம வித்யை) அங்கியாய் கர்மம் அதற்கு அங்கமாக விருந்தாலும், பிருஹ்ம ஞானிகளுக்கு கர்மானுஷ்டானம் எப்போதுமில்லை என்பதால் ஒத்துப்போகிறது. (அவர்களுக்கு கர்மானுஷ்டானம் தேவையில்லை). அனுஷ்டானம் இல்லாமலிருப்பதும் அவர்களிடம் காணப்படுகிறது. இன்னும் சொல்லப்போனுல் பிருஹ்ம வித்துக்கள் கர்மாக்களைத் தியாகம் செய்தலும் காணப்படுகிறது. ஐத். ஆ. 3 - 2 - 6ல் एतद्धस्म वतद्विद्वांस आहु ऋषयः कावषेयाः-காவஷேயர்களான பிருஹ்ம ரிஷிகள் " நாம் எதற்க்காக வேதங்களை அத்யயனம் செய்யவேண்டும்.? எதற்க்காக யாகம் செய்யவேண்டும்? என்று கூறினுர்கள். இந்தவிதமாக பிருஹ்ம வித்துக்கள் கர்மாக்களை தியாஜ்யம் செய்வது காணப்படுகிறதால் - வித்யைகள் கர்மாங்கமில்லை என்பதாகும் (न विद्या कर्माङ्गम् )

நீ பீண்டும் கேட்கலாம் - இது எப்படி யேற்படுகிறது - பிருஹ்ம வித்துக்களுக்கு கர்மானுஷ்டானமும், அனுஷ்டானமில்லாதிருப்பதும் எப்படி ஏற்படலாம்? யாகாதி கர்மாக்களை பலத்தை

விரும்பிச் செய்யாமல் செய்தால், பிருஹ்ம வித்துக்களுக்கு வித்யாங்கமாகலாம். அதனுல் அத்தகைய பலனில் விருப்பமில்லாதவர்கள் கர்மாக்களைச் செய்தல் சரியானதாகும். அவ்விதமே சுருதியும் ஓதுகிறது - உதாரணமாக சா. மீ. 3 - 4 - 26ல் सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् - சூத்ரக்காரரே சொல்கிறுர்-குதிரைகளுக்கு லாடம் அடிப்பது எவ்விதம் அவசியமோ - அவ்விதமே கர்மாக்களை அனுஷ்டிப்பதும் - யாகங்களைச் செய்வதற்கு சுருதிகள் ஓதுவதும் - அதுபோலவாகும். பலார்த்தமாகச் செய்யப்படும் அந்த யாகங்களை (கர்மாக்களை) மோக்ஷத்தையே ஏகபலனுகக்கொள்ளும் பிருஹ்ம வித்யைக்கு விரோதமாக விருக்கின்றன. அதனுலே கர்மாக்களை அனுஷ்டிக்க வேண்டியதில்லை, என்று சொல்வது சரியானதாகும். எவ்விதத்திலும், வித்யைகள் கர்மாக்களுக்கு அங்கமானுலும், கர்மாக்களை அனுஷ்டியாமலிருத்தல் - விட்டுவிடுதல் எவ்விதத்திலும் யேற்படாது. (அதாவது காம்ய கர்மாக்களை விடலாம். மோக்ஷத்திற்கு ஸாதகமாகவிருக்கும் கர்மாக்களைச் செய்து தீரவேண்டும்.)

(இங்கு காவஷேயர்கள் சொல்வதற்கு - பூர்வ பக்ஷி சரியாக காரணம் காட்டமுடியாது. அவனுடைய அபிப்ராயம், பிருஹ்ம வித்யைக்கு பலனைச் சொல்வதாகச் சொல்லும் வாக்யங்கள் அர்த்த வாதங்களாகும்-விதியில்லை. அவனுக்கு மோக்ஷம் என்கிற உண்மையான பலன் என்பது இல்லை, அதனை அடைய கர்மாக்களை செய்தே தீரவேண்டும் என்பதாகும்.)

மேல் சொல்லப்பட்ட ஆட்சேபம் - சுருதியிலிருந்தே வித்யை கர்மாங்கமாக விருக்கிறது என்பதற்கு சூத்ரக்காரரே பதிலளிக்கிறுர்.

(இங்கு சொல்லப்படுகிற விஷயம் - பூர்வ பக்ஷிக்கும் சித்தாந்திக்கும் ஒன்றுக்கொன்று முரண்பாடாக கர்மானுஷ்டானமும், கர்மதியாகம் எப்படி சரியாகும்? இதற்கு பதில்-கர்மயகர்மாக்களை பிருஹ்ம வித்து விடலாம். ஸ்வர்க்கம் முதலான தாழ்ந்த பலனில் விருப்பமில்லாது-செய்யப்படும் கர்மம் பிருஹ்ம வித்யைக்கு அங்கமாகிறபடியால் கர்மானுஷ்டானம் சரியாகலாம்.

ஆனால் பலத்தில் விருப்பத்தோடு செய்யப்படும் கர்மம் மோக்ஷத்திற்கு எதிரானபடியால்-அத்தகைய கர்மத்தை விட்டு விடுவது சரியாகும். ஆகவே சித்தாந்தப் பிரகாரம் இரண்டு விதத்திலும் துல்யமே-கர்மானுஷ்டானம் கர்மானுஷ்டானமின்மை-இரண்டும் சமமானதே)

ஸி. ஸூ. असार्वत्रिकी (3-4-10)

அஸார்வத்ரிகி ( do )

அஸார்வத்ரிகி - यदेव विद्यया करोति - என்று தொடங்கும் சுருதி உத்கீத வித்யையைப் பற்றியதே-அதைத்தான் சொல்லும். அது எல்லா வித்யைகளையும் பற்றியதல்ல. यदेव यत् करोति तत् विद्यया என்று இருக்கவேண்டும் (இதனால் எல்லா வித்யைகளிலும் அங்கம் என்பதை சூத்ரக்காரர் கண்டிக்கிறார்).

சா. 2. 1-1-10 சுருதி எல்லா வித்யைகளைப் பற்றிச் சொல்வதல்ல; அது உத்கீத வித்யையைப் பற்றியே சொல்வதாகும். यदेव विद्यया करोति - அந்த யாககிரியையே - உத்கீத உபாஸனத்துடன் செய்யப்பட்டால் - இங்கே அந்த யாக கிரியையே உத்கீத வித்யையோடு எந்தக் கர்மத்தைச் செய்கிறானோ-அதுவே மிக்க வீர்ய முடையதாக ஆகிறது - இங்கு यच्च சப்தத்திற்கு (ஏற்கனவே தீர்மானிக்கப்படாத குறிப்பிட்ட வஸ்துவாதலால்) उद्गीथमुपासीत ஒருவன் உத்கீதத்தை உபாஸிக்க வேண்டும்—என்கிற குறிப்பிட்ட உத்கீதமே விஷயமாக ஆரம்பிக்கப்படுகிறது. அதனாலே தர்க்க சம்பந்தத்தாலே வேறு விதமாக எண்ணவிடக்கூடாது. यत् करोति - எந்த ஒன்றைச் செய்கிறானோ - तत् विद्यया அதுவே (உபாஸனத்துடன்) செய்யப்படுவதாக அர்த்தம் கொள்ள வேண்டும். यदेव என்கிற பதத்தாலே-பொதுவாகச் சொன்னது உத்கீத வித்யையைப் பற்றியதே. यत् करोति तत् विद्यया - செய்யும் கர்மம் எல்லாம் வித்யையோடு கூடவே செய்ய வேண்டும்-என்று சுருதி வாக்யம் அமைந்திருந்தால் - பொதுவாக எல்லாக் கர்மத்துக்கும் வித்யை அங்கம் எனச் சொல்லலாம். இங்கு வாக்யம் அப்படியில்லை. यदेव विद्यया करोति எந்த கர்மத்தை (உத்கீத) வித்யையோடு சேர்த்துச் செய்கிறானோ - அதுவே

(तद्वे वीर्यवत्तरमिति) வீர்யத்தை உடையதாக விருக்கிறது)-இத னால் வித்யையுடன் எந்தக் கர்மம் செய்யப்படுகிறதோ - அதையே यच சப்தத்தாலே காட்டப்படுகிறது, அதுவே அதிக வீர்யத்தை உடையதாக ஆகிறது - ஆகவே இங்கு உத்கீத வித்யை ஒன்றை மாத்திரம் கர்மத்துக்கு அங்கமாக அனுஷ்டிக்க வேண்டுமென்று இந்த வாக்யத்திலிருந்து தேறும். அதைத் தவிர, பொதுவாக வித்யை கர்மத்துக்கு அங்கமாகாது.

முன்னாலே இதுவும் சொல்லப்பட்டதாகும் - तं विद्याकर्मणी समन्वारमेते - பிரு. 2. 4-4-2 வித்யையும் கர்மாவும் (இறந்த) ஒரு வனைப் பின் தொடர்கின்றன - இதில் வித்யை கர்மா இரண்டும் சேர்ந்து சொல்லப்படுவதாலே, வித்யை கர்மாங்கமே என்றால் - அதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார்.

ஸி. சூ. विभागः शतवत् (3-4-11)

விபாக: ஸதவத் ( do )

விபாக:-மேற் சொல்லப்பட்ட தம் வித்யா கர்மணி என்கிற சுருதியிலே - வித்யா கர்மங்களுக்கு பிரிதலே (விபாகமே) (பிரிவே) சொல்லப்படுவதாகும். ஸதவத் - வயலை விற்றவனுக்கு அதில் உள்ளே யிருக்கும் ரத்னத்தையும் சேர்த்து விற்றவனுக்கு - இருநூறு நாணயங்கள் (சேருகின்றன) அதைப்போல, வித்யை கர்மாங்கமன்று.

तं विद्याकर्मणी समन्वारमेते - இறந்து போன அவனை வித்யை யும் கர்மாவும் பின் தொடருகின்றன-இங்கு சொல்லப்படும் நியாயத்தினால் வித்யைக்கும் கர்மாவுக்கும் பின்ன (வெவ்வேறான) பலனாகிறபடியால், வித்யை தன் பலனை அளிப்பதற்கு பின் தொடருகிறது என்றும்; அதேபடி கர்மமும் தன் பலனை அளிப்ப தற்காக அவனைத் தொடர்கின்றது-என்பதால்-இரண்டுக்கும் பிரிவு (விபாக:) காணத் தகுந்தது. शतवत् - எப்படி வயலையும் ரத்னத்தையும் இரண்டையும் இருநூறு காசுகளுக்கு விற்றவ னுக்கு - வயலுக்கு நூறு, ரத்னத்திற்கு நூறு காசுகள் என்று பொருள் படுவதுபோல - இங்கேயும் வித்யைக்கு தனி - கர்மா வுக்கு தனி - ஆகவே வித்யை கர்மாங்கமன்று.

ஸி. ஸூ. अध्ययनमात्रवतः (3-4-12)

அத்யயந மாத்ரவத: ( do )

*அத்யயந மாத்ரவத:-வேத மதீத்ய - என்று தொடங்கும் வாக்யத்திலே - வேதாத்யயனத்தை உடையவனுக்கே, கர்மத்தை விதிக்கையால்-பிருஹ்மவித்யை கர்மத்துக்கு அங்கமன்று. (இங்கு சொல்லப்படுவது அத்யயனம்தான் கர்மாங்கம். வித்யை கர்மாங்கமல்ல. அர்த்த ஞானம் பிருஹ்ம வித்யைக்கு அங்கமில்லை. அர்த்த ஞானம் அனுஷ்டானத்தில் வரவேண்டும்).*

மேலே சொல்லப்பட்டது - வித்யையை உடையவனுக்கு கர்மாக்களை விதிக்கப்பட்டிருப்பதாலே, வித்யை கர்மாங்கமல்ல என்பது சரியாகாது, (ஏனெனில்) சா. 2. 8-15-1ல் वेदमधीत्य வேதத்தை ஓதினவனுக்கு; இதனால் அத்யயனம் மாத்திரமே விதிக்கப்பட்டதாகும்-அதனால் வித்யை கர்மாங்கமல்ல. அத்யயனம்தான் கர்மாங்கம், அத்யயனம் செய்ய வேண்டியது (விதிப் பிரகாரம்) என்பதால் வேத அர்த்தத்தை அவன் தெரிந்து கொள்ள வேண்டியது என்புதில்லை. அத்யயனம் என்பதால் அக்ஷரராசிகளாகிற சப்தத்தைத் தெரிந்து கொள்வதாகும். (எதுபோல?) आधानवत् - யாகத்தினுடைய அக்னியைத் தூண்டி விடுவது போல-அதுவே யாகம் ஆகமாட்டாது - அதைப்போல, அத்யயனத்தினலே அக்ஷர ராசிகளை கிரஹிப்பதாகும் - அதன் அர்த்தத்தை குறிப்பதல்ல. ஒருவன் வேதத்தை அத்யயனம் செய்வதால்-அதன் பலனாக நாளடைவில் கர்மாவின் அர்த்தத்தை தெரிந்து கொள்கிறான்-அதன் பலனை நிர்ணயிக்கிறான்-பிறகு வேத மந்திரங்களின் அர்த்தத்தை அறிய அவனே ஸ்வயமாகவே முயல்கிறான். அதனால் கர்மத்தைச் செய்யவிருப்பமுள்ளவன் கர்ம ஞானத்தில் முயற்ச்சிக்கிறான் - எப்படி மோக்ஷத்தைத் அடைய விருப்பமுள்ளவன் மோக்ஷ (பிருஹ்ம) ஞானத்தை அடையவிரும்புகிறானே-அது போல-ஆகவே வித்யை கர்மாங்கமாகாது. அர்த்த ஞானத்தை அடைய விதி வேத அத்யயநத்துக்கு இருக்குமாகிலும், அப்போதுகூட வித்யை கர்மாங்கமாகாது-ஏனெனில் வித்யை வேறு, வேத அர்த்த ஞானம் வேறு. எவ்விதம் ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்ம ஸ்வரூபத்தை அறிவதைக் காட்டிலும்,

ஸ்வர்க்க பலத்திற்கு ஸாதனமாயிருக்கும் ஜ்யோதிஷ்டோம கர்மத்தை அனுஷ்டிப்பது வேறாக யிருப்பது போல, அதேபடி அர்த்த ஞான ரூபமான பிருஹ்ம ஸ்வரூபத்தை அறிவதைக் காட்டிலும் வேறான மோக்ஷ ஸாதனமாக அமையும் தியானம்-உபாஸநாதி சப்தங்களால் வாச்யா (சொற்களால்) அடையப்படும் புருஷார்த்த ஸாதனபூதமான வித்யை வேறாகும்-அதனாலே அந்த வித்யைக்கும் (அந்தராதித்ய வித்யைக்கும்) கர்மாக்களுக்கும் யாதொரு சம்பந்தமில்லை-இதனால் பிருஹ்ம வித்யை சர்மாங்கமன்று.

(இங்கு சொல்லப்படுவது அந்தராதி வித்யை அது போன்ற மற்ற பிருஹ்ம வித்யைகளும் அர்த்த ஞான ரூபமான பிருஹ்ம ஸ்வரூபத்தை அறிவதைவிட வேறாகும். அர்த்த ஞானம் விதிக்கு உட்பட்டதல்ல. மேலும் அர்த்த ஞானம் வித்யையிலிருந்து வேறுபட்டதாகும். ஆகவே வித்யை என்பது திலதாரையைப் போல தொடர்ந்துள்ள தியானம்-உபாஸனமாகும்)

ஸி. ஸூ. नाविशेषात् (3-4-13)

நாவிசேஷாத் ( do )

அவிசேஷாத்-(ஏழாவது ஸூத்ரத்தில் புருஷன் ஆயுள் பரியந்தம் கர்மம் செய்ய வேண்டும்-குர்வந்நே வேஹ கர்மாணி ஜிஜீவிஷேத் ஸதம் ஸமா:-நூறு ஆண்டு காலம் கர்மாக்களைச் செய்துகொண்டு வாழவேண்டும்-என்கிற வாக்யத்தில் ஞானிக்குச் சொல்லப்படும் கர்ம நியமம் (ஆயுட்பரியந்தம் செய்ய வேண்டியது). ஸ்வதந்தர கர்மாவைப் பற்றியதே - விசேஷ ஹேது இல்லாதபடியால் ; (அதனால்) ந-வித்யை கர்மாங்கமல்ல.

முன்பு ஏழாம் ஸூத்திரத்தில் சொல்லப்பட்ட - कुर्वन्नेवेह कर्माणि - ஆயுட் பரியந்தம் கர்மா செய்யப்பட வேண்டும், என்பதால் ஆத்ம வித்துக்கு (பிருஹ்ம ஞானிக்கு) ஞானத்தைப் பிரிக்கிறது (எதிலிருந்து) உயிருள்ளவரை கர்மானுஷ்டானம் நியமமாகச் செய்யப்பட வேண்டியது என்பது இல்லை. காரணம் - अविशेषात् யாதொரு விசேஷ ஹேது சொல்லப்படாமையாலே.

இங்கு யாதொரு நியமம் இல்லை-அவனையும் அவனால் அனுஷ்டிக் கப்படும் ஸ்வதந்திரமான கர்மாவை அனுஷ்டித்து பலன் பெறுத லுக்கும், யாதொரு விதி இல்லை-விசேஷ ஹேது இல்லாதபடியால்-வித்யை கர்மாங்கமில்லை-(கர்மானுஷ்டானம் முக்யமில்லை). ஆனால் வித்யா அங்கபூதமான கர்ம விஷயத்திற்கு ஏற்படலாம். कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादय:-(கீதை) ஜனகர் போன்ற அரசர்கள் கர்மத்தினாலேயே ஸித்தி பெற்றனர். இதில் உபாஸகன் விஷயத்தில் - கர்ம விஷயத்தைப் போல - உபாஸனம் ஆயுட்பரியந்தம் செய்யப்பட வேண்டியது. (ஆபிரயாணம் செய்து முடிக்க வேண்டும்-இதனால் ஈசாவாஸ்ய உபநிஷத் வாக்யம் कुर्वन्नेवेह कर्माणि - இதற்கும் பகவத் கீதை வாக்யத்திற்கும் பிருஹ்ம வித்யைக்கு சில கர்மாக்கள் அங்கமாக விருக்கலாம் - அவை தொடர்ந்து செய்யப்பட வேண்டும். இதனால் யாதொரு முரண் இல்லை. (இங்கே பகவத் கீதையை ராமானுஜர் விளக்கும் போது-ஜீவன் பரமாத்மாவுக்கு சரீரமாதலால் கர்மயோகத்தை அப்யஸிக்க வேண்டும் என்கிறார்.) அதாவது கர்ம யோகத்தினால் ஞானயோகம்-இதனால் ஆத்மாவலோகனமாகிற ஸித்தி - ஏற்படுகிறது. தான் சரீரமாயும் பகவான் ஆத்மாகவுமிருக்கிறாய் என்பதாகும். ஸம்ஸித்தி - மோக்ஷபலனைக் குறிக்கும்.)

இம்மாதிரி ஏழாம் சூத்ரத்திற்கு பதில் கூறுமளவில்-வித்யையின் அர்த்த ஸ்வபாவத்தை விளக்கி - மீண்டும் சூத்ரக் காரரே कुर्वन्नेवेह कर्माणि - ஆயுட்பரியந்தம் கர்மாக்களைச் செய்ய வேண்டும் என்பதற்கு விளக்கம் தருகிறார்.

ஸூ स्तुतयेऽनुमतिर्वा (3-4-14)

ஸ்துதயே அநுமதிர்வா ( do )

ஸ்துதயே-வித்யையைப் புகழ்வதற்கு. அநுமதிர்வா-எப்போதும் கர்மத்தை அனுஷ்டிக்கலாம் என்கிற அனுமதியே (போதும்).

वा சப்தம் * (வாஸ்தவத்திலே) உறுதிப்படுத்துகிறது. ईशावास्यमिदं सर्वं - இந்த உலகம் எல்லாம் பகவானால் வியாபிக்கப்

பட்டிருக்கிறது- ஈசா. 2 ; இந்த வாக்யம் வித்யையைச் சொல்லும் பிரகரணத்திலே வருகிறது. கர்மாவை எப்போது செய்யலாம் என்கிற அனுமதி - வித்யையைப் புகழ்வதாக விருக்கிறது. ஸர்வதா கர்மானுஷ்டானத்திற்கு அனுமதி யிருப்பதாகும். வித்யையின் மாஹாத்மியத்தினுலே ஸர்வதா கர்மாவை செய்ய வேண்டியது என்பதால் (பலனை இச்சிக்காதபடியாலே) அவன் அப்படி கர்மம் செய்வதால் அதன் பலன்களை அடைகிறதில்லை - இவ்விதயாக வித்யை ஸ்துதிக்கப்படுகிறது. வாக்ய சேஷமும் இதே அர்த்தத்தை சொல்கிறது - एवं त्वयि नान्य येतोऽस्ति न कर्मलिप्यते नरे-इति உன் விஷயத்திலே-நியமம் இப்படியாக விருக்கிறது-இதைவிட வேறல்ல- கர்மாக்கள் பலனை இச்சிக்காத புருஷனைத் தொடுவதில்லை. (ஸ்பர்சிப்பதில்லை). இதனுல் வித்யை கர்மாங்கமன்று.

ஸி. ஸூ. कामकारेण चैके (3-4-15)

காமகாரேணசைகே ( do )

ஏகேச-ஒரு வேத சாகையினர் காமகாரேண (இஷ்டப்படி ன் பிருஹ்ம வித்யை நிஷ்டனுக்கு கிருஹஸ்த தர்மத்தை விடுவதை ஓதுகிறுர்கள்.

மேலும் சில சாகையினர்-कामकारेण - கிருஹஸ்த தர்மத்தை விருப்பப்படி-பிருஹ்ம வித்யை நிஷ்டனுக்கு - விடுவதை ஓதுகுறுர்கள் — இந்த சுருதி பிரகாரம், பிரு 2. 6-4-21ல் किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः - நான் பிரஜைகளால் யாது பிரயோசனத்தை அடைவேன்-எங்களுக்கு எங்கள் ஆத்மாவே உலகமாகும் - (பிரஜைகளால் அடையப்படுவதல்ல) வித்வானுக்கு வைராக்யம் யேற்படுவதால், கிரஹஸ்த தர்மம் - அவன் இஷ்டப்பட்டால் (कामकारेण) - கிருஹஸ்த தர்மமாகிற கர்மாக்கள் தியாகம் செய்யப்படலாம் - இதனுல் என்ன காட்டப்படுகிறது. பிருஹ்ம வித்யை கர்மாங்கமில்லை. வித்யை யாகத்தைப்போல வுள்ள கர்மாக்களுக்கு அங்கமாகவிருப்பின், வித்யா நிஷ்டனுக்கு - कामकारेण - அவன் விருப்பப்படி கிருஹஸ்த தர்மங்களும் யேற்பட மாட்டாது-அதனுல் வித்யா கர்மாங்கமன்று.

(இங்கு சொல்லப்படுவது - வாஜஸேயனர்கள் அபிப்ராயப் படுகிறார்கள்—வித்யா கர்மாங்கமாக விருக்குமானால், அக்கர்மாக் களை வித்யைக்காக தியாகம் செய்யக் கூடாது.)

ஸி. ஸூ. उपमर्दं च *(3 - 4 - 16)*

**உபமர்த்தம் ச** (—do—)

உபமர்த்தம் ச - இருவினைகளாகிற கர்மம் (புண்ய பாபம்) பிருஹ்ம வித்யையினால் அழிக்கப்படுகிறது - என வேதவாக்யங்கள் கூறுகின்றன.

புண்ய பாபரூபமான ஸமஸ்த ஸாம்சாரிக துக்க மூலமாகிற கர்மாக்கள் பிருஹ்ம வித்யையினால் உபமர்த்தனம் ஆகின்றன - இவ்விதம் ஒவ்வொரு வேதாந்த சுருதியும் ஓதுகிறது. உதாரண மாக, பிரு. 2 2-1-8ல் भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे - எப்போது பிருஹ்மவித்து பரமாத்மாவை மேலானதற்கும், கீழானதற்கும் ஆத்மாவாகப் பார்க்கிறானோ - அவனுடைய ஹ்ருதய கிரந்திகளின் முடிச்சுக்கள் அவிழ்கின்றன. சம்சயங்கள் போகின்றன-அவனுடைய கர்மாக் களும் நாசமடைகின்றன இது ஏற்படாது - வித்யை கர்மாக் களுக்கு அங்கமாகவிருக்குமானால் - (विद्यायाः कर्माङ्गत्वे न संगच्छते)

(இங்கு கர்மா என்பதற்கு பாப புண்யங்கள் ஆகும். முண்டக உபநிஷத் சொல்கிறது - பரமாத்மா பார்க்கப்பட்டால், எல்லா நல்லதீய பலன்களும் அழிகின்றன. வித்யையின் மாஹாத்மியத் தாலே இத்தகைய பேரொளி யேற்படுகிறது. அது கர்மாவுக்கும் கர்மாக்களின் பலனுக்கும் விரோதமாகும். இதனால் வித்யா கர்மாங்கமாகாது.)

ஸி. ஸூ. ऊर्ध्वरेतस्सु च शब्दे हि *(3 - 4 - 17)*

**ஊர்த்வரேதஸ்ஸு ச சப்தே ஹி** (—do—)

ஊர்த்வரேதஸ்ஸு - ச - ஊர்த்வரேதஸ்களான சந்யாஸி களிடத்தில் - பிருஹ்ம வித்யை காணப்படுவதால், அவர்களிடம்

கர்மமில்லாமையால் வித்யை கர்மத்துக்கு அங்கமன்று. சப்தேஹி வேதவாக்யங்களிலே - அவ்விதமாக ஆஸ்ரம தர்மங்களை ஓதுகின்றன.

ஊர்த்வரேதஸ்ஸுகளின் (சந்யாஸிகளின்) ஆஸ்ரம தர்மங்களை அனுஷ்டிப்பதில் - பிருஹ்ம வித்யை காட்டுகிறது. - அவர்களுக்கு அக்னிஹோத்ர, தர்ஸ பூர்ணிமாஸாதி கர்மாக்கள் இல்லை என்பதால் வித்யை கர்மாங்கமாகாது. மேலும் ஊர்த்வரேஸ்களில் விஷயத்திலே ஆஸ்ரம தர்மங்களும் இருப்பதாகவில்லை. ஏனெனில் சுருதி ஓதுகிலது - यावज्जीवमग्निहोत्रं जुहोति इत्यादिना ஆயுட் பரியந்தம் அக்னி ஹோத்ரம் செய்யப்படவேண்டியது - தர்சபூர்ணமாஸாதி கர்மாக்கள் ஆயுள்பரியந்தம் செய்யப்படவேண்டியவை - என்கிற அதிகார சுருதியிருக்கிறது. சுருதி விருத்த ஸ்மிருதி வசனங்கள் அபிரமாண்யமானவையாகும். ஆகவே शब्दे हि ஆகையால் சுருதி வாக்யங்களிலேயே - இவை காணப்படுகின்றன. வேத வாக்யங்களிலே இவை காணப்படுகின்றன - உதாரணமாக - சா. 2. 2 - 13-1ல் त्रयो धर्मस्कन्धाः - தர்ம ஆஸ்ரயம் கொண்டது மூன்று வித ஆஸ்ரமங்களை (வளர்க்கக்கூடியவை). சா. 2. 5-10-1ல் ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते - எவர்கள் காட்டை அடைந்து சிரத்தையுடன் தபஸ்ஸை (பிருஹ்மத்தை) உபாஸிக்கிறார்களோ) - ; பிரு. 2. 6-4-21ல் एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति - பிருஹ்மத்தையே அறிவதில் ஆவல் கொண்டு சந்யாஸிகள் உலகத்தைத் துறக்கிறார்கள் - இத்யாதி வாக்யங்களால் சொல்லப்படுகின்றன. ஆகவே சுருதி ஓதுகிறதே - யாவஜ்ஜீவம் - உயிருள்ளவரை - அக்னிஹோத்ராதி கர்மாக்கள் செய்யப்படவேண்டியது - என்கிற விதிவாக்யங்கள் உலகத்தை துறக்காதவனுக்குச் சொல்லப்பட்டதாகும் (சந்யாஸிக்கு இல்லை)

(இங்கு அறியப்படவேண்டியது. சந்யாஸி ஆஸ்ரமத்திற்கு நித்ய நைமித்திக கர்மாக்கள் இல்லை. அவர்களுக்கு வித்யைக்கு அதிகாரமுண்டு. ஆகவே வித்யை கர்மாவுக்கு அங்கமன்று-என்பது இவர்கள் விஷயத்தில் சரியாகும். பிருஹ்மத்தை உபாஸிக்கிறவர்கள்-அவர்களுக்கு உண்டா என்பதற்கு மூவகையான சுருதி வாக்யங்கள் கூறப்படுகின்றன - இவைகளால் கர்மாக்கள் விதிக்கப்படவில்லை எனக் காட்டப்படுகிறது.)

பூ ஸூ परामर्शं जैमिनिरचोदनाच्चापवदति हि (3-4-18)
பராமர்ஸம் ஜைமிநிரசோதநாச்சா பவததிஹி ( do )

*பராமர்ஸம் - கேவலம் அர்த்தவாத மாத்திரம். (அதாவது த்ரயோ தர்மஸ்கந்தா;-என்று தொடங்கும் வாக்யத்தில் ஆஸ்ர மங்களுக்கு அனுவாத 'அர்த்தவாதமாக) மாத்திரம் சொல்லப்படு கிறது-இதனால் சந்யாஸ்ரமம் தேறாது. அசோதநாத்-அந்த ஆஸ்ரமத்தை இங்கு விதிக்கவில்லை யாகையால், ச-மேலும்-அப வததிஹீ-வேதவாக்யம் மற்ற ஆஸ்ரமத்தை நிஷேதிக்கிறதன்றோ-இதிஜைமிநி:-ஜைமிநி இவ்விதம் கருதுகிறார்—(விதிபிரத்யயம் இல்லாதபடியால் சந்யாஸி ஆஸ்ரமம் இல்லை என்கிறார்).*

எந்த அபிப்ராயம் முன்பு சொல்லப்பட்டதோ-त्रयो धर्मस्कन्धाः தர்மங்களை ஆஸ்ரயம் செய்து கொண்டவை மூன்றுவித ஆஸ்ரமங் கள் ஆகும். இதனால் வைதிக சப்தத்தாலே ஆஸ்ரமங்கள் ஓதப்படுகின்றன-அதனால் அவை இருக்கவே இருக்கின்றன-(விதிக்கப்படுகின்றன)-இந்த அபிப்ராயம் தவறாகும். எப்படி त्रयो धर्मस्कन्धा என்கிற வாக்யங்களில் (தர்மத்தை வளர்க்கும் மூன்று ஆஸ்ரமங்கள்-(கிரஹஸ்த வானபிரஸ்த சந்யாஸ; பிரும்ம சர்ய ஆ॰மூவித ஆஸ்ரமங்கள்) இவைகளைப்பற்றி-இந்த பிரகரணத் திலே புகழ்வதாகவிருப்பதால் ஆஸ்ரமங்கள் இந்த வாக்யத்தினால் அனுவாதம் செய்யப்பட்டிருக்கிறது என்று கொள்ளவேண்டும் (अनुवाद मात्रमित्यर्थः) இது எப்படி? अचोदनात्-சந்யாஸி ஆஸ்ரமத் தை விதிக்கவில்லையாதலால் (अविधानादित्यर्थः) யாதொரு விதி பிரத்யயம் இங்கு சொல்லப்படவில்லை. त्रयोस्कन्धाः - இவை களால் முதலில் பிரணவத்தைக் கொண்டு செய்யப்படும் பிருஹ்மோபாஸனம் கூறப்பட்டது; ஸ்துதிக்கப்பட்டது. உபஸம் ஹாரத்திலே-ब्रह्मसंस्थोऽमृतत्वमेति-காணப்படுகிறது. (பிருஹ்மவித் பிருஹ்மபிராப்தி யடைகிறான்)இங்கே இன்னொருஇடத்தில் சொல் லப்பட்டதை அனுவர்த்திக்கிறதாலே-புகழ் சொல்லாகும்-கிரியை ஒன்றுமில்லை.(அக்கினி கர்மமில்லாத ஆஸ்ரமத்தை ஒப்புக்கொள்ள முடியாது) ये चे मेऽरण्ये श्रद्धा तप इत्युपासते - எவர்கள் (வாந பிரஸ்தர்கள்) அரண்யத்தை அடைந்து-தபஸ்ஸை (பிருஹ்மத்தை)

சிரத்தையுடன் உபாஸிக்கிறார்கள்-என்பதால் தேவயான மார்க்கத்தைச் சொல்லும் வாக்யமானாலும் - இங்கு கூட ஆஸ்ரம விதி ஒன்றும் ஏற்படுவதற்கில்லை. மேலும் சுருதி கிருஹஸ்தாஸ்ரமத்தைத் தவிர்த்து (அதாவது அக்னி காரியமில்லாத எந்த ஆஸ்ரமும்) ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது) - இம்மாதிரி வாக்யத்தாலே वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते - (யஜூ. ஸம் 1-5-2) எவன் அக்னி கர்மாவை கைவிடுகிறானோ, அவன் வீரனைக் கொன்ற பாபத்தை யடைகிறான்-என்று கிருஹஸ்தாஸ்ரமத்துக்கு உரிய அக்னி கர்மத்தைக் கைவிடுவது பாபமாகும்-என்று சொல்லியிருப்பதால்-கிரஹஸ்தாஸ்ரமத்தை கைவிடக்கூடாது ஆகையால் ஊர்த்வரேத்ஸ (சந்யாஸி) ஆஸ்ரமம் என்பது இல்லை - என்று ஜைமிநி ஆசார்யர் எண்ணுகிறார் - (சந்யாஸி ஆஸ்ரமத்திற்கும் அனுவாதமுண்டு - நான்கு ஆஸ்ரமங்களுக்கும் சுருதி சம்மதம் உண்டு. त्रयस्कन्धाः-(சா. 2. 2 23- & 5-10-4) பிரு. 2 4-4-22- இவை - யக்ஞம் தானம் அத்யயனம் ஆகியவற்றை முக்கியமாகக் கொண்டது கிரஹஸ்தாஸ்ரமம்.

2. தபஸ் செய்வது வாநபிரஸ்தனுக்கும் சந்யாஸிக்கும்.

3. மூன்றாவதாக ஆசார்ய குலத்தில் வஸித்து பாடம் கற்பது பிரும்மசாரி-ஜைமிநியின் கருத்து கிருஹஸ்த ஆஸ்ரமத்தைக் காட்டிலும் வேறுபட்ட அக்னி கர்மமில்லாத ஆஸ்ரமம் ஒப்புக் கொள்ளப்படமாட்டாது (முக்கியமாக சந்யாஸி ஆஸ்ரமம்)

ஸி. ஸூ. अनुष्ठेयं बादरायणः साम्यश्रुतेः (3-4-19)

அநுஷ்டேயம் பாதராயண: ஸாம்யஸ்ருதே: ( do )

அநுஷ்டேயம் - கிரஹஸ்த ஆஸ்ரமத்தைப் போல மற்ற ஆஸ்ரமமான (சந்யாஸி) ஆஸ்ரமம் உண்டு. அதன் தர்மங்கள் அனுஷ்டிக்கத் தக்கதே. ஸாம்ய ஸ்ருதே:-எல்லா ஆஸ்ரமங்களுக்கும் ஒத்ததான சுருதி வாக்யம் இருப்பதாலே; இதி பாதராயணர்-வேதவ்யாஸர் அபிப்ராயப்படுகிறார்.

கிரஹஸ்தாஸ்ரமத்தைப்போல, மற்ற ஆஸ்ரமங்களும் அவைகளின் தர்மங்களும் அனுஷ்டிக்கப்பட வேண்டியவை என்று பகவான் பாதராயணர் அபிப்ராயப்படுகிறார். எவ்விதம்? साम्यश्रुतेः-

எல்லா ஆஸ்ரமங்களுக்கும் சமத்வமான சுருதிகள் இருப்பதால். அபிமதமான (இஷ்டப்பட்ட) கிரஹஸ்தாஸ்ரம ஸாம்யமாக (ஸமத்வம் கொண்டதாக) இதர ஆஸ்ரமங்களுக்கும் அனுஷ்டிக்கப் படவேண்டிய தர்மங்களை சுருதிகள் ஒதுவதால். त्रयो धर्मस्कन्धाः தர்மங்களை வளர்ப்பதற்கு மூன்று மார்க்கங்கள் உள-என்று ஆரம் பித்து, பிருஹ்மத்தினிடம் ஈடுபாடுள்ளவனைப் புகழ்வதால் கிரஹஸ்தாஸ்ரமத்திற்கும்-இதரேஷாம் (மற்ற) ஆஸ்ரமங்களுக்கும் பொதுவாக விருப்பதாக மேல் சொல்லப்பட்ட त्रयो धर्म स्कन्धाः- வாக்யத்தினுல் ஆரம்பிக்கப்பட்டு - பொதுவாக எல்லா ஆஸ்ரமங் களுக்கும் ஸமானமாக சொல்லப்படுகிறது. ஆகையால் கிரு ஹஸ்த ஆஸ்ரமத்தை குறிப்பிட்டு-அது இன்னெரு இடத்தில் அறியப்பட்ட ஒன்றைக் காட்டுவது என்கிற வாதம் ஸத்யமேவ ஸம்பவிம்பது - எப்போது அந்த ஆஸ்ரம: வாழ்க்கை சட்டாயமாக அடையப்பட்டதோ, அதனுலே அந்த ஆஸ்ரம வாழ்க்கையின் ஸ்தாபிதம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டியதாகும். இதே வாதம் (அதாவது அடையப்பட வேண்டியது - அதன் வாழ்க்கையும் அவசியம்) மற்ற ஆஸ்ரமங்களுக்கும் சரிசமானமாக விருப்பதாகும்-அபிநிவேசம் (ஆழ்ந்த அன்பு) கிருஹஸ்தாஸ்ரமத் திற்கு யிருப்பதைப்போல அதே அளவு இல்லாதபோனுலும் என்று அர்த்தம்.

இன்னெரு விஷயமும் சொல்வது சரியாகாது - அதாவது கிருஹாஸ்தாஸ்ரம தர்மங்கள்-யக்ஞம் அத்யயனம்-தானம்-தபம்-பிருஹ்மசர்யம் இத்யாதி சப்தங்களால் தான் காட்டப்படுகின் றன- ஏனெனில் பிருஹ்மசர்யமும் தபமும் கிரஹஸ்தனுக்குத் தான் இருக்கக் கூடும் - மற்றவைகளுக்கு இல்லை என்று त्रयो धर्मस्कन्धाः மூன்று வித மார்க்கங்கள் உள என்கிற வாக்யத்தில், மூன்று என்று சுருக்கிக் காட்டுவதாலே-அவைகளை இது முதல்-இது இரண்டாவது - இது மூன்று என்று பிரிப்பது வரிசைக் (கிரமமாக) சரியில்லை. ஆகையால் यज्ञोऽध्ययनं दानम् - அத்யயநம் தானம் என்பதால் கிரஹஸ்தாஸ்ரமத்தை விளக்கிக் காட்டு கிறது. (இந்த த்ரயோதர்மஸ்கந்தா:-என்கிற வாக்யத்தில் கிரஹஸ்தாஸ்ரமும் அனுவாதம் செய்யப்படுகிறது. கிருஹஸ் தாஸ்ரமத்தை விதிக்கும் வேருெரு வாக்யம் இருந்தால்தான்

அதை இந்த வாக்யம் அனுவாதிக்க முடியும். இந்த வாக்யத்தில் அனுவாதம் செய்யப்படும் சந்யாஸ ஆஸ்ரமம் முதலான மற்ற ஆஸ்ரமங்களுக்கும் இந்த நியாயம் பொருந்தும்) மேல் சொல்லப்பட்ட கிருஹஸ்தாஸ்ரமத்திற்கு அத்யயன சப்தம் வேதாப்யாஸத்தை குறிப்பதாகும்-தபஸ் சப்தத்தால் வானப்ரஸ்தாஸ்ரமவாசிகளேயும் காட்டில் தபஸ் செய்பவர்களேயும்) இதர தபஸ்விகளேயும்-குறிக்கும்-ஏனெனில் இரண்டு பேர்களுக்கும் தபஸ்தான் முக்கியமாகும்-தபஸ்ஸே பிரதானமாகும். தபஸ் சப்தத்திற்கு காயக்லேசம்-(சரீரத்தை உபவாஸத்திஞல் வாட்டுவது) என்கிற பொருள் உண்டு-அது எல்லா தபஸ்விகளுக்கும் வானப்பிரஸ்தர்களுக்கும் உண்டு. பிருஹ்மசர்யம் என்பது பிருஹ்மசாரியின் தர்மமாகும்.

ब्रह्मसंस्थोऽमृतत्व मेति பிருஹ்மத்தைஉபாஸிப்பவன் (அதில் ஆழ்ந்த ஈடுபாட்டை உடையவன்) அம்ருதத்வதத்தை (சாகாமையை) அடைகிருன்-என்று பிற்பாடுவரும் சுருதி வாக்யத்தில் சொல்லப்படுகிறது. இதை ब्रह्मसंस्थ சப்தம் யோக சப்தத்தாலே சொல்லப்பட்டு-அது எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பொதுவாக விருக்கிறது. எல்லா ஆஸ்ரம வாசிகளுக்கும் பிருஹ்மத்தில் ஈடுபாடு - ஆழ்ந்த விஸ்வாசம் நம்பிக்கை இத்யாதிவுண்டு. ब्रह्मणि (பிருஹ்மத்திடத்தில்) संस्था-ஊன்றியிருப்பது - அந்த குணமே ब्रह्मसंस्थत्वम् - ஆகும். அது எல்லா ஆஸ்ரம வாசிகளுக்கும் யேற்படக்கூடும். பிருஹ்ம நிஷ்டையில்லாதவர்கள் - ஆஞல் அவர்கள் கேவலம் அவரவர்களின் ஆஸ்ரமங்களே மாத்திரம் செய்து கொண்டிருப்பவர்கள் - அவர்கள் புண்யலோகங்களே பயஞக அடைகிருர்கள். அவர்களில் எவன் ஒருவன் பிருஹ்ம நிஷ்டஞக விருக்கிருஞே - அவனே அம்ருதத்வ பிராப்தியை அடைகிருன். இந்த விஷயம் வெகு தெளிவாக பகவான் பராசரரால் அருளப்பட்டிருக்கிறது. प्राजापत्यं ब्राह्मणानां - பிராஜா பத்ய உலகம் (பிருகுவைப்போல) (கஸ்யபாதி ஸம்பந்தி ஸ்தானம்) பிராம்மணர்களுக்கே உரியது - (வி. பு. 1-6) என்று ஆரம்பித்து, ब्राह्मं संन्यासिनां स्मृतम् - பிரும்ம லோகம் சந்யாஸிகளுக்காக விருக்கிறது - என்று முடிவிலே அந்த ஸ்மிருதி வாக்யம் சொல்லி - இவ்விதம் வர்ஞஸ்ரம தர்மங்களே -

அவைகளை அனுபவிக்கும் கேவலர்களுக்கு பிருஹ்மலோக பிராப்தி வரை பலனைச்சொல்லி - மீண்டும் தொடர்கிறது - एकान्तिनः (பிருஹ்மத்தையே நம்பி வாழும் ஏகாந்திகள் - சந்யாஸிகள்)-ஸதா பிருஹ்மத்தையே தியானம் செய்யும் யோகிகள் ஆவார்கள். அவர்களுக்கு அந்த மேலான ஸ்தானம் (வைகுண்ட பதம் பயனாக அடையப்படுகிறது - அந்த (வைகுண்டபதத்தை ஸதா நித்ய சூரிகள் பார்த்துக் கொண்டிருக்கிறார்களோ (அப்பதத்தை) என்று சொல்வதாலே - அவர்களுக்கும் - பிருஹ்ம நிஷ்டர்களாக விருப்பதால் - பிருஹ்ம பிராப்தி (अभिद्यता) விருக்கிறது. ஆகையால் கிருஹஸ்த ஆஸ்ரம வாசிகளுக்குத் துல்யமாக (சமமாக) ऊर्ध्वरेतस् - சந்யாஸிகளின் ஆஸ்ரமும் இருக்கிறதாகக் காணப்படுகிறது - அவைகளும் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாகும். சா. 2. 5-10-2 ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते - அவர்கள் அரண்யத்தை யடைந்து சிரத்தையுடன் தபஸ்ஸை (பிருஹ்மத்தை) ஆராதிக்கிறார்களோ - என்று காட்டில் தபஸ் பிரதானமாக அடையப்படவேண்டியது - என்கிற இச்சை இருப்பதாலே - அதற்கு தேவையான மார்க்க கமனம் பலனைச் சொல்லப்படுவதாலே - அதன் பிராப்தியை ஓதுவதாலே - அங்கே கூட நாம் அந்த ஆஸ்ரம வாழ்க்கைகளை (வான பிரஸ்த - சந்யாஸ) ஒத்துக்கொள்ள - அங்கீகரிக்கவேண்டும்.

பராமர்ஸ பக்ஷத்திலும் (அதாவது அனுவாதம் செய்த பக்ஷத்திலும்) அதே மாதிரி - விதான பக்ஷத்திலும் (விதிக்கப்பட்ட கர்மாக்களை உடைய) கிரஹஸ்தாஸ்ரமம் துல்யமாக-இதர ஆஸ்ரமங்களும் - அவைகளின் தர்மங்களும் அனுஷ்டிக்கப்படவேண்டியவை என்று காட்டிவிட்டு - சூத்ரக்காரர் மீண்டும் வற்புறுத்திச் சொல்கிறார்-எல்லா ஆஸ்ரமங்களுக்கும் விதி இருக்கிறது-கேவலம் அனுவாத மாத்திரமல்ல. அதற்கு அடுத்த சூத்திரத்தைச் சொல்கிறார்.

**(எல்லா ஆஸ்ரமங்களுமே சமமாக அனுவதிக்கப்படுவதால் – ஸந்யாஸம் முதலான எல்லா ஆஸ்ரமங்களுக்கும் விதிவாக்யங்கள் உண்டு என்று தேறிற்று).**

ஸி. ஸூ. विधिर्वा धारणवत् (3-4-20)
விதிர்வா தாரணவத் (do)

விதி: வா - ஆஸ்ரமங்கள் எல்லாவற்றிற்கும் விதிகள் உண்டு. தாரணவத் - (பூர்வ மீமாம்ஸத்தில் அனுவாதம்போல இருக்கும்) உபரிதாரணம் (இல்லாமையால்) விதியே யாகும் என்று நிர்ணயிக்கப்பட்டது போல. வா சப்தம் உறுதிபடுத்துகிற சொல்லாகும் (மேல் சொல்லப்பட்டதை அங்கீகரித்து - உறுதி செய்வதாகும்) விதியை எல்லா ஆஸ்ரமங்களுக்கும் கூறுவதாகும்.

धारणवत् -திஷ்டாக்னி ஹோத்ரதல் - अधस्तात् समिधं धारयन् अनुद्रवेत् उपरि हि देवेभ्यो धारयति - பித்ருக்களுக்காக ஹவிஸ்ஸை ஹோமம் செய்யச் சொல்லும்போது ஸ்ருக்குக் கீழே ஸமித்தைத் தரிக்கவேண்டும் என்று விதித்துவிட்டு, தேவர்களுக்காக மேலே-ஸ்ருக்தண்டத்துக்குமேலேஸமித் தைதரிக்கிறன் அன்றே-ஹோமம் செய்யச் சொல்லும்போது - ஸமித்துஸ்ருக்கு மேலே தரிக்கவேண்டும் என்று வேறு எந்த வாக்யத்திலிருந்தும் தேருமையால், உபரிஹி தேவேப்யோ தாரயதி - என்று அனுவாத போலுள்ள வாக்யம் உண்மையில் விதிவாக்யத்தைப் போல இருக்கிறது - இவ்விதமாக விதிஸ்துதாரணேSபூர்வத்வாத் - இந்த வாக்யம் அனுவாத ரூபத்திற்கு சமாமக விருக்கிற பூ. மி. 3-4-5) என்கிற அதிகரணத்தில் நிர்ணியிக்கப்பட்டிருக்கிறது, ஆயினும் விதியாக ஒப்புக் கொள்ளப்படுகிறது-(विधिरेवा श्रयणीय:)-இங்கே கூட அது மாதிரி எல்லா ஆஸ்ரமங்களையும் அங்கீகரித்தல் (இதுமாதிரி) வேறு ஒரு வழியினுலும் ஏற்பட முடியாது; ஆகவே விதியாகவே ஒத்துக் கொள்ளவேண்டியது. (அதாவது ஸந்யாஸி ஆஸ்ரமத்தை விதிக்கும் வேறு வாக்யம் இருந்த போதிலும் அதை இல்லாததுபோல வைத்துக் கொண்டு "அப்ராப்தமாகையாலே அனுவாதம் போலிருந்தபோதிலும் விதிவாக்யங்களே" - என்கிற சமாதானம் இங்கு கூறப்படுகிறது.

(இங்கு விஷயம் யாதெனில்-விதியாக ஒன்றும் சுருதியில் இல்லை. ஆனுல் விதியைப் போல இங்கு இருக்கிறது-இந்தக் காரணத்தினுலே-(தேவர்களுக்காக) ஸ்ருக்தண்டத்துக்கு மேலே தரிக்

கிறுன் - என்பது வேறு எந்த வாக்யத்திஞலும் அறியப்படாதது. ஆகவே இங்கே விதியாகவே கொள்ளத்தக்கது. சாந்தோக்யம் அது போல இதர உபநிஷத் வாக்யங்கள் அதுபோல மற்ற ஆஸ்ரமங்களுக்கும் (கிரஹஸ்தாஸரமத்தைப்போல) விதிகளாகும். அவைகளை கேவலம் அர்த்தவாதம் (புகழ் சொற்கள்) எனத் தள்ளக்கூடாது).

இது தவிர-(ஜாபாலோப. 4ம் கண்.) ब्रह्मचर्यं समाप्य गृही भवेत् । गृहाद्वनी भूत्वाप्रव्रजेत् । यदि वेतरथा, ब्रह्मचर्यादेव प्रव्रजेत्: गृहाद्वा वनाद्वा, यदहरेव विरजेत्, तदहरेव प्रव्रजेत् - பிருஹ்மசர்ய ஆஸ்ரமம் முடிந்ததும், (ஒருவன்) கிருஹஸ்தாஸ்ரமத்தைக் கொள்ள வேண்டும். கிருஹஸ்தாஸ்ரமத்திலிருந்து வான பிரஸ்தாஸ்ரமத்தைக் கைக்கொள்ளலாம். என்றையதினம் அவனுக்கு வைராக்யம் உண்டாகிறதோ அன்றே அவன் சந்யாஸி ஆஸ்ரமம் புகுர வேண்டும்.'' இப்மாதிரியான சுருதி வாக்யத்தைக் விதியாகக் கொள்ளாமலே-த்ரயோதர்ப ஸ்கந்தா:-என்கிற வேறு விஷயங்களைச் சொல்லவந்த வாக்யங்களைக் கொண்டு-ஸந்யாஸி ஆஸ்ரமம் - அதுபோல மற்ற ஆஸ்ரமங்களும் ஆஸ்ரயணீயம் - ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் எனக் காட்டப்படுகிறது.

இந்த விதமாக யக்ஞம் முதலிய கர்மாக்களை விட்ட ஸந்யாஸிகளுக்கும்-பிருஹ்ம வித்யை விதிக்கப்படுவதாலே-பிருஹ்ம வித்யை கர்மத்துக்கு அங்கமானதன்று.

இவ்விதமாக ஆஸ்ரமங்களுக்கு விதிகள் இருப்பதால் கடன் பட்டவர்களுக்கு விதியாகக் கர்மாக்கள் செய்யப்படவேண்டும் (ரிஷிகள்-தேவதைகள்-மனிதர்கள்- பசுபக்ஷியாதிகளுக்கு-பஞ்சபூத யக்ஞம்) இத்யாதி; ஆயுள் உள்ளவரை செய்யப்படவேண்டும் - இவைகளை ஒதுக்கிவிட்டு அபவாத சுருதிகளுமிருக்கின்றன. இவை யாவும் வைராக்யமடையாதவர்களுக்கு யேற்பட்டவை என அறியப்படவேண்டியது. (இங்கு சொல்லப்படுவது பித்ரு கடன்-தேவ கடன் - ரிஷிகடன் - மனிதன் இந்தக் கடன்களிலிருந்து விடுபடுகிறுன்-எப்போது அவன் யாக யக்ஞங்களைச் செய்து கொண்டு தேவதைகளையும் திருப்திசெய்கிறுனே-பிரும்மசர்யம் அனுஷ்டித்து வேதங்களை குருவினிடமிருந்து பயிலுகிறுனே-பித்ரு கடன்களை

ஒழிக்க கிருஹஸ்தாஸ்ரமம் கைக்கொண்டு-குழந்தைகளைப் பெற்று-சிரார்த்தாதிகளைச் செய்கிருனே-; அதே மாதிரி அக்னி ஹோத்ரம் தர்ஸபூர்ணி மாசிரார்த்தங்களைச் செய்கிறவனுகவும் விருக்கிருனே அவன் மூவித கடன்களிலிருந்து விடுபடுகிருன்).

இவைகளைத் தவிர, வேறு சுருதி-ஸ்மிருதி வாக்யங்களும் பிரும்மவித்துக்கு கர்மாக்கள் ஆபிரயாணம் வரை செய்யப்பட வேண்டியது - விதிக்கப்பட்டிருக்கின்றனபடியால் - ஸ்மிருதிகளும் அந்த அந்த ஆஸ்ரம தர்மங்களை படிப்பதால்-சந்யாஸிகளுக்கும் வித்யை உண்டு-ஊர்த்வரேதஸ்களுக்கு பிருஹ்ம வித்யா விஷயத் தில் விதிகள் இருக்கின்றன-அதனுலே ஸ்தாபிதமாகிறது-பிருஹ்ம வித்யையை அப்யஸிப்பதால் புருஷார்த்தமாகிற மோக்ஷம் அடையப்படுகிறது-(ஸித்தம்) கர்மத்திஞல் அல்ல என்பதும் தெளிவு.

ஸ்துதி மாத்ராதி கரணம் (3-4-2)

ஸி. சூ. स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् (3-4-21)
ஸ்துதி மாத்ரமுபாதாநாதிதி சேந்நாபூர்வத்வாத் (do

உபாதாநாத்-கர்மாங்கமான உத்கீதத்தை எடுத்துக் கொள் வதால், ஸ்துதி மாத்திரம் இதிசேத்-("ஸ ஏஷ" என்று தொடங் கும் வாக்யத்தில்-உத்கீதத்தை ரஸ தமமாகக் கூறுவது) அதன்படி ஸ்துதி மாத்ரமே என்று கொள்வோமாஞல்-ந அல்ல (ஸ்துதி மாத் திரமல்ல) அ பூர்வத் வாத் அபிராப்தமாகையாலே (அது புதி தாகவே யிருக்கிறது). (இங்கு உத்கீதத்தை-ரஸ தமமாகக் கூறும் வாக்யம் ஸ்துதி மாத்ரமே - என்கிற ஐயம் நீக்கப்படுகிறது).

இங்கு சிந்தனைக்கு எடுத்துக். கொள்ளப்பட்ட விஷயம் - சா. 2. 1-1-3. स एष रसानां रसतमः परमः परार्ध्योऽष्टमः यदु (यउ) द्गीथः - மேலே சொல்லப்பட்ட பிரணவமே (உத்கீத அங்கமாக விருக்கும் பிரணவமே) எல்லா ரஸங்களுக்கும் மேலான ரஸதம மான ரஸமாகும். அது மேலானது; அது பரமாத்மாவின் ஸ்தானத்தை அடையத் தக்கது. இந்த உத்கீதம் (ஓம் எனப்படும் பிரணவம்) அஷ்டமமாகும் (இங்கு சொல்லப்படும் சாந். உப. வாக்யப்-ரஸங்களைக் கூறும் வாக்யம் (1-1-2) பூமி ஒரு ரஸமாகும்-

அப்புக்கள்-ஓஷதிகள் - மனிதன் ஓஷதிகளின் ரஸமாகிறுன் - ருக்குக்கள் வாக்கின் ரஸம் - ஸாமகானம் ருக்குக்களின் ரஸம்; உத்கீதம் ஸாமகானத்தின் ரஸமாகும் - எல்லாவற்றிலும் மேலான ரஸதமமாகும்) இங்கே கேள்வி-இம்மாதிரியான வாக்யங்கள் க்ருதுவுக்கு அவயவ பூதமான உத்கீதத்தைப் புகழ்வதாக விருப்பதா-அல்லது-அவை விதிகளை உபாஸனபரமாக விதித்து உத்கீதத்தை ரஸதமமாக (மேலான ரஸமாக) திருஷ்டி விதியாக எடுத்துக்கொள்ள வேண்டியதா? இங்கு பிரதிபாதிதமான (உத்கீத) உபாஸனத்திற்கு விஷயமாக அங்கியாக - உபாஸனத்தினுடைய புருஷார்த்தத்தை அடையச்செய்வதாலே, யாகங்களிலே சேர்க்கப் படாதபடி ஒரு உத்கீத உபாஸனம் (சூத்ரம் 3·3·41) சொல்லப்படுகிறதா? (இந்த சந்தேகம்-திருஷ்டி உபாஸனம் ஸ்தோத்ரபரமா அல்லது விதிபரமா?) சித்தாந்தம் த்ருஷ்டி வாக்யமாகும். (ஸஏஷ-என்று தொடங்கும் வாக்யம்).

(சூத்-3-3-41-ல் தந்நிர்த்தாரணு நியமஸ்தத் திருஷ்டே; ப்ருதக்ய பிரதிபந்த: பலம்) என்பதில் உத்கீத உபாஸனத்தை யாகத்தில் அங்கமாகக் கொள்ளவேண்டும் என்கிற-நியமமில்லை. (ஏனெனில்) வேத வாக்யத்தில் அநியமம் காணப்படுவதால்-;) (மேலும் உத்கீத உபாஸனைக்கு தனியாக பலனும் சொல்லப்படுகிறது-தடையின்மை என்பது பலனுகும்).

எது சரியாகும்? இது ஸ்துதி மாத்திரமே-(ரஸதமம் என்பதால்) எப்படி-உத்கீதத்தை யாகத்திற்கு அங்க அங்க பூதமாகமாக ஒத்துக் கொள்வதாலே. யாகத்திற்கு அங்க பூதமாக விருப்பதை ஒப்புக் கொண்டு, மேலும் ஓதப்படுகிறது-ரஸதமம் என்று, உதாரணமாக மாக-எப்படி யாகங்களைப் பற்றிச் சொல்லும் போது-பிருத்வி முதலானவை கரண்டியாகவும்-ஸ்வர்க்கலோகம் ஆஹவனீய அக்னியாகவும் சொல்லப்படும் இந்த வாக்யத்திலே इयमेव (பிருத்வி) ஜுஹு: (கரண்டி) स्वर्गो लोक आहवनीयः - இதில் கரண்டிக்கு பிருத்வியின் தன்மைகள் ஓதப்படுகின்றன-அவை ஸ்துதி மாத்திரம் பரமாக விருக்கின்றன என்பதல்ல, சரி அப்படியே கொண்டாலும் ஸ்துதி பரத்வம் என்றுலும் இங்கே சந்தேகம் அவை

ஸ்துதியை மாத்திரம் சொல்வதாகுமானல்-(ஏனெனில் வேதாந்த சூத்ரம் 3-4-21-ல் உத்கீதத்தில் அங்கமாக ஒப்புக்கொள்ள வேண்டியது என்கிற நியமமில்லை.) அதனல் இங்கேயும் அவ்விதமே ஸ்துதிபரமே எனக் கொள்ள வேண்டும். இது பூர்வபக்ஷம்).

**பதில்** இதற்கு நாம் பதில் கூறுகிறோம்-**नापूर्वत्वात्** - ஸ்துதி மாத்திரமன்று-அப்ராப்தமாகையாலே. ஸ்துதி மாத்திரமில்லையென்று எப்படி யேற்படும்-(ஹேது) - **अपूर्वत्वात्** - இதற்கு அப்ராப்தத்வாத் (புதிதாக விருப்பதாலே). (**रसतमत्वादेरप्राप्ततया अनुवादासंभवात् स्तुतिपरत्वायोगात्**) - **उदगीथविधेः क्रतुप्रकरण एव सत्त्वेन एतदुपनिषद्वाक्यानां दूरस्थतया तद्विध्येक वाक्यत्वायोगादिति सूत्रार्थः**). திருஷ்டி வித்யா ஸ்தோத்ர பரமா-அல்லது விதி பரமா?) திருஷ்டியை விதிப்பதற்க்காக ஸ்தோத்திரம் ஏற்பட்டதா அல்லது உபாஸந விதியா-சம்சயம்) (உத்தமூர் ஸ்வாமி)

கேவலம் ஸ்துதி மாத்ரம் என்பது சரியாகாது ஏனெனில் அப்ரதத்வாத் (புதிதாக விருப்பதாலே-அடையப்படாததாகும்).- உத்கீதம் ரஸதமம் என்கிற விஷயம் வேறு ஒரு பிரமாணத்தினல் அடையப்படுவதில்லை. அதனலே அதனை இவ்விதம் புகழ்வதாலே, ரஸதமம் என்று சொல்வதாகும். மேலும் உத்கீத ஸ்ருதி இங்கு அருகே இருந்தாலாவது - அதன் உதவியினல் இந்த வாக்யம் உத்கீதத்தைப் புகழ்கின்ற வாக்யம் எனக் கூறலாம். அப்படி உத்கீத ஸ்ருதி இவ்வாக்யத்திற்கு அருகில் இல்லை-அதனல் ஸ்துதிக்காக இது எழுந்ததல்ல. இங்கே **इयमेव जुहूः स्वर्गो लोक आहवनीयः** ஜீஹிவை பிருத்வியாகக் கூறும் வாக்யம் யாகவிதி பிரகரணத்தில் இருக்கிறபடியால், அது யாகவிதி வாக்யத்தோடு ஒரே வாக்ய மாகிறபடியால்-இப்படி ஏகவாக்யத்தை கைவிட்டு, வாக்ய பேதத்தை அங்கு கொள்ள முடியாது அதனல் ஸ்துதி பரத்வம் என்று சொல்லுவதற்கு. ஆனல் அங்கு யாகத்துக்கு அங்கமான ஜீஹிவை துதிக்கும் வாக்யமாசக் கொள்ளப்பட்டது. அதுபோல இங்கு உத்கீத விதி அருகில் இல்லாமையால் இதை ஸ்துதி மாத்திர மாகக் கொள்ளுவது நியாயமல்ல. "உத்கீத முபாஸீத"-உபாஸிக்க வேண்டியது என்கிற உபாஸன விதி ஸந்நிஹிதமாயிருக்கை

முதலான திருஷ்டியை செய்து உபாஸிக்க வேண்டியது என்று கொண்டு - அப்படி ஓதுவதால் யாகம் அதிக வீர்யத்தை அடைகிறது என்கிற பல சித்தியைக் கூறுவதாலே-உத்கீத உபாஸனத்தை விதியாகவே கொள்ளவேண்டும் -அதனுல் திருஷ்டி விதி வாக்யம் ஏற்பட்டுள்ளது-என்று கொள்ள வேண்டியது-அதுவே நியாயமாகும்.

ஸி. ஸூ. भावशब्दाच्च (3-4·22)

*பாவசப் தாத் ச (உபாஸீத - உபாஸனத்தைச் செய்யப்பட வேண்டும்)-என்கிற செயலே விதிக்கிற பிரத்யயம் இருப்பதாலே, இது உபாஸந விதியேயாகும் ஸ்துதிக்காக வல்ல.*

"उपासीत - இத்யாதி விதியினுலே - भावशब्दाच्च விதியாகக் கொள்வதே நியாயமாகும். விதி பிரத்யயத்தினுல் ஒரு கிரியைச் செய்யத் தூண்டும்போது அந்த பதத்திற்கு தன் சொந்தமான அர்த்தத்தை விதிக்கப்பட்டதாக அடைகிறது. ஆகையால் உத்கீத உபாஸனுர்த்தமாகவே சுருதிகள் ஓதுகின்றன என்று கொள்ளத்தகும்.

(சுருதி பிரகாசிகையில்-ஒரு சுருதி வாக்யம் எப்போது அர்த்த வாதமாக ஆகிறது என்று காட்டப்படுகிறது.

1) புகழ்ச் சொல்லாக-அது இன்னொரு விடத்தில் சொல்லப் பட்ட குணத்தை அனுவாதிப்பதாலே குறிப்பதாலே-ஆகலாம் - அல்லது 2) வேறு ஒரு பிரமாணத்தினுல் அறியப்படாததாக இருக்கிற ஒரு குணத்தைக் காட்டலாம்-அல்லது 3) ஒரு குணத்தைச் சொல்லும்போது, அந்த குணம் பிரதானமின்றி கௌண மாகச் சொல்லப்படும்போது.

இங்கே சூத்ரத்தினுல் தெளிவாகிறது - முதலாவது (1) பொருத்தமாகாது (அர்த்தவாதமாகாது - விதிதான் ஆகும்). 2) உத்கீதத்தை ரஸமாகச் சொல்வது இயலாது. அதனுல் குண பரமாகாது. 3) இதுவும் பொருந்தாது ப்ருத்வியை கரண்டி யாகவும்-உலகத்தை ஸ்வர்க்கமாகவும் உதாரணம் காட்டியதில்- இந்த வாக்யம் யாகத்தைப்பற்றிய விதியின் அருகே விருக்கிறது.

அதனால் இது கரண்டிக்கு புகழ்ச் சொல்லாகும். பிரமாணமுமாக லாம். இங்கு அம்மாதிரி விதி ஸந்நிஹிதமாக இல்லை. ஆனால் அதற்குப் பதிலாக, வித்யையின் விதி (உபாஸீத) (ரஸதமம்) சா.. 2. 1-1-1) என்கிற திருஷ்டிவிதி-இருப்பதால் விதிபரமாகக் கொள்வது நியாயம்-ஸ்துதி பரமில்லை. அதனால் உத்கீத உபா ஸனம்-ரஸதமம் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. சங்கரர் பூர்வ மீமாம் - 1-2-7 நியாயத்தைச் சொல்கிறார். அதன்படி குர்யாத் க்ரியேத...என்கிற லிங் முதலிய பிரத்யயங்கள் விதியைச் சொல் கின்றன-என்கிறார். அங்கத்தை ஆஸ்ரயித்த வித்யைக்கே ஸ்வதந் தரமான பலன் இருக்குமானால் ஸ்வதந்தரமான ஆத்ம வித் யைக்கு மோக்ஷபலன் உண்டு-எனச் சொல்லவேண்டுமா? ஆனால் சுருதி பிரகாசிகையில்-अत्र तु तथा संनिहि तत्रा भावेनैक वाक्यत्वा भावात् स्तुतित्वानुपपत्तिरित्यर्थः - सूत्रव्याख्यानमधि करणार्थेन निगमयति-अत इति-என்பதாகும். அதாவது "ஸ ஏஷ:" சா. 2. 1-1-3) என்கிற உத்கீத வாக்யம் திருஷ்டி விதிவாக்யமாகும்.

பாவ சப்த - கிரியை பதமாகச் சொல்லப்படுகிறது. விதி பிரத்யயம் இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. भावः—क्रिया विधिप्रत्यययुक्तो-भावशब्दोऽत्र (विवक्षितः)

முந்தின சூத்ரத்தாலே (21) பூர்வபக்ஷியின் யுக்தி கண்டிக்கப் படுகிறது-22ல் தன் பக்ஷத்தை ஸாதிக்க ஸாதக ஹேதுவை-சுருதி ஆதாரத்தாலே - காட்டுகிறது. भावशब्दाच्च - उद्गीयादि विधेरत्रा भाव उक्तः पूर्वसूत्रे; अत्र तूपासनविधेः सद्भाव उच्यते (சுருத பிரகாசிகை.)

பாரிப்லவார்த்தாதி கரணம் (3-4-3)

ஸி. சூ. पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् (3-4-23)

பாரிப்லவார்த்தா இதி சேந்ந விசேஷி தத்வாத் ( do )

பாரிப்லவார்த்தா:-(உபாஸனங்களிலுள்ள ஆக்யா - உபாக் யானங்களும்) பாரிப்லவத்தில் விநியோகிக்கப்படுபவையே-இதி சேத்-என்றால்; ந-இல்லை. விசேஷிதத்வாத்-பாரிப்லவத்தில் உப யோகப்படும் உபாக்யானங்கள் குறிப்பிட்டு எடுத்திருக்கப்பட்ட படியால்.

(இங்கு பிருஹ்ம வித்யை பிரகரணத்திலுள்ள கதைகள் (ஆக்யா) துதிப்பதற்கு மாத்திரமல்ல- என்கிறவாதம் தள்ளப் படுகிறது. அந்தந்த வித்யைகளில் படிக்கப்பட்ட உபாக்யானங்கள் ஆங்காங்கு விதிக்கப்பட்ட வித்யைகளை ஸ்துதி செய்வதற்கையே

கௌ. 2-3-1-ல் "प्रतर्दनोह वै दैवोदासिरिन्द्रस्य प्रियं धामो पजगाम" श्वेतकेतुर्हाऽऽरुणेय आस" इत्येवमादीनि वेतान्ते व्याख्यानि किं पारिप्लवप्रयोगार्थानि, उत विद्याविशेष प्रति पादनार्थानीति चिन्तायाम्।

வேதாந்தங்களில் சில கதைகள் சொல்லப்படுகின்றன - அந்த அந்த வித்யைகள் படிக்கப்படும்போது, "இப்போது பிரதர்னன்-திவோதாஸனுடைய புத்ரன்-இந்திரனுடைய பிரியமான கிரஹத்தை அடைந்தான்-என்கிற கதை யிருக்கிறது-(கௌ. 2-3-1); அதே மாதிரி சா. 2. 6-1-1ல் ஸ்வேத கேது என்பவன் இருந்தான்-இவன் அருணனுடைய பிள்ளையின் பிள்ளை-என்றும் ஓதப் பட்டிருக்கிறது. இம்மாதிரி கதைகளைச் சொல்வதின் நோக்கம் யாது? வேதாந்த வாக்யங்களிலே பாரிப்லவ பிரயோகத்திற்காக - அஸ்வமேத யாக இடைவேளைகளிலே - உபயோகப்படும்படியாக விருக்கின்றனவா-அல்லது அந்த அந்த வித்யைகளின் பெருமைகளைப் பிரதி பாதனம் செய்வதற்க்காக யேற்பட்டனவா என்கிற விஷயம் சிந்திக்கப்படுகிறது आख्यानानि शंसन्ति - எங்களுக்கு கதை சொல்லுங்கள் என்று பாரிப்லவத்தில் (அசுவமேத யாக இடைவேளைகளிலே) சொல்லப்படும் வாக்யங்கள் இருக்கின்றன-அதனாலே அவைகளுக்கு வித்யா பிரதானத்வம் இல்லை என்பது தேறுகிறது-நியாயத்திற்கு விரோதமாக விருக்கிறது.

இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுவோம். எல்லா ஆக்யாக்களும் (கதைகளும்) உபநிஷத் கதைகளல்ல - பாரிப்லவ உபயோகம் இருப்பதற்கு யோக்யதை யுடையதாக விருக்கின்றன. எப்படி? विशेषितत्वाद्विनियोगस्य - பாரிப்லவத்திலே சில குறிப்பிட்ட உபாக்யானங்களே எடுக்கப்பட்டிருக்கின்றன. आख्यानानि शंसन्ति - கதைகளைச் சொல்லுங்கள் என்று சொல்லிவிட்டு-அங்கேயே मनुः वैवस्वतो राजा - மனு-வைவஸ்வத

னுடைய பிள்ளை-என்கிற அரசன் இருந்தான்-என்று குறிப்பிட்ட மனு முதலான குறிப்பிட்டவர்களைப் பற்றிய கதைகள் இருக்கின்றன. ஆகையால் அந்த பிரகரணத்திலே மனு முதலியவர்களைப் பற்றிய கதைகளை விநியோகப்பட்டிருக்கின்றன. எல்லா வேதாந்த வாக்யங்களிலும் சொல்லப்பட்ட எல்லாக்கதைகளும் பாரிப்லவத்தில் உபயோகப்படும் கதைகள் அல்ல; ஆனால் வித்யைகளின் விஷயமாக விதிகளைப்போதிக்க வந்தவைகளாகும் (विद्याविध्यर्थाः)

ஸி. ஸூ. तथा चैकवाक्योपबन्धात् (3-4-24)

ததக சைகவாக்யோபபந்தாத் (do)

பிரு. உ. 6-5-6ல் आत्मा वा अरे द्रष्टव्यः (ஆத்மாவை ஸாக்ஷாத் கரிக்கப்படவேண்டும்) - இத்யாதிவிதிகளுடனே சம்பந்தப்பட்ட கதைகளுமிருக்கின்றன. வித்யைகளில் விதிக்கப்பட்ட விதிகளின் அர்த்தத்தை விளக்குவதற்க்காக அந்த கதைகள் வந்தன. எப்படி (உதாரணமாக) யஜீ 1-5-1ல் सोऽरोदीत्-அக்னி அழுதது முதலிய கதைகள் கர்மவிதிகளை விளக்கு வதற்க்காகயேற் ட்டவை; (இவை பாரிப்ல வார்த்தத்வமாக வில்லை என்பதாகும்). (அதாவத பிருஹ்மவித்யா விதிகளோடு ஸம்பந்தப்பட்டவை அவற்றை விளக்குவதற்க்காக யேற்பட்டவையாகும்).

அக்நீந்தநாத்யதிகரணம் (3-4-4)

ஸி. ஸூ. अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा (3-4-25)

அத யேவ சாக்நீந்தநாத்யநபேக்ஷா (do)

அதயேவச-அதே காரணத்தினலே (அதாவது சந்யாஸிகளுக்கும் வித்யா ஸம்பந்தம் இருப்பதாலே) அக்நீந்தநாத் யந பேக்ஷா அவர்களது வித்யை அக்ந்யா தாநத்தை முன்னிட்டுக் கொண்டு செய்யப்படும் அக்னி ஹோாத்ரம் முதலானவைகளை அபேக்ஷிக்காது (எதிர்பாராது.) (இந்த ஸூத்ரம் புருஷார்த்த அதிகரணம்) ஸூத்ரம் 17யுடன் தொடர்புள்ளது-ஸந்யாஸிகளுக்கும் பிருஹ்ம வித்யை உண்டு; யாகம் முதலிய கர்மங்கள் இல்லாவிடினும் பிருஹ்ம வித்யை கர்மாங்கமன்று என்று கூறப்பட்டது. அதற்கு மேல் யக்ஞாதி கர்மங்களை எதிர்பார்க்கும் பிருஹ்ம வித்யையில்-அவை

இல்லாத சந்யாஸிகளுக்கு எவ்விதம் அதிகாரம் யேற்படுகிறது என்கிற ஆட்சேபம் எழ - அதற்குப் பதில் உரைக்கப்படுகிறது). ஸ்துதி பரத்வமா விதிபரத்வமா என்று இரண்டு அதிகரணங்கள் அவாந்தர ஸங்கதி (இடையில் எழுந்த சங்கதி விசேஷத்தாலே)—விசாரிக்கப்பட்டன. வித்யைகளை உடைய ஊரித்வ ரேதஸ்ஸி களுக்கு ஆஸ்ரம தர்மங்கள் உண்டு-என்று சொல்லப்பட்டு ऊर्ध्वरेतस्सु च शब्दे हि சந்யாஸிகள் விஷயத்திலும் சுருதி வாக்யங்கள் ஆஸ்ரமதர் மங்களை ஒதுகின்றன. (சூத் 3 4-17-20); (விதிக்கின்றன). இங்கே சந்யாஸிகளுக்குயாகயக்ஞங்கள் இல்லை என்பதால் அவைகளின் அங்கியாக விருக்கும் வித்யையும் ஏற்படுவதில்லை என்கிற சங்கை எழ; (அதனாலே) अत एव-च अग्नीन्धनाद्यनपेक्षा इति அவர்களுடைய வித்யை அக்னி ஹோத்ர முதலான கர்மாங்களை எதிர்பாராது என்பதாகும். (அதாவது அக்னி ஹோத்ரம், தர்ஸ பூர்ணிமா முதலிய கர்மாக்களை எதிர்பார்ப்பதில்லை.) ஊர்த்வரேதஸ்ஸீகளுக்கு எந்த ஆஸ்ரம தர்மங்கள் வித்யையுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றனவோ சுருதிகளால் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளே அனுஷ்டிக்கப்பட வேண்டியவை (அதாவது யாகத்துக்கு அங்காங்கி பாவம் இல்லை-வித்யைகளுடன் சம்பந்தப்பட்டால் அவை உண்டு)-இந்த விஷயம் சா. உ. 2-23-1ல் ब्रह्म संस्थोऽमृतत्वमेति எவனுக்கு பிருஹ்மத்தில் ஆழ்ந்த ஈடுபாடு (பக்தி) யேற்படுகிறதோ, அவனால் அம்ருதத்வம் அடையப்படுகிறது. சா, உ. 5-10-1ல் ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते - எவர்கள் காட்டை அடைந்து, தபஸ் எனப்படும் பிருஹ்மத்தை சிரத்தையுடன் உபாஸிக்கிறார்களோ - என்றும்; பிரு. உ. 6-4-1ல் एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति - இந்த பிருஹ்மத்தை அடைய ஆசைப்பட்டவர்களாக-சந்யாஸிகள் உலகத்தைத் துறக்கிறார்கள். கடவ. 1-2-25ல் यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति இச்சைப்படுவதாலே அவர்கள் பிருஹ்ம சர்யத்தை அனுஷ்டிக்கிறார்கள்:—இத்யாதி வாக்யங்களில் சந்யாஸிகளுக்கு பிருஹ்ம வித்யை சம்பந்தமுண்டு என்று ஒதப்படுகிறது. இந்தக் காரணத்தினாலே ஊர்த்வரேதஸ்ஸீகளுக்கு அக்னியாதானம் முதலியவை அநபேக்ஷா-எதிர் பார்க்கப்படாதது. (அதாவது சந்யாஸிகளுக்கு பிருஹ்மோபாஸனை உண்டு அதற்குரிய ஆஸ்ரமதர்மங்கள் அனுஷ்டிக்கப்பட வேண்டும்-யாகாதிகள் அவசியமில்லை). अग्नीन्धनम् அக்நியாதனத்தை (இதை

முன்னிட்டுக் கொண்டு செய்யப்படும் ஆதான பூர்வக கர்மாக் களாகிற அக்னிஹோத்ர-தர்ச பூர்ணிமா ஸாதிகள் அவசியமில்லே. கேவல சந்யாஸி ஆஸ்ரமங்கள்-விஹித கர்மாக்களே அபேக்ஷ அவைகளைச் செய்யவேண்டும் என்கிற அர்த்தம். (ஆனால் கிரஹஸ் தனுக்கு அப்படியில்லே. அவை அங்கமாகும்).

## ஸர்வா பேக்ஷாதிகரணம் (3-4-5)

ஸி. ஸூ. सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् (3-4-26)

ஸர்வாபேக்ஷா சயக்ஞாதிஸ்ருதே ரஸ்வவத் ( do )

ஸர்வாபேக்ஷாச (கிருஹஸ்தர்களிடம் எல்லா அக்னி கர்மாக் களும் எதிர்பார்க்கப்படுகின்றன; யக்ஞாதி சுருதே:-யக்ஞேந - தாநேந என்கிற வாக்யத்தில் அஸ்வவத்-குதிரைக்கு லாடம் எவ்விதம் அவசியமோ-அவ்விதமே கர்மாக்களும் அவசியம்.

(இங்கே சந்யாஸிகளுக்கு யாகயக்ஞாதிகள் அபேக்ஷிதமில்லே என்று சொல்லப்படுமானால்-அதேபோல கிருஹஸ்தர்களின் விஷ யத்திலும், பிருஹ்மவித்யையாயாக யக்ஞாதிகளை அபேக்ஷியாமலே அப்யஸிக்கப்படலாமே-இந்த சந்தேகம் தவிர்க்கப்படுகிறது). (அதாவது உபாஸனத்துக்கு யாகம் அங்கமாக விருப்பதால் சந்யா ஸிக்கு உபாஸந அதிகாரமில்லே என்கிற பூர்வபக்ஷம் யேற்பட்டு, சித்தாந்தமாக, சந்யாஸி தர்மம் (உபவாஸம், தபஸ் இத்யாதி) உபாஸநாங்கமே யாகும் என்று சொல்லப்படுகிறது.

வித்யை-யாகயக்ஞங்களை அபேக்ஷிக்காமலே - அம்ருதத் வத்தை ஸாதிக்கிறது என்றால், அதே பிரகாரம் கிருஹாஸ்தாஸ் ரமிகளுக்கும் அவ்வித அபேக்ஷயின்றி (யாகயக்ஞங்கள் செய்யப் படாமலே) அம்ருதத்வம் ஏற்படலாமே - ஸாதிக்கக்கூடுமே. சுருதிகள் யாக யக்ஞாதிகளை விதிக்கிறபோது - அவைகளை வித்யா அங்கமாகச் சொல்லவில்லே-பிரு. 2. 6-4-52 विविदिषन्ति - இச் சைப்படுகிறார்கள்-என்கிற சப்தத்தாலே கர்மாக்கள் வேதன மாகிற உபாஸனத்திற்கு அங்கமாக பிரதிபாதிக்கவில்லே-என்றால் -

சூத்ரக்காரரே பதில் சொல்கிறார் - सर्वापेक्षा - கிருஹஸ்தர் களுக்கு பிருஹ்ம வித்யை அக்னிஹோத்ரம் முதலான கர்மாக்களை

எதிர்பார்க்கிறது. அதாவது அக்னிஹோத்ரம் முதலான ஸர்வ கர்ம அபேக்ஷயேயாதும்-கிரஹஸ்தர்களிடம் பிருஹ்ம வித்யை கர்மாக்களை வேதன (உபாஸன) அங்கமாக சொல்லிற்று. எப்படி-யக்ஞாதி சுருதிகளே. तमेत वेदानुवचनेन ब्राह्मणाः विविदिषन्ति यज्ञेनदानेन तपसाऽनाशकेन - பிராம்மணர்கள் வேதானுவசனங்களால் பரமாத்மாவை அறிய விரும்புகிறார்கள்-யாகங்களாலும், தானத்தினாலும் தபஸ்ஸினாலும், உபவாஸம் முதலான வைதிக கர்மாக்களாலும் - இச்சிக்கிறார்கள் - இதனால் யாகயக்ஞங்கள் வித்யையின் அங்கமாக விருக்கின்றன. यज्ञादीनां - யாகயக்ஞங்களை विविदिषन्ति - இச்சைப்படுகிறார்கள். (वेदितुमिच्छन्ति) யாகங்களே ஞானத்தை அடைய ஸாதனமாகின்றன - சரி இது ஒப்புக்கொள்ளப்படின், ஞானஸாதனம் என்பது சரி என்றால், யாகங்களை-ஞானத்தை அடையவிப்பதற்கு-இச்சைப்படுகிறார்கள். என்கிற வ்யபதேசம் சரியாகும். எவ்விதம் கொல்வதற்கு ஒரு கத்தி ஸாதனமாக உபயோகப்படுகிறதோ - அதுபோல யாக யக்ஞங்கள் ஸாதனமாகின்றன- ஆகையால் யாகயக்ஞங்கள் ஞான ஸாதனத்வமாகக் காட்டப்படுகிறது.

ஞானம் என்பதற்கு விளக்கம் கொடுக்கப்படுகிறது ஞானம் என்பதால் - கேவல வாக்ய ஜன்ய ஞானமில்லை - அதற்கு வேறாக, தியான-உபாஸன ஆத்மக ஞானத்தைச் சொல்வதாகும். தியானம்-உபாஸனம் இத்யாதி சப்தவாச்யம்-விசததம்-அடிக்கடி அடிக்கடி த்யானம் செய்வதாலே, பிரத்யக்ஷத்தினால் (ஸாக்ஷாத்காரத்தினால் அடையப்படும்) ஆபந்ந ஸ்மிருதி ரூபமான-நிரதிசய பிரியமானதும்-தினே தினே அப்யாஸிக்கப்படுவதும் - அதனால் விதிக்கப்பட்ட நித்ய நைமித்திக: கர்மாக்களால் பரமபுருஷனை சந்தோஷப்படுத்துவதும், அதிசயமானதும், ஆபிரயாணம் (கடைசி வரை) தொடர்ந்து செய்யப்படுவதுமான மோக்ஷ ஸாதனம் ஆகும் என்று முன்பே சொல்லப்பட்டதாகும். (லகு ஸித்தாந்தத்தில்). அதையே சூத்ரக்காரர் மீண்டும் சொல்லப் போகிறார் - சா. மி. 4-1-1ல் आवृत्तिरसकृदुपदेशात् - எது ஓதப்பட்டதோ அதையே அடிக்கடி செய்ய வேண்டும். இவ்விதமான ரூபம் கொண்டதான உபாஸனம் அதே பிரகாரம் தியானம் -

தினம் தோறும் விடாமல் அனுஷ்டிக்கப்படும் நித்ய நைமித்திக கர்மாக்கள்-இவைகளால் பரமபுருஷனை ஆராதனை செய்வதாகக் கொண்டு-பரமபுருஷனுடைய அனுக்ரஹ (பிரஸாத) த்வாரேண (உதவியினால்) - அவர்கள் மோக்ஷம் அடைகிறார்கள். இதன் அர்த்தம் - சாஸ்திரங்களாலே விதிக்கப்பட்ட யாகயக்ஞங்களால் அவர்கள் பரமபுருஷனை அறிவதற்கு இச்சைப்படுகிறார்கள். ஆகவே கர்மங்களோடு கூடின கிருஹஸ்தர்கள்; யக்ஞாதி நித்ய நைமித்திக ஸர்வகர்மாக்களை அபேக்ஷிக்கிறது வித்யை. (அதாவது அவைகளை விடாமல் செய்ய வேண்டியது). अश्ववत् - குதிரைக்கு லாடம் எவ்விதம் அவசியமோ - அதுபோல கிருஹஸ்தர்களுக்கும் கர்மாக்கள் அவசியம. கமனஸாதன பூத அஸ்வத்திற்கு, அதற்கு லாடம், சேணம், அலங்காரங்கள்-எல்லாம் அவசியம். அதைப்போல மோக்ஷ ஸாதன பூதமான வித்யைக்கும் கூட - நித்ய நைமித்திக கர்மாக்களாகிற அலங்காரங்கள் தேவைப்படும்-அபேக்ஷை. இந்த விஷயத்தை ஸ்வயமேவ பகவான் கீதையில் உபதேசித்திருக்கிறார்-(18-5)-यज्ञदान तपः कर्म न त्याज्यं कार्यमेव तत् । यज्ञोदानं तपश्चैव पावनानि मनीषाणाम् - யக்ஞம் தானம் தபஸ் முதலிய வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களை மோக்ஷத்தில் ஆசையுள்ளவன் ஒரு போதும் விடக்கூடாது. மரண பரியந்தம் அவைகளை தினமும் அனுஷ்டிக்கவேண்டும் பகவானுக்காகச் செய்யப்படின்-பலன்களை இச்சிக்காமல் செய்டப்படின்-(இவை மனுஷ்யர்களுக்குப் பரிசுத்தம் தருபவை உபாஸனம் செய்ய முடியாமல் தடங்கல் செய்யும் பாபங்களைப் போக்கும். வர்ணாஸ்ரமதர்மங்களுக்கும் இப்படியே கொள்ளவேண்டியது - பரிசுத்தமாக்குபவை) ஸத்வகுணத்தை வளர்த்து-ஞானத்தை உண்டாக்கும்).

கீதை (18-46ல்) यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् , स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः-பிராணிகளுக்கு உற்பத்தி ஸ்திதி வியாபாரங்கள் எல்லாம் எவனுக்கு அதீனமோ - இதெல்லாம் எவனால் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ - அந்த ஸர்வேஸ்வரனை (தனக்கு) விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களால் நன்றாக ஆராதித்து - பகவத் அனுக்ரஹத்தினாலே-ஸித்தியைப் பெறுகிறான்-இவை எல்லாம் பகவானிடமிருந்தே அடையப் பெறுகின்றன.

(இங்கு சங்கரரின் அபிப்ராயம் வேறு, அதாவது வித்யை உற்பத்தியாவதற்கு கர்மாக்களை அனுஷ்டிப்பது அவசியம். வித்யை பலனை அளிப்பதற்கு அவசியமில்லை என்பதாகும். அதற்கு மாருக ராமானுஜர் அவை பகவத் ஆராதனமாக - பலனில் இச்சையில்லாதபடி-செய்யப்படவேண்டும் என்கிருர்.)

சங்கரரின்படி-யாகம் தானம்—சமகுணம் இவற்றை அபேக்ஷித்து ஆத்மஞானம் (வித்யை) யேற்படுகிறது. ஆயினும் உண்டாகிற வித்யை பல ஸித்தியைக் குறித்து கர்மாக்களை அபேக்ஷிப்பதில்லை. ஞானமே முடிவான பலமாகும். சித்ததோஷம் விலகி ஞானம் உண்டாகிறது. குதிரை தேர் இழுப்பதற்கு உபயோகப்படலாம்-கலப்பை உழுவதற்கு தேவைப்படாது-அவ்விதமே ஆஸ்ரம தர்மங்கள் வித்யையினுல் தனது பலன் உண்டாகும் விஷயத்தில் அபேக்ஷிக்கப்படாது - ஞானத்தின் உற்பத்திக்கு அவசியமானலும்-என்பதாகும்)

சமதமாதி யதிகரணம் - (3-4-6)

ஸி ஸூ. शमदमाद्युपेतस्स्यात् तथापि तु तद्विधेस्तदङ्गतया तेषामप्यवश्यानुष्ठेयत्वात् (3-4-27)

**சமதமாத் யுபேதஸ்ஸ்யாத் ததாபி து தத்விதேஸ்த தங்கதயா தேஷாமப்யவஸ்யா நுஷ்டேயத்வாத் (do)**

ததாபிது - (கிருஹஸ்தன்) யக்ஞாதிகளைச் செய்யவேண்டியதாயினும்-ஸமதமாத்யுபேத: ஸ்யாத்-சமம் தமம் முதலான குணங்களோடு கூடினவனே ஆகவேண்டும். தத்விதே:-ஸாந்தோ-தாந்த: என்று அந்த குணங்களை விதித்திருக்கிறபடியால், ததங்கதயா-பிருஹ்ம வித்யை அதன் அங்கமாக, தேஷாமபி அவஸ்யா நுஷ்டேயத்வாத் - அந்த குணங்களையும் அவஸ்யம் அனுஷ்டிக்க வேண்டிய காரணத்தாலே.

(சமம்தமாதி குணங்கள் யாவராலும் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாகும்-விஹித கர்மாக்கள் பிரவிருத்த நிவிருத்தி ரூபமாக விருக்கின்றன-இங்கே நிவிருத்தி ரூப கர்மாக்களைப் பற்றிச் சொல்லப்படுவதாகும்).

கிருஹஸ்தர்களுக்கு சமதமாதி குணங்கள் அனுஷ்டிக்கப்பட வேண்டுமா - அல்லது வேண்டாமா - என்கிற விஷயம் சிந்திக்கப்படுகிறது - ஆந்தர (உள்) பாஹ்ய (வெளி) கரண (இந்திரியங்களின்) வ்யாபார ரூபமாகவிருக்கும் சேஷ்டிதங்கள் அவை கர்மானுஷ்டானமாகும். அவைகளுள் சமம் (மன அடக்கம்) தமம் (இந்திரிய அடக்கம்) இவைகள் நிவிருத்தி ரூபமாகவிருப்பதாலே - இவைகளை அனுஷ்டிக்க வேண்டியது (விபரீததருபத்வாத் - நிவிருத்தி ரூபமாக விருப்பவை - நிஷித்த கர்மாக்களாகும் விஹித கர்மாக்களுக்கு எதிரானவை.)

இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுகிறோம் - கிரஹஸ்தன் கர்ண வ்யாபார (இந்திரிய சேஷ்டித) கர்மாக்களில் பிரவர்த்திக்கிறான். ஆயினும், அவன் வித்யையை உடையவனாக விருக்கிறபடியால் சமதமாதி குணங்களுடன் சம்பந்தம் கொண்டிருக்கவேண்டும். எப்படி? तदङ्गतया तद्विधेः - ஏனெனில் அவை அதற்கு அங்கமாக விதித்திருக்கிறபடியால் (வித்யைக்கு அங்கமாக ஓதப்பட்டிருப்பதாலே சமதமாதி குணங்கள் அனுஷ்டிக்கப்படவேண்டியது).

பிரு. 2. 6-4-13-ல் तस्मादेवंविच्छान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वाऽऽत्मन्येवात्मानं पश्येत् - ஆகையால் பிருஹ்மத்தை அறிகிறவன் இந்த பெருமையை அடைவதால் - ஒருவன் இவ்விதமாகத் தன்னை புரிந்துகொண்டு சாந்தனாக (மன அடக்கம் உள்ளவனாக) தாந்தனாகி (இந்திரியங்களை அடக்கினவனாக) எல்லா ஆசைகளையும் விட்டுவிட்டு, பொறுமையுடனும்-அக்கரையில்லாதவனாக-எப்போதும் தியானத்தில் ஈடுபட்டவனாக விருக்கிறானோ - அவனே தன் ஆத்மாவை (பரமாத்மாவை) பார்க்கிறான், இங்கே வித்யை உற்பத்தியாவதற்கு, சித்த ஸமாதான ரூபமாக விருக்கும் மன அடக்கம்-தேக இந்திரிய அடக்கம்-இவை உபகரணங்களாகின்றன-ஏனெனில் வித்யை சபலமாவதற்கு அவை (சமதமாதினும்) அவஸ்யம் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாகும்.

இங்கே கரண (தேக இந்திரிய) வ்யாபாரங்களுக்கும் அதற்கு வேறான கர்ம ரூபமாகிற சமதமாதிகள் (மன அடக்கம்) - இவை

களுக்குப் பரஸ்பர விரோதம் ஒன்றும் இல்லை - விஷயங்கள் பின்னமாக விருந்தாலும், கரண வ்யாபாரங்கள் (தேக இந்திரியங்களால் செய்யப்படும் கர்மாக்கள்) விஹிதமே - அவசியம் கர்த்தவ்யம் अविहितेषु-அவசியம் செய்யப்படவேண்டியவையான-நித்ய நைமித்திக பின்ன கர்மாக்கள்-இவை பிரயோசன சூன்யமாகவிருப்பினும்-(மனதை சுத்தம் செய்பவையாயினும்) அவைகளை விடவேண்டுமா? விடக்கூடாது என்று பதில் கூறுவோம். (ஏனெனில்) இவ்விதம் வாதாடக்கூடாது - கர்ண வ்யாபாரங்களில் ஈடுபட்டிருக்கும் ஒருவனுக்கு, சமதமாதி குணங்கள் உடனேயே யேற்படுவதில்லை. பூர்வ வாசனைகளின்படி சமதமாதி அடையப்படுகிறதில்லை. விஹித கர்மாக்களை பரம புருஷனின் ஆராதன ரூபமாகச் செய்யப்படின், பரம புருஷன் அதனுல் திருப்தியடைந்தவனாக, அவனுடைய அனுக்கிரஹத்தினுல் வாசனைகள் நீங்கி, நிகிலவிபரீத வாசனைகள் அறுந்துபோன காரணத்தினுல், சமதமாதிகள் நாளடைவில் யேற்படலாம். ஆகையால் கிருஹஸ்தனுக்கும் (அதுபோல மற்றைய ஆசிரமவாசிகளுக்கும்) சமதமாதி குணங்கள் அனுஷ்டிக்கப்படவேண்டியவையாகும். காரணம் - மன அடக்கம் தேக இந்திரிய அடக்கத்துக்கு விரோதமானது அல்ல. சாஸ்திரங்களில் விஹித கர்மாக்களில் தேக இந்திரிய வியாபாரமும், விதிக்கப்படாத செயல்களில் புலன் ஒடுக்கமும் ஒருவனுக்கே இல்லாமலிருக்கலாம்-விஷய பேதம் இருப்பினும் - இருவித அடக்கமும் அவசியம் என்பதால் பரிஹரிக்கப்பட்டு-அது இல்லறத்தார்களுக்கும் அவசியமாகும்.

ஸர்வாந்நானுமத்யதி கரணம் (3-4-7)

ஸி சூ. सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् (3-4-28)

**ஸர்வாந்நாநு மதிஸ்ச ப்ராணத்யயே**
**தத்தர் ஸநாத் (3 4-28)**

ஸர்வாந்நாநுமதி ; - பிராணவித்யை நிஷ்டனுக்கு எல்லா அன்னங்களும் அனுமதிக்கப்படுகிறது. பிராணத்யயே ச-உயிர் போகும் தருவாயில், தத்தர்ஸநாத்-பிருஹ்மவித்யா நிஷ்டனுக்கும் வேறொரு வேதவாக்யத்தில் - உயிர்போகும் தருணத்தில் எல்லா அன்னங்களும் பக்ஷ்யம் - அனுமதிக்கப்படுவதைக்காண்கிறபடியால்.

(இந்த உணவு கொள்வது நியமத்துடன் இருக்கிறதா - இல்லையா - பிருஹ்மவித்யாநிஷ்டனுக்கு உண்டா இல்லையா - சித்தாந்தம் - தேக ஸம்ரக்ஷணத்திற்கு உயிர்போகும் ஆபத்துக் காலத்திலே நிஷித்தமான எல்லா அன்னமும் அனுமதிக்கப்படு கிறது) நிஷித்த போஜனம் அவசியமா - ஸர்வதா - ஸர்வத்ர - விஷயமா? பிராணவித்யையில் ஆரம்பித்து - பிருஹ்மவித்யை உபாஸகனுக்குச் சொல்லப்படுகிறது.)

சாந். (பிரு) வாஜ. இரண்டிலும் பிராணவித்யை உபதேசிக் கப்படுகிறது. பிரு. உ. 8-1-14ல் न ह वा अस्यान्नं जग्धं भवति; नानन्नं परि (प्रति) गृहीतं भवति பிராணவித்யை நிஷ்டனுக்கு - எல்லா அன்னமும் ஸம்மதமாகும் - அன்னமாகாதது என்பது ஒன்று மில்லை; சம்மதிக்கப்படாத அன்னம் என்பது இல்லை. (இதனால் நிஷித்த அன்னம் சாப்பிடப்பட்டாலும் தோஷமில்லை.) அதேபடி சா. உ. न ह वा एवं विदि किं चन अनन्नं भवति — ஒன்றும் சாப்பிடத்தகாததாகவில்லை-இதனால் ஸர்வாந்நத்திற்கும் அனுமதி தரப்படுகிறது. இதனால் இங்கே பிராணவித்யை நிஷ்டனுக்கு ஸர்வான்னமும்-ஸர்வதா-ஸர்வத்ர-யேற்படக்கூடியதா, அல்லது அவன் பிராண (உயிர்போகும்) ஆபத்தை அடையும் தருவாயில் சம்மதிக்கப்படுகிறதா. இந்த சந்தேகம் எழக்காரணம் யாதொரு விசேஷமும் காணப்படாதபடியால்; உயிர் போகும் தருணத்தில் தான் என்று விசேஷிக்கவில்லையாதலால்-;

இதற்கு நாம் பதில் கூறுவோம்—प्राणात्यये உயிர்போகும் தரு வாயில்-च சப்தம் அவதாரண (உறுதிபடுத்துகிற) சப்தமாகும். உயிருக்கு ஆபத்துயேற்படும்போது-என்று வேறு ஒரு சுருதி ஓதுகிற படியால் - அர்த்தமாகும். எப்படி? तद्दर्शनात् சுருதி ஓதுகிறபடி யாலே. இன்னொரு சுருதியில் காணப்படுகிறது-பிருஹ்ம வித்துக் களுக்கு பிராணனுக்கு ஆபத்துயேற்படும் போது - ஸர்வாந்நம் அனுமதிக்கப்படுகிறது அவ்விதமானல் பிராணவித்யை நிஷ்ட னுக்கு எவ்வளவு இருக்கவேண்டியது - என்பது சிந்தனை விஷய மாகும்.

**விளக்கம் :**

சாந். உபநிஷத்திலே 1-10ல் உஷஸ்தி முனிவரின் கதை ஓதப்படுகிறது. குரு தேசத்தில் கல் மழையினுல் துர்பிக்ஷம் யேற்பட-உஷஸ்தி முனிவர் ஆகாரமற்று விளங்கினுர். அவர் குல் மாஷம் என்ற தானியத்தை உண்டு கொண்டிருந்த யானைப் பாகனை அண்டி ஆகாரம் கேட்டார். அவன் கொள்ளாகிற குல்மாஷத்தை தான் உண்ட மிச்சத்தை அவருக்குக் கொடுத்தான் அதைச் சாப்பிட்டதும், யானைப்பாகன் தண்ணீரையும் கொடுத்தான். அவர் அதை (தண்ணீரை) எச்சில் (உச்சிஷ்டம்-) இது எனக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டார். அதற்கு யானைப் பாகன்-இந்த குல்மாஷமும் எச்சில்தானே என்றுன். அதற்கு உஷஸ்தி அளித்த பதில் முக்கியமானது. "இதை நான் உண்ணு விடில், என் பிராணனுக்கு ஆபத்து யேற்பட்டிருக்கும். பிராணன் என் உடம்பில் தங்காது. நான் பிழைத்த பிறகு தண்ணீர் அருந்துவது காமகா (சா)ரமாகையாலே-சாஸ்திரத்தை மீறினதாம்-என அவனுக்கு மறுமொழி கூறினுர். கொஞ்ச மீதமிருந்த கொள்ளை மறுநாட் காலையில் உண்டு-முனிவர் யாகம் நடத்தும் அரசனுடைய வீட்டை யடைந்தார். யாகம் செய்யும் இடத்திலே பிரஸ்தாவம், உத்கீதம், பிரதிஹாரம் என்கிற ஸாமாம்சங்களுக்கு அதற்குள்ள தேவதைகளை அங்கு ஒருவரும் அறியாமல் நிற்க-உஷஸ்தி அவர்களுக்கு இவை பற்றி உபதேசம் செய்தார். இந்த உபதேசத்தின் ஸாரம்-பிரஸ்தாவம் என்கிற சாமகானத்திலே ஸர்வ பூதங்களுக்கும் பிறவி அழிவுகளுக்கும் காரணமாயுள்ள பிராண (பரமாத்மா) தேவதையையும், உத்கீதத்திலே உயரத்திலிருப்பவனும் புகழப்படுபவனுமான ஆதித்யனையும் - பிரதிஹாரத்தில் அன்னத்தையும் பாவிக்க வேண்டும் - என்பதாம். பிராண ஆபத்துக் காலத்தில் இவ்வாறும் ஆகாரம் கொள்ளலாமென்றும் இங்கு உபாஸிக்கப்படும் பிராணதேவதை பரமாத்மா என்றும் பிருஹ்ம சூத்திரத்திலே முடிவு செய்யப்பட்டதாகும்.) (இம்மாதிரியே விஸ்வாமித்திரரின் கதையும் மஹாபாரதத்தில் சொல்லப்படுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்:**—சா. 2. ல் உஷஸ்தி - சக்ரன் என்கிறவனுடைய பிள்ளை-பிருஹ்மவித்தாக விருந்தார் என்று ஓதப்படுகிறது. அவர்

வசித்த குரு தேசத்தில் கல்மழை பெய்யக் காரணமாக, துர்பிக்ஷம் யேற்பட்டதால்-ஒரு யானைப்பாகனை அண்டி அவர் உணவு கேட்டார். அச்சமயம் அவர் பல நாட்கள் பட்டினியாக விருந்த படியால் பிராண ஆபத்தை யடைந்தார். பிருஹ்ம வித்தான படியாலே தனது பிராணனை ஸம்ரக்ஷிப்பதில் ஆசைகொண்டு அவர் யானைப்பாகனை குல்மாஷத்தைத் தரும்படி பிச்சை கேட்டார். யானைப்பாகன் அவருக்கு ''என் உச்சிஷ்டமான கொள்ளைத் தவிர வேறு ஒன்றும் இல்லை''-என்று பதில் கூற; அதற்கு உஷஸ்தி-''பரவாயில்லை-அவைகளில் சிலவற்றை எனக்குக் கொடு'' என்று சொல்ல, அவன் அவரிடம் கொடுக்க, அதை உண்டு தன் பிராணனை சம்ரக்ஷித்தார். அந்த யானைப்பாகன் அவருக்கு சிறிய அளவை ஜலம் தாகத்திற்க்காகக் கொடுக்க-உஷஸ்தி அதை ஏற்க மறுத்து-உச்சிஷ்டம்-வேண்டாம் என்று கூறினார். யானைப்பாகன் திரும்ப பதில் கூறினன்-குல்மாஷம் அதுவும்தானே உச்சிஷ்டம் - என்று கூற, முனிவர், ''நான் அதை உண்ணுவிடில் என் உயிரை இழந்திருப்பேன்; ஆனால் இந்த தண்ணீரோ இஷ்டப்பட்டால் சாப்பிடலாம்-எனக்கு இஷ்டமில்லை. இந்த குல்மாஷம் சாப்பிடப் படாமல் போனால், என் உயிர் இருப்பதே சந்தேகமாகிவிடும்; அதனால் என் பிராணனைக்காப்பாற்ற எவ்வளவு உணவு தேவையோ அதையே உன்னிடமிருந்து பெற்று உண்டேன்-இது காம காரகம்-நிஷித்தம்-ஆகவே ஜலத்தை மறுத்து விட்டார். தன் மனைவிக்கு தான் சாப்பிட்டுப் போன கொள்ளின் மிச்சபாகத்தை அளித்து; பிறகு பணம் சம்பாதிப்பதற்க்காக அவர் யாகம் செய்யும் இடத்திற்குச் செல்ல விரும்பினார். புறப்படும் முன்பு-அவர் தம் மனைவியிடம் முந்தினநாள் கொடுத்து வைத்திருந்த கொள்ளில் சிலவற்றை உண்டு, யானைப்பாகன் சாப்பிட்ட உச்சிஷ்ட கொள்ளின் மீதியை உண்டு யாகத்திற்குச் சென்றார்-என்று ஓதப் பட்டிருக்கிறது.

இந்த கதையிலிருந்து தெரியவருகிறது-பிருஹ்ம வித்துக்கள் விஷயத்திலே, பிராண சம்சயம்யேற்படும் சமயம் ஸர்வான்னமும் அனுமதிக்கப்படுகிறது-என்கிற விசேஷணமிருப்பதாலே,யாதொரு நிபந்தனையுமின்றி சாப்பிடலாம் என்று ஓதப்படுவதாலே, அதே மாதிரி பிராண வித்யை நிஷ்டனுக்கும் ஸர்வான்னத்தைப் புசித்தல் பிராண ஆபத்தில் செய்யப்படலாம் என்று நிச்சயிக்கப்படுகிறது.

(இங்கு உஷஸ்தி உதாரணத்திலே, பிராண வித்யாநிஷ்டனுக்கு ஸர்வான்னத்தைப் புசித்தலுக்கு அனுமதி-பிராண ஆபத்தையடையும் காலத்தில் கொடுக்கப்படுகிறது என்பதாகும்.)

ஸீ. ஸூ. अबाधाच्च (3-4-29)

அபாதாச்ச (do)

அபாதாத் ச - ஆகாரசுத்தியை விதிக்கும் வேத வாக்யம் தள்ளப்படாமையாலும் (ஆபத்துக்காலத்திலே) ஸர்வாந்நாநுமதி இருப்பதாகும்.

சா. உ. 7-26-2. आहारशुद्धौ सत्वशुद्धिः सत्वशुद्धौ ध्रुवा स्मृति.— ஆஹாரம் சுத்தமாயிருந்தால்தான் மனம் சுத்தியடையும். மனம் சுத்தமாயிருந்தால்தான் பிருஹ்ம வித்யை உண்டாகும். (த்ருவா ஸ்மிருதி:-திடமான-அசஞ்சலமான ஸ்மிருதி:-பரவித்யா நிஷ்டனுக்கு பூமவித்யையில் போஜன நியமம் பிரமாணமாக காட்டப்படுவதால், அபாதாத் ச என்று வேதவாக்யம் பற்றிச் சொல்லப் படுகிறது. (வேதவிதி பிருஹ்ம வித்யா நிஷ்டனுக்கு சொல்லப் படுவதாலே-வேறு எந்த பிரமாணத்தினாலும் தள்ளப்படவில்லை. ஆகையால் ஆபத்துக் காலத்திலேயே அவனுக்கும் நிஷித்தமான ஆகாரம் அனுமதிக்கப் படுகிறது-எனத் தெளிவு) இவ்விதமாக பிருஹ்மவித்துக்களுக்கு அதிசயசக்தி உள்ள போதிலும், ஆபத்துக் காலத்திலே ஸர்வான்ன அநுமதியிருக்கிறபடியாலே, அதேபடி பிராண வித்யா நிஷ்டனுக்கு-அல்ப சக்தியிருப்பினும், ஸர்வான்ன அநுமதி ஆபத்துக் காலத்திலே, நிச்சயமாகக் கொள்ளலாம்.

ஸித் ஸூத் अपि स्मर्यते (3-4-30)

அபிஸ்மர்யதே (do)

ஸ்மர்யதே அபி-இந்த விஷயம் ஸ்மிருதிகளிலிருந்தும் தெரிய வருகிறது.

மேலும் - ஆபத்து விஷயத்திலேயே, ஸர்வாந்நம் பிருஹ்ம வித்துக்களுக்கும் ஸ்மிருதிகளில் ஓதப்படுகிறது - प्राण संशय मापन्नोयोऽन्नमत्ति यतस्ततः । लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा -

உயிர்போகும் சமயம் வித்வான் நிஷித்த அன்னத்தை உண்டா லும் அவனுக்குப் பாபம் ஸம்பவிக்கமாட்டாது-தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாதது போல-(அதாவது ஆபத்தில் ஸர்வ ஆகாரம் சாப்பிடலாம்.)

ஸி. ஸூ. शब्दश्चातोऽकामकारे (3-4-31)
சப்தாஸ்சாதோऽகாமகரே (3-4-31)

அதஸ்ச - அதனாலே, காமகாரே சப்த:-இஷ்டப்படி செய் வதைத் தடுக்கும் வேதவாக்யம் சரியாகும்.

எப்படி ஸர்வாந்நம் ஆபத்துக் காலத்திலே பிருஹ்மவித்துக்க ளுக்கும்-அன்னியர்களுக்கும் அனுமதிக்கப்படுகிறதோ-அதுபோல (அதே காரணத்தினால்) சுருதி வாக்யமும் எல்லாப் பேர்களையும் உத் தேசித்து தம் இஷ்டப்படி சாப்பிடுதலைத் தடுக்கும்படி कामकारस्य प्रतिषेधकः शब्दो ஏற்பட்டிருக்கிறது. வாஸ்தவத்திலே, கதா (கடா) ஸம்ஹிதையிலே, தம் இஷ்டப்படி சாப்பிடுதலைத் தடுத்து காணப்படுகிறது. तस्माद् ब्राह्मणः सुरां न पिबति पाप्मना नोत्सृजा इति - அதனால் பிராம்மணர்கள் சுராபானம் செய்வதில்லை-பாபம் தீண்டாமல் இருக்கும் பொருட்டு. இதனால் என்ன அர்த்தம் தெளிவாகிறது என்றால், "எனக்கு பாபம் ஸம்பவிக்காமல் யேற் படட்டும்," என்று எண்ணி பிராம்மணர்கள் கள்ளை அருந்துவ தில்லை-என்பதாகும். (எல்லோருக்கும் என்பதால் பிருஹ்மவித்யை நிஷ்டன்-பிராணவித்யை நிஷ்டன்-இவர்களுக்கும் பொருந்தும்)

அதிகரணம்-8 விஹிதத்வாதிகரணம் (3-4-8)

ஸி. ஸூ. विहितत्वाच्चाश्रमकर्मापि (3-4-32)
விஹிதத்வாச்சாஸ்ரமகர்மாபி (3-4-32)

பிருஹ்ம வித்யைக்கு அங்கமான யக்ஞாதி கர்மங்கள் ஆஸ்ரம கர்ம அபி-கிருஹஸ்தாஸ்ரமத்திலிருப்பவர்களுக்கும் அனுஷ்டிக்கப் படவேண்டிய கர்மங்களே ஆகும். விஹிதத்வாத் ச - (அவர்களைக் குறித்தும்) விதி சொல்லப்படுவதாலே.

நாம் ஏற்கனவே சொல்லிவிட்டோம்-பிருஹ்ம வித்யைக்கு யக்ஞாதி கர்மாக்கள் அங்கமாகும். சரி-இந்த கர்மாக்கள் மோக்ஷத்தில் விருப்பமில்லாதஅமுமுக்ஷுக்களால் (அது போல) கேவல ஆஸ்ரம தர்மங்களைச் செய்பவர்களாலும் (கிரஹஸ்தர்கள்) - அனுஷ்டிக்கப்பட வேண்டுமா-அல்லது இல்லையா-என்கிற சிந்தனை இங்கு சொல்லப்படுகிறது. பிருஹ்மவித்யா அங்கமாக விருப்பவை கேவல ஆஸ்ரம தர்மங்களுக்கு அடங்கினவையாக விருக்குமானால், அதனாலே நித்ய நைமித்திக கர்மாக்களின் சேர்க்கையில் விரோதம் யேற்படும்; என்று சொல்லக் கூடுமானால், அதனால் யாகங்கள் முதலியவை கேவல ஆஸ்ரம தர்மங்களைச் செய்யும் கிரஹஸ்தர்களுக்கு தர்மங்களாக (धर्मत्र) ஆகமாட்டாது-என்று சொல்லக்கூடுமானல் - அதற்கு நாம் பதில் கூறுவது - आश्रमकर्मापि) — கிருஹஸ்தர்களுக்கு ஆஸ்ரம தர்மங்கள் (கர்மாக்கள்) அனுஷ்டிக்கப்பட வேண்டியதே. आश्रमस्य कर्मापि भवति (யாக யக்ஞங்கள் செய்யப்பட வேண்டியதே. (கிருஹஸ்தர்களுக்கு) கேவல ஆஸ்ரம தர்மிகளாதலால் அனுஷ்டிக்கப்பட வேண்டியவை என்று அர்த்தம். ஏனெனில் அவைகளை இந்த சுருதியில் விதிக்கப்பட்டிருக்கிறது - यावज्जीवमग्निहोत्र जुहोति - உயிருள்ளவரை அக்னிஹோத்ரம் செய்யப்பட வேண்டியது என்று விதியாகச் சொல்லப்பட்டிருப்பதாலே. ஜீவன நிமித்த காரணத்தாலே - சரீர சம்பந்தம் வரை இந்த கர்மம் விடாது-செய்தே தீரவேண்டும். நித்ய கர்மாக்களை-ஜீவன நிமித்தமாகவே செய்து தீரவேண்டியதாகும்.

அவ்விதமே, இந்த விஹித ஆஸ்ரம தர்மங்கள் பிருஹ்ம வித்யைக்கு அங்கமாக விருப்பதால், இவைகளை வேத வாக்யங்களில் விதிக்கப்பட்டிருப்பதால், तमेत वेदानुवचनेन - பிரு. உ. 4-4-22) பரமாத்மாவை வேதங்களை ஓதி அறிய வேண்டியிருப்பதாலே, வித்யா அங்கமாக (கிரஹஸ்தர்களால்) அனுஷ்டிக்கப்பட வேண்டும். (அனுஷ்டானம் நித்யமாகும் - எப்போது மோக்ஷத்தில் இச்சையில்லாவிடினும், க்ருஹஸ்தர்கள் யாவரும் அனுஷ்டிக்கவேண்டும் என்பதால்; மோக்ஷ ஆசை இல்லாதவர்கள் அனுஷ்டியாமல் இருக்கலாமாகையால், அனுஷ்டானம் அநித்யமாகும். இவ்விதம் விரோதம் யேற்படும்.) இந்த விரோதம் ஏற்படாமலிருக்க - கிரஹஸ்தர்கள்

அனைவரும் விதிக்கப்பட்டபடி-யாவஜ்ஜீவம் அக்னி ஹோத்ராதிகளை அனுஷ்டிக்க வேண்டியது. கிருஹஸ்த தர்மத்துக்கு அங்கமாக அனுஷ்டிப்பதாக சங்கல் பித்துக் கொண்டு, அனுஷ்டிக்க வேண்டியது-யாக யக்ஞாதி கர்மாக்கள் கிரஹஸ்த ஆஸ்ரமத்திற்கு அங்கமாகும்., அதனுல் அனுஷ்டிக்கப்பட வேண்டும்). இதற்கு சூத்ரக்காரரே பதில் கூறுகிருர். அடுத்த சூத்திரத்திலே

**ஸி. சூத். सहकारित्वेन च (3-4-33)**

**ஸஹ காரித்வேந ச (do)**

*ஸஹ காரித்வேநச-பிருஹ்ம வித்யை உண்டாவதற்கு உறுப்பாகவும் யக்ஞாதி கர்மங்கள் அனுஷ்டிக்கத் தக்கவையே (விஹிதத்வாத்- அப்படியும் விதிக்கப்பட்டிருப்பதால்)*

ஒரேகர்மா பிருஹ்ம வித்யை உண்டாவதற்கும் - (அனுகூலமாக) ஆஸ்ரமதர்ம மாகவும் அமைவதற்கும் அனுஷ்டிக்கபடலாம். வித்யோத் பத்தி வழியினுல் வித்யா ஸஹகாரியாக-அனுஷ்டிக்கப்படலாம். உதாரணமாக அக்னிஹோத்ரம் முதலிய நைமித்திக கர்மாக்கள் ஆயுட்பரியந்தம் செய்யப்படவேண்டும் அதனுல் ஸ்வர்க்க அதிகாரம் உண்டாகலாம். விநியோக முறையில் வேருக விருப்பது – அதனுல் உண்டாகும் உபய (இரண்டு) அர்த்தம் ஸம்பவிக்கலாம் ஒரே கர்மாவுக்கு. (அக்னி ஹோத்ரத்தைக் காம்யமாகச் செய்தால் ஸ்வர்க்கபலனும்; பகவத் ஆராதனையாகச் செய்யப்படுவதால்-மோக்ஷம் ஸித்திக்கலாம். இதில் விரோதமில்லை. விநியோகம் தான் வேறு என்பதாகும்.)

(இங்கு சொல்லப்படுவது - ஆஸ்ரம தர்மங்கள் (கிரஹஸ்த தர்மங்கள்) அக்னிஹோத்ரம் போன்றவை யாவஜ்ஜீவம் செய்யப்படவேண்டும். மோக்ஷ ஆசையுள்ளவர்களுக்கு பகவத் ஆராதனையாக ஆஸ்ரமதர்மங்களைச் செய்தால் பிருஹ்ம வித்யைக்கு ஸஹகாரியகாரணமாகலாம் அதே கர்மம் இன்னெரு பலனுக்காகவும் (அக்னிஹோத்ரம் பகவத் ஆராதனையாகவும், ஸ்வர்க்க ஆசையுள்ளபடியால் இரண்டும் ஒரே கர்மாவுக்கு) யேற்படலாம். (அதாவது கர்ம ஸ்வருபத்தில் வேறுபாடு இல்லை) எனக் கொள்ளவேண்டும்.

அதனாலே கர்மாக்களிலே வேறுபாடில்லை. இவ்விதம் உபய நோக்கங்களுக்கு உபயோகம் ஏற்படுவதால், வேறுபாடில்லை கர்ம ஸ்வருபத்திலே-இதற்கு சூத்ரக்காரர் பதில் சொல்கிறார்.

**ஸி. சூ. सर्वथापि त एवोभयलिङ्गात् (3-4-34)**

**ஸர்வதாபி த ஏவ உபயலிங்காத் ( do )**

ஸர்வதா அபி - எவ்வித மிருப்பினும் (அதாவது பிரஹ்ம வித்யாங்கமாகவோ, க்ரஹஸ்த ஆஸ்ரமாங்கமாக தர்மமாகவோ, தேஏவ-யக்ஞம் முதலானவை அவையே; உபயலிங்காத்-இரண் டிலும் யக்ஞாதி சப்தங்களாகிற அடையாளம் காணப்படு கையால்:- (கர்மஸ்வரூபம் வேறுபடுகிறதில்லை)

**सर्वथा** - பிருஹ்மவித்யைக்காகவோ - ஆஸ்ரம தர்மங்களுக் காகவோ-தே **एव**-யக்ஞாதிகள் அவையே யாகும். இதனால் கர்ம ஸ்வரூபம் வேறுபடுகிறது (பேத) என்று அர்த்தமில்லை. அதெப்படி யெனில் **उभयलिङ्गात्** இரண்டு இடங்களிலும் சுருதிகள் யக்ஞாதி சப்தங்களாகிற அடையாளங்களை (லிங்கங்களை) ஞாபகப்படுத்து வதால். இதனால் கர்ம ஸ்வருபம் வேறுபடுகிறது என்பதற்கு பிரமாணம் இல்லாதபடியாலே, அதனால் பிரும்ம வித்துக்களுக்கு இரண்டுவித அனுஷ்டானம் யேற்படுகிறதில்லை.

(இங்கே சுருதிலிங்கம்-தமேதம் வேதாநு வசனேந பிராஹ் மணா விவிதிஷந்தி. (வேதன இச்சையில்) விநியோகப்படுகிறதே யொழிய மாஸமக்னி ஹோத்திரம் ஜூஹ்வதி-என்பதைப் போல புதிய ஸ்வரூபம் உண்டாவதில்லை. (சாங்கர பாஷ்யத்திலே இரண்டு இடங்கள் என்பதற்கு லிங்கங்களாக சுருதி ஸ்மிரு தியில் காட்டப்பட்டிருக்கின்றன) அக்னிஹோத்ரம் யாவஜ்ஜீவம்- என்பதால் அக்னி ஹோத்ரம் ஆஸ்ரமதர்ம அங்கமாகச் சொல்லப் படுகிறது. யாவஜ்ஜீவ ஸ்ருதியிலும்-யக்ஞாதி ஸ்ருதியிலும்-ஒரே விதியாக விருப்பதாலே, இந்த இரண்டு சுருதி வாக்யங்களிலும் கர்ம ஸ்வரூப பேதமில்லை என்பதாகும்.

**ஸி. சூ. अनभिभवं च दर्शयति (3-4-35)**

**அநபிபவம் ச தர்ஸயதி ( do )**

அநபிபவம் ச-வித்யை உண்டாவதற்கு பாபகர்மங்களால் யேற்படும் தடை நீங்குவதையும், தர்ஸயதி - யக்ஞாதி பலமாக

வேத வாக்யம் காட்டுகிறது. (இங்கு கேவலம் கர்ம ஐக்யமில்லை அதேமாதிரிபல ஐக்யமுமில்லை. நிதிய அக்னிஹோத்ரத்திற்கு பாபக்ஷயம் நித்யபலம். காம்யபலம் ஸ்வர்க்காதி லோகங்கள். என்பதால் பேதம் இருக்கிறது. இங்கே பிருஹ்ம வித்யைக்காகச் செய்யப்படும் கர்மாக்கள் உபகாரம் செய்வது எங்கனமெனில்- வித்யா உற்பத்தியின் தடைகளை பிரதி பந்தகங்களை நீக்குவதாம். தர்மத்தால் பாபம் க்ஷயமடைகிறது-பிருஹ்ம வித்யையினுல் மிருத்யுவைத் தாண்டுவதால், பாபக்ஷயம் யேற்படுகிறது)

(தை. நா) धर्मेण पापमपनुदति - தர்மத்தினுல் அவன் பாபங்களை நாசமடையச் செய்கிறுன் -என்பவைகளால் சுருதி யக்ஞாதி கர்மாக்களைக் காட்டி, இதனுல் யாக யக்ஞாதிகளால் வித்யைக்கு தடையை நீக்குகிறது-எவ்விதமெனில் अग्नि भव- தடை நீங்கப் படுகிறது (வித்யா உற்பத்திக்கு-) இவை-தடைகள் பாபகர்ம ரூபத்வ பலன்களாகும்)-பாபகர்மாக்களால் யேற்படும் பிரதிபந்தகங்களை நீக்குகிறது. தினந்தோறும் கர்மாக்கள் அனுஷ்டிக்கப்படுவதால் சித்தசுத்தி யேற்படுகிறது. அதனுல் வித்யை உண்டாகிறது. ஆகவே இதே காரணத்தினுல் இரு விடங்களிலும்-வித்யாங்கமாகவும் ஆஸ்ரம அங்கமாகவும் ஒரே கர்மா உபயோகப்படுவதால், வித்யை ஆஸ்ரம தர்மத்துக்கும் - அதே யக்ஞாதிகளே அங்கமாகின்றன. அதாவது ஆஸ்ரம தர்மங்கள் வித்யோத்பத்திக்கும், அங்கமாகவும் இருக்கின்றன. (இந்த விஷயம் லகு சித்தாந்தத்தில் ஜிக்ஞாஸாதிகரணத்தில் சொல்லப் பட்டதாகும்.)

### விதுராதிகரணம் (3-4-9)

ஸி. ஸூ. अन्तरा चापि तु तद्दृष्टेः (3-4-36)

அந்தரா சாபிது தத்திருஷ்டே: ( do )

அந்த்ரா அபிச (ஆஸ்ரமங்களுக்கு) நடுவிலிருக்கும் அநாஸ்ரமிகளுக்கும் (விதுரன்-அநாஸ்ரமி)-ஸமாவர்த்தனம் பண்ணியவன்) பிருஹ்ம வித்யையில் அதிகாரம் இருக்கவே செய்கிறது; தத்திருஷ்டே:-(ரைக்வர் பீஷ்மர் முதலான) அநாஸ்ரமிகள் வித்யா நிஷ்டராயிருக்கக் காண்கையால்.

ஸங்கதி - இதுவரை சொல்லப்பட்ட விஷயம் - பிருஹ்மசாரி கிருஹஸ்தன், வானபிரஸ்தன், சந்யாஸி-என்கிற நான்கு ஆஸ்ரம நிஷ்டர்களுக்கும் பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு என ஸ்தாபிதம். இப்போது பத்னியைஇழந்த விதுரர்களுக்கு வித்யை யில் அதிகாரமில்லை என்கிற வாதம் இந்த அதிகரணத்தில் தள் ளப்படுகிறது. விதுரன் - கிரஹஸ்தனுயிருந்தவன் - மனைவியை யிழந்து வானப்ரஸ்த சந்யாஸி ஆஸ்ரமங்களில் புகராமல்-எல்லா வற்றையும் ஸ்மாவர்த்தனம் செய்தவன்-விதுரனுகும். சங்கரபாஷ் யத்தில் திரவியம் முதலிய முதலிய சம்பத்து இல்லாதவர்களும், வேறு எந்த ஆஸ்ரம பிராப்தியுமற்றவர்களும் (ஆனது பற்றி இரண்டு ஆஸ்ரமங்களுக்கு) நடுவிலே இருக்கும் விதுராதிகளுக்கு-பிருஹ்மவித்யையில் அதிகாரம் உண்டு-ரைக்வர் பீஷ்மர் வாசக்னவீ முதலியோருக்கும் பிருஹ்ம வித்வத்தைச் சொல்லும் சுருதி யிருப்பதே அதன் காரணமாகும். ஆஸ்ரம அபேக்ஷயில் லாத ஸ்ம்வர்தகர் முதலானவர்களுக்கு மஹாயோகித்வம் இதி ஹாஸத்தில் (ஸ்காந்தம் காசீ காண்டத்தில்) சொல்லப்பட்டிருக் கிறது.) ஆகவே விதுரர்களுக்கும் பிருஹ்ம வித்யையில் பூர்ண அதிகாரம் உண்டு என ஸ்தாபிக்கப்படுகிறது )

ஸ்ரீ பாஷ்யம்

மேலே சொல்லப்பட்டது-நான்கு ஆஸ்ரமவாசிகளான கிர ஹஸ்த பிருஹ்மசாரி-வானபிரஸ்த சந்யாஸி ஆகிய நான்கு பேர் களுக்கும் பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு என ஸ்தா பிதம்-பிருஹ்ம வித்யைக்கு ஆஸ்ரம தர்மங்களின் அனுஷ்டானம் ஸஹகாரிகத்வம் உண்டு எனவும் சொல்லப்பட்டது. ஆனுல் எவர் கள் இந்த நான்கு ஆஸ்ரம தர்மங்களுக்கு உட்படாமல் இடை யிலே யிருக்கும் அநாஸ்ரமிகள், (வைதவ்யர்கள் அதுபோல மற்ற வர்கள் ஸமாவர்த்தனம் செய்தவர்கள்) பிரும்மசாரிகள் ஸமா வர்த்தனம் செய்து கல்யாணம் ஆகாதவர்கள்) அவர்களுக்கு களுக்கு ஆஸ்ரம தர்மங்கள் உண்டா இல்லையா என்கிற விஷயம் இங்கு ஆராயப்படுகிறது. அவர்களுக்கு அதிகாரமில்லை-ஏனெனில் ஆஸ்ரம தர்மங்கள் இல்லாதபடியால் (மனைவியை இழந்தவன்-மற்ற பிரும்மசாரிகள் - கல்யாணமாகாதவாகள்). இவ்விதம்

சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுகிறோம் - अन्तरा चापि तु इति- அநாஸ்ரமிகளாக விருப்பினும்-அதிகாரம் உண்டு (ஆஸ்ரம தர்மங்களுக்கு புறம்பானவர்களான இவர்களுக்கு அதிகாரம் உண்டு என்பதாகும்). து சப்தம் பூர்வபக்ஷத்தைத் தள்ளுகிறது-என்று அர்த்தம். च சப்தம் அவதாரண (உறுதி படுத்தும்) சப்தம். अन्तरा- ஆஸ்ரம தர்மங்களுக்கு புறம்பானவர்கள்-ஒருவித ஆஸ்ரம தர்மங்களைச் செய்யாதவர்கள்-அவர்களுக்கும் பிருஹ்ம வித்யைக்கு அதிகாரமுண்டு. எப்படி ? तद् दृष्टेः - சுருதிகளில் அவ்விதம் அதிகாரம் உண்டு என்று ஓதப்படுவதாலே. புராணங்களிலும் காணப்படுகின்றன-சில உதாரணங்கள். ரைக்வர், பீஷ்மர் ஸம்வர்த்தகர் முதலான அநாஸ்ரமிகளும் பிருஹ்ம வித்யா நிஷ்டர்களாவார்கள். ஆஸ்ரம தர்மங்கள் பிருஹ்ம வித்யைக்கு அங்கமாகி, வித்யை உண்டாவதற்கு அனுக்ரஹிக்கின்றன என்று சொல்வதற்கு முடிகிறதில்லை. பிரு. 2. 6-4-12 यज्ञेन दानेन तपसाऽनाशकेन- யாகத்தினாலும் தானத்தினாலும் தபஸ்ஸினாலும் - உபவாசம் முதலிய விரதங்களை அனுஷ்டிப்பதாலும், என்கிற தர்மங்கள் ஆஸ்ரம தர்மங்களுடன் சேர்ந்து காணப்படாவிடினும், பிருஹ்மவித்யா உத்பத்திக்கு உதவி புரிகிறதாகக் காணப்படுகிறது. எப்படி ஊர்த்தவ ரேதஸ்கள் விஷயத்திலே, அவர்கள் வித்யா நிஷ்டர்களாகக் காணப்படுவதாலும், அக்னி ஹோத்ரம் முதலான கர்மாக்களுக்கு வ்யதிரேகமாக (வேறாக) விருக்கும் கர்மாக்களிலிருந்தும் பிருஹ்மவித்யா உற்பத்தியாகிறது என்று காணப்படுகிறது. அதே பிரகாரம் அநாஸ்ரமிகள் விஷயத்திலும் பிருஹ்ம வித்யை இருக்கிறதாகக் காணப்படுகிறது. ஆகையால் வித்யை ஜப உபவாஸ தான தேவதா ஆராதனம் முதலிய கர்மாக்களினால் உதவிபெற்று உண்டாகிறது இவை எல்லாம் பொதுவான கர்மாக்கள்-குறிப்பிட்ட ஆஸ்ரமிகளுக்குத்தான் சொந்தம் என்று சொல்வதற்க்கில்லை.

(இங்கு கூறப்பட்ட உதாரணங்கள்-ரைக்வர்-சாந். உபநிஷத்தில் ஸம்வர்க்க வித்யையில் ஜானஸ்ருதி என்கிற அரசன் ரைக்வரை அண்டி உபதேசம் பெற்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. இவர் பிரும்மசாரியாக வித்யாப்யாஸத்தை ஸமாவர்த்தனம் செய்து கல்யாணமாகாமல் இருந்ததாகவும் ரைக்வர் அரசனின்

பெண்ணைக் கல்யாணம் செய்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்வர்தகர்-பிருஹஸ்பதியின் சஹோதரர்-காட்டில் அவதூதராக விருந்து மாந்தாதாவுக்கு யாகம் செய்வித்ததாகவும்-இந்திரன் அதனை தடுத்து-வஜ்ர பிரயோகம் செய்ய நினைக்க, ஸம்வர்த்தகர் தமது தபோபலத்தினால் இந்திரனுடைய கையை வஜ்ரத்துடன் ஸ்தம்பனம் செய்து விட்டார். பீஷ்மர் மஹாபாரதத்தில் பிரசித்த பெற்றவர், பாண்டவர்களுக்கு பிதாமஹர் - இவர்கள் பிரும்ம சாரிகள் அல்ல, கிரஹஸ்தர்களல்ல, வானபிரஸ்த சந்யாஸிகளு மல்ல).

ஸி ஸூ. अपि स्मर्यते (3-4-37)

அபிஸ்மர்யதே ( do )

ஸ்மர்யதே அபி-(அநாஸ்ரமிகளுக்கு ஜப தானம் முதலியவை களே பிருஹ்ம வித்யாங்கமாகின்றன என்று) ஸ்மிருதிகளும் ஓதுகின்றன.

अपि च-அநாஸ்ரமிகள் விஷயத்திலும் கூட ஜபம் முதலியவை களே பிருஹ்ம வித்யை உற்பத்தி செய்வதற்கு உதவுகின்றன என்கிற விஷயம் ஸ்மிருதிகளிலும் ஓதப்படுகிறது-மனு-2 87ல் जप्येनापि च संसिद्ध्येत् ब्राह्मणो नात्र संशयः। कुर्यादन्यन्न वा कुर्यात् मैत्रो ब्राह्मण उच्यते பிருஹ்ம வித்யா நிஷ்டன் ஜபத்தினால் சித்தி யடைகிறான்; இதில் சந்தேகம் யாதுமில்லை. எதைச் செய்தாலும் சரி-செய்யாவிடினும் சரி, பிருஹ்ம வித்யையில் ஊன்றி யிருப் பவன் எல்லாப் பிராணிகளுக்கும் மித்ரன் ஆகும். संसिद्ध्येत्-ஜபம் முதலிய ஸாதனங்களால் அநுக்ரஹிக்கப்பட்டு-பிருஹ்மவித்யை ஸித்திக்கிறது என்று அர்த்தமாகும்.

(இதனால் வித்யை கேவலம் யாகம் முதலிய கர்மாக்களினால் மாத்திரம் உண்டாகப்படமாட்டாது-தபம்-உபவாஸம் இத்யாதிக ளாலும் உதவி பெற்று, வித்யை உண்டாகக்கூடும். இந்த தபம்-உபவாஸம் பொதுவானவை எல்லா ஆஸ்ரமிகளுக்கும் சொந்தம். சுருதி பிரகாசிகையில், சாதுர் வர்ணய ஆஸ்ரம தர்மங்களைப் போல, ஜாதி தர்மங்களும் உபயோகமுள்ளவை. இதனால் தெரிய வரும் - ஏதாவது ஒரு ஆஸ்ரம தர்மங்களைப் பண்ண வேண்டியது-என்கிற நியமம் இல்லை)

## ஸி. ஸூ. विशेषानुग्रहश्च (3-4-38)
## விசேஷாநுக்ரஹஸ்ச (-do)

*விசேஷ அனுக்ரஹ: ச-(அநாஸ்ரமிக்கு உரிய தர்ம) விசேங் களாலும் (வித்யைக்கு' அனுக்ரஹம் (உண்டாவதாக ஓதப்படு கிறது).*

நியாயத்தினுலும், ஸ்மிருதியினுலு; மேல்சொல்லப்பட்ட தீர் மானம் (முடிவு) ஏற்படுகிறது கேவலம் - ஆஸ்ரம தர்மங்களால் அடையப்பெறும் என்பது இல்லை. சுருதிகளிலே அநாஸ்ரமிகளுக்கு ஏற்பட்ட தர்ம விசேஷங்களால் வித்யானுக்ரஹம் ஏற்படுகிறது என்றும் ஒதப்படுகிறது. (இந்த அதிகரணத்தில் முதல் சூத்ரத்தால் நியாயத்தைக் கொண்டும், 2வது சூத்திரத்தால் ஸ்மிருதியைக் கொண்டும், அநாஸ்ரமிகளுக்கு வித்யையில் அதிகாரம் உண்டு என்று ஸாதித்தற்கு மேலே சுருதியைக் கொண்டு இதே அர்த்தம் ஸாதிக்கப்படுகிறது). பிரஸ் உ.1-10ல் तपसा ब्रह्मचर्येण श्रद्धया विद्ययाऽऽत्मानमन्विष्य ஆதித்யமபி ஜயந்தே காயத்தை வாட்டும் தபசாலும், பிருஹ்மசர்ய விரதத்தாலும், ஆஸ்திக புத்தி சிரத்தை முதலியவைகளாலும் ஜீவாத்மா வித்யை யாலும் பரமாத்மாவை உபாஸித்து (பிருஹ்மத்தை அடைவதற்கு வாயிலான) சூர்யனை அடைகின்றனர் - என்கிற வேதவாக்யம் ஆஸ்ரம தர்மங்களான யாகாதிகளிலும் வேறுபட்ட அநாஸ்ரமி களுக்குரிய தர்ம விசேஷங்களாலும் பிருஹ்ம வித்யை அடையப் பெறும் என்று ஓதுகிறது. ஆகவே அநாஸ்ரமிகளுக்கும் பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு என்பதாகும்.

## ஸி. ஸூ. अतस्त्वितरज्ज्यायो लिङ्गाच्च (3-4-39)
## அதஸ்த்வீதரத் ஜ்யாயோலிங்காஸ்ச்ச (do)

*அத: இதரத்து (அநாஸ் ரமித்வத்தைக்காட்டிலும் வேறு பட்ட ஆஸ்ரமித்வமே ஜ்யாய:-சிறந்தது. லிங்காத்ச (அதற்குகுறிய அடையாளங்கள்) ஸ்மிருதியில் காணப்படுகின்றன.* (இங்கு அபிப் ராயம் யாதெனில் அநாஸ்ரமியாக விருப்பது ஆபத்து தர்மமாகும் கிருஹஸ்தனுக விருந்து ஆஸ்ரம தர்மங்களை கைக்கொள்வது எப்போதும் மேல்; அதே போல பிருஹ்மசர்யம் நிரம்பப்பெற்று

வித்யா ஸமாவர்த்தனம் செய்தவன் ஆபத்துக்காலத்திலே அநாஸ்ரமியாக விருக்கலாம்.-அதாவது ஆபத்தில்லாமல் அநாஸ்ரமியாக விருக்கக் கூடாது).

து சப்தம் அவதாரண சப்தமாகும்-அதாவது ஆஸ்ரமியாக விருந்து அதன் தர்மங்களை அனுஷ்டிப்பதே மேலானதாகும் अतः-अनाश्रमित्वात्-ஆஸ்ரமதர்மங்களுக்குப் புறம்பாக விருப்பது அநாஸ்ரமியாக விருப்பது; इतरत्-ஆஸ்ரமியாக வாழ்வதே மிக உயர்ந்தது. ஆபத்துக் காலங்களிலே அநாஸ்ரமியாக விருப்பது சரியாகும் சக்தியிருப்பவன் ஆஸ்ரமியாக வாழ்வதே உயர்ந்ததாகிறபடியால் பல தர்மங்கள் கொண்ட ஆஸ்ரம தர்மங்களை கடைப்பிடித்தலே மேலானதாகும், என்கிற அர்த்தம் ஸித்திக்கும். அதேபடி குறைந்த தர்மங்களுள்ள அநாஸ்ரமிகளை அவர்களுக்குச் சமமாகச் சொல்ல முடியாது-சக்தியுள்ளவனாக விருப்பின். (அதாவது கிருஹஸ்தனாக விருப்பினும் வைராக்யம் யேற்பட வேண்டியது பிருஹ்ம வித்யைக்கு; அநாஸரமிகளுக்கு அவரவர்களுடைய தானம்-ஜபம் இத்யாதி தர்மங்களைச் செய்ய வேண்டியது-இவை ஆபத்து தர்மங்களாகும்.) கிரஹஸ்த தர்மங்களுக்கு சமமாக அநாஸ்ரமிகளைச் சொல்லக்கூடாது. लिङ्गाञ्च இங்கு ஸ்மிருதிகள் என்று அர்த்தம். ஸ்மிருதிகளில் ஒதப்பட்டிருக்கிறது - யாருக்கு சக்தியிருக்கிறதோ அவர்களால் ஆஸ்ரமங்கள் ஒப்புக்கொள்ளப்படவேண்டும் - உபயோகமுள்ளதாக ஏற்க வேண்டும்-இது பற்றி கீழ்கண்ட ஸ்மிருதி வசனங்களே பிரமாணம்-த.ஸ். 1-16-अनाश्रमी न तिष्ठेत्तु दिनमेकमपि द्विजः- பிராம்மணன் ஒரு நாள் கூட தவறுமல் ஆஸ்ரமமில்லாதபடியிருக்கக் கூடாது. ஸ்நாதகன் பிரும்மசாரியாக விருந்து நிவிருத்தி தர்மத்தை அனுஷ்டிப்பவனாகவும், அதேபோல மனைவியை இழந்த விதுரன் தாரத்தை அடையாமலிருப்பதும் வைராக்யமடைவதும் பிரியாபிரியங்களிலிருந்து விடுதலை பெறுதலும்-ஆபத்துக் காலத்திலே சரியாகும். (आपत्) வித்யா நிஷ்டனுக்கு அதிக தர்மங்களால் ஏற்படும் உதவியே சிறந்தது. அநாஸ்ரமியாயிருப்பதைவிட ஆஸ்ரமியாகவிருப்பதே சாலச்சிறந்தது. மனுஸ்மிருதி-தக்ஷஸ்மிருதி இந்த அபிப்ராயத்தைக் கூறுகிறது-ஆபத்தில்லாத போது தவிர பிராம்மணன் அநாஸ்ரமியாக விருக்கக்கூடாது என்பதாகும்.

## தத் பூதாதிகரணம் (3-4-10)

ஸூ. சூ. तद्भूतस्य तु नातद्भावो जैमिनेरपि नियमात्
तद्रूपाभावेभ्यः (3-4-40)

**தத்பூதஸ்ய து நாதத்பாவோஜைமி நேரபி நியமாத்**
**தத்ரூபா பாவேப்ய: (3-4-40)**

*தத்பூதஸ்யது-நைஷ்டிக பிரும்மசாரி, வாநபிரஸ்த, சந்யாஸி ஆஸ்ரமங்களில் இருப்பவனுக்கு, அதத்பாவ: ந-அந்த ஆஸ்ரமதர் மங்களிலிருந்து நழுவுதல் சரியாகாது. தத்ரூபா பாவேப்ய: நியமாத் - அவர்களுக்கு அந்த அந்த ஆஸ்ரம தர்மங்களிலிருந்து நழுவுதலை சாஸ்திரம் சம்மதிக்கவில்லை; அதாவது சாஸ்திரம் கட்டுப்படுத்துகின்றன. ஜைமிநே அபி - ஜைமிநியின் கருத்தும் இதுவேயாகும். (ஆஸ்ரமி அநாஸ்ரமியாக விருக்கக்கூடாது - பதிதனாக விருக்கக்கூடாது).*

*நைஷ்டிக பிரும்மசாரி, வைகானஸ (வான பிரஸ்தன்) பரிவ்ராஜக (சந்யாஸி) ஆஸ்ரம தர்மங்களிலிருப்பவர்கள் அந்த அந்த ஆஸ்ரம தர்மங்களிலிருந்து நழுவிப் போய் பதிதர்களாக விருப்பார்களாகில், (நழுவிப் போனவர்கள்) அவர்களுக்கு பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டா இல்லையா என்கிற விஷயம் சிந்திக்கப்படுகிறது. விதுரனைப்போல் (அநாஸ்ரமி) தான தர்மங்களால் (இவை குறிப்பிட்ட ஆஸ்ரம தர்மங்களல்ல-பொதுவாக எல்லா ஆஸ்ரமிகளும் செய்ய வேண்டியது) பிருஹ்ம வித்யையை சம்பாதிப்பது-எப்படி யேற்படுகிறதோ, அதேபோல் மற்ற ஆஸ்ரமிகளும் தான தர்மங்களின் உதவி பெற்று பிருஹ்ம வித்யையை அடையக்கூடுமே - அதனால்* तद्भूतस्य तु नातद्भाव *அதத்பாவ: ந)-அந்த ஆஸ்ரம தர்மங்களிலிருந்து நழுவுதல் பிரும்மசாரி-வாநபிரஸ்த-சந்யாஸி ஆஸ்ரமிகளுக்கு) சரியல்ல.* तु *சப்தம் பூர்வபக்ஷியின் கருத்தைத் தள்ளுகிறது-தத்* भूतस्य*-நைஷ்டிகாதி ஆஸ்ரம நிஷ்டன்,* नातद्भावः *- நழுவுதல் சரியில்லை. அவர்களுக்கு அநாஸ்ரமியாக விருப்பது-சரியாகாது. ஏன்? ஏனெனில்* तद्रूपाभावेभ्यो नियमात् *- சாஸ்திரங்கள் அவர்களை அவரவர்களின் ஆஸ்ரம தர்மங்களால் கட்டுப்படுத்துகின்றன-நழுவுதல் ஒப்புக்*

கொள்ளப்படமாட்டாது. (இது ஜைமிநி மஹரிஷியின் கருத்து). तेषामभावः तद्रूपाभावः - சாஸ்திரங்கள் நழுவுதலை ஒப்புக் கொள்ளவில்லை. रूपा: நைஷ்டிகனின் ரூபங்கள் (ஆஸ்ரம தர்மங்கள்); அது போல மற்றவர்கள் (பதிதர்கள்-விதுரன்) இவர்கள் தங்கள் தங்கள் ஆஸ்ரம தர்மங்களை செய்யாமல் விருப்பார்களே யானல்-சாஸ்திரம் தடுக்கிறது-சா. 2. 1-23-1ல் ब्रह्मचार्याचार्यकुलवासी तृतीयोऽत्यन्तमात्मानमाचार्यकुलेऽवसादयन् தர்மத்திற்கு மூன்ருவதான ஆதாரம் - நைஷ்டிகன் - குருவின் வீட்டிலேயே தங்கி காயக்லேசம் தபத்திஞல் செய்கிருன். அதேபடி வாநப்ரஸ்தனுக்கு-अरण्य मियात्; (காட்டிற்குச் சென்று தபஸ் செய்ய வேண்டியது) ततो न पुनरेयात् - அதிலிருந்து நழுவக்கூடாது. संन्यस्याग्निं न पुनरावर्तयेत् — அக்னியைப்பரிதியாகம் செய்து விட்டு-அவன் தன் ஆஸ்ரமத்திலிருந்து நழுவக்கூடாது. ஆகையால் அநாஸ்ரமியான விதுரனைப்போல நைஷ்டிகனுக்கும் மற்றவர்களுக்கும் தர்மங்களை விடுதல் சொல்லப்படவில்லை (அனுஷ்டிக்க வேண்டியது) நழுவினவர் களுக்கு பிருஹ்ம வித்யையில் அதிகாரமில்லை. ஜைமிநியும் கூட இவ்விதம் அபிப்ராயப்படுகிருர் அவருடைய சம்மதி உண்டு என்று சொல்லி - சூத்ரக்காரரும் தமது அபிப்ராயத்தைத் தெரிவிக்கிருர். அதனல் அந்த அபிப்ராயத்தை உறுதிப்படுத்துகிருர். (சா. உப. வாக்யம் நைஷ்டிக பிரும்மசாரியைப்பற்றியது. மற்ற இரண்டு வாக்யங்களும் வானப்ரஸ்தனைப் பற்றியதும், சந்யாஸியைப் பற்றியதாகும். இவர்களில் யாரும் ஆஸ்ரம நியமங்களை - விதிகளை மீறக்கூடாது - அதாவது பிரும்மசர்யம் கட்டாயம் அனுஷ்டித்தே தீரவேண்டும்). (வ்யாஸர் தமது சம்மதியினல் ஜைமினியின் அபிப்ராயத்தை உறுதிப்படுத்துகிருர்.)

மேலும் இவ்விதமாகவும் சொல்லக்கூடும்-நைஷ்டிக பிரும்மசாரியோ மற்றவர்களோ பிரும்மசர்ய விரதத்திலிருந்து நழுவி விட்டு-அதற்கு பிராயசித்தம் செய்யப் படுமாகில், பிருஹ்மவித்யைக்கு அவர்களுக்கு அதிகாரம் உண்டு. பூர்வமீமாம்ஸத்திலே பிராயசித்த அதிகார லக்ஷணத்திலே இந்த விஷயம் கூறப்பட்டதாகும் பூ. மீ 6-8-21 अवकीर्णिपशुश्च तद्वत् எவனல் பிரும்மசரிய விரதம் மீறப்பட்டதோ, மேலே சொல்லியபடி அவனல் பலி செய்ய வேண்டியது.

(இங்கு சொல்லப்படுவது, நைஷ்டிக பிரும்மசாரி வானப்ரஸ்தன் சந்யாஸி இவர்கள் அவரவர்களுடைய தர்மங்களிலிருந்து நழுவி விடக்கூடாது. சாஸ்திரம் ஒப்புக்கொள்ளவில்லை-விரதம் நழுவி விட்டால், நைஷ்டிகன் கழுதையை நிருதி தேவதைக்கு பலியாக கொடுக்கவேண்டும். ஸம்ஸ்காரம் செய்யப் பெற்ற அக்னியிலா-அல்லது ஸம்ஸ்காரம் செய்யப்படாத அக்னியிலா என்கிற பிரஸ்னை எழ-ஸம்ஸ்காரம் செய்யப்படாத அக்னி என்றும் முடிவு எடுக்கப் பட்டது. பிராயசித்தம் செய்யப் பட்டதும்-பாபம் விலக்கப்பட்டு-நைஷ்டிகன் புனிதமாகிறான்-அவன் வித்யையை அனுஷ்டிக்கலாம் அல்லவா) விதுரர் முதலானவர்களைப் போல-இவர்கள் அநாஸ்ரமிகளாக இருப்பது தகாது. இவர்களுக்கு பிராயசித்தம் செய்யப் பட்டபின்பு வித்யையில் அதிகாரமுள்ளதா எனக் கேள்வி எழுகிறது. நழுவின ஆஸ்ரமிகளுக்கு பிராயசித்தம் செய்வதும், அதிகாரம் பிருஹ்ம வித்யையில் உள்ளதா என்பதற்கு சூத்ரக் காரரே பதில் கூறுகிறார்.

ஸி. சூ. न चाऽऽधिकारिकमपि पतनानुमानात् तदयोगात् (3-4-41)
ந சாSSதிகாரிகமபி பதநாநுமாநாத் ததயோகாத் (do)

ஆதிகாரிகம் அபி ந ச-பூர்வமீமாம்ஸையில் அதிகாரலக்ஷணமான 6ம் அத்யாயத்தில் சொல்லப்பட்ட பிராயசித்தமும் (ஆஸ்ரம பிரஷ்டர்கள் விஷயத்தில் ஒட்டாது). பதநாநு மாநாத்ததயோகாத் - (ஏனெனில்) அவர்கள் பதிதர்கள் என்று ஸ்மிருதி இருக்கையால் பிராயசித்தம் ஒட்டாது.

இது முன் சூத்ரத்திற்கு மேல் வரும் பூர்வபக்ஷம் ஆகும். பிராய சித்தம் செய்து விட்டால், பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு என்பது பூர்வபக்ஷம். அந்த தகுதி இதில் மறுக்கப்படுகிறது.

அதிகார லக்ஷணம் சொல்லப்பட்டாலும் கூட (அதாவது பிராய சித்தம் பண்ணினாலும் கூட) நைஷ்டிகன் - அது போல மற்ற ஆஸ்ரமவாசிகள் பிரஷ்டர் களாக நழுவி விட்டார்களே யானால், பிருஹ்ம வித்யைக்கு அதிகாரிகளாக ஆகமாட்டார்கள், எப்படி? पतनानुमानात् तदयोगात् நழுவுதலைப்பற்றிய ஒரு ஸ்மிருதி

வாக்யப் கூறுகிறது - பிராய சித்தத்தை நைஷ்டிகன் முதலானோருக்கு விதிக்கவில்லை. அவர்கள் பதிதர்கள் - பிராயசித்தம் ஒட்டாது. (ஆக்னேய 16-5-23)ல் आरूढो नैष्ठिकं धर्मं यस्तु प्रच्यवते द्विजः । प्रायश्चित्तं न पश्यामि येन शुध्येत् स आत्महा நைஷ்டிக பிரும்மசாரியாக விருக்கும் த் விஜன் அவனுடைய பிரும்ம சர்யவிரதத்திலிருந்து நழுவினால்-அவனுக்கு ஸித்தியை விளைவிக்கக் கூடிய பிராயஸ்சித்தம் சாஸ்திரங்களில் காணப்படவில்லை. அவன் ஆத்மஹத்தியைச் செய்தவனாகிறான். ஆகையால் பூர்வமீமாம் ஸத்தில் சொல்லப்பட்ட பிராயசித்தம் நைஷ்டிகனைத் தவிர மற்றவர்களுக்குஏற்பட்டதாகும்(நைஷ்டிகனுக்கு பிராயசித்தம் கிடையாது). (மற்ற பிரும்மசாரி விஷயம் என அதைக் கொள்ள வேண்டும்).

பூ. ஸீ. उपपूर्वमपीत्येके भावमशनवत् तदुक्तम् (3-4-42)

உபபூர்வ மபீத்யேகே பாவமஶன வத் ததுக்தம் ( do )

ஏகே - சிலர், உபபூர்வம் அபி இதி-(ஆஸ்ரமத்திலிருந்து நழுவுதல்) உபபாதகமே என்னும் காரணத்தாலே.(ஏனெனில் பிரும்ம சர்ய விரதத்திலிருந்து நழுவி விடுதலால்) - பாவம் (அதற்கும் பிராய சித்தம் உண்டு - சிறிய பாபம் எனக் கொண்டு பிராய சித்தம் உண்டு என்கிறார்கள்)- (எது போல வென்றால்) அஸநவத்-கள் அருந்தியது போல (தடுத்திருந்தும் பிராயசித்தம் மற்ற பிரும்மசாரி களுக்கும் நைஷ்டிகனுக்கும் பொதுவாக யிருப்பது போல) தத் உக்தம்-இந்த விஷயம் ஸ்மிருதியிலும் சொல்லப் பட்டதாகும்.

நைஷ்டிகன் முதலியோர் பிரும்மசரிய விரதத்திலிருந்து நழுவி விடுவார்களே யானால், அத்தகைய பாபம் உபபூர்வம்-உபபாதகம் (சிறிய பாபமாகும் - மஹா பாபமாகாது). மஹாபாதகங்களில் சேராது. அதனால் சில ஆசார்யர்கள் அபிப்ராயப்படுகிறார்கள் भावं (அற்கும் பிராயசித்தம் உண்டு என்கிறார்கள்), अशनवत् - கள் குடிக்கக் கூடாது - இவ்விதம் தடுத்திருப்பதும் - அதற்கு பிராய சித்தம் செய்யப்பட வேண்டியது - மற்ற பிரும்ம சாரிகளுக்கும் நைஷ்டிகனுக்கும் பொதுவாக விருப்பது போலே). அதற்கு ஸமான மாகும். ஸ்மிருதிகளில் இது சொல்லப்பட்டது. கௌ. 1-3-4ல்

उत्तरेषां चैतद् विरोधि இவை (மேல் சொல்லப்பட்ட மாணவனின் தர்மங்கள்) தடுக்கப்படாமல் விருக்கும் போது, பிற்பாடு வரும் ஆஸ்ரமவாசிகளுக்கு விநியோகிக்கப்படும். இதற்கு அர்த்தம்-குருவாசிக்கு எந்த நியமம் ஓதப்பட்டிருக்கிறதோ, அது, ஒருவனுடைய சொந்த ஆஸ்ரம தர்மங்களுக்கு விரோதம் ஏற்படாவிடின். அது பிற்பாடு வரும் ஆஸ்ரமிகள் விஷயத்திலும் ஏற்படக்கூடும் என்று அர்த்தமாகும். அதைப் போல, இங்கேயும் பிரும்மசரிய விரத நழுவுதலுக்குப் பிராயசித்தம் இருக்கக்கூடுமாதலால், பிருஹ்ம வித்யா தகுதி அந்த பிராயசித்தம் செய்யப்பட்டு விட்டால்-ஏற்படுகிறது என்பதாகும். (அதாவது கிரஹஸ்த வானப்ரஸ்த சந்யாஸிகளாகிற மேற்பட்ட ஆஸ்ரமவாசிகளுக்கும்) எல்லா பிரும்மசாரிகளுக்கும் சொல்லப்பட்ட பொதுவான ஆஸ்ரம விரோதமில்லாத தர்மங்கள் கைக்கொள்ளத்தக்கவை. ஆகவே நைஷ்டிக பிரும்மசர்யத்திலிருந்து நழுவினவர்களுக்கும் பிராயசித்தம் உண்டு என்பதால், பிருஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு என்றே தீர்மானிக்க வேண்டும்).

ஸி. ஸூ. बहिस्तूभयथाऽपि स्मृतेराचाराच्च (3·4·43)
பஹிஸ்தூபயதாபி ஸ்மிருதேராசாராச்ச ( do )

உபயதா-அபி-ஆஸ்ரமத்திலிருந்து நழுவுதல் மஹாபாதகம், உப பாதகம் எனும் இரண்டில் எதுவாக யிருந்தாலும், பஹி: து (இவர்கள் பிருஹ்ம வித்யையில் தகுதிக்கு (அதிகாரத்துக்கு) புறம்பானவர்களே. ஸ்ம்ருதே:-(ஸ்மிருதியிலும்) ஆசாராத்-பெரியோர்களின் அனுஷ்டானத்திலும் காணத் தகுந்தது.

து சப்தம் மற்றவர்களின் அபிப்ராயங்களைத் தள்ளுகிறது. பிரும்மசரிய விரதத்திலிருந்து நழுவுதல் உப பாதகம் (சிறிய பாபம்) மஹாபாதகம் (பெரிய பாபம்) இரண்டிற்கும் ஸ்வரூபமாக விருப்பினும்-யாதாக விருப்பினும், ஆஸ்ரம பிரஷ்டர்களே. बहिर्भूता ஏவ; 41வது சூத்திரத்தில் சொல்லப்பட்ட ஸ்மிருதிவசனப்படி-அவர்களுக்கு (பிரஷ்டர்களுக்கு) பிராயசித்தம் சாஸ்திரத்தில் காணப்படவில்லை, பிருஹ்ம வித்யைக்கு அவசியம் இருக்க வேண்டிய சுத்தி அவர்களுக்கு இல்லை. பிருஹ்ம வித்யைக்குத் தகுதியான வர்க்கங்களிலிருந்து அவர்கள் விலக்கப்படத் தக்கவர்களே.

எப்படி? ஸ்மிருதி வசனங்களாலே. முந்திய 41 சூத்திரத்தில் சொல்லப்பட்டபடி - பிரஷடர்கள் பதிதர்கள். அவர்களுக்குப் பிராயசித்தம் இல்லை. பாபம் போவதற்கு பிராயசித்தம் சொல்லப் பட்டிருப்பினும், பிராயசித்தம் செய்வதற்கு யோக்யதை சில சுருதி களிலிருந்து தெரிய வருகிறது. அவ்விதமிருப்பினும், அவர்களுக்கு பிராயசித்த கர்ம அதிகாரம், அதன் ஹேதுவினால் பிராயசித்தம் செய்வது-ஏற்படாது-(ஏனெனில்) प्रायश्चित्तं न पश्यामि येन शुध्येत् स आत्महा-ஆத்மஹத்தி செய்தவர்களுக்கு பிராய சித்தம் இல்லை என் பதாகும்-இதுதான் ஸ்மிருதிவசன அர்த்தம். (மேலும்) आचाराच्च பெரியோர்களின் சிஷ்டாசாரம் இருப்பதாலே-இந்த பெரியோர் கள் பிரஷ்டர்களை - பிராயசித்தம் செய்திருப்பினும் அவர்களை விலக்குகிறார்கள். அவர்களுக்கு அவர்கள் பிருஹ்ம வித்யையை உப தேசிப்பதில்லை அதனால் பிரஷ்டர்களான பதிதர்களுக்கு பிருஹ்ம வித்யையில் அதிகாரமில்லையாகும்.

(இங்கு சொல்லப்படுவது-பூர்வபக்ஷி சொல்கிறான், பிராயசித் தம் விதிக்கப்பட்டிருக்கிறதே என்று; பிராயசித்தம் செய்த பின்பு சுத்தமாக்கப்படுகிறானே-அதனால் பிருஹ்ம வித்யைக்குத் தகுதி யேற்படுகிறது - என்றால் - இந்த அபிப்ராயம் தவறாகும் - அதாவது பாபத்தின் பரிணாமத்திற்கு பிராயசித்தம் ஈடல்ல. சுருத பிரகாசி கையில் ஒரு பாபம் செய்யப்பட்டால்-அதன் வாசனை மற்ற பாபங் களைச் செய்யநேரிடும், பிராயசித்தம் அவைகளையும் பரிஹரிக்கக் கூடும். நைஷ்டிகனுடைய பாப சுமை குறையலாம்-அதனால் தகுதி உண்டாகாது. ஆஸ்ரமதர்மங்களிலிருந்து நழுவுதல் பெரிய பாபம்; அநாஸ்ரமியாக இருப்பது அதனால் விரும்பத்தக்கதல்ல. எப் போதும் ஆஸ்ரமியாகவும் - தர்மங்களை வழுவாமல் செய்தலும் சரியாகும்-நியமமாகும்).

## ஸ்வாம் யதிகரணம் (3-4-11)

### சூ. ஸ். स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः (3-4-44)
### ஸ்வாமிநः பலஸ்ருதேரித்யாத்ரேய ; (3-4-44)

ஸ்வாமிந;-(உத்கீத உபாஸநம்) யஜமானன் செய்யவேண்டிய தாகும். பலஸ்ருதேः - அவனுக்கு அந்த உபாஸனத்தின் பலன் ஓதப்படுகிறது. இதி ஆத்ரேயர்-ஆத்ரேயர் இவ்வாறு கருதுகிறார்.

உத்கீத உபாஸனையில், கர்மாங்கங்களைக் கொண்டபடியால், எஜமானனுக்கும் அவனுடைய கர்த்தாவுக்கும் (ருத்விக்குக்கும்) யாகம் செய்வதற்கு தகுதி இருக்கிறதா இல்லையா என்கிற விஷயம் ஆராயப்படுகிறது. அந்த கர்மாங்கமான உத்கீதோபாஸனம் யாகம் செய்யும் எஜமானனால் செய்யத்தக்கதா அல்லது ருத்விக்கால் செய்யத்தக்கதா? பூர்வபக்ஷம்-ஆத்ரேயர் அபிப்ராயப் படுகிறார் - யஜமானனே இந்த உபாஸனத்தைச் செய்யத் தகுதி யுள்ளவன்-ஏனெனில்-फलश्रुतेः- எஜமானன்தானே பலனை அடைகிறான். உத்கீத உபாஸனத்தின் பலமாக யாகம் மிகுந்த வீர்ய மடைகிறது - அதற்குள்ள தடை நீங்குகிறது-அந்தப்பலன் எஜமானனுக்கே சொந்தம். அதனால் எஜமானன்தான் உபாஸனத் தைச் செய்யத் தகுதியுள்ளவன்.

(இன்னொரு காரணம்) வேதாந்தங்களில் விஹிதமான தஹர முதலிய உபாஸனங்களிலே, அவைகளின் பலனாகிற பிருஹ்ம பிராப்தி எவனுக்கு கிடைக்கிறதோ, அந்த உபாஸகனே அந்த உபாஸனங்களைச் செய்ய வேண்டியது என்று எப்படி முடிவு செய்யப்பட்டிருக்கிறதோ-அதுபோல இங்கேயும் உத்கீத உபா ஸனத்தின் பலனை யஜமானனே அடைவதால் அவனே அதை அனுஷ்டிக்கவேண்டும்-என்று அர்த்தமாகும். அத்தகைய உபா ஸனங்களிலே எஜமானன்-ருத்விக்கு (கர்மாங்கத்திற்கு வேண்டப் படுபவன்) இரண்டும் அவசியமாகும்-சம்பந்தம் இரண்டுக்கும் இருப்பதாலே. (எதுபோலவென்றால்) கோதோஹன பாத்ரங் களில் தண்ணீர் கொண்டு வருவது போல. இதை வேறொருவன் (கோதோஹன பாத்ரத்தை) உபயோகிக்க முடியாது-அத்வர்யு அவனுக்கு கர்த்தாவாக விருப்பினும் முடியாது-இங்கே உத்கீதத் தைப் பாடும் உத்காத்ரி உத்கீத உபாஸனைக்கு இருப்பினும், உத் கீத உபாஸனம்-ரஸதமமான உபாஸனை என்று அனுஸந்தானம் செய்வதற்கு-எஜமானனே செய்யத் தகுதி பெற்றவனாகும்.

அவ்விதமானால்-நாம் பதில் கூறுகிறோம் (இங்கே - பலன் உபாஸனை இரண்டும் உத்கீத காதாவுக்கு-உத்காதிரிக்கு-எஜமான னுக்கு அல்ல.)

ஸி. ஸூ. आर्त्विज्यमित्यौडुलोमिस्तस्मै हि परिक्रीयते (3-4-45)
ஆர்த் விஜ்யமித்யௌடு. லோமிஸ்
தஸ்மைஹி பரிக்ரீயதே ( do )

ஆர்திவிஜ்யம் (உத்கீத உபாஸனம் ருத்விக்கால் அனுஷ்டிக்கப்பட வேண்டியதே. ருத்விக்தான் உபாஸனம் செய்ய வேண்டும்-இதிஔடுலோமி-ஔடுலோமி என்கிற மஹரிஷி கருதுகிறார். ஹி-ஏனெனில், தஸ்மை-அங்கங்களோடு கூடிய யாகத்தைச் செய்வதற்காகவே, பரிக்ரீயதே-ருத்விக்தக்ஷிணை முதலானவற்றைக் கொடுத்து ஏற்றுக் கொள்ளப்படுகிறார் அன்றோ?

ஆர்தி விஜ்யம்-ருத்விக்தான் உத்கீத உபாஸனம் செய்ய வேண்டியது என ஔடுலோமி எண்ணுகிறார். எப்படி? இந்தக் காரியத்திற்காகத்தான் (பிரயோசனத்திற்காக), ருத்விக்குக்குத் தக்ஷிணை கொடுப்பது-இதன் அர்த்தம்-அங்கங்கள் அடங்கிய யாகத்தைச் செய்து, அதன் பலனை யடைவதற்கு யாகம் செய்யப்படுகிறது (எஜமானனால்). கர்மவிதிகளும் இருக்கின்றன யாகத்திற்கு யஜு. 6-3-5 ऋत्विजो वृणोति-யஜமானன் ருத்விக்குகளைப் பொறுக்குகிறான். ऋत्विग्भ्यो दक्षिणां ददाति ருத்விக்குகளுக்கு எஜமானன் தக்ஷிணை கொடுக்கிறான்-என்று சாஸ்திரம் சொல்வதால் அதாவது ருத்விக்குகளை அமர்த்துவது, ருத்விக்கினால் செய்யப்படும் கர்மத்தின் பலன் அடையப்படுகிறது- அந்த கர்மாங்கங்களை ருத்விக்தான் செய்ய வேண்டியது. இந்த கர்மாங்கத்திற்கு அந்தர்கதமாக ஏற்படும் தேக மான ஸக்லேசங்கள் - ருத்விக்கினால்தான் பொறுத்துக்கொள்ளப்பட வேண்டும். இங்கே ருத்விக்குக்கு சாமர்த்தியம் உண்டா இல்லையா என்கிற பிரச்னையில்லை-ஆயினும் உத்கீத உபாஸனை (வீர்யத்தை அளித்துத் தடையைப் போக்குகிறபடியால்) புருஷார்த்தமாகும் - அதனால் எஜமானனால் ருத்விக் பொறுக்கப்படுகிறான்-உத்கீத உபாஸனைக்கு அதிகாரம் யாகம் செய்யக்கூடிய தகுதி பெற்றவனாகிற ருத்விக்தான் அதிகாரமுடையவனாகிறான். இவன் யஜமானனின் பொருட்டு எல்லாம் அனுபவிக்கிறான்; அதற்கு தக்ஷிணையும் பெறுகிறான். यदेव विद्यया करोति...तदेव वीर्यवत्तरम्-அந்த யாக கர்மாவே உத்கீத உபாஸனையுடன் செய்யப்பட்டால், அந்த யாகம் மிக்க வீர்யத்தை அடைகிறது-என்று சா. 2.

1-1 18 வாக்யம் சொல்வதால் ருத்விக்கிஞல் செய்யப்படும் கர்மம் உபயோகமுள்ளதாக விருக்கிறது, வித்யையும் உபயோகப்படு வதாலே அதற்கு ருத்விக் மிக்க உபயோகமாக விருக்கிறுதால் அதனுலே சுருதியினுல் சொல்லப்படுகிறது-ஒரே ஆசாமிதான் அந்த கர்மாவைச் செய்கிருன். தஹர வித்யையில் ருத்விக்குதான்கர்த்தா வாகச் சொல்லப்படாதபடியாலே, உபாஸகனைத் தவிர வேறு ஒருவரால் செய்யப்பட வேண்டும் என்கிற விதியில்லாமையாலே, (பூர்வ. மீமா. 3-7-18) शास्त्रफल प्रयोक्तरि-பலனை அடையும் உபா ஸகனுலேயே அனுஷ்டிக்கப்பட வேண்டியவை எனச் சொல்லப் பட்டது. ஆகவே உத்கீத உபாஸனம் யாக கார்யம் செய்வதற்க் காகவே தக்ஷிணைகளைக் கொடுத்து நியமிக்கப்பெற்ற ருத்விக்கா லேயே அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

## सहकार्यन्तरविध्यधिकरणम् (3-4-12)

## ஸஹகார்யந்தர வித்யதி கரணம்

ஸித்.ஸூ. सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तद्वतो विध्यादिवत् (3-4-46)

ஸஹகார்யந்தரவிதி: பக்ஷேண

த்ருதீயம்தத்கதோ வித்யாதிவத் ( do )

தத்வத:-பிருஹ்மவித்யை அனுஷ்டிப்பவர்களுக்கு வித்யாதி வத் - வித்யைக்கு அங்கமாக அனுஷ்டிக்கப்படும் யக்ஞாதிகளையும் சமதமாதிகளையும் அதனுல் விளையும் ஸ்ரவண மநநங்களையும் போல-(அதமுநி என்கிற பிருஹதாரண்யக வாக்யத்தில் சொல்லப் படுவது) ஸஹகார்யந்தரவிதி:-வேறு சில அங்கங்களையும் விதித்த படியாகும். த்ருதீயம் - பால்யம் பாண்டித்யம் இவற்றோடு கூட மூன்ருவதான மௌனம் எனப்படும் சிறந்த மனனமேயாகும். பக்ஷேண- முநிசப்தத்தை) மிக்க ஆதரத்துடன்-பராசரர் போன்று மஹர்ஷிகள் புகழ்வதாலே.

பாத ஆரம்பத்தில் பிருஹ்ம வித்யைக்கு கர்ம பிரதான்யம் (யக்ஞம் முதலானவை அங்கமென்றும்) பிறகு ஸத்வம் உண்டா வதற்கு தியானமே-பாண்டித்யம் மௌனம் முதலியவை வித்யா ஸஹகாரிகளாகும். த்யேய வஸ்துவைச் சொல்லும் போது-பஹி;

அங்கமாகிற சமதமாதிகள் அவசியம் எனக்காட்டி - அதன்படி திருஷ்டி விதிப்படி சொல்லி-தியான ஸமான விஷயமாக வேறு சில அங்கங்களாகிற பால்ய பாண்டித்யம்-மௌனம் இவைகளும் பிருஹ்ம வித்யைக்கு அங்கம் எனச் சொல்லப்படுகின்றன.

பிரு. உ. 5-5-1ல் तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्। बाल्यच पाण्डित्यं च निर्विद्याय मुनिः - வைராக்யம் (பிருஹ்ம வித்யைக்கு) அவசியம். எல்லா வேதார்த்தத்தை கற்று அறிந்த பிராம்மணன் தன்னை மறைத்துக்கொள்ளவேண்டும் பால்யத்துடன் நிற்கவேண்டும். பிறகு பாண்டித்யத்தை அடைந்து சிறந்த மனனத்தை உடைய முனியாகவும் இருக்கவேண்டும். மௌனம் அங்கமாகச் சொல்லப்படுகிறது. இதற்கு பால்யம்-பாண்டித்யம் இவைகளைப் போல மௌனமும் விதிக்கப்படுகிறதா - அல்லது அர்த்தவாதமாக புகழ் சொல்லாக-வேறு ஒரு வாக்யத்தை அநுவாதிக்கிறதா? மௌன பாண்டித்ய சப்தங்கள் ஞான விஷயமாக உள்ளவை-எங்கன மெனில் பாண்டித்யத்தை அடைந்து (पाण्डित्यं निर्विद्य-இங்கு ஞானத்தை விதியாக - அடைந்து என்று சொல்லி இருந்தே மீண்டும் अथ मुनिः-அவன் பிறகு முனியாக (மௌனமாக) ஆகிறான்-என்று அனுவாதம் செய்கிறது. இங்கு விதிசப்தம் ஒன்றும் சொல்லப்படவில்லை-என்று சொல்வதால்—விதிக்கும் பதம் அதமுனி: என்பதில் இல்லை என்பதால்-மந்தவ்ய; என்கிற பதமே மனனமே அனுவதிக்கப்படுகிறது (பூர்வபக்ஷம்)

இப்படி சொல்லப்படுமானால்-நாம் பதில் கூறுவது सहकार्यन्तर विधिः-வித்யைக்கு வேறு சில விதிகள் அங்கங்களாக-உதவி செய்வதாக விதிக்கப்பட்டிருப்பதால் तद्वतः-வித்யையை அனுஷ்டிப்பவன். विद्यादिवत्-மற்ற அங்கங்களைப்போல (யாகயக்ஞங்கள்-சமதமாதி-ஸ்ரவணமநநம் இவைகளைப்போல) விதியாகச் சொல்லப்படுகின்றன, யாகங்கள்-ஸர்வ ஆஸ்ரமதர்மங்கள் சமதமாதி-விதிசப்தங்களால் சொல்லப்படுகின்றன. आदि சப்தத்தாலே ஸ்ரவணமநநமும் கிரஹிக்கப்படுகிறது सहकार्यन्तर विधिरिति- அங்கங்களாக இன்னும் சிலவற்றை சொல்லியதால்; விதிபரமாக விருப்பவை; அதனால் ஸஹ கார்யாந்தரவிதி;.

என்ன சொல்லப்பட்ட தென்ருல் - எப்படி तमेतं वेदानुवचनेन ब्राह्मणाः विविदिषन्ति यज्ञेन दानेन इत्यादिना - பிராம்மணர்கள் பிருஹ்மத்தை அறிவதற்கு இச்சைப்படுகிருர்கள்- யக்ஞங்களாலும் தானத்திஞலும்-இதே மாதிரி शान्तोदान्तः மன அடக்கம் இந்திரிய நிக்ரஹம்-என்பவைகளாலும், யக்ஞங்களும் இவைகளும் வித்யையின் உற்பத்திககு உதவுபவை, என்று விதிக்கப்பட்டிருக்கின்றன-எப்படி பிரு. 2. 4-4-5 श्रोतव्यो मन्तव्यः:- சிரவணம் மநநம் என்பதாகும்; இவைகளும் வித்யாஸஹகாரிகள் (உதவி பண்ணுபவை), அதேபடி- तस्माद्ब्राह्मणाः पाण्डित्यं निर्विद्य- அதனுல் பிராம்மணர்கள் பாண்டித்யம் அடைந்து; என்பவை களால் பாண்டித்யம் பால்யம்-மௌனம்-இப் மூன்றும் வித்யைக்கு ஸஹகார்யமாக (உதவி செய்வதாக) விருக்கின்றன. மௌனமும் பாண்டித்யமும் ஒன்ருகாது-மௌனத்துக்கும் விதிக்கப்படுகிறது. (பூர்வபக்ஷம் மௌனமும் பாண்டித்யம் ஒன்றுதான் என்பது)- அதனுல் पक्षेणेति - முநிசபதத்தை பிருஹ்ம ரிஷிகளான பராசரர் முதலானவர்கள் அடைந்திருக்கிருர்கள். முநிசப்தத்திற்கு அர்த்தம் பிரகிருஷ்ட மநந சீலர்கள் - வ்யாஸாதிகள் மீது பிரயோகப்படுவ தால், மௌனம் பாண்டித்யம் பால்யம் இம்மூன்றும் அவசியம். अथ मुनिः (ஸ்யாத்) என்கிறதில் விதி பிரத்யயம் ஒன்றும் காணப்பட வில்லை. விதி இல்லாவிட்டாலும் விதியாகக்கொண்டு-மௌனத்தை அடைந்து எனக் கொள்ளவேண்டும். ஆயினும் மௌனத்தை ஸித்தி அடைந்தவன்-ஒரு வஸ்துவை நினைத்து மௌனமடைநது (தபஸ் செய்து) ஸித்தி பெற வேண்டியதால் - அதனுல் முனி என்று அழைக்கப்படுவதாலே - (முனி - ஸ்யாத்) - இங்கேயும் மௌனம் சிரவண பிரதிஷ்டார்த்த மநநப்-இவற்றை அந்தர்பூத மாக-கொண்டால், உபாஸனை வீஞுகாதிருக்கும்; அதேபடி ஒரு வஸ்துவை அடிக்கடி ஆலம்பநம் (சிந்தனை) செய்யப்பட வேண்டி யது-ஏற்கனவே சிந்திக்கப்பட்ட விஷயத்தை சிந்திப்பதால் அதே பாவனையை அடைய ஆரம்பித்தலாகும்.

(இங்கு சொல்லப்படுவது-நான்கு விதமான ஸஹகாரிகள் வித்யோத்பத்திக்குச் சொல்லப்படுகின்றன. (1) & (2) யாக யக்ஞங்கள்-சாந்தம் தமம் முதலியவை. (3) ஸ்ரவணம்-மநநம்- (இவை விதியாக வில்லாவிடினும்-உபகாரம் செய்பவை) வேத விசாரம் செய்யும் - முமுக்ஷுவுக்கு இவை அவசியமாகும். 4)

பாண்டித்யம்-பால்யம் - மௌனம் இவைகளும் விதியாகும். மௌனமும் மநநமும் ஒன்றாக விருப்பினும்-பிரகரணத்திலே வெவ்வேறு அர்த்தங்கள் கொடுக்கப்பட் டிருக்கின்றன. மநநம் பிரமேயத்தை சிந்திப்பது-மௌனம் பகவானுடைய ஸ்வரூபத்தை ஒரே படியாக நினைப்பது) ஆகையால் வாக்யார்த்தம் இந்த முழு சுருதிக்கும் இவ்விதமாக வருகிறது. பிராம்மணர்-வித்வான் என்று அர்த்தம். பாண்டித்யம் நிர்வித்ய-பாண்டித்யம் அடைந்து-அதாவது உபாஸ்யமான பிருஹ்ம தத்வத்தை பரிசுத்தமானதும் - பரிபூர்ணமானதும் என்றும் அதனைப்பற்றி அறிந்து, கேவலம் ஸ்ரவண மநநம் முதலியவற்றைகளால் அப்ராப்தம் ; ஆகவே - வேதனம் (உபாஸநம்) அடையப்படவேண்டி - அப்யஸிக்கப்பட வேண்டியதாகும். அந்த ஞானம் (எப்பொழுது அடையப்படுமென்றால்) பகவத் பக்தியுடன் கூட ஸத்வாதி குணங்களின் அபிவிருத்தி ஏற்படுவதால்தான் உண்டாகும். இந்தப்பிரகாரம் இம்மாதிரி ஸ்மிருதி சொல்கிறது - கீதை 11-53 नाहं वेदैः-என்று ஆரம்பித்து-भक्त्या त्वनन्यया शक्यः...ज्ञातुम् - என்னிடம் பக்தியில்லாமல், கேவலம் வேத அத்யயனம் செய்வது - பிறருக்குச் சொல்லிவைப்பது இத்யாதிகளாலும்-தபஸ் யாகம் தானம் ஹோமம் இவைகளினாலும் காணத்தக்கவனல்லன். பக்தி ஒன்றினாலே அதுவும் அநந்யயா பக்த்யா-உள்ளபடியே சாஸ்திரங்களைக் கொண்டு அறியவும்-உள்ள படியே பார்க்கவும்-உள்ளபடியே பிரவேசிக்கவும் தகுந்தவன் - (இங்கு नायमात्मा प्रवचनेन...(கடவல்லி)-லகு சித்தாந்தம் ஜிக்ஞாஸாதி கரணம் பார்க்கவும்). கேவலம் வாக்ய ஜன்யஞானமில்லை— உபாஸனை என்று அர்த்தம்.

சுருதியும் ஸ்வே-6- 3ல் यस्य देवे परा भक्तिः (क्तिः) மேலான பக்தியினால் மாத்திரம் நான் அறியப்படக் கூடியவன். அதேமாதிரி கடவல்லி नायमात्मा - प्रवचनेन - இந்த ஆத்மா மனனம் பண்ணுதலாலோ - தியானிப்பதாலோ - சிரவணம் பண்ணுவதாலோ - அடையத்தக்கவனல்ல ; எவனை பகவான் வரிக்கிறானோ-அவனால் அடையத் தகுந்தவன். அதாவது உபாஸனாத்மக ஞானம்-சேமுஷி பக்திரூபா (சாக்ஷாத்காரம் வரும்வரை) என்று அர்த்தம். (திருப்பாணாழ்வாரின் கதையை ஸ்மரிக்கவும் )

बाल्येन तिष्ठसेत्- பால்யனைப் போல குணமுள்ளவனாக - ஒருவன் பிருஹ்மத்தை உபாஸிக்க வேண்டும். பால்யஸ்வரூபம் -

எல்பது யாது என்பதை பிற்பாடு ஆசார்யரே விளக்குகிறார். பால்யம்-பாண்டித்யம்-இரண்டையும் அடைந்த பிறகு முனியாகிறான்-(முனி ஸ்யாத்-ஆகவேண்டும்). இவ்விதமாக ஒருவன் பகவானுடைய திருமேனியை - சுத்தமானதும் - பரிபூர்ணமானதுமான திவ்ய மங்கள விக்ரஹத்தை சுபாஸ்ரயமாக நினைக்க வேண்டும்-(வித்யையை அடைவதற்க்காகவும் அதனால் ஸதா தியானயோகம் ஸித்திப்பதற்காகவும்).

(இங்கு சொல்லப்படுவது-விசிஷ்டமான விதி-அந்தரத்வாதி கரணத்தில் விளக்கப்பட்டதைப் பார்க்கவும்).

இந்த விதமாக பிருஹ்மத்தைத் தியானிக்கும் மநந சீலனாக ஆகவேண்டும்-நித்தியாஸந ரூப வித்யையை அடைவதற்க்காக. அடிக்கடி அப்யாஸம் செய்வதால்-மூன்றையும் பால்யம் பாண்டித்யம் மௌனம்-இவைகளின் உதவியால் அவன் வித்யையை அடைகிறான். अमौनं च मौनं च निर्विद्याय ब्राह्मणः- அமௌனம்-மௌனம் இரண்டையும் அடைந்து ஒருவன் பிராம்மணனாகிறான் (மௌனம் (மநநம்) அமௌனம்-மற்றைய ஆஸ்ரம தர்மங்கள்-இத்துடன் யாக, தான, சமம் தமம் முதலான இதர தர்மங்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். अमौन-मौनेतर सहकारिकलापः மற்றைய ஸஹகாரிக தர்மங்கள் (மௌனத்தைத் தவிர) இவைகளின் உபாயத்தினால் ஒருவன் வித்யையை அனுஷ்டித்து மேலான பதவியை அடையும் போது - மற்ற உபாயங்கள் எதற்கு என்று சிஷ்யனால் கேள்வி கேட்கப்படுமானால், ஆசார்யர் பதில் கூறுவார் स ब्राह्मणः केन स्यात्-எதனால் ஒருவன் பிராம்மணனாக ஆகக்கூடும்? என்று கேள்வி கேட்டால்-பதில்-येन स्यात् तेनेदृश एव इति-எந்த உபாயத்தினால் அவன் இவ்விதமாக இருக்கிறானோ - அதனாலேயே அவன் அந்த மாதிரி (வர்க்கமாக) ஆகிறான்; அதாவது இந்த உபாயங்களால் அவன் பிராம்மணனாகிறான் - அந்தப்படி பிராம்மணனாக ஆகுதலே அவன் அந்தமாதிரி இதர தர்மங்களுடன் கூடிய (மௌனத்தினால் பிருஹ்மதியானத்திற்கு) தகுதி ஆகிறான்-வேறு வழி இது தவிர இல்லை. (வித்யையின் ஸத்பாவம் இதனால் பேசப்படுகிறது) ஸர்வதர்ம உபலக்ஷணம்-ஸர்வாஸ்ரமி மோக்ஷ ஸத்பாவ பரமேவ. ஆகையால் எந்த ஆஸ்ரமத்திலிருப்பினும், வித்யையை

உடையவனுக்கு, பாண்டித்யம் பால்யம் மௌனம் ஆகியவை களுள் மூன்றுவதான மௌனம் வித்யைக்கு ஸஹகாரி அங்கங் களாக விதிக்கப்பட்டிருக்கின்றன. (எது போல வேன்றல்)-கிருஹ ஸ்தனுக்கு யாகயக்ஞாதிகள் - ஸ்வஆஸ்ரம தர்மங்கள் எப்படி அவசியமோ-அது போலவாம். மௌனத்தை மூன்றுவதாக உடைய ஸஹகாரிகள் வித்யையை உண்டாக்குவதாகும். (அந்த ஆஸ்ரம தர்மங்களுடன்).

மேலும் சொல்லப்படலாம்-எல்லா ஆஸ்ரமங்களிலும் இருக் கும் மனிதர்கள்-வித்யையை அப்யஸிப்பவர்கள் (வித்வான்களுக்கு) அந்த அந்த ஆஸ்ரம தர்மங்கள் ஸஹகாரிகளாகும்; அத்துடன் பாண்டித்யம் பால்யம் மௌனம் ஆகிய மூன்றும் சேர்ந்து பிருஹ்ம வித்யையை அடைவதற்கு ஸாதனம் என்று சொல்லப்படுமானுல், அப்போது கேள்வி எழும்-சாந்தோக்யத்தில் 8-15-1ல் अभिसमावृत्य कुटुम्बे शुचौदेशे- ஒருவன் கிரஹஸ்த தர்மங்களை ஆயுள்பரியந்தம் அனுஷ்டிக்கவேண்டும்- இது எப்படி பொருந்தும்?சாந்தோக்யத்தில் சொல்லப்பட்டது ஒருவன் குருகுலவாசம் செய்த பிறகு-கிரஹஸ் தாஸ்ரமத்தை (குடும்பத்தை) சுசியான தேசத்தில் ஸ்தாபிக்க வேண்டும்-என்று ஆரம்பித்து முடிக்கிற போது-स खल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकमभि संपद्यते-न च पुनरावर्तते-இம்மாதிரி ஆயுட் பரியந்தம் வாழ்ந்து விட்டு, அவன் பிருஹ்ம லோகத்தை அடை கிருன் - பூமிக்குத் திரும்பி வருவதில்லை.

இந்த ஆட்சேத்திற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர்.

ஸி. சூ. कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः (3-4-47)

க்ருத்ஸ்நபாவாத்து க்ருஹிணோபஸம்ஹார: (do)

க்ருத்ஸ் நபாவாத்து - எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பிருஹ்ம வித்யை உண்டாகையால்-கிருஹிணோ உபஸம்ஹார: (சாந்தோக் யத்தில்) க்ருஹஸ்தாஸ்ரமத்திற்கு சொல்லப்பட்டது - உப லக்ஷணம் - மற்ற ஆஸ்ரமங்களுக்கு எடுத்துக்காட்டாகும்.

तु சப்தம் பூர்வபக்ஷத்தை நிராகரிக்கிறது-कृत्स्नभावात् - எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பிருஹ்ம வித்யை உண்டு என்பதாலே -

**कृत्स्नेषु आश्रमेषु विद्यायाः सद्भावात्** - கிரஹஸ்தனுக்கும் உண்டு - என்பதால் அவனுக்கு மாத்திரம் பிருஹ்ம வித்யை உரியதல்ல - அதைக் கூறியது மற்ற ஆஸ்ரமங்களில் உள்ளவர்களுக்கு உபலக்ஷணம்; ஆகையால் எல்லா ஆஸ்ரமங்களுக்கும் உரிய தர்மங்கள் செய்யப்படவேண்டும். (ஆயுட்பரியந்தம்).

அதே போல இந்த வாக்யத்திலும் பிரு, 3-5-1ல் **ब्राह्मणः पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति** - பிராம்மணர்கள்-தங்கள் புத்ர ஆசைகளையும் பண ஆசைகளையும், உலகத்தின் மீதுள்ள பற்றையும் விட்டு விட்டு துறவிகளைப் போல வாழ்கிறார்கள்.

(மூவித ஆசைகள் விடப்படவேண்டும்-மண் பெண்-பொன் ஆசைகள். புத்ரன் வேண்டுமானால் மனைவி அவசியம்; பணம் வேணுமானால் பணத்தின் உதவியினால் செய்யப்படும் கர்மாக்களில் ஆசை, உலகப் பற்றுதல்-மற்ற எல்லா ஆசைகள்-ஆசைகளைத் துறந்து, தபஸ்வியில் கோலம் அணிதல்-துறவியைப் போல ஆகும்)

(பரிவ்ராஜக தர்மத்தை அனுஷ்டிப்பது). **तस्मात् ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य** - ஆகையால் பிராம்மணர்கள் பாண்டித்யத்தையடைந்து - பரிவ்ராஜ்ய தர்மத்தில் இருக்க விரும்பியவர்களாக - அந்த ஸ்திதியை அடைய ஹேதுவாக விருப்பது-மௌனம் முதலியவற்றை ஆஸ்ரயிக்கிறார்கள் என்பதால்தான்-இவ்விதம் உரைப்பது - உதாரணத்திற்கு எடுத்துக் காட்டாகும்.

**சித். சூ. मौनवदितरेषामप्युपदेशात्** (3-4-48)

**ஸி. சூத். மௌநவதி இத ரேஷாமப்யுபதேசாத் ( do )**

மௌனவத் - பிருஹதாரண்யகத்தில் பிருஹ்மவித்யா நிஷ்டனுக்கு மௌனத்தை விதியாக (அங்கமாக) உபதேசித்திருப்பது போல, இத ரேஷாம் அபி-சாந்தோக்யம் முதலான விடங்களில், மற்ற ஆஸ்ரமத்திலிருப்பவர்களுக்கும், உபதேசாத் - பிருஹ்ம ப்ராப்தியை உபதேசிக்கையால் (பிருஹதாரண்யகத்தில் மௌநத்தை ஸந்யாஸிக்கு அங்கமாக விதித்ததும், மற்ற ஆஸ்ரம வாசிகளுக்கு எடுத்துக்காட்டேயாகும்—உபலக்ஷணம்).

எவன் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டவனோ, அவனுக்கு பிக்ஷுவாக விருப்பதும், பிறகு மௌனத்தை அனுஷ்டிப்பதுமான உபதேசம் சொல்லப்பட்டிருக்கிறது; இதனாலே எல்லா ஆஸ்ரம தர்மங்களையும் உதாரணமாகக் காட்டுவதற்கேயாகும். ஏன்? இந்த விதமாக மௌனத்தை உபதேசித்திருப்பது போல அவர்கள் மற்ம ஆஸ்ரமங்களிலிருப்பவர்களாயினும், பிருஹ்ம பிராப்தியாகிற உபதேசம் இந்த சுருதி வாக்யத்தில் சொல்லப்படுகிறது சா. 2. 2-23-1ல் त्रयोधर्मस्कन्धा யக்ஞும் அத்யயனம் தானம் தபம் பிருஹ்மசர்யம் கொண்ட மூன்று வகைப்பட்ட ஆஸ்ரமங்கள் இவைமூன்றும் தர்மங்களின் ஆதாரமாகவிருக்கின்றன-சுருதி முடிக்கிறபோது-இவ்விதம் கூறுகிறது-ब्रह्मसंस्थोऽमृतत्वमेति-எவன் பிருஹ்மத்தினிடம் ஈடுபாடுடையவனாக விருக்கிறானோ-அவன் அம்ருதத்தை அடைகிறான். இதில் பிருஹ்ம பிராப்தி உபதேசிக்கப்படுகிறது. முன்பே 19ம் சூத்ரத்தில் விளக்கப்பட்டது-ब्रह्मसंस्थ சப்தம் பிருஹ்மத்தினிடம் ஆழ்ந்த பற்றுதல் உடையது. அதாவது வித்யா அனுஷ்டானம் இது எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பொதுவானது. ஆகையால் நன்றாகவே சொல்லப்பட்டதாகும்-யாகம் யக்ஞும், பாண்டித்யம் ஆகிற எல்லா ஆஸ்ரம தர்மங்களைப் போல, மௌனம் என்பதை மூன்றாவதாகக் கொண்ட மநநம்-இவை எல்லாம் வித்யைக்கு ஸஹகாரிக காரணங்களாகும். (सहकारित्वेन विधीयते) (அதாவது யக்ஞும் முதலானவற்றைப் போல, பாண்டித்யம், பால்யம், மௌனம் என்கிற மூன்றும் பிருஹ்ம வித்யைக்கு அங்கம் எனக் கூறப்பட்டது சரியானதே).

அநாவிஷ்காராதி கரணம் (3-4-13)

ஸி. சூ. अनाविष्कुर्वन्नन्वयात् (3-4-49)

அநாவிஷ்குர்வந் அந்வயாத் ( do )

அநாவிஷ்குர்வந்-(ஞானி) தன் தன்மையை வெளிப்படுத்தாமையாகிற (அதாவது பாலனுடைய) செயலை உடையவனாக விருக்க வேண்டும். அந்வயாத்-(திஷ்டாஸேத் என்னும் விதியில் அதுவே) அந்வயிக்க முடியுமாகையால் (இதில் பால்யம் என்பதற்கு அர்த்தம் நிர்ணயிக்கப்படுகிறது) (பாலவயது-அல்லது பாலகர்மா ஆகும்).

பிரு. 2. 5-5-21ல் तस्माद्ब्राह्मणः पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्-ஆகையால் வேத அத்யயனம் செய்தவன் வேதார்த் தத்தை அறிந்து பால்யத்துடன் நிற்க வேண்டும்; அவன் பிருஹ் மத்தை உபாஸிக்க வேண்டும். அதாவது பிருஹ்மவித்துக்கு பால்யம் உபகாரமாகச் சொல்லப்படுகிறது. பால்யம் என்ப தற்குப் பொருள்-பாலனுடைய பாவம், அல்லது பாலனுடைய கர்மா (செய்கை) யாகும். பால பாவத்திற்கு-வயதின் அவஸ்தை யாக விருப்பதால், ஒரு குறிப்பிட்ட பருவத்தின் விசேஷமாவதால் அது ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது. அதனால் பால்ய பாவத் திற்கு, பாலனுடைய கர்மாதான் என ஒத்துக்கொள்ளவேண்டியது. (कर्मेह गृह्यते). இங்கே சந்தேகம்-பாலனுடைய சேஷ்டதம்-தன் இச்சைப்படி சஞ்சரித்தல் कामाचारादिकं सर्वं - வித்யையை அப்யஸிக்கும் வித்வானுக்குச் சரியாகுமா-அல்லது கர்வமின்மை முதலிய தன்மையைக் குறிக்குமா? டம்பம் முதலியவை இல்லாமை-ரஹித தத்வமாகச் சொல்லலாமா? இந்த சந்தர்ப்பத் தில் யாதொரு விசேஷமும் (குறிப்பிட்டுச் சொல்லும்படி) இல் லாதபடியாலே, எல்லாம் ஒப்புக் கொள்ளத்தகும். சாஸ்திரங் களின் நியமம் (இஷ்டப்படி நடத்தலை கண்டனம் செய்தல்)-இம் மாதிரி விசேஷ விதியினால் பாதிக்கப் படுகிறது-இவ்விதம் சொல் லப்படுமாகில்-(பூர்வபக்ஷம்).

நாம் பதில் கூறுவோம்-अनाविष्कुर्वन्निति-ஜ்ஞானி தன் தன் மையை வெளிப்படுத்தாமையாகிற (அதாவது பாலனுடைய) சேஷ் டிதங்களை உடையவனாக விருக்க வேண்டும் அதாவது பாலனுக்கு எது ஸ்வபாவமோ-தன் பெருமைகளை மறைத்துக் கொள்வதால் தன்னை மறைத்தல்-अनाविष्कार रूपं கர்மம்-தன் மஹாத்மியத்தை வெளியில் சொல்லாமல் மறைத்துக் கொள்ளுதல்-அதை ஏற்றுக் கொண்டு, வித்வான் வாழவேண்டும். எப்படி? अन्वयात्-திஷ்டா சேத் என்னும் விதியிலே அதுவே அந்வயிக்க முடிக்குமாகையால்-बाल्येन तिष्ठासेत्-பால்ய ஸ்வபாவத்துடன் ஒருவன் பிருஹ்மத்தை உபாஸிக்கவேண்டும்-இத்துடன் அந்வயம் ஏற்படக்கூடும்-ஏனெ னில் பால்யனுடைய மற்ற சேஷ்டிதங்கள் விஷயத்தில் அவை களுக்கும் வித்யைக்கும் விரோதம் ஏற்படக்கூடும். அந்த சுருதிக்கு விரோதம்-இங்கு காணப்படும்-नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः

கடய-1-24 नाशान्तमानसो वापि प्रज्ञाने नैनमाप्नुयात् -கெட்ட பழக்கங்களிலிருந்து நீங்காதவனும்-காமக்ரோதம் நீங்கப் பெறாதவனாக மன அமைதியுமில்லாத மனிதன் தியானத்தாலே இந்த பரமபுருஷனை அடையமுடியாது. (அதாவது தன் மகிமையை வெளிப்படுத்தாதநிலை ஒன்றைத்தான் கைக்கொள்ள வேண்டியது-மற்ற பாலனின் செய்கைகளைக் கொள்ளக்கூடாது-என்கிறதற்கு இந்த சுருதி எடுத்துக் காட்டாகும்). மேலும் பிருஹ்மவித்துக்கு ஆகாரசுத்தம் அவசியம் என்பது சா 2. 8-16-ல் आहार शुद्धौ सत्वशुद्धिः- என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனாலே உபாஸகன் பாலனைப் போல தன் இஷ்டப்படி சாப்பிட்டுத் திரிதல் கூடாது-இதனால் வித்யை ஸித்திக்காது.

ஐஹிகாதி கரணம் (3-4-14)

ஸி. ஸூ. ऐहिक मप्रस्तुत प्रतिबन्धे तद्दर्शनात् (3-4-50)

ஐஹிக மப்ரஸதுத ப்ரதிபந்தே, தத்தர்ஸநாத் ( do )

ஐஹிகம்-இந்த உலக பலன்களை (போகங்களை) குறித்து செய்யப்படும் உபாஸநம் அப்ரஸ்துதப்ரதிபந்தே-வலிமை மிக்க வேறு ஒரு பூர்வ கர்மத்தால் தடை செய்யப்படாமலிருக்கும் போது (உடனே உண்டாகிறது. இதனால் உபாஸனையின் உற்பத்திக்குக் கால நியமமில்லை-ஏனெனில்) தத்தர்சநாத்-வேறு ஒரு வலிமையுள்ள பூர்வ கர்மத்தால் கர்மபலன் தடை செய்யப்படுவதாக வேதவாக்யம் ஓதுகிறபடியாலே. (இங்கு பிருஹ்ம வித்யையின் உற்பத்திக்கு காலம் நிரூபிக்கப்படுகிறது. இது இவ்வுலகில் அடையப்படும் ஐஹிக பலன்கள்-அது பற்றியது.

வித்யை இருவிதம் - பலத்தைப் பொறுத்தமட்டில் अभ्युदयफला - मुक्तिफला - (இக போகங்களை அளிப்பது; மோக்ஷத்தை பலனாகவுடையது), இங்கே சந்தேகம் - இக போகங்களைப் பலனாகவுடைய வித்யை புண்யங்களின் பலனாகும்-இது புண்ய கர்மாக்களைச் செய்தவுடனே அடையப்படுகிறதா-அல்லது காலாந்தரத்தில் உண்டாகிறதா? (தடையில்லாதிருந்தால் உடனேயே ஏற்படலாம்-தடையிருப்பின்-தாமதமாக உண்டாகலாம்.) பூர்வபக்ஷம்-பூர்வ புண்யங்களின் பலனாக-ஒருவன்

நற்பிறப்பை அடைகிறான். இதற்கு சமாதானமாக - பகவானால் இது சொல்லப்பட்டது-கீதை 7-16ல்-चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन - அர்ஜுனா, நான்கு வகைப்பட்ட புண்யசாலிகள் என்னை உபாஸிக்கிறார்கள் அந்த கர்மம் பலனைக் கொடுக்க ஆரம்பிக்கும் போது, தடையில்லாது போனால்-(தடை வேறு ஒரு பூர்வ கர்ம பலனாக ஏற்படுவது)-தாமதம் இல்லாமல் பலன் கிடைக்கும். அதனால் உடனேயே பலன் கிடைக்கப்படுகிறது-வித்யை உடனேயே உற்பத்தியாகிறது.

(ஐஹிகம்-என்கிற சொல்-இந்த பிறப்பையோ அல்லது இந்த உலகத்தையோ குறிக்கும். அது ஸ்வர்க்கத்தைத் தவிர வேறு எதுவையும் குறிக்கலாம். இவ்விதமாகவும் அர்த்தம் கொள்ளலாம்-உபாஸநத்தின் பலன் ஐஹிகபலனாக விருக்கலாம் - தடைஎன்று ஒன்று இல்லாமற் போனால் - ஆகவே ஐஹிக சப்தம் இந்த உலகத்தில் எனப்பொருள்படும்)

அவ்விதம் சொல்லப்படுமாகில்-நாம் பதில் கூறுவோம் ऐहिकमप्रस्तुतप्रतिबन्धे-தடையில்லாத போனால் உடனேயே ஐஹிகபலன் உண்டாகிறது. ऐहिकम्-அப்யுதய பலமுபாஸநம் இவ்வுலக செழிப்பிற்க்காகவே உபாஸனமாக செய்தால் அதன் பலனாக இந்த உலகத்தின் நற்பணிகள்-சுகபோகாதிகள் கிடைக்கலாம். ஆனால் தடையாக பூர்வமாகச் செய்யப்பட்ட கர்மாக்கள் கூடாது अप्रस्तुतप्रतिबन्धे - வலிமையுள்ள பூர்வக்ருத கர்மத்தின் பலனாக தடை ஏற்பட்டால் - இந்த வித்யையின் பலன் வேறு ஒரு காலத்தில் உண்டாகிறது. இதனால் உற்பத்தி கால நியமமில்லை. எப்படி? तद्दर्शनात्- வேதவாக்யம் அவ்விதம் கூறுவதால். பிரபல பூர்வ கர்மம் வலிமையுள்ளதாக விருப்பின், வித்யையின் பலன் உடனே ஸம்பவிக்காமல் தடைபட்டுப் போகிறது. அது சுருதியினால் தெரிய வருகிறது. சா.உ, 1-1-10 यदेव विद्यया करोति श्रद्धयोपनिषदा तदेव वीर्यवत्तरम् - எந்தக்கர்மத்தை உத்கீத வித்யையை அங்கமாகக் கொண்டு செய்கிறானோ, அதுவேதடை நீங்கப் பெற்று விரைவில்பலனை அளிக்கிறது என்கிறபடி-உத்கீத வித்யை அங்கமாக எந்த கர்மத்திற்கு இருக்கிறதோ-பிரதிபந்தமாகிற தடை நீங்கப்பெற்று-அந்த கர்மாபலனை அளிக்கிறது ஆகையால் புண்ய கர்மாக்களைச் செய்தவுடனே வித்யை உண்டாகும் என்கிற நியமமில்லை எனத்தேறுசிறது.

## முக்தி பலாதி கரணம் (3-4-15)

### ஸி. ஸூ. एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृते: (3-4-51)
### ஏவம் முக்திபலாநியமஸ் ததவஸ்தாவத்ரு தேஸ் ததவஸ்தாவத்ருதே: (-do)

ஏவம்-இம்மாதிரி (முன் அதிகரணத்தில் சொல்லியபடி) முக்தி பலாநியம:- மோக்ஷத்தைப்பலனாகக் கொண்ட பிருஹ்மோபாஸநத்திற்கும் (அது உண்டாவதற்கு ஸாதனமான புண்யகர்மத்தை அனுஷ்டித்தவுடன்-அந்த உபாஸனம் உற்பத்தியாகிறது-என்கிற) நியமமில்லை. ததவஸ்தாவத்ருதே:-அந்த மோக்ஷத்தைப் பலனாகக் கொண்ட பிருஹ்ம உபாஸனத்திற்கும் உற்பத்தி காலவரம்பு நிர்ணயிக்கப்பட்டிருக்கையால்.

(இங்கே மோக்ஷ பலனை உடைய வித்யைக்கும் உற்பத்திகால நியமமில்லை. என்று இந்த அதிகரணத்தில் சொல்லப்படுகிறது) (மோக்ஷ பலஸாதனத்தைக் கூறுவது). முக்தியைப் பலனாக உடைய பிரபல கர்மாக்களின் விளைவாக உபாஸனை விஷயத்திலே, கால நியமம் இல்லை-(உபாஸனை அதிசய கர்மாக்களின பலனாகவும்-உபாஸனையின் பலனாக மோக்ஷமும் சொல்லப்பட்டு)-மோக்ஷம் ஏற்படுவதற்கு காலநியமம் கூறப்படமுடியாது ஏனெனில் முந்தி சொல்லியபடி வேறு ஒரு பிரபல கர்மாவின் விளைவாக தடங்கல் ஏற்படக்கூடாது. பிரதிபந்தம் இல்லாத போனால் உபாஸனை பலனைக் கொடுத்து பூர்த்தியாகிறது. அதாவது இங்கேகூட (தடைக்கு) ஹேது - ஸமானம் என்று அர்த்தம் (அதாவது உபாஸனங்களை பலிக்க விடாதபடி பாபச் செயல்களின் பலனாகத் தடை ஏற்படலாம். பாகவத அபசாரம் மற்ற பாபங்களைக் காட்டிலும் வலிமை பெற்றது-அதனால் பிருஹ்ம வித்யையின் உற்பத்திக்கு தடையேற்படலாம். முன் அதிகரணத்தில் சொல்லியபடி - புண்யகர்மங்கள் செய்தவுடன் பிருஹ்ம உபாஸனம் பலனை அளிக்கிறது என்கிற கட்டாய நியமம் இல்லை. இதுபோலவே யாகாங்கமான உத்கீத வித்யை தடையை நீக்கும்-பலன் சீக்கிரமே ஏற்படும் - यदेव विद्यया - என்பதால் தெளிவு. அது மாதிரி இங்கு ஸமானம் எனக் கொள்ளவும்.)

இன்னொரு சந்தேகமும் கூட. எந்த கர்மாக்கள் வித்யா ஸாதனமாக விருக்கின்றனவோ, எந்த வித்யையின் பலன் மோக்ஷமாகுமோ-அப்போது வித்யையை உண்டாக்கும் கர்மம் பிரபலம் - வலிமை பெற்றது அதற்கு பிரதிபந்தகம் (தடை) இருக்க முடியாது-என்கிற சங்கை எழ - तत्रापि - அங்கே கூட பிருஹ்ம வித்துக்களை அவமானம் செய்து, அவர்களிடம் அபசாரம் செய்வது போன்ற பாபங்கள் எல்லாப் பாபங்களையும்விட வலிமை பெற்றவை-அதனால் அவை பிருஹ்ம வித்யையை தடை செய்யும். प्रतिबन्धः संभवति என்பது பரிஹாரமாகும் - பலனை உடனே அடையாமலிருப்பதற்கு சமாதானமாகும்-இந்த பாகவத அபசாரமே தடையாகும். இவ்விதமாக சந்தேகத்திற்கு (கால தாமதத்திற்கு) சமாதானம் (பரிஹாரம்) சொல்லக்கூடும்.

ததவஸ்த்தாவத்ருதே:-என்கிற பதத்தை சூத்ரத்தில், இரண்டு தடவைகள் பதங்களைத் திரும்பப் படித்தலால்-இந்த அத்யாயம் பரிஸமாப்தி (பூர்த்தி) அடைகிறது என்பதாகும். (இங்கு சொல்லப்படுவது-மோக்ஷபலனை ஸாதிக்கும் வித்யா உற்பத்திக்கு பிரபல கர்மாக்களாகிற யாகயக்ஞாதிகள் - வேறு சில பிரபல புண்ய கர்மாக்கள் ஏற்படினும்-உத்கீத உபாஸநம் சேர்க்கப்படாமல் இந்த புண்ய கர்மாக்களைச் செய்திருந்த போதிலும்-வேறு ஒரு பிரபல கர்மாவின் விளைவாக தடங்கல் யேற்பட்டு-காலதாமதம் உண்டாகக்கூடும். உத்கீத உபாஸனை தடங்கலை நீக்கும். ஆகையால் வித்யா உற்பத்திக்கு-மோக்ஷபலன் கிடைப்பதாகிலும் சில பாபங்களால் தடங்கல் ஏற்பட்டு - கால தாமதம் உண்டாகலாம்-எனச் சொல்லப்படுகிறது) உடனேயே பலன் உண்டாகும் என்கிற நியமம் இல்லை-இது மோக்ஷபலனை அளிக்கும் வித்யைக்கும் உண்டு.

மூன்றும் அத்யாயம்—நான்காம் பாதம் முற்றும்

ஸ்ரீ பகவத் ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே

**மூன்றும் அத்யாயம் நிறைவுற்றது**

**சுபமஸ்து — श्रीरस्तु**